மகாகனம் ஸ்ரீநிவாஸ சாஸ்திரியாரின்

# ராமாயணப் பேருரைகள்

ஸம்ஸ்கிருத ஸேவா ஸமிதி
பொன்விழா வெளியீடு

# ராமாயணப் பேருரைகள்

1026

மகாகனம் வி. எஸ். ஸ்ரீநிவாஸ சாஸ்திரியார்

ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்:
கி. சாவித்திரி அம்மாள்



கலைமகள் காரியாலயம்
மயிலாப்பூர் : : சென்னை-600004

## சமர்ப்பணம்

அநேக ஆண்டுகளாக அச்சிடும் வாய்ப்புப் பெருமலிருந்த இப்பேருரைகளை அச்சிட்டு வெளியிடு வதற்கு ஆதரவுடன் முன்வந்தும், புத்தக வடிவில் காணப்பெருமல் எங்களை விட்டுப் பிரிந்த, என் பேரன்புக்கு உரிய, ஶ்ரீ ராமரத்தினத்துக்கு இப் புத்தகம் சமர்ப்பணம்

# முகவுரை

ஸம்ஸ்கிருத இலக்கியத்தில் பொதுஜனங்களுக்கிடையே ருசியையும் ஈடுபாட்டையும் பரப்புவதற்காக 1927-இல் துவக்கப் பட்ட ஸம்ஸ்கிருத ஸேவா ஸமிதி இன்று ஐம்பது ஆண்டுகள் நிறைந்து பொன்விழாவைக் கொண்டாடுகிறது. பொன்விழா வின்போது அளிக்கப்படும் இந்நூல் பொன்னுன வெளியீடாகும்.

முதலிலிருந்தே ஆண்டுதோறும் ஆதிகவியான வால்மீகி யையும் ஆதிகாவ்யமான ராமாயணத்தையும் விரிவுரைகள் வாயிலாக ஸம்ஸ்கிருத ஸேவா ஸமிதி போற்றி வந்திருக்கிறது. பல அறிவாளரும் ரசிகரும் இவ்வாறு நூறு ராமாயண விரி வுரைகளை ஆற்றியிருக்கிறார்கள். அவற்றுள் சில உரைகளே அச்சிடப்பட்டிருக்கின்றன. ஸம்ஸ்கிருத ஸேவா ஸமிதியின் முதற் பருவம் என்று சொல்லக்கூடிய ஆண்டுகளில், 'ஸாஹித்ய வல்லப' என்று ஸமிதியிலேயே சிறப்பிக்கப்பட்ட சீர்காழி சுந்தராசாரியார் ராமாயணத்தில் பல பாத்திரங்களையும் பல கட்டங்களையும் பற்றித் தொடர்ந்து பல விரிவுரைகளைச் செய்து வந்தார். இரண்டாம் பருவத்தில், எல்லா நிகழ்ச்சிகளிலும் சிறந்ததான நிகழ்ச்சி 1944-இல் மகாகனம் ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் அவர்கள் ஒவ்வொரு வாரமும் வழங்கிய ராமாயண விரிவுரை விருந்துகளாகும். உருண்டையுருண்டையாய், நாதம் நிரம்பி விழும் அவரு டைய பேச்சின் ஒலிகளும், எளிமையும் தூய்மையும் இனிமையும் கொண்ட அவரது உரைநடையும், நடுநடுவே ஸுஷ்டுவான உச்ச ரிப்புடன் அவர் மேற்கோளாகச் சொன்ன வால்மீகி ச்லோகங்க ளும் அன்று காது நிரம்பி நின்றதுடன் இன்றும் கேட்பதுபோலவே நிற்கின்றன; 'சிரநிர்வ்ருத்தமப்யேதத் ப்ரத்யக்ஷமிவ' என்று வால்மீகியே சொன்னாற்போல். அந்த ஆண்டுகளில் ஸம்ஸ் கிருத ஸேவா ஸமிதியின் செயலாளராக இருந்து சாஸ்திரியாரின் இவ் விரிவுரைகளை இடைவிடாமல் நடத்துவதற்கான அலுவல் களையும், இறுதியில் இவற்றைச் சிதறிப்போகாமல் சேகரித்து நூல் உருவில் வெளிக்கொண்டு வருவதற்கும் பாடுபட்டதில் எனக்கு இருந்த வாய்ப்பையும், இவ் விரிவுரைகளை முன்னிட்டும் மற்ற வகையிலும் அப் பெரியோருடன் ஒவ்வொரு நாளும் நெருங்கிப் பழகி அறிவும் அநுபவமும் நிரம்பிய அவருடன் உரை யாடிய பேற்றையும் நினைத்துப் பார்த்தால் அது வாழ்க்கையிலே பொன்னான மணம் மிகுந்ததான பகுதியாக மனக்கண்முன் நிற்கிறது.

ஸம்ஸ்கிருத ஸேவா ஸமிதி பல சிறிய நூல்களையும் மொழி பெயர்ப்புகளையும் குறுகிய அளவில் அவ்வப்போது வெளியிட்டு வந்திருக்கிறது. ராமாயணத்தைப்பற்றி ஸ்ரீ சாஸ்திரியாரின் முப்பது விரிவுரைகளே ஸமிதியின் பெரும் பெருமை வாய்ந்த வெளியீடு; பன்முறை பதிப்பிக்கப்பெற்றிருக்கிறது. ஸம்ஸ்கிருத இயக்கங்களுக்கும் ஸ்தாபனங்களுக்கும் பொருளுக்கும், ஸரஸ் வதிக்கும் லக்ஷ்மிக்குமுள்ள பொருத்தம்தான் எப்போதும் உள்ளது. ஆனால் ஸமிதியின் பொருளாதார நிலை ஒருவாறு நிமிர்ந்தது என்றால் அது சாஸ்திரியாரின் விரிவுரைப் பதிப்புக் களின் மூலமே என்று சொல்லலாம்.

இந்த ஆங்கில ராமாயண விரிவுரைகளை இந்தியாவில் பல இடங்களிலும் வாசித்து வருகின்றனர்; இவற்றை ஓரிய மொழி யிலும் கன்னட மொழியிலும் ஆக்கி வெளியிட அநுமதியைக் கோரிப் பல கடிதங்கள் ஸமிதிக்கு வந்திருக்கின்றன.

சாஸ்திரியார் இவ்வுரைகளைச் செய்து முடித்ததுமே தமிழில் இவற்றை ஆக்கி வெளியிட வேண்டும் என்ற அவா பலருக்கு இருந்தது. சாஸ்திரியாரே, 'இந்தத் தமிழ் மொழிபெயர்ப்பை ஸ்ரீ சாவித்திரி அம்மாளைச் செய்யச் சொல்ல வேண்டும்' என்று தம் உள்ளத்தை என்னிடம் வெளியிட்டிருக்கிறார். தமிழ், ஆங்கி லம் இரண்டிலும் எழுதும் வன்மை, ஸம்ஸ்கிருதத்தில் ஆழ்ந்த அறிவு, ராமாயணத்தில் ஈடுபாடு என்ற குணங்கள் பொருந்திய இம் மொழிபெயர்ப்பாளரே இப் பணிக்கு ஏற்றவர்; அதோடு இவருக்குச் சாஸ்திரியாரிடம் பக்தி, இதை எழுதிவிட வேண்டும் என்ற ஆசை, உறுதி ஆகிய அம்சங்களும் சேர்ந்து இந்தக் காரியத்தை வெற்றிகரமாக நிறைவேற்றியுள்ளன.

சாவித்திரி அம்மாள் முன்பு செய்த சில மொழிபெயர்ப்புக ளைப் படித்தவர்களுக்கு இவருக்கு இத்துறையில் ஏற்பட்டிருக்கும் தேர்ச்சி நன்கு தெரியும். உதாரணமாக, தமிழ்நாட்டு 'கோல்ட் ஸ்மித்' என்று சொல்லக்கூடிய கா. சி. வேங்கடரமணியின் நாவல்களை இவர் தமிழில் ஆக்கியதைச் சொல்லலாம். சாஸ்திரி யாரின் நடை, பொருள், சுவை எல்லாம் குன்றாமல் எளிய நேர்மையான தமிழில் எழுதித் தந்த சாவித்திரி அம்மாளுக்கு, ஸம்ஸ்கிருத ஸேவா ஸமிதிக்குத் தற்போது தலைவராக இருக் கும் முறையில் நன்றியையும் பாராட்டையும் மகிழ்ச்சியையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

*ஸம்ஸ்கிருத*
*ஸேவா ஸமிதி*
*2—5—1977*

டாக்டர் வே. ராகவன்
தலைவர்

# முன்னுரை

சென்னை ஸம்ஸ்கிருத ஸேவா ஸமிதியின் ஆதரவில், 1944-ஆம் வருஷத்தில், காலம் சென்ற மகாகனம் வி. எஸ். ஸ்ரீநிவாஸ சாஸ்திரியார் சென்னை ஸம்ஸ்கிருதக் கல்லூரி மைதானத்தில் ஒவ்வொரு புதன்கிழமையும் விடாமல் எட்டு மாதங்கள் தொடர்ந்து ஆங்கிலத்தில் நிகழ்த்திய வால்மீகி ராமாயணப் பேருரைகள் யாவருக்கும் நினைவிருக்கலாம். அவற்றை அவ்வாறே ஒவ்வொரு வாரமும் தவருமல் மக்கள் திரளாய் வந்து மெய்ம்மறந்து கேட்டு அநுபவித்ததும் ஒரு மறக்க முடியாத காட்சியே யாகும். இந்தப் பணியை ஆற்றுவதிலுள்ள ஆர்வமானது அவரைத் தம் உடல் சிரமத்தைக்கூடப் பொருட்படுத்த வொட்டாமற் செய்தது. வால்மீகி ராமாயணத்தில் தமக்கு ஏற்பட்ட ஈடுபாட்டின் விளைவான இந்தப் பேருரைகள் தமக்குப் பின் தம் ஞாபகச் சின்னமாகவும், இலக்கியத்துக்குத் தாம் செலுத்தும் சிறு காணிக்கையாகவும் அமைய வேண்டும் என்றுகூட அவர் விரும்பினர் எனக் கூறலாம். மேல்நாட்டு இலக்கியத்தில் ஊறித் திளைத்தவராக இருந்தும், ராமாயணத்தின் தனிக் காவியச் சிறப்பும், அதன் கற்பனைத் திறனும், உன்னதமான கருத்துக்களும் அவ்வாறு அவரை முற்றும் தம் வயமாக்கியிருந்தன. ராமாயணத்தை ஊன்றிப் படிக்கப் படிக்க, 'உலக இலக்கியத்திலேயே இது தலைசிறந்த காவியம்' என்ற எண்ணம் மேலும் உறுதியாவதாக அவர் தம் பேச்சிலே கூறுகிருர்.

சாஸ்திரியாரின் ராமாயணப் பேருரைகளைப் பிரதி புதன் கிழமையும் தவருமல் கேட்டு வந்த நூற்றுக் கணக்கான மக்களில் நானும் ஒருத்தி என்பதை இங்கே பெருமையுடன் கூறிக் கொள்ள விரும்புகிறேன். அதற்குச் சாஸ்திரியாரின் ஆங்கிலப் பேச்சின் சிறப்பு மட்டும் அல்ல; வால்மீகி ராமாயணத்தில் எனக்குள்ள பெரும் ஆர்வமும் ஈடுபாடுமே முக்கிய காரணம் என்று கூறலாம். ஒவ்வொரு சமயம் படிக்கும்பொழுதும் சாதாரண பக்தி உணர்ச்சி மட்டுமின்றி அதன் அற்புதமான காவியரசமும் அழகும், கருத்துக்களின் மேன்மையுமே என்னை மெய்ம்மறந்து அநுபவிக்கச் செய்கின்றன. ராமாயணம் வெறும் கற்பனைக் கதை அல்ல; உண்மையில் நடந்த கதை.

ஒவ்வொரு சம்பவத்தையும் தம் மனக் கண்ணால் கண்டு வால்மீகி முனிவர் அப்படியே சித்திரித்திருப்பதாகக் கூறப்படுகிறது.

ராமாயணம் பிறந்த வரலாறே, சுவைமிக்க ஒரு வரலாறு தான் அல்லவா? ஒரு மரக்கிளையில் ஜோடியாய் ரமித்திருந்த இரு கிரௌஞ்ச பக்ஷிகளில் ஒன்றை வேடன் ஒருவன் அம்பால் அடித்து வீழ்த்தியதைக் கண்டு எழுந்த பரிதாப உணர்ச்சியி லின்றும் உருவான கதை என்பதில்தான் எத்தகைய இலக்கிய ரஸாநுபவம் ஏற்படுகிறது! தான் காணும் எதையும் உணர்ச்சிக் கண்கொண்டு காண்பவன் அல்லவா கவி? 'வெட்டவெளிக்கும் உருவமும் பேரும் அளித்துவிடுவான் கவி' என்கிறார் மகாகவி ஷேக்ஸ்பியர். ராமாயணம் முடிவிலும், சக்கரவர்த்தியான ராமர் தம் கதையையே தம் மைந்தர்களான குச லவர்கள் பாடக் கேட்டு உள்ளம் நெகிழ்ந்ததாகக் கூறும் வரலாறும் உலக இலக்கியத்திலேயே மிகச் சிறந்த வரலாறு என்றுதான் கூற வேண்டும்.

இப்பொழுது ராமாயணத்தை எடுத்துக்கொண்டு பார்ப்போமே. ராமாயணக் கதை உண்மையில் நடந்ததாக இருக்கலாம். ஆயினும் கதையின் கட்டுக்கோப்பு இவ்வளவு ரஞ்சகமாய் அமைய முடியுமா என்று படிக்கும் போதெல்லாம் எனக்கு ஒரே வியப்புத்தான் தோன்றும். தற்கால நவீனங்களில் காணப்படும் கதை 'டெக்னிக்' அநேக ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் இயற்றியுள்ள கதையில் அமைந்திருப்பது பெரும் ஆச்சரியம் அல்லவா? உதாரணமாக, பொழுது விடிந்ததும் ராமனுக்குப் பட்டாபிஷேகம் என்றதும், பிள்ளை மேலுள்ள பாசத்தால், கைகேயியே தசரதர் கொடுத்த வரங்கள் நினைவுக்கு வந்தவளாய், பரதனுக்குப் பட்டமும் ராமனுக்குப் பதினன்கு வருஷம் வனவாசமும் விதிக்க வேண்டும் என்று கேட்டிருக்கலாமே! அவ்வாறின்றி, அவள் மனத்தைக் கலைக்க மந்தரை என்னும் ஒரு சிறிய பாத்திரம் வேண்டுமா? ஆனல் அதனலன்றோ கதையின் சுவாரஸ்யம் அதிகமாகின்றது! தன் வாக்குவன்மையினலும் புத்திசாதுரியத்தினலும் சலனமற்ற ஓர் உள்ளத்தை அடியோடு மாற்றியதோடு அந்தச் சிறு பாத்திரத்தின் வேலை முடிந்துவிடுகிறது. அதற்குப் பிறகு அவளைப்பற்றிய பேச்சே இல்லை. மந்தரையின் தூண்டுதலுக்கு ஆளாகிக் கைகேயி மனம் மாறவில்லை என்றல், மேலே கதைக்கு இடம் எங்கே? ராமனின் முடிசூட்டு வைபவம் இனிது நடந்தேறியிருக்கும். ஆனல் அத்துடன் கதையும் முடிந்திருக்கும். இந்தத் திருப்பம் கதைக்கு எவ்வளவு

கவர்ச்சியை அளிக்கின்றது! காட்டில் எதிருச்சையாக வந்த சூர்ப்பணகை ராமனைக் கண்டு மோகித்ததன் விளைவு கதைக்கு மற்றொரு திருப்பம். அது இல்லையெனில் கதை மேலும் நீண்டிருக்க முடியாது.

இப்பொழுது கதையின் மற்றொரு ரசமான சம்பவம் நினைவுக்கு வருகிறது. சீதையை அபகரித்து ராவணன் ஆகாய மார்க்கமாய்க் கொண்டு செல்லும்பொழுது தேவி கீழே மலை மீதிருந்த நான்கு வானரர்களைக் கண்ணுற்றுச் சமயோசிதமாய், தான் அணிந்திருந்த ஆபரணங்கள் சிலவற்றை உத்தரீயத்தில் முடிந்து அவர்கள் மத்தியில் எறிந்ததாகக் கதை. இந்த நிகழ்ச்சி இல்லையென்றால் கதைக்கு ஒரு பங்கமும் இல்லை. ஆனால் இது கதைக்குத் தனிச் சுவையை உண்டுபண்ணுகிறதே! அந்த ஆபரணங்களைக் காட்டி ராமர் லக்ஷ்மணனைக் கேட்கும்பொழுது, ''கேயூரங்களையோ குண்டலங்களையோ நான் அறியேன். நித்தியம் நமஸ்கரிப்பதனால் காலிலுள்ள சிலம்புகளை மட்டுமே ஒருவாறு அறிவேன்'' என்கிறான் அவன். அந்தச் சொற்கள் எவ்வாறு நம் உள்ளத்தை உருக்குகின்றன! இப்படிப்பட்ட உத்தமனிடமா சீதை அத்தகைய கடும் மொழிகளைக் கூறினாள் என்று லக்ஷ்மணனை நினைத்து நம் மனம் பரிதாபப்படுகிறது அல்லவா? இந்தச் சம்பவம் இல்லையென்றால் ஓர் அரிய இலக்கிய அநுபவத்தையே அல்லவா நாம் இழந்துவிடுவோம்?

ராமருடைய குணங்களைப் பற்றியும் அங்கங்கே சிறு சிறு சந்தர்ப்பங்கள் மூலம் அழகாய்க் கவி வெளியிடுகிறார். சக்தி ஆயுதத்தினால் அடிபட்டு லக்ஷ்மணன் உயிரிழந்தவன் போல் கிடக்கும்பொழுது ராமர் ஒரே சோகத்துடன், ''உலகமெங்கும் மனைவி கிடைப்பாள். பந்துக்கள் கிடைப்பார்கள். ஆனால் உயிருக்கு உயிரான உடன்பிறந்த சகோதரன் எங்கே கிடைப்பான்?'' என்று புலம்பும்பொழுதும், ராவண வதம் முடிந்த பிறகு, ஒரு நாள் தங்கிப் பிறகு அயோத்திக்குச் செல்லுமாறு விபீஷணன் வேண்டியபொழுது, ''அயோத்தியில் என் வருகைக்காகப் பரதன் ஏங்கித் தவித்துக்கொண்டிருக்கும் பொழுது நான் எப்படி இங்கே சந்தோஷமாக இருக்க முடியும்? அவனைப் பார்ப்பதற்கன்றோ என் உள்ளம் இப்பொழுது துடித்துக்கொண்டிருக்கிறது!'' என்று ராமர் கூறும்பொழுதும், அந்தச் சகோதர பாசம் நம்மை எவ்வாறு மெய் சிலிர்க்கச் செய்கிறது! இவ்வாறு கூறிய ராமர் பிறகு அயோத்திக்குப் போகும் வழியில் பரத்வாஜாசிரமத்தில் தங்கியபொழுது நந்திகிராமத்தில் பரதனிடம் தாம் வெற்றிகரமாய்த் திரும்பி

வந்திருக்கும் செய்தியைக் கூறி, அந்தச் சமயத்தில் பரதனின் முகத் தோற்றத்தைக் கவனித்து வந்து கூறும்படி அனுமாரை அனுப்புகிறார். பதினான்கு வருஷம் ஆண்ட பழக்கத்தில் ராஜ்யத்தில் பற்றுதல் ஏற்பட்டிருந்தால் அவனே ஆளட்டும் என்று விட்டுச் செல்வதாகக் கூறுவது பரதன் மீது கொண்ட சந்தேகத்தினாலா? அல்ல. புருஷோத்தமரான ஸ்ரீராமரின் அரும்பெரும் குணத்தை அல்லவா அது காட்டுகிறது!

ராமாயணம் என்றதும் அனுமாரைப் பற்றித்தானே முதலில் நினைவு வருகிறது! அவரைப் புத்திமான்களுள் சிறந்தவர் என்று வர்ணிக்கிறார் வால்மீகி. அது எவ்வளவு உண்மை! இலங்கையில் தேவியைத் தேடித் தேடிக் காணாமல் அலுத்து மனம் சோர்ந்து திரும்பிப் போவதா அல்லது மேலும் தேடிப் பார்ப்பதா என்று கலங்கும் இக்கட்டான நிலைமை ஏற்படுகிறது அல்லவா? அத்துடன் பகைவர் உறையும் இடம்; யோசனை கேட்பதற்கும் யாரும் இல்லாத பரிதாப நிலை; அப்படி இருந்தும் தாமே யோசித்து ஒரு முடிவுக்கு வந்து ஒவ்வொரு சமயமும் வெற்றியுடன் செயற்படுவது அவரது புத்தியின் தனிச் சக்தியே என்பதில் ஐயமென்ன? சிம்சுபா விருட்சத்தினடியில் தேவியைக் கண்டு அவர் மகிழ்வெய்திய சமயத்தில், ராவணன் அங்கு வந்து தகாத முறையில் தேவியை வேண்டியதையும், அவள் அவனை அடியோடு நிராகரித்துப் பேசியதையும் மரத்தின் மேலிருந்து நேரில் காணும் அரிய வாய்ப்புக் கிட்டுகிறது அவருக்கு. இந்த நிகழ்ச்சியில்தான் கதையின் சிறப்பு எத்தனை உச்ச நிலையை அடைகிறது! பதியைப் பிரிந்து சோகமே உருவான தேவியின் கற்புநெறியைக் கண்டு ஒரே வியப்பில் ஆழ்ந்துவிடுகிறார் அனுமான். 'இந்தத் தேவியைப் பிரிந்து ராமர் எப்படி உயிரோடிருக்கிறார்?' என்றே பெரிதும் ஆச்சரியப்படுகிறார். ஆகவே திரும்பிப் போய் ராமரிடம் அவர் கூறும்பொழுது, தேவி இருக்கும் திக்குக்கு அஞ்சலி செய்து, "கண்டேன் கற்பினுக்கு அணியை!" என்று பக்திப் பரவசத்தோடு கூறுவதாக உணர்ச்சிப் பெருக்குடன் வர்ணிக்கிறார் கம்பரும் தம் ராமாயணத்தில். இவ்வாறு கதாபாத்திரங்களின் குணங்களும் இயல்பும் வெளியாகும் வண்ணம் கதையில் உருவாகியுள்ள சிறு சிறு ரசமான சந்தர்ப்பங்களும், தற்கால நவீனங்களைக் காட்டிலும் சிறந்த முறையில் அமைந்திருக்கும் கதைக் கட்டுக்கோப்பும் எவ்வளவு தடவை படித்தாலும் சலிப்புத் தட்டுவதில்லை என்றால் அது வால்மீகி ராமாயணத்தின் தனிச் சிறப்பே என்பதில் ஐயமென்ன?

சாஸ்திரியாரின் இந்தப் பேருரைகளைத் தமிழில் மொழி பெயர்க்க வேண்டும் என்று சில ஆண்டுகளுக்கு முன்பு ஸம்ஸ்கிருத ஸேவா ஸமிதியில் என்னைக் கேட்டபொழுது நான் சிறிது தயக்கத்துடன்தான் ஒப்புக்கொண்டேன். ஏனெனில் சாஸ்திரியாரின் ஆங்கிலம் தனிச் சிறப்பு வாய்ந்தது என்பது யாவரும் அறிந்ததே. அதைத் தம் சொந்த மொழியாகக் கொண்ட ஆங்கிலேயர்கள்கூட, அவரது ஆங்கிலத்தைப் பெரிதும் பாராட்டிப் பேசினார்கள் அல்லவா? அத்தகைய பெருமையை மொழிபெயர்ப்பு பாதிக்காமலிருக்க வேண்டுமே என்ற கவலை எனக்கு. மனத்தில் தோன்றியதைத் தீர ஆராய்ந்து அதற்கு ஏற்ற சொற்களில் தெளிவாய் வெளியிட்டுக் கூறுவதில் ஆர்வமுள்ளவர் சாஸ்திரியார். தாம் நினைத்துக் கூறியதை அவ்விதமே கேட்பவர்களும் புரிந்துகொள்ள வேண்டும் என்றும் ஆவலுள்ளவர். இது ஆங்கிலத்திலுள்ள ராமாயணத்தின் முதல் பேருரையைப் படித்தால் நன்கு விளங்கும்.

ஆகவே, ஓட்டமும் விறுவிறுப்புமுள்ள எளிய நடையாக இராமல், ஆழ்ந்த கருத்துடன் அவரது உள்ளுணர்ச்சிகளுங் கூட எழுத்திலும் பேச்சிலும் பிரதிபலிக்கும் ஆற்றல் மிகுந்தது அவர் ஆங்கில நடை என்று கூறலாம். இது அவருக்குப் பெருமை ஊட்டுகின்றது. ஆனால் அவரது பேச்சை மொழிபெயர்ப்பவருக்கோ அது எவ்வளவு கடினமாகி விடுகின்றது! மொழிபெயர்ப்பில் அவருடைய எண்ணங்களும் உணர்ச்சிகளும் சிறிதும் மாறாமல் அப்படியே வர வேண்டும் அல்லவா? மொழிபெயர்க்கும் முயற்சியை மேற்கொண்டவர்கள் இந்த உண்மையை நன்கு அறிவார்கள். இந்தப் பேருரைகளைத் தமிழாக்கும் பணியை எனக்கு வாய்த்த பெரும் பேருகவே கருதுகிறேன். ராமாயண காவியத்தின் அழகையும் மேன்மையையும் நன்கு உணர்ந்து அனுபவித்து அதன் பலவேறு கதாபாத்திரங்களின் குணங்களையும் நுட்பமாக ஆராய்ந்து, சுவைபட உயர்ந்த ரீதியில் ஆற்றியுள்ள இந்தப் பேருரைகளைத் தமிழாக்கும் முயற்சியில் ஆங்கில நடையின் நயமும் ஆர்வமும் அப்படியே மிளிர வேண்டும் என்ற அவா மேலோங்கியதனால் மொழிபெயர்ப்பு வேலையில் அவசரமில்லாமல் தேவைக்கு அதிக காலமே எடுத்துக்கொண்டேன். அது வீண் போகவில்லையென்றால் என் முயற்சி வெற்றிகரம் என்று நான் மகிழ்வெய்தலாம்.

மகாகனம் சாஸ்திரியார் தம் பிரசங்கங்களிலுள்ள குறைகளைப் பொருட்படுத்தாது கேட்க வேண்டும் என்று கூட்டத்தி

ளுள்ளவர்களைக் கேட்டுக்கொண்டது போல். மொழிபெயர்ப்பி லுள்ள குறைகளை நீக்கிக் குணங்களை ஆதரவுடன் ஏற்றுக் கொள்ளும்படி நானும் வாசகர்களைக் கேட்டுக்கொள்ளு கிறேன். இங்கு வாசகர்களுக்கு ஒரு விஷயம் தெரியப் படுத்த வேண்டியது அவசியமாகின்றது. ஆங்கிலத்திலுள்ள 9-ஆவது பேருரையில், சுருக்கெழுத்து எழுதுபவர் வராத காரணத்தினால் சாஸ்திரியாரின் சொற்பொழிவின்றி அவர் மேற்கோள்களாகக் காட்டிய வால்மீகி ராமாயண சுலோகங் களே இடம் பெற்றிருப்பதால், அவ்வுரையைச் சேர்க்காமல் விடுவதே நலம் என்ற முடிவுக்கு வரும்படியாயிற்று. ஏனெனில் இந்தப் பேருரைகளின் ஸாரம் அனைத்தும் உரை நிகழ்த்தியவர் ராமாயணத்தை ஆழ்ந்து அநுபவித்துப் பண்ணிய நுட்பமான ஆராய்ச்சியில் அல்லவா அடங்கியிருக் கிறது? அதற்குப் பதிலாக, அனுமானைப் பற்றிய உபந்நியா சங்களை இரண்டாகப் பிரித்து முப்பது பேருரைகளாக அமைத்திருக்கிறது. ஆகவே முப்பதுக்குப் பதிலாக 29 பேருரைகளே இந்தப் புத்தகத்தில் சேர்க்கப்பட்டுள்ளன.

சில ஆண்டுகளுக்கு முன்பே வெளியாக வேண்டிய புத்தகம் இது. அச்சேறுவதில் ஏற்பட்ட தாமதம் இது வரையும் நீண்டுவிட்டது.

இந்த மொழிபெயர்ப்பைச் செய்து வெளியிட அநுமதி தந்து ஒத்துழைத்த ஸம்ஸ்கிருத ஸேவா ஸமிதிக்கு என் நன்றி உரித்தானது. அச்சுத்தாள்களை நிதானமாய் ஆராய்ந்து மொழிபெயர்ப்பிலுள்ள சிறு குறைகளையும் அச்சுப் பிழைகளை யும் அழகாய்த் திருத்தியமைத்துக் கொடுத்த கா.ஸ்ரீ.ஸ்ரீ. அவர்களுடைய பேருதவிக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். அச்சிடுவதற்கு மனமுவந்து ஏற்றுக்கொண்டு, சிரத்தையுடன் அச்சிட்டு, அழகிய புத்தக வடிவில் வெளியிட்ட 'கலைமகள் காரியாலய'த்தாருக்கும் என் மனமுவந்த நன்றி உரித்தாகும்.

**கி. சாவித்திரி**

# உள்ளே....

# 1

## அவதாரப் பயன்

சகோதர சகோதரிகளே!

என் வாழ்நாளில் கூட்டத்தில் பேசுவதற்கு இன்று போல் எனக்கு என்றும் இவ்வளவு அதைரியம் ஏற்பட்டதில்லை. அதற்குப் பல காரணங்கள் உண்டு. ஒன்றிரண்டை இங்கே கூறுகிறேன். நான் எடுத்துக்கொண் டிருக்கும் காரியத்தைப்பற்றி என்னிடமே நான் கொண்டிருக்கும் அவநம்பிக்கை முதற் காரணம். இரண் டாவது காரணம் - என் பேச்சைக் கேட்பதற்கு இங்கே கூடியிருப்ப வர்கள். அவர்களின் தரத்தை எண்ணும்பொழுது என் மனம் மிகவும் கலவரம் அடைகிறது. மூன்றாவது காரணம் - நான் பேசப் போகும் அரிய விஷயம். எவ்வளவு கூரிய அறிவு படைத்த வர்களாயினும் புதிதாய் ஏதேனும் சொல்வதென்றால் மிகக் கடினமே அல்லவா? ஆயினும் வழக்கமாயுள்ள ஒரு நம்பிக்கை கொஞ்சம் தைரியம் அளிக்கிறது. ராமாயணம் போன்ற விஷயத்தைப்பற்றி ஒருவர் பேசும்பொழுது, அதற்கு வேண்டிய தகுதி அவரிடம் எவ்வளவு குறைவாக இருந்தபோதிலும் சரி, கேட் பவர்கள் பக்தி சிரத்தையோடுதான் வருவார்கள். ஆகவே, பிரசங்கத்தில் எவ்வளவு தவறுகள், குறைகள் இருந்தபோதிலும் அவற்றை அவர்கள் பொருட்படுத்த மாட்டார்கள். மேலும், இங்கே கூடியிருப்பவர்கள் (மயிலாப்பூரிலுள்ளவர்கள்) எனக்கு மிகவும் தெரிந்தவர்கள்; என் குறைகளைப் பொறுத்து ஆதரவோடு கேட்பார்கள் என்ற நம்பிக்கையும் எனக்கு உண்டு.

குற்றம் குறைகளை ஆராய்ந்து பேசும் மனப்பான்மையோடு ராமாயணத்தைப்பற்றி நான் இப்பொழுது பேசப்போவதில்லை. ராமாயணம் எப்பொழுது இயற்றப்பட்டது? ஸ்ரீராமன் உண்மை யாய் உயிர் வாழ்ந்த புருஷனா? ஸ்ரீமத் ராமாயணம் ஒருவர் இயற்றியதா, அல்லது பல பேர் இயற்றியதா? பல இடங்களில் அந்தக் கதை பரவிப் பல வடிவமாக இருப்பதேன்? கதையைப் பற்றியும் அதிலுள்ள சம்பவங்களைப் பற்றியும் வால்மீகி எவ்வளவு தூரம் பிறரிடமிருந்து அறிந்துகொண்டார்? கதையின் பிரதான அம்சம் அவரே பாடியதா, அல்லது சிலர் சொல்வது போலக் கதை

யின் பெரும்பகுதி அவருடையது அல்ல என்று தள்ளிவிடுவதா? —இவை போன்ற கேள்விகளை நான் எடுத்துக்கொள்ளப் போவதில்லை. இவற்றைத் தவிர மற்றொரு விஷயம் இருக்கிறது; அதையும் உங்களுக்குச் சொல்ல வேண்டும். அது தெரிந்தால் என் ராமாயணப் பிரசங்கங்களுக்கு அது ஒரு பெருங் கேடாகவே உங்களில் பலருக்குத் தோன்றும். அப்புறம் என் பேச்சை நீங்கள் எப்படிக் கேட்பீர்கள்? இவ் விஷயத்தில் மட்டும் நீங்கள் பெரிய மனத்துடன் நிரம்பத் தயவோடு கேட்க வேண்டும். ஸ்ரீராமனைக் கடவுள் என்று நான் பேசப்போவதில்லை. அதற்குக் காரணம், கடவுளைப்பற்றிப் பேசுவதற்கு வேண்டிய தகுதி எனக்கு இல்லை என்பது மட்டும் அல்ல; அவ்வளவு பெரிய விஷயங்கள் என் அறிவுக்கு மேற்பட்டவை என்று நான் தாழ்மையுடன் ஒதுங்கிக் கொள்கிறேன்.

ஆயினும், வேறொரு விதத்தில் ராமாயணத்தை மிகவும் பக்தியோடும் சிரத்தையோடும் படித்தால், அதன் பயனாக ஸ்ரீராமன் சீதாதேவி இவ்விருவருடைய அரும்பெரும் குணங்களை அறிந்து அநுபவிக்கவும், எவ்வளவோ ஆயிரம் ஆண்டுகள் இந்த நாட்டில் வழங்கி வந்து மக்களை நல்வழிப்படுத்தும் சாதனமாக ராமாயணம் இருந்து வருகிறது என்பதை உணர்ந்துகொள்ளவும் முடியும் என்று எனக்குத் தோன்றுகிறது. ராமாயணத்தைப் படிக்கும்பொழுது ஒவ்வொரு நாளும் 'இது மனிதன் இயற்றிய மாபெரும் காவியங்களில் ஒன்று' என்ற எண்ணம் என்னுள் உறுதியாகிக்கொண்டே வருகிறது. உலகிலுள்ள காவியங்கள் அனைத்திலும் உயர்ந்தது என்றுகூடச் சொல்லிவிடுவேன். ஆனால் மற்ற மொழிகளிலுள்ள காவியங்களை நான் நேரடியாகப் படித்திராததனால் அவ்வாறு அழுத்திச் சொல்லத் தயங்குகிறேன். ஆனால் நாடு முழுவதும் மக்களின் அறிவையும் உள்ளத்தையும் சீர்படுத்தும் புத்தகங்களில் ஒன்றாக ஸ்ரீமத் ராமாயணம் இருந்திருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. சம்ஸ்கிருதத்திலோ மொழிபெயர்ப்பிலோ படித்தவர்கள் மட்டும் அல்ல; எழுத்தறிவே இல்லாத லட்சக் கணக்கான மக்களுங்கூட ராமாயணக் கதையை வீட்டில் பெற்றோர் சொல்லிக் கேட்டோ, அல்லது தெருவில் பிரவசனம் செய்பவர்கள் சொல்லும்பொழுது கேட்டோ தெரிந்துகொண் டிருப்பார்கள். மக்களிடையே வெகுவாய்ப் பரவிக் குழந்தைகளுக்குக்கூட நன்றாகத் தெரிந்த ஒரு கதையை மீண்டும் உங்கள் மனத்தைப் பெரிதும் கவரும்படி அழகுபடுத்திக் கூறுவது முடியாது; அத்தகைய பேராசை எனக்கு இல்லை. ஆனால், எங்கள் நாளில் ராமாயணக் கதை எல்லோருக்கும் நன்றாகத் தெரிந்திருந்தது. இந்தக் காலத்துக் குழந்தைகளுக்கு அவ்வாறு இல்லையே! இதைச் சொல்லும்போது எனக்கு நிரம்பவும் வருத்தமாகவே இருக்கிறது. பள்ளிகளிலும்

கல்லூரிகளிலும் படிக்கும் மாணவர்கள் பலர் நம் நாகரிகத்திற்கும் பண்பாட்டிற்கும் ஆதாரமாக உள்ள நூல்களைப் பற்றியே சரியாக அறிந்துகொள்ளாமல் இருப்பது பரிதாபம் அல்லவா? ராமாயணம் சம்ஸ்கிருதத்தில் மட்டுமல்ல; நாட்டுமொழிகள் எல்லாவற்றிலும் இயற்றப்பட்டிருக்கிறது. அந்தக் கதையின் சிறப்பும் மேன்மையும், அதில் வரும் சம்பவங்களும், அதன் கதாபாத்திரங்களின் பெருமையும் இந்தக் காலத்துச் சிறுவர் சிறுமியருக்குப் பழக்கமாயில்லை என்று கூறினால் அது மிகையாகாது. ராமாயணக் கதை எவ்வளவு புனிதமானது, நம் நாகரிகத்தைப்பற்றித் தெரிந்துகொள்வதற்கு அது எவ்வாறு முக்கியமானது என்பதையெல்லாம் அறிந்து படிக்கும் ஒருவன், இளைஞர்களே அதிகமாக உள்ள இந்தக் கூட்டத்தில் பேசுவதனால் அவர்களுக்கு நல்ல பயன் உண்டாகும் என்று நினைப்பதும் மிகையாகாது என்று கூறலாம். இலக்கியத்திலேயே மிகச் சிறந்ததும், மனத்தை உருக்குவதுமான இந்தக் கதையை மிக்க பக்தியோடு படிக்கும்படியான அவசியம் வருங்காலத்தில் பின்னும் அதிகமாக ஏற்படும் என்று நினைக்கிறேன். ஸ்ரீராமன், சீதை இவர்களுடைய சரித்திரத்தை ஆசையுடன் படித்து, இந்தப் பெருங் கதைக்கு ஆரம்பமாகத் தசரதர் என்ன செய்தார், அதன் விளைவுகள் என்ன என்பதையெல்லாம் அறிந்துகொள்ளுவதனால் அதைப் பற்றிச் சொல்லுபவர், கேட்பவர் இருவருடைய நேரமும் வீணாகாது என்று கூறவும் வேண்டுமா?

இந்த ஒப்புயர்வற்ற காவியத்தை நான் எப்படி அநுபவிக்கிறேன் என்பதுபற்றி உங்களுக்கு இன்று சொல்லலாம் என்று நினைக்கிறேன். இத்தகைய கூட்டங்களில் மேலும் மேலும் பேசுவதற்கு எனக்கு வாய்ப்பு இருந்தால், இனிச் செய்யப்போகும் பிரசங்கங்களில் இந்தக் கதையில் வரும் உயர்ந்த பாத்திரங்களின் குணாதிசயங்களை ஆராய்ந்து கூறலாம் என்பது என் உத்தேசம். ஸ்ரீராமனையே முதலில் எடுத்துக் கொள்வதாக இருக்கிறேன். எவ்வளவு காலம் அவரைப்பற்றிப் பேசுவதில் ஈடுபட்டிருப்பேனோ தெரியாது. என்றென்றும் அவர் என்னை ஆட்கொண்டுதான் இருப்பார். அவருடைய கணக்கற்ற சிறந்த குணங்களை எடுத்துக் கூறுவதில் எவ்வளவு பிரசங்கங்கள் ஆகுமோ சொல்ல முடியாது. அவரது வாழ்க்கையிலுள்ள பலவிதமான அம்சங்களையும், தாம் நடத்திக் காட்டவேண்டிய அற்புதமான செயலுக்கு அவர் தம்மைச் செம்மைப்படுத்திக்கொண்ட வித்தையும் நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். அவரைச் சுற்றிலுமுள்ள மற்றப் பாத்திரங்கள் அவருக்குச் சற்றும் குறைந்தவை அல்ல. அவருடைய குணத்தை அவை சில சமயம் சிறப்பாகச் செய்யும்; சில சமயம் அதை மேலும் விளக்கிக் காட்டும்; சில சமயம் மிகவும் உன்னதமாகவும் ஆக்கி விடும். அவருக்குப் பிறகு, இலக்கியத்திலேயே மிகச் சிறந்த கதா

நாயகியான சீதையைப்பற்றிப் பேசலாம் என்று நினைக்கிறேன். எக் காலத்திலும் எந்தத் தேசத்திலும் பெண்மையின் குணங்கள் எல்லாம் ஒருங்கே உருவெடுத்து வந்தவள் அல்லவா சீதை! அவளுடைய பெருமையை நாமேகூட இன்னும் நன்ருய் அறிந்து கொண்டாடவில்லையே என்று நினைக்கும்பொழுது எனக்கு வருத்தம் உண்டாகிறது. 'பிறப்பினுல் பெண் தாழ்ந்தவள், ஆண் உயர்ந்தவன்' என்ற தவருன எண்ணமே, அவள் எவ்வளவோ சிறந்தவளாக இருந்தும் அவளைச் சிலர் குறைவாக மதிப்பிடச் செய்திருக்கிறது. பிறகு அடுத்து முக்கியப் பாத்திரமான அனுமானை எடுத்துக்கொள்வோம். எந்த விதமான வரிசைக்கிரமத்தில், ஒவ் வொரு பாத்திரத்தையும் பற்றிப் பேசுவது என்பதை இதற்குள் சொல்ல முடியாது. உங்களுக்குத் தெரிந்ததோ அல்லது நீங்களே யோசித்துப் பார்க்காததோ,அல்லது யாரேனும் உங்களிடம் ஏற்கனவே எடுத்துக்கூருததோ போன்ற விஷயம் ஒன்றும் புதிதாக நான் சொல்லப்போவதாக எனக்குத் தோன்றவில்லை.

புதிதாக ஏதோ சொல்லத்தான் வேண்டும் என்று ஒருவன் தனக்கே விதித்துக்கொண்டாலன்றி, ஏற்கனவே பலவிதமாய்ச் சர்ச்சை செய்து தீர்ந்திருக்கும் ஒரு விஷயத்தில், இந்தப் பாரத நாட்டில் பிறந்த ஒருவன் புதிதாக ஏதேனும் சொல்ல முடியுமா? ஆகவே எனக்குப் பட்ட சில கருத்துக்களை உங்களுக்குக் கூறுகிறேன். உங்களைவிட நான் ஒன்றும் அதிகம் தெரிந்தவனல்ல என்று இருந்தாலும் இதில் சிறிது நேரம் போவது வீணல்ல என்ற எண்ணத்துடன் நீங்கள் கேட்க வேண்டும். அதற்குமேல் உங்கள் உள்ளத்திற்கோ அறிவிற்கோ பயனை எதிர்பார்ப்பதற்கில்லை. மேலும், ராமாயணத்தைப்பற்றிக் கேட்பதில் உங்களுக்குச் சலிப்பு உண்டாகாது என்று நினைக்கிறேன். நான் ஒன்றும் விசேஷமாய்க் கூருவிட்டாலும், எனக்கு ஒன்றும் அதிகமாய்ச் சொல்லத் தெரியாவிட்டாலும், 'இந்தப் பேச்சுக்காக ஒரு கூட்டம் வேண்டியதில்லை. ஆயினும் போனுல் போகிறது, நல்ல மனிதர்! ஸ்ரீராமனைப்பற்றிய பேச்சைக் கேட்பதனுல் பொழுது வீண்போக வில்லை!' என்று நீங்கள் ஒருவேளை பிரசங்கத்தின் முடிவில் நினைத்துக் கொள்ளலாம்.

பெரிய மனத்துடன் நான் கூறுவதை ஏற்றுக்கொள்ளுங்கள். கடல் பெரியதாக இருந்தாலும் நாம் கொண்டுபோகும் பாத்திரம் எவ்வளவு பெரியதோ அவ்வளவு தண்ணீர்தான் நிரப்பிக்கொண்டு வர முடியும் என்ற வசனம் உங்கள் எல்லோருக்கும் தெரிந்திருக்கும். என் நிலைமையும் இப்போது அப்படித்தான். நீங்களும் இதற்கு மேல் ஒன்றும் செய்ய முடியாது. சிலர் நல்ல அறிவாளிகள்; இத்தகைய பெரிய புத்தகங்களைப் படிக்கும்போது பழங்காலத்து ஞானிகள் போல் சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்து அந்த ரீதியில்

சிறந்த கருத்துக்களும் எண்ணங்களுமுடையவர்களாக இருப்பர். அந்தப் படியிலிருந்து இப்பொழுது அவர்கள் கீழே இறங்கி வரவேண்டும். என் ராமாயணப் படிப்பு நிரம்பவும் சாதாரண மானது. அறியாமையைத் தவிர வேறொன்றும் எதிர்பார்க்க இயலாது. அவரவர் சக்திக்கேற்றபடிதானே செய்ய முடியும்?

சில நாட்களுக்கு முன்பு ஒரு நண்பருக்கு என்னுடைய இந்தத் தன்னம்பிக்கைக் குறைவைப்பற்றி எழுதினேன். அப்பொழுது இம்மாதிரி ஏதோ சொன்னேன். கடற்கரைக்குச் சென்றால் இயற்கையின் அற்புதத்திற்கும் விசித்திரத்திற்கும் சான்றாக எதிரே விரிந்து பரந்துள்ள கடல் தென்படுகிறது. ஒரு கவிஞன் என்ன செய்வான்? தான் காணும் காட்சியின் அழகை வியந்து அதில் மெய்ம்மறந்து நிற்பான். ஒரு பெரிய தத்துவஞானி என்ன செய்வான் என்றால், வானவெளியில் இந்த மண்டலங்களை இணைத்து வைக்கும் பேராற்றலின் பெருமையை எண்ணி ஆச்சரியமடைவான். ஒரு கடவுள்பக்தனோ ஆகாயம், கடல், இந்தப் பிரபஞ்சம் ஆகிய அனைத்தையும் படைத்த பரமாத்மாவை நினைத்துக் கொள்வான். மேற்கூறியவர்கள் இருக்கட்டும். குழந்தைகள் என்ன செய்வார்கள்? மணலைக் கையில் அள்ளி ஒருவர் மேல் ஒருவர் வீசி எறிந்து விளையாடுவார்கள். உங்கள்மீது சிறிது மணலை அள்ளி வீசும் சிறு குழந்தையைப் போன்றவன்தான் நானும். என் இயல்புக்குத் தக்கவாறுதானே நான் செய்ய முடியும்? எல்லையற்ற கடலின் பெருமையை நான் அறிவேனா? என்மீது அநுதாபம் கொள்ளாதீர்கள். எல்லையற்ற கடலுக்கு அனைவருமே வணக்கம் செலுத்துகிறார்கள். நானும் அம்மாதிரி என் வணக்கத்தைச் செலுத்துகிறேன்.

ராமாயணத்தைப்பற்றிப் பேசும்பொழுது என் மனப்பான்மையைப்பற்றி ஒரு வார்த்தை: ராமாயணக் கதையின் பிறப்பில் உங்களுக்கு உள்ள நம்பிக்கையைப் பற்றி எனக்குத் தெரியும். மூவுலகங்களிலும் ராவணன் இழைத்த இன்னல்களைத் தாங்காமல் தேவர்கள் பகவானைச் சரணடைந்தார்கள். கருணாமூர்த்தியான பகவான் உலகத்தைக் காப்பதற்காகப் பூலோகத்தில் மனிதனாக அவதரித்தான் என்று நீங்கள் நம்புகிறீர்கள். உங்கள் நம்பிக்கைக்குக் குந்தகம் விளைவிக்கும்படியாக நான் ஒன்றும் சொல்லப்போவதில்லை. நீங்கள் தாமாகவே அந்த நம்பிக்கையை மேற்கொள்ளவில்லை. ராமாயண புத்தகத்திலேயே அப்படித்தான் சொல்லியிருக்கிறது. வால்மீகியே, 'ஸ்ரீராமன் கடவுளின் அவதாரம்' என்றுதான் சொல்கிறார். அவருக்கு உதவியாக வந்தவர்களும் பகவானின் அம்சம் என்று சொல்லுகிறார்கள். ராமாயணத்தை எவ்வளவு தரம் படித்தாலும், ராமனைக் கடவுளின் அவதாரமாகக் கவி காட்டியுள்ள இடங்கள் எவை,

சாதாரண மனிதகுணங்களோடு காட்டியுள்ள இடங்கள் எவை என்று பிரித்துச் சொல்வது சுலபம் என்று தோன்றவில்லை. சாதாரண மனிதனாக எழுதிய ராமனைப் பிற்காலத்தில் வந்த கவிஞர்கள் கடவுளின் அவதாரம் என்று ஏற்றிவைத்துச் சொல்லி விட்டார்கள் என்று சொல்வது வெறும் ஊகம்தான். வால்மீகியே அந்த நம்பிக்கையோடுதான் கதை சொல்லியிருக்கிறார் என்பதில் சந்தேகமில்லை. ராமாயணத்தில் எவ்வளவோ இடங்களில் அப்படித்தான் இருக்கிறது. யாரும் அதை மறுக்க முடியாது. 'ஸ்ரீராமன் கடவுள்தாம்; லோகரக்ஷணத்திற்காக வைகுண்டத்தி லிருந்து பூவுலகில் மனிதனாக அவதரித்தார்' என்று வால்மீகி மகரிஷி மிகத் தெளிவாகக் கூறியிருக்கிறார். ஆயினும் இத்தகைய நம்பிக்கையை மேற்கொள்ளுவதனால் உண்மையாக என்ன பயன் என்று விசாரிக்க வேண்டும் அல்லவா?

உலகில் எல்லா இலக்கிய ஆராய்ச்சியிலும் காவியம் என்பது கலைச்சிறப்புப் பொருந்தியது, மனிதனின் கலையறிவின் வளர்ச்சிக் காகவே ஏற்பட்டது என்பதை நீங்கள் அனைவரும் அறிவீர்கள். கடவுள் மனித வடிவத்தில்-நம்மைப்போல்-அவதரித்தார் என்றால், அதன் பொருள் நாம் எப்படி வாழ்க்கை நடத்த வேண்டும் என்று நமக்கு எடுத்துக்காட்டுவதற்காகவேதான். வாழ்க்கையில் நடக்க வேண்டிய வழிகளை அங்கங்கே படித்துத் தெரிந்துகொண்டு அதனால் அடையும் பெரும் பயனுக்காகவே நாம் இந்த மகா காவியத்தைப் படிக்க வேண்டும். இது மிகவும் தெளிவாகத் தெரிகிறது. பூலோகத்தில் மானிட வாழ்க்கை எவ்விதம் இருக்க வேண்டும் என்பதைத் தானும் தன்னோடு அவதரித்த மற்றவர்களும் நடந்து காட்டுவதற்கென்றே பகவான் ஸ்ரீராமனாக அவதரித்தான் என்ற நோக்கத்தோடு நாம் கதையைப் படிக்காவிட்டால் நமக்கு ஒரு பிரயோசனமும் ஏற்படாது. கல்வியிற் சிறந்தவர்களாயினும் சரி, கல்வியறிவு சிறிதும் அற்றவர்களாயினும் சரி, பெண்கள் சீதையின் சரித்திரத்தைப் படித்துக் கட்டாயம் பயன் பெறுவார்கள். 'சீதாதேவி இவ்வாறுதான் நடந்தாள். அதேமாதிரி நான் நடக்கா விட்டாலும், அல்லது அடியோடு நடக்கத் தவறிவிட்டாலும் அவளைத்தான் என் லட்சியமாகக் கொள்வேன். என் சொந்த நன்மைக்காக அவள் நடத்திக் காட்டிய வழியையே பின்பற்றிச் செல்வேன். நான் நல்வழிப்படுவதற்கென்றே ராமனும் சீதையும் இந்தப் பூமியில் பிறந்து சொல்லொணாத கஷ்டங்களை அநுபவித்துச் சென்றிருக்கிறார்கள்' என்று ஒவ்வொரு பெண்ணும் நினைத்துக் கொள்வாள். ஆகவே, இந்த அரிய கதாபாத்திரங்களைக் கவி எப்படிச் சித்திரித்திருக்கிறார், நமக்கு ஏற்படுவதைவிட எவ்வளவோ மடங்கு அதிகமான அநுபவங்களை அவர்கள் பெற்றிருந்தார்கள் என்பதையெல்லாம் நாம் சிந்தித்துப் பார்ப்பதில் பயனுண்டு.

ஆத்மப் பிரயோசனத்திற்காக ராமாயணத்தைப் படித்தால், மனித வாழ்க்கையில் நேர்வன போன்ற கஷ்டங்களைச் சாதாரண மனிதர்களைப் போலவே ஸ்ரீராமனும் சீதையும் இன்னும் மற்றும் உள்ளவர்களும் உணர்ந்து நடந்திருக்கிறார்கள் என்று கருதுவதில் தான் அந்தப் பிரயோசனம் உண்டாகும் என்று எனக்குத் தோன்று கிறது. கதையைப் படிக்கும்போது எப்பொழுதாவது எந்த இடத்திலாவது, ராமன் அவதாரம் என்ற உண்மையை மனத்தை விட்டு அகற்ற இயலாமல், 'அவர் சுவாமி! எது வேண்டுமாயினும் செய்ய முடியும். சீதையும் மகாலக்ஷ்மி! எதுவும் செய்யலாம். அவர்களை நாம் பார்த்துக்கொள்ள முடியுமா?' என்ற எண்ணம் தோன்றினால், கதையின் முக்கியக் கருத்தையே நாம் தெரிந்து கொள்ளாமற் போய்விடுவோம். அவர்கள் சொன்ன ஒவ்வொரு வார்த்தை, செய்த ஒவ்வொரு செயல், அவர்கள் அநுபவித்த ஒவ்வொரு சந்தோஷம், துக்கம் - யாவும் நமக்கு வெளிச்சத்தைத் தந்து, வாழ்க்கையில் நமக்கு நேரும் இன்னல்களைத் தாங்குவதற்கு வேண்டிய மன உறுதியையும் பொறுமையையும் நிதானத்தையும் அளிக்கும் அல்லவா? 'இது சாத்தியமில்லாத காரியம். தம் இஷ்டப்படி கடவுள் நடக்கலாம். அவர் சர்வஞ்ஞர்; சர்வ சக்தி உள்ளவர்; எங்கும் நிறைந்தவர்; யாவற்றுக்குள்ளும் இருப்பவர். ஒரு விதத்திலும் அவரைப் போல் இல்லாத நான் என்ன செய்ய முடியும்?' என்று ஒருவன் நினைத்துவிட்டால் கதையின் முழுக் கருத்தே போய்விடும். அப்புறம் அவன் ராமாயணத்தைப் படிப்பதே வீண்தான். 'ஸ்ரீமத் ராமாயணம் பூவுலகில் பிறந்த மனிதர்களைப்பற்றிய ஒரு காவியம்' என்ற கருத்தில் படிப்பது ஒன்றும் பெரிய அபசாரமில்லை என்றே எனக்குத் தோன்றுகிறது. அவ்வாறு படிப்பதே வால்மீகி மகரிஷிக்கு உரிய மதிப்பை அளிப்ப தாகும். அவர்தாம் ராமாயணம் இயற்றியவர் என்று வைத்துக் கொண்டால், நன்னெறியும் நல்லொழுக்கமும் வாய்ந்த மிகச் சிறந்த ஆண்களையும் பெண்களையும் தம் கற்பனைத் திறத்தினால் படைத்துக் கொடுத்த பெருமையும் அவரைச் சேர்ந்ததாகும். எல்லோரும் இத்தகைய எண்ணத்தோடு படிப்பதே சிறந்தது என்று நான் கூறுவேன்.

எல்லோரையும் வசீகரிக்கும்படியான ஒரு நல்ல நாடகம் நடக்கிறது என்று வைத்துக்கொள்ளுவோம். நாடகத்தில் வரும் பாத்திரங்களுள் ஒவ்வொன்றும் மிகப் பொருத்தமான வேஷம் அணிந்து தத்ரூபமாய் நடிப்பதாகவும் வைத்துக்கொள்வோம். கதாநாயகனுடனும் கதாநாயகியுடனும் ஒன்றிப்போய் நாம் மெய்ம்மறந்து பார்த்துக்கொண்டிருக்கும்போது, திடீரென்று கதாநாயகன் வேடம் அணிந்திருப்பவன், "நான் கோடியகத்துச் சுப்பு ஆச்சே! நான் பேசுவது எதையும் அப்படியே நம்பிவிடாதீர்

கள்'' என்று இரைந்து கத்தினுல் என்ன சொல்லுவீர்கள்? மிகவும் சுவாரஸ்யமான கட்டத்தில் இப்படி மனத்தைக் கலைத்து, 'இது நாடகம்தான்; நிஜ வாழ்க்கை அல்ல! கேவலம் நாடகம் அல்லவா பார்த்துக்கொண்டிருக்கிறீர்கள்? வீணுகச் சிரமப்படாதீர்கள். கதாநாயகன் வேஷம் பூண்டிருப்பவன் கோடியகத்துச் சமையற் காரனே தவிர வேறு யாரும் அல்ல' என்று கூறினுல் எப்படி இருக்கும்? நாடகம் பார்த்து மெய்ம்மறந்த நிலையில் இருக்கும் பொழுது நாடகப் பாத்திரங்கள் நாடக வசனத்தை விட்டுச் சாதாரணமாய் ஒருவரோடு ஒருவர் பேசத் தொடங்கிவிட்டால் உங்களுக்கு எப்படி இருக்கும்? நம்மை மறந்து பெரிய ஆத்மாநுபவத்தில் இருப்பதுபோன்ற நிலைமையினின்றும் முரட்டுத் தனமாய் யாரோ நம்மை எழுப்பியது போல் தோன்றும் அல்லவா? அந்தக் கற்பனையுலகமானது அப்படியே நம் கண்முன் இருக்க வேண்டும் என்றே நாம் விரும்புவோம். அது கலைந்து போவதை நாம் பொறுக்கவே முடியாது. 'சீதையைப் பிரிந்து ஸ்ரீராமன் அதிகமாகவே வருந்துகிருர் என்ருல் அது வெறும் வெளி வேஷமே தவிர வேறல்ல; அவரது புலம்பலை நாம் அப்படியே எடுத்துக் கொள்ளக்கூடாது' என்று உரையாசிரியர்கள் சொல்லுவார்கள். அதைக் கேட்க உங்களுக்குக் கோபங்கூட வரலாம். பூலோகத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகளைக் காணத் தேவர்களுங்கூட வந்தார்கள். ராவணன் சீதையைத் தூக்கிச் சென்றபோது, 'நாம் கோரியது நடந்துவிட்டது; இனிக் கவலை இல்லை' என்று தேவர்கள் சந்தோஷித்தார்கள். இவ்வாறெல்லாம் ராமாயணத்தில் இருக்கிறது.

ஸ்ரீமத் ராமாயணத்தை எவ்வளவோ தடவை கேட்டிருக் கிறேம்; ஒவ்வொரு சொல்லையும் ஆராய்ந்து எழுதிய நூற்றுக்கணக் கான வியாக்கியானங்கள் இருக்கின்றன. நாமும் ஒவ்வொன்றை யும் விடாமல் ஊன்றிப் படித்து வந்திருக்கிறேம். ஆயினும் எப்படியோ இந்தக் கதையை மீண்டும் மீண்டும் படிக்கும் ஆவல் நம்மை விட்டுப் போவதில்லை. சாப்பிடுவதற்கு முன்போ அல்லது மத்தியான்னம் தூங்கியெழுந்த பிறகோ, அல்லது இரவிலோ எடுத்துப் படிக்கிறேம். எந்த இடத்தில் எப்பொழுது கதை கேட்கப் போனுலும், ராமாயணப் பிரவசனம் செய்பவர் யாராக இருந்தாலும், நம் கவனத்தை மாற்றும்படியான விஷயங்கள் எவ்வளவு நேர்ந்தபோதிலும், கதையிலுள்ள ஈடுபாடானது இவை யாவற்றையும் மனத்தைவிட்டுத் தள்ளும்படிச் செய்துவிடுகிறது. குழந்தைகள் கத்தும்; அல்லது பக்கத்திலுள்ளவர்கள் தூக்கத்தில் நம் மேல் ஆடி விழுவார்கள். எத்தனையோ வேண்டாத விஷயங்கள் கதையைக் கேட்கவொட்டாமற் செய்யும். ஆயினும், இந்துக்க ளாகப் பிறந்து, சரியான இந்துக்களாக வளர்க்கப்பட்டவர்களாக

இருந்தால் நம்முள் ஏதோ ஓர் அமானுஷ்யமான சக்தி இருந்து நன்ருக நடிக்கத் தெரிந்தவர்களைக் கொண்டு நடத்தப்பெறும் ஒரு நாடகத்தைக் காண்பது போன்ற பிரமை கலையாமல் இருக்கும்படிச் செய்கிறது. நம்முள் ஒவ்வொருவருக்கும் அத்தகைய ஆர்வம் இருக்கிறது. அதை நாம் காப்பாற்றி வருவதுதான் ஆச்சரியம்.

இந்த மகத்தான காவியத்தைப் படிக்கும்பொழுது நீங்களும் அத்தகைய மனநிலையில் இருக்க வேண்டும். ஏதோ ஒரு திட்டத்தோடுதான் அது பாடப்பெற்றிருக்கிறது. அது நிறைவேறுவதற்கு நாமே உதவி செய்யாவிட்டால் அப்புறம் ராமாயணத்தைப் படிப்பது வீண்தான். ஆகவே நாம் எந்த உணர்ச்சியோடு படிக்கிறோம் என்பதுதான் முக்கியமானது; அதில்தான் எல்லா விசேஷமும் அடங்கியிருக்கிறது. ஸ்ரீராமனைக் கடவுளின் அவதாரம் என்று நான் நினைக்கவில்லை. ஆயினும் அந்த உணர்ச்சி என்னை ஆட்கொண்டுதான் இருக்கிறது. கதையில் முற்றும் மனம் லயித்துப் போய்விடுவேன். நான் படிக்கும்பொழுது என் மனம் முழுவதும் அதிலேதான் ஊன்றியிருக்கும்; வேறொன்றிலும் செல்லாது. கடின சித்தமுள்ளவனுன நானே படித்துவிட்டு உணர்ச்சிவசமாகி விடுகிறேன். எந்தப் பக்கத்தைப் படித்தாலும் என் கண்ணில் நீர் வராமல் இருப்பதில்லை. ஒரு மென்மையான உணர்ச்சி, இளகிய மன நெகிழ்ச்சி, சகோதரர்களிடையே உள்ள பாசம், பிரிந்தவர்கள் மீண்டும் ஒன்றுசேருதல், நட்பைப் போற்றுதல், நன்றியுணர்ச்சி ஆகியவை போன்ற, மனிதனுக்கு நிரந்தரமாக உள்ள நற்குணங்களைப்பற்றிய இடங்கள் வரும்பொழுது என் கண்ணில் நீர் மல்கிவிடுகிறது; மேலே படிக்க முடிவதில்லை. கண்களைத் துடைத்துக்கொண்டுதான் மேலே படிக்க வேண்டும். உலகில் அடிபட்டு உள்ளம் மரத்துப்போன எனக்கு ஏன் இத்தகைய நிலை வரவேண்டும்? அப்படி என்னைப் பாதிக்கும்படியாக அதில் என்ன இருக்கிறது? விழிப்பு நிலையில் நான் ஒருபோதும் அறிந்திராதவையும், என் உள்ளத்தின் அடித்தளத்தில் இந்த மகத்தான கதாபாத்திரங்களைப்பற்றி நான் கொண்டிருப்பவையுமான பேரன்பும் பக்தியுமே அதற்குக் காரணம் அல்லவா? ராமனும் சீதையும் ராமாயணத்தில் அல்லாமல் பிற நாட்டுக் கவிதை ஒன்றின் கதாநாயகன்-நாயகியாக இருந்தால்கூட அவர்களைப் பற்றிப் படிக்கும்பொழுது என் மனம் அவர்களின் குணங்களில் ஈடுபட்டுத்தான் நிற்கும். இந்த நாட்டில் இருந்தாலும் வேறெங்கு இருந்தாலும் மனித இயல்பு மனித இயல்பாகத்தான் இருக்கும்; அது ஒருபோதும் மாருது.

ராமாயணத்தைப்பற்றிய என் பிரசங்கங்களில் இவ் விஷயம் தான் முக்கியமானது. ராமன் கடவுளின் அவதாரம் என்பதைப் பற்றி நாம் இங்கே சந்தேகமே கொள்ளத் தேவையில்லை.

அவதாரம் என்ற நம்பிக்கை எனக்கும் இருக்க வேண்டும் என்று தான் நானும் விரும்புகிறேன். ராமாயணக் கதையைப் படித்துப் பயன் அடைவதற்கு அந்த நம்பிக்கை அவசியமில்லை என்றே எனக்குப் படுகிறது. நான் பெருமை அடித்துக் கொள்ளாமல் சொல்லுகிறேன்: ராமன் அவதாரம் என்ற பெருநம்பிக்கையோடு படித்தும், சீதா ராமருடைய சிறந்த வாழ்க்கையினின்றும் அறிந்துகொள்ள வேண்டியதை அறிய இயலாமற் போகிறவர்களைக் காட்டிலும் அத்தகைய நம்பிக்கை இல்லாத நான் ராமாயணத்தைப் படித்து என் சுபாவத்தைத் திருத்திக்கொள்ள முடிகிறது. நாம் எல்லோரும் வானத்தின் கீழ்க் குடியிருக்கிறோம். அதன் கீழேதான் நாம் வாழ்க்கை நடத்துகிறோம். ஒருவரோடு ஒருவர் சண்டை போடுகிறோம். ஒருவரை ஒருவர் கொன்று விடுகிறோம். இந்த ஆகாயத்தின் கீழ் நாம் எவ்வளவோ காரியங்கள் செய்கிறோம். அந்த மேலுலகத்திலுள்ள சக்தி நம் வாழ்க்கையில் புகுந்து அதைத் திருத்தியமைத்து நம்மையும் உருவாக்குகிறது. எதற்காக அப்படிச் செய்கிறது என்று யார் கேட்பது? அப்படிச் செய்வதென்னவோ உண்மை. நான் அதை நம்பினாலும் அதற்கு ஒன்றுமில்லை; நான் நம்பாவிட்டாலும் அதை ஒன்றும் செய்ய முடியாது. அது நிரந்தரமாக மாறுமல் அப்படியே இருக்கிறது. நாம் நினைப்பதொன்றும் அதைப் பாதிக்க இயலாது. நான் ஓர் விஞ்ஞானியாக இருக்கலாம்; தர்க்கசாஸ்திர பண்டிதனாக இருக்கலாம்; அல்லது இயற்கை ஆராய்ச்சியாளனாக இருக்கலாம். என் வாழ்க்கை தெய்விகமான சக்திக்கு உட்பட்டதாக இருந்தால், நான் அதை மீற முடியாது. நான் ஒருவேளை அதை அறிந்து கொள்ளாமல் இருக்கலாம். ஆயினும் என் எண்ணம் ஒவ்வொன்றையும் அது பாதித்திருக்கும். என் செயல் ஒவ்வொன்றையும் அது சிறிதோ பெரிதோ, அல்லது பிறருக்குப் பிரயோசனமுள்ளதோ அல்லது பிரயோசனம் அற்றதோ அதுவே உருவாக்கியிருக்கும். நான் செய்வது அனைத்தும் இந்த நிரந்தரமான சக்திக்கு உட்பட்டதே! ஆகவே ராமன், சீதை, அனுமான் ஆகியவர்கள் தெய்வாம்சம் பொருந்தியவர்கள் என்றால் பொருந்தியவர்கள்தாம். ராமாயணம் முழுவதிலும் அவர்கள் தெய்வாம்சம் என்பது தெரிகிறது. சில சமயம் ராமன் கடவுள் அவதாரம் என்றும், சில சமயம் சாதாரண மனிதன் என்றும் சொல்வது; சீதை சில சமயம் வாழ்க்கையில் மகாலக்ஷ்மியாக நடந்துவிட்டு வேறு சில சமயம் அவ்வாறு இல்லாமலிருப்பது என்பது சாத்தியமல்ல. இது தவறாக இருக்கிறது; காரிய காரண ரீதிக்குப் புறம்பாகவும் இருக்கிறது. ராமாயணத்தில் சில இடங்களில் மட்டும் தெய்வாம்சத்தைப் புகுத்தி மற்றப் பகுதிகளைப் பிரித்துக் காட்டுவது அதன் அடிப்படையான தத்துவத்தையே

அறியாமலிருப்பதாகும். ராமன் கடவுள் அவதாரம் என்ற எண்ணத்தோடு நீங்கள் ராமாயணத்தைப் படிக்க வேண்டாம்; கோடிக்கணக்கான மக்களைத் திருத்தி நல்வழிப்படுத்தும் ஓர் ஒப்புயர்வற்ற மகா காவியமாக அதைப் படியுங்கள்; போதும்.

இன்னொரு வார்த்தை : இப்படிப்பட்ட ஒரு கூட்டத்தில் நான் ஒன்றும் விவரித்துக் கூற வேண்டாம்; உங்களுக்கே தெரிந்திருக்கும். அவதாரம் என்ற இந்தக் கருத்தை ஒருவிதத்தில் எல்லா ஜீவராசிகளுக்குமே அமைத்துக் கூறலாம். நமது சாஸ்திரங்களை நன்ருய்க் கற்றுணர்ந்தவர்களே அதைச் சரியாக அறிந்துகொள்ள முடியும். ஒருவிதமாய்ப் பார்த்தால் இந்த லோகத்திலோ, பிற லோகங்களிலோ உள்ள ஒவ்வொரு பிராணியும் அகிலப் பிரபஞ்சத்திற்கும் அகில உயிர்களுக்கும் ஆதாரமாய் இருக்கும் அந்த ஒரே வஸ்துவினின்றும் தோன்றியதுதான். அந்த ரீதியில் பார்க்கும்பொழுது நாம் எல்லோருமே அவதாரம்தான். ஆயினும் அந்தத் தெய்வாம்சமானது நம்மிடம் அவ்வளவு நன்ருகப் பிரகாசிக்கவில்லை; வேறு சிலரிடம் நன்கு பிரகாசமாகத் தெரிகிறது. தெய்வாம்சம் வேலை செய்வது கால தேச வர்த்தமான நிலையைப் பொறுத்திருக்கிறது.

கவனித்துப் பார்த்தால், இதில்தான் ஒருவன் சாதாரண மனிதன், ஒருவன் தெய்வாம்சம் பொருந்தியவன் என்ற வேறுபாடு புலப்படுகிறது. நல்லொழுக்கமற்ற சாதாரண மனிதனைப் போல் அல்லாமல் மேலான ஒருவனிடம் அமாநுஷ்யமான தெய்வாம்சமானது நற்பயனைக் கருதி அடிக்கடி தெளிவாகப் புலனுகிறது. இதைத்தான் 'ஆத்ம பரிபாகம்' என்று சொல்லுகிருர்கள். சிலர் இந்த ஆத்ம பரிபாகத்தை மற்றவர்களைக் காட்டிலும் அதிகமாய்ப் பெற்றிருக்கிருர்கள். அவர்களுடைய பேச்சிலும் எழுத்திலும் இந்தத் தெய்விகமான அம்சத்தை நாம் காணவும் கேட்கவும் சாத்தியமாகிறது.

ஸ்ரீராமன்! இனி அதிக நேரம் அவரைப்பற்றிப் பேசாமல் இருக்க முடியாது. மனிதனுடைய உயர்ந்த குணங்கள் யாவும் ஒன்றுசேர்ந்து உருப்பெற்ருற் போன்றவர் அவர். அவர் செய்வன பேசுவன எல்லாம் நம்மை அப்படியே ஆட்கொள்கின்றன. ஒவ்வொரு செயலிலும் பேச்சிலும் அவர் அவதாரம் என்பது புலனுகாமல் இருக்க முடியாது. அதனுல்தான் மற்ற வீர புருஷர்களுடைய சரித்திரங்களைப் படிப்பதைவிட ஸ்ரீராமனுடைய சரித்திரத்தைப் படிப்பது நமது ஆத்ம பரிபாகத்திற்கு உகந்ததாக இருக்கிறது.

வேறு வாழ்க்கைச் சித்திரங்களைப் படிப்பதிலும் பயனுண்டு. மனப்பக்குவம் சற்றுக் குறைந்த மனிதர்களும் இருக்கிருர்கள். நாம் படித்துப் பயனடைவதற்காகக் கவிஞர்களும் கதாசிரியர்

களும் தமது புத்தித் திறமையையும் கற்பனு சக்தியையும் கொண்டு இத்தகைய கதாபாத்திரங்களைப் படைத்து, மனிதர்களுக்கு ஏற்படும் சம்பவங்களில் மனிதர்களுக்கேற்ற முறையில் நடக்கும்படி செய்கிருர்கள். இந்தக் கவிஞர்களும் கதாசிரியர்களும் அவ்வளவு திறமை மிக்கவர் அல்லர்; ஆயினும், சாதாரண மனிதர்களை மிகச் சாதாரணமான நிலையில் இருப்பவர்களாகவே சிருஷ்டித்திருந்தும், அவர்களது கற்பனைத் திறனுனது இந்தப் பாத்திரங்களை நம் மனத்தில் பதியுமாறு செய்துவிடுகிறது. இத்தகைய பாத்திரங்களைப் பற்றிப் படிப்பதில் நமக்குப் பயனில்லாமற் போகவில்லை. பெரிய கதாசிரியர்களை எடுத்துக்கொள்வோம். சீட்டு ஆடுவது போல் அலட்சியமாய்ப் படித்தாலன்றி அவர்களைப்பற்றிப் படிப்பது நல மளிக்காமற் போகாது. உள்ளத்தை உருக்கும் இந்தப் பெரிய புத்தகங்களை மனமொன்றிச் சிந்தனை செய்து படித்தால், விக்டர் ஹ்யூகோ என்ற பிரெஞ்சு ஆசிரியர் சிருஷ்டித்த 'ஜீன் வால் ஜீன்' போன்ற கதாபாத்திரங்கள் நமது ஆத்மிக வளர்ச்சிக்கும் கல்வி யறிவின் வளர்ச்சிக்கும் பெரும் பயனை அளிப்பனவாகும். ஒருவன் கடினமான மனமுடையவனுக, அறிவு விருத்திக்காக மட்டும் படிப் பவனுக இருந்தாலும், 'உலக நன்மைக்காக ஒரு மகான் இயற்றிய அரும்பெரும் காவியம்' என்ற எண்ணத்தோடு ராமாயணத்தைப் படித்தாலும் போதும்; அவனுக்குப் பெரிய லாபமேதான். ஆனுல் நாமோ ராமாயணத்தை வெறும் காவியமாக மட்டும் மதித்துப் போற்றவில்லை. இந்திய நாட்டின் சரித்திரத்தையே உருவாக்க உதவும் மாபெரும் காவியம் என்று அதைப் போற்றுகிறேம். ராமாயணம், மகாபாரதம் போன்ற புத்தகங்களை மக்களுக்கு நீதி யையும் தர்மங்களையும் போதிக்கும் கிரந்தங்களாகக் கருதுகிறேம்.

ஸ்ரீராமன், சீதை, அனுமான் ஆகிய அரிய கதாபாத்திரங்களை ஆழ்ந்து சிந்தித்துப் படிப்பது மேற்கூறிய நன்மைகளை அடை வதற்குச் சாதகமாகும். அவர்கள் எப்படிப் படிப்படியாக உயர்ந்த நிலைக்கு வந்தார்கள் என்பது நமக்குப் புலனுகிறது. அவர்கள் பிறக்கும்பொழுதே உயர்ந்துவிடவில்லை. ஸ்ரீராமன் பகவான்தான் ஆயினும் அவர் குழந்தையாகப் பிறந்து, குழந்தை வளர்வது போலவே வளர்ந்தவர். ஒரு பெரிய குரு அவரைக் கையில் பிடித்துக்கொண்டு, வில்வித்தை, வாள்வித்தை, யுத்தப் பயிற்சி யாவும் போதித்தார். யாகங்களுடைய தத்துவத்தையும், உலகிலுள்ள மலைகள், நதிகள், புண்ணிய ஸ்தலங்கள் ஆகியவற்றின் பெருமையையும் அறிவித்தார். ராமன் விசுவாமித்திர மகரிஷியிடம் பயிற்சி பெற்று வளர்ந்தவர். விசுவாமித்திரர் சாதாரண மனிதர் அல்ல. பாலகாண்டத்தின் முடிவிலேயே அவரது கதையை முடித்துவிட்டார் வால்மீகி. நினைக்க நினைக்க அது ஒரு பெரும் தவருகவே தோன்றுகிறது. விசுவாமித்திரர் என்ன என்ன காரி

யங்கள் செய்திருக்கிறார்! ராமனை ஒரு வீர புருஷராக்கியவரே அவர்தாம். போர் புரியும் கலைகளில் தேர்ச்சியளித்தார். இஷ்டப் படி வளையும் இளம் பருவத்தில், பிற்காலத்தில் அவர் செய்ய வேண்டிய பெரும் காரியத்திற்கு ஏற்றபடி அவரை உருவாக்கிய பெருமை அவரைச் சேர்ந்தது. அப்படிப்பட்டவரை ஒரே க்ஷணத்தில் விடைகொடுத்து அனுப்பிவிடுவதா? இது வால்மீகி மகரிஷிக்கே நியாயமா? இவ்வாறு அவர் திடீரென்று மறைந்தது பொறுக்க முடியாமல்தான் இருக்கிறது.

தாய் தந்தை மாற்றாந்தாய் முதலியோர் உள்ள குடும்பத்தில் வளர்ந்தவர் ஸ்ரீராமன்; சாதாரண மனிதர்களுக்குள்ள சபலங்கள் இல்லாதவர் அல்ல. ஓர் ஐக்கியக் குடும்பத்தில் உண்டாகும் தொல்லைகள் அவருக்கும் ஏற்பட்டன. அவற்றினின்றும் அவர் மீண்டது மனத்தை உருக்கும் விதமாக ராமாயணத்தில் விவரிக்கப் பெற்றிருக்கிறது. ராமனுடைய குணத்தைச் சிந்தித்துப் படிக்க வேண்டும்.

ராமனைப் போன்ற ஓர் உயர்ந்த பாத்திரத்தைக் கண்டால் தற்காலப் பரிசிலனையாளர்கள் என்ன சொல்லுகிறார்கள் தெரியுமா? "ஸ்ரீராமனா? சுவாரஸ்யமில்லாத பாத்திரம்! அதில் என்ன இருக் கிறது? இப்படிக் குற்றம் குறையே இல்லாத மனிதன் உண்டா? நூறு பக்கங்கள் படிப்பதற்குள், அவர் என்ன பேசுவார், அடுத்தது என்ன செய்வார் என்றெல்லாம் கணக்காகக் கூறிவிடலாம். எது சரியோ, எதைச் செய்ய வேண்டுமோ அதைத்தான் அவர் செய்வார்; நம்மைப் போல் இல்லை; அவர் நம்மைச் சேர்ந்தவரே அல்ல'' என்று பேசுவார்கள். குற்றம் குறையே இல்லாத ஓர் உயர்ந்த பாத்திரம் என்றால் அவர்கள் பொறுப்பதில்லை. 'என்னைப் போல் இதே சபலங்கள் உள்ள சாதாரண மனிதனாக இருக்க வேண்டும்; காலையில் எழுந்ததும் நல்ல காபியாய் அருந்த வேண்டும், நன்றாய்ச் சாப்பிட வேண்டும் என்றெல்லாம் விரும்பும் சாதாரண மனிதனாக, நம்மில் பலரையும் போல் வாழ்க்கையில் அடிபட்டுத் தொந்தரவுகளுக்கும் கஷ்டங்களுக்கும் உள்ளாகித் தத்தளித்துக்கொண்டிருப்பவனாக அல்லவா இருக்க வேண்டும்?' என்று நினைக்கிறார்கள். இவ்வளவினின்றும் அந்த உயர்ந்த மனிதன் எப்படி மீண்டு வருகிறான் என்று நாம் பார்க்க வேண்டும்.

"நாம் படுகிறவை போன்ற கஷ்டங்கள், சந்தோஷம், வேதனை யாவற்றையும் அநுபவித்து எல்லாக் குறைகளையும் தடைகளை யும் தாங்கிக்கொண்டு மேலே வருபவன்தான் உயர்ந்தவன். மனிதப் பிறவியில் எவ்வளவு மேன்மையடைய முடியுமோ அவ்வளவையும் அடைந்து, எல்லா உயிர்களும் தோன்றுவதற்கு மூலகாரணமாக உள்ள அந்தப் பரமாத்மாவின் அம்சத்தைப் பெற்றவனும் அவனே யாவான். அப்படிப்பட்ட பாத்திரம்தான் எங்களுக்குத் தேவை''

என்று சொல்லுவார்கள். "மனிதனல்லாத தேவபுருஷன் எங்களுக்குத் தேவையில்லை. எங்களுக்கு ஒன்றும் அவனுல் பயனில்லை. மனிதனுக்கு உள்ள உணர்ச்சிகளுடன் வாழ்க்கையில் ஏற்படும் சுக துக்கங்களில் சாதாரண மனிதனைப் போல நடந்துகொள்ளும் ஒரு பாத்திரம் போதும். மனிதனுக இருந்து, மனிதனுக்கு இருக்கும் குறைகளைக் கடந்து தன் தெய்வாம்சத்தை வளர்த்து, முடிவில் மனிதர்களுடைய இதய சிம்மாசனத்தில் நிகரற்ற ஓர் அரசன் போல் அமர வேண்டும்" என்று கூறுவார்கள். ஸ்ரீராமனைக்காட்டிலும் சிறந்த புத்திரனுகவும், சிறந்த கணவனுகவும், சிறந்த அரசனுகவும், சிறந்த மனிதனுகவும் வேறு யார் இருக்க முடியும்? அதுதான் ராமாயணத்தின் சிறப்பு. ராமனைப் பகவானுக நினைத்துப் படிப்பவனுக்குப் பயன் ஏதும் இல்லை. சாதாரண மனிதனுடைய கதை; மனிதர்களின் நடுவிலேயே வாழ்ந்தவன்; ஒரு மனிதனுல் விவரிக்கப் பெற்றவன் என்ற எண்ணத்தோடு படிக்க வேண்டும். அப்படிப் படித்தால்தான் நாம் தெரிந்துகொள்ள வேண்டிய அரிய பல பல விஷயங்கள் அதில் புதையல் போலக் கிடக்கின்றன என்பது விளங்கும்.

ஸ்ரீராமனைப்பற்றிப் பேசுவதில் எவ்வளவு காலம் ஆகும் என்று சொல்ல முடியாது. ஆயினும் எவ்வளவு நேரம் அவரைப்பற்றிப் பேசினுலும், எவ்விதம் அவர் நடத்தைபற்றிப் பேசினுலும், எப்படி அவர் குணத்தைப்பற்றி அறிந்துகொண்டாலும், கதை முழுவதும் அவரே வியாபித்திருப்பதனுல், நல்ல படிப்பினையாகவே இருக்கும். ராமன் சகல அறிவும் சகல நற்குணங்களும் பொருந்தியவன்; உத்தமன்; பிறந்ததிலிருந்து கடைசி வரையில் தவறே செய்யாதவன் என்றெல்லாம் எண்ணிக்கொண்டு படிக்க வேண்டாம் என்று உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். அப்படிப் படிப்பதில் என்ன பிரயோசனம்? எல்லோரையும் போல அவரும் கஷ்டப்பட்டார்; மனச் சபலமும் பலவீனமும் அவருக்கும் இருந்தன. என்ன இப்படிப் பேசுகிறேன் என்று ஆச்சரியப்படாதீர்கள். இப்படிச் சொல்வதனுல் ஒன்றும் பெரிய அபசாரம் நேர்ந்துவிடாது. தம் உள்ளத்திலுண்டான சபலங்களை அவர் அடக்கி வென்றவர்; அடக்கி வென்று மேலும் உயர்ந்து நிற்பவர். இந்த ரீதியில் ராமனைப்பற்றிப் படித்தால்தான் எவ்வளவோ அரிய பெரிய விஷயங்களை நாம் தெரிந்துகொள்ள முடியும்.

## 2

## விசுவாமித்திரரின் வேள்வி; ராமனின் திருமணம்

சபையினருக்கு என் மனமார்ந்த வணக்கம். வால்மீகி ராமாயணத்திலுள்ள சுலோகங்களை எடுத்துச் சொல்லிப் பேச விரும்புகிறேன். ஆனால் புத்தகத்தைப் பாராமல் அப்படியே சுலோகங்களைச் சொல்ல என்னால் இயலாதது ஒரு குறையே. ராமாயணம் முழுவதும் சுலோகம் சுலோகமாய் ஒப்பிக்க இயலாத பிரவசன பண்டிதர் ஒருவரையும் நான் பார்த்ததில்லை. பேச்சின் நடுவில் சுலோகங்கள் சொல்லும்படி இருந்தால் நான் புத்தகத்தைப் பார்த்துத்தான் சொல்ல வேண்டும்.

ராம லக்ஷ்மண பரத சத்ருக்னர் ஆகிய நால்வரும் இன்றைக்கு ஒருவர், நாளைக்கு ஒருவராகப் பிறந்தவர்கள்தாம். வயதில் வித்தியாசம் பார்க்க வேண்டிய அவசியம் இல்லை. ஆனால் ராமாயணத்தில் யார் மூத்தவன் என்பதைப்பற்றிச் சந்தேகமில்லை. பரதன் பெரியவனா, லக்ஷ்மணன் பெரியவனா என்பதிலும் சிறிது சந்தேகம் இருக்கிறது. ஸ்ரீராமனுடைய நிறம் சியாமள வர்ணம் என்பதைத் தவிர நால்வரும் ரூபத்தில் ஒரே மாதிரியாக இருந்தார்கள் என்று வால்மீகி கூறுகிறார். ஆயினும் முதலிலிருந்தே மற்றவர் மூவரையும்விட ஸ்ரீராமனே உயர்ந்தவரென நிச்சயமாகத் தெரிந்துகொள்ள முடியும். அவரது சகோதரர்களைக்கூட அவருக்குச் சமமாகக் கூற முடியாது.

ரூபம், குணம், கல்வி, கேள்வி முதலிய சிறந்த வம்ச குணங்கள் முதலில் வருணிக்கப்பெறுகின்றன. சொற்ப ஏற்றத்தாழ்வைத் தவிர அவர்கள் நால்வரும் உலகில் இணையற்றவர்களாக விளங்கினர். அவர்களின் நன்னெறி, சத்தியம், சிறந்த உணர்வு, நாட்டு மக்களிடமுள்ள சிரத்தை, பெரியவர்களிடம் பணிவு, பெற்றோரிடம் கொண்டுள்ள எல்லையற்ற பக்தி முதலியவற்றைப் பற்றி வால்மீகி முக்கியமாகக் கூறுகிறார்.

இந்த நாட்டு வரலாற்றையும் உலக வரலாற்றையும் ஆராய்ந்து படிப்போர், ராஜகுடும்பங்களில் ஏற்படும் பாக்கிய வசத்தைப்பற்றி அறிந்திருப்பார்கள். ஆகவே நால்வரும் ஒன்றாகப் பிறந்தும், ஒருவர் மீது ஒருவர் அசூயை போட்டி முதலியன

இல்லாமல் இருந்தது இக்ஷ்வாகு குலத்தின் தனி அதிருஷ்டம் என்றே சொல்ல வேண்டும். பணக்காரக் குடும்பங்களில் பிறந்த பிள்ளைகள் செய்வதை ஒரு நிமிஷம் நினைத்துப் பார்த்தால்தான் இந்தச் சகோதர ஒற்றுமையைப்பற்றி அறிந்து போற்ற முடியும் என்பது என் கருத்து.

புத்திரர்களுக்குப் பதினைந்து வயது ஆகவில்லை. அதற்குள் தசரதர் அவர்களுடைய விவாகத்தைப்பற்றி ஆலோசிக்கிறார். மந்திரிகளுடனும் புரோகிதர்களுடனும் கலந்து யோசித்துக்கொண்டிருந்த சமயத்தில் விசுவாமித்திரர் அங்கே வந்து சேருகிறார். அவசரமாக வாக்களிப்பதும் பின்னர் அதைப்பற்றி வருந்துவதுமே தசரதரிடம் உள்ள ஒரு பெருங்குறை அல்லவா? இப்போதும் அது போலவே செய்துவிடுகிறார்.

விசுவாமித்திரரைக் கண்டதும் மிகுந்த உவகையுடன் வரவேற்று உபசரித்து மிதமிஞ்சிய பக்தியுடன் அவர் எது கேட்டாலும் செய்வதாகத் தசரதர் வாக்களிக்கிறார். சமயத்தை நழுவ விடாமல், விசுவாமித்திரர் தாம் செய்யப்போகும் வேள்விக்கு மாரீசன் சுபாகு என்ற இரண்டு அரக்கர்கள் விக்கினம் செய்வதாக இருப்பதைச் சொல்வதுடன், தாம் கோரி வந்ததையும் கூறுகிறார். அவர்கள் லங்கேசுவரனை ராவணனைச் சேர்ந்தவர்கள்; ராவணனால் வேள்விக்கு விக்கினம் செய்யும்பொருட்டு நியமிக்கப்பட்டவர்கள் என்ற தகவலையும் தெரிவிக்கிறார். தசரதர் உடனே தாம் வேண்டியதைச் செய்வதாய்க் கூறி, "ராமனுக்குப் பதிலாக நான் வந்து யஜ்ஞத்தை ரக்ஷிக்கிறேன்" என்று உறுதிமொழி கூறுகிறார். முனிவர் வாயிலிருந்து ராவணனுடைய பெயரைக் கேட்டதும், 'ராவணனோடு போர் புரிவதா?' என்று தசரதர் நடுநடுங்கிப் போய்ப் பின்வாங்குகிறார். இந்த இடத்தில் கவியின் கவித் திறமையை நாம் கவனிக்க வேண்டும்.

பழைய காலத்தவராயினும் சரி, நவீன காலத்தவராயினும் சரி, அலங்காரமான நடையைக் கையாளுபவர்கள் சில பொருத்தமான உயர்ந்த சொற்றொடர்களைத் திரும்பத் திரும்பக் கையாளும் தந்திரத்தை அறிவோம்; அல்லவா? தசரதர் அடிக்கடி கீழே காணும் வார்த்தைகளை உபயோகிக்கிறார்:—

'न रामं नेतुमर्हसि', 'नैव दास्यामि पुत्रकम्'

['ராமனை அழைத்துச் செல்லாதீர்', 'மகனைக் கொடுக்கவே மாட்டேன்']

ஐந்தாறு தடவை அவர் இந்த வார்த்தைகளையே வேதனை தாங்காமல் கூறுவது போல் தோன்றுகிறது. விசுவாமித்திரரோ கோபங்கொண்டவராக எழுந்து, "அரசனே! தான் அளித்த உறுதி

மொழியைத் தவருமல் காப்பாற்றுகிறவன் என்ற பெருமையுடன் நீ சுகமாக ராஜ்யத்தை ஆண்டுகொண்டிரு!'' என்று குத்தலாக மொழிந்துவிட்டுக் கிளம்பிய பொழுது, வசிஷ்டர் தமக்குள்ள செல்வாக்குடன் குறுக்கிட்டு, விசுவாமித்திரரின் பெருமையை எடுத்துக் கூறி அவர் விருப்பத்தைச் செய்யும்படி உபதேசம் செய்கிருர். தசரதர் அதற்குச் சம்மதித்து, ஸ்ரீராமனேயும் லக்ஷ்மணனேயும் அழைத்து வரும்படி கூறுகிருர். விசுவாமித்திரர் லக்ஷ்மணனும் ராமனேடு வரவேண்டுமென்று கேட்கவில்லே. லக்ஷ்மணனேப் பற்றியே அவர் பேசவில்லே. ஆனுல் லக்ஷ்மணனே விட்டு ராமனேத் தனியாக நினேப்பவர் யார்? ராமன் போனுல் லக்ஷ்மணனும் கூடவே செல்வான் என்று தசரதருக்குத் தெரியும். ஆகவே தான் அவ்விருவரையும் வரச் சொல்லி அனுப்புகிருர்.

இந்தச் சந்தர்ப்பத்தில் இணேயற்ற கருத்தும் அழகும் கொண்ட சில சுலோகங்களேப் பார்ப்போம். ஸ்ரீராமனுக்கும் லக்ஷ்மணனுக்குமுள்ள சிநேகத்தைப் பற்றிக் கவி, ''லக்ஷ்மணன் ராமனுடைய உடலே விட்டு வெளியில் உலவுகிற மறு உயிர் போன்றவன்'' என்கிருர். வால்மீகியே ஆசையுடன் அடிக்கடி இந்தச் சொற்களேப் பயன்படுத்துகிருர்.

बाल्यात् प्रभृति सुस्निग्धो लक्ष्मणो लक्ष्मिवर्धनः ।
रामस्य लोकरामस्य भ्रातुर्ज्येष्ठस्य नित्यशः ॥
सर्वप्रियकरस्तस्य रामस्यापि शरीरतः ।
लक्ष्मणो लक्ष्मिसम्पन्नो बहिःप्राण इवापरः ॥
न च तेन विना निद्रां लभते पुरुषोत्तमः ।
मृष्टमन्नमुपानीतमश्नाति न हि तं विना ॥ I. 18. 27-29.

''லக்ஷ்மணனேப் பிரிந்தால் ராமனுக்குத் தூக்கம் வராது. லக்ஷ்மணன் இல்லாமல் எந்த ருசியுள்ள உணவையும் ராமன் தனியே புசிக்க மாட்டான்'' என்கிருர்.

यदा हि हयमारूढो मृगयां याति राघवः ।
तदैनं पृष्ठतोऽभ्येति सधनुः परिपालयन् ॥ I. 18. 30.

''ராமன் வேட்டையாடச் சென்ருல் லக்ஷ்மணனும் வில்லாளியாகத் தொடர்ந்து செல்வான்'' என்றும் கவி வர்ணிக்கிருர். அரண்ய காண்டத்தில், ராம லக்ஷ்மணர்களேத் தான் சந்தித்ததைச் சூர்ப்பணகை ராவணனிடம் சொல்லும்பொழுது லக்ஷ்மணனேப் பற்றி 'प्राणो बहिश्चरः- ப்ராணே பஹிஶ்சர :- வெளியே உலவும் உயிர்' என்று இதே வார்த்தையைக் கூறுகிருள். ராம லக்ஷ்மணர்களோடு பேசியபொழுது அவள் அவ்வளவு உண்மையாகவும் மரியாதையாகவும் நடந்துகொள்ளவில்லே. ஆனுல் ராவணனிடம்

அவர்களைப்பற்றிச் சொன்னபொழுது தன் மனத்திற்பட்டபடியே நிரம்பவும் உண்மையாகப் பேசுகிறாள். சீதையை, 'அந்தக் குரூபி' என்று கூறி, அவளுக்குப் பதிலாகத் தன்னை ஏற்றுக்கொள்ளும்படி ராமனிடம் அவள் சொன்னாலும், ராவணனிடம் பேசியபொழுது, 'பூவுலகில் காணக்கிடைக்காத ரூபமுள்ளவள்' என்று சீதையை வர்ணிக்கிறாள். லக்ஷ்மணனைக் குறித்து, 'रामस्य दक्षिणो बाहुः - ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:- ராமனுக்கு வலக் கை போன்றவன்' என்று வியந்து பாராட்டுகிறாள்.

யுத்த காண்டத்தில், ராவணனுடைய வேவுகாரர்களில் ஒருவனான சுகன் என்பவன் லக்ஷ்மணனைப்பற்றிச் சொல்லும்பொழுது இதே வார்த்தைகளை வழங்குகிறான்.

रामस्य दक्षिणो बाहुः, नित्यं प्राणो बहिश्चरः । VI. 28. 25.

ராவணனுடைய சக்தி ஆயுதத்தினால் அடிபட்டு லக்ஷ்மணன் மூச்சுத் திணறியபொழுது ராமர் அவனைத் தாங்கிக்கொண்டு அழுது புலம்பியபொழுதும் மேற்சொன்ன வார்த்தைகளே வருகின்றன.

राघवो भ्रातरं दृष्ट्वा प्रियं प्राणं बहिश्चरम् ।
दुःखेन महताऽऽविष्टो ध्यानशोकपरायणः ॥ VI. 102. 9.

மற்ற எல்லாக் கவிகளையும் போலவே வால்மீகியும் பொருத்தமாயும் அழகாயுமுள்ள பதங்களாக அமைந்தால் அவற்றையே மீண்டும் மீண்டும் பிரயோகப்படுத்துவதில் விருப்பமுள்ளவராக இருக்கிறார் என்பதைக் காட்டவே இதைக் குறிப்பிட்டேன்.

மற்றோர் இடத்தில், தனக்கு யுவராஜ பட்டாபிஷேகம் நடக்கப் போவதாக நினைத்து, ராமர் லக்ஷ்மணனிடம்,

लक्ष्मणेमां मया सार्धं प्रशाधि त्वं वसुन्धराम् ।
द्वितीयं मेऽन्तरात्मानं त्वामियं श्रीरुपस्थिता ॥ II. 4. 45.

"இந்தப் பெரிய ராஜ்யலாபத்தை நான் உன்னோடு பகிர்ந்து கொள்வேன். இது என்னை மட்டுமல்ல, உன்னையும் சேர்ந்ததே. நீ எனது இரண்டாவது அந்தராத்மா (த்விதீய: அந்தராத்மா) அல்லவா?'' என்று கூறி, ''மேலும் எப்பொழுதாவது இம்மாதிரி விஷயங்களை நான் விரும்பினால் நீயும் என்னுடன் சேர்ந்து அவற்றை அநுபவிப்பாய் என்ற எண்ணத்தோடுதான் அவற்றை அடைய விரும்புகிறேன்'' என்கிறார். ராஜகுடும்பங்களில் இப்படிச் சகோதரர்களுக்குள் ஐக்கியம் அமைவது மிகவும் அபூர்வம் அல்லவா? ராமனுக்கும் லக்ஷ்மணனுக்கும் இடையேயுள்ள பேரன்புக்கும் ஒற்றுமைக்கும் சமமாகப் பரதனுக்கும் சத்ருக்கினனுக்குமுள்ள அன்பையும் ஒற்றுமையையும்தான் கூறலாம்.

ராமாயணத்தில் இது வேறெங்கும் காணக் கிடைக்காத ஒரு பெரும் சிறப்பாக இருப்பதனால், ஒரு நாள் அதைப்பற்றியே தனியாகப் பேசலாம் என்று நினைக்கிறேன். கதையில் எங்கெல்லாம் இந்த அருங்குணத்தின் பெருமை வெளியாகிறதோ அதை மட்டும் இன்று எடுத்துக்காட்டலாமென்று இருக்கிறேன். நாம் கவனிக்க வேண்டிய மற்றொரு விஷயத்தை இப்பொழுது கூறுகிறேன்.

ராமன் வேறு, லக்ஷ்மணன் வேறு என்று இல்லாமல் இருவரும் அவ்வளவு ஒன்றாக இருந்தது எல்லோரும் அறிந்ததே. அநேக நியமங்களை அநுஷ்டித்துக்கொண்டும், பல அரிய விஷயங்களைக் கேட்டுத் தெரிந்துகொள்வதனால் தமது அறிவை வளர்த்துக் கொண்டும் ராமனும் லக்ஷ்மணனும் விசுவாமித்திரரைத் தொடர்ந்து செல்லும் கதை மிகவும் அழகாக வர்ணிக்கப் பெறுகிறது. ராமனோடு லக்ஷ்மணனையும் வரவேண்டுமென்று விசுவாமித்திரர் கேட்கவில்லை. அதனாலேயோ என்னவோ லக்ஷ்மணனை அவர் அதிகமாய்க் கவனிக்கவில்லை போல் தோன்று கிறது. "ராமா! ராகவா!" என்று ராமனையே எப்பொழுதும் அழைத்துப் பேசுவதைக் காண்கிறோம். ராமனுடன் லக்ஷ்மணன் இருப்பதை விரும்பாமல் வேண்டுமென்றே அவர் அவனை அலட்சியம் செய்தார் என்று சொல்லுவது சரியல்ல. ராமனோடு பேசினால் அது லக்ஷ்மணனோடு பேசியதாகவும் ஆகும் என்ற எண்ணம் எல்லோரையும் போல அவருக்கும் இருந்திருக்கலாம். என்ன செய்ய வேண்டுமென்பதைக் கூறும்பொழுது இரண்டொரு தடவை தவிர மற்றச் சமயங்களிலெல்லாம் அவர் ராமனை மட்டுமே பார்த்துப் பேசுகிறார். 'பலை', 'அதிபலை' என்ற இரண்டு மந்திரங் களையும் உபதேசிக்கும்பொழுதுகூட அவர் ராமனுக்கு மட்டும்தான் சொல்லுகிறார். இதற்குச் சமாதானம் சொல்ல முடியாதவர்களாய் உரையாசிரியர்கள், 'ராமா என்று அழைக்கும்பொழுது அது லக்ஷ்மணனையும் சேர்த்துச் சொன்னதேயாம்' என்று அபிப்பிராயப் படுகிறார்கள். விசுவாமித்திரரிடமிருந்து நேரில் தாம் தெரிந்து கொண்ட மந்திரத்தைப் பிறகு ராமர் லக்ஷ்மணனுக்கு உபதேசித் தார் என்று ஓர் உரைகாரர் தெளிவுபடுத்துகிறார். அது எப்படியோ; லக்ஷ்மணனும் சாதாரணமானவன் அல்ல; ஆயினும் ஸ்ரீராமனை விட்டு வேறாகப் பிரித்துக் கூறாமல்தான் ராமாயணத்தில் லக்ஷ்மணனைப் பற்றிச் சொல்லியிருக்கிறது.

ராமனுடைய குணத்தை விளக்கும் மற்றொரு விஷயத்தை இங்கே எடுத்துக் கூறுகிறேன். தாடகாவனத்தில் தாடகையைச் சந்தித்தபொழுதுதான் ராமனும் லக்ஷ்மணனும் முதல்முதலில், போர்முறையைப் பயிலுகிறார்கள். விசுவாமித்திரர் தசரதரிடம் 'மாரீசனும் சுபாகுவும் என் விரோதிகள்' என்று கூறுகிறாரே தவிரத் தாடகையைப்பற்றிப் பேசவே இல்லை. அதற்கு என்ன

காரணம் இருக்கக்கூடுமென்று யோசித்துப் பார்ப்போம். வேள்விக்கு அவள் ஒன்றும் விக்கினம் செய்யாமலில்லை; 'யஜ்ஞ விக்நகரீ' என்றுதான் விசுவாமித்திரர் அவளைப்பற்றிக் கூறுகிறார். தசரதர் ராமரை அவ்வளவு சுலபமாய்த் தம்முடன் அனுப்பிவிட மாட்டார் என்று விசுவாமித்திரருக்குத் தெரியும். 'மாரீசன், சுபாகு ஆகிய இருவரைத்தவிரத் தாடகை என்ற பெண் வேறு இருக்கிறாள்' என்று கூறினால் அவருக்குப் பின்னும் அதிகப் பயமாகிவிடும். இந்தக் காலத்திற்போல் அந்தக் காலத்திலும் போர்புரிந்து பழக்கமான ஒரு யுத்தவீரன் ஸ்திரீயைக் கொல்லுவதற்குத் தயங்குவான். தாடகையைக் கொன்றாலன்றி அவள் புரியும் உபத்திரவம் நீங்காது என்று விசுவாமித்திரருக்குத் தெரியும். 'உங்கள் புத்திரனை அழைத்துப்போய், முதல்முதலில் ஒரு ஸ்திரீயைக் கொல்வதோடு அவன் யுத்தப்பயிற்சியைத் துவக்கப்போகிறேன்' என்று தசரதரிடம் சொன்னால் எப்படிச் சரியாக இருக்கும்? ஆகவேதான் மனத்தில் வைத்திருந்த இந்த விஷயத்தை அவர் தசரதரிடம் சொல்லாமல் நிறுத்திக்கொண்டார் என்று நான் ஊகிக்கிறேன்.

தாடகையைப் பார்ப்பதற்கு முன்பே விசுவாமித்திரர் ராமனிடம், ''அவள் மிகவும் தந்திரமுள்ளவள். அவளிடம் தயை காட்ட வேண்டாம். அவளை உடனே வதம் செய்; தயங்காதே; ஸ்திரீவதமாயிற்றே என்று சற்றும் பார்க்காதே. அவளைக் கொல்லுவதுதான் முறை'' என்று கூறுகிறார். ''பிரஜைகளுக்கு ஏற்பட்ட இடுக்கண்களிலிருந்து அவர்களைக் காப்பதுதான் உன்னைப் போன்ற ராஜகுமாரர்களின் முதற் கடமையாகும். அதற்குத் தடையாக இருக்கும் யோசனைகளைக் களைய வேண்டும். ஸ்திரீயைக் கொல்ல வேண்டுமென்றால் கொன்றுதான் ஆகவேண்டும். இரக்கம் காட்டக்கூடாது'' என்று மேலும் எச்சரித்துச் சொல்லுகிறார்.

नृशंसमनृशंसं वा प्रजारक्षणकारणात् ।
पातकं वा सदोषं वा कर्तव्यं रक्षता सता ॥
राज्यभारनियुक्तानामेष धर्मः सनातनः ।
अधर्म्यां जहि काकुत्स्थ धर्मो ह्यस्यां न विद्यते ॥ I. 25. 18-19.

இதற்கு முன்பு நடந்த ஸ்திரீ வதங்களைப்பற்றிச் சொல்லி, விசுவாமித்திரர் மேலும் வற்புறுத்திக் கூறவே, ராமர் அதற்குச் சம்மதிக்கிறார். ''உன்னைத்தான் முதல்முதலாக ஸ்திரீயை வதம் செய்யும் முறையற்ற காரியத்தைச் செய்யும்படிச் சொல்வதாக நினைத்துக்கொள்ளாதே. பெரியவர்கள் எல்லாரும் அதைச் செய்திருக்கிறார்கள். இந்திரன் மந்தரையைக் கொன்றான். பிருகு பத்தினியை மகாவிஷ்ணுவே வதம் செய்தார். பரசுராமர் தம் தாயையே கொன்றார். ஆகவே இதில் உனக்கு அருவருப்புத்

தோன்ற வேண்டியதில்லை'' என்கிறார். ராமரும் இதைத் தவறாக நினைக்காமல், ''என் தந்தை என்னைத் தங்களுடன் அனுப்பிய பொழுது தாங்கள் எது சொன்னாலும் மறுக்காமல் உடனே செய்யக் கட்டளையிட்டிருக்கிறார். என் தந்தை பெரிய சக்கரவர்த்தி; தாங்களோ பெரிய ரிஷி, என் குரு. தங்கள் சொல்லை எதற்காக நான் மீறி நடப்பேன்?'' என்கிறார்.

सोऽहं पितुर्वचः श्रुत्वा शासनाद् ब्रह्मवादिनः ।
करिष्यामि न सन्देहस्ताटकावधमुत्तमम् ॥ I. 26. 4.

''குருவின் சொல்லைக் கேட்டு நடப்பது என் பெரும் கடமையாகையால் தாடகையை வதம் செய்வேன்; ந ஸந்தேஹ:- இதில் ஐயமில்லை'' என்று ராமர் கூறினாலும், சிறிது நேரம் கழித்துத் தாடகையைக் கண்டதும் அவரது மனச்சாட்சி அவளைக் கொல்ல இடம் தரவில்லை. "லக்ஷ்மணா, இந்தப் பயங்கர ரூபமுள்ள ராக்ஷஸியைத் தைரியமில்லாதவர்கள் பார்க்கும்பொழுதே உயிரை விட்டு விடுவார்கள். ஆயினும் இவள் ஸ்திரீ. அதை எப்படி மறுப்பது? விசுவாமித்திர மகரிஷிக்கு இவளால் துன்பமில்லாமலிருக்க வேண்டுமென்பது ஒன்றுதான் நமது கொள்கை. இவளைச் சக்தியில்லாமல் செய்துவிடுகிறேன். இவள் கைகளை வெட்டிக் காதுகளை அறுத்து விரூபமாக்கி அனுப்பிவிடுவோம். அப்புறம் இவளால் எந்த இம்சையும் ஏற்படாது'' என்று கூறி, ஒரு பாணத்தினால் அவள் கைகளை வெட்டி வீழ்த்துகிறார். தானும் ஒரு பாணத்தைப் போட்டு லக்ஷ்மணன் அவள் காதுகளையும் மூக்கையும் அறுத்தெறிகிறான். ஆனால் தாடகையோ இதற்கெல்லாம் சிறிதும் சளைக்காமல் அவர்கள்மீது கல்மாரி பொழிகிறாள். பல உருவங்களை எடுத்துக் கொண்டு அவர்கள் கண்ணில் படாமல் மறைந்திருந்து துன்புறுத்துகிறாள். ராமனும் லக்ஷ்மணனும் ஒலி வந்த இடத்தை நோக்கி அம்புகளைப் பொழிகிறார்கள். ஆனால் அவர்களின் முயற்சி அதிகம் பலிக்கவில்லை. அவர்கள் சிரமப்படுவதைப் பார்த்த விசுவாமித்திரர், ''இவளுக்கு நீ கருணைகாட்ட வேண்டியதில்லை, ராமா! இவள் அத்தகைய ஸ்திரீ அல்ல; இவளை வதம் செய்துவிடு என்று சொன்னேன். சூரியன் அஸ்தமிக்கும் வேளை வந்துவிட்டது. இன்னும் ஐந்து நிமிஷம் கடந்தாலும் பிறகு அதிகத் தாமதமாகிவிடும். சூரியன் அஸ்தமித்துவிட்டால் இந்த ராக்ஷஸர்கள் பகல்வேளையைக் காட்டிலும் பத்து மடங்கு அதிகப் பலம் பெற்றவர்களாகிவிடுவர். இப்பொழுதே இவளைத் தொலைத்துவிடு'' என்று கூறியதைக் கேட்டு ராமர் உடனே தாடகையை வதம் செய்கிறார்.

நாம் இந்த இடத்தில் கொஞ்சம் நன்றாய்ச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். ராமர் ருஜுவாகப் பேசுபவர், ருஜுவாக நடப்பவர் என்பதைப்பற்றி யாருக்கும் சந்தேகமில்லை. குருவான விசுவா

மித்திரரின் சொல்லைக் கேட்டு நடக்க வேண்டுமென்று கூறியவர், சில நிமிஷத்திற்கெல்லாம் தாடகையை உடனே கொல்லுவதைப் பற்றி யோசிப்பானேன்? தயங்கியதுடன் அவள் கைகளை வெட்டி விரூபமாக்கிவிட்டால் போதுமென்று லக்ஷ்மணனிடம் ஏன் சொல்லுகிறார்? ராமருடைய குணத்தைப்பற்றிக் கூறும்பொழுது இவ்விடத்தில் சாவதானமாய் யோசித்துக் கூற வேண்டும். வியாக்கியானகாரர்கள்கூடத் தெளிவாக ஒன்றும் சொல்லவில்லை. எனக்கு ஒருவிதமாய்த் தோன்றுகிறது. பெரிய பெரிய விஷயங்களில் ஸ்ரீராமர் தமக்குச் சரியென்று பட்டதையே செய்வது வழக்கம். பிறரும் தம் மாதிரி நினைத்தாலொழிய அவர்களைப் பின்பற்றமாட்டார். முதலில் ஏதேனும் சந்தேகம் இருந்தாலும் இறுதியில் தாம் நினைத்தபடியேதான் செய்வார். யோசிக்காமலே விசுவாமித்திரரிடம் தாடகையை வதம் செய்வதாக ஒப்புக்கொண்டார். ஆயினும் வதம் செய்ய வேண்டிய சமயம் வந்தபொழுது, சந்தேகம் தோன்றவே, 'மகரிஷியின் வார்த்தையை அப்படியே கேட்டு நடக்காவிட்டால் என்ன? அவளை முற்றும் சக்தியற்றவளாகச் செய்துவிடுகிறேன். அது போதாதா?' என்று மனத்தைச் சமாதானம் செய்துகொள்ளுகிறார். விசுவாமித்திரர் கூறியதை மீறி நடக்க வேண்டுமென்றோ அல்லது தாம் செய்த உறுதிமொழியைக் கைவிடுவதென்ற விருப்பமோ ராமருக்குச் சிறிதுமில்லை என்று நான் நிச்சயமாய்க் கூறுவேன். எவ்வளவுதான் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டிருந்தாலும் இம்மாதிரி சந்தேகங்களும் யோசனைகளும், காரியம் நடக்க வேண்டிய சமயத்தில் மனக்கலக்கத்தை உண்டுபண்ணுவதுண்டு. ஸ்திரீயை வதம் செய்வது முறையல்ல என்ற எண்ணத்தைத் தவிர்ப்பதற்கு விசுவாமித்திரர் ஒரு நல்ல சட்டத்தை ஏற்படுத்தினர். கஷ்டப்படுகிறவர்களைக் காப்பதுதான் ஓர் அரசனுக்குள்ள பெரும் கடமையாகும். மற்றக் கடமைகள் எல்லாம் அதற்கு நிகரல்ல. ஆகவே ஸ்திரீயாயிற்றே என்று எவ்வளவு இரக்கம் தோன்றினாலும் ஆபத்திலிருப்பவர்களைக் காப்பது என்பது யாவற்றையும்விட மிகவும் முக்கியமான கடமை அல்லவா? ஒரு பெரிய வேள்வியையும் அதிலிருந்து ஏற்படும் பயன்களையும், மனத்தில் எழும் இந்தச் சிறு தயக்கம் கெடுத்துவிடுமே என்பதுதான் நாம் இதிலிருந்து தெரிந்துகொள்ள வேண்டிய விஷயம்.

இனி, பால காண்டத்திலுள்ள ஒரு முக்கியமான கட்டத்திற்குச் செல்வோம். மிதிலைக்குப் போகலாமென்று விசுவாமித்திரரும் மற்றுமுள்ள முனிவரும் ராம லக்ஷ்மணர்களிடம் சொல்லும் இடம். ஜனகர் ஒரு பெரிய யாகம் நடத்துகிறார்; அது பார்க்க வேண்டியது. மற்றொரு விசேஷம்: ஜனக மகாராஜாவிடம், திரிபுரங்களை எரிப்பதற்குச் சிவபெருமானுக்கு உதவிய ஒரு திவ்விய தனுசு

இருந்தது. அந்த வில் ஜனகனின் கைக்கு எப்படி வந்தது என்ற வரலாறு அவ்வளவு சரியாக ராமாயணத்தில் விவரிக்கப்படவில்லை. எப்படியோ ஜனகரிடம் அத்தகைய வில் ஒன்று இருந்தது என்பதுதான் நமக்குத் தேவையான விஷயம். ஆகவே, விசுவாமித்திரர் உட்பட அங்குள்ள ரிஷிகள் அனைவரும் ராமலக்ஷ்மணர்களிடம், ''மிதிலைக்குப் போய் அங்கே நடக்கும் வேள்வியைப் பார்த்துவிட்டுப் பிறகு அந்தத் தெய்விக வில்லையும் பார்க்கலாம். எவ்வளவோ பேர்கள் அதைத் தூக்கி நாணேற்ற முயன்றார்கள்; முடியவில்லை. நீங்களும் வேண்டுமானால் அதைச் செய்து பார்க்கலாம்'' என்று தூண்டுகிறார்கள். வால்மீகி சில விஷயங்களைச் சொல்லாமல் விடுவது கவனிக்கத் தகுந்தது. அந்த வில்லைத் தூக்கி நாணேற்றுபவனுக்கே தம் மகள் சீதையை மணம் செய்து கொடுப்பதாக ஜனகர் பிரதிக்ஞை செய்திருந்தது அந்தச் சமயத்தில் எல்லோருக்கும் தெரிந்ததே அல்லவா? விசுவாமித்திரருக்கு இது தெரிந்திராமலிருக்க முடியாது. ஆயினும் அவரோ மற்ற ரிஷிகளோ ஸ்ரீராமனிடம் அதைப்பற்றிப் பிரஸ்தாபிக்கவே இல்லை. ஜனகரிடம் ஒரு சிறந்த வில் இருக்கிறது என்று மட்டுமே சொல்லுகிறார்கள்.

இளைஞர்களிடம் எல்லாவற்றையும் விடாமல் சொல்லுவதைப் பெரியவர்கள் விரும்புவதில்லை. சில விஷயங்கள் பின்பு தெரியும்பொழுது அவர்களுக்கு ஆச்சரியமாக இருக்கட்டும் என்றோ, அல்லது முன்கூட்டியே தெரிந்துகொண்டு செய்ய வேண்டியதைச் செய்ய இயலாமற் போகக்கூடாது என்றோ அவர்கள் பேசாமல் இருந்துவிடுவார்கள். எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம். விசுவாமித்திரர் ஒருவேளை, 'வில்லை எடுத்து நாணேற்றிப் பார்க்கும்படி ராமனிடம் நான் சொல்லப்போவதில்லை' என்று தமக்குள் நினைத்துக்கொண்டிருக்கலாம். அவர்கள் மிதிலைக்குச் சென்றதும் ஜனகர், ''இவ்வளவு அழகு வாய்ந்த இந்த ராஜகுமாரர் யார்?'' என்று கேட்க, விசுவாமித்திரர் அவர்கள் இன்னாரென்று கூறி, அவரிடமிருக்கும் அந்த வில்லைப் பார்க்க அவர்கள் வந்திருப்பதாகச் சொல்லுகிறார். ''ஆகா! 'அந்த வில்லை யார் எடுத்து வளைத்து நாணேற்றுகிறானோ அவனே என் மகள் சீதையின் பதியாவான்' என்று நான் பிரதிக்ஞை செய்திருக்கிறேன். ராமன் நாணேற்றிவிட்டால் அவனே எனக்கு மருமகனாவான்'' என்று ஜனகர் முதல் முதலாக வில்லைப்பற்றிச் சொல்லுகிறார். ராமர் ஒன்றும் பேசவில்லை. எட்டுச் சக்கரங்களையுடைய ஒரு வண்டியில் வைத்து, ஐயாயிரம் பேர் அந்த வண்டியை இழுத்துக்கொண்டு வருகிறார்களாம். வில் வந்து சேர்ந்ததும், எவ்வளவோ பேர் அதைத் தூக்க முயன்று முடியாமற் போனதைப்பற்றி ஜனகர் சொன்னபொழுது, பதினைந்து வயதுகூட நிரம்பாத ராமர் அதன் எதிரில்

போய் வெட்கத்தோடு தயங்கி நின்றதைப் பார்த்தவர்கள், 'இவனால் இது எங்கே முடியப்போகிறது?' என்று நினைத்திருப்பர். "வில்லைக் காட்டுங்கள்; குழந்தைகள் பார்க்கட்டும்" என்று விசுவாமித்திரர் கூறியதும், ராமர் பெட்டியைத் திறந்து வில்லைப் பார்க்கிறார். பிறகு வினயத்தோடு, "நான் தொட்டுப் பார்க்கட்டுமா?" என்று கேட்டுவிட்டு மீண்டும், "நான் வில்லை எடுத்து நாணேற்றிப் பார்க்கட்டுமா?" என்று கேட்டதும், விசுவாமித்திரரும் ஜனகரும் அநுமதிக்கிறார்கள். மிகவும் அநாயாசமாக வில்லை எடுத்து வளைத்து ஸ்ரீராமன் நாணேற்ற முயன்றதும் அது மத்தியில் முறிந்து, இரு துண்டுகளாகின்றன. அது ஒடியும்பொழுது எழுந்த சப்தத்தினால் பூமி நடுங்கியது. பயத்தினால் மாந்தர் மூர்ச்சித்து விழுந்தனர். மிருகங்கள் பக்ஷிகள் எல்லாங்கூடப் பயந்து நடுங்கின என்கிறார் கவி. ஜனகர், விசுவாமித்திரர், ராம லக்ஷ்மணர் ஆகிய நால்வர் மட்டுமே அமைதியாக இருந்தார்கள். வில் முறிந்ததும் ஜனகர், "என் விருப்பம் நிறைவேறியது. நல்ல மருமகனை அடைந்துவிட்டேன். இனி, தக்க தூதர்களை அனுப்பிக் கல்யாணத்திற்கு வந்து குழந்தைகளுக்கு ஆசி வழங்க வேண்டுமென்று தசரதருக்குச் சொல்லியனுப்புகிறேன்" என்று மகிழ்ச்சியோடு சொல்லுகிறார்.

அயோத்தியா காண்டத்தில், சீதை அனசூயையிடம் இந்த வரலாற்றைக் கூறியபொழுது கொஞ்சம் மாற்றிச் சொல்வதாகக் காண்கிறது. நடந்த சம்பவத்தை அப்படியே அதே வார்த்தைகளில் மீண்டும் சொல்லுவதில்லை. ஏதாவது சிறு மாறுதல் இருந்துவிடும். இந்த வரலாற்றில் ஒரு நல்ல வித்தியாசமே காண்கிறது. "வில் முறிந்ததும் என் பிதா, உடனே தீர்த்தபாத்திரத்தை எடுத்து வந்து என்னை ராமருக்குத் தானம் செய்ய முற்பட்டபொழுது ராமர், 'என் பிதாவின் அநுமதியில்லாமல் நான் எப்படி இதை ஏற்றுக் கொள்வேன்?' என்று மறுத்துவிட்டார்" என்று சீதை சொல்லுகிறாள். அவள் கூறுவதுதான் சரியாக இருக்கும் என்று எனக்குத் தோன்றுகிறது. இந்த வரலாற்றில் வேறு சில மாறுதல்களும் காண்கின்றன.

दीयमानां न तु तदा प्रतिजग्राह राघवः ।
अविज्ञाय पितुश्छन्दमयोध्याधिपतेः प्रभोः ॥ II. 118. 51.

"நிபந்தனையின்படி வில்லை நாணேற்றி என்னை ஜயித்துவிட்டாலும் தந்தையின் கருத்தை அறியாமல் என்னை ஏற்றுக் கொள்ள அவர் விரும்பவில்லை" என்று கூறுகிறாள் சீதை. தூதர்களிடமிருந்து தெரிந்ததும் தசரதர் பெருமகிழ்ச்சியுடன் வசிஷ்டர் முதலியோரை முன்னிட்டுக்கொண்டு சதுரங்க சைனியத்துடன் மிதிலைக்குப் புறப்பட்டார் என்பதை அறிவோம். இங்கு நாம்

கவனிக்க வேண்டிய விஷயம் ஒன்று இருக்கிறது: சீதையின் நிலைமை அவளது சகோதரிகளான ஊர்மிளை, மாண்டவி, சுருதகீர்த்தி இவர்களின் நிலையைக் காட்டிலும் வேறு விதமானது. ராமன் வில்லை வளைத்ததனால் அவளையும் ஜயித்தாற் போல ஆகிறதல்லவா? அவளுடைய கல்யாணத்தைத் தவிர வேறு மூன்று கல்யாணங்களும் ஒரே சமயத்தில் நடக்கின்றன. அது எப்படி என்றால், இங்கே மூலத்தில் என்ன இருக்கிறது என்று பார்க்க வேண்டும். ஜனகர் ஊர்மிளையை லக்ஷ்மணனுக்கு மணம் செய்து கொடுப்பதாகச் சொல்லவில்லை. பரத சத்ருக்கினர்களுக்கு மாண்டவியையும் சுருதகீர்த்தியையும் கொடுப்பதாகவும் சொல்லவில்லை. வசிஷ்டர் இக்ஷ்வாகு வம்சத்து அரசர்களின் பரம்பரைப் பெருமையைக் கூறியபிறகு, "ஜனக மகாராஜனே! சீதையை ராமனுக்கும் ஊர்மிளையை லக்ஷ்மணனுக்கும் பாணிக்கிரகணம் செய்து கொடுக்கும்படி உன்னைக் கேட்டுக்கொள்ளுகிறேன்" என்று முடிக்கிறார். முதல்முதலாக இந்த விவாகப் பேச்சு நடக்கிறது.

இக் காலத்தில் போல் ஜனகர் ஒரு கட்டு ஜாதகங்களை ஜோசியரிடம் காட்டிப் பொருத்தம் பார்த்துக்கொண்டு, பெற்றோர்களிடம் சென்று, "இன்னும் இருபதினாயிரம் அதிகம் தருகிறேன்; என் பெண்ணைப் பண்ணிக்கொள்ளுங்கள்" என்றெல்லாம் கேட்கவில்லை. நல்ல படித்த வைதிகர்களைக் கொண்டு, தகுந்த பெண்ணைத் தேடிப் பையனுக்கு மணம் செய்விப்பதுதான் சாஸ்திரரீதியான பழைய சம்பிரதாயம். அதன்படிதான் இப்பொழுதும் நடந்திருக்கிறது. வசிஷ்டர் லக்ஷ்மணனுக்கு ஊர்மிளையைக் கொடுக்கும்படிக் கேட்டுத்தான் அந்த விவாகமும் நடைபெறுகிறது. இதற்கிடையில் விசுவாமித்திரர், "தசரதரும் ஜனகரும் போன்ற இரண்டு அரசர்கள் ஒரே இடத்தில் ஒன்றுசேர்ந்திருப்பது சரித்திரத்திலேயே அபூர்வமான சம்பவம். வசிஷ்டர், விசுவாமித்திரர், சதானந்தர் ஆகியோர் சேர்ந்திருக்கும் இந்தச் சமயத்தில் ஜனக மகாராஜனே! பரத சத்ருக்கினர்களுக்கு உன் சகோதரனின் குமாரிகள் மாண்டவியையும் சுருதகீர்த்தியையும் மணம் செய்து கொடுக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்" என்று சொல்லுகிறார். விவாகப் பேச்சு மணமகன் சார்பிலிருந்துதான் தொடங்குவது சம்பிரதாயமாக இருந்திருக்கிறது.

கல்யாண சமயத்தில் ஜனகர் கூறும் பிரசித்தமான சுலோகம் எல்லோரும் அறிந்ததே. சீதையைக் கையைப் பிடித்து ராமனுக்கு எதிரில் நிறுத்தி, "அக்கினிசாக்ஷியாக உன் தர்மாநுஷ்டானங்களுக்கு இனி என்றும் உறுதுணையாக இருக்கப்போகும் என் மகள் இதோ இருக்கிறாள். மகா பதிவிரதையும் மகா பாக்கியசாலியுமான இவள் உன்னை என்றும் நிழல் போல் தொடருவாள்" என்கிறார் ஜனகர்.

புனிதமான விவாக சமயத்தில் எவ்வளவு தடவை கூறினாலும் தெவிட்டாத சுலோகங்கள் இவை.

इयं सीता मम सुता सहधर्मचरी तव ।
प्रतीच्छ चैनां भद्रं ते पाणिं गृह्णीष्व पाणिना ॥
पतिव्रता महाभागा छायेवानुगता सदा ।
इत्युक्त्वा प्राक्षिपद्राजा मन्त्रपूतं जलं तदा ॥ I. 73. 27-28.

பரசுராமரின் வருகையைக் கூறுமல், அயோத்தியில் தசரதரின் அரண்மனையில் இந்த நான்கு மணமக்களும் நுகர்ந்த இன்ப வாழ்க்கையைப் பற்றிக் கவி வர்ணிக்கும் கட்டத்திற்கு வருவோம். கணவன் மனைவியை எப்படிப் போற்றினன், மனைவி கணவனை எவ் வகையில் உபசரித்து மகிழ்ந்தாள் என்பதையெல்லாம் வர்ணித்துக் கவி திருப்தியடையவில்லை. ராமன் சீதை இவ்விருவரின் தாம்பத்தி யத்தைப்பற்றியே வால்மீகி விசேஷமாகக் கூறுகிறுர். ஏனெனில், விவாகமானதும் பரதனின் மாமனை யுதாஜித் தம்முடன் பரதனையும் சத்ருக்கினனையும் கேகய தேசத்துக்கு அழைத்துப் போய்விடுகிறுர். அவர்களுடன் மாண்டவியும் சுருதகீர்த்தியும் சென்றதைப்பற்றி ராமாயணத்தில் ஏதும் கூறவில்லை. வால்மீகி யின் போக்கு நூதனமானது. சீதையின் அரிய குணங்களை விஸ்தாரமாக வர்ணித்துவிட்டு மற்றவர்களைப்பற்றிப் பேசாமலே இருந்துவிடுவார். மாண்டவியும் சுருதகீர்த்தியும் கேகய தேசத்துக்குச் சென்றதுபற்றி ராமாயணத்தில் இல்லை. தசரதர் இறந்த பிறகு பரதன் அயோத்திக்குத் திரும்பி வந்தபொழுதும் அவர்களைப்பற்றி ஒரு வார்த்தையும் ராமாயணத்தில் இல்லை. கவியே அவர்களைப்பற்றிப் பேசாமல் இருந்துவிட்டதனால் நாமும் அதிகம் கவனிக்க வேண்டிய அவசியமில்லை. எனினும் நமக்கு அந்தச் சந்தேகம் வரத்தான் வருகிறது.

ஒரே ஒரு விஷயம் சிறிது சர்ச்சைக்கு இடமாக உள்ளது: ராமரும் சீதையும் ஒருவர் மேலொருவர் கொண்ட அன்பைப்பற்றி வால்மீகி கவிதைநயத்தோடு மிகவும் அழகாக வர்ணிக்கிறுர். 'ஒருவர் மனத்தை மற்றவர் வெகு சுலபமாக அறிந்துகொண்டனர். வாயும் கண்களும் தமக்கு வேண்டியதைச் சொல்லாவிட்டாலும் உள்ளம் உள்ளத்தோடு இணைந்து பேசியது. ஒருவரின் விருப்பம் மற்றவருக்குச் சொல்லாமலே தெரிந்தது. யார் யாரை அதிகம் நேசித்தார்கள் என்பதைச் சொல்வது கடினம்' என்கிறுர்.

प्रिया तु सीता रामस्य दाराः पितृकृता इति । I. 77. 27.

ஸாஹித்யவல்லபர் டி. சுந்தராசாரியார் நிரம்பப் படித்தவர் என்று எல்லோராலும் போற்றப்பெற்றவர். மேற்கூறிய சுலோகத் திற்கு அவர், ''பிதாவே பார்த்துத் தமக்கு மணம் செய்வித்த

மனைவி சீதை என்பதற்காகவே ராமர் சீதையினிடம் அன்பு செலுத்தினார்'' என்று ஒரு சமயம் வியாக்கியானம் செய்தார். ஊர்மிளை, மாண்டவி, சுருதகீர்த்தி ஆகிய மூவருங்கூடத்தான் பிதாவினால் பார்த்து மணம் செய்விக்கப்பட்டவர்கள். தசரதர் சீதையை ராமருக்குத் தேர்ந்தெடுக்கவில்லை. தம் புஜபல பராக்கிரமத்தினால் அவர் அவளை வென்று அடைந்தவர் அல்லவா? சீதை அனசூயையிடம் இந்த விருத்தாந்தத்தைக் கூறியபொழுது, வால்மீகிக்கு இந்த விஷயம் நினைவிற்கு வந்திருக்கலாம். அதனால் தான், 'பிதாவின் அநுமதி இல்லாமல் ராமர் விவாகத்திற்குச் சம்மதிக்கவில்லை' என்று சீதை கூறுவதாகச் சாமர்த்தியமாய் மாற்றிச் சொல்கிறார். தந்தை வந்து 'சரி' என்று சொல்ல வேண்டும். 'பித்ருக்ருதா:' என்பதற்குத் தசரதரை விட்டு ஜனகரையே எடுத்துக்கொள்ளலாம் என்று வேறு ஒரு வியாக்கியானம் இருக்கிறதாம். 'பித்ருதத்தா:- பிதாவினால் கொடுக்கப் பட்டவள்' என்று அர்த்தம். சீதையின் விவாகம் சுயம்வரமாக இருந்தாலும் பிராம்மணவிதிப்படி ஜனகரே ராமருக்கு அவளைக் கன்னிகாதானம் செய்து கொடுத்தார். தசரதர் தாமே தேர்ந்தெடுத்தாரோ, அல்லது தம் சம்மதத்தை மட்டும் தெரிவித்தாரோ, அது எப்படியாயினும் ராமர் சீதை ஆகிய இருவருடைய பேரன்புக்கு அதுவும் ஒரு காரணம் என்று சொல்லலாம். 'என் பராக்கிரமத்தினால் நான் சீதையை அடைந்தேன் என்றாலும், பிதாவும் இந்தத் திருமணத்திற்கு மகிழ்ச்சியுடன் சம்மதித்தார். அந்தக் காரணத்தினாலேயே அவள் மேலும் என் அன்புக்கு உரியவளாகிறாள்' என்று ராமர் நினைத்திருக்கலாம். ராமருடைய அரிய குணங்களில் ஒன்றாக இதையும் சேர்த்துச் சொல்லலாம். வாழ்க்கையில் மிகப் பெரிய செயல்களைச் செய்யும்பொழுது தந்தையின் முழுச் சம்மதத்தையும் மறக்காமல் பெற்றபிறகே செய்தார். மனைவியைத் தேர்ந்தெடுப்பது நமக்கு வெகு முக்கியமானது. இக்காலத்தில் அந்த வழக்கம் வேகமாக மறைந்துகொண்டு வருகிறது. மணமகளின் தந்தையே அதை முன்னின்று செய்பவர். ராமருடைய விவாகத்தில் தசரதர் தாமே மணமகளைத் தேர்ந்தெடுக்கவில்லை என்றாலும் கல்யாணத்திற்குத் தம் முழுச் சம்மதத்தையும் அளித்தார் என்பதிலிருந்து ராம-லக்ஷ்மண-பரத-சத்ருக்கினர்களுடைய விவாகம் பழைய சம்பிரதாயத் திட்டத்திலேயே நடைபெற்றது என்று கூறலாம்.

## 3

## சகோதர பாசம் - அண்ணனைத் தொழுத தம்பி

ராமனுக்கும் லக்ஷ்மணனுக்கும் இருந்த நட்பு மற்ற எல்லா நட்புக்களைக்காட்டிலும் மிகச் சிறந்ததாக இருந்தது என்று சொன்னேன் அல்லவா? ராமாயணத்தில் அதற்கு நிறைய அத்தாட்சிகள் இருக்கின்றன. அன்பை அளவிட முடியாது. ஓர் அன்பைக்காட்டிலும் மற்றோர் அன்பு பின்னும் அதிகம் ஆழ்ந்தது என்பதைச் சொந்த அநுபவத்திலிருந்துதான் அறிந்துகொள்ள முடியும். ராமனும் சீதையும் ஒருவர்மீது ஒருவர் கொண்டிருந்த அன்பு எல்லையற்றது என்பதை அறிவோம். சீதை காணமற் போனதும் ராமர் அடைந்த துன்பத்திற்கு அளவே இல்லை. அதைத் தாங்கிக்கொள்ள அவர் பட்ட சிரமமும் கொஞ்சமல்ல. அவளைப் பிரிந்து அவர் நிம்மதியே அற்றவரானார். காட்டில் இங்குமங்கும் அலைந்து பைத்தியம் போல் புலம்புகிறார். "மரமே கண்டாயோ? நதியே கண்டாயோ?" என்று ஒரு சமயம் கெஞ்சுகிறார். தம் உயிரையே மாய்த்துக்கொள்வதாய்க் கூறுகிறார். மற்றொரு சமயம் உலகத்தையே அழித்துவிடுவதாகக் கிளம்பிய அவரை லக்ஷ்மணன் மிகவும் கஷ்டப்பட்டுத் தேற்ற வேண்டியதாகிறது. சீதையை ராவணனிடமிருந்து மீட்பதற்காக மட்டும் ராமர் அவ்வளவு பெரிய பிரயத்தனங்கள் செய்யவில்லை. தம் பெருமைக்கு இழிவு ஏற்பட்டுவிடும் என்ற காரணமே அதற்கு முக்கியமாக இருந்தது. ஆனால் ராவணவதம் ஆனபிறகு சீதையை அவரிடம் அழைத்து வந்த பிறகுதான் அது வெளியாகிறது. சீதையின் கற்புக்கு மாசு உண்டாகியிருக்குமோ என்ற சந்தேகத்துடன், அவளைச் சேர்த்துக் கொண்டு அயோத்தி திரும்பிச் சென்றால் அது தமக்கும் தம் குலத்திற்கும் பெரிய இழிவை உண்டாக்கிவிடும் என்று ராமர் நினைத்ததாக நமக்கு ஒரு சமயமும் தெரியவில்லை. சீதையே தமது உயிர்; அவள் இல்லாமல் ஒரு கணமும் தம் உயிர் நில்லாது என்று தோன்றும்படியன்றோ அவர் நடந்துகொண்டிருக்கிறார்? எல்லோர் முன்னிலையிலும் அவளைக் கண்டபொழுதுதான் அவள் கற்பைப் பற்றிய சந்தேகம் அவர் உள்ளத்தில் எழுகிறது. சொல்லத்தகாத கடுமையான மொழிகளை அவர் அப்பொழுது கூறியதைப் படிக்கும்

பொழுது நம் மனம் எவ்வளவு கஷ்டப்படுகிறது! சீதையினிடம் ராமன் கொண்டிருந்த இணையற்ற அன்பைப்பற்றிக் கவி அநேக இடங்களில் மிக மிக அழகாக வர்ணித்துக் கூறுகிறார். ஆயினும் அப்படிப்பட்ட அன்பையும் மீறியது - ராமன் லக்ஷ்மணன்மேல் கொண்ட அன்பு. அதைத் தனி அன்பென்றே கூற வேண்டும். சீதையைக்காட்டிலும் லக்ஷ்மணனே தன் அன்புக்கு அதிகம் உரித்தானவன் என்று ராமர் மூன்று இடங்களில் வெளியிட்டுக் கூறுகிறார். எல்லையற்ற உருக்கமும் அழகும் வாய்ந்த அந்தப் பகுதிகளை உங்களுக்கு வாசித்துக் காட்டுகிறேன். யுத்த காண்டத்தில், இந்திரஜித் விடுத்த நாகாஸ்திரத்தினால் அடிபட்டு ராமனும் லக்ஷ்மணனும் நினைவிழந்து கிடக்கும் சமயத்தில் ராமர் சிறிது முன்னால் சுயநினைவையடைந்து, உயிரற்றவன் போல் லக்ஷ்மணன் கிடப்பதைப் பார்த்துப் புலம்புகிறார். அதனின்றும் மூன்று சுலோகங்களைப் பார்ப்போம்.

किं नु मे सीतया कार्यं किं कार्यं जीवितेन वा ।
शयानं योऽद्य पश्यामि भ्रातरं युधि निर्जितम् ॥ VI. 49. 5.

மேற்கூறிய சுலோகம், சீதையோடு லக்ஷ்மணனை ஒப்பிட்டுக் கூறுவதாக உள்ளது. "லக்ஷ்மணனை இழந்தபிறகு சீதை கிடைத்துத் தான் என்ன பயன்?" என்றும்,

शक्या सीतासमा नारी मर्त्यलोके विचिन्वता ।
न लक्ष्मणसमो भ्राता सचिवः साम्परायिकः ॥ VI. 49. 6.

"தேடிப்பார்த்தால் சீதையைப் போன்ற மனைவி கிடைப்பாள்; ஆனால் லக்ஷ்மணனைப் போன்ற மகாவீரனான சகோதரன் எவ்வாறு கிடைப்பான்?" என்றும்,

परित्यक्ष्याम्यहं प्राणान् वानराणां तु पश्यताम् ।
यदि पञ्चत्वमापन्नः सुमित्रानन्दवर्धनः ॥ VI. 49. 7.

"உண்மையாக லக்ஷ்மணன் இறந்துவிட்டான் என்றால் இவர்கள் எல்லோர் முன்னிலையிலும் நான் என் உயிரை விட்டு விடுவேன்" என்றும் ராமர் மேன்மேலும் புலம்புகிறார்.

மற்றொரு சமயம், ராவணனுடைய சக்தி ஆயுதத்தால் அடிபட்டு லக்ஷ்மணன் மூர்ச்சையுற்றுக் கிடந்தபொழுதும் ராமர் துயர் தாங்காமல் புலம்புகிறார்.

राघवो भ्रातरं दृष्ट्वा प्रियं प्राणं बहिश्चरम् ।
दुःखेन महताविष्टो ध्यानशोकपरायणः ॥ VI. 102-9.

यथैव मां वनं यान्तमनुयातो महाद्युतिः ।
अहमप्यनुयास्यामि तथैवैनं यमक्षयम् ॥ VI. 49. 17.

"அரணியத்தின் பயங்கரங்களையும் கஷ்டங்களையும் அநுபவிக்க என் பின்னாலேயே வந்த லக்ஷ்மணன் யமலோகத்திற்குச் செல்லும் பொழுது நானும் அவனைத் தொடர்ந்து செல்வேன்' என்னும் மேற்கண்ட சுலோகம், முன்பு கூறிய கருத்தையே மீண்டும் கூறுவதாக அமைந்திருக்கிறது.

देशे देशे कलत्राणि देशे देशे च बान्धवाः ।
तं तु देशं न पश्यामि यत्र भ्राता सहोदरः ॥ VI. 102. 12-13.

"உலகில் எல்லா இடங்களிலும் மனைவிகள் கிடைப்பார்கள். உறவினர்களுக்கும் பஞ்சமில்லை. ஆனால் லக்ஷ்மணனைப் போன்ற ஒரு சகோதரன் உலகில் எங்கே கிடைப்பான்?" என்றும்,

इहैव मरणं श्रेयो न तु बन्धुविगर्हणम् ।

"இங்கேயே உயிரை விடுவது மேல்" என்றும் ராமர் வருந்துகிறார்.

किं मया दुष्कृतं कर्म कृतमन्यत्र जन्मनि ॥ VI. 102-18.

ஸ்ரீராமன் இம்மாதிரி ஜன்மாந்தரத்தைப்பற்றிக் கூறுவதை நாம் காண முடியாது; இந்த இடத்தைத் தவிர வேறு எந்த இடத்திலும் இதை நான் காணவில்லை. ராமன் மகாவிஷ்ணுவின் அவதாரம் என்று இருக்கும்பொழுது, ஜன்மாந்தரத்தைப்பற்றி நினைக்க முடியுமா? முற்பிறப்பில் செய்த கர்மங்களின் பயனை அநுபவிப்பதாக ராமர் கூறுவது நமக்கு விளங்காமல்தான் இருக்கிறது.

அனுமான் கொண்டு வந்த ஒஷதிபர்வத மூலிகைகளின் உதவியினால் லக்ஷ்மணன் சுயநினைவு பெற்று எழுந்தவுடன் ராமர் அவனைத் தழுவிக்கொண்டு பின்வருமாறு கூறுகிறார்:—

न हि मे जीवितेनार्थः सीतया चापि लक्ष्मण ।
को हि मे विजयेनार्थस्त्वयि पञ्चत्वमागते ॥ VI. 102. 40-41.

"உன்னை இழந்துவிட்டால் லக்ஷ்மணா, பிறகு நான் உயிரோடு இருந்தென்ன? சீதை கிடைத்தாலும் போரில் வெற்றி பெற்றாலும் தான் என்ன?"

சீதையினிடமும் லக்ஷ்மணனிடமும் ராமர் கொண்டுள்ள அன்பின் ஏற்றத்தாழ்வைப்பற்றிச் சுந்தர காண்டத்திலிருந்தும் நாம் மேலும் அறிந்துகொள்ளுகிறோம். லக்ஷ்மணனின் உயர்ந்த குணத்தைப்பற்றிச் சீதையே அனுமானிடம் அழகாக வர்ணித்துக் கூறுகிறாள்.

मत्तः प्रियतरो नित्यं भ्राता रामस्य लक्ष्मणः ॥ V. 38. 62.

"என்னைக்காட்டிலும் லக்ஷ்மணனிடமே ராமருக்கு அதிக அன்பு" என்கிறாள். சீதையைப் பிரிந்து ராமர் படும் துயரத்தைக்

கண்ட அனுமார், 'மிகவும் கடின ஹிருதயமுள்ளவன்தான் அவளைப் பிரிந்து உயிர்வாழ முடியும்' என்று நினைத்திருப்பார் அல்லவா? ராமரையும் சீதையையும்பற்றி நிரம்பவும் உயர்வாகக் கருதும் அனுமாரிடமே சீதை, "ராமருக்கு லக்ஷ்மணனிடமுள்ள அன்பானது என்னிடமுள்ள அன்பைக்காட்டிலும் எவ்வளவோ மேலானது" என்று கூறுகிறாள். ஸ்திரீகள் இயல்பாகவே அன்பை எடைபோட்டு அறிந்துவிடுவார்கள். சீதைக்கு அதைப்பற்றிக் கொஞ்சமும் பொறாமை இல்லை என்று உறுதியாய்க் கூறலாம். ராமரை உத்தேசித்து லக்ஷ்மணனே சீதையிடம் அபார பக்தியும் அன்பும் பூண்டவன். ஆகையால் தன்னைக் காட்டிலும் லக்ஷ்மணனிடமே ராமருக்கு அதிக அன்பு என்று சீதை கூறியதை நாம் அப்படியே எடுத்துக்கொள்ளலாம்.

ஆயினும் இப்பொழுது நாம் ராமருடைய குணத்தின் தனிப் பெருமையை நினைவு கூறவேண்டும். மனிதனுக்கு இயல்பாக உள்ள அன்பும் பாசமும் ராமருக்குப் பெரியவையல்ல. அவர் என்றும் தம் உள்ளத்தில் யாவற்றினும் மேலாகப் போற்றுவது வேறொரு சிறந்த உணர்ச்சியே என்று வால்மீகி கூறுகிறார். அது என்ன என்றால் தாம் வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டிய நெறி தர்மமே என்று ராமர் கொண்டிருக்கும் உறுதியேயன்றி வேறல்ல. அதற்குச் சோதனையாக நேரும் ஒவ்வொரு சமயமும் அதில் அவர் வெற்றியே கண்டிருக்கிறார். 'யுவராஜ பட்டத்தைத் துறப்பதைப் பற்றி அவர் மனநிலை எப்படி இருக்குமோ?' என்ற சந்தேகத்துடன் கைகேயி அதைக் கூறியபொழுது ராமர், "ஏன் முன்னமே என்னிடம் இதைச் சொல்லவில்லை? என் மனம் தங்களுக்குத் தெரியாதா?" என்றுதான் கூறுகிறார்.

अहं हि सीतां राज्यं च प्राणानिष्टान् धनानि च।
हृष्टो भ्रात्रे स्वयं दद्यां भरतायाप्रचोदितः॥ II. 19. 7.

"ராஜ்யமோ பணமோ எதுவாக இருந்தாலும் பரதனுக்கு நான் மகிழ்வுடன் அளிப்பேன். சீதையைக்கூட வேண்டுமானால் கொடுத்துவிடுவேன். ஏன் அதை உடனே என்னிடம் கூறவில்லை?" என்கிறார்.

சீதை ராமருக்கு உபதேசம் செய்யும் பிரசித்தமான இடம் ஒன்று இருக்கிறதே, அதைப் பார்ப்போம். ராக்ஷஸர்களிடமிருந்து காப்பாற்றுவதாக ரிஷிகளுக்கு ராமர் உறுதிமொழி கூறியது உங்களுக்கு நினைவிருக்கலாம். "அவர்களை எதற்காக நீங்கள் கொல்ல வேண்டும்? விநா வைரம் ச ரௌத்ரதா - தகுந்த காரணமில்லாமல் சஸ்திரப்பிரயோகம் செய்வது தவறு; அதை விலக்க வேண்டும்" என்கிறாள் சீதை. அற்பமனம் படைத்தவர்கள் சீதை இவ்வாறு ராமனுக்கே புத்திமதி கூறியதைத் தவறாக நினைக்

கலாம். ஆனல் சரியாக யோசித்துப் பார்த்தால், அவள் தன் கடமையைச் செய்தாள் என்றுதான் கூற வேண்டும். நம் மனைவியருக்கு நாம் அவ்வளவு சுதந்திரம் அளிப்பதில்லை; அவர்களும் அதற்கு உரியவர்களாக இருப்பதில்லை; வாழ்க்கையில் மனைவிக்கு இல்லாத உரிமை வேறு யாருக்கு உண்டு? ராமர் சீதை கூறியதை எப்படி ஏற்றுக்கொண்டார் என்று பார்ப்போம். "இத்தகைய விஷயங்களில் உன் கருத்தைத் தெரிவிக்க உனக்கு உரிமை இருக்கிறது; நானும் அதை மதிக்கிறேன்'' என்கிறார்.

अप्यहं जीवितं जह्यां त्वां वा सीते सलक्ष्मणाम् ।
न तु प्रतिज्ञां संश्रुत्य ब्राह्मणेभ्यो विशेषतः ॥ III. 10-19.

''என் உயிரைத் துறப்பேன். உன்னைத் துறந்தாலும் துறப்பேன். லக்ஷ்மணனையும் துறப்பேன். ஏன்? என் ஸர்வத்தையுமே துறந்துவிடுவேன். ஆனல் பிராம்மணர்களுக்குச் செய்த என் பிரதிக்ஞையைத் துறக்க மாட்டேன்!'' என்று உறுதியாகக் கூறுகிறார். என்ன கஷ்டம், என்ன தடங்கல் நேரிட்டாலும் செய்த பிரதிக்ஞையைக் காக்க வேண்டும் அல்லவா? அதுவே அனைத்திலும் முக்கியமானது. ராமருடைய இந்த ஒப்புயர்வற்ற குணமானது உலகுக்கே ஓர் ஒளிவிளக்காகத் திகழ்கிறது. நம்மில் அநேகர் தமக்குச் சௌகரியமாக இருக்கும் பொழுது தாம் சொன்ன சொல்லை நிறைவேற்றுவர். ஆனல் தமக்குள்ள அனைத்தையும் இழந்தாயினும் கொடுத்த வாக்கைக் காப்பவர் உலகில் யாரேனும் இருப்பார்களா?

இப்பொழுது லக்ஷ்மணனை எடுத்துக்கொண்டு பார்ப்போம். ராமருக்கும் அவனுக்கும் எவ்வளவு வித்தியாசம்? தர்மமே அனைத்திற்கும் மேற்பட்டது என்று ராமர் சொல்லுகிறார். லக்ஷ்மணனே, ''ராமரே எனக்கு எல்லாம். அவரைத் தவிர வேறொன்றும் எனக்குத் தெரியாது. அவர் திருப்தியடைந்தால் போதும்; அவர் சந்தோஷம்தான் என் லக்ஷ்யம்'' என்று கூறுகிறான். தர்மத்தைப் பற்றி ராமர் எப்பொழுதாவது பேசினல் அது லக்ஷ்மணனுக்குப் பிடிப்பதில்லை. ''உம்முடைய நலம், உம்முடைய க்ஷேமம்தான் எனக்கு முக்கியம். ராஜ்யத்தை நீங்கள் துறப்பது எனக்குச் சரி என்று தோன்றவில்லை. அதனல் ஒரு நன்மையும் உண்டாகாது. உங்களைக்காட்டிலும் பெரிது எது? உங்களுடைய நலமே எனக்குப் பெரிது. அதைவிட வேறு எதையும் உயர்ந்ததாக நான் கருதவில்லை'' என்கிறான்.

ராமர், லக்ஷ்மணன், சீதை ஆகிய மூவரையும் காட்டில் விட்டு, சுமந்திரர் அயோத்திக்குத் திரும்பி வந்து தசரதரிடம் சொன்ன பொழுது, ''ராமன், லக்ஷ்மணன், சிதை ஆகிய மூவரும் என்ன சொன்னர்கள்?'' என்று யாவரும் கேட்கின்றனர்.

"பர்த்தாவைப் பின்பற்றும் தர்மத்தை வழுவாமல் அநுசரிக்க வேண்டும். என் சிற்றன்னை கைகேயியினிடம் அன்போடு இருக்க வேண்டும். மகாராஜாவான பரதனிடம் சரியாக நடந்துகொள்ள வேண்டும் என்று என் தாய் கௌசல்யாதேவியிடம் நான் கூறியதாகச் சொல்லுங்கள்" என்று ராமர் கூறியதாகச் சுமந்திரர் கூறுகிறார். லக்ஷ்மணன் என்ன சொல்லியனுப்பினான் என்று பார்ப்போம். ராமரைப் போல் அல்லாமல் லக்ஷ்மணன் சொல்லியனுப்புவது வேறு விதமாக இருக்கிறது.

**असमीक्ष्य समारब्धं विरुद्धं बुद्धिलाघवात् ।**
**जनयिष्यति सङ्क्रोशं राघवस्य विवासनम् ॥** II. 58. 30.

"ராமரை நீங்கள் காட்டுக்கு அனுப்பியது முழுக்க முழுக்கத் தவறு. நான் அதைக் கொஞ்சமும் ஒப்புக்கொள்ள முடியாது" என்று லக்ஷ்மணன் கூறியதோடு நில்லாமல், மேலும்,

**अहं तावन्महाराजे पितृत्वं नोपलक्षये ।**
**भ्राता भर्ता च बन्धुश्च पिता च मम राघवः ॥** II. 58. 31.

"தசரதரை என் தந்தையென நான் கருதவில்லை. ராமன்தான் என் தந்தை, என் சகோதரன், என் பந்து, என்னை ரக்ஷிப்பவன். என் பிதாவான தசரதர் சரியாக நடந்திருந்தால் என் உள்ளத்தில் வைத்து அவரைப் போற்றியிருப்பேன். இப்பொழுது அந்த இடம் ராமனுக்கு உரியதாகிவிட்டது" என்று வெறுப்போடு பேசுகிறான்.

லக்ஷ்மணன் ராமரிடமே தன் முழு அன்பையும் செலுத்துகிறான். ராமரோ, யாரும் கண்டறியாத தர்மம் என்பதையே யாவற்றையும்விட மிகப் பெரிதாகப் போற்றுகிறார். ராமருக்கும் லக்ஷ்மணனுக்கும்தான் எவ்வளவு வித்தியாசம் பாருங்கள்! லக்ஷ்மணனுடைய பெருமையெல்லாம் ராமருக்கு அவன் செய்த கைங்கரியமே. அவனைக் கைங்கரியமே உருவெடுத்து வந்தவனாகவும் அவனுடைய லக்ஷ்மி கைங்கரிய லக்ஷ்மி என்றும் சொல்லுவார்கள். அவனுடைய முக்கிய குணம் என்னவென்று பார்ப்போம். தாஸனாக இருக்கும் மனப்பான்மையே அவனுடையது என்று கூறலாம். முன்பின் தெரியாத ஒருவனாயினும் சரி, நண்பனாக இருந்தும் ராமனுக்குத் தீங்கு செய்பவன் போலத் தோன்றுகிறவனாயினும் சரி, இவர்களிடம் அவனுக்கு ஒரே சந்தேகம்தான். ராமனிடம் அவனுக்கு அத்தகைய அன்பு. அதை வேறு நினைவே இல்லாத ஒரு தீவிரமான பக்தி என்றுதான் சொல்ல வேண்டும். கடைசி வரையிலும் இந்தப் பண்பே அவனிடம் விசேஷமாகப் புலனாகிறது. இரண்டு தடவை அவனுக்கு இதில் சோதனை ஏற்படுகிறது. பஞ்சவடியில் 'ராமனுக்கு ஆபத்து' என்று சீதை லக்ஷ்மணனைப் போய்ப் பார்க்கும்படி கூறியபொழுது ராமனுடைய உத்தரவை மீறிக்கொண்டு போவதற்கு அவன் மறுக்க, சீதை தான்

உயிரை மாய்த்துகொள்வதாகச் சொன்னபொழுதும், உத்தர காண்டத்தில் யாரையும் உள்ளே விடவேண்டாம் என்று ராமன் கட்டளையிட்டிருந்தபொழுது துர்வாஸர் தோன்றி உள்ளே போக அநுமதி இல்லையென்றால் சபித்துவிடுவதாகப் பயமுறுத்திய பொழுதும் அவனுக்குச் செய்வது அறியாமல் சங்கடம் ஏற்படு கிறது அல்லவா? ராமனைத் திரும்பி அயோத்திக்கு அழைத்துச் செல்வதென்று பரதன் நாட்டு மக்களுடனும் சதுரங்க சேனை யுடனும் சித்திரகூடத்துக்கு வந்தபொழுது அவன் ராமனுக்குத் தீங்கு செய்ய வந்திருப்பதாகவே லக்ஷ்மணன் பெரிதும் சந்தேகப் படுகிறான். ராமர் அப்பொழுது மெதுவாக அவனைக் கண்டித்துப் பேச நேருகிறது. வேலையில் அவன் காட்டும் சாமர்த்தியத்தை ராமர் மட்டுமல்ல, சீதையும் கொண்டாடுகிறாள். ஆனால், அவன் தன்னைப்பற்றிச் சொல்லிக்கொள்வதே இல்லை. விபீஷணனைச் சேர்த்துக் கொள்வதைப்பற்றி நடந்த ஆலோசனை சபையில் சுக்கிரீவன்தான் அவனைப்பற்றிப் பேசுகிறான். சீதை அக்கினிப் பிரவேசம் செய்தபொழுதும் அவன் வாய் திறக்கவேயில்லை. அவன் படபடப்பு உள்ளவன்; முன்கோபி; ஆனால் கள்ளங் கபடமற்ற எளிய குணம் படைத்தவன். தான் செய்த தவற்றைக் குறித்து வருந்தி அதை ஒப்புக்கொள்ளும் உதார மனமுள்ளவன். ஸ்திரீ களைக் கண்டு சங்கோசப்படுகிறவன் என்றாலும் அவர்களை மிகவும் உயர்வாகக் கருதுபவன். இந்தப் பண்புகள் யாவும் ராமனிடம் அவன் கொண்டுள்ள எல்லையற்ற அன்பிலிருந்து தோன்றியவையே.

ராமனுடனும் சீதையுடனும் அவன் வனத்திற்குப் புறப்பட்ட பொழுது சுமித்திராதேவி என்ன கூறுகிறாள்?

**रामं दशरथं विद्धि मां विद्धि जनकात्मजाम् ।**
**अयोध्यामटवीं विद्धि गच्छ तात यथासुखम् ॥** II. 40. 9.

"ராமன் உன் தந்தை. சீதை உன் அன்னை. காடுதான் நீ பிறந்த ஊரான அயோத்தி. இவ்வாறு நினைத்துக்கொண்டு சந்தோஷ மாகப் போய்வா" என்கிறாள். "போ. இதுதான் நீ அடையப் போகும் வாழ்க்கையின்பம்" என்று பெருநம்பிக்கையோடு சொல்வது போல ஒலிக்கின்றன அந்தச் சொற்கள். பிறகு கௌசல்யையின் தாங்கொணாத் துயரத்தைத் தேற்றும்பொருட்டு அவள் கூறும் மொழிகள், அறிவிலும் உயர்ந்த லட்சியங்களிலும் கௌசல்யையைக் காட்டிலும் அவள் மேம்பட்டவள் என்பதை நிரூபிக்கின்றன.

ராமனையும் சீதையையும் தாய் தந்தையர் போல் பாவிக் கும்படி அவள் லக்ஷ்மணனிடம் கூறியது மிகையே என்று கூறலாம். ஏனெனில், அவனைப்பற்றிச் சீதை என்ன சொல்லுகிறாள், பாருங்கள்.

पितृवद्वर्तते रामे मातृवन्मां समाचरन् ।
ह्रियमाणां तदा वीरो न तु मां वेद लक्ष्मणः ॥ V. 38. 60-61.

"இவ்வளவு வருஷங்களாக ராமரும் நானுமே அவனுக்குத் தாயும் தந்தையுமாக இருந்திருக்கிறோம்" என்று ஸீதை அனுமாரிடம் சொல்லுகிறாள். மாரீசன் கத்தியதைக் கேட்டுப் பதறிப் போய்த் தன் நிலை இழந்தவளாய் லக்ஷ்மணனைக் கண்டபடி நிந்தித்ததற்குப் பிராயச்சித்தமாக அவள் அவ்விதம் கூறினாள் என்று வைத்துக்கொள்ளலாம். பச்சாத்தாபத்தை அறிவிக்கும் சாதாரண வார்த்தைகளை நினைத்துப் பார்க்கும்பொழுது, ஸீதையின் சொற்கள் எவ்வளவு மனப்பூர்வமான சொற்களாய்த் தொனிக்கின்றன!

பஞ்சவடியில் லக்ஷ்மணன் கட்டிய பர்ணசாலையைக் கண்டு நன்றியுணர்ச்சியுடன் ராமர் என்ன சொல்லுகிறார்? சந்தோஷ மிகுதியால் லக்ஷ்மணனைக் கட்டிக்கொண்டு அவர் கூறியதாவது—

सुसंहृष्टः परिष्वज्य बाहुभ्यां लक्ष्मणं तदा ।
अतिस्निग्धं च गाढं च वचनं चेदमब्रवीत् ॥
प्रीतोऽस्मि ते महत्कर्म त्वया कृतमिदं प्रभो ।
प्रदेयो यन्निमित्तं ते परिष्वङ्गो मया कृतः ॥
भावज्ञेन कृतज्ञेन धर्मज्ञेन च लक्ष्मण ।
त्वया पुत्रेण धर्मात्मा न संवृत्तः पिता मम ॥ III. 15. 27-29.

தம்பி தந்தையாகும் நூதனமான கருத்தை நாம் இங்கே காண்கிறோம். "தந்தையின் மரணத்தினால் எனக்குப் பெருநஷ்டம் ஏதும் ஏற்படவில்லை. லக்ஷ்மணா, உன்மூலம் அவர் தம்மை எனக்கு அளித்திருக்கிறார். என் தந்தை உயிருடனிருந்தால் என்னவெல்லாம் எனக்குச் செய்வாரோ அவை யாவும் நீ எனக்குச் செய்கிறாய்" என்று சொல்லுகிறார். ஓர் இளைய சகோதரனைப் பற்றி இவ்வாறு கூறுவது கொஞ்சம் நூதனமாகவே படுகிறது அல்லவா? "தந்தை இறக்கவில்லை. நீ உடன் இருக்கும்பொழுது அவர் உயிரோடு இருப்பதாகவே தோன்றுகிறது" என்று கூறுவதில், "நாம் சிறுவர்களாக இருந்தபொழுது நம் தந்தை நமக்கு எவ்வளவோ செய்திருக்கிறார்" என்ற பொருள் விளங்குகிறது. வனத்தில் ராமருக்கு லக்ஷ்மணன், பெற்ற தந்தை போல் இருந்தான் என்ற வால்மீகியின் கற்பனை நாம் வேறெங்கும் காணாத புதுமை என்று சொல்லலாம்.

அசோகவனத்தில் ஸீதையும் லக்ஷ்மணனைப்பற்றி அனுமாரிடத்தில் பேசியபொழுது மேற்கண்ட விதமாகவே மிகவும் அழகாகக் கூறுகிறாள்.

यं दृष्ट्वा राघवो नैव वृत्तमार्यमनुस्मरेत् ॥ V. 38. 63.

"லக்ஷ்மணன் அருகில் இருக்கும்பொழுது, இறந்துபோன தந்தையைப்பற்றி ராமர் நினைப்பதில்லை. ஏனெனில் அந்த ஸ்தானத்தை லக்ஷ்மணன் வகிக்கிறான்'' என்கிறாள். இந்திரஜித் வதமான பிறகு ராமர் லக்ஷ்மணனைக் கட்டியணைத்துக் கொண்டாடும்பொழுது சகோதரனிடம் அவருக்கு இருக்கும் பேரன்பு நமக்கு நன்கு புலனாகிறது. இந்திரஜித்தோடு நிகழும் யுத்தம்தான் ராவண யுத்தத்திற்கு அடுத்தபடியானது. மகாவிஷ்ணு தம்மை நான்கு பாகங்களாகப் பிரித்துக்கொண்டு தசரதரின் குமாரர்களாக அவதரித்தபொழுது, ராமர் மட்டுமின்றி மற்றவர்களும் பலசாலியான ஒவ்வோர் அரக்கனை வதம் செய்வதாக ஏற்படுகிறது. இந்திரஜித்தும் உலகத்துக்குப் பெருந்துன்பம் விளைவித்தவனேயாவான். உத்தர காண்டத்தில், ராவண வதத்தைக் காட்டிலும் இந்திரஜித் வதமே மேம்பட்டது என்று அகஸ்தியர் முதலான ரிஷிகள் கூறுகிறார்கள். ஏனெனில், கண்ணுக்குத் தெரியாமல் மறைந்து போர் புரிவதில் வல்லவன் இந்திரஜித். அதனால் அவனைக் கொல்வது பின்னும் அதிகச் சிரமமாகிறது அல்லவா? லக்ஷ்மணனால் இந்திரஜித் வதமானதைக் கண்டு எல்லோரும் வியப்படைகிறார்கள். ஆகவே ராவண வதத்தைக் காட்டிலும் இந்திரஜித் வதத்தைப் பற்றித்தான் உலகம் முழுவதுமே களிப்படைகிறது. இந்திரஜித்தைப் போரில் வென்று, வதம் செய்வதற்கு வேண்டிய திறமை லக்ஷ்மணனுக்கு இருப்பது பற்றித் தளராத நம்பிக்கை ராமருக்கும் விபீஷணனுக்கும் இருக்கிறது.

லக்ஷ்மணனுடைய வெற்றியைக் கண்டு ராமர் அடைந்த மகிழ்ச்சியைப்பற்றிக் கூறுமுன் இந்திரஜித் போரில் எப்படி மடிந்தான் என்பதைச் சுருக்கமாகக் கூறுகிறேன். அவர்கள் இருவருக்கும் மூன்று நாட்கள் விடாமல் யுத்தம் நிகழ்கிறது. இருவரில் யார் மற்றவரை அதிகப் பலமாகத் தாக்கினது என்று சொல்ல முடியாது. யுத்தம் நீடித்தபொழுது, ராமருடைய பெருமையையும் வீரத்தையும் குறிக்கும் கீழ்க்கண்ட சுலோகத்தைச் சொல்லி, லக்ஷ்மணன் ஒரு பாணத்தைத் தொடுத்து இந்திரஜித் மீது எய்கிறான். அது உடனே அவனைக் கீழே வீழ்த்துகிறது. அந்தச் சுலோகம் :—

धर्मात्मा सत्यसन्धश्च रामो दाशरथिर्यदि ।
पौरुषे चाप्रतिद्वन्द्वः शरैनं जहि रावणिम् ॥ VI. 91. 73

பெங்களூரில் பிரபல ராமாயணப் பிரசங்கி ஒருவர் மேற்கூறிய சுலோகத்திற்கு ஒரு புதிய விளக்கம் கூறினார். ஏற்கனவே ஒருவேளை நீங்கள் அதைக் கேட்டிருக்கலாம். ராமரை, 'தர்மாத்மா' என்று லக்ஷ்மணன் கூறியபொழுது அவன் தொடுத்த பாணம் கிளம்பவில்லையாம். ஏனெனில், தாடகையைக் கொன்றது

தர்மத்துக்குப் புறம்பான செயல் அல்லவா? பிறகு, 'ஸத்யஸந்த:' என்று கூறியபொழுதும் அந்த அம்பு அசையவில்லை. தாம் உறுதி மொழி கூறியபடி ராமர் வாலியை உடனே கொல்லவில்லை என்பதே அதற்குக் காரணமாகும். ராமர் தேவலோகத்தினின்றும் கிடைத்த பாயசத்தின் பயனுகப் பிறந்தவர் என்பதனுல், 'தாசரதி:' என்று கூறியபொழுதும் பாணம் வில்லிலிருந்து கிளம்பவில்லை. கடைசியாக, 'பௌருஷே ச அப்ரதித்வந்த்வ:' என்று கூறியதும் உடனே அந்த அம்பு பாய்ந்து இந்திரஜித்தின் தலையைக் கொய்தது. ஏனெனில், வீரத்தில் ராமருக்கு நிகர் யாரும் இல்லை அல்லவா? அந்தச் சுலோகத்திற்கு இவ்வாறு விளக்கம் கூறுவது புத்திசாதுரியத்தைக் காட்டுகிறதேயன்றிச் சிந்தித்துப் பார்க்கும்பொழுது அது அவ்வளவு சரியாகத் தோன்றவில்லை.

இந்திரஜித் யுத்தத்தில் மடிந்ததும், உடல் முழுவதும் காயம் பட்ட லக்ஷ்மணனை விபீஷணனும் அனுமாரும் தாங்கி ராமரிடம் அழைத்துச் செல்லுகிருர்கள். அருகில் சென்றதும், லக்ஷ்மணன் தடுமாறிய சொற்களில் இந்திரஜித் கொல்லப்பட்டதைக் கூறுகிருன். அதைக் கேட்டு எல்லையற்ற மகிழ்ச்சியுடன் ராமர் லக்ஷ்மணனைப் பலவாறு புகழ்ந்து கூறுகிருர். இவ்விடத்தில் ராமருக்கு லக்ஷ்மணன் மீதுள்ள பேரன்பைக் கவி வெகு அழகாக எடுத்துரைக்கிருர்.

स तं शिरस्युपाघ्राय लक्ष्मणं लक्ष्मिवर्धनम् ।
लज्जमानं बलात् स्नेहादङ्कमारोप्य वीर्यवान् ॥
उपवेश्य तमुत्सङ्गे परिष्वज्यावपीडितम् ।
भ्रातरं लक्ष्मणं स्निग्धं पुनः पुनरुदैक्षत ॥
शल्यसम्पीडितं शस्तं निःश्वसन्तं तु लक्ष्मणम् ।
रामस्तु दुःखसन्तप्तस्तदा निःश्वसितो भृशम् ॥
मूर्ध्नि चैनमुपाघ्राय भूयः संस्पृश्य च त्वरन् ।
उवाच लक्ष्मणं वाक्यमाश्वास्य पुरुषर्षभः ॥
अद्याहं विजयी शत्री हते तस्मिन् दुरात्मनि ।
रावणस्य नृशंसस्य दिष्टया वीर त्वया रणे ।
छिन्नो हि दक्षिणो बाहुः स हि तस्य व्यपाश्रयः ॥ VI. 92. 9-12. 14,15.

ராமர் அவனைக் கட்டியணைத்து உச்சிமோந்து பலவந்தமாக மடிமீதிருத்தி, அவனது காயங்களைத் தடவிக் கொடுத்து, மிகுந்த பிரேமையுடன் நோக்கியதாக வால்மீகி வர்ணிக்கிருர். அவனை எவ்வளவு நோக்கியும் அவருக்குத் திருப்தி உண்டாகவில்லையாம். காயங்களினுல் ஏற்பட்ட வலி பொறுக்காமல் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்த லக்ஷ்மணனைக் காண மனம் வருந்தி, அவனை

அன்போடு தடவிக் கொடுத்து, ''என் வேலை இப்பொழுது பாதிக்கு மேல் முடிந்துவிட்டது. இனிப் போரில் நமக்கு வெற்றியே. இந்திரஜித்தை வீழ்த்தியது ராவணனுடைய வலக் கையை வீழ்த்தியது போலாகும். இந்திரஜித் போய்விட்ட பிறகு அவனால் என்ன முடியும்?'' என்று கூறி லக்ஷ்மணனைப் புகழ்கிறார். இதற்கு மேல் அன்பினால் எழும் பரிவு வேறு உலகில் உண்டோ?

ஸ்திரீகளைக் கண்டால் லக்ஷ்மணனுக்கு உண்டாகும் சங்கோசத்தைப் பற்றி முன்பே கூறினேன் அல்லவா? அதற்கு ஓர் உதாரணம்: சீதையைத் தேடுவதாகக் கூறியதைச் சுக்கிரீவன் மறந்துவிட்டதாக நினைத்து ராமர் சினமடைந்திருக்கிறார். இதைத் தெரிவிக்கும்பொருட்டு லக்ஷ்மணன் சுக்கிரீவனது இருப்பிடத்துக்குச் செல்கிறான். பெண்களிடம் லக்ஷ்மணனுக்கு உள்ள கூச்சத்தை அறிந்துதான் சுக்கிரீவன் தாரையை அனுப்பி அவனைச் சமாதானப் படுத்தக் கூறுகிறான்.

अथ वा स्वयमेवैनं द्रष्टुमर्हसि भामिनि ।
वचनैः सान्त्वयुक्तैश्च प्रसादयितुमर्हसि ॥
त्वद्दर्शनविशुद्धात्मा न स कोपं करिष्यति ।
न हि स्त्रीषु महात्मानः क्वचित् कुर्वन्ति दारुणम् ॥
त्वया सान्त्वैरुपक्रान्तं प्रसन्नेन्द्रियमानसम् ।
ततः कमलपत्राक्षं द्रक्ष्याम्यहमरिन्दमम् ॥ IV. 33. 35-57.

''நீ போய்ப் பேசினால் உன் இனிய மொழிகளைக் கேட்டு அவனது கோபம் தணிந்துவிடும். பெரியவர்கள் ஸ்திரீகளிடம் கடுமையாக நடந்துகொள்ள மாட்டார்கள். இனிமையாய்ப் பேசி அவனைச் சமாதானப்படுத்துவதற்கு முன்பு நான் அவனைப் பார்க்க மாட்டேன்'' என்கிறான்.

சீதை கீழே எறிந்த ஆபரணங்களைச் சுக்கிரீவன் ராமருக்குக் கொண்டு வந்து காட்டியபொழுது, ராமர் மிகவும் துக்கத்தோடு லக்ஷ்மணனை நோக்கி, ''லக்ஷ்மணா! இந்த ஆபரணங்களைப் பார். மிருதுவான புல்தரையில் விழுந்ததனால் இவை சிறிதும் கெட்டுப் போகாமல் அப்படியே இருக்கின்றன'' என்கிறார். இதற்கு லக்ஷ்மணன் கூறும் பதில் மிகவும் பிரசித்தமானது.

नाहं जानामि केयूरे नाहं जानामि कुण्डले ।
नूपुरे त्वभिजानामि नित्यं पादाभिवन्दनात् ॥ IV. 6 22.

''அண்ணியின் குண்டலங்களையோ கேயூரங்களையோ நான் அறியேன். அவள் காலில் அணிந்திருந்த நூபுரங்களை மட்டும் அறிவேன். நித்தியம் நமஸ்கரிப்பதனால் அவற்றை மட்டும் என்னால் அடையாளம் கண்டுகொள்ள முடியும்'' என்கிறான்.

உத்தர காண்டத்தில், ராமர் பரித்தியாகம் செய்த சீதையை வால்மீகியின் ஆசிரமத்துக்கு அருகில் லக்ஷ்மணன் அழைத்துச் சென்றபொழுதுதான், ஜனங்கள் கொண்ட சந்தேகத்திற்காகத் தன்னை ராமர் துறந்த கொடுமையை முதல்முதலாக லக்ஷ்மணன் வாயிலாகச் சீதை கேட்டு அறிகிருள். தான் கர்ப்பவதியாக இருப்பதை நேரில் கண்டு தெரிந்துகொள்ளும்படி வேண்டிக் கொள்ளுகிருள் சீதை.

निरीक्ष्य माद्य गच्छ त्वमृतुकालातिवर्तिनीम् । VII. 48-19.

"என் கற்பைப் பிறர் அவதூறு செய்யாதிருக்க நீதான் சாக்ஷியாக இருக்க வேண்டும். ராமரின் பேரன்பின் சின்னத்தை நான் என் வயிற்றில் தாங்கியிருப்பதை நீயே நன்ருகப் பார்த்துக் கொள்'' என்கிருள்.

அவள் கூறியதைக் கேட்டு மிகவும் மனம் கலங்கிய லக்ஷ்மணன்,

दृष्टपूर्वं न ते रूपं पादौ दृष्टौ तवानघे ॥
कथमत्र हि पश्यामि रामेण रहितां वने ।
इत्युक्त्वा तां नमस्कृत्य पुनर्नावमुपारुहत् ॥ VII. 48. 21-22.

"அம்மா! நான் தங்களை இதற்கு முன்பு சரியாகவே பார்த்த தில்லையே! இப்பொழுது என்னைப் பார்க்கும்படிக் கூறுகிறீர்கள். ராமரோ இப்பொழுது இங்கு இல்லை. தங்களை ஏற்கனவே சந்தேகித்தவர் இனியும் சந்தேகியாமல் இருப்பாரா?'' என்று வெகு அழகாகப் பதில் கூறுகிருன்.

துக்ககரமான இந்தச் சம்பவத்தை மேலும் கூருமல் இத்துடன் நிறுத்துகிறேன். பெரும் கஷ்டத்தை அநுபவிப்பதுதான் இந்தப் புவியில் மேன்மை பொருந்தியவர்களின் தனிப் பெருமை யாகும். வாய்விட்டுக் கூற முடியாத கஷ்டங்கள் அவை. அவர்கள் பட்ட கஷ்டங்கள் எங்கே? அற்ப மனிதர்களான நம் கஷ்டங்கள் எங்கே? சிறு துன்பம் நேர்ந்தாலும் நாம் மார்பில் அறைந்து கொண்டு தெய்வத்தை நிந்திக்கிருேம் அல்லவா?

# 4

## லக்ஷ்மணன்

சுந்தரகாண்டத்தில் 38-ஆம் ஸர்க்கத்தில், சீதை லக்ஷ்மணனைப் பற்றிக் கூறும் சில வாக்கியங்கள் காண்கின்றன என்று முன்பு கூறினேன் அல்லவா? உங்களில் சிலர் அதை எடுத்துக்கூடப் பார்த்திருப்பீர்கள். இன்று அதிலிருந்து ஒரு பாதி சுலோகத்துடன் ஆரம்பிக்கலாமென்று கருதுகிறேன்.

वृद्धोपसेवी लक्ष्मीवान् शक्तो न बहुभाषिता । V. 38. 61

'விருத்தர்களை ஸேவிப்பவன், கைங்கரிய லக்ஷ்மியோடு கூடியவன், சக்தியுள்ளவன், அதிகமாய்ப் பேசாதவன்-ந பஹுபாஷிதா' இந்த வாக்கியத்தைத்தான் நீங்கள் கவனிக்க வேண்டும். விசுவாசமுள்ள ஒரு பணியாளன் மிகவும் மிதமாகவே பேசுவான். ஸ்திரீ, குழந்தைகள் போல் வீட்டில் அதிகமாகப் பேசாமல் வேலைக்காரன் நடமாட வேண்டும். லக்ஷ்மணனுக்கு மேற்கூறிய குணம் அமைந்திருந்தது. ஆனால் கவி 'ஶக்த:' என்ற அடைமொழியையும் உபயோகப்படுத்துகிறார். இது அநேகமாக ஆங்கிலத்திலுள்ள 'strong but silent man' என்ற சொற்களுக்கு நிகராகவே இருக்கிறது என்று கூறலாம். இக் காலத்தில் சக்தியுள்ளவர்கள் அதிகமாகப் பேசுகிறவர்களாகவும் இருக்கிறார்கள். லக்ஷ்மணனுடைய அபாரமான பக்தியை நினைவிற் கொண்டுதான் சீதை அவனைப்பற்றி இவ்வாறு கூறியிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. தனக்கு ஏற்பட்ட வேலைகளில் மிகவும் கைதேர்ந்தவனான ஒரு பணியாளைப் போலவே ராமருக்கும் சீதைக்கும் வேண்டியவை அனைத்தையும் மிகவும் சிரத்தையோடும் கவனத்தோடும் அல்லவா அவன் செய்து வருகிறான்?

ஆயினும், சமயம் வரும்பொழுது, லக்ஷ்மணன் படபடவென்று பேசக்கூடியவன் என்றுதான் கூற வேண்டும். வேண்டும்பொழுது நாவை அடக்கிக்கொள்ளும் சக்தியுள்ளவன் என்றாலும், அவனால் அதை அடக்கிக்கொள்ள முடியாத சமயங்களும் உண்டு. கோபமும் ஆத்திரமும் அப்பொழுது கட்டுக்கு அடங்காமற் போய்விடும். அதிகமாய்ப் பேசாதவர்கள் திடீரென்று பேச்சைக் கொட்டித் தீர்த்துவிடுவார்கள். தன் அண்ணன் அண்ணி இவர்கள் விஷயம்

வரும்பொழுது லக்ஷ்மணன் உணர்ச்சி மிகுந்தவனாகிவிடுவான். அவர்களுக்கு ஏதாவது ஆபத்து என்று தோன்றிவிட்டால், அவர்களைக் காக்கும் விஷயத்தில் எதற்கும் அஞ்சாமல் கிளம்பி விடுவான்.

அயோத்தியா காண்டத்தில், ராமன் கானகத்திற்குப் போவதைப்பற்றித் தசரதரும் கைகேயியும் சச்சரவு புரிந்துகொண்டிருந்த பொழுதெல்லாம் லக்ஷ்மணன் ஒரு வார்த்தையும் பேசவில்லை. ராமன் வனத்திற்குப் போக வேண்டும் என்பது முடிவான பிறகு அவனது உள்ளம் கோபத்தால் கொதித்துக் கொண்டிருந்தும், ராமன் கௌசல்யையிடம் அதைச் சொல்லும் வரையில் பொறுத்துக்கொண்டிருந்தான். அந்தத் தாயின் பரிதாப நிலையைக் கண்டதும் அவன் மனம் தாளவில்லை; வெகுண்டு எழுகிறான். அவன் கடுஞ் சொற்களைச் சொல்ல, ராமர் அவனது கோபத்தைச் சாந்தப்படுத்தி அமைதியாக இருக்கும்படி வேண்டிக்கொள்கிறார். ''லக்ஷ்மணா! பதறாதே! தந்தையின் கட்டளைப்படி அல்லவா நான் நடக்க வேண்டும்? பெற்றோரின் சொற்படி நடப்பது தவறா? அவ்வாறு செய்வது மிகவும் உயர்ந்த செயல் அல்லவா? இப்பொழுது நான் தந்தையின் சொற்படி மட்டும் நடக்கவில்லை. உறுதிமொழியை மீறியவர் என்ற பழிச்சொல் அவரைச் சாராமலிருக்கும்படி காப்பாற்ற வேண்டியவன். தான் செய்த பிரதிக்ஞையை மீறுவதைக்காட்டிலும் வேறு கொடிய அவமானம் ஓர் அரசனுக்கு ஏற்படாது. நம் பிதாவுக்கு அத்தகைய அபவாதம் நேராமல் நான்தான் பார்த்துக்கொள்ள வேண்டும். அதுதான் என் லட்சியம் என்பதைத் தெரிந்துகொள்'' என்று கூறிவிட்டுத் தர்மத்தைப்பற்றி அவனுக்கு எடுத்துரைக்கிறார். உடனே லக்ஷ்மணன் அந்தத் தர்மத்தையே பழித்துப் பேசுகிறான். ''அது நம் பலவீனமே தவிர வேறல்ல. அதனால் தங்களுக்குக் கஷ்டம்தான் ஏற்படும்'' என்று கூறி, மேலும், ''நான் பலசாலி; தங்களுடைய நலத்தைப் பாதுகாப்பவன். தங்களுக்கு உரிமையாக உள்ளதைத் தாங்கள் இழந்து நிற்பதை என்னால் காண முடியாது. பரதன் அதற்குக் குறுக்கே நின்றானானால் அதன் பயன் என்ன ஆகும் என்பதை அவனும் அவனைச் சேர்ந்தவர்களும் தெரிந்துகொள்வார்கள். தங்களைப் போல இளகிய நெஞ்சுள்ளவர்களுக்கு இத்தகைய இழிவுகள் ஏற்பட்டுக்கொண்டேதான் இருக்கும். இந்தப் பரதனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் நான் ஒரு நொடியில் தீர்த்துவிடுகிறேன்'' என்றெல்லாம் ஆத்திரத்துடன் பேசுகிறான்.

भरतस्याथ पक्ष्यो वा यो वास्य हितमिच्छति ।
सर्वानेव हनिष्यामि मृदुर्हि परिभूयते ॥ II. 21. 11.

प्रोत्साहितोऽयं कैकेय्या स दुष्टो यदि नः पिता ।
अमित्रभूतो निस्सङ्गं बध्यतां वध्यतामपि ॥ II. 21. 12.

'தசரதரும் கைகேயியும் சேர்ந்து ஒரு சதித் திட்டம் போட்டிருப்பார்களோ?' என்றுகூட அவன் சந்தேகப்படுவதாகத் தோன்றுகிறது. ''அவர்களுக்குள்ளேயே ஓர் ஒப்பந்தம் நடந்திருக்கிறது. கிழவர் துயரப்படுகிறவர் போல் நடிக்க, சின்ன அம்மா வற்புறுத்துவது போல் ஒரு நாடகம் நடந்திருக்கிறது. அதை நாம் சீர்குலேயச் செய்ய வேண்டும். கிழவரைக் கட்டி வைப்போம்; அவசியமானுல் அவரையே யோசிக்காமல் தீர்த்துவிடுவோம்'' என்கிருன். இதன் பிறகுதான் பின்வரும் பிரசித்தமான சுலோகத்தை லக்ஷ்மணன் வாயிலாகக் கவி கூறுகிருர்—

गुरोरप्यवलिप्तस्य कार्याकार्यमजानतः ।
उत्पथं प्रतिपन्नस्य कार्यं भवति शासनम् ॥ II. 21. 13.

கடைசிப் பாதி அடி, 'ஆர்யம் பவதி ஶாஸநம்' என்று இருக்க வேண்டுமென்று சிலர் கூறுகிருர்கள். அதற்கு அர்த்தம் சொல்ல வேண்டும் என்ருல் இம் மாதிரிதான் சொல்லும்படி இருக்கிறது. ''அவர் உங்கள் தந்தையாக இருக்கட்டும். நன்மை எது, தீமை எது என்று அறியாமல் தவருன வழியில்தான் செல்வார் என்ருல் அவரைத் தடுத்து அடக்க வேண்டியதுதான்.'' தம் குருவான பரசுராமரைப் பீஷ்மர் எதிர்த்து நிற்கும்படி நேர்ந்தபொழுது மேற்கண்ட சுலோகம்தான் மகாபாரதத்திலும் வருகிறது. வால்மீகியினிடமுள்ள விசேஷம், அவருடைய ஒழுங்குமுறையே என்று கூறலாம். சிறிது தள்ளி,இதே காண்டத்தில், சத்ருக்கினனும் மேற்கண்ட விதமான சொற்களேயே பேசுகிருன். லக்ஷ்மணனும் சத்ருக்கினனும் இரட்டைப் பிள்ளேகளானதால் ஒரே விதமாக நினேத்துப் பேசுவது நியாயமே அல்லவா? ''வேறு வழியில்லே என்ருல் லக்ஷ்மணன் அந்தக் கிழவரை அடக்கி ராமருக்கு உரித்தான ராஜ்யத்தைக் கொடுத்திருக்கலாமே! அதில் ஒரு தவறும் இல்லே. வயதானவர்கள் அசட்டுத்தனமாகவே எப்பொழுதாவது நடந்து கொண்டு விடுவார்கள். அவர்களேச் சும்மா விடக்கூடாது'' என்கிருன் சத்ருக்கினன்.

पूर्वमेव तु निग्राह्यः समवेक्ष्य नयानयौ ।
उत्पथं यः समारूढो नार्या राजा वशं गतः ॥ II. 78. 4.

''பெண்பிள்ளேக்கு அடிமையாய்க் கிடக்கும் இந்தக் கிழவரின் சுதந்திரத்தை முதலிலேயே பறித்திருக்க வேண்டும்'' என்ற சொற்களேக் கௌசல்யாதேவியின் முன் லக்ஷ்மணன் கூறுவதோடு, ராமரெதிரில் அவளிடம், ''இப்பொழுது என் மனம் என்ன பாடுபடுகிறது என்பது உங்களுக்குத் தெரியாது'' என்கிருன்.

अनुरक्तोऽस्मि भावेन भ्रातरं देवि तत्त्वतः ।
सत्येन धनुषा चैव दत्तेनेष्टेन ते शपे ॥ II. 21. 16.

தமையனிடம் தனக்குள்ள அன்பையும் பக்தியையும் மேலும் மேலும் ஆணைகளிட்டு எடுத்துக்கூறுகிறான். இவ்வளவு பலமாக ஆணையிட்டு அவன் அதை எதற்காக உறுதிப்படுத்த வேண்டும்?

दीप्तमग्निमरण्यं वा यदि रामः प्रवेक्ष्यति ।
प्रविष्टं तत्र मां देवि त्वं पूर्वमवधारय ॥ II. 21. 17.

எத்தகைய உணர்ச்சி! என்ன வேகத்தோடு பேசுகிறான்! சாதாரண வார்த்தைகளா அவை? பொன்னெழுத்தில் பொறிக்கப்பட வேண்டியவை அல்லவா? "அம்மா, நான் ஆணையிட்டுச் சொல்லுகிறேன். ராமர் தீக்குளித்து உயிர் துறப்பதாக இருந்தாலும் அல்லது பயங்கரமான தண்டகாரணியத்துக்குச் செல்வதாக இருந்தாலும் அவருக்கு முன்பே நான் அதைச் செய்து முடிப்பேன். நான் நெருப்பில் விழுந்த பிறகுதான் ராமர் அதில் விழ வேண்டும்" என்றெல்லாம் உணர்ச்சியுடன் பேசுகிறான். அவனுடைய குணத்தை ஸ்ரீராமர் நன்கு அறிந்தவரானதால் அவனிடம் மிகவும் சாந்தமாகப் பேசுகிறார்.

तदेनां विसृजानार्यां क्षत्रधर्माश्रितां मतिम् ।
धर्ममाश्रय मा तैक्ष्ण्यं मद्बुद्धिरनुगम्यताम् ॥ II. 21. 44.

'க்ஷத்ரதர்மம்' என்ற வார்த்தையைக் கொஞ்சம் கவனிக்க வேண்டும். ராமரும் க்ஷத்திரியர்தாம்; லக்ஷ்மணனும் க்ஷத்திரியன் தான். அவர்கள் அதைப்பற்றிப் பெருமைப்படுகிறவர்கள். ஆயினும், 'போர் புரியும் தர்மத்தைக் கைவிட வேண்டும்' என்று ராமர் கூறுகிறார். "நீ இவ்விதம் நடப்பது முறையல்ல. 'தர்மம் ஆச்ரய.' குரூரம் கூடாது. கடுமையாகப் பேசாதே. தர்மத்தைப் பின்பற்று" என்ற ரீதியில் பேசுகிறார். ஆனால், தர்மத்தைப் போதிக்கும் சமயம் அது அல்ல என்று லக்ஷ்மணன் அதை ஏற்க மறுக்கிறான்.

येनेयमागता द्वैधं तव बुद्धिर्महामते ।
स हि धर्मो मम द्वेष्यः प्रसङ्गाद्यस्य मुह्यसि ॥ II. 23. 11-12.

"எந்தத் தர்மத்தைப் போற்றியதனால் நீங்கள் எல்லாவற்றையும் இழந்தீர்களோ அந்தத் தர்மத்தை நான் வெறுக்கிறேன்" என்கிறான். இரண்டு சகோதரர்களுக்குமுள்ள வித்தியாசத்தைப் பாருங்கள். லக்ஷ்மணனை அடக்குவதற்கு ராமர் எவ்வளவு கஷ்டப் பட்டிருக்க வேண்டும்! சாதாரண மனிதரைப் போல் ராமரும், "நான் என்ன செய்ய முடியும்? கிழவர்மேல் தவறில்லை. சிற்றன்னை கைகேயியின் மேலும் தவறில்லை. என் மேலும் இல்லை. எல்லாம்

விதியின் விளையாட்டு. விதியை எதிர்த்தவர் யார்? யார்தாம் விதியை எதிர்த்து நிற்க முடியும்? நீ நான் எல்லோரும் அதற்கு அடங்கியவர்களே. லக்ஷ்மணா, வீணாகக் கஷ்டப்படாதே'' என்கிறார். லக்ஷ்மணன் அந்தப் புத்திமதியைக் கேட்பதாக இல்லை. ''அது மனோபலமற்றவர்களுடைய மதமேயாகும். மனோதைரிய மற்ற அசடன்தான் விதியின் மீது பாரத்தைப் போடுவான். விதி! விதி! விதி அல்லவா நம் இச்சைக்குக் கட்டுப்பட்டதாக இருக்க வேண்டும்! வலிமை பொருந்திய இந்தக் கைகளும் விசாலமான தோள்களும் எதற்காக இருக்கின்றன? அழகுக்காகவா? இந்த வில்லும் அம்புகளும்தாம் எதற்கு? விதிக்குத் தலை வணங்குவதற்கா? அதை நாம் ஒரு பொருட்டாக எண்ணலாமா?'' என்கிறான் லக்ஷ்மணன்.

न शोभार्थाविमौ बाहू, न धनुर्भूषणाय मे ।
नासिराबन्धनार्थाय, न शराः स्तम्भहेतवः ॥ II. 23. 31.

''என்றால் பொறுத்திருக்க முடியவில்லையே! தங்களுக்குத் தீங்கு விளைக்கும் மனிதன் யார்? சொல்லுங்கள். அவனைக் கொன்று விடுகிறேன். எனக்கு உத்தரவு கொடுங்கள்'' என்று மேலும் அவன் ராமரை வேண்டுகிறான்.

ब्रवीहि कोऽद्यैव मया वियुज्यतां
तवासुहृत् प्राणयशस्सुहृज्जनैः ।
यथा तवेयं वसुधा वशे भवेत्
तथैव मां शाधि तवास्मि किंकरः ॥ II. 23. 41.

இந்த இடத்தில் நீங்கள் கொஞ்சம் கவனிக்க வேண்டும். அடக்கமுடியாத கோபமும் ஆத்திரமும் இருந்தபோதிலும் ராமரின் உத்தரவு இல்லாமல் அதைச் செயலில் காட்ட லக்ஷ்மணன் விரும்பவில்லை. ஆயினும் அவன் அத்தகைய வேகத்தோடுதான் பேசுகிறான். ஆயினும் ராமரது சம்மதம் வேண்டும். கட்டுக்கு அடங்காத கோபமும் ஆத்திரமும் இருந்தும், ராமரின் உத்தரவின்றி அவன் ஓர் அடியும் எடுத்துவைக்க மாட்டான். அவன் அவ்வளவு தூரம் ராமருக்கு அதினமாக இருப்பவன். ராமருக்கு அத்தனை ஏற்றம் அளித்திருந்ததனால் எவ்வளவுதான் அபிப்பிராயபேதம் இருப்பினும், அவர் சம்மதமின்றித் தனக்குத் தோன்றியபடி ஒரு நாளும் அவன் நடக்க மாட்டான். இத்தகைய பேரன்பையும் பக்தியையும் வாழ்க்கையில் எங்கேனும் காண முடியுமா? ராமர் தம் இயல்பிற்கு ஏற்றவாறு அமைதியாய் லக்ஷ்மணனை ஆயுதங்களை வைத்துவிட்டுச் சாந்தமாய் இருக்கும்படி கூறுகிறார். லக்ஷ்மணன் அதற்குச் சம்மதித்தபோதிலும் அவன் உள்ளம் அதற்குப் பணியவில்லை. அவன் தன் அபிப்பிராயத்தை மட்டும் மாற்றுவதாக இல்லை. ராமர்

நடப்பது சரியல்ல என்றுதான் அவனுக்கு இன்னமும் தோன்றுகிறது. எதிர்த்து நின்றுதான் வெற்றி பெறவேண்டும் என்பதுதான் அவன் எண்ணம். ஆனால் அதற்கு உரிய காலம் தாண்டிவிட்டது. உத்தரவு இல்லாமல் அவன் இனி ஒன்றும் செய்ய விரும்பவில்லை. பெரிய வாக்குவாதத்திற்குப் பிறகு, சீதை ராமருடன் வனம் செல்லுவது என்று முடிவான பிறகு, தான் செய்யப் போவது என்னவென்று கூறும் காலம் வந்துவிட்டது என்று நினைக்கிறான். ராமருடன் தானும் போவது அங்கீகரிக்கப்பட்டதாகவே நினைத்து, "நானும் கிளம்புவதற்குத் தயாராகிறேன்" என்கிறான்.

"நீ என்னுடன் வருவது கூடாது. உனக்கு இங்கே காரியம் இருக்கிறது. நீதான் என் அன்னையைப் பார்த்துக்கொள்ள வேண்டும். உன் அன்னையையும் பார்த்துக்கொள்பவன் நீதான். சிற்றன்னை கைகேயி எல்லா அதிகாரத்தையும் ஏற்றுக்கொண்டுவிட்டாள்; நம் தந்தைக்கு ஒன்றுமில்லை. உன் தாய், என் தாய் ஆகிய இருவரையும் மிகவும் அன்போடு கவனித்துக்கொள். நீ இங்கேயே இருந்து அவர்களைப் பார்த்துக்கொள்ள வேண்டும்" என்று ராமர் மேலும் கூறிக்கொண்டே போனபொழுது லக்ஷ்மணன் அவரைத் தடுத்துக் கூறுகிறான்.

अनुज्ञातश्च भवता पूर्वमेव यदस्म्यहम् ।
किमिदानीं पुनरिदं क्रियते मे निवारणम् ॥ II. 31. 7.

"தங்களுடன் வரும்படி நீங்கள் ஏற்கனவே எனக்கு உத்தரவளித்தாகிவிட்டதே! அப்படியிருக்க இப்பொழுது அதனின்றும் பின்வாங்குவானேன்?" என்கிறான். உண்மையில் லக்ஷ்மணனைத் தம்முடன் வரும்படி ஸ்ரீராமர் வெளிப்படையாகக் கூறியதாக ஒன்றும் ராமாயணத்தில் இல்லை. வேண்டுமென்றே, ராமர் ஏதோ கூறியதை வைத்துக்கொண்டுதான் லக்ஷ்மணன் அவ்விதம் பேசுகிறான். ராமர் ஏதோ கூறியதை லக்ஷ்மணன் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டான் என்றும் நிச்சயமாகச் சொல்ல முடியாது. வியாக்கியானகாரர்கள் மிகவும் கஷ்டப்பட்டு இரண்டொரு சுலோகங்களைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். ஒரு சுலோகம் இப்பொழுது எடுத்துக் கூறுகிறேன். தம்முடன் வர வேண்டாம் என்று சீதையினிடம் வாதித்துக்கொண்டிருந்த பொழுது ராமர் பின்வருமாறு கூறுகிறார்:—

भ्रातृपुत्रसमौ चापि द्रष्टव्यौ च विशेषतः ।
त्वया भरतशत्रुघ्नौ प्राणैः प्रियतरौ मम ॥ II. 26. 33.

"பரதனும் சத்ருக்கினனும் என் உயிர் போன்றவர்கள். அவர்களைக் கவனித்துக் கொள்வதற்காக நீ இங்கேயே இருக்க வேண்டும்" என்கிறார். ஒரே கோபமாக இருந்தபோதிலும்

அந்தச் சொற்கள் லக்ஷ்மணன் காதில் விழுந்ததும், 'கவனிக்கப்பட வேண்டியவர்களில் என்னைச் சேர்க்கவில்லை; அதனால் என்னையும் ராமர் உடன் அழைத்துப் போவது நிச்சயம்' என்று கருதியவனாக உடனே, "பரத சத்ருக்கினர்கள் போல் என்னையும் தேவியின் பாதுகாப்பில் விட்டுச் செல்வதாக நீங்கள் கூறவில்லை. உங்கள் கருத்து, என்னையும் உடன் அழைத்துச் செல்வதுதான். என்னையும் அழைத்துச் செல்லுங்கள்" என்கிறான்.

லக்ஷ்மணன் இவ்வாறு தர்மத்தை அவமதித்துப் பேசுவது உங்களுக்கு வியப்பாக இருக்கும். ஏதோ தவறிப் போய் லக்ஷ்மணன் அவ்விதம் பேசவில்லை யுத்த காண்டத்தில், இந்திரஜித் மாயாசீதையை அனுமாரின் எதிரில் வெட்டிக் கொன்றபொழுது அனுமார் ஓடிப்போய் ராமரிடம் இந்தச் செய்தியைக் கூறுகிறார். அதைக் கேட்டு ராமர் மனமுடைந்து போய், "எல்லாம் முடிந்து விட்டது. நாம் திரும்பிப் போய்விடுவோம். இனி நமக்கு இங்கு என்ன வேலை?" என்று வருந்துகிறார். அந்தச் சமயத்தில், வழக்கம் போல்,லக்ஷ்மணன் ஹிதமான வார்த்தைகளால் அவரைத் தேற்றுகிறான். 'தர்மம்' என்பதன் மீதுள்ள அவனது துவேஷம் அப்பொழுது அவன் சொற்களில் வெளியாகிறது. "அந்தக் கைகேயியின் வார்த்தைக்கு உட்பட்டு ராஜ்யத்தைத் துறந்தபொழுதே தர்மம் ஒன்றுக்கும் பயனற்றது என்று நான் கூறவில்லையா? இப்பொழுது தெரிகிறது அல்லவா அதன் உண்மை? தங்களுக்கு நேர்ந்திருக்கும் கதியைப் பாருங்கள். 'தர்மம் தர்மம்' என்று கூறிக்கொண்டு, தந்தையின் சொல்லைக் கேட்டதனால் எத்தகைய கஷ்டத்துக்கு உள்ளாகிவிட்டீர்கள்!" 'என்று கூறித் தர்மத்தையும் அர்த்தத்தையும் ஒப்பிட்டு மேலும், "பொருளே அல்லவா பெரிது? அதற்காக அல்லவா நாம் பாடுபட வேண்டும்? செல்வத்தையும் சௌக்கியத்தையும் நீங்கள் தேடிப் பெற வேண்டும். அதை விட்டுத் தவறான வழியில் சென்றதனால்தானே இவ்வளவு பெரும் கஷ்டத்தைச் சம்பாதித்துக்கொண்டீர்கள்?" என்று குத்திக்காட்டுகிறான். விபரீதமான வார்த்தைகள் இவை. ஆயினும், லக்ஷ்மணன் வாயிலாக மிகவும் உயர்ந்த சுலோகங்கள் இந்த ரீதியில் பேசப்படுகின்றன. மூன்று நான்கு சுலோகங்கள் மிகவும் பிரசித்தமானவை. முதல் சுலோகம்:—

शुभे वर्त्मनि तिष्ठन्तं त्वामार्य विजितेन्द्रियम् ।
अनर्थेभ्यो न शक्नोति त्रातुं धर्मो निरर्थकः ॥ VI. 83. 14.

"இந்தப் பயனற்ற, ஒன்றுக்கும் உதவாத தர்மம், கஷ்டங்களினின்றும் தங்களைக் காக்கச் சக்தியற்றது."

यस्यार्थास्तस्य मित्राणि, यस्यार्थास्तस्य बान्धवाः ।
यस्यार्थाः स पुमान् लोके, यस्यार्थाः स च पण्डितः ॥

यस्यार्थाः स च विक्रान्तो यस्यार्थाः स च बुद्धिमान् ।
यस्यार्थाः स महाभागो यस्यार्थाः स गुणाधिकः ॥ VI. 83. 35-36.

"எவனிடம் செல்வம் இருக்கிறதோ அவனுக்குத்தான் நண்பர் இருப்பார்கள். பந்துக்கள் இருப்பார்கள். பணமுள்ளவன்தான் புருஷன், பண்டிதன், புத்திமான், சக்தியுள்ளவன், குணத்தில் சிறந்தவன், அதிருஷ்டமுள்ளவன். அப்பாவின் சொல்லைக் கேட்டு நடந்தீர்கள்; ஆனால் அதனால் உமது உயிருக்கு உயிரான மனைவியை அரக்கன் அல்லவா அபகரித்துச் சென்றுவிட்டான்?" என்கிறான்.

त्वयि प्रव्राजिते वीर गुरोश्च वचने स्थिते ।
रक्षसापहृता भार्या प्राणैः प्रियतरा तव ॥ VI. 83. 41.

லக்ஷ்மணன் தர்மம் அறியாதவன் அல்ல; ஆயினும் தீரர்களாக இருப்பவர்கள் செய்ய வேண்டியது என்ன என்று அவன் ஏற்கனவே கூறியதற்குச் சரியான வார்த்தைகளைத்தான் இப்பொழுது கூறு கிறான். இதன் மூலம் ராமருக்கும் லக்ஷ்மணனுக்குமுள்ள வித்தியாசத்தையே முக்கியமாகக் கவி எடுத்துக்காட்டுவதை உங்களுக்கு ஞாபகப்படுத்துகிறேன். தீராத் துன்பங்களின் மத்தியிலும் தர்மத்தை விட்டு மயிரிழைகூட விலகாதவர் ராமர். அவருக்கு அடுத்தவனாயிருந்தபோதிலும் லக்ஷ்மணன் அந்த நிலைக்கு உயர்வதற்கு இயலாதவன் என்று தெரிகிறது அல்லவா?

லக்ஷ்மணனுடைய மற்றொரு குணத்தைப்பற்றி இப்பொழுது எடுத்துக்கூறுகிறேன். உணர்ச்சி மிகுந்த பெருங்குணம் படைத்தோரின் இனத்தைச் சார்ந்தவன் லக்ஷ்மணன். எளிதில் அவர்கள் உணர்ச்சிவசமாகிவிடுவார்கள். அந்த உணர்ச்சிவேகத்தில் வெகு சீக்கிரம் கோபத்திற்கு இலக்காகிவிடுவார்கள். ஆனால் வெகு சீக்கிரமே அந்தக் கோபம் தணிந்து உதாரமும் பெருந்தன்மையும் கொண்டதாக அவர்களின் குணம் மாறிவிடும். 'ஆசுகோப:, ஆசுதோஷ:' என்ற இரண்டு குணங்களும் ஒன்றையொன்று தொடர்ந்து நிற்பவை. ஒரு நொடியில் விளைந்த கோபம் மறு நொடியிலேயே சாந்தமாகிவிடும். உயர்ந்த இயல்பிற்கு அதுவே ஓர் அறிகுறியாகும். தமையனுக்கு ஏதேனும் கெடுதல் ஏற்பட்டு விட்டால் லக்ஷ்மணனுக்கு எல்லோர் மேலும் சந்தேகம் ஏற்பட்டு விடும். நான் ஏற்கனவே கூறியது போல, தந்தை கைகேயியுடன் சேர்ந்து சதியாலோசனை செய்திருப்பார் என்று சந்தேகிக்கிறான். பரதன் சதுரங்க சேனையுடனும், அயோத்தி ஜனங்கள், மந்திரிகள் முதலியோருடனும் திரும்பி வந்து ராஜ்யத்தை ஏற்றுக் கொள்ளும்படி ராமரை வேண்டிக் கொள்வதற்காகச் சித்திரகூடத்திற்கு வந்த சம்பவம் உங்களுக்கு நினைவிருக்கும். ராம லக்ஷ்மணர்கள் இருக்கும் இடத்திலிருந்து பார்க்கும்

பொழுது ஒரே புழுதிப் படலம் ஆகாயத்தில் கிளம்பியது தெரிய வருகிறது. அது என்னவென்று ஒரு மரத்தின் மேலேறிப் பார்க்கும்படி ராமர் லக்ஷ்மணனுக்குப் பணிக்கிருர். மரத்தின் மேலேறிய லக்ஷ்மணன், தூரத்தில் பெருஞ் சேனையொன்று வருவதைப் பார்க்கிருன். அது யாருடைய சேனை, எவருடைய தலைமையில் வருகிறது என்பதையெல்லாம் எளிதில் அறிந்தவனுக மரத்திலிருந்து கீழே இறங்காமலே, "அதோ உங்களுடைய அருமைச் சகோதரன் வந்துகொண்டிருக்கிருன்! நாம் இங்கே நிம்மதியாக இருப்பதுகூட அவனுக்குப் பொறுக்கவில்லை போல் இருக்கிறது! 'பதினன்கு வருஷங்களுக்குப் பிறகு திரும்பி வந்து தொல்லை கொடுக்கப்போகிருர்களே' என்று அவனுக்குக் கவலை. நம்மைக் கொன்றுவிடுவதற்காக வருகிருன். ஆனல் அதற்குள் நான் சும்மா இருப்பேனு?'' என்று ராமரைக் கூப்பிட்டுக் கூறுகிருன். ஆத்திரத்துடன் அவன் பேசுவதைப் பாருங்கள்.

सम्प्राप्तोऽयमरिर्वीर भवतो वध्य एव मे ।
भरतस्य वधे दोषं नाहं पश्यामि राघव ॥ II. 96. 23.

''உடன்பிறந்தவனுக இருந்தாலும் அவனைக் கொல்லுவதில் ஒரு தவறும் எனக்குத் தோன்றவில்லை'' என்கிருன்.

एतस्मिन् निहते कृत्स्नामनुशाधि वसुन्धराम् ।
अद्य पुत्रं हतं संख्ये कैकेयी राज्यकामुका ॥
मया पश्येत् सुदुःखार्ता हस्तिभग्नमिव द्रुमम् ।
कैकेयीं च वधिष्यामि सानुबन्धां सबान्धवाम् ॥ II. 96. 25-26.

லக்ஷ்மணனுடைய கோபம் எத்தகைய உச்சநிலையை அடைந்திருக்கிறது, பாருங்கள்: "பரதனைக் கொன்றுவிட்டுப் பிறகு கவலையில்லாமலிருக்க, அவன் தாயையும் கொல்வேன். அவளுடைய உறவினரையும், அவளைச் சேர்ந்தவர்கள் அனைவரையும் வேண்டுமானலும் கொன்றுவிடுவேன்'' என்று கூறுகிருன். இதுதான் லக்ஷ்மணனுடைய குணம். அது ராமருக்கும் தெரியும். "லக்ஷ்மணு, அவசரப்படாதே! பரதன் ஒரு கெட்ட எண்ணத்தோடும் வரவில்லை. நான் நிச்சயமாய்க் கூறுகிறேன். என்னை ராஜ்யத்தை ஏற்றுக்கொள்ளும்படி வேண்டிக்கொள்வதற்காகத்தான் வருகிருன்'' என்று கூறிவிட்டு, மேலும் ராமர், "நீ பரதனை அறிந்து கொள்ளவே இல்லை. ராஜ்யம் வேண்டுமென்று உனக்கு ஆசை தோன்றுகிறதா? லக்ஷ்மணு, அதற்கென்ன கஷ்டம்? 'ராஜ்யம் தனக்கு வேண்டும் என்று லக்ஷ்மணன் ஆசைப்படுகிருன். அதை நீ அவனுக்குக் கொடுத்துவிடு' என்று பரதனிடம் நான் சொல்ல வேண்டியதுதான்; உடனே அதை உனக்குக் கொடுத்துவிடுவான்'' என்கிருர்.

பரதனை அவர் நன்கு அறிந்தவர் அல்லவா? தமையனுடைய நலத்தில் கண்ணும் கருத்துமாக இருப்பவன் லக்ஷ்மணன். ஆகையால் அவன் அனைவரையும் ஒரேயடியாகச் சந்தேகிக்காமல் என்ன செய்வான்? ராமருக்குத் தீங்கு வராமலிருக்க வேண்டும், அவரது நலனைப் பாதுகாக்க வேண்டும் என்ற ஒரே ஆவல்தான் அவனுக்கு. அதிகக் கவலையினால் அவசரப்பட்டு லக்ஷ்மணன் செய்த தவற்றை ராமர் எடுத்துக்காட்டியதும், வெட்கமடைந்து மரத்தி லிருந்து கீழே இறங்கிப் பச்சாத்தாபத்துடன் ஸ்ரீராமரருகில் வருகிறான். "நம் தந்தையும் ஒருவேளை கூட வருகிறாரோ?" என்று மிகவும் தணிந்த குரலில் கேட்கிறான். எவ்வளவு இயல்பான மாற்றம் பாருங்கள்! அதைக் காண நம் மனமும் எவ்வாறு நெகிழ் கிறது! தன் தவற்றை உணர்ந்து வெட்கமடைந்தவனாக, பிதாவே திரண்ட சேனையுடன் வரவேண்டும் என்ற தன் ஆவலை அந்தச் சொற்களில் வெளியிடுகிறான். ராமரும் அவனது மனநிலையை அறிந்து, அதை உறுதிப்படுத்தும் விதம், "ஆம், அப்பாவே இங்கு நேரில் வந்து என்னைத் திரும்பி வந்து ராஜ்யத்தை ஏற்றுக் கொள்ளும்படி கூறினாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. அவரது யானை வருவது தெரிகிறது. குதிரைகளும் தெரிகின்றன. ஆனால் அவரது வெண் கொற்றக்குடை எங்கே? காணவில்லையே! பார் லக்ஷ்மணா!" என்று அன்புடன் அவனை அழைத்துப் பேசுகிறார். தந்தை வரவில்லை என்பது அவருக்குத் தெரியும். ஆயினும் இதமாக லக்ஷ்மணனுக்கு, "அப்பா வந்திருப்பதாகத் தெரியவில்லை. அப்படி வந்திருந்தாலும் ஆச்சரியமில்லை" என்கிறார்.

ராமர் வேடிக்கையாகத்தான் லக்ஷ்மணனிடம், "உனக்கு ராஜ்யம் வேண்டுமென்றால் என்னிடம் சொல்வதற்கென்ன? பரதனிடம் கேட்டு ஒரு நொடியில் வாங்கிக் கொடுத்திருப்பேனே!" என்று கூறுகிறார். அவர் வேடிக்கையாகக் கூறியதும் பின்பு ஒரு விதத்தில் உண்மையாகவே முடிந்தது. ராவணயுத்தம் முடிந்து அயோத்திக்கு வந்து பட்டாபிஷேகம் செய்துகொண்டபொழுது, 'யுவராஜ பதவியை யார் ஏற்றுக்கொள்வது?' என்ற கேள்வி எழுகிறது. "லக்ஷ்மணா, யுவராஜ பட்டம் உன்னுடையது" என்று ராமர் அவனிடம் கூறுகிறார். லக்ஷ்மணன்தான் நியாயமாக அந்தப் பட்டத்திற்கு உரியவன் என்று கருதினார் போலும்! பரதன் லக்ஷ்மணனைவிடச் சில மணிநேரம் மூத்தவன். பதினான்கு வருஷம் ராமருக்குப் பதிலாக ராஜ்யத்தை ஆண்டவன். அப்படியிருக்க அவனை விட்டு லக்ஷ்மணனை இளவரசனாக்குவது முறையல்ல என்றுதான் தோன்றுகிறது அல்லவா? விளையாட்டாகச் சொல்லாமல் ஸ்ரீராமன் உண்மையாகவே லக்ஷ்மணனிடம், "நீ வாஸ்தவத்தில் யுவராஜ பதவியை ஏற்றுக்கொள்வதாக இருந்தால் பரதன் ஒரு சிறிதும் தடை செய்யமாட்டான். என்ன சொல்லு

கிருய்?'' என்று கேட்கிருர். பரதனும் அதை முற்றும் ஆமோதிப்பவன் போல், "ஆம் லக்ஷ்மணு! அவசியம் ஏற்றுக்கொள்'' என்று கூறுகிருன்.

**सर्वात्मना पर्यनुनीयमानो यदा न सौमित्रिरुपैति योगम् ।**

தன் பெருமை, செல்வம் யாவும் தன்னுடைய கைங்கரிய லக்ஷ்மியே என்று அறிந்தவனுனதால் லக்ஷ்மணன் யுவராஜபதவியை ஏற்றுக்கொள்வது அந்தக் கைங்கரியத்துக்குத் தடையாகும் என்று கருதியே, தீர்மானமாக அதை ஏற்றுக்கொள்ள மறுக்கிருன். ஆகவே பரதனையே முடிவில் ராமர் யுவராஜாவாக முடி சூட்டுவித்தார்.

**नियुज्यमानोऽपि च यौवराज्ये ततोऽभ्यषिञ्चद् भरतं महात्मा ॥**
VI. 131. 93.

லக்ஷ்மணனுடைய பெருந்தன்மையான குணம் வெளிப்படையாகத் தெரிந்த ஒரு சம்பவம் இது. பொங்கியெழுந்த கோபத்திற்குப் பிறகு உதாரகுணத்தை வெளிக்காட்டும் மற்ருெரு சம்பவத்தை இப்பொழுது கூறுகிறேன். சீதாதேவியைப் பிரிந்து ராமர் கரைகாணுத் துயரத்தில் முழுகியிருந்த சமயத்தில் சுக்கிரீவன் செய்திருந்த உறுதிமொழியை எண்ணியபடி நாட்களைக் கழித்துக் கொண்டிருக்கிருர். சுக்கிரீவன் தன் சொற்படி நடக்கத் தவறியதை எடுத்துக்கூறும்படி லக்ஷ்மணனை அனுப்புகிருர். கடுங் கோபத்தை வரவழைத்துக்கொண்டு லக்ஷ்மணனிடம், ''போய், சுக்கிரீவனிடம் நான் கூறியதாகச் சொல்'' என்கிருர்.

**न च सङ्कुचितः पन्थाः, येन वाली हतो गतः ।**
**समये तिष्ठ सुग्रीव, मा वालिपथमन्वगाः ॥** IV. 30. 81.

''வாலி சென்ற வழி இன்னும் திறந்தே இருக்கிறது. அதை யாரும் மூட முடியாது. நீ செய்த பிரதிக்கினையினின்றும் தவறினுல் அந்த வழியே நீயும் போக வேண்டியதுதான் என்று சொல்லு.'' இந்த வார்த்தைகளைக் கேட்டதும் ராமருடைய கோபத்தைக் கண்டு லக்ஷ்மணன் உடனே போய்ச் சுக்கிரீவனைக் கொன்று அங்கதனைச் சிம்மாசனத்தில் அமர்த்தி அவனைக் கொண்டு சீதாதேவியைத் தேடும் முயற்சியைத் தொடங்கத் தீர்மானிக்கிருன். ''இதோ போய் அவர்கள் அனைவரையும் கொன்று தீர்க்கிறேன்'' என்று அவன் கிளம்பியபோது, தம் தவற்றை உணர்ந்து ராமர் சாந்தமாக, ''லக்ஷ்மணு! நான் சொல்வதற்குள் அவசரப்படாதே. ஏதோ கோபத்தில் பேசிவிட்டேன். சுக்கிரீவனிடம் போய் அதைச் சொல்லிவிடாதே. சாந்தமாகவே பேசி ஆகவேண்டியதைச் செய்'' என்கிருர். லக்ஷ்மணன் அதை ஏற்றுக்கொண்டு புறப்படுகிருன். ஆயினும் ராமர் பட்ட மனக்கஷ்டத்தைக் கண்டு எழுந்த கோபத்

தில், அவர் சாந்தமாக இருக்கும்படி கூறியது அவனுக்கு உடனே மறந்து போய்விடுகிறது. இவ்விடத்தில் கவி வேடிக்கையாக லக்ஷ்மணனுடைய கோபத்தை வர்ணிக்கும் விதத்தைப் பாருங்கள்.

शक्रबाणासनप्रख्यं धनुः कालान्तकोपमम् ।
प्रगृह्य गिरिशृङ्गाभं मन्दरः सानुमानिव ॥ IV. 31. 11.

கட்டுக்கு அடங்காத கோபத்தில் லக்ஷ்மணன் கால்களைத் தள்ளிப் போட்டு நடக்கிறுனும். அவனது ஆத்திரம் எப்படிச் சாந்தமாகும்? வழியிலிருந்த மரங்களின் கிளைகளை முறித்துக் கொண்டும், காலில் தட்டுப்பட்ட கற்களைப் பொடிசூர்ணமாக்கிக் கொண்டும், 'சுக்கிரீவனிடம் என்ன சொல்வது?' என்று தன்னையே கேட்டுக்கொள்வது போல ஒவ்வொரு சமயம் தலையை ஆட்டிக் கொண்டும் வேகமாக நடந்து செல்கிறுன். 'ஸ்ரீராமர் என்ன கேட்கச் சொன்னுர்? நான் இப்படிச் சொல்வேன். அதற்கு அந்த மனிதன் என்ன பதில் சொல்லப் போகிறுன், பார்ப்போம்' என்றெல்லாம் யோசித்துக்கொண்டு செல்வது போல் தோன்று கிறது. முதலில் ராமர் கேட்டு வரச் சொன்னதாக அவன் கூறுவதும், சுக்கிரீவன் அதற்குப் பதில் கூறுவதும், பிறகு அதற்குத் தான் மறுமொழி கூறுவதும் இப்படியாக அவன் தனக்குள்ளேயே யோசித்துத் தீர்மானம் செய்துகொண்டு போகிறுன்.

कामक्रोधसमुत्थेन भ्रातुः कोपाग्निना वृतः ।
प्रभञ्जन इवाप्रीतः प्रययौ लक्ष्मणस्तदा ॥ IV. 31. 13.

சுக்கிரீவன் மிகவும் ஜாக்கிரதையாகத் தாரையை முதலில் லக்ஷ்மணனிடம் அனுப்பி அவனது கோபத்தைத் தணிக்கச் செய்கிறுன் என்று ஏற்கனவே கூறியிருக்கிறேன் அல்லவா? இதற்குள் சிறிது காலதாமதம் ஆகிறது. அரண்மனையில் காவல் புரியும் சில வானரங்கள் லக்ஷ்மணனைக் கண்டு சிறிது கலவரப் படுத்துகின்றன. அது லக்ஷ்மணனுடைய கோபத்தைப் பின்னும் அதிகரிக்கச் செய்கிறது. கடைசியில் தாரை வந்து லக்ஷ்மண னுடைய படபடப்பைத் தணிக்கும் விதமாய், "வரவேண்டும், வர வேண்டும்" என்று அழைக்கிறுள். ஸ்திரீகள் இருக்கும் இடத்திற்குச் செல்ல லக்ஷ்மணன் விரும்பவில்லை. சுக்கிரீவன் கேளிக்கையில் ஈடுபட்டிருக்கும்பொழுது அவன் எதற்கு அங்கே செல்ல வேண்டும்? "பாதகமில்லை. நீங்கள் ஒரு சகோதரர் போன்றவர்" என்று தாரை மேலும் வற்புறுத்தி அழைத்ததும், லக்ஷ்மணன் அவள் பின் செல்லுகிறுன்.

कूजितं नूपुराणां च काञ्चीनां निनदं तथा ।
स निशम्य ततः श्रीमान् सौमित्रिर्लज्जितोऽभवत् ॥ IV. 33. 25.

ஸ்திரீகள் இருக்கும் இடத்திற்கு லக்ஷ்மணன் சென்றதேயில்லை. இப்பொழுது அங்கே செல்லும்பொழுது அவர்கள் அணிந்திருந்த மேகலை, நூபுரம் ஆகியவற்றின் ஒலி கேட்கவும் அவன் வெட்கத்துடன் குனிந்த தலை நிமிராமலே செல்லுகிறான். தாரை மிருதுவாகப் பேசி அவன் மனத்தை மாற்றுகிறாள்.

स तां समीक्ष्यैव हरीशपत्नीं
तस्थावुदासीनतया महात्मा ।
अवाङ्मुखोऽभून्मनुजेन्द्रपुत्रः
स्त्रीसन्निकर्षाद्विनिवृत्तकोपः ॥ IV. 33. 39.

தாரையின் இனிய மொழிகளைக் கேட்டு லக்ஷ்மணனது கோபம் வெகுவாகத் தணிந்துவிடுகிறது. அவர்கள் சிறிது அவசரப்பட்டு, சுக்கிரீவன் மீது குற்றம் கூறிவிட்டதாகத் தோன்றும்படி தாரை பேசுகிறாள். தவனைக்கு முன்பே சுக்கிரீவன் சேனையைத் திரட்டி ஒன்றுசேர்க்க ஏற்பாடு செய்திருக்கிறான். தாரை இதைத் தெரிவித்துவிட்டு, மேலும் தைரியமாய், "அதோ வானரசேனைகளின் ஆரவாரம் கேட்கிறதே! அதற்குள் ஏன் இந்த அவசரம்? ஏன் இந்தக் கோபம்?" என்று கேட்டு முடிக்கிறாள். 'நாம் சிறிது அவசரப்பட்டுவிட்டோம்' என்று கருதி, லக்ஷ்மணன் சுக்கிரீவன் காலதாமதம் ஆக்கியதைப்பற்றிக் கூறுகிறான். இதற்குள் சுக்கிரீவன் நன்றாகப் பயம் தெளிந்து தன் குற்றத்தை ஒப்புக்கொள்ளும் முறையில் கூறுவது மிகவும் உயர்ந்த கருத்தை வெளியிடுகிறது.

न कश्चिन्नापराध्यति । IV. 36. 11.

"தவறு செய்யாதவர் யார்?" இந்தச் சொற்கள் ஒவ்வொருவரின் வாயிலும் மட்டும் அல்ல, ஒவ்வொருவரின் இதயத்திலும் இருக்க வேண்டியவை. பிறரிடம் குற்றம் கண்டுபிடித்துக் கோபம் கொள்ளும் இயல்புடைய நாம் அனைவரும் இதை ஞாபகத்தில் கொள்ள வேண்டும். "ந கஶ்சிந் நாபராத்யதி. உலகில் குற்றம் செய்யாதவர்களே இருக்க முடியாது. நம்மில் மிகவும் உயர்ந்தவர்களும் சில சமயம் தவறு செய்துவிடுவார்கள். ஆகவே தயையும் பொறுமையும் வேண்டும்" என்று சுக்கிரீவன் கூறியதும், லக்ஷ்மணனது சினம் முற்றும் தணிந்துவிடுகிறது. பிறகு சுக்கிரீவன் தான் செய்த பிரதிக்ஞையை மறக்காமல், ஆகவேண்டிய காரியங்களைக் கவனித்து வரும்பொழுது, தன்னைத் தவறாக அவர்கள் நினைப்பதைப்பற்றிக் குறை கூறுகிறான். லக்ஷ்மணன் மிகவும் பெருந்தன்மையோடு அவனைப் புகழ்ந்து பேசுகிறான்.

दोषज्ञः सति सामर्थ्ये कोऽन्यो भाषितुमर्हति ।
वर्जयित्वा मम ज्येष्ठं त्वां च वानरसत्तम ॥ IV. 36. 17.

"உன்னையும் ராமரையும் தவிர இந்தப் புவியில் வேறு யாரும் பிழையைப் பிழை என்று அறிந்து சரியானபடி பேசக் கூடியவர் இல்லை'' என்கிறான். என்ன பேச வேண்டும், எப்படிப் பேச வேண்டும் என்பதை நன்கு அறிந்தவர் உலகில் ராமர் ஒருவரே! அவருக்குச் சரியாகச் சுக்கிரீவனை லக்ஷ்மணன் உயர்த்திப் பேசுகிறான். இதைக்காட்டிலும் சுக்கிரீவனுக்கு வேறு என்ன உயர்வு வேண்டும்?

सदृशश्चासि रामस्य विक्रमेण बलेन च ।
सहायो दैवतैर्दत्तश्चिराय हरिपुङ्गव ॥ IV. 36. 18.

"பலத்திலும் பராக்கிரமத்திலும் நீ என் தமையனுக்கு நிகரானவன். தெய்வமே பார்த்து உன்னை எங்கள் நண்பனாக அளித்திருக்கிறது. கோபாவேசத்தில் உன்னைக் கொஞ்சம் கடுமையாகப் பேசிவிட்டேன். அதன் காரணத்தை நீ அறிவாய். ராமர் துயருற்றிருக்கும்பொழுது அதை எப்படிப் பார்த்துக்கொண்டு நான் பேசாமலிருக்க முடியும்? அதைக் கண்டு சினம் மேலிட்டுச் சில தகாத வார்த்தைகளைப் பேசிவிட்டேன். என்னை மன்னித்துவிடு'' என்கிறான்.

किन्तु शीघ्रमितो वीर निष्क्राम त्वं मया सह ।
सान्त्वयस्व वयस्यं त्वं भार्याहरणकर्शितम् ॥ IV. 36. 19.

"இனியும் தாமதியாமல் என்னுடன் வா. வந்து ராமர் இருக்கும் நிலையைப் பார். அவருக்கு ஆறுதல் கூறு. எல்லா ஏற்பாடுகளும் செய்தாகிவிட்டது என்று அவரிடம் கூறு. நான் கோபத்தில் பேசியதைப் பொறுத்து என்னை மன்னித்துவிடு'' என்று லக்ஷ்மணன் உண்மையாகவே அவனை வேண்டிக்கொள்ளுகிறான்.

यच्च शोकाभिभूतस्य श्रुत्वा रामस्य भाषितम् ।
मया त्वं परुषाण्युक्तस्तच्च त्वं क्षन्तुमर्हसि ॥ IV. 36. 20.

தன் தவற்றுக்காக லக்ஷ்மணன் சுக்கிரீவனிடம் மன்னிப்புக் கேட்க வேண்டுமென்றால் அதற்கு எத்தகைய பெருந்தன்மையான உள்ளம் வேண்டும்? தெரிந்தோ தெரியாமலோ அப்பிரியமாக நடந்துவிடுகிறோம். ஆனால் அதைப் பொறுக்கும்படிக் கேட்டுக் கொள்ள நமக்கு மனம் வருவதில்லை. அப்படியே கேட்டுக்கொண்டாலும் லக்ஷ்மணன் மாதிரி அவ்வளவு உதார மனத்துடன் கேட்க மாட்டோம். சுக்கிரீவனை ராமருக்கு நிகராக வைத்து அல்லவா அவ்வளவு பெருந்தன்மையோடு அவன் பேசுகிறான்? எவ்வளவு உயர்ந்த உள்ளம் படைத்தவன் லக்ஷ்மணன்!

இன்றைப் பிரசங்கத்தின் முடிவு நெருங்கிக்கொண்டிருக்கிறது. கடைசியாக, ராமர் எவ்வளவு கண்டிப்பான இயல்பு

உள்ளவர் என்பதையும் காட்டுகிறேன். அவ்வாறு இல்லா விட்டால், நிலையில்லாத குணமுள்ள கோடிக்கணக்கான வானரர்கள் அடங்கிய பெருஞ் சேனையை யுத்தத்திற்குச் செலுத்த முடியுமா? அவர் இடும் கட்டளையை மீற முடியாது. விருப்பத் துடன் அவரது கைங்கர்யத்தில் ஈடுபட்டிருக்கும் லக்ஷ்மணனுக்கே எவ்வளவோ சமயம் அவரது கட்டளையை நிறைவேற்றுவது மிகவும் கடினமாகிவிடும். இரண்டு முறை அடியோடு இயலாத நிலை அவனுக்கு ஏற்பட்டது. ராமரது உத்தரவைச் சிறிதும் யோசிக்காமல் உடனே நிறைவேற்றுகிறவன் லக்ஷ்மணன். ஆயினும் வாழ்க்கை முழுவதும் எவ்வளவு கஷ்டங்கள் நிரம்பியது! ஆணை யிடுபவன் சில சமயம் எத்தனை கஷ்டநிலையில் இருக்கிறான்! ஆணைக்கு அப்படியே கீழ்ப்படிந்து நடப்பவனும் எத்தனை பெரிய சங்கடத் திற்குள்ளாகிறான்! எவ்வளவோ உத்தமர்களாக இருந்தபோதிலும் எப்படிச் சில சமயம் மிகவும் இக்கட்டான நிலையில் அகப்பட்டுத் தவிக்கும்படியாகிறது! இவற்றையெல்லாம் எடுத்துக்காட்டுவதற் காகவே இதைக் கூறுகிறேன்.

மாய மானைப் பின்பற்றிச் சென்றபொழுது ராமர் லக்ஷ்மணனிடம், ''அபாயங்கள் நிரம்பியுள்ள இந்தக் கானகத்தில் நீ ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். சீதை இந்த மானைப் பிடித்து வரவேண்டுமென்று ஆசைப்படுகிறாள். நீதான் அவளைப் பார்த்துக் கொள்ள வேண்டும். இவ்விடத்தை விட்டு அசை யாமல் மிகவும் ஜாக்கிரதையாக இரு'' என்று கூறுகிறார். லக்ஷ்மண னுக்கு இவ்வளவு எச்சரிக்கை தேவையில்லை. சீதையைக் காப்பதில் அவன் கண்ணும் கருத்துமாய் இருந்தும் என்ன நடந்தது என்பது உங்களுக்குத் தெரியும். இறக்கும் தறுவாயில் மாரீசன் ராம ருடையது போன்ற குரலில் ''ஹா சீதா! லக்ஷ்மணா!'' என்று கத்தி யதும் அதைக் கேட்டுச் சீதை ஒரேயடியாய்க் கலங்கிப்போய் லக்ஷ்மணனைப் போய்ப்பார்த்து வரும்படி கூறுகிறாள். லக்ஷ்மணன் அதைக் கேட்காமல், ''உங்கள் கணவரின் பெருவீரம் உங்களுக்குத் தெரியாதா? அவருக்கு எங்கேயாவது அபாயம் விளையக்கூடுமா? அவருக்கு என்ன நேர்ந்துவிடும்? அப்படி ஏதாவது நேருவதாக இருந்தால் என்னால் அவரைக் காக்க இயலுமா? பயம் வேண்டாம். உங்களைப் பார்த்துக்கொள்வதற்கென்று அவர் என்னை இங்கே விட்டுச் சென்றிருக்கிறார். அவரது ஆணையை நான் எவ்வாறு மீற முடியும்?'' என்றெல்லாம் தடுத்துக் கூறுகிறான். இவற்றுள் எதை யும் காதில் வாங்கிக்கொள்ளாமல் சீதை சொல்லத்தகாத வசை மொழிகளை லக்ஷ்மணனை நோக்கிக் கூறுகிறாள். அதற்கும் அவன் தன் இடத்தை விட்டு அசையாமல் இருக்கவே அவள் மேலும், ''நீ உடனே போகவில்லையென்றால் இந்த க்ஷணமே உன் கண் முன் என் பிராணனை விட்டுவிடுவேன்'' என்கிறாள்.

समक्षं तव सौमित्रे प्राणांस्त्यक्ष्ये न संशयः । III. 45. 26.

பாவம்! லக்ஷ்மணன் என்ன செய்வான்? அவள் ராஜபுத்திர ஸ்திரீ; தான் சொன்னபடியே செய்துவிடுவாள். உயிரை விட அவள் அஞ்சமாட்டாள்.

மிகவும் சங்கடமான நிலை லக்ஷ்மணனுக்கு. அவள் உயிரை விடட்டும் என்று அவன் பேசாமலிருக்க முடியுமா? தமையனது ஆணையின்படி நடப்பதா, அல்லது அதை மீறி அவ்விடம் விட்டுச் சென்று அவளை உயிர் விடாமல் காப்பதா? எதைச் செய்வது என்று கலங்குகிறான். அவளோ சொல்லத்தகாத கடுஞ்சொற்களை மேன்மேலும் பேசுகிறாள். அவன் பதிலுக்கு அவளையும் அவளது பெண் இனத்தையுமே பழித்துப் பேசுகிறான். ''ஸ்திரீகளாகிய நீங்கள் மிகவும் கொடியவர்கள். உயிரை விடுவதாக நீங்கள் சொல்லும்பொழுது நான் என்ன செய்ய முடியும்? அண்ணாவின் ஆணையை மீறும் கோரத்தைக்காட்டிலும் நீங்கள் என் முன் உயிரை விடும் கோரம் பின்னும் அதிகப் பயங்கரமானது. ஆகவே நான் இங்கிருந்து போவதே நலமென்று நினைக்கிறேன். இதோ போய்விடுகிறேன்'' என்று கூறி அங்கிருந்து போய்விடுகிறான்.

தம் ஆணையை மீறியதை ஸ்ரீராமர் பொறுப்பார் என்று லக்ஷ்மணன் எதிர்பார்க்கவில்லை. அவரது மன்னிப்பை அவன் வேண்டவுமில்லை. லக்ஷ்மணனுக்காக வேண்டுகிற நாம் என்ன சொல்வோம்? ''பாவம்! அவன் என்ன செய்வான்? உமது ஆணையைத் தன்னால் இயன்ற மட்டும் அவன் நிறைவேற்றத்தான் முயன்றான். ஆனால் அந்த அம்மணி பிராணனை விடுவதாகப் பயமுறுத்தித் துரத்தியடித்தால் அவன் அப்புறம் அங்கே நிற்க முடியுமா?'' என்று பரிந்து பேசுவோம் அல்லவா? ஆனால் ராமர் ஒன்றும் பேசாமலே அவனைக் கண்டிக்கிறார். ரோஷமுள்ள ஒரு மனிதனுக்கு இதைவிட வேறு என்ன வேண்டும்? ''அவள் கடைசியில் ஓர் பெண்; என்னையே தன் உயிராக நினைத்திருப்பவள். நான் இல்லையென்றால் என்ன செய்வாள்? எனக்கு ஏதோ அபாயம் நேர்ந்துவிட்டது என்று எண்ணிவிட்டாள். அந்த நிலையில் அவள் ஏதோ தோன்றியபடி பேசுவாள் என்று நீ எதிர்பார்க்க வேண்டியது தான். அவள் என்ன பேசினாலும், என்ன பயமுறுத்தினாலும், நீ அறிவு கலங்கிப்போய் அவளைத் தனியே விட்டு வந்திருக்கக்கூடாது. இருந்து அவளைப் பாதுகாத்திருக்க வேண்டும்'' என்கிறார் ராமர். சீதையாகவோ ராமனாகவோ அல்லது லக்ஷ்மணனாகவோ நம்மை நினைத்துப் பார்க்க வேண்டும். அந்த மூவரையுமே கவி மிகவும் சங்கடமான நிலையில் வைத்திருக்கிறார். அது அவர்களது பொறுமையின் எல்லையைத் தாண்டிவிட்டது.

नाकरोः शासनं मम । III. 59. 24.

"என் ஆணைப்படி நடக்கத் தவறிவிட்டாய். உன் செயலை நான் ஒப்புக்கொள்ளவில்லை. என் விருப்பத்துக்கு மாறான காரியத்தை அல்லவா செய்துவிட்டாய்'' என்கிறார் ராமர். பாவம்! அந்த ஸ்திதியில் எது நல்லதோ அதைத்தான் அவன் செய்தான். அதற்கு அவனுக்கு இத்தகைய கைம்மாறு கிடைத்தது. ராமரைப் போல அவ்வளவு கண்டிப்புள்ள இயல்பு அற்றவராக ஒருவர் இருந்தால், "ஆம், லக்ஷ்மணா! அத்தகைய சங்கடமான நிலையில் நீ வேறு என்ன செய்வாய்? நானும் அப்படித்தான் செய்திருப்பேன்'' என்று கூறியிருப்பார். அவ்வாறு பேசக்கூடிய உதார மனம் ராமருக்கு இல்லாமலிருக்குமா? ஆனால் ராமர் தர்மமே உருவெடுத்து வந்தாற் போன்றவர். அவருக்குக் கடமையே பெரிது. ஒரு யுத்தவீரன் தான் இருக்க வேண்டிய இடத்தை விட்டுச் சிறிதும் அசையக் கூடாதல்லவா? அந்த இடத்தைக் கைவிட்டு நகர்ந்தால் அவன் மரண தண்டனைக்குத்தான் உள்ளாவான்.

மற்றொரு சமயம், லக்ஷ்மணனுக்கு மேற்கூறியதைவிடப் பின்னும் அதிக மோசமான சோதனை ஏற்படுகிறது. உத்தர காண்டத்தில், காலதேவன் ராமரை மீண்டும் வைகுண்டத்துக்கு அழைத்துச் செல்வதற்காக வருகிறான். காலதேவனும் ராமரும் ஓர் அறையில் அந்தரங்கமாகப் பேசிக்கொண்டிருக்கிறார்கள். ரிஷிவேஷத்தில் வந்திருக்கும் காலன் ராமரிடம், "உங்கள் நம்பிக்கைக்கு மிகவும் பாத்திரமாயுள்ள ஒருவனை வாசலில் காவல் இருக்கச் செய்யுங்கள். நாம் பேசிக்கொண்டிருப்பதை ஒருவரும் பார்க்கவோ கேட்கவோ கூடாது. நாம் பேசுவது நம் இருவருக்கு மட்டுமே தெரிய வேண்டும். யாராவது திடீரென்று உள்ளே வந்து நம் பேச்சைக் கேட்டுவிடுவார்களோ என்று எனக்குப் பயமாக இருக்கிறது'' என்கிறான். உடனே ஸ்ரீராமர் லக்ஷ்மணனிடம், "வாசலிலுள்ள காவற்காரனை அனுப்பிவிட்டு நீ அங்கே காத்துக்கொண்டிரு. இந்த ரிஷி கூறியதைக் கேட்டாயா? யார் உள்ளே வந்தாலும் உடனே மரணதண்டனைதான்!'' என்று கூற, அப்படியே லக்ஷ்மணன் தான் வாசலில் போய், ஒருவரும் வராத வண்ணம் காத்துக்கொண்டு நிற்கிறான். உள்ளே பேச்சு முடியும் தறுவாயில் இருக்கிறது. ஆனால் விதியின் வலிமையை யார் வெல்ல முடியும்?

ஒரு நிமிஷம் பொறுத்திருந்தால் எல்லாம் சௌகரியமாக முடிந்திருக்கும். ஆனால் காலசக்கரம் விபரீதமாகச் சுழலுகிறது. காலனும் ராமரும் பேசிக்கொண்டிருந்தபொழுது மகா முன்கோபியான துர்வாஸ மகரிஷி அங்கே வந்து சேர வேண்டுமா? அவர் எப்பொழுதும் பசியோடு இருப்பவர். "உள்ளே போய்ச் சாப்பிட வேண்டும்'' என்கிறார். அவருக்கு மட்டும் என்ன? இன்னும் இருபது பேருக்கு வேண்டுமானாலும் உணவு

வரவழைத்து அளிப்பான் லக்ஷ்மணன். ஆனால் துர்வாஸரோ, "முடியாது; நான் இந்த க்ஷணம் ராமரைப் பார்க்க வேண்டும். இல்லாவிட்டால் உன்னை மட்டும் அல்ல, அயோத்தியிலுள்ள அனைவரையுமே சபித்துவிடுவேன்" என்று கோபத்துடன் கூறுகிறார். லக்ஷ்மணன் என்ன செய்வான்? அந்த இடத்தை விட்டு நகர்ந்தால் மரணதண்டனை கிட்டும். துர்வாஸரோ ராமர் லக்ஷ்மணன் உட்பட எல்லோரையும் பஸ்மமாக்கிவிடுவதாகப் பயமுறுத்துகிறார். அவர் அப்படியே செய்தும் விடுவார். இப்படிப் பட்ட இக்கட்டான நிலையில் எல்லோரும் என்ன செய்வார்கள்? ராமரே தாம் ஆகட்டும், என்ன செய்வார்? எப்படிப்பட்ட பேராபத்து, பாருங்கள்! 'சரி, நாம் உள்ளே போவோம். எல்லோரும் சாவதைக்காட்டிலும் ஒருவர் உயிரிழப்பது மேல் அன்றோ?' என்று கருதுகிறான் லக்ஷ்மணன்.

एकस्य मरणं मेऽस्तु माभूत् सर्वविनाशनम् ॥ VII. 105. 9.

ராமரது ஆணையை மீறி லக்ஷ்மணன் உள்ளே பிரவேசிக்கிறான். உள்ளே இருப்பவர் யார் என்றும், அவர்கள் கடைசியாகப் பேசியதும் அவன் காதில் விழுந்திருக்கலாம். துர்வாஸரின் கோபத்தைத் தணித்து அனுப்பிய பிறகு ராமர் லக்ஷ்மணனைப் பார்க்கிறார். "அண்ணா, நீங்கள் என்ன செய்யச் சொல்லுகிறீர்கள் என்று எனக்குத் தெரியும். நான் தயாராக இருக்கிறேன். என்னைக் கொன்று விடுங்கள். என் உயிர் தங்கள் கையில் இருக்கிறது" என்று லக்ஷ்மணன் கூறும்பொழுது, வஸிஷ்டர் உள்ளே பிரவேசித்து, "இது விதியின் சூழ்ச்சி. ஆணையை மீறினால் மரணதண்டனை என்று கூறிய படி செய்ய வேண்டியதுதான். இம்மாதிரியான சந்தர்ப்பங்களில் நாடுகடத்துவது மரணதண்டனைக்குச் சமமாகும்" என்று கூறித் தண்டனையை மாற்றுகிறார். கதை இவ்வாறு முடிகிறது.

ஆகவே, விதி எவ்வளவு வலிமை பொருந்தியது என்பதை இதிலிருந்து நாம் அறிந்துகொள்ளுகிறோம். மிகவும் சங்கடமான நிலைமைகளை விதிதான் ஏற்படுத்துகிறது. மனிதனது சக்தியைக் காட்டிலும் மிகவும் மேம்பட்டதான ஒரு பெரும் சக்திக்கு உட்பட்டவர்களாக அனைவரும் இருக்கிறோம். ஸ்ரீராமர் சிறியவரா? லக்ஷ்மணன் சிறியவனா? நாம் எவ்வளவு மனச்சாட்சியுள்ளவர்களாக இருப்பினும், நம் கடமையை எவ்வளவு நன்கு உணர்ந்தவர்களாக இருப்பினும், எவ்வளவு சரியாய் நடப்பவர்களாக இருந்தாலும் விதியானது அனைத்துக்கும் மேல் வலிமை பொருந்தியதாக யாவற்றையும் பயனற்றதாக்கிவிடுவதைப் பாருங்கள். இட்ட ஆணையை ஒருபோதும் மீறாதவன் விதியின் பிடியில் அகப்பட்டு அந்த ஆணையை மீறுவான். எவ்வளவு திடசங்கல்பம் இருந்தும் நிறைவேற்ற வேண்டிய சமயத்தில் பெரிதும் யோசிக்கத் தொடங்கு

வான். அத்தகைய நிலைமை அனைவருக்குமே ஏற்பட்டுவிடாது. நமக்கு அவ்வளவு உயர்ந்த லக்ஷியங்கள் இல்லை. ஆகவே அப்படிப் பட்ட சோதனைகள் நமக்கு நேருவதில்லை. நாம் எப்படி நடக்க வேண்டும் என்பதைத் தங்கள் வாழ்க்கையில் நடந்து காட்டு வதற்கென்றே பிறந்தவர்கள் இந்த மகாபுருஷர்கள். ஒரு கடமை யைச் செய்தால் மற்றொரு கடமையில் தவறியவர்களாகும்படி பெரும் சங்கடமான நிலையை விதி அவர்களுக்கு ஏற்படுத்துகிறது. 'எப்படிச் செய்தாலும் தவறு' என்ற தர்மசங்கடத்தில் அகப் பட்டுக்கொண்டு தாமே தீர்மானித்துச் செய்ய வேண்டிய தாகிறது. தர்மத்தையே பின்பற்றி நடந்தாலும், செய்த பிழையின் பலனை அனுபவித்துத்தான் ஆகவேண்டும் என்ற உண்மையை இங்கே கவி நமக்கு எடுத்துக்காட்டுகிறார்.

## 5

### தர்மமே வடிவானவர்—ஸ்ரீராமர்

லக்ஷ்மணன் மிகவும் எளிய குணம் படைத்தவன் என்று மேற் கண்ட பிரசங்கங்களில் விவரித்தேன். அவனது இயல்பைப் புரிந்து கொள்ள நமக்குச் சிரமமே இல்லை. எல்லோருக்கும் அது பழக்க மானதே! ஸ்ரீராமர் அப்படி இல்லை. அவரது குணத்தை எடுத்துக் கூறுவது அவ்வளவு சுலபமல்ல. ஒன்றுக்கு ஒன்று சிறிதும் பொருந் தாத குணங்கள் அவரிடம் காணப்படுகின்றன. அவருடைய செயல்கள் சில, மிகுந்த விவாதத்திற்கு உரியனவாக இருக்கின்றன. ராமபக்தியுள்ளவர்கள்கூட அவரிடம் சில குறைகளைக் காணக் கற்றுக்கொள்கின்றனர். சரித்திரங்களிலும் கதைகளிலும் பாத்தி ரங்கள் எப்படிச் சித்திரிக்கப்படுகின்றன என்பதைக் கொஞ்சம் கூறுகிறேன். மனித இயல்பை ஆராய்ந்து அப்படியே வாசகர்களுக்கு எடுத்துக்காட்டுவதையே முக்கியப் பணியாகக் கொண்டுள்ள கதாசிரியர்கள் இருக்கிறார்கள். எழுத்திலேயே முழுக் கவனத் தையும் செலுத்தும் ஆசிரியர்களும் இருக்கிறார்கள். இவர்கள் ஒரே விதமான சாமர்த்தியமுள்ளவர்கள் அல்ல. கதாபாத்தி ரங்களைச் சித்திரிக்கும்பொழுது சிலர் பக்ஷபாதமில்லாமல் இருப்ப தில்லை. ஆசிரியர்கள் நினைத்தபடி கதாபாத்திரங்கள் அமைய வில்லை என்று படிக்கும்பொழுது நாம் அபிப்பிராயம் கூறுகிறோம். சில ஆசிரியர்கள் தாங்கள் கூடவே இருந்தது போல் பாத்திரங்களை அமைக்கிறார்கள். அவர்களைப்பற்றியே அல்லும் பகலும் சிந்தித்து, தங்கள் மனத்தில் உருவானபடியே எழுத்திலும் சித்திரிக்கும் ஆற்ற லுள்ளவர்களாக இருக்கிறார்கள். இவர்கள்தாம் உலகப் பேராசிரி யர்களாக விளங்குகிறார்கள்; தங்கள் உள்ளத்தில் உருவாக்கிய கதாநாயகர்களையும் கதாநாயகிகளையும் அப்படியே சொல்லிலும் செயலிலும் அமையும்படியாகச் சிருஷ்டித்துவிடக்கூடியவர்கள். ஸ்ரீராமனையோ அவருடைய வரலாற்றையோ வால்மீகி சிருஷ்டித் தார் என்று இல்லாதிருக்கலாம். தம் உள்ளத்தில் அவரைப்பற்றித் தோன்றிய கற்பனையின்படி அவரை நமக்குத் தந்திருக்கிறார். ராமர், சீதை இவர்களுடைய குணங்களை விளக்கும்படியான சம்பவங்களையும் 'கதைகளையுங்கூட அவர் கற்பனை செய்திருப்பார் என்றும் சொல்லுவதற்கில்லை.

ராமாயணத்தைச் சாதாரண மனிதர்களுடைய கதையாகவே நான் வைத்துப் பார்க்கிறேன். ஆனால் வால்மீகி ராமர் காலத்திலேயே இருந்தவர் என்றும், ராமரின் ஜீவியகாலத்திலேயே ராமாயணத்தை இயற்றியதாகவும் கூறுவர். அது உண்மையோ இல்லையோ, ராமாயணக் கதையும் ஸ்ரீராமருடைய குணசித்திரமும் வால்மீகியின் முழுக் கற்பனை அல்ல என்பது மட்டும் நிச்சயம். கதையின் கோவை வால்மீகியின் சொந்தப் பொருளாக இருக்கலாம். ராமர், சீதை, இன்னும் மற்றுமுள்ளவர்களைப் பற்றி வர்ணிக்கும்பொழுது எழும் சிறந்த உணர்ச்சிகளுக்கும் வால்மீகியின் திறமையே காரணமாகலாம். அவர் கையாண்டிருக்கும் உயர்ந்த நடை உவமான அலங்காரங்கள் எல்லாம் அவருக்கே சொந்தம் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. இவ்வளவு தூரம் அநுமானித்த பிறகு ஸ்ரீராமருடைய குணத்தை அங்கங்கே தாம் கேட்டபடியே வால்மீகி வர்ணித்திருக்கிறார் என்றே நாம் ஒப்புக் கொள்ளலாம்.

அடுத்தபடியாக மற்றொரு விஷயத்தைப் பார்ப்போம். ஸ்ரீராமரைப் பற்றிய வரலாற்றிலிருந்தும் கதைகளிலிருந்தும் சிலவற்றை மட்டும் தேர்ந்து வால்மீகி தாம் இயற்றிய கதையில் சேர்த்துக்கொண்டாரா? அல்லது சில சம்பவங்கள் தம் காலத்திலேயே நடந்து அனைவருக்கும் தெரிந்தவையாக இருந்ததனால் அவை தம் கற்பனைக்கு ஒத்துவராமலிருந்தும் அவற்றை விலக்க முடியாமல் சேர்த்துக்கொள்ளும்படி ஆயிற்று? இதைப்பற்றி நாம் ஊகம்தான் செய்ய முடியுமேயன்றி நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. ராமருடைய குணத்தை ஆராய்ந்து பார்க்கும்பொழுது ஒன்றுடனொன்று சேராத சில குணங்கள் காண்கின்றன. இதிலிருந்து பார்த்தால், கவி ராமருடைய குணத்தைச் சித்திரிக்கும் பொழுது தம் விருப்பப்படி சம்பவங்களைத் தேர்ந்துகொள்ளவில்லை என்று தெரிகிறது. இதை நானாகத்தான் ஊகித்துச் சொல்லுகிறேன். ராமருடைய குணத்துக்கு ஏதாயினும் பொருத்தமில்லாத சம்பவமாகத் தோன்றினால் அதை வால்மீகி விரும்பிச் சேர்க்கவில்லை; நடந்த சம்பவம் என்ற நம்பிக்கையினால் அதை விலக்க முடியாமல் சேர்த்துக்கொள்ளும்படியாயிற்று என்றே முடிவு கொள்ள வேண்டும். கதையில் இரண்டோர் இடங்கள் அப்படி வரலாம். ஆனால் அந்தச் சந்தர்ப்பங்களில் நீங்களும் என்னைப் போலவே நினைத்தாலும் சரிதான்.

நம்மைப் போலவே ராமர் ஓர் உயிருள்ள மனிதராக இதே உணர்ச்சிகளுடன் வாழ்ந்திருந்தார் என்றால் எப்பொழுதும் ஒரே விதமான நிலையில் அவர் இருந்திருக்க முடியாது. சாதாரணமாக நம் எண்ணப்படி அவர் நடத்தை, பேச்சு எல்லாம் அந்த அந்தச் சமயத்திற்கு ஏற்றவாறு இருப்பதாகவே நாம் தீர்மானித்துக்

கொள்ளலாம். நம்மில் மிகவும் உயர்ந்தவராயினும் சரி, மிகத் தாழ்ந்தவராயினும் சரி, ஆணாயினும் பெண்ணாயினும் அல்லது மேல்நாட்டவராயினும் கீழ்நாட்டவராயினும் எவராக இருப்பினும் சரி, மானிடராகப் பிறந்த யாரும் எண்ணத்திலும் பேச்சிலும் செயலிலும் என்றும் ஒரே விதமாக இருப்பது சாத்தியமில்லை என்பது எல்லோரும் அறிந்ததே.

மனம் நல்ல நிலையில் இருந்தால் உயர்ந்து விளங்குகிறோம். கடமையுணர்ச்சியுடன் மனத்தளர்ச்சிக்கு ஆளாகாமல் எல்லோருடனும் பழகிச் செயலிலும் எண்ணங்களிலும் சிறந்து விளங்கக் கூடியவர்களாவோம். அந்தோ! ஆனால் அத்தகைய சமயங்கள் எப்பொழுதும் நேருமா? எப்பொழுதாவது அபூர்வமாகத்தான் உயர்நிலையில் நிற்கும்படியான சமயங்கள் ஒன்றுசேர்ந்து நமக்கு வாய்க்கின்றன. அடிக்கடி யாராவது மட்டமானவர்களைப் பின்பற்றிக் கீழ்த்தரமான உணர்ச்சிகள் நம்மைக் கட்டிக் கீழே இழுத்துவிடுகின்றன. பல விதமான சபலங்கள் நம்மை ஆட்கொள்கின்றன. நல்ல முறையில் நல்ல பழக்கங்களுடன் வெகு ஜாக்கிரதையாக வளர்ந்தவர்களாக இருந்தாலும் நாம் உயர்ந்து விளங்க வேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டால், அதற்கு ஏற்றவாறு சூழ்நிலையும் உயர்ந்ததாக இருக்க வேண்டியதாகிறது. மேலிருந்து எப்பொழுதும் நாம் கீழிறங்கிவிடுகிறோம். எவ்வளவோ தவறான காரியங்களைச் செய்துவிடுகிறோம். வேறு சந்தர்ப்பமாக இருந்தால் நாமே செய்ய யோசிக்கும் காரியங்களைக்கூட யோசிக்காமல் சில சமயம் செய்கிறோம். பிறர் கண்டுபிடிக்கமாட்டார்கள் என்ற நம்பிக்கையுடன், நன்றாய்த் தெரிந்துகொண்டே, ஒரு குற்றத்தைச் செய்வோம். அப்படியே கண்டுபிடித்தாலும் போனாற் போகிறதென்று நம்மை மன்னித்துவிடுவார்கள் என்ற நம்பிக்கை வேறு நமக்கு.

இந்த விஷயத்தில்தான் ஒப்புயர்வில்லாத பெருங்குணம் படைத்தவராக விளங்குகிறார் ஸ்ரீராமர். அவர் பெரும்பாலும் தமது உயர்ந்த நிலையிலேயே நிற்கும் சக்தியுடையவராக இருக்கிறார். அந்த நிலையை விட்டு அவர் கீழிறங்கினார் என்பது மிகவும் அபூர்வம். எப்பொழுதாவது அப்படி நேர்ந்தால் அது எவ்வாறு நேர்ந்தது என்பதை நாம் எளிதில் கண்டுபிடித்துவிடலாம். தெரிந்து சில சமயம் அவர் தம் நிலையை விட்டு மாறலாம். முழுக்க முழுக்க அது மன்னிப்புக்கு உரியதாகவும் இருக்கலாம். நமது குறுகிய பார்வைக்குச் சில சமயம் காரணம் விளங்காமலிருக்கக்கூடும். ஆயினும் ஸ்ரீராமரே தவறு என்று நினைக்கும்படியான செயலையோ சொல்லையோ எப்பொழுதாவது அவரிடம் நாம் காண்கிறோம் அல்லவா? இதில் பெரிய அபசாரம் ஒன்றுமில்லை. 'அவர் ஏன் அப்படிச் செய்தார்? எதனால் அப்படிச் செய்யும்படி ஆயிற்று?

அது அவரிடமுள்ள குணக் குறைவா?' என்றெல்லாம் கண்டு பிடித்துக் கூறுவது எளிதல்ல. ஆனால் நான் அதையெல்லாம் இங்கு அடுக்கிக்கொண்டு போகப்போவதில்லை. ஒன்று மட்டும் தீர்மான மாகக் கூறுகிறேன்: ராமருடைய மிகப் பெருங்குணத்தை அவை சிறிதும் குறைக்கவில்லை. எப்பொழுதாவது ஒரு சமயம் ராமர் சாதாரண மனிதர் போல நடந்துகொண்டார் என்றால் அதற்காக அவர் எல்லோரையும் போலச் சாதாரண மனிதரே என்று நினைக்க முடியுமா? அப்படி நினைப்பவன் மனித இயல்பே அறியாதவனாகவும் தன்னைச் சுற்றிலும் நடப்பவைகளைக் காணவும் கேட்கவும் இயலாத குருடனாகவும் செவிடனாகவும் இருக்க வேண்டும். மனிதர் என்று நினைத்துப் பார்த்தால் ராமர் அநேகமாகக் குற்றங்குறையே இல்லாதவர் என்றே கூற விரும்புகிறேன். 'அநேகமாக' என்று ஏன் கூறுகிறேன் என்பதை ராமாயணத்திலுள்ள சில சம்பவங்களைச் சொல்லி விளக்க முயலுகிறேன்.

ஆயினும், முதலில் ராமரை நாம் எவ்வாறெல்லாம் போற்றி வருகிறோம் என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். ஒரு சாதாரண மனிதன், அரசன், கணவன், உற்ற நண்பன் ஆகியவர் எல்லாரும் இருக்க வேண்டிய நிலையில் ராமர் நிகரற்று விளங்குகிறார். சீதை கூறிய கணக்கின்படி இருபத்தைந்து அல்லது இருபத்தாறும் வயதிலேயே, பிறருக்கு வாரி வழங்குவதற்கு அரச பதவியோ அந்தஸ்தோ செல்வமோ ஏதும் இல்லாதிருந்த பொழுதும், அவர் இணையற்ற பேரும் புகழும் பெற்றவராக வாழ்ந்திருக்கிறார். அவருடன் பழகிய அனைவரும்—அவர்கள் வயதில் சிறியவர்களாகவோ பெரியவர்களாகவோ இருந்தாலும் சரி—அரசர்களோ சாதாரண மனிதர்களோ பெரிய யுத்தவீரர்களோ முனிவர்களோ அல்லது பேரறிஞர்களோ யாராயினும் சரி—அவருக்குப் பக்தியுடன் வணக்கம் செலுத்துகிறவர்களாகவே இருந்தார்கள். அவருடைய சொந்தச் சகோதரர்களும், நற்குணங்களில் அவர் தங்களுக்கு எவ்வளவோ மேம்பட்டவர் என்பதை உணர்ந்து அவரடி பணிந்தவர்கள். அயோத்தியில் இருந்தபொழுது பெரும்பாலும் தமக்குச் சமமானவர்களோடு பழகும்படியான நிலைமை ராமருக்கு இருந்தது. பிறகு அவர் வனத்துக்குச் சென்றபொழுது சீதையும் லக்ஷ்மணனும் மட்டுமே அவருக்குத் துணையாக இருந்தனர். கிஷ்கிந்தையிலும் அவரை மிகவும் மேலாக மதித்துப் போற்றிய சில சாதாரண மக்கள் இருந்தனர். கடைசியாக யுத்தம் நிகழ்ந்தபொழுது, அவர் பெருஞ்சேனையை அணிவகுத்து நடத்தி அற்புதமான வீரச் செயல்களைப் புரிந்தார். இந்தச் சமயங்களிலெல்லாம் அவருடன் தொடர்பு கொண்டவர் யாரும் அவருடன் தம்மை ஒப்பிட்டுப் பார்க்கலாம் என்ற எண்ணம் கொள்ளவில்லை. அவருக்கு அவரே நிகர் என்ற நிலையிலேயே அவரை ஏற்றிவைத்

தார்கள். இதற்கு முக்கிய அத்தாட்சியாக யுத்தகாண்டத்தின் முடிவில் நிகழும் சம்பவத்தை எடுத்துக்கொள்ளலாம்.

ராவணவதம் முடிந்த பிறகு, எவளுக்காக ராமர் பிறர் செய்ய முடியாத தியாகங்களையெல்லாம் செய்தாரோ, எவளைத் தம் உயிருக்கும் மேலாக நேசித்து அவள் பிரிவாற்றுமையினுல் தம் உயிரையே இழக்க விரும்பினுரோ, அவளைத் தம் முன் அழைத்து வரச்செய்து, அவள் மட்டுமல்ல, லக்ஷ்மணன் விபீஷணன் இன்னும் மற்றுமுள்ள அரக்கர்களும் வானரர்களும் அனைவருமே கேட்டுப் பதற்றமடையுமாறு அல்லவா பேசினுர்! சுற்றிலும் இருந்தவர்கள் கேட்டுக்கொண்டு நிற்க, தனியே யோசனையில் ஆழ்ந்தவண்ணம் இரக்கமற்ற மிகக் கடுமையான மொழிகளைப் பேசினுர். எல்லோரும் மௌனமாக அவற்றைக் கேட்டுக்கொண்டு நின்றனர். ராமர் என்ன பெரிய சக்கரவர்த்தியா அப்பொழுது? பெரிய மகரிஷியுமல்ல. அப்படி இருக்க, ஏன் ஒருவரும் அவரை எதிர்த்து ஒரு வார்த்தையேனும் கூறவில்லை? ஒருவராவது அவர் பேசியதை ஆமோதிக்கவில்லை என்று தெரிகிறது. அவரது நடத்தைக்குக் காரணம் கூற முடியாமல் இருப்பதாகத்தான் ஒவ்வொருவரும் நினைத்தார்கள். ஆயினும் அதைத் தடுத்து ஒருவரும் பேசவில்லை. யாரும் கைதூக்கி அதை ஆக்ஷேபிக்கவில்லை. அவரை அணுகிய அனைவரும் அவருடைய ஆதிக்கத்துக்கு உட்பட்டவர்களாகவே ஆனுர்கள். அவர் விதித்ததை அப்படியே வாய் திறவாமல் ஏற்று நடக்க வேண்டியதாயிற்று. அவர் கட்டளைப்படி நடக்க விருப்பமில்லையாயினும் அது தங்கள் விதிப்பயன் என்றே அனைவரும் கருதும்படி ஆயிற்று. அவரது உத்தரவுக்கு அனைவரும் கீழ்ப்படிந்துதான் ஆகவேண்டும். அதை எதிர்க்க யாருக்கும் துணிவில்லை. இம்மாதிரி ஒரு மனிதன் இருந்தால் அவன் எவ்வளவு மேம்பட்டவனுக இருக்க வேண்டும்! தர்மத்தை ரக்ஷிப்பவராகவும், தர்மமே உருவெடுத்தவராகவும் ராமர் இருந்திராமற்போனுல் மேற்கூறியபடி அத்தகைய உத்தம புருஷராக இருந்திருக்க முடியுமா? மிகவும் சிரமமான சமயங்களிலெல்லாம் சுற்றிலும் இருந்தவர்கள் லோகத்திற்கேற்ற சாதாரண யோசனைகளைக் கூறிச் சாதாரண மனிதராக அவரைக் கீழிறங்கும்படிச் செய்தபொழுதும் அவர் உயர்ந்த நன்னெறியைப் பின்பற்றும் வழிகளையே அநுசரித்தது எல்லோரையும் எத்தகைய வியப்பில் ஆழ்த்துகிறது!

ராஜ்யத்தைத் துறந்து சென்றது இருக்கட்டும். யுத்த காண்டத்தில் வரும் சில சம்பவங்களைப் பார்ப்போம். விபீஷணன் அவரைச் சரணமாக அடைந்த சம்பவத்தை எடுத்துக் கொள்வோம். மந்திராலோசனையில் நிபுணர்களாக உள்ளவர்களைக் கூட்டி யோசிக்கையில், அனுமார் ஒருவரைத் தவிர லக்ஷ்மணன் உட்பட மற்றவர்கள் அனைவரும் விபீஷணனை நிராகரிக்கும்

யோசனையையே கூறினர்கள். இரண்டொருவர் அவனைக் கொன்று விடும் யோசனையைக்கூடக் கூறினர். ஆகவே அவர்களின் யோசனையையெல்லாம் புறக்கணித்து, மிகவும் உன்னதமான நிலையிலிருந்து அவர் கூறியதென்ன? "என்னைச் சரணம் என்று அடைந்தவனைக் கைவிடேன். அவன் எவ்வளவு தகுதியற்றவனு யினும் கொடியவனுயினும் சரி, என் பரமவைரியான ராவணனுகவே இருந்தாலும் சரி, என்னைத் தேடி வந்து சரணம் என்று அடைந்தால் நான் அவனை ஒருபோதும் புறக்கணிக்கமாட்டேன்'' என்கிறார். இத்தகைய உயர்ந்த வார்த்தையைக் கூறி அதன்படி சற்றும் ஐயமில்லாமல் நடக்க வேண்டும் என்ருல் அவருடைய ஆத்மசக்தி எப்படிப்பட்டதாக இருக்க வேண்டும்! நாம் சிறிது யோசித்துப் பார்க்க வேண்டும்.

ராவணனுடன் போர் புரிந்தபொழுதும் ராமருடைய இந்த உயர்ந்த குணம் புலனுகிறது. ராவணனுடைய ரதத்தின் சக்கரம் முறிந்து, அவன் கையிலிருந்த வில்லும் ஒடிந்து, அவன் கீழிறங்கி நின்றபொழுது, எவனைப் போர்க்களத்தில் கொன்று வீழ்த்த வேண்டுமென்று அத்தகைய முயற்சி செய்தாரோ அந்த ஜன்மப் பகைவன் பலம் குன்றி நின்றபொழுது, அந்தச் சமயத்தைப் பயன்படுத்திக்கொள்ளாமல் அவனை நோக்கி, "ராவணு! நீ இப் பொழுது பலமற்ற நிலையில் இருக்கிருய். உன் போர்த் திறமையை இன்று கண்டேன். எவ்வளவோ பேர்களைக் கொன்று வீழ்த்தி விட்டாய். இப்பொழுது களைத்துச் சோர்ந்து போய் என்னைப் போல் ரதமின்றித் தரையில் நிற்கிருய். கையில் இருந்த வில் முறிந்து போய்விட்டது. உனக்கு அவகாசம் கொடுக்கிறேன். திரும்பிப் போய் நாளை புதிய வில்லும் அம்பும் தாங்கியவனுக ரதத்தில் ஏறிக்கொண்டு வா. அப்புறம் நான் எப்படிப் போர் புரிகிறேன் என்று பார்'' என்று கூறுகிருர். இப்படி யார் சொல்லுவார்கள்? எந்த யுத்தவீரன் இப்படிச் செய்வான்?

ராவணவதம் முடிந்த பிறகு விபீஷணன் கண்களில் நீர் ததும்ப ராமரிடம் வந்து, "அவன் என் தமையன். அவன் எனக்கு எவ்வளவோ செய்திருக்கிருன். உண்மையே! ஆயினும் அவன் கொடியவன். எவ்வளவோ பெண்களைக் கெடுத்திருக்கிருன். தர்மத்தை மதிக்கவில்லை. அதர்ம வழியில் யுத்தங்கள் புரிந்திருக் கிருன். அவனுக்கு உத்தரக்கிரியைகள் நான் செய்வதாக இல்லை. அது முறையல்ல'' என்கிருன். சாதாரண மனிதனுக இருந்தால், "ஆம், அவனது உடலைத் தூக்கிக் கடலில் எறிந்துவிடு'' என்று சொல்லியிருப்பான். ஆனல் ஸ்ரீராமர் அவ்வாறு கூறுவாரா? உத்தரக்கிரியைகளைச் செய்ய மறுத்த விபீஷணனை நோக்கி, "இல்லை; நீ சொல்லுவது சரியல்ல, விபீஷணு! ராவணன் அற்ப மனிதனு? பெரிய போர்வீரன் அல்லவா? ராஜ்யத்தை ஆண்ட

பெரிய மன்னன். போரில் வீரமரணத்தைப் பெற்றிருக்கிறன். விதிப்படி அவனுக்கு எல்லாம் நீ செய்ய வேண்டும்'' என்கிருர்.

இவ்விதம் ஒரு மனிதன் நம் கற்பனைக்கெல்லாம் எட்டாத ஓர் உன்னத நிலையில் சிறந்து விளங்கும்பொழுது அவனது ஒரு சிறு விருப்பத்தையும் தெய்வ ஆஞ்ஞையாக உலகம் மதித்துப் போற்றியதில் வியப்பென்ன? ஆயினும் மனித இயல்பு எல்லோருக்கும் பொதுவானது. அதைப்பற்றி நாம் சந்தோஷப்பட வேண்டும். ஸ்ரீராமருடைய மேன்மையை எண்ணும்பொழுது நமக்கு எவ்வளவு பெருமை தோன்றுகிறது! கஷ்டம் வந்தபொழுது அவரும் வாடினர், கலங்கினர்; சில சமயம் பெரிதும் வருந்தித் தவித்தார். வாய்விட்டுப் புலம்பினதாகவே கவி கூறுகிருர். கோபமும் ஆத்திரமும் கொண்ட நிலை ஒரு சமயம். ஒரு வழியும் காணுமல் மனம் இடிந்துபோன நிலை ஒரு சமயம். உயிரையே விட்டுவிட முயன்ற சமயமும் உண்டு. நம்மைப் போலவே, எல்லோரையும் சந்தேகித்தும் பழித்தும் பேசினர். சாதாரண மனிதர்களாகிய நாம் நடப்பது போலவேதான் அவரும் நடந்திருக்கிருர். ஆனல் இதனுலெல்லாம் தம்முடைய உயர்ந்த நிலையிலிருந்து அவர் கீழே இறங்கிவிட்டதாக நாம் நினைத்துவிடலாகாது. அவரைப்பற்றி இம்மாதிரியெல்லாம் நினைத்துப் பார்க்கும்பொழுது நாம்தாம் அவரது நிலைக்குச் சற்று உயருகிறேம். நம்மைப் போல் சாதாரண மனிதராகக் கோபதாபங்களுடன் சில சமயம் நடக்கும் அவர் இப்படி ஒருவரும் எட்ட முடியாத உன்னத நிலையை அடையக் கூடும் என்ருல் நாமும் சிறிதாவது நம் நிலையை விட்டு உயருவோம் அல்லவா? நம் கோபதாபங்களைக் கொஞ்சமாவது அடக்க முயலுவோம். ஆயினும் ஈயம் தங்கமாக மாறிவிடுமா? மாருது. ஆயினும் அதைச் சுத்தமாகத் துடைத்து வைத்தால், கொஞ்சம் பளபளவென்று இருக்குமல்லவா? நாமும் ராமாயணம் படித்ததன் பயனைப் பெறுவோம். நம் குணத்திலும் நம் வாழ்க்கையிலும் ராமாயணத்தின் தெய்விகமான சக்தி ஒரு நல்ல மாறுதலை உண்டாக்கும். அதன் பயனுக அனைவரும் முன்பு இருந்ததைவிட நல்ல மனிதர்களாக விளங்குவோம்.

ராமாயணத்திலிருந்து, ஸ்ரீராமர் தம் சாதாரண மனித குணங்களை வெளியிடும் சம்பவங்களைத் திரட்டி எடுத்து உங்களுக்குக் காட்டினேன். அவற்றைக் கோவையாகச் சொல்லுவது நல்லது. நான் பேசி முடித்தபிறகு உங்களில் சிலராயினும் ராமாயணத்தை எடுத்துப் பார்த்து நான் எடுத்துக் காட்டிய விஷயங்கள் சரிதாமா அல்லது நீங்கள் தவருகப் புரிந்துகொள்ளும் படிச் செய்தேனு என்று பார்ப்பீர்கள் என்று நம்புகிறேன். முதலில் தசரதருக்கும் கைகேயிக்கும் ராம பட்டாபிஷேகத்தைப்பற்றிய விவாதம் நடந்துகொண்டிருக்கும் சம்பவத்தைப் பார்ப்போம்.

ராஜ்யத்தைத் துறந்து வனம் செல்ல வேண்டிய கொடிய செய்தியைத் தெரிவிக்க ராமரை அழைத்துவரச் சொன்னபொழுது ராமர் சீதையுடன் அவளது அந்தப்புரத்தில் இருந்தார். நம் எல்லோரையும் போல் அவரும் வாழ்க்கையில் தமக்கு ஏற்படப் போகும் பெரிய வைபவத்தைக் குறித்து மகிழ்ச்சியுடன் சொல்லிக் கொண்டிருந்தார். அரசர் அழைத்துவரச் சொன்னார் என்ற பொழுது அவரது மனம் நிம்மதியாகச் சந்தேகமற்று இருந்தது.

देवि देवश्च देवी च समागम्य मदन्तरे ।
मन्त्रयेते ध्रुवं किञ्चिदभिषेचनसंहितम् ॥ II. 16. 15.

"தந்தையும் சிற்றன்னை கைகேயியும் என் பட்டாபிஷேகத்தைக் குறித்து ஏதோ ஏற்பாடுகள் செய்துகொண்டிருக்கிறார்கள் என்று தோன்றுகிறது. எனக்கு ஒரு சிறப்பு உண்டாவதென்றால் அது உன்னையும் சேர்ந்ததுதான் அல்லவா?" என்று சீதையிடம் கூறுகிறார்.

लक्षयित्वा ह्यभिप्रायं प्रियकामा सुदक्षिणा ।
सञ्चोदयति राजानं मदर्थं मदिरेक्षणे ॥ II. 16. 16.

ஸ்ரீராமர் கைகேயிக்கு மிகவும் வேண்டியவர் என்பதை அறிவோம். "என்னிடம் அவள் மிகவும் அன்புள்ளவள். ஆகையால் அரசர் எனக்கு யுவராஜ பட்டாபிஷேகம் செய்வதாக இருக்கிறார் என்று கேட்டதும் சந்தோஷத்தினால் அரசரை மேலும் துரிதப் படுத்துகிறாள் என்று நினைக்கிறேன்."

सा प्रहृष्टा महाराजं हितकामानुवर्तिनी ।
जननी चार्थकामा मे केकयाधिपतेः सुता ॥ II. 16. 17.

"என்னைச் சிம்மாசனத்தில் அரசரின் பக்கத்தில் இருக்கச் செய்வதற்குத்தான் இப்பொழுது அழைத்துவரச் சொல்லுகிறாள்; சந்தேகமில்லை."

हन्त शीघ्रमितो गत्वा द्रक्ष्यामि च महीपतिम् ।
सह त्वं परिवारेण सुखमास्व रमस्व च ॥ II. 16. 20.

"நான் போய் அந்த வைபவத்தை அடைந்திருக்கும்பொழுது நீ இங்கு உன் பரிஜனங்களுடன் மகிழ்ச்சியோடு வீற்றிரு" என்று ராமர் சீதையிடம் கூறுகிறார். ராமர் இத்தகைய சொற்களைக் கூறுவதாகக் கவி சொல்வதிலிருந்து நாம் தெரிந்துகொள்வதென்ன? ராமர் எப்படி அந்தச் சமயத்தில் எல்லோரையும்போல் சாதாரண மனிதராகவே நடந்துகொண்டார் என்பதே! தமக்கு ஒரு பெரிய வைபவம் நடக்கப்போகிறது என்னும்பொழுது, தம் தந்தையைப் பற்றி மட்டும் அல்ல, தம்மிடம் மிகவும் அன்பு காட்டிய தம் சிற்றன்னையைப்பற்றியும் ராமர் பெருமகிழ்ச்சியுடன் பேசுகிறார்.

பட்டாபிஷேகம் இல்லை; அதற்குப் பதில் வனவாசம் என்று தெரிந்ததும், அதைத் தாய் கௌசல்யாதேவியிடம் தெரிவிக்க ராமர் செல்லுகிறார். கௌசல்யை மகனுக்குக் கிட்டிய வைபவத்தை எண்ணிக் களிப்பில் இருக்கிறாள். இந்த இடத்தில் முன்பு கூறியதற்கு முற்றும் மாறாகக் கவி கூறுகிறார். ராஜ்யத்தைத் துறந்து பதினான்கு வருஷம் வனவாசம் செய்ய வேண்டும் என்றபொழுது ராமன் இருந்த நிலையைப்பற்றிக் கவி, "ராமரின் முகத்தில் ஒரு மாறுதலுமில்லை. எப்பொழுதும் போலவே பிரகாசமாக விளங்கியது. ஒரு பேரிடி விழுந்ததே தெரியாமல், மகத்தான ஐசுவரிய சம்பத்தில் இருப்பது போலவே ராமர் காணப்பட்டார். ஏமாற்றமோ துக்கமோ எதையும் சிறிதும் அவர் வெளியிடவில்லை" என்று வர்ணிக்கிறார். ராமர் கௌசல்யையினிடம் போனபொழுது, 'தாரயந் மநஸா து:கம்—வருத்தத்தை மனத்திற்குள்ளேயே அடக்கிக்கொண்டு' சென்றதாக வால்மீகி கூறுகிறார். இதிலிருந்து ராமர் தமக்கு உண்டான துக்கத்தை அடக்கிச் சமாளித்தார் என்று தெரிகிறது. அவருக்குக் கஷ்டம் வருத்தம் என்பது ஒன்றுமே இல்லை என்பதல்ல அர்த்தம். துக்கச் செய்தியைக் கூற வேண்டுமே என்று வருந்தியதாகத் தெரிகிறது.

धारयन् मनसा दुःखमिन्द्रियाणि निगृह्य च ।
प्रविवेशात्मवान् वेश्म मातुरप्रियशंसिवान् ॥ II. 19. 35.

என்னதான் சுக துக்கங்களுக்கு அப்பாற்பட்ட நிலையில் இருந்தாலும் அந்தச் சமயத்தில் அவரும் வருந்தாமலிருக்க முடியவில்லை என்று ஏற்படுகிறது.

சீதையிடம் அவர் செல்லும்பொழுது அது பின்னும் அதிகமாகிறது. நம்மைப் போலவேதான் ராமரும் இத்தகைய சந்தர்ப்பத்தில் நடந்துகொள்ள வேண்டும் போல் நம் மனம் விரும்புகிறது. நாம் கீழே விழுந்து அழவே அழுதிருப்போம். ராமரையும் அது கொஞ்சம் பாதித்திருக்கிறது.

प्रविवेशाथ रामस्तु स्वं वेश्म सुविभूषितम् ।
प्रहृष्टजनसम्पूर्णं ह्रिया किञ्चिदवाङ्मुखः ॥ II. 26. 5.

எல்லோரும் இனி வரப்போகும் வைபவத்தை எண்ணிக் குதூகலமாகக் காட்சியளிக்கிறார்கள். சிறிது துயரம் படர்ந்த முகத்துடன் ராமர் தலைகுனிந்தவண்ணம் உள்ளே பிரவேசிக்கிறார்.

अथ सीता समुत्पत्य वेपमाना च तं पतिम् ।
अपश्यच्छोकसन्तप्तं चिन्ताव्याकुलितेन्द्रियम् ॥ II. 26. 6.

உற்சாகத்துக்குப் பதில் விசனம் தோய்ந்த முகத்தோடு அவரைக் காணச் சீதையின் மனம் பதறுகிறது. இதுவரையிலும்

முகத்திலாவது பேச்சிலாவது தம் உணர்ச்சிகளைச் சிறிதும் வெளியிடாதவர், முற்றும் வேறு விதமாக நினைத்து ஆவலுடன் தம்மை எதிர்பார்த்திருந்த சீதையைக் கண்டார்; உடனே அவருக்குத் துக்கம் தாங்க முடியாமல் ஆகிறது.

तां दृष्ट्वा स हि धर्मात्मा न शशाक मनोगतम् ।
तं शोकं राघवस्सोढुं ततो विवृततां गतः ॥

विवर्णवदनं दृष्ट्वा तं प्रस्विन्नममर्षणम् । II. 26. 7-8.

அவர் முகம் மாறி வெளுத்துக் காண்கிறது.

आह दुःखाभिसन्तप्ता किमिदानीमिदं प्रभो ॥ II. 26. 8.

"ஏன்? என்ன நடந்தது? ஏன் இந்தக் கலவரம் எல்லாம்?" என்று பதறியவண்ணம் கேட்கிறாள் சீதை.

ராமர் லக்ஷ்மணனிடம் பேசுவதையும் பார்ப்போம். லக்ஷ்மணன் ராமரைத் தொடர்ந்து வருவதாகக் கூறுகிறான். அவனை வேண்டாமென்று தடுக்க ராமர் முயலுகிறார். காரணம் என்ன என்று பார்க்கும்பொழுது ஒரு சாதாரண மனிதனுக்குள்ள உணர்ச்சியையே அது காட்டுகிறது.

स्निग्धो धर्मरतो वीरः सततं सत्पथे स्थितः ।
प्रियः प्राणसमो वश्यो भ्राता चापि सखा च मे ॥ II. 31. 10.

"நீ என் உயிருக்கு உயிரானவன், சகோதரன், தோழன், எப்பொழுதும் நன்னெறியிலேயே நிற்பவன்" என்றெல்லாம் லக்ஷ்மணனைப் பார்த்துச் சொல்லுகிறார். தம்முடன் வரவேண்டாம் என்பதற்காகவே அவர் இவ்விதம் பேசுகிறார்.

मयाद्य सह सौमित्रे त्वयि गच्छति तद्वनम् ।
को भरिष्यति कौसल्यां सुमित्रां वा यशस्विनीम् ॥ II. 31. 11.

"நீயும் சீதையும் என்னுடன் வந்துவிட்டால், என் தாய் உன் தாய் ஆகிய இருவரையும் யார் பார்த்துக்கொள்வார்கள்?"

अभिवर्षति कामैर्यः पर्जन्यः पृथिवीमिव ।
स कामपाशपर्यस्तो महातेजा महीपतिः ॥ II. 31. 12.

"பிதாவோ சிற்றன்னை கைகேயியினால் ஆட்கொள்ளப்பட்டவராக இருக்கிறார். தான் கோரியதை அடைந்த கைகேயி சக்களத்திகளுக்கு வேண்டியவளாக இருப்பாளா?"

सा हि राज्यमिदं प्राप्य नृपस्याश्वपतेः सुता ।
दुःखितानां सपत्नीनां न करिष्यति शोभनम् ॥ II. 31. 13.

இப்பொழுது துக்கம் தம்மை மீறியவராக ராமர், ''கைகேயி அவர்களைக் கவனிக்கமாட்டாள். பரதனும் தாயின் விருப்பத்துக்கு விரோதமில்லாமல் நடக்கலாம்'' என்கிறார்.

एवं कुरुष्व सौमित्रे मत्कृते रघुनन्दन ।
अस्माभिर्विप्रहीणाया मातुर्नो न भवेत् सुखम् ॥ II. 31. 17.

"நாம் இருவரும் பார்த்துக்கொள்ளவில்லையென்றால் உன் தாயும் என் தாயும் என்ன செய்வார்கள்?" என்று பேசிய ராமர் பிறகு யாராவது கைகேயியைப்பற்றித் தவறாகப் பேசினால், ''அவளைப் பழித்துப் பேசாதீர்கள்'' என்று கைகேயிக்காகப் பரிந்து பேசுகிறார்! அவளைப்பற்றி அவர் தவறாக நினைக்கலாம். தன் மகனுடைய நலத்திற்காகவன்றித் தனக்காக அவள் ஒன்றும் செய்யவில்லை என்று விட்டுக் கொடுத்தும் விடலாம். அல்லது அவளும் விதியின் பிடியில் அகப்பட்டு அதன்படி நடந்திருக்கலாம் என்று இவ்வாறெல்லாம், அவள் செய்தது தவறு என்று இருந்தபோதிலும், போனால் போகிறது என்று அவர் விட்டுவிடலாம். ஆனால் மற்றவர் யாரும் அவ்விதம் செய்ய முடியாது. ஆகவே லக்ஷ்மணன் எப்பொழுதாவது கைகேயியை நிந்தித்துப் பேசினால், ''இல்லை லக்ஷ்மணா! ஒருகாலும் அவ்வாறு பேசாதே'' என்று அவனைக் கண்டிப்பார். பரதனைப்பற்றி யாராவது அவர் காதில் படும்படி அவதூறாகப் பேசினாலும், அவர் அதைப் பொருட்படுத்தாமல் அவனைப் பெரிதும் புகழ்ந்து பேசுவார். ஆனால் லக்ஷ்மணனுடன் அவர் தனியே பேசும்பொழுது அவருடைய உள்ளுணர்ச்சிகள் சிறிது வெளிப்பட்டு அவரை மிகவும் உணர்ச்சிவசமாக்கிவிடும்.

மற்றொரு விஷயத்தைக் கூறி இன்று இத்துடன் நிறுத்திக் கொள்ளுகிறேன். துன்பம் வரும்பொழுது ராமர் ஒவ்வொரு சமயம் சாதாரண மனிதரைப் போல் நடந்துகொண்டதைப் பார்த்தோம். கைகேயியை அவர் தவறாக நினைத்தார். பரதனிடங்கூடச் சில சமயம் அவர் சந்தேகப்பட்டதுண்டு. இப்பொழுது நான் கூறப்போகும் சம்பவம் அவர் பிறரை வேடிக்கை பண்ணிச் சிறிது களிப்புற்றதை எடுத்துக் கூறுகிறது. திரிஜடர் என்ற ஓர் ஏழைப் பிராம்மணர் குசேலரைப் போல் மனைவியின் வற்புறுத்தலின்பேரில் ராமரிடம் யாசிக்க வந்தார் என்பது உங்களுக்கு ஞாபகமிருக்கும். ''தாங்கள் எல்லோருக்கும் வாரி வழங்கிக் கொண்டிருக்கிறீர்கள். நான் பெரிய சம்சாரி. வயலில் அறுவடையான பிறகு உதிர்ந்து கிடக்கும் நெல்லைப் பொறுக்கி எடுத்துக்கொண்டு போய் ஜீவனம் செய்து வருகிறேன். என் குடும்பமோ பெரியது. நான் மிகவும் கஷ்டப்படுகிறேன். என் மேல் கருணை கொள்ள வேண்டும்'' என்று ராமரைப் பிரார்த்தித்தார். ராமர் அவரை நோக்கி, "உம்மிடம் இருக்கும் அந்தத்

தடியை எடுத்து உமது பலம் கொண்ட மட்டும் விசி எறியும். அது எவ்வளவு தூரத்தில் போய் விழுகிறதோ அது வரையிலுமுள்ள என் பசுக்கள் யாவும் உம்முடையவை'' என்ருர். அந்தப் பிராம்மணர் பேராசையினால் மூச்சைப் பிடித்துக்கொண்டு தம் பலத்தை யெல்லாம் சேர்த்து அந்தத் தடியை விசி எறிகிருர். அது சரயூ நதியின் அக்கரையில் போய் விழுகிறது. ஆகவே கணக்கற்ற பசுக்கள் அவருக்குச் சொந்தமாகின்றன. ராமர் அவற்றை அவருக்கு மனமுவந்து அளித்துவிட்டு, "நான் சிறிது மரியாதைக் குறைவாய் நடந்துகொண்டேன். உம்மைப் போன்ற ஒரு பிராம்மணருக்கு எவ்வளவு பலம் இருக்கிறது என்பதை அறிய விரும்பினேன். உம்முடைய பலத்தைப் பரீக்ஷிக்க நினைத்தது சரியல்ல. அதைச் செய்யாமலே உமது கஷ்டத்தை நீக்கியிருக்க லாம். ஏதோ சிறிது வேடிக்கையாக இருக்க விரும்பினேன். என்னை க்ஷமிக்க வேண்டும்'' என்று கூறுகிருர்.

उवाच च ततो रामस्तं गार्ग्यमभिसान्त्वयन् ।
मन्युर्न खलु कर्तव्यः परिहासो ह्ययं मम ॥
इदं हि तेजस्तव यद्दुरत्ययं तदेव जिज्ञासितुमिच्छता मया ।
इमं भवानर्थमभिप्रचोदितो वृणीष्व किञ्चेदपरं व्यवस्यति ॥
II. 32. 40-1.

"நான் அறிய விரும்பியதை அறிந்துகொண்டேன். இனி உமக்கு இன்னும் என்ன தேவையோ கேளும். சந்தோஷமாய்க் கொடுப்பேன்'' என்கிருர் ராமர். ஆனல் கர்க கோத்திரத்தவரான அந்தப் பிராம்மணர் ஏராளமான பசுக்களைப் பெற்றுத் திருப்தி யடைந்துவிட்டார். மேலே ஒன்றும் கேட்காமல், "இது போதும்'' என்று சந்தோஷத்துடன் கூறுகிருர்.

எல்லோரையும் போல் ராமரும் சிறிது வேடிக்கை செய்து சந்தோஷித்தார் என்று மேற்கூறிய சம்பவத்தினின்றும் தெரிந்து கொண்டோம். இப்பொழுது சற்று வேறு விதமான அவருடைய மற்ருெரு குணத்தைப் பார்ப்போம். அவர் நாட்டை விட்டுச் செல்லுகிருர் என்றதும் எங்கும் ஜனங்கள் ஒரே சோகத்தில் ஆழ்ந் தனர். ராமர், சீதை, லக்ஷ்மணன் மூவரும் ரதத்தில் ஏறிக்கொண் டனர். சுமந்திரன் ரதத்தைச் செலுத்திச் செல்லுகிருன். அவர்கள் சிறிது தூரம் செல்லுமுன் தசரதரும் கௌசல்யையும் இன்னும் மற்றுமுள்ள அரண்மனை மக்களுடன் கடைசியாக அவர்களைப் பார்ப்பதற்காக வெளியே வருகின்றனர். "ரதத்தை நிறுத்து'' என்று தசரதர் இரைந்து கத்த, "சுமந்திரரே! நிற்க வேண்டாம்! ஓட்டுங்கள்'' என்கிருர் ராமர்.

तिष्ठेति राजा चुक्रोश याहि याहीति राघवः ।
सुमन्त्रस्य बभूवात्मा चक्रयोरिव चान्तरा ॥ II. 40. 46.

இந்தச் சந்தர்ப்பத்தில் என்ன செய்வதென்று அறியாமல் சுமந்திரன் ரதத்தின் இரு சக்கரங்களிடையில் அகப்பட்டவனைப் போல் கலங்கினன் என்கிறார் வால்மீகி. ராமரை நோக்கி, ''உங்கள் பிதா ஒன்று சொல்லுகிறார். நீங்கள் அதற்கு நேர்மாருக வேறொன்று சொல்லுகிறீர்களே?'' என்று சுமந்திரன் கேட்க, ராமர், ''எங்களைக் காட்டில் விட்டுத் திரும்பி வந்ததும் அவர் தம் ஆணையை மீறி நடந்ததற்காக உங்களிடம் கோபம் கொள்வார் என்று ஒருகால் பயப்படுகிறீரோ?'' என்று கேட்கிறார்.

नाश्रौषमिति राजानमुपालब्धोऽपि वक्ष्यसि ।
चिरं दुःखस्य पापिष्ठमिति रामस्तमब्रवीत् ॥ II. 40. 47.

''அவர் அவ்விதம் கோபித்துக்கொண்டால் நீர் இப்படிக் கூறிவிடலாம்; அந்தக் கலவரத்திலும் சத்தத்திலும் மகாராஜா கூறியது காதில் விழவில்லை என்று சொல்லிவிடும்'' என்கிறார். இவ்விதம் பொய் சொல்வதை, ''சிரம் து:கஸ்ய பாபிஷ்டம்—துக்கத்தை நீடிக்கச் செய்யாமலிருப்பதற்கு இந்தச் சிறு பொய் கூறுவது தவறல்ல'' என்கிறார்.

चिरं दुःखस्य पापिष्ठम् ।

இந்தக் கருத்தை அவர் நகரத்தைத் தாண்டிச் சென்றபொழுது திரளாகக் கிராமத்து மக்கள் ரதத்தை விடாமல் தொடர்ந்து வந்த பொழுதும் கூறுகிறார். அவர்கள் ரதத்தை நிறுத்தச் சொல்லிக் கத்தியபொழுது, ''செல்லுங்கள் விரைந்து'' என்று ராமர் சுமந்திரனைத் துரிதப்படுத்துகிறார்.

எவ்வளவோ சிறு சிறு விஷயங்களில் நம்மைப் போலவே ராமரும் தம் மனத்தைச் சுலபமாகச் சமாதானம் செய்துகொண்டு நடப்பதைக் காண்கிறோம். அநேகப் பிராம்மணர்கள் பிடிவாதமாக ரதத்தைத் தொடர்ந்து செல்லுகின்றனர். தமஸா நதி தீரம் வரையிலும் அவர்கள் கூடவே வருகிறார்கள். அவர்கள் மரத்தடியில் படுத்து உறங்கிய சமயம் பார்த்து ராமர் சுமந்திரனிடம், ''அயோத்திக்குத் திரும்பிப் போவது போல் ரதத்தை வடக்கே செலுத்தும். அவர்கள் கவனிக்காதிருக்கும்பொழுது வேறொரு வழியாக வந்துவிடும். உடனே நாங்களும் வந்து சேர்ந்து கொள்கிறோம். அவர்களுக்குத் தெரியாமல் சென்றுவிடலாம்'' என்கிறார். தம்மிடம் மட்டில்லாத அன்பும் பக்தியும் கொண்டு எப்படியாவது நகரத்துக்குத் திருப்பி அழைத்துச் செல்ல வேண்டும் என்ற உறுதியுடன் தொடர்ந்து வந்த அந்த ஜனங்களை இப்படி ஏமாற்றிவிட்டுச் செல்லுவதற்கு அவர் செய்த உபாயத்தைப் பாருங்கள். அந்த அப்பாவி மனிதர்கள் அவரிடமே தங்களை முழுவதும் அர்ப்பணம் செய்துகொண்டவர்கள். அவரைத் திரும்பி அழைத்துச் செல்லவேண்டும் என்ற ஆவலுடன் அவரைப் பிடிவாத

மாகத் தொடர்ந்தவர்கள். அவர்களை விட்டு எப்படித் தப்பித்துச் செல்வது? அதற்காக மேற்கூறிய உபாயத்தைக் கைக்கொள்கிறார் ராமர்.

இன்று இத்துடன் நிறுத்திக்கொள்கிறேன். ராமரைப்பற்றிச் சொல்வதற்கு இன்னும் எவ்வளவோ இருக்கின்றன. அவரை வழியில் விட்டு மேலே செல்ல முடியாது. ஆயினும் அவர் அந்தப் பிராம்மணர்களை மெல்ல விலக்கிவிட்டுச் சென்றது போல் நானும் செய்கிறேன். நமக்கு விளங்குவதற்காக வால்மீகி என்ன என்ன சம்பவங்களைக் கூறுகிறாரோ அவற்றையெல்லாம் சேர்த்துக் கூற முயலுகிறேன். ராமர் எப்பொழுதும் ஒருவராலும் அணுக முடியாதபடி அவ்வளவு உயர்ந்தவராக இருந்தால் அதனால் நமக்கு என்ன பயன் ஏற்படும்? எவையேனும் சில விஷயங்களிலாவது அவர் எல்லோரையும் போல இருக்க வேண்டாமா? நம்மைப் போலவே அவர் நடந்துகொள்ளும் சந்தர்ப்பங்கள் இன்னும் சில இருக்கின்றன. நமது கீழ்த்தரமான மனித இயல்பிலிருந்து நம்மை மேலே உயர்த்துவதுதான் நாம் ராமாயணத்தைப் பக்தியோடும் ஆர்வத்தோடும் படிப்பதன் பயனாகும். நமது மட்டமான உணர்ச்சிகள் அகன்று நாம் சீர்திருந்த வேண்டும் என்ற நோக்கத்தோடுதான் நாம் ராமாயணத்தைப் படிக்க வேண்டும்.

சில சந்தர்ப்பங்களில் ராமரும் எல்லோரையும் போல் சாதாரண மனிதராகவே நடந்துகொண்டார் என்றால், அது ஒன்றும் நாம் அவரை உபாசிப்பதற்குத் தடங்கலாக இருக்கலாகாது. அந்தக் காரணம் கொண்டே நாம் பின்னும் அதிக ஆர்வத்தோடு அவரைப் பூஜிப்பவர்களாவோம். ஸ்ரீராமருடைய குணங்களைப்பற்றித் தெரிந்துகொள்ளுவதன் மூலம் ஏதோ சிறிதளவேனும் நாம் முன்னேறக்கூடும் என்றால் அதுவே நாம் எய்தும் பெரும் பயன். மனிதனுக்குச் சபலங்கள் உண்டு. அவற்றை அவன் முற்றும் எதிர்த்து வெற்றிபெற முடியாது. மனம் சபலத்திற்கு உள்ளாகும்பொழுது ராமாயணம் போன்ற நூல்களைப் படித்துத்தான் அவன் சீர்திருந்த வேண்டும். வெற்றி நிச்சயமில்லை என்றாலும் முயற்சி செய்வதனால் நன்மையே உண்டாகும். ஒரு தரம் தோல்வி ஏற்படலாம்; இரண்டு தரம் தோல்வி ஏற்படலாம்; அநேக முறையும் முயற்சியில் தோல்வியுறலாம். ஏதோ சிறிது வெற்றியும் கிட்டலாம். நம் வாழ்க்கை குறுகியது. சூழ்நிலையும் மிகவும் மட்டமாயும் அற்பமாயும் இருக்கலாம். ஆனால் ஸ்ரீராமரைப் போன்ற உயர்தர வாழ்க்கையுள்ளவர்களும் இருப்பார்கள். நமக்கு ஏற்படும் சபலங்களோடு நாம் போராடும்பொழுது ஸ்ரீராமரை நினைவு கூர்ந்து சிறிதேனும் சீர்திருந்தியவர்களாக, அவரது நன்னெறியையே கடைப்பிடித்து நடந்துகொள்ள முயலுவோமாக.

# 6

## இரண்டு இயல்பு

நகரத்து மக்கள் தம்மைத் தொடர்ந்து வராதிருப்பதற்கு ஒரு சிறு தந்திரத்தை ராமர் கையாண்ட வரலாற்றை முன்பு கூறினேன். இக்ஷ்வாகு வம்சத்து அரசர்களுக்கு மந்திரியும் நம்பிக்கையுள்ள சாரதியுமான சுமந்திரன், ராமனுக்கும் சீதைக்கும் லக்ஷ்மணனுக்கும் பணிவிடை செய்துகொண்டு கூடவே இருக்க விரும்புவதாக வேண்டிக்கொண்டபொழுது, ராமர் அவன் மூலம் செய்தி சொல்லியனுப்பியதை இன்று எடுத்துக் கூறலாம் என்று இருக்கிறேன். ராமர் அவனது வேண்டுகோளை மறுத்ததற்கு அநேக காரணங்கள் கூறியதில் முக்கிய காரணம் ஒன்று உள்ளது. அதிலிருந்து ராமர் பிறரை அறியும் சாமர்த்தியமுள்ளவர் என்று தெரிகிறது. தமக்கு நேர்மாறான இயல்புடையவர்களைக்கூட அறிந்துகொள்வது அவருக்கு மிகவும் எளிது. சாதாரணமாய் நம்மைப் போன்ற இயல்பும் அநுபவங்களும் பெற்றுள்ளவர்களைத் தான் நம்மால் சரியாகத் தெரிந்து கொள்ள முடியும். வெளிப்படையான சம்பவங்களும் சந்தர்ப்பங்களும் மாறாக இருந்தால், மிகவும் கூர்மையான புத்தியுள்ளவர்கள்தாம் பிறரை நன்கு அறிந்து கொள்ள முடியும். அதனால்தான், 'பாம்பின் கால் பாம்புக்குத்தான் தெரியும்' என்கிறோம்.

உலகப் போக்கை முற்றும் அறியாத சாதாரணப் புத்தியுள்ளவன் தன் இயல்புக்கு விரோதமான விஷயங்களைத் தெரிந்து கொள்ளச் சிறிது சிரமப்படுவான். சுமந்திரன் அவர்களை விட்டு அயோத்திக்குத் திரும்பிச் செல்ல மறுத்தபொழுது, ராமர் சாமர்த்தியமாக, ''நான் உம்மைத் திரும்ப அனுப்புவதற்கு அநேக காரணங்கள் உண்டு. அவற்றில் முக்கியமானது—என் சிற்றன்னை கைகேயி இரக்கமற்ற கொடிய மனம் படைத்தவள். நான் காட்டிற்குச் சென்றதைப்பற்றி அவளுக்கு உறுதி ஏற்பட வேண்டும். அதில் அவளுக்குச் சந்தேகம் ஏற்பட்டுவிட்டால் அப்பாவுக்கு அல்லவோ கஷ்டமாகும்! அதன் பயனை அவர் அநுபவிக்க வேண்டியதாகிவிடும். நீர் திரும்பிப் போய் இங்கு நடந்தவற்றைக் கூறினால் பிறகு கவலை இல்லை. தந்தையின் சொற்படி

நான் நடந்ததாக அவளுக்கு அப்பொழுதுதான் நிச்சயம் ஏற்படும். ஆகவே அப்பாவின் நலத்திற்காக நீர் அவசியம் அயோத்திக்குத் திரும்பிப் போக வேண்டும்'' என்கிறுர்.

அவதாரபுருஷர் என்று சொல்லும்படியாக ராமர் எவ்வளவு உயர்ந்து விளங்கினுலும், சாதாரண மனிதராகவும் விளங்கினுர் என்று காட்டுவதற்காகவே மேற்படி வரலாற்றைக் கூறினேன். ஐம்பத்துமுன்ருவது ஸர்க்கத்தில், சுமந்திரன் சென்றபிறகு ராமர், சீதை, லக்ஷ்மணன் ஆகிய மூவரும் கங்கையைத் தாண்டி அக்கரையில் ஒரு மரத்தடியில் தாற்காலிகமாகத் தங்கியபொழுது தான் ராமர் மனத்தை விட்டுப் பேசுகிறுர். அதுவரையிலும் அவருடைய உணர்ச்சிகள் உள்ளுக்குள்ளேயே கட்டுப்பட்டுக் கிடந்தன. எல்லோரும் அவர் மீதே கண்ணும் கருத்துமாக இருந்தமையால் சபலத்திற்கு ஆளாகாமலிருக்க அவர் மிகவும் சிரமப்பட வேண்டியிருந்தது. தந்தை, தாய், குரு ஆகிய அனைவரும் தர்மமான மார்க்கத்தைப் பின்பற்ற விரும்பும் அவரை அதைக் கைவிடுமாறு தூண்டுகின்றனர். தம் உணர்ச்சிகளை அவர் வெளியிடுவது என்பதும் சாத்தியமில்லை. பிதாவினிடம் பக்தியுள்ள ஒரு ஸத்புத்திரனுக அவர் நடந்துகொள்ள வேண்டியிருக்கிறது. தந்தையின் சொல்லைக் காப்பாற்றுவதற்காக அவர் அனைத்தையும் இழக்கும்படியாகிறது. அத்துடன், இன்பமோ துன்பமோ என்ன நேர்ந்தாலும் மனம் கலங்காமல் இருக்க வேண்டியதும் அவசியமாகிறது. எத்தகைய இடுக்கண் வந்தாலும் அது தம் உள்ளத்தையோ உறுதியையோ அசைக்க இயலாது என்பதை அவர் உலகத்தோருக்குக் காண்பித்தாயிற்று. 'ராஜ்யமோ செல்வமோ எதுவும் பெரிதல்ல; தர்மம் ஒன்றே அனைத்திலும் சிறந்தது' என்பதை, சுமந்திரன் கங்கைக் கரையில் தம்மை விட்டுச் செல்லும் வரையில் அவர் உணர்த்தி வைத்திருக்கிறுர்.

ஆகவே, சீதையுடனும் லக்ஷ்மணனுடனும் ராமர் தனியே இருக்கும்பொழுதுதான் இதுகாறும் அவர் வசத்திலிருந்த உணர்ச்சிகள் அவரை மீறிச் சிறிது வெளியாகின்றன. மனத்தின் அடித்தலத்தில் இருந்த எண்ணங்கள் இப்பொழுது சிறிது மேலெழும்பி அவர் வாயினின்றும் சொற்களாக வெளிவருகின்றன. லக்ஷ்மணனை நோக்கித்தான் அவர் பேசுகிறுர்; என்றுலும் அவர் வேறு, லக்ஷ்மணன் வேறு அல்ல. ஆதலால் அவர் தமக்குத் தாமே பேசிக்கொண்டதாகவும் வைத்துக்கொள்ளலாம். இந்த இடத்தில் எல்லாச் சுலோகங்களும் மிக்க பொருள் பொதிந்தவையாக இருக்கின்றன. எல்லோரையும் போல அவர் எப்படிச் சாதாரண உணர்ச்சிகள் உள்ளவராக இருக்கிறுர்; ஆனுல் செயலிலோ அவர் சாதாரண மனிதராக இருப்பதை விட்டு, அதற்கு முற்றும் மாறுன

விதத்தில் நடந்துகொள்ளுகிறார் என்பது அந்தச் சொற்களிலிருந்து நமக்குப் புலனாகிறது.

कृतकामा तु कैकेयी तुष्टा भवितुमर्हति ।
सा हि देवी महाराजं कैकेयी राज्यकारणात् ॥
अपि न च्यावयेत् प्राणान् दृष्ट्वा भरतमागतम् । II. 53. 6-7.

"சிற்றன்னை கைகேயி இப்பொழுது சந்தோஷமாக இருப்பாள். மகன் பரதன் அயோத்திக்கு வந்ததும் அவளது பேராசை பின்னும் அதிகரித்திருக்கும். வெறும் யுவராஜாவாக இருப்பதை விட மகாராஜாவாகவே ஆக்கிவிடலாமே என்ற எண்ணம் உதித்து, தந்தையின் உயிருக்கே அவள் வழி தேடினாலும் தேடுவாள் என்று நினைக்கிறேன்" என்கிறார்.

अनाथश्च हि वृद्धश्च मया चैव विनाकृतः ।
किं करिष्यति कामात्मा कैकेय्या वशमागतः ॥ II. 53. 8.

"தந்தையோ வயது சென்றவர். காமத்தினால் தம் வசமிழந்தவர். கைகேயியின் கையில் அகப்பட்டு என்ன கதி அடைவாரோ?" என்று கலங்குகிறார்.

इदं व्यसनमालोक्य राज्ञश्च मतिविभ्रमम् ।
काम एवार्थधर्माभ्यां गरीयानिति मे मतिः ॥ II. 53. 9.

"அறம் பொருள் இன்பம் என்ற மூன்று புருஷார்த்தங்களுள் காமமே மேலோங்கியிருக்கிறது என்று எனக்குத் தோன்றுகிறது, அப்பாவின் மோகத்தை எண்ணும்பொழுது" என்கிறார். மேலும்,

को ह्यविद्वानपि पुमान् प्रमदायाः कृते त्यजेत् ।
छन्दानुवर्तिनं पुत्रं ततो मामिव लक्ष्मण ॥ II. 53. 10.

"உலகிலுள்ள மற்றப் பிள்ளைகளைப் போலவா நான்! தந்தையின் சொற் கடவாதவன். அத்தகைய புத்திரனை அல்லவா அவர் துறந்துவிட்டார்?" என்று வருந்துகிறார். இந்தச் சமயத்தில் பரதனைப் பற்றிய நினைவு வருகிறது. தம் நிலைமையைப் பரதனோடு ஒப்பிட்டுப் பேசுகிறார்:—

सुखी बत सभार्यश्च भरतः कैकयीसुतः ।
मुदितान् कोसलानेको यो भोक्ष्यत्यधिराजवत् ॥ II. 53. 11.

"நான் அனைத்தையும் இழந்து மனைவியுடனும் தம்பியுடனும் கானகம் வந்து தவிக்கிறேன். பரதனோ மனைவியுடன் அயோத்தியில் கோசலதேசம் முழுவதையும் ஆளப்போகிறான்" என்கிறார். இந்த ஓர் இடத்தில்தான் சகோதரர்களின் மனைவிமார்களைப் பற்றிய வார்த்தை வருகிறது. வேறு எங்கும் கவி அவர்களைப் பற்றிப் பேசவே இல்லை.

स हि सर्वस्य राज्यस्य सुखमेकं भविष्यति ।
ताते च वयसातीते मयि चारण्यमाश्रिते ।। II. 53. 12.

''அப்பாவுக்கு வயதாகிவிட்டது. ராஜ்யகாரியங்களை அவரால் கவனிக்க இயலாது. நானும் இல்லாததனால் பரதனே சக்கரவர்த்தியாக இருப்பான். அவனே யாவற்றிற்கும் அதிகாரி அல்லவா!'' என்கிறார்.

अर्थधर्मौ परित्यज्य यः काममनुवर्तते ।
एवमापद्यते क्षिप्रं राजा दशरथो यथा ।। II. 53. 13.

அப்புறம் பரதனைப்பற்றி அவர் கொஞ்சம் தவறாகவே பேசுகிறார்; ''ராஜ்யபோகத்தில் ஈடுபட்டும் பரதன் தர்மத்தை மறந்தால் பிதாவைப் போன்ற கதிதான் அவனுக்கும் நேரும்'' என்கிறார். மேலும், சிற்றன்னையைப்பற்றிய நினைவு வந்தவுடன்,

अपीदानीं न कैकेयी सौभाग्यमदमोहिता ।
कौसल्यां च सुमित्रां च सम्प्रबाधेत मत्कृते ।। II. 53. 15.

''எனக்காக என் தாயும் சுமித்திராதேவியும் வருந்தியதைக் கண்டும், என்மீது அவர்கள் கொண்டுள்ள அளவில்லாத பிரேமையையும் எனக்காக மகாராஜாவிடம் அவர்கள் மன்றாடியதையும் எண்ணியும் கைகேயி அவர்களைச் சும்மா விடுவாளா? அவர்களை என்ன பாடு படுத்துவாளோ!'' என்கிறார்.

क्षुद्रकर्मा हि कैकेयी द्वेषादन्याय्यमाचरेत् ।
परिदद्या हि धर्मज्ञे भरते मम मातरम् ।। II. 53. 18.

''கைகேயி கொடியவள்; நியாயம் அநியாயம் பாராதவள். என் தாய் உன் தாய் ஆகிய இருவருக்கும் விஷத்தையே கொடுத்தாலும் கொடுத்துவிடுவாள்'' என்று ராமர் கவலைப்படுகிறார். இவ்விதம் உள்ளேயே அடங்கியிருந்த உணர்ச்சிகள், தனியே இருக்கும்பொழுது வெளியாகின்றன. ராமருடைய இயல்பு இதுவல்ல. 'துன்பம் வந்தபொழுது மனம் கலங்காமலிருக்க வேண்டும்' என்ற எண்ணத்தோடு, 'கடமையே பெரிது' என்று மதித்து, அதையே பின்பற்றும் உறுதியுடன் இதுவரையும் ஒழுகி வந்தவர், ஒருவரும் இல்லாமல் தனியே இருக்கும்பொழுது, தம் மனத்தைக் கொஞ்சம் திறந்து, தம் உணர்ச்சிகளை வெளியிடுகிறார். இப்பொழுதுதான் அவர் எல்லாரையும் போல் சாதாரண மனிதராகக் காட்சியளிக்கிறார். அவர் மேலும் பேசுவதைப் பார்ப்போம்:—

एको ह्यहमयोध्यां च पृथिवीं चापि लक्ष्मण ।
तरेयमिषुभिः क्रुद्धो ननु वीर्यमकारणम् ।। II. 53. 25.

''என்னைப்பற்றி அனைவரும் அறிவீர்கள். என் வீரியம் பலம் யாவும் நீங்கள் அறிந்ததே. நான் விரும்பினால் இந்த உலகம் முழுவதையும் ஒருவனாகவே வென்றுவிடுவேன். எனக்கு அது ஒரு பிரமாதமல்ல. ஆனால் நான் அப்படிச் செய்யப்போவதில்லை'' என்கிறார். தாம் விரும்பினால் தம்மால் என்ன சாதிக்க முடியும் என்பதை அவர் அறிவார். இதிலிருந்து, அவர் எவ்வாறு உறுதியுடன் தம் ஆசைகளை அடக்கிச் சுயநலத்தை வென்று, தாம் விரும்பினால் எளிதில் அடையக்கூடியவை அனைத்தையும் துறந்து வனவாசத்தை ஏற்றுக்கொண்டார் என்பது புலனாகிறது. 'நநு வீர்யமகாரணம்' என்று கூறுவதிலிருந்து, 'என் சக்தி அதர்மத்தைச் செய்வதற்காக ஏற்பட்டதல்ல. என் வலிமையைக் கொண்டு அதர்ம வழியில் அயோத்தியைக் கைப்பற்ற முயன்றால் அது மிகவும் தவறான செய்கை அல்லவா? அதனால்தான் நான் வாளா இருக்கிறேன்; நான் சக்தியற்றவன் என்பதனால் அல்ல' என்று அவர் நினைப்பது வெளியாகிறது.

अधर्मभयभीतश्च परलोकस्य चानघ ।
तेन लक्ष्मण नाद्याहमात्मानमभिषेचये ॥ II. 53. 26.

''தசரதரையும் மற்றவர்களையும் விலக்கிவிட்டு ஒரு நொடியில் நானே பட்டாபிஷேகம் செய்துகொள்ளலாம். ஆனால் ஏன் அப்படிச் செய்யவில்லை என்றால், அது அதர்மமாகுமே என்பதனால்தான். எனக்கு ஒரு லாபத்தை எண்ணி அதற்காக மிகவும் இழிவான தவறான காரியத்தை நான் செய்ய விரும்பவில்லை'' என்கிறார். தர்மத்தைக் கடைப்பிடிக்கும் யோக்கியனான மனிதன் இத்தகைய நம்பிக்கையோடுதான் பேசுவான்.

एतदन्यच्च करुणं विलप्य विजने वने ।
अश्रुपूर्णमुखो रामो निशि तूष्णीमुपाविशत् ॥ II. 53. 27.

இவ்விதம் ராமர் கண்களில் நீர்மல்கத் தம் மன உணர்ச்சிகளை வார்த்தைகளில் கொட்டித் தீர்த்தபிறகு அமைதியாக இரவைக் கழித்தார் என்கிறார் வால்மீகி.

உங்களுக்கு ஒரு விஷயம் இப்பொழுது தோன்றலாம். நான் சொல்லப்போவதைக் கொஞ்சம் பொறுமையாகக் கேட்க வேண்டும். உங்களில் சிலர் உலக இயல்பை நன்கு அறிந்தவர்களாக இருப்பீர்கள். ஸ்ரீராமர்கூட உயர்ந்ததும் தாழ்ந்ததுமான இரு வகை இயல்பு படைத்தவர் என்று தோன்றுகிறது அல்லவா? அந்த உயர்ந்த இயல்பு சாதாரண மனிதர்களுக்கெல்லாம் மேலாக வெற்றிகரமாக உயர்ந்து நின்று என்றென்றும் அனைவரும் போற்றி வணங்கக்கூடிய விதம் ஒவ்வொரு செய்கையிலும் சிறந்து விளங்கும் பொழுது, 'நம்மைப் போல் அவருக்கும் சாதாரண இயல்பும்

உண்டா? நம்மைப் போல் அவரும் சாதாரணமாக நடக்கக் கூடியவரா?' என்று உங்களுக்கு ஒரு சந்தேகம் எழலாம். உண்மையே. நானும் அதைப்பற்றித்தான் ஆரம்பத்திலிருந்தே சொல்ல வேண்டுமென்று முயன்றுகொண்டிருக்கிறேன். ராமருடைய குணத்தில் சாதாரண மனிதனுக்கு உள்ள அம்சமும் இருப்பதாக வால்மீகி சந்தேகத்திற்கு இடமில்லாமல் கூறியிருப்பதை உங்களுக்கு எடுத்துக்காட்டியிருக்கிறேன். நீங்கள் சந்தேகப் பட்டுக் கேட்பதாக வைத்துக்கொண்டு அதற்குப் பதில் கூறுகிறேன். நீங்கள் உங்களுக்குத் தோன்றியபடி முடிவு செய்து கொள்ளுங்கள்.

உயர்ந்ததும் தாழ்ந்ததுமான இரண்டு வகை இயல்பு உள்ளவர்களாகச் சிலர் இருக்கிறார்கள். தங்கள் தாழ்ந்த இயல்பைப் பிறர் அறியாமல் வைத்துக்கொண்டு மேலுக்கு உயர்ந்தவர்களாகக் காட்டிக் கொள்பவர்கள் இருக்கிறார்களே, அவர்களை வேஷதாரிகள், ருத்திராக்ஷப் பூனைகள் என்றெல்லாம் சொல்லுகிறோம் அல்லவா? அற்பத்தனமும் கெட்ட எண்ணமும் படைத்தவர்களை, உலகோரை மயக்குவதற்காக மிக்க பெருந்தன்மையும் உதார குணமும் படைத்தவர்களாக நடிப்பவர்களை நாம் 'வேஷம் போடுகிறவர்கள்' என்றுதான் சொல்லுகிறோம். இப்பொழுது வால்மீகி ராமரைப்பற்றிச் சொல்லியிருப்பதைப் பார்த்தால், ராமரையும் 'உலகுக்காக வேஷம் போடுகிறவர்' என்றுதான் கூறும்படி இருக்கும். தம்முடைய அற்பத்தனமும் சுயநலமும் பொருந்திய மட்டமான இயல்பை அவர் தமக்குள்ளேயே மறைத்து வைத்துக் கொண்டு தம் உயர்ந்த இயல்பை மட்டும் வெளிப்படையாகக் காட்டுவதாகக் கருத வேண்டும். ஆனால், வேஷம் போடுவது என்பது ராமரது இயல்பே அல்ல. அதுதான் உண்மை. அவரிடம் இரண்டு விதமான இயல்புகள் இருந்தாலும் அவை சிறிதும் களங்கமற்றிருப்பதாகவே நாம் கொள்ள வேண்டும். பொய்யாக இருப்பவன் சமயத்திற்கு ஏற்றாற்போல் நடிப்பானே தவிர, அது அவனது உண்மையான இயல்பு அல்ல. அது வேண்டுமென்றே பிறரை வஞ்சிப்பதற்காக அணிந்துகொண்ட வேஷமேயாகும். அது பிறர் கண்ணில் மண்ணைத் தூவுவதற்கென்று அவன் போர்த்துக்கொண்ட போர்வை. தன் சுயநலத்திற்காகத் தன் கெட்ட குணத்தை மறைத்து, வெளியாக நல்லவன் போலப் போடும் வேஷமும், பிறருக்கு நல்லவன் போல நடிப்பதும் இரகசியமான அற்பமான செயல்களைப் புரிந்து, தான் விரும்பியவற்றை அடைவதற்கே!

ஆனால், ராமர் விஷயத்தில் நாம் காண்பது என்ன? தம்முள்ளே இருக்கும் சாதாரண இயல்பை அவர் மறைக்கவில்லை. அதை அவர் நன்றாக அடக்கி வெற்றி கொள்ளுகிறார். தகாத

எண்ணங்களை அதர்மம் என்று, தமது ஒழுக்கம் மிகுந்த இயல்பைக் கொண்டு அறவே அடக்கிக்கொள்ளும் சக்தி பெற்றவராக இருக்கிறார். ஆகவே, உலகோர் முன் அவர் நடந்துகொள்ளும் விதம் மிகவும் உயர்ந்ததாக இருக்கிறது. அவரது தெய்விக குணங்கள் ஒவ்வொரு சமயமும் அவரது செயல்களில் வெளியாகின்றன. சாதாரண மனித இயல்பு உள்ளுக்குள்ளேயே அடங்கி அமிழ்ந்து கிடக்கிறது. பிறருக்காகத் தன் இயல்பை மறைத்து வேஷம் போடுகிறவன் இம்மாதிரி இருக்கமாட்டான்; இதற்கு நேர் மாறாகவே இருப்பான். தெய்விகமான அம்சம்தான் ராமருக்குச் சொந்தமானது. சாதாரண அம்சமோ அவரிடம் பட்டும் படாமலும் இருந்தது என்று சொல்லலாம். அவர் சாதாரண மனிதராகப் பிறந்து சாதாரண மனிதராகவே நடந்துகொண்டார் அல்லவா? ஏதோ ஒரு சிறு அம்சத்தில் அவர் நம் எல்லோரையும் போல் இருந்தார். நம்மைப் பாதிக்கும் சிறு துன்பங்கள் அவரையும் பாதித்தன. ஆனால், அவர் அவற்றை வெற்றி கொண்டாரேயன்றி, அவை அவரை ஆட்கொள்ளவில்லை. இந்தச் சிறு வித்தியாசம்தான் நமக்கும் அவருக்குமிடையே அகண்டமாக விரிந்து காணப்படுகிறது.

இத்துடன் இதை நிறுத்திவிட்டு, நம் எல்லோரையும் போல ராமருக்கு இருந்த மற்றொரு சாதாரண குணத்தைப் பற்றிய சம்பவத்தை இப்பொழுது கூறுகிறேன். நாம் சிறிதும் தவறாக நினைக்கக்கூடாத ஒரு சாதாரண குணம் அது; பிறரைச் சிறிது கிண்டல் செய்து மகிழ்ச்சியடைய விரும்புவது. திரிஜடர் என்ற பிராம்மணரை அவ்வாறுதான் சிறிது கிண்டல் செய்து ராமர் சந்தோஷமடைந்தார். ஆனால் உடனே தம் செய்கைக்கு வருத்தமுற்று, ''ஏதோ சிறிது வேடிக்கை செய்துவிட்டேன். தவறாக ஒன்றும் நினைக்க வேண்டாம். உமக்கு இன்னும் ஏதாவது வேண்டும் என்றால் கேளும்'' என்கிறார். ஆனால் கிடைத்ததைக் கொண்டு திருப்தியடைந்த பிராம்மணர், ''ஒன்றும் வேண்டாம்'' என்று சொல்லிவிட்டார்.

இனி, அரண்ய காண்டத்தில், சூர்ப்பணகையைச் சந்திக்கும் கட்டத்துக்கு வருவோம். சூர்ப்பணகையின் வருகை, அந்த மூவருக்கிடையே சிறிது கலவரத்தை உண்டாக்குகிறது. கோரமான உருவத்துடன் அவள் அவர்கள்முன் தோன்றுகிறாள். இந்த இடத்தில் ஒரு ஹாஸ்யக் காட்சி நிகழ்கிறது. வால்மீகியே ஹாஸ்ய உணர்ச்சியில் ஈடுபட்டுச் சந்தோஷிப்பது போலத் தோன்றுவதனால் நாமும் சிறிது உற்சாகம் கொள்வது தவறாகாது. ராமர் முன் சூர்ப்பணகை தோன்றும்பொழுது, அவளையும் ராமரையும் ஒப்பிட்டுக் கவி பெரிதாக வர்ணிக்கிறார். சூர்ப்பணகை ராமரைக் கண்டு மோகித்ததாகக் கூறும்பொழுது வேடிக்கை

பின்னும் அதிகமாகிறது. மிகவும் அழகாக இருவருடைய தோற்றத்தையும் மாறி மாறி வர்ணிக்கிறார் கவி.

அந்தச் சுலோகங்களை அப்படியே இங்குக் கூறுகிறேன். அவற்றுக்கு மொழிபெயர்ப்புத் தேவையில்லை.

सुमुखं दुर्मुखी रामं वृत्तमध्यं महोदरी ।
विशालाक्षं विरूपाक्षी सुकेशं ताम्रमूर्धजा ॥
प्रीतिरूपं विरूपा सा सुस्वरं भैरवस्वरा ।
तरुणं दारुणा वृद्धा दक्षिणं वामभाषिणी ॥ III. 17.10-11.

'தக்ஷிணம் வாமபாஷிணீ' தம்மை அறியாமலே வால்மீகி இந்த இரண்டு அழகான சொற்களை வழங்குகிறார். 'தக்ஷிண—மிகவும் உதார குணமுள்ளவர்' என்று ராமரைப்பற்றிக் கூறுகிறார். அவளையோ 'வாம—கொடிய இயல்புள்ளவள்' என்கிறார்.

न्यायवृत्तं सुदुर्वृत्ता प्रियमप्रियदर्शना । III. 17. 12.

ராமரையும் சூர்ப்பணகையையும் யார் ஒப்பிட்டுப் பேசுவார்கள்? இருவருக்கும் எதிலேனும் ஒற்றுமை இருக்க முடியுமா? ஆயினும் வால்மீகிக்கு அதில் மிகுந்த உற்சாகம் இருப்பது போல் தோன்றுகிறது. அவர்களுக்கு உள்ள வித்தியாசத்தை ஒவ்வொன்றாக விவரித்துக் கூறிச் சந்தோஷிக்கிறார். "நீங்கள் யார் இந்த இடத்தில் வந்திருக்கிறீர்கள்? இது என் சகோதரனுடைய பிரதேசமாயிற்றே!" என்று சூர்ப்பணகை ராமரை நோக்கிக் கேட்கிறாள். உடனே கவி ராமருடைய ருஜுவாகப் பேசும் குணத்தைப்பற்றி மிகவும் உயர்வாகப் பேசத் தொடங்குகிறார்:—

ऋजुबुद्धितया सर्वमाख्यातुमुपचक्रमे ।
अनृतं न हि रामस्य कदाचिदपि सम्मतम् ॥ III. 17. 15.

ராமர் உள்ளதை உள்ளபடியே சொல்லும் இயல்புள்ளவர். ஒளித்துப் பேசும் பழக்கம் அவரிடம் இல்லை. ஆனால் பிறர் கபடமாகப் பேசினால் உடனே அறிந்துகொள்ளும் சக்தியுள்ளவர். தாம் யார் என்றும், தாங்கள் மூவரும் ஏன் தனியே வனத்தில் வாசம் செய்ய நேர்ந்தது என்ற விவரங்களையும் அவளுக்குக் கூறுகிறார். 'அந்ருதம் ந ஹி ராமஸ்ய கதாசிதபி ஸம்மதம்—ராமர் ஒருபோதும் பொய் சொல்லமாட்டார்' என்று கவி ராமருடைய சத்தியமே பேசும் குணத்தைச் சிலாகித்துக் கூறுகிறார். ஆகவே, தபோவனத்தில் தாபசராக இருக்கும் ராமர் ஒரு பெண்ணின் முன் எவ்வாறு பொய் பேசுவார்? சூர்ப்பணகையும் எப்படி இருந்தாலும் ஒரு ஸ்திரீயே அல்லவா? ராமர் தம்முடைய வரலாற்றை அப்படியே அவளிடம் கூறுகிறார்.

இதற்குமேல்தான் அவள் தன் விஷமங்களைத் தொடங்கு கிறாள். தான் யார் என்பதைக் கூறிவிட்டு, முடிவில், "உமது சௌந்தரியத்தைக் கண்டு மோகித்து உம்மைக் கணவராகப் பெற விரும்புகிறேன். இவர்கள் இருவரையும் ஒரே வாயில் விழுங்கி விட்டு உம்மைச் சுதந்திரப் புருஷராக்குகிறேன். பிறகு நாம் இருவரும் இந்த வனத்தில் நம் இச்சைப்படி ரமித்துக்கொண்டு ஆனந்தமாக இருக்கலாம்'' என்று கூறுகிறாள்.

இந்தச் சமயத்தில் ராமருக்குச் சிறிது ஹாஸ்யமாக இருக்க விருப்பம் உண்டாகிறது. இந்த இடத்தில், கிஷ்கிந்தா காண்டத் தில், சுக்கிரீவனிடம் அவர் தம்மைப்பற்றி இரண்டு தரம் கூறிக் கொள்வதை நாம் ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டும்.

अनृतं नोक्तपूर्वं मे वीर कृच्छ्रेऽपि तिष्ठता ।
धर्मलोभपरीतेन न च वक्ष्ये कथञ्चन ॥ IV. 14. 14-15.

"நான் சத்தியமே பேசுகிறவன். ஒரு நாளும் பொய் கூறும் வழக்கம் என்னிடம் இல்லை. ஆகவே நான் சொன்ன சொற்படி நடப்பவன்'' என்கிறார். ஆகவே சூர்ப்பணகையினிடம் வேடிக்கை யாக, இல்லாததைக் கூறிச் சந்தோஷித்தது நமக்குக் கொஞ்சம் வியப்பாகவே இருக்கிறது.

अनुजस्त्वेष मे भ्राता शीलवान् प्रियदर्शनः ।
श्रीमानकृतदारश्च लक्ष्मणो नाम वीर्यवान् ॥
अपूर्वी भार्यया चार्थी तरुणः प्रियदर्शनः ।
अनुरूपश्च ते भर्ता रूपस्यास्य भविष्यति ॥ III. 18. 3-4.

ராமர் அவளிடம் உண்மையைக் கூறுவதுபோல், "இவன் என் தம்பி. மிகவும் நல்லவன்; அழகாக இருக்கிறான்; மனைவி இல்லாதவன்; மனைவியை விரும்பும் நிலையில் இருக்கிறான்; நீயும் மிகவும் அழகாக இருக்கிறாய். நீங்கள் இருவரும் தகுந்த ஜோடி யாக விளங்குவீர்கள். இவனே உன் போன்ற அழகிக்கு ஏற்ற கணவன்'' என்கிறார்.

एनं भज विशालाक्षि भर्तारं भ्रातरं मम ॥ III. 18. 5.

''இவனை வரித்துக்கொள். எனக்கு ஏற்கனவே மனைவி இருக் கிறாள்'' என்கிறார்.

மேற்கூறிய வார்த்தைகளிலிருந்து, ராமர் சூர்ப்பணகையிடம் வேடிக்கை செய்திருக்கிறார் என்பது வெளிப்படையாகத் தெரி கிறது. இதில் சந்தேகமில்லை. 'பர்த்தா' என்ற சொல்லை இரண்டு தடவை உபயோகிக்கிறார். ''இவன்தான் உனக்கு ஏற்றவன்'' என்கிறார். 'அக்ருததார:' என்ற சொல்லை எடுத்துக் கொண்டு உரையாசிரியர்கள் மிகவும் விரிவாக வியாக்கியானம்

செய்திருக்கிறார்கள். ராமரிடம் எல்லையற்ற பக்தியுள்ள ஒரு வகுப்பினர், 'ராமர் வேடிக்கை செய்வதில் உற்சாகம் கொண்டவர்' என்பதை விரும்புவதில்லை. ராமர்கூட வேடிக்கை செய்வதா? அவர்கூடச் சிரிக்கலாமா? அவர் தர்மமே உருவானவர். வேடிக்கை விளையாட்டை விரும்பாதவர். அப்படிப்பட்டவர் எல்லோரையும் போல் கேலிசெய்து சந்தோஷிப்பது ஹீனமாயிற்றே! ஆகவே, 'அக்ருததார:' என்ற பதத்துக்கு அவர்கள் வேறு அர்த்தம் கற்பிக்கச் சிரமப்படுகிறார்கள். ஸம்ஸ்கிருதத்தில் ஒரு பதத்துக்கு அநேக அர்த்தங்கள் இருக்கலாம். அந்தப் பதத்துக்கு, 'விவாகமாகி மனைவியைத் தன்னுடன் அழைத்து வராதவன்' என்று கூறி, ராமருடைய சத்தியத்துக்கு இழுக்கு வராமல் காப்பாற்றுவதாக அவர்கள் எண்ணுகிறார்கள். இது சரி; 'பார்யா, பர்த்தா' என்ற சொற்களை என்ன செய்வீர்கள்? 'அநுரூபஶ்ச தே பர்த்தா—தே அபர்த்தா' என்றெல்லாம் பதங்களைப் பிரித்து உரையாசிரியர்கள் சமத்காரமாக அர்த்தம் சொல்லுகிறார்கள்.

இப்படிப் பதத்தைப் பிரித்துக் கூறினால், ராமர் கேவலம் அர்த்தமில்லாமல் பேசுவதாகத்தான் ஏற்படும். லக்ஷ்மணன் தன்னுடன் மனைவியை அழைத்து வராமல் தனியே வந்திருப்பதாக ராமர் கூற நினைத்திருந்தால், சூர்ப்பணகையினிடம் அப்படியே சொல்ல முடியாதா? அவன் 'அக்ருததார:— மனைவியில்லாதவன்' என்று சொல்லி அவளை நம்பச் செய்வதுடன் தம் மனத்திருப்திக்காக அதை வேறு விதமாக மாற்றியும் கூற வேண்டுமா? இப்படிக் கூறுவதற்குப் பயன் என்ன? எதற்காக இப்படியெல்லாம் மாற்றிச் சொல்ல வேண்டும்? சாமர்த்தியமுள்ளவர்கள் வெறும் கட்சியாடுவதற்கென்றே வார்த்தைகளை இவ்வாறு வேறு பொருள்படும்படி மாற்றிக் கூறுவதில் உற்சாகம் கொள்ளுகிறார்கள். 'அக்ருததார:' என்ற பதத்துக்கு, 'தற்சமயம் மனைவி பக்கத்தில் இல்லாதவன்' என்ற பொருள் படும்படிதான் ராமர் பேசியதாகக் கூறுகிறார்கள். ஆனால் உண்மையாகச் சூர்ப்பணகையினிடம் ராமர் சொல்ல நினைத்தது என்ன? 'அக்ருததார:' என்ற பதத்தினால் சூர்ப்பணகையை ராமர் ஏமாற்ற எண்ணினார் என்றால் அது குற்றம் தானே! ஆங்கிலத்தில் 'equivocation' என்று ஒரு சொல் இருக்கிறது. இரண்டு பொருள் உள்ள சொற்களை வழங்குவதற்குத்தான் அப்படிக் கூறுவது. பிறருக்கு ஒருவிதமான பொருள், தனக்கு ஒரு விதமான பொருள் இருக்க வேண்டும். பிறர் சாதாரணமாக உள்ள அர்த்தத்தை எடுத்துக்கொண்டால் அவர்கள் ஏமாற்றமடைவார்கள். அவ்வாறு அவர்கள் தவறாக எண்ணும்படிச் செய்தால் அது குற்றம் அல்லவா? 'நான் மனத்தில் இவ்வாறு நினைத்துத்தான் கூறினேன்' என்று வாதாடுவதெல்லாம் காரியத்துக்குப் பிரயோசனமாகாது. ஆயினும் நாம் ஸம்ஸ்கிருத பதங்

களை நம் விருப்பப்படிப் பிரித்து வேறு பொருள்படக் கூறுவதில் பொழுதைச் செலவிடுகிறோம். இப்படிச் செய்வதனால், சாதாரண அர்த்தமுள்ளது, முற்றும் வேறு விதமாக மாறி, ஒருவருக்கும் நன்மை உண்டாகாதவாறு செய்துவிடுகிறது.

எல்லா மொழிகளிலும் இருபொருள் படும்படியான சொற்கள் இருக்கின்றன. அவை இல்லாத மொழிகளே இல்லை என்று கூற லாம். ஸம்ஸ்கிருத பாஷையில் அவை பின்னும் அதிகமாகவே இருக்கின்றன. அந்த மொழியின் வளம், இருவிதமான பொருள் படும்படியான வாக்கியத் தொடர்களை அமைப்பதற்குக்கூட வசதி அளிக்கிறது. பிரெஞ்சு மொழியிலும் இது அதிகமாக உண்டு. அந்த மொழியிலுள்ள சிலேஷையில் வெளிப்படையாக இல்லாத பொருள் மிகவும் மட்டமாக, மற்றவர்க்கு எடுத்துக் கூறுவதற்கு லாயக்கில்லாமல் இருக்கும். எப்படி இருந்தாலும் இரு பொருள் படக் கூறுவது பொய்யைக்காட்டிலும் மோசமானது என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்ளுவார்கள். நம்முடைய இலக்கியத்தி லும் இரு விதமான அர்த்தத்துடன் கூடிய சொல்லோ சொற்றொடரோ உண்டு. ஒன்று, அந்தச் சந்தர்ப்பத்துக்குப் பொருத்தமானது. மற்றொன்று, பின்னும் ஆழ்ந்ததாக முற்றும் வேறு விதக் கருத்தையே கொண்டதாக இருக்கும். தற்செய லாகவோ வேண்டுமென்றோ கவி சில பதங்களைப் போட்டிருப்பான். பதங்களுக்கு மேலாக ஓர் அர்த்தம் அந்த இடத்துக்கு மிகவும் பொருத்தமாக அமைந்திருக்கும். இதற்கு விரோதமில்லாமல் மற்றொரு விதமான அர்த்தமும் அந்தப் பதங்களுக்குக் கூறலாம். பின்னால் வரப்போகும் நிலைமையை அது குறிப்பதாக இருக்கும்.

நெடுநோக்கு வாய்ந்த ஒரு மகாகவி பேசும் பேச்சுக்கு அத்தகைய இருவிதமான அர்த்தங்கள் இருக்கும் என்று சொல்லு கிறார்கள். சாதாரணக் கருத்தைக்காட்டிலும் ஆழ்ந்ததான மற்றொரு கருத்து, பின்னால் விளங்கும் என்று கூறுகிறார்கள். நம் முள் இருக்கும் ஏதோ ஒருவிதச் சக்தியோ அல்லது வெளியிலிருந்து வேலை செய்யும் சக்தியோ முற்றும் வேறு விதமான கருத்தை உள்ளடக்கியுள்ள சொற்களை உபயோகிக்கச் செய்கிறது. ஆனால், 'அக்ருததார:' போன்ற பதங்களைப்பற்றி அம்மாதிரி கூறமுடியாது. ராமர் வாயில் அது பொய் என்று ஆகாமலிருப்பதற்காக, அவருக்கு மட்டும் தெரிந்த அர்த்தத்தோடு பிறருக்கு வேறு விதமாகப் படும்படி இருக்க வேண்டும். ஆனால் உண்மையில் கேட்பவருக்குத் தோன்றுவதுதான் முக்கியமானது. கேட்பவர் தவறாக அர்த்தம் கொண்டால், அவர் அதற்குச் சொன்னவர் மீதுதான் பிழை கூற வேண்டும். சொன்னவர் குற்றவாளி அல்ல என்று ஆக முடியாது. ஆகவே இது ஏதோ வேடிக்கைக்காகக் கூறிய வார்த்தைதான் என்று முடிவு செய்வதில் எனக்குச் சிறிதும் தயக்கமில்லை.

நாகோஜிபட்டர் என்ற பெரிய உரையாசிரியர் தம்முடைய திலக வியாக்கியானத்தில் சொல்லுவதை உங்களுக்குக் கூறுகிறேன், கேளுங்கள். அவரது வார்த்தையை நாம் எடுத்துக் கொள்ளலாம். ஏனெனில், அவர் கோவிந்தராஜருக்குப் பிறகு உரை வகுத்தவர். அவர் இதைப்பற்றி என்ன என்ன கூறியிருக்கிறார் என்று தெரிந்துகொண்டு, பிறகு தம்முடைய கருத்தைத் தெரிவிக்கிறார். அவர் கூறுவது;— "சில வியாக்கியானகாரர்கள் 'அக்ருததார:' என்ற பதத்துக்கு, 'விவாகமானவன்தான்; ஆனால் மனைவி தற்சமயம் கூட இல்லாதவன்' என்று அர்த்தம் கூறுகிறார்கள். ஆனால் அதற்குச் சாதாரணமாகவே நாம் அர்த்தம் கொள்ளலாம். ஒருவர் கிண்டலாகப் பேசும்பொழுது சிறிது உண்மைக்கு மாறாகப் பேசுவது அவ்வளவு பெரிய தீங்கோ தவறோ ஆகாது என்பதுதான் கவியின் நோக்கம் என்று எனக்குப் படுகிறது'' என்கிறார்.

மற்றொரு விஷயம்: ராமர் எப்போதும் ருஜுவாகவே பேசுகிறவர்; அதற்கு மாறாக ஒரு சமயமும் பேசமாட்டார் என்று வியாக்கியானகாரர்கள் கூறுவது போல் இருக்க முடியாது என்று காட்டுவதற்கு, லக்ஷ்மணன் பேசுவதை எடுத்துக்கொள்ளுங்கள். லக்ஷ்மணன் கூறியது கிண்டல் பேச்சுத்தான் என்பதில் யாருக்கும் சந்தேகமில்லை. ஒரு வியாக்கியானகாரரும் அதற்கு இரண்டு பொருள் கற்பிக்க முடியாது.

एतां विरूपामसतीं करालां निर्णतोदरीम् ।
भार्यां वृद्धां परित्यज्य त्वामेवैष भजिष्यति ॥ III. 18. 11.

ராமர்தாம் அவளுக்கு ஏற்ற கணவர் என்று சொல்வதற்காக, சீதையைப்பற்றிச் சூர்ப்பணகை வர்ணித்த விதமே லக்ஷ்மணனும் கூறுகிறான். "அவர் என் யஜமானர். நான் அவருக்குப் பணி புரிகிறவன். என்னைக் கல்யாணம் செய்துகொண்டால் நீ ஒரு வேலைக்காரனுக்குக் கீழ்ப்பட்டவளாக வேண்டும். சீதைக்கும் வேலைக்காரியாக இருக்கும்படியாகும். அது உனக்குப் பிடிக்குமா? அது சரியல்ல. அவர்தாம் உனக்கு ஏற்ற கணவர். அவரையே மணந்துகொள். அந்தக் குரூபியை வைத்துக்கொண்டு அவர் ஏன் கஷ்டப்பட வேண்டும்? உன்னைப் போல் அவளுக்கு இடுப்போ வயிறோ ஒன்றும் இல்லை. அவளுக்கு வயதும் ஆகிவிட்டது. அவளைத் தள்ளிவிட்டு உன்னையே அவர் ஏற்றுக் கொள்வார்'' என்கிறான். லக்ஷ்மணன் பரிகாசமாகப் பேசுகிறான் என்பது நன்றாகத் தெரிகிறது. ஆனால் அந்த அசடு சூர்ப்பணகைக்கு அது பரிகாசம் என்று தெரியவில்லை. அவ்வளவும் நிஜம் என்று எடுத்துக்கொள்ளுகிறாள்.

லக்ஷ்மணனிடமிருந்து அவள் ராமரிடம் செல்லுகிறாள். ராமர் அவளைத் திரும்பவும் லக்ஷ்மணனிடம் அனுப்புகிறார். இருவரில் யாராக இருந்தாலும் சரி என்றுதான் அவளுக்குத் தோன்றுகிறது. கடைசியாக ராமரிடம் வந்து அவள், "நான் உம்மைத்தான் கல்யாணம் செய்துகொள்ளப்போகிறேன். உமது மனைவி அதற்கு இடையூறாக இருப்பாள் என்றால் இதோ ஒரு நொடியில் அவளைப் புசித்துவிடுகிறேன்'' என்று கூறி, வேகமாகச் சீதையின் பக்கம் தாவுகிறாள்.

इति सा लक्ष्मणेनोक्ता कराला निर्णतोदरी ।
मन्यते तद्वचस्तथ्यं परिहासाविचक्षणा ॥ III. 18. 13.

லக்ஷ்மணன் பேசியது பரிகாசம் என்று அறியாமல், நிஜம் என்றே சூர்ப்பணகை நம்பிவிடுகிறாள். இதிலிருந்து, ராமரும் லக்ஷ்மணனும் அவளைக் கிண்டல்தான் செய்தார்கள் என்று தெரிகிறது. சீதையின் பக்கம் அவள் வேகமாகத் தாவியதும் ராமர், "லக்ஷ்மணா! போதும் பரிகாசம்'' என்று எச்சரிக்கிறார்.

तां मृत्युपाशप्रतिमामापतन्तीं महाबलः ।
निगृह्य रामः कुपितस्ततो लक्ष्मणमब्रवीत् ॥ III. 18. 18.

இப்பொழுதுதான் முதல்முதலாக ராமருக்குக் கோபம் உண்டாகிறது. 'நிக்ருஹ்ய' என்ற சொல்லைக் கவி இங்கு வழங்குகிறார். அந்தப் பதத்துக்கு, ராமர் அவளை 'ஹூம்' என்று அதட்டியோ, கையைத் தூக்கியோ தடுத்து நிறுத்தினார் என்றுதான் சிலர் அர்த்தம் கூறுவார்கள். அவ்வளவு யோசிப்பதற்கு அவசியமில்லை என்று எனக்குத் தோன்றுகிறது. 'ராமர் அவளைப் பிடித்து அப்பால் தள்ளினார்' என்று சொல்லுவதில் தவறு என்ன? ஆனால் ராமர் அவளைத் தொட்டுத் தள்ளினார் என்பது சரியல்ல என்று அவர்கள் நினைப்பார்கள்.

क्रूरैरनार्यैः सौमित्रे परिहासः कथञ्चन ।
न कार्यः पश्य वैदेहीं कथञ्चित् सौम्य जीवतीम् ॥ III. 18. 19.

''நல்ல வேளை, சீதை பிழைத்தாள். லக்ஷ்மணா, விளையாடுவதாக இருந்தால் யாருடன் விளையாடுகிறோம் என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும். இப்படிப்பட்ட ஜீவன்களுடன் விளையாடலாகாது. ஆகவே பெருவயிறு படைத்த இந்தக் கோர அரக்கியை விரூபமுள்ளவளாக்கு'' என்று ராமர் கூறுகிறார்.

इमां विरूपामसतीमतिमत्तां महोदरीम् ।
राक्षसीं पुरुषव्याघ्र विरूपयितुमर्हसि ॥ III. 18. 20.

அடுத்த விஷயத்தைப்பற்றி விவரிப்பதற்குக் கொஞ்ச நேரம் பிடிக்கும். இன்று இத்துடன் நிறுத்திக் கொள்ளுகிறேன்.

சாதாரணமாகப் பார்த்தால், ராமர் சிறிது வேடிக்கையாகப் பொழுதுபோக்க விரும்பினரே தவிர வேறென்றுமில்லை என்றே தோன்றும். பாவம்! அவர்கள் மூவரும் காட்டில் தனியே இருந் தார்கள்; வேறு மனிதர்களே இல்லை. பொழுது போவதற்கு என்ன செய்வார்கள்? இரண்டு மூன்று நாள் சேர்ந்தாற்போல் ரெயில் பிரயாணம் என்றல் எப்படி இருக்கும்? பொழுது போகாமல் பெரிதும் கஷ்டமாக இருக்கும் அல்லவா? அதுபோல மூன்று பேரும் தனியாகப் பொழுது போக்குவதற்கு வழி இல்லாமல் இருந்தபொழுது, சூர்ப்பணகை வந்து வேடிக்கையாக நேரம் போவதற்கு அவர்களுக்கு வழி செய்தாள். ராமர் அதில் சிறிது கலந்துகொண்டு பொழுது போக்கினர் என்றல் அதில் என்ன தவறு? 'அக்ருததார:' என்ற பதத்துக்கு இருபொருள்படப் பேசினர் என்று அர்த்தம் சொல்வதனல் அவருக்கு ஒரு நலனும் உண்டாகாது. அப்படி அவர் பேசினல் அது பொய் சொல்வதைக் காட்டிலும் பின்னும் மிகையானது என்றுதான் கூற வேண்டும். அவர் பொய்யும் கூறவில்லை; இருபொருள்படப் பேசவுமில்லை. அவர் சிறிது வேடிக்கையாகப் பொழுதுபோக்கினர் என்பதுதான் சரி.

# 7

## சீதையின் பிரிவில் ஸ்ரீராமர்

சூர்ப்பணகை ராமரைச் சந்தித்த நிகழ்ச்சியை முன்பு கூறினேன். அந்தச் சம்பவத்தை ஹாஸ்ய ரஸத்துக்கு ஓர் உதாரணமாகக் கவி எடுத்துக்காட்டியிருக்கிறார். ஆனால், பின்னால் ஏற்பட்ட விளைவு, அந்த ஹாஸ்ய ரஸத்தைப் பங்கப்படுத்துவதாகிறது. மொத்தக் கதைக்கும் இந்தச் சம்பவமே விதையாக அமைந்தது என்று கூறலாம். ஏனெனில், தனக்கு ஏற்பட்ட அவமானத்தைப் பொறுக்காமல் சூர்ப்பணகை கரதூஷணர்களைக் கிளப்பிவிடுகிறாள். அவர்கள் இருவரும் ராமரின் வில்லுக்கு இரையானதும், ராவணனிடம் சென்று அவனையும் சூர்ப்பணகை தூண்டிவிடுகிறாள். பின்னால் வரும் கதையைப் பார்க்கும்பொழுது இது எவ்வளவு முக்கியம் என்று தெரிகிறது. இலங்கையில் வானரர்களுக்கும் அரக்கர்களுக்கும் போர் நடந்தபொழுது கணக்கில்லாத வானரர்கள் சண்டையில் மடிகிறார்கள். கடைசியில் அவர்கள் ராமரைச் சரணமடையவும், ராமர் வந்து யுத்தம் புரிகிறார். அப்பொழுதுதான் அந்த அற்புதம் நிகழ்கிறது. ஒவ்வொருவனையும் ஒவ்வொரு ராமர் எதிர்த்துப் போரிடுவது போலத் தோன்றுகிறது. தனியாகவும் பல ராமர்களாகவும் பார்க்குமிடமெல்லாம் தோற்றம் ஏற்படுகிறது. கணக்கில்லாத ராக்ஷஸர்களைக் கொன்று குவித்து இலங்கை முழுவதும் துன்பமயமாகிறது.

அடுத்த ஸர்க்கத்தில், கணவர்களை இழந்தும், பிள்ளைகளை இழந்தும், தந்தை சகோதரர் ஆகியவர்களை இழந்தும் சோகத்தில் ஆழ்ந்து கிடக்கும் ராக்ஷஸிகளைப்பற்றி வால்மீகி வர்ணிக்கிறார். எல்லோரும் சேர்ந்து வாய்விட்டுப் புலம்புகிறார்கள். இந்த இடத்தில் கவியின் ஹாஸ்ய உணர்ச்சி நன்கு வெளியாகிறது. பெண்களின் இயல்பின்படி அவர்கள் எல்லாக் குற்றத்தையும் ஒரு ஸ்திரீயின்மீதே சுமத்தி நிந்திக்கிறார்கள். "எல்லாவற்றிற்கும் மூலகாரணம் சூர்ப்பணகைதான். அவள்தான் ராமரிடம் சென்று அவரை எதிர்த்திருக்கிறாள்" என்கிறார்கள். சூர்ப்பணகை ராமரைச் சந்தித்ததன் விளைவுதான் இவ்வளவு கஷ்டமும் என்று அவளைப்

பழிக்கிருர்கள். உடனே, ராமர் சூர்ப்பணகை ஆகிய இருவரின் நினைவு வரவே கவியின் ஹாஸ்ய உணர்ச்சி மீண்டும் கிளர்ந்தெழு கிறது. கணவர் மக்கள் தந்தையர் சகோதரர் ஆகியோரை இழந்த ராக்ஷஸிகள் புலம்புவதைக் கேளுங்கள்:—

कथं शूर्पणखा वृद्धा कराला निर्णतोदरी ।
आससाद वने रामं कन्दर्पमिव रूपिणम् ॥
सुकुमारं महासत्त्वं सर्वभूतहिते रतम् ।
तं दृष्ट्वा लोकवध्या सा हीनरूपा प्रकामिता ॥
कथं सर्वगुणैर्हीना गुणवन्तं महौजसम् ।
सुमुखं दुर्मुखी रामं कामयामास राक्षसी ॥
जनस्यास्याल्पभाग्यत्वाद्वलिनी श्वेतमूर्धजा ।
अकार्यमपहास्यं च सर्वलोकविगर्हितम् ॥
राक्षसानां विनाशाय दूषणस्य खरस्य च ।
चकाराप्रतिरूपा स राघवस्य प्रधर्षणम् ॥
तन्निमित्तमिदं वैरं रावणेन कृतं महत् ।
वधाय सीता सानीता दशग्रीवेण रक्षसा ॥ VI.95. 6-11.

''மன்மதன் போன்ற ரூபமுடைய ராமனை இந்தக் கிழட்டுக் குரூபி சூர்ப்பணகை ஏன் அடைய விரும்ப வேண்டும்? உயிருடன் இருக்கத் தகுதியற்ற இவள் ராமனை வசீகரிக்க முடியுமா? இவளால்தானே ராமன் நம்மைப் பழிவாங்க வந்திருக்கிருன்? தான் அழிந்துபோவதோடு தன்னைச் சேர்ந்த அனைவரையும் ராவணன் அழித்துவிடுவான் போலிருக்கிறதே!'' என்று புலம்பு கிருர்கள்.

அரண்யகாண்டத்தில், தாம் இல்லாதபோது சீதை அபகரிக்கப் பட்டதை எண்ணிக் கலங்கிய ராமர் சீதையின் பிரிவைத் தாங்காமல் தம் நிதானத்தை இழந்து வருந்தும் கட்டத்துக்குச் செல்வோம். அவரது துன்பத்துக்கு எல்லையே இல்லை. அதை வர்ணிக்கும்பொழுது கவியின் புலமை உச்சநிலையை அடைகிறது. ராமர் தம் நினைவற்று, என்ன சொல்லுகிருேம் என்றுகூட அறியாதவராக இருக்கிருர். துக்க வேகத்தில் மனம் சுவாதீன மில்லாத நிலையடைந்தவர்களைப்பற்றிக் கேட்டிருப்போம். ஆனுல் அது இந்தக் காலத்தில் அவ்வளவு சாதாரணமில்லை. கவியின் வர்ணனையிலிருந்து, அந்தக் காலத்தில் ஆண் பெண்கள் தம் துன்ப உணர்ச்சிகளை அடக்க வேண்டும் என்ற முயற்சி சிறிதும் இல்லா திருந்திருப்பார்கள் என்று தோன்றுகிறது. ராமரைப் போன்ற தீர புருஷர்கள்கூட இதற்கு விலக்கல்ல என்று கூறலாம். இரண்டோர் இடங்களை மட்டும் குறிப்பிடுகிறேன்.

எல்லை மீறிய சோகத்தில் ஆழ்ந்து ராமர் உலகிலுள்ள அனைத்தின் மீதும் கோபம் கொள்ளுகிறார். மரம் மலை ஆறு விலங்கு பறவை ஆகியவை யாவற்றையும் கேட்டுப் பார்த்தும் அவை ஒன்றும் பதில் கூறவில்லை. பிறகு தேவர்களுக்காவது தெரிந்திருக்க வேண்டும் என்று எண்ணி அவர்களைக் கேட்கிறார். "சீதையை என் கண்ணில் படாமல் ஒளித்து வைத்திருக்கிறார்கள். அவளை எனக்குக் காட்டவில்லையென்றால் என்னிடமுள்ள பலத்தைப் பிரயோகித்து அனைத்தையும் நாசமாக்கிவிடுவேன்'' என்கிறார். தர்மத்தையே எப்பொழுதும் போதிக்கும் ஒரு தீர புருஷர் சோகத்தில் அடிபட்டுத் தவிப்பதைப் பாருங்கள். கோபத்தில் லக்ஷ்மணன் கையிலுள்ள வில்லைப் பலவந்தமாகப் பறித்து எடுத்துக் கொண்டு பேசுகிறார் :—

लक्ष्मणादथ चादाय रामो निष्पीड्य कार्मुकम् ।
शरमादाय सन्दीप्तं घोरमाशीविषोपमम् ॥
सन्दधे धनुषि श्रीमान् रामः परपुरञ्जयः ।
युगान्ताग्निरिव क्रुद्ध इदं वचनमब्रवीत् ॥
यथा जरा यथा मृत्युर्यथा कालो यथा विधिः ।
नित्यं न प्रतिहन्यन्ते सर्वभूतेषु लक्ष्मण ॥
तथाहं क्रोधसंयुक्तो न निवार्योऽस्म्यसंशयम् ।
पुरेव मे चारुदतीमनिन्दितां दिशन्ति सीतां यदि नाद्य मैथिलीम् ।
सदेवगन्धर्वमनुष्यपन्नगं जगत् सशैलं परिवर्तयाम्यहम् ॥

III. 64. 75-78.

"லக்ஷ்மணா! இதோ பார்; வில்லை எடுத்துவிட்டேன். இந்த உலகத்தையே அழித்துவிடுவேன். என்னை யாரும் தடுக்க முடியாது. இதோ உலகம் அழியப்போகிறது'' என்றெல்லாம் சொல்லுகிறார். தாம் பேசுவதை அறியும் நிலையில் அவர் இல்லை. சோகம் அவரை அவ்வாறு நிலைகலங்கச் செய்துவிடுகிறது. சுய நினைவோடு இருந்தால் அவர் இவ்வாறெல்லாம் பேசியிருக்க மாட்டார். லக்ஷ்மணன் அவரைத் தேற்றும்படியாகிறது. இது கொஞ்சம் அபூர்வமானது. எப்பொழுதும் கோபம் கொள்ளுகிறவன் லக்ஷ்மணன். ராமர் எப்பொழுதும் சாந்தமாக இருப்பவர். இப்பொழுது இருவர் நிலைமையும் மாறியிருக்கிறது.

पुरा भूत्वा मृदुर्दान्तः सर्वभूतहिते रतः ।
न क्रोधवशमापन्नः प्रकृतिं हातुमर्हसि ॥
चन्द्रे लक्ष्मीः प्रभा सूर्ये गतिर्वायौ भुवि क्षमा ।
एतच्च नियतं सर्वं त्वयि चानुत्तमं यशः ॥
एकस्य नापराधेन लोकान् हन्तुं त्वमर्हसि ॥

त्वमेव हि पुरा राम मामेवं बहुशोऽन्वशाः ।
अनुशिष्याद्धि को नु त्वामपि साक्षाद् बृहस्पतिः ।
बुद्धिश्च ते महाप्राज्ञ देवैरपि दुरन्वया ।
शोकेनाभिप्रसुप्तं ते ज्ञानं सम्बोधयाम्यहम् ॥ III. 65, 4-6, 66, 18-19.

"நீங்கள் எப்பொழுதும் சாந்தமாக எல்லா உயிர்களிடத்தும் அன்பாக மிருதுவாக இருப்பவர். கோபம் வந்ததும் உங்கள் இயல்பை மீறலாமா? சந்திரனை விட்டுக் காந்தியையும், சூரியனை விட்டுப் பிரகாசத்தையும், காற்றை விட்டுச் சலனத்தையும் எப்படிப் பிரிக்க முடியாதோ அப்படியே பரிவையும் சாந்தத்தையும் உங்கள் இயல்பை விட்டுப் பிரிக்க இயலாது. உங்கள் குணத்துக்கு மாறாக நடக்க வேண்டாம். அந்தக் கொடியவன் ராவணன் உங்கள் மனைவியை அபகரித்துச் சென்றதற்காக உலகத்தையே தண்டிப்பதா? அந்த அரக்கனைக் கண்டுபிடித்து, அவனைக் கொன்று, சீதையை மீட்க முடியாதா? இந்தக் கோபத்தை விடுங்கள். சீதையைத் தேடிப் பார்ப்போம். நான் இவ்வாறு கோபத்துக்கு ஆளாகிப் பிதற்றினால் நீங்கள் என்னைக் கண்டித்துத் திருத்துவீர்கள். நீங்களே இப்படி நடப்பதாக இருந்தால் உங்கள் பிரதிக்ஞையை யார் நிறைவேற்றுவார்கள்? நான் உங்களுக்குப் போதிக்க வரவில்லை. சோகம் தாங்காமல் நீங்கள் சுய அறிவை இழந்திருப்பதைக் கண்டு கூறுகிறேன்'' என்று லக்ஷ்மணன் ராமரைச் சமாதானப்படுத்துகிறான்.

சிறிது நேரத்திற்குப் பிறகு அவர்கள் ஜடாயுவைப் பார்க்கிறார்கள். மரணாவஸ்தையில் இருந்தும், ஜடாயு ராமரைக் கண்டு, சீதைக்கு நேர்ந்ததை அவரிடம் கூறிவிட்டு உயிரை விடக் காத்திருக்கிறார். அவரிடமிருந்து நடந்ததைத் தெரிந்துகொண்டு, உயிர் பிரிந்ததும், ஒரு புத்திரன் பிதாவுக்குச் செய்வது போல அவரது உடலைத் தகனம் செய்து, அவரது ஆத்மா நல்ல கதியைப் பெற உத்தரக்கிரியைகளைச் செய்கிறார்கள். "எனக்குச் சிறிது உபகாரம் செய்த இந்தப் பக்ஷியும் போய்விட்டது. என் துர்ப்பாக்கியம் அக்கினியைக்கூடத் தகித்துவிடும் என்று நினைக்கிறேன்'' என்று ராமர் வருந்துகிறார். பெரிய கஷ்டங்கள் வரும்பொழுது தீர புருஷர்களாக இருப்பவர்கள்கூட எவ்வளவு நிதானமிழந்து பலவிதமாகப் பேசி வருந்தத்தக்க நிலையை அடைகிறார்கள்! அவர்களைத் தாங்கிக்கொண்டு அவர்களின் கண்ணீரைத் துடைத்துச் சமாதானப்படுத்துவதைத் தவிர நாம் வேறு என்ன செய்ய முடியும்? ராமர்கூட இம்மாதிரி நிலையைத்தான் அடைந்திருந்தார் என்பதைக் காட்டுவதற்காகவே இந்தச் சம்பவத்தைக் கூறினேன்.

எல்லோரையும் போல் ராமர் சில சமயம் சாதாரண மனிதராகவே விளங்கினார் என்பதையும், வால்மீகி மனித இயல்பை

எவ்வளவு நன்ருக அறிந்தவர் என்பதையும் விளக்கக்கூடிய மற்ருெரு சம்பவத்தைக் கூறுகிறேன். கிஷ்கிந்தா காண்டத்தில், ஓரிடத்தில் வெளிப்படையாகச் சொல்லாமல் விடுகிருர் கவி. அதை இப்பொழுது கூறுகிறேன். வாலி வதமாகி, சுக்கிரீவனை அரியணையில் அமர்த்திய பிறகு, அந்த விழாவில் கலந்துகொள்ளும் படி ராமரை அழைத்தபொழுது அவர், ''பட்டணத்துக்குள் பிரவேசிப்பதில்லை என்று நான் ஒரு பிரதிக்கினை செய்துகொண் டிருக்கிறேன். ஆகவே உனக்குப் பட்டாபிஷேகம் நடக்கும் பொழுது நான் கிஷ்கிந்தைக்குள் வர முடியாது. நான் ஊருக்கு வெளியிலேயே இருக்கிறேன். நீ அபிஷேகம் செய்துகொள்'' என்று கூறிவிட்டுப் பிரசிரவண மலையில் லக்ஷ்மணனுடன் தங்குகிருர். ராஜ்யம் கிடைத்த களிப்பில் ஆழ்ந்து சுக்கிரீவன் குடியிலும் கேளிக் கையிலும் மெய்ம்மறந்திருக்கிருன். அந்தச் சப்தம் ஊருக்கு வெளியே இருக்கும் ராமர் காதிலும் விழுகிறது. மற்றச் சமயமாக இருந்தால் அவர் அதைப் பொருட்படுத்தியிருக்க மாட்டார். ஆனுல் சீதையைப் பிரிந்து சோகத்தில் ஆழ்ந்திருக்கும்பொழுது மக்களின் உல்லாச ஆரவாரம் அவரைத் துன்புறுத்துகிறது.

''என்னுல் அல்லவா சுக்கிரீவனுக்கு ராஜ்யம், மனைவி அனைத்தும் கிட்டியிருக்கிறது? அவனது சந்தோஷத்துக்கு நான் தான் காரணம்'' என்று வாய்விட்டுச் சொல்லுகிருர். உடனே லக்ஷ்மணன் அவரைத் தேற்றி, ''சரத்காலம் வரும்வரையும் கொஞ்சம் பொறுமையாக இருங்கள். அதற்கு இன்னும் நான்கு மாதங்கள் இருக்கின்றன. அதற்குள் நீங்கள் இப்படி அவசரப் படுகிறீர்களே'' என்கிருன்.

उपकारेण वीरस्तु प्रतिकारेण युज्यते ।
अकृतज्ञोऽप्रतिकृतो हन्ति सत्त्ववतां मनः ॥ IV. 27. 45.

''சுக்கிரீவனைப் போலப் பிறரிடமிருந்து எல்லையற்ற உபகாரத் தைப் பெற்று, நன்றியற்றவர்களாக, மாற்று உபகாரம் செய்ய வேண்டும் என்பதையே மறந்துவிட்டால், அப்புறம் மனிதர்கள் இந்த உலகில் எப்படி வாழ்வது? ஒருவரிடம் ஒருவருக்கு நம்பிக்கை என்பதே அப்புறம் அற்றுப் போய்விடுமே! என் போன்றவர்களுக்கு அமைதி என்பதும் இல்லாமற் போய்விடவில்லை; அப்படிப்பட்ட கஷ்டம் நேராது'' என்று தம்மைத் தேற்றிக்கொள்ளுகிருர். பிறகு வேருேர் எண்ணம் தோன்றவும் முடிவாக லக்ஷ்மணன் கூறுகிருன்:—

नियम्य कोपं प्रतिपाल्यतां शरत् क्षमस्व मासांश्चतुरो मया सह ।
वसाचलेऽस्मिन् मृगराजसेविते संवर्धयन् शत्रुवधे समुद्यमम् ॥
IV. 27, 48.

"கிரீஷ்ம ருது வரும் வரையிலும் காத்திருங்கள். இந்த நான்கு மாதங்களும் போகட்டும். உங்களுக்குப் பொறுமை அதிக மாயிற்றே! இவ்வுலகில் நீங்கள் வேண்டியதை அடைவதற்கு உங்களுக்குச் சக்தி இருக்கிறது. ஒருவராகவே இருந்து வெற்றி பெறுவதற்கு உங்களுக்குச் சாமர்த்தியம் உண்டு. இப்பொழுது சுக்கிரீவன் வேறு இருக்கிறான். பொறுமையை இழப்பதற்கு ஒன்றும் அவசியமில்லையே" என்று கூறிச் சமாதானம் செய்கிறான்.

வால்மீகியின் கவிதைநயத்தைப் பற்றிக் கூறும்பொழுது அவருடைய உவமைகளின் சிறப்பைச் சொல்ல வேண்டும். அவை அவரிடமிருந்து மிகவும் அநாயாசமாக வருகின்றன. அவற்றின் பொருத்தமும் அழகும் இலக்கியச் சுவை மிகுந்த உள்ளங்களுக்கு இணையற்ற இன்பத்தை அளிக்கின்றன.

இந்த உவமைக் கோவையைப் பாருங்கள். இயற்கையை எவ்வளவு நன்றாகக் கவி அநுபவித்துக் கூறுகிறார் என்பது தெரிகிறது. சீதையின் பிரிவாற்றாமையினால் ராமர் ஒரே ஏக்கமடைந்திருக்கும் நிலையில் இந்த உவமைகள் வருகின்றன:—

एषा घर्मपरिक्लिष्टा नववारिपरिप्लुता ।
सीतेव शोकसन्तप्ता मही बाष्पं विमुञ्चति ।
एष फुल्लार्जुनः शैलः केतकैरधिवासितः ।
सुग्रीव इव शान्तारिर्धाराभिरभिषिच्यते ॥ IV. 28. 7, 9.

இயற்கை இங்கு மாறிக் காண்கிறது. சீதையை இயற்கையோடு ஒப்பிடுவதற்குப் பதிலாக, இயற்கையில் உள்ளவற்றைச் சீதையோடு ஒப்பிட்டுச் சொல்லுகிறார். ராமர் சீதையின் நினைவாகவே இருப்பதனால் இயற்கையின் அழகைக் கவனிக்கும்பொழுது சீதையின் நினைவு அவருக்கு வந்துவிடுகிறது.

नीलमेघाश्रिता विद्युत् स्फुरन्ती प्रतिभाति मे ।
स्फुरन्ती रावणस्याङ्के वैदेहीव तपस्विनी ॥ IV. 28. 12.

"கறுத்த மேகத்தினிடையே மின்னல் ஒளிருவது, சீதை ராவணனுடைய கைகளில் அகப்பட்டுத் துடிப்பது போல் இருக்கிறது" என்கிறார். இதனால் நமக்கு என்ன தெரிகிறது? வர்ஷாகாலம் வந்துவிட்டது. மேகவர்ஷம் ராமரது வேதனையை அதிகரிக்கச் செய்கிறது.

इमाः स्फीतगुणा वर्षाः सुग्रीवः सुखमश्नुते ।
विजितारिः सदारश्च राज्ये महति च स्थितः ॥
अहं तु हृतदारश्च राज्याच्च महतश्च्युतः ।
नदीकूलमिव क्लिन्नमवसीदामि लक्ष्मण ॥ IV. 28. 57-58.

"மனைவியையும் அரசையும் மீண்டும் பெற்றுச் சுக்கிரீவன் சந்தோஷமாக இருக்கிறான். நானோ இங்கு மட்டில்லாத் துன்பத்தை அநுபவித்துக்கொண்டிருக்கிறேன்."

अयात्रां चैव दृष्ट्वेमां मार्गांश्च भृशदुर्गमान् ।
प्रणते चैव सुग्रीवे न मया किञ्चिदीरितम् ॥
अपि चातिपरिक्लिष्टं चिराद्दारैः समागतम् ।
आत्मकार्यगरीयस्त्वाद्वक्तुं नेच्छामि वानरम् ॥
स्वयमेव हि विश्रम्य ज्ञात्वा कालमुपागतम् ।
उपकारं च सुग्रीवो वेत्स्यते नात्र संशयः ॥ IV. 28. 60, 62.

"சுக்கிரீவன் அபிஷேகம் செய்துகொள்ளுமுன் என்னைச் சரணமடைந்திருந்தான். அப்பொழுது அவனை எதை வேண்டுமானாலும் செய்யும்படி நான் கட்டளையிட்டிருக்கலாம். ஆனால் அவனது கடமையைப்பற்றி ஏதும் கூற நான் விரும்பவில்லை. எவ்வளவோ பரிவுடன் அவனை நடத்தியிருக்கிறேன். அவனிடம் அநுதாபத்துடன், அவனுக்கு ஒரு கஷ்டமும் கொடுக்கக்கூடாது என்று இருந்தேன்" என்றெல்லாம் ராமர் கூறுகிறார்.

சுக்கிரீவனுடைய மந்திரிகளுள் நல்ல அறிவும் முன்யோசனையும் படைத்த ஓர் அமைச்சர் உண்டு; அவர்தாம் அனுமார். சொன்ன கெடு தாண்டிவிட்டது என்பதை அறிந்து அந்தப்புரத்திற்குச் சென்று அவர் சுக்கிரீவனுக்கு எடுத்துரைக்கிறார்; "நீங்கள் ராமரிடமிருந்து ஸகல ஸௌபாக்கியங்களையும் அடைந்திருக்கிறீர்கள். இப்பொழுது அவரை மறந்து உங்கள் சந்தோஷத்திலேயே ஈடுபட்டிருக்கலாமா? குறிப்பிட்ட காலம் ஆகிவிட்டது. எழுந்து கடமையைச் செய்யுங்கள்" என்கிறார். உடனே சுக்கிரீவன் தன் ராஜ்யத்திலுள்ள எல்லா வானரர்களையும் வரவழைத்து ஒன்று கூட்டும்படித் தன் சேனாபதிக்கு உத்தரவிடுகிறான். "வானரர்கள் வந்து சேர்ந்ததும், எனக்காகக் காத்திராமல் நீரே வேண்டியதைச் செய்யும்" என்று அனுமாருக்கும் கட்டளையிடுகிறான்.

सुग्रीवः सत्त्वसम्पन्नश्चकार मतिमुत्तमाम् ।
सन्दिदेशातिमतिमान् नीलं नित्यकृतोद्यमम् ॥
दिक्षु सर्वासु सर्वेषां सैन्यानामुपसङ्ग्रहे ।
यथा सेना समग्रा मे यूथपालाश्च सर्वशः ॥
समागच्छन्त्यसङ्गेन सेनाग्राणि तथा कुरु ।

* * *

स्वयं चानन्तरं सैन्यं भवानेवानुपश्यतु ॥
त्रिपञ्चरात्रादूर्ध्वं यः प्राप्नुयान्नेह वानरः ।
तस्य प्राणान्तिको दण्डो नात्र कार्या विचारणा ॥

हरींश्च वृद्धानुपयातु साङ्गदो
भवान् ममाज्ञामधिकृत्य निश्चिताम् ।
इति व्यवस्थां हरिपुङ्गवेश्वरो
विधाय वेश्म प्रविवेश वीर्यवान् ॥ IV. 29. 29-34.

சுக்கிரீவன் ஆஜ்ஞை உடனே நிறைவேற்றப்பட வேண்டும். அந்த ஆஜ்ஞையை மீறுகிறவன் கடும் தண்டனைக்குள்ளாவான். "இன்றைக்குப் பதினைந்து நாட்களுக்குப் பிறகு வருகிறவனுக்கு உடனே மரண தண்டனை விதிக்கப்படும்'' என்று உத்தரவு பிறப்பித்துவிட்டு அவன் அந்தப்புரத்துக்குச் சென்றுவிடுகிறான். ராமரும் மனிதரே என்பதை அவன் நினைவு கூர்ந்திருக்க வேண்டும். ராமருக்கு மீண்டும் மன அமைதி குறைகிறது. சுக்கிரீவன் குறிப்பிட்ட காலத்திற்குள் செய்திருக்கும் ஏற்பாடு அவருக்குத் தெரியாது அல்லவா? அவருக்குக் கோபம் தலைக்கேறுகிறது. சுக்கிரீவனை நிந்தித்துப் பேசுகிறார்.

இப்பொழுது மூன்று சுலோகங்களை இங்கே எடுத்துக் கூறுகிறேன். அவற்றை நான் மொழிபெயர்க்கப் போவதில்லை. வால்மீகி எதற்காக அத்தகைய சுலோகங்களை ராமர் வாயிலாக வரச் செய்திருக்கிறார் என்று விளங்கவில்லை. அவருக்குச் சொல்ல வேண்டுமென்ற ஆவல் உண்டாகியிருக்கும். ராமர் வர்ணிப்பதாகக் கூறுவதனால் அவரே அவற்றைக் கூறட்டும் என்று விட்டிருக்கலாம். ஆயினும் வால்மீகியே இவ்வித வர்ணனையில் ஈடுபடுவானேன்? பின்னால் வரும் கவிகள் வேண்டுமானால், 'வெளியிடத் தகுதியில்லாத வார்த்தைகளைச் சொல்லக்கூடாது' என்ற நியமம் இல்லாதவர்களாதலால், அத்தகைய சொற்களைக் கூசாமற் சொல்லலாம்.

चञ्चचन्द्रकरस्पर्शहर्षोन्मीलिततारका ।
अहो रागवती सन्ध्या जहाति स्वयमम्बरम् ॥
दर्शयन्ति शरन्नद्यः पुलिनानि शनैश्शनैः ।
नवसङ्गमसंव्रीडा जघनानीव योषितः ॥
मीनोपसन्दर्शितमेखलानां नदीवधूनां गतयोऽद्य मन्दाः ।
कान्तोपभुक्तालसगामिनीनां प्रभातकालेष्विव कामिनीनाम् ॥
IV. 30. 45, 46, 55.

ராமர் வாயிலிருந்து மேற்கண்ட வார்த்தைகள் வருவது பெரிய அபசாரமாகவே தோன்றுகிறது. ராமருடைய உள்ளமே இயற்கையின் வனப்பில் ஈடுபட்டு இத்தகைய உவமைகளை ரஸித்ததோ, அல்லது சரத்காலத்தை வர்ணிக்க வேண்டும் என்ற ஆவலில் ராமரின் வாயிலாகக் கவி இந்த வர்ணனையில் ஈடுபட்டாரோ தெரியவில்லை.

சுக்கிரீவனை ராமர் நிந்தித்துப் பேசியதைப்பற்றிக் கூறினேன். அதைக் கேட்டு லக்ஷ்மணன் கொதித்தெழுந்து சுக்கிரீவனை வெறும் வார்த்தைகளால் ஏசிவிட்டு வருவதற்குப் பதிலாக, அவனை வேலை தீர்த்துவிடுவதாகவே கிளம்பியதைப் பற்றியும் கூறினேன். உடனே ராமர் பயந்துபோய், ''நான் அப்படியொன்றும் சொல்ல வில்லை. லக்ஷ்மணா! போய் மெதுவாகச் சாந்தமாகப் பேசு'' என்கிறார். ஆனால், லக்ஷ்மணனுக்கு அதெல்லாம் மறந்துபோய் விட்டது. ராமர் செய்த எச்சரிக்கை இதுதான்:

न च सङ्कुचितः पन्था येन वाली हतो गतः ।
समये तिष्ठ सुग्रीव मा वालिपथमन्वगाः ॥ IV. 30, 81.

"வாலி சென்ற வழி இன்னும் அடைபடவில்லை. அந்த வழியே நீயும் சென்றுவிட வேண்டாம். சுக்கிரீவா! ஜாக்கிரதையாக இரு'' என்று லக்ஷ்மணன் வாயிலாகச் சுக்கிரீவனுக்குச் சொல்லி அனுப்பு கிறார். மற்றோர் இடத்திலும் ராமர் கூறும் வார்த்தைகள் அவரது மனநிலையை நன்கு விளக்குவனவாக இருக்கின்றன.

एक एव रणे वाली शरेण निहतो मया ।
त्वां तु सत्यादतिक्रान्तं हनिष्यामि सबान्धवम् ॥ IV. 30, 82.

''நான் வாலியை மட்டுமே கொன்றேன். ஆனால் சத்தியத்தை மீறிய உன்னைமட்டுமல்ல, உன்னைச் சேர்ந்தவர்களையும் கொன்றால் தான் என் மனம் திருப்தியடையும்'' என்கிறார் ராமர். தாரை வந்து லக்ஷ்மணனைச் சமாதானப்படுத்துகிறாள். அவள் வாயிலாக வரும் அழகிய சுலோகங்களைப் படிக்கும்பொழுது, ஷேக்ஸ்பியரின் நாடகத்தில் வரும் போர்ஷியா என்பவளைப் போலத் தோன்று கிறது. லக்ஷ்மணனிடம் அநேக காரணங்களை எடுத்துக்கூறி, அவை அவன் மனத்திற்பட்டதை அறிந்தபின் முக்கியவிஷயத்தைக் கூறிக் காரியத்தைச் சாதித்துக்கொள்ளும் தாரையினிடம் வழக்கறிஞர் பலரும் பாடம் கற்றுக்கொள்ளலாம் என்று நினைக்கிறேன்.

नैवं लक्ष्मण वक्तव्यो नायं परुषमर्हति ।
हरीणामीश्वरः श्रोतुं तव वक्त्राद्विशेषतः ॥
नैवाकृतज्ञः सुग्रीवो न शठो नापि दारुणः ।
नैवानृतकथो वीर न जिह्मश्च कपीश्वरः ॥
उपकारं कृतं वीरो नाप्ययं विस्मृतः कपिः ।
रामेण वीर सुग्रीवो यदन्यैर्दुष्करं रणे ॥
रामप्रसादात् कीर्तिं च कपिराज्यं च शाश्वतम् ।
प्राप्तवानिह सुग्रीवो रुमां मां च परन्तप ॥
रुमां मां कपिराज्यं च धनधान्यवसूनि च ।
रामप्रियार्थं सुग्रीवस्त्यजेदिति मतिर्मम ॥ IV. 35, 2-5, 13.

"வானரர்களுக்கெல்லாம் ஈச்வரன் சுக்கிரீவன். அப்படிப் பட்டவனை மிகவும் சாதாரணமாக நினைத்துப் பேச வேண்டாம். அவன் நன்றி கெட்டவனல்ல. ராமரிடமிருந்து அடைந்த பேருதவி எதையும் அவன் மறந்துவிடவில்லை. அவன் நல்ல குணமுள்ளவன்; கடமையைத் தவறாமல் செய்திருக்கிறான். அவனது நற்பண்பை அறிந்தால் நீங்கள் கொண்டாடுவீர்கள். ராமருடைய திருப்திக் காக அவன் எது வேண்டுமாயினும் செய்வான்" என்றெல்லாம் பேசுகிறாள்.

त्वत्सहायनिमित्तं वै प्रेषिता हरिपुङ्गवाः ।
आनेतुं वानरान् युद्धे सुबहून् हरियूथपान् ॥
तांश्च प्रतीक्षमाणोऽयं विक्रान्तान् सुमहाबलान् ।
राघवस्यार्थसिद्ध्यर्थं न निर्याति हरीश्वरः ॥
कृतात्र संस्था सौमित्रे सुग्रीवेण यथा पुरा ।
अद्य तैर्वानरैः सर्वैरागन्तव्यं महाबलैः ॥
ऋक्षकोटिसहस्राणि गोलाङ्गूलशतानि च ।
अद्य त्वामुपयास्यन्ति जहि कोपमरिन्दम ॥ IV. 35. 19-22.

லக்ஷ்மணனது சினம் தன்றாகத் தணிந்துவிட்டது என்று தெரிந்ததும் தாரை, "சுக்கிரீவன் ஏற்கனவே வேண்டிய காரியங் களுக்கு உத்தரவு கொடுத்திருக்கிறான். உங்களிடம் வந்து, 'எல்லாம் தயாராக இருக்கிறது' என்று சொல்ல வேண்டும் என்று தான் எண்ணிக்கொண்டிருக்கிறான். இன்று பதினைந்தாம் நாள் வானரர்கள் எல்லோரும் வந்து சேர்ந்துவிடுவார்கள். கோடிக் கணக்காக அவர்கள் வந்து குவியப்போவதை நீங்கள் காணப் போகிறீர்கள்" என்கிறாள்.

லக்ஷ்மணன் கோபம் முற்றும் தணிந்து, தன் கோபத்துக்குக் காரணமே இல்லை என்று அறிந்து, சுக்கிரீவனிடம், "என்னை மன்னித்துவிடு, சுக்கிரீவா. ராமர் சோகத்தினால் வருந்திக்கொண் டிருந்ததைக் கண்டு தாங்காமல் எனக்குக் கோபம் வந்துவிட்டது. நீ போய் அவருக்குத் தேறுதல் கூறு" என்கிறான். நடந்த விவரங் களை அறிந்ததும், ராமரின் பெருந்தன்மை மீண்டும் மேலோங்கு கிறது. அவர் சுக்கிரீவனைத் தழுவிக்கொண்டு கூறுகிறார்:—

इति ब्रुवाणं सुग्रीवं रामो धर्मभृतां वरः ।
बाहुभ्यां सम्परिष्वज्य प्रत्युवाच कृताञ्जलिम् ॥
यदिन्द्रो वर्षते वर्षं न तच्चित्रं भवेद्भुवि ।
आदित्यो वा सहस्रांशुः कुर्याद्वितिमिरं नभः ॥
चन्द्रमा रश्मिभिः कुर्यात् पृथिवीं सौम्य निर्मलाम् ।
त्वद्विधो वापि मित्राणां प्रतिकुर्यात् परन्तप ॥ IV. 39. 1-3.

''வறண்டு கிடக்கும் பூமியின்மீது இந்திரன் மேகங்களைத் திரட்டி வருஷிப்பது ஆச்சரியமா? அது அவனது இயல்பு அல்லவா? சூரியனைக் கண்டு இருள் ஓடி மறைந்தால் அதில் வியப்பதற்கு என்ன இருக்கிறது? இந்திரன் மழையைப் பொழிவதும், வெப்பத்தையும் துன்பத்தையும் உலகிலிருந்து சந்திரன் நீக்குவதும், இருளைக் கதிரவன் போக்குவதும் எவ்வளவு இயல்பானவையோ அது போலத்தான் நீ உன் கடமையைச் செய்வதும்'' என்று அவனைப் பாராட்டிப் பேசுகிறார். இதற்கு முந்திய ஸர்க்கத்தில்தான் சுக்கிரீவனை அவரே பழித்துப் பேசினார். ஆனால் இதிலிருந்து அவரது உண்மையான குணம் பிறரின் பிழையைப் பொருட்படுத்தாமல் பாராட்டுவதே என்பது புலனாகிறது.

இதுவரையிலும் கோபமும் ஆத்திரமும் பொறாமையும் கிளம்பி நம் அனைவரையும் ஆட்டி வைப்பது போல் ராமரும் சிறிது அந்த உணர்ச்சிகளுக்கு ஆளாகி நிதானமிழந்து நடந்துகொள்ளும் சம்பவங்களை எடுத்துக் கூறினேன். தம் நிதானமிழந்தோ அல்லது பிறருடைய உறுதியின்மை காரணமாகவோ எவ்வளவு தூரம் ராமர் சாதாரண மனித இயல்புடன் நடந்துகொண்டார் என்பதை எடுத்துக்காட்ட வேண்டும் என்றால் ராமாயணம் முழுவதும் ஆராய்ந்து அங்கங்கே உள்ள சம்பவங்களைப் பார்க்க வேண்டும். மீண்டும் மீண்டும் அவற்றை எடுத்துக்காட்டிக் கொண்டிருப்பது அவசியமில்லை என்று நினைக்கிறேன். ஒன்றுமட்டும் நிச்சயமாகச் சொல்லலாம்: உயர்வும் தாழ்வுமான இரண்டு இயல்புகள் நமக்கு இருக்கின்றன. மன எழுச்சிகளுக்கு இடம் கொடுக்காமல் உறுதியாக இருக்கப் பயிற்சி பெற்றவர்கள் எப்பொழுதாவது சிறிது மனஉறுதி குறைந்தாலும் அதை உடனே சரிசெய்து முன்பு இருந்த நிலைக்குக் கொண்டுவந்துவிடுவார்கள். உயர்வு இயல்பு மேலோங்கும்பொழுது எப்படி நடக்க வேண்டுமோ அப்படி நடப்பார்கள். நல்ல பழக்கமின்மை, சுற்றியிருக்கும் மனிதர்களின் கெட்ட சேர்க்கை ஆகிய பலவேறு காரணங்களினாலும், தக்க சமயத்தில் நல்ல புத்தி எடுத்துக் கூறுவார் இல்லாதனாலும் நாம் உறுதி குறைந்து கீழிறங்கிப் பிறருக்கும் துன்பமளிப்பவர்களாகிறோம். உயர்ந்த இயல்புடையவர்கள் விஷயத்தில் மட்டமான இயல்பு மேலோங்குவதில்லை. அது சிறிது தலைதூக்கியதும், உயர்ந்த மனப்பான்மையானது வேகத்தோடு அதை எதிர்த்து அடக்கித் தானே முழுக்க முழுக்க வெற்றி கொள்ளுகிறது. அவ்வாறே நம் வாழ்க்கையிலும் தகாத உணர்ச்சிகள் தோன்றி நம்மைக் கீழே இழுக்கும்பொழுது நாம் அவற்றை அடக்கி வென்று நமக்கு வழிகாட்டிகளான இந்தத் தீர புருஷர்களை நினைவு கூர்ந்து அவர்களைப் போல நாமும் தாழ்ந்த உணர்ச்சிகளுக்கு இடம் கொடுக்கலாகாது என்று உறுதி கொள்ள

வேண்டும். அப்பொழுதுதான் நம்முள் இருக்கும் உயர்ந்த இயல்பு மேலோங்கி நிற்கும்.

பிரசித்தமான சுலோகம் ஒன்று, உயர்ந்தவையும் தாழ்ந்தவையுமான மனித இயல்புகள் ஒன்றுசேருவதை வர்ணிக்கிறது. சகுந்தலையைக் காந்தர்வமணம் புரிந்துகொண்டதைத் துர்வாஸ சாபத்தால் மறக்க நேர்ந்த துஷ்யந்தன் சகுந்தலையை நேரில் கண்டதும் அவளது அழகைப் பார்த்துத் தன் மனத்தில் எழுந்த சபலத்தை அடக்கப் பாடுபடுகிறான். 'இவளை நிராகரிப்பானேன்? மனைவிதான் என்று ஏற்றுக்கொண்டுவிட்டால் என்ன?' என்று யோசிக்கிறான். அவன் மனம் பெரிதும் சஞ்சலப்படுகிறது. சகலத்தையும் துறந்த முனிவர்கள்கூட உறுதியற்றுப்போகும் சமயத்தில், 'ஆகா! தவறாக இருந்துவிட்டால் நம் குலத்திற்கே அல்லவா கெட்ட பெயர் வந்துவிடும்!' என்றுதான் உயர்ந்த மனிதர்கள் யோசிப்பார்கள்.

काकार्यं शशलक्ष्मणः क च कुलं भूयोऽपि दृश्येत सा
दोषाणां प्रशमाय नः श्रुतमहो, कोपेऽपि कान्तं मुखम् ।
किं वक्ष्यन्त्यपकल्मषाः कृतधियः, स्वप्नेऽपि सा दुर्लभा
चेतः स्वास्थ्यमुपैहि, कः खलु युवा धन्योऽधरं धास्यति ॥

நம்முள் இருக்கும் உயர்ந்த இயல்பு வெற்றிகொள்ள இடமளிக்க வேண்டும். இல்லாவிட்டால் நாம் உய்வதற்கு வழியில்லை. தம்முள் எழும் சாதாரண உணர்ச்சிகளுக்கு இடம் கொடாமல் ஒவ்வொரு தடவையும் ராமர் தம் உயர்ந்த இயல்பே வெற்றி கொள்ளுமாறு நடப்பது புலனாகிறது அல்லவா?

# 8

## உறவுமுறைகளுக்கு உதாரணம்

சுக்கிரீவனைத் தவருக நினைத்துப் பேசியதற்காக வருந்தி, ராமர் அவனைப் புகழ்ந்து பேசிய வாக்கியங்களைச் சென்ற தடவை எடுத்துக் கூறினேன். அதையே பின்னும் கொஞ்சம் விவரித்து இன்று பேசலாமென்று எண்ணுகிறேன். இரண்டோர் இடத்தில் சுக்கிரீவனை அவர் மேலும் புகழ்ந்து பேசியதை எடுத்துக்கொண்டு பார்க்கும்பொழுது அதில் சில விஷயங்கள் நமக்குத் தெரிகின்றன. வால்மீகி தமது அபிப்பிராயத்தைச் சொல்லாதது போல் சொல்லுகிருர் என்று தோன்றுகிறது. யுத்த காண்டத்தில் பதினெட்டாம் ஸர்க்கத்தில் ஒரு சுலோகம் வருகிறது. ராமரிடம் அடைக்கலம் புகும் நோக்கத்துடன் விபீஷணன் வருகிருன். என்ன செய்வதென்று ஆலோசிப்பதற்காக ராமர் முக்கியமானவர்களைக் கூட்டி யோசனை கேட்கிருர். அனுமாரைத் தவிர மற்ற அனைவருமே விபீஷணனைச் சேர்த்துக்கொள்வதை அங்கீகரிக்கவில்லை. காரணம் கொஞ்சம் வியப்பை யளிப்பதாக இருக்கிறது. 'விபீஷணன் ராக்ஷஸன்; ராவணனிடமிருந்து வருகிருன். இது ராமரை ஒருவேளை கொல்வதற்காக இருக்கலாம்' என்று சந்தேகிக்கிருர்கள்.

ईदृशं व्यसनं प्राप्तं भ्रातरं यः परित्यजेत् ।
को नाम स भवेत् तस्य यमेष न परित्यजेत् ॥ VI. 18. 5-6.

"சுற்றிலும் ஆபத்துக்கள் சூழ்ந்திருக்கும் இந்தச் சமயத்தில் உடன்பிறந்தவனைத் துறந்து வரும் ஒருவனை எப்படி நம்புவது? மேலும், யாரைத்தான் இவன் சமயத்தில் வஞ்சகமாக விட்டுச் செல்லமாட்டான்? இலங்கைக்கு அரசனுகும் ஆசையை நிறைவேற்றிக்கொள்ளும் நோக்கத்தோடு வேறு வந்திருப்பதாகச் சொல்லுகிருர்கள்" என்று சுக்கிரீவன் முன்யோசனையோடு எச்சரிக்கை செய்கிருன். ராமர் அதைச் சிறிதும் பொருட்படுத்தவில்லை. நல்லறிவு புகட்டும் சில சுலோகங்களை இங்கே கூறுகிறேன்.

उद्योगं तव सम्प्रेक्ष्य मिथ्यावृत्तं च रावणम् ।
वालिनश्च वधं श्रुत्वा सुग्रीवं चाभिषेचितम् ॥

राज्यं प्रार्थयमानश्च बुद्धिपूर्वमिहागतः ।
एतावत्तु पुरस्कृत्य युज्यते त्वस्य सङ्ग्रहः ॥ VI. 17. 66-67.

''தங்கள் சக்தியையும் செய்திருக்கும் சிறந்த ஏற்பாடுகளையும் பார்த்து, தன் சகோதரனுடைய தீய ஒழுக்கத்தை அறிந்த விபீஷணன், வாலியைக் கொன்று சுக்கிரீவனுக்கு ராஜ்யத்தை அளித்த விஷயம் தெரியப்பெற்றதும், அரசனாக வேண்டும் என்ற ஒரு தம்பிக்கு உரிய சகஜமான ஆவலுடன் இங்கு வந்திருக்கிறான். இந்தக் காரணங்களுக்காகவே அவனுக்கு அடைக்கலம் அளிக்கலாம் என்று நினைக்கிறேன்'' என்று அனுமார் தம் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கிறார். ஆயினும் சுக்கிரீவன் லக்ஷ்மணனுடைய பக்கபலத்துடன் அதற்குப் பெரிதும் ஆக்ஷேபம் செய்கிறான். தன் உடன்பிறந்த சகோதரனையே மோசம் செய்தவன் விபீஷணன் என்று சுக்கிரீவன் கூறித் தடுத்ததற்கு ராமர் கூறுவதென்ன?

न सर्वे भ्रातरस्तात भवन्ति भरतोपमाः ।
मद्विधा वा पितुः पुत्राः सुहृदो वा भवद्विधाः ॥ VI. 18. 15-16.

''அப்பா, எல்லாச் சகோதரர்களும் பரதனைப் போலிருப்பார்களா? அவ்வாறே என்னைப் போன்ற பிள்ளைகளும் உன்னைப் போன்ற நண்பர்களும் இருக்கமாட்டார்கள்'' என்கிறார்.

இது மிகவும் பிரசித்தமான சுலோகம்; நுட்பமான பொருள் பொதிந்தது. பல விதமாக இதை இன்று ஆராய்ச்சி செய்து எடுத்துக் கூறலாம் என்று இருக்கிறேன். 'ஸுஹ்ருதோ வா பவத்விதா: — உன்னைப் போன்ற நண்பர்களோ' என்று கூறுவதைப் பார்க்கும்பொழுது, சுக்கிரீவனை அவசரப்பட்டுத் தவறாக நினைத்துப் பேசியதற்காகப் பச்சாத்தாபப்பட்டுக் கூறிய சொற்கள் இவை என்று கருதலாம். ''உலகில் உன்னைப் போன்ற பக்கத் துணையான நம்பிக்கையுள்ள நண்பன் யார் உண்டு, சுக்கிரீவா?'' என்று ராமர் அவனைப் பாராட்டிப் பேசுகிறார். இதற்கு வியாக்கியானம் நல்ல விளக்கத்தோடு இருக்கிறது. ''எனக்கு உதவி செய்வதற்காக உறுதி கூறியதை மறந்துவிட்டாய் என்று அவசரப்பட்டுத் தவறாக நினைத்து லக்ஷ்மணன் மூலம் உன்னை நிந்தனை செய்து அனுப்பினேன். லக்ஷ்மணன் தன் இயல்பின்படி உன்னைக் கண்டபடி கோபித்துக்கொண்டான். நீ அதை மறந்து பெருந்தன்மையோடு நான் கேட்ட உதவியைச் செய்திருக்கிறாய்'' என்று மேலும் மேலும் பாராட்டிப் பேசுகிறார்.

இந்த இடத்தில் கவி வாழ்க்கையிலுள்ள உறவுகளைப்பற்றி ஒரு பாடம் கற்பிப்பதாகவே தோன்றுகிறது. வாழ்க்கையில் எந்தப் பந்தமும் உறவும் பின்னும் உறுதியாவதற்குச் சிறந்த வழி, நடுவில் அறுந்துபோய் மீண்டும் ஒன்றுசேருவதேயாகும். இருவர் மன மாற்றம் ஏற்பட்டுப் பிரிந்து மீண்டும் ஒன்றுசேருவதாகக் கற்பனை

செய்து கதாசிரியர்கள் எழுதுகிறார்கள். அன்பு அப்பொழுது பின்னும் அதிகமாகி உறுதியாகிறது. ராமருக்கும் சுக்ரீவனுக்குமிடையே அப்படித்தான் நிகழ்ந்திருக்கிறது. ஆனால் இருவரும் பெருந்தன்மையுள்ள உள்ளம் படைத்தவர்கள். அதனால்தான் நடுவில் சிறிது வேற்றுமை ஏற்பட்டாலும் அது பிறகு இருவரது உறவைப் பின்னும் உறுதியாகப் பிணைக்க ஏதுவாயிற்று.

உலகில் சில உறவுமுறைகளுக்குச் சிலர் உதாரணமாக விளங்கக் கூடியவர்களாக இருக்கிறார்கள். லக்ஷ்யச் சகோதரனாக இருப்பவன் லக்ஷ்ய மகனாக இருக்கமாட்டான். நட்புக்கு ஓர் லக்ஷ்யமாக இருப்பவன் சகோதரமுறைக்கு லக்ஷ்யமாக இருக்கமாட்டான். ஆகவே ராமர் ஒவ்வோர் உறவுக்கு ஒவ்வொருவரை உதாரணமாகக் காட்டுகிறார். சகோதரமுறைக்கு ஓர் பெரும் உதாரணமாக இருப்பவன் பரதன். விபீஷணன் அப்படி இல்லை. பரதனை ஓர் லக்ஷ்யச் சகோதரன் என்று ராமர் எதற்காகச் சொன்னார் என்பது நமக்குத் தெரியும். கைகேயி கேட்ட வரம் காரணமாக ராமர் தந்த ராஜ்யம் பரதனுக்குக் கிட்டியபொழுது அதை ஏற்காமல் விந்தையான முறையில் திருப்பியளித்தது எல்லோருக்கும் நினைவு இருக்கும். நகரத்து மக்களோடு அவன் காட்டிற்குச் சென்று ராமரை வேண்டுகிறான். ஆனால் ராமர் அவனது வேண்டுகோளை ஏற்கவில்லை. பரதனுடைய உயர்ந்த குணம் இங்கேதான் மிகச் சிறப்பாக வெளியாகிறது.

तदानुपूर्व्यां युक्तं च युक्तं चात्मनि मानद ।
राज्यं चाप्नुहि धर्मेण सकामान् सुहृदः कुरु ॥ II. 104-10.

"நம் இக்ஷ்வாகு வம்சத்தில் மூத்த மகன்தான் ராஜ்யத்திற்கு உரியவன் என்று இருக்கிறது. இந்த அரியணையில் அமருவதற்கு நீங்கள்தாம் முற்றும் தகுந்தவர்" என்று வேண்டுகிறான் பரதன். ஆனால் ராமர் நினைக்கும் விதம் வேறாக இருக்கிறது. ராஜ்யத்துக்கு வாரிசு யார் என்பது கேள்வியல்ல. தந்தை கைகேயிக்குக் கொடுத்த வாக்குப்படி நடந்து அவரைக் காக்க வேண்டியது அவருக்கு முக்கியம். தந்தையை மானமிழக்கும்படிச் செய்யலாகாது. ராமரும் பரதனும் அந்த விஷயத்தைப்பற்றிப் பெரிதும் தர்க்கம் செய்துகொண்டிருந்தபொழுது தேவர்கள்கூடக் கீழே இறங்கி வந்து அதை ஆமோதித்தார்கள். பரத ராம சம்வாதமானது மிகவும் உயர்ந்ததாகக் கருதப்பட்டு, விண்ணுலகத் தேவர்களே மண்ணுலகுக்கு இறங்கி வந்து அதிசயப்பட்டார்கள். வால்மீகி மிகவும் அழகும் எளிமையும் பொருந்திய சுலோகங்களில் அதை வர்ணிக்கிறார். பரதன் கூறிய காரணங்களையெல்லாம் எதிர்த்து ராமர் வென்றபொழுது, தேவர்கள் பரதனுக்குத் தம் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கின்றனர்.

भरतं राजशार्दूलमित्यूचुः सङ्गता वचः ॥
कुले जात महाप्राज्ञ महावृत्त महायशः ।
ग्राह्यं रामस्य वाक्यं ते पितरं यद्यवेक्षसे ॥ II. 112. 4-5.

அவர்கள் ஒரே வாக்கால், ''ராமர் கூறுவதுதான் சரி. எது முக்கியக் காரணமோ அதை அவர் விளக்கிவிட்டார்'' என்கிறார்கள்.

सदानृणमिमं रामं वयमिच्छामहे पितुः ।
अनृणत्वाच्च कैकेय्याः स्वर्गं दशरथो गतः ॥ II. 112. 6.

''உன் தந்தை கைகேயிக்கு ஒரு பெரும் பிரதிக்ஞை செய்து விட்டார். அந்தக் கடனை அவர் தீர்க்க வேண்டும் அல்லவா? அதிலிருந்து அவரை மீட்பதற்கு ஒரே ஒரு வழிதான் உள்ளது; அதைத்தான் இப்பொழுது உன் தமையன் செய்திருக்கிறான். அவ்வாறின்றி உன் தந்தையின் ஆணைக்கு மாறாக, அவனே பட்டாபிஷேகம் செய்துகொள்வதை நீ ஆக்ஷேபிக்காமல் ஏற்றுக்கொண்டாலும், உன் தந்தை சத்தியத்தை மீறிய பாவத்துக்காக நரகத்திற்குச் செல்வார் என்பது நிச்சயம்'' என்று தேவர், கந்தர்வர், கின்னரர், ரிஷிகள் முதலானோர் தீர்ப்புக் கூறுகின்றனர். ராமர் இரண்டாம் முறையும் கைக்கு வந்த ராஜ்யத்தைத் துறக்க வேண்டியதாகிறது. ஆகவே, 'மத்விதா வா பிது: புத்ரா:' என்று அவர் சுக்ரீவனிடம் சொல்லிக்கொண்டதில் தற்பெருமை ஏதுமே இல்லை. பரதனிடம் ராமர் கூறிய காரணங்கள் இரண்டொன்றைச் சொல்கிறேன்.

सोऽहं वनमिदं प्राप्तो निर्जनं लक्ष्मणान्वितः ।
सीतया चाप्रतिद्वन्द्वः सत्यवादे स्थितः पितुः ॥
भवानपि तथेत्येव पितरं सत्यवादिनम् ।
कर्तुमर्हति राजेन्द्र क्षिप्रमेवाभिषेचनात् ॥ II. 107. 8-9.

''தந்தையின் வாக்கைக் காப்பதற்காகச் சீதையுடனும் லக்ஷ்மணனுடனும் நான் தண்டகாரண்யத்துக்கு வந்தேன். நம் இருவருக்கும் அவர் தனித்தனியே ஆணையிட்டார். நான் எனக்கு இட்ட ஆணையை நிறைவேற்றிவிட்டேன். உனக்கு இட்டதை நீ நிறைவேற்ற வேண்டும். நான் காட்டுக்குப் போவதும், நீ ராஜ்யத்தில் இருப்பதும்தான் அவர் நமக்கிட்ட ஆணை.''

ऋणान्मोचय राजानं मत्कृते भरत प्रभुम् ।
पितरं त्राहि धर्मज्ञ मातरं चाभिनन्दय ॥ II. 107. 10.

''எனக்காக நீ இதைச் செய்ய வேண்டும். உன் தந்தையைக் காத்து உன் அன்னையையும் நீ திருப்தி செய்ய வேண்டும்'' என்கிறார் ராமர். இவை பரதன் செய்ய வேண்டிய கடமைகள். மேலும் அவர் கூறியதாவது:

लक्ष्मीश्चन्द्रादपेयाद्वा हिमवान् वा हिमं त्यजेत् ।
अतीयात् सागरो वेलां न प्रतिज्ञामहं पितुः ॥ II. 112. 18.

"அப்பாவின் பிரதிக்கினையை நான் அலக்ஷ்யம் செய்வது முடியாத காரியம். சந்திரனின் தண்ணொளி அகன்றாலும் அகலும்; இமயத்தின் பனி விலகினாலும் விலகும்; கடல் கரையைத் தாண்டினாலும் தாண்டலாம். பிதாவின் பிரதிக்கினையை ஒருகாலும் இழக்க நான் சம்மதியேன்'' என்கிறார்.

कामाद्वा तात लोभाद्वा मात्रा तुभ्यमिदं कृतम् ।
न तन्मनसि कर्तव्यं वर्तितव्यं च मातृवत् ॥ II. 112. 19.

"காமத்தினாலோ லோபத்தினாலோ உன் தாய் உனக்காகச் செய்த காரியம் இது. இதை நீ மனத்தில் வைத்துக்கொள்ளக் கூடாது. அவளிடம் சரியாக நடந்துகொள்ள வேண்டும்'' என்று அவனுக்குப் புத்திமதி கூறுகிறார்.

பரதன் தாயை மிகவும் தவறாக நினைக்கிறான். அவள் பெரிய அநீதி இழைத்துவிட்டதாகக் கருதி, அவளைப்பற்றிப் பேசும்பொழுதெல்லாம் வசைமொழி இல்லாமல் அவனால் பேச இயலவில்லை.

धर्मबन्धेन बद्धोऽस्मि तेनेमां नेह मातरम् ।
हन्मि तीव्रेण दण्डेन दण्डार्हां पापकारिणीम् ॥ II. 106. 9-10.

''ராமருக்காக இல்லாவிட்டால் அவளை இதற்குள் கொன்றிருப்பேன்'' என்று பரதன் சத்ருக்கினனிடம் கூறுகிறான்.

हन्यामहमिमां पापां कैकेयीं दुष्टचारिणीम् ।
यदि मां धार्मिको रामो नासूयेन्मातृघातकम् ॥ II. 78. 22.

தர்மத்தைப்பற்றிப் பரதன் கொண்டுள்ள தீர்மானம் அத்தகையது. பரதனுடைய இந்த மனப்பான்மை தவறு என்று ராமர் கருதுகிறார். ஆகவே அவன் விடைபெற்றுச் செல்லும்பொழுது ராமர் அவனிடம், ''என்மீதும் சீதையின்மீதும் ஆணையிட்டுச் சொல்லுகிறேன். அன்னை கைகேயியினிடம் அன்போடு இரு; பரிவும் ஆதரவும் காட்ட வேண்டும்'' என்கிறார்.

मातरं रक्ष कैकेयीं मा रोषं कुरु तां प्रति ।
मया च सीतया चैव शप्तोऽसि रघुसत्तम ॥ II. 112 27-28.

இப்பொழுது என் மனத்திலுள்ள சில எண்ணங்களைச் சொல்லுகிறேன். உலகில் ஒவ்வோர் உறவுமுறைக்கும் ஒவ்வொருவரை உதாரணமாகக் கொள்ளலாம். புத்திரன், சகோதரன், நண்பன் ஆகிய எல்லா உறவுகளிலும் ராமர் ஒரு லக்ஷ்ய புருஷராக விளங்குகிறார். மகன் என்றால் எப்படி இருக்க வேண்டும்; சகோ

தரன், நண்பர் ஆகியவர்கள் எப்படி இருக்க வேண்டும்; பகைவன் என்றால் அவனும் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதற்கெல்லாம் ஒரு சிறந்த லக்ஷ்யமாக ராமரை வர்ணித்திருக்கிறார் வால்மீகி. ராமர் தம்மைப்பற்றித் தாமே ஓர் லக்ஷ்யபுத்திரனாகச் சொல்லிக் கொள்ளும்பொழுது, தண்டி முதலான கவிகள், "அது தற்பெருமை யல்ல. ஓர் உண்மையை எடுத்துக் கூறியதேயாகும்" என்கிறார்கள்.

அடுத்தபடியாக, ராமர் ஓர் அன்புச் சகோதரராக எப்படி நடந்துகொண்டார் என்பதைப் பார்ப்போம். ராமர் பரதனிடம் நடந்துகொண்ட விதத்தை அறிந்துகொள்ள வேண்டுமானால் நாம் சிறிது பின்னோக்கிச் செல்ல வேண்டும். பரத ராம சம்வாதத்தின் பொழுது, தான் நினைத்ததை நிறைவேற்றுவதிலுள்ள பரத னுடைய பிடிவாதத்தைக் கண்டு ராமர் சொல்லுகிறார்:—

पुरा भ्रातः पिता नः स मातरं ते समुद्वहन् ।
मातामहे समाश्रौषीद्राज्यशुल्कमनुत्तमम् ॥ II. 107. 3.

"தந்தை வயதானதனால் அறிவு மழுங்கிவிட்டார் என்கிறாய். வெகு நாளைக்கு முன்பு அன்னை கைகேயியை அவர் மணந்து கொண்டபொழுது ஒரு பிரதிக்ஞை செய்தார். அந்தப் பிரதிக் ஞையை அவர் நிறைவேற்ற வேண்டும் அல்லவா? அதைத் தள்ள முடியாதே!" என்கிறார்.

துரதிருஷ்டவசமாக அந்த உறுதிமொழியைப்பற்றி ராமா யணத்தில் பேச்சே இல்லை. கைகேயியே ஏன் அதைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லை? மந்தரையும் அதைப்பற்றி வாய்திறக்கவில்லை. சுமந்திரனும் ஏன் ஒன்றும் சொல்லாமலிருந்தான்? நமக்கு இது சற்று வியப்பாக இருக்கிறது. இதற்கு எத்தனையோ காரணங்கள் கூறப்படுகின்றன. அதைப்பற்றி நினைவு வந்து மனக்கலக்கத்தை அடைந்தவர் தசரதர் ஒருவர்தாம். நான்கு பிள்ளைகளும் வளர்ந்து பெரியவர்களானார்கள். ராமர் அனைவரிலும் தமது குணத்தினால் சிறந்து விளங்கினார். அதனால் அவர் அனைவருக்கும் மிகவும் வேண்டியவரானார். ஒருவரும் அவருக்கு நிகராக இல்லாதிருக்கவே, கைகேயியின் தந்தையே அதை மறந்தாரோ, அல்லது அதைப் பற்றிப் பேசாமல் விட்டுவிடுவதே நல்லது என்று இருந்து விட்டாரோ, தெரியவில்லை. ராமருக்கு யுவராஜ பட்டாபிஷேகம் செய்ய வேண்டும் என்று தசரதர் எண்ணியபொழுது பரதன் சத்ருக்னனுடன் தன் தாய்மாமனுடைய நாட்டிற்குச் சென்று அங்கே வசித்து வந்தது அவருக்கு நல்ல சமயமாகத் தோன்றியது. கேகய நாட்டு அரசன் அசுவபதியையும் ஜனகரையும் வரும்படி அவர் அழைக்கவில்லை. மிகவும் தூரத்திலிருந்து அவர்கள் வர வேண்டுமே என்பதற்காக இருக்கலாம். உண்மையான காரணம்,

கைகேயியின் தந்தைக்கு அவர் செய்துகொடுத்த பிரதிக்ஞைதான். ராமரிடம் அவர் கூறுவதென்ன?

**विप्रोषितश्च भरतो यावदेव पुरादितः ।**
**तावदेवाभिषेकस्ते प्राप्तकालो मतो मम ॥** II. 4. 25.

"பரதன் இல்லாதிருக்கும்பொழுதுதான் உனக்கு முடிசூட்டுவதற்குச் சரியான சமயம். பரதன் நல்லவன்தான்; தர்மமான மார்க்கத்தையே அநுசரிப்பான். ஆயினும், மாந்தரின் மனம் சஞ்சலமானது என்பதை அறிவேன்" என்கிறார்.

**किन्तु चित्तं मनुष्याणामनित्यमिति मे मतिः ।** II. 4. 27.

இதிலிருந்து நமக்கு நிச்சயமாக ஒன்றும் விளங்கவில்லை. ஆயினும், பரதனைப் போன்றவர்கள் விஷயத்தில்கூட முன் ஜாக்கிரதையாக இருப்பதே நல்லது என்பதுதான் அவர் கருத்து என்று தோன்றுகிறது. எனக்கு ஒன்று படுகிறது: பரதனுடைய குணத்தை அறிந்திருந்தும் ராமர் தந்தை கூறியதை ஏன் மறுத்துக் கூறவில்லை? தசரதர் கூறியதை அவர் ஆமோதிக்கவில்லை என்றாலும் அதை ஆட்சேபிக்கவுமில்லை. தந்தையைப் போல ராமருக்கும் சந்தேகம் இருந்திருக்கலாம். ராவண வதம் ஆன பிறகு அயோத்திக்குத் திரும்பி வந்தபொழுது வழியில் பரத்வாஜ ஆசிரமத்தில் தங்க நேரிட்டபொழுது, அவருக்குப் பரதனைப் பற்றிய நினைவு வரவே அனுமாரைக் கூப்பிட்டு, "உன் அபிப்பிராயத்தில் எனக்கு நம்பிக்கை உண்டு. நீ முன்னால் போய்த் தெரிந்துகொண்டு வா! பரதனிடம் சென்று நடந்தவை அனைத்தையும் சொல். அப்பொழுது அவன் முகம் எப்படி இருக்கிறது என்பதைக் கவனி. அவன் செய்கைகளையும் தோற்றத்தையும் நன்றாகக் கவனித்து என் வருகைபற்றி அவன் என்ன நினைக்கிறான் என்பதை அறிந்து வந்தால் அதற்குப் பிறகு நான் எப்படி நடக்க வேண்டும் என்பதை அறிந்துகொள்வேன்" என்கிறார்.

மனித இயல்பை ஆராய்ந்து சற்றும் பிசகில்லாமல் எடுத்துக் காட்டும் வால்மீகியின் வன்மை இங்கு வெளியாகிறது. 'அரச குடும்பங்களில் பெரிய இன்னல் நேரிடும்பொழுது மிகவும் வேண்டியவராக இருப்பவர்கள்கூட ஒருவரை ஒருவர் சந்தேகிப்பது சகஜம்' என்று கூறுவதே அவர் கருத்து.

**एतच्छ्रुत्वा यमाकारं भजते भरतस्तदा ॥**

**स च ते वेदितव्यः स्यात् सर्वं यच्चापि मां प्रति ।**
**ज्ञेयाश्च सर्वे वृत्तान्ता भरतस्येङ्गितानि च ॥**
**तत्त्वेन मुखवर्णेन दृष्ट्या व्याभाषणेन च ।**
**सर्वकामसमृद्धं हि हस्त्यश्वरथसङ्कुलम् ॥**

पितृपैतामहं राज्यं कस्य नावर्तयेन्मनः ।
सङ्गत्या भरतः श्रीमान् राज्यार्थी चेत् स्वयं भवेत् ॥
प्रशास्तु वसुधां कृत्स्नामखिलां रघुनन्दनः ।
तस्य बुद्धिं च विज्ञाय व्यवसायं च वानर ॥
यावन्न दूरं याताः स्म क्षिप्रमागन्तुमर्हसि । VI. 128. 12-17.

"சகல சம்பத்தும் சதுரங்க சேனையும் நிரம்பிப் பரம்பரையாக வந்துள்ள ஒரு பெரிய ராஜ்யம் கைக்குக் கிட்டியிருக்கும் பொழுது யாருடைய உள்ளம்தான் அதில் ஈடுபடாது? இந்தப் பதினன்கு வருஷமாக அதை ஆண்டுவரும் பரதனுக்குப் பழக்கத்தினல் அதில் பற்றுதல் ஏற்பட்டால் அது நியாயம்தான். அவனே அதை ஆளட்டும். ஏன் கூடாது? ஆகவே போய் அவன் மனத்தை உள்ளபடி அறிந்து வா'' என்று ராமர் சொல்லியனுப்புகிருர். பரதனது மனத்தை அறிந்து வரச் சொன்னதில் வேறு கெடுதலான நோக்கம் எதுவும் ராமருக்கு இருந்ததாக நான் கூறவில்லை. தசரதர் பரதனைப்பற்றி மிகவும் தவருக நினைத்துவிட்டார். ஆனல் ராமருடைய சந்தேகம் மிகவும் உயர்வானது. ''அயோத்தியைத் தானே ஆளவேண்டும் என்று பரதன் விரும்பினல் நான் அதற்குத் தடையாக இருக்கமாட்டேன். நான் மீண்டும் அரணியத்திற்கே சென்றுவிடுகிறேன்'' என்கிருர். ராமர்தாம் இப்படிச் சொல்லுவார். அவர்தாம் லக்ஷ்யச் சகோதரர் என்று சொல்ல வேண்டும்; பரதன் அல்ல. சகோதரபாசத்திற்கு இதைக்காட்டிலும் வேறு உதாரணம் எனக்குத் தெரியாது.

ராமர் பகைவனிடம் எப்படி நடந்துகொண்டார் என்பதையும் இப்பொழுது கூறுகிறேன். வாலியைக் கொன்றபிறகு அவனிடம் மிகவும் தர்மமான முறையில் நடந்துகொண்டார் அல்லவா? 'சுக்கிரீவனிடமிருந்து தூதனுக வந்தவன்' என்று சொல்லியும், ராவணன் அனுமாரைக் கொல்லக் கட்டளையிட்டான். ராவணனுடைய சாரர்களான சுகன், சாரணன் ஆகிய இருவரையும் விபீஷணன் பார்த்துப் பிடித்துக் கட்டியபொழுது ராமர் மிகவும் கருணையுடன் அவர்களைத் துன்புறுத்தாமல் விட்டுவிடும்படிக் கூறுகிருர். அவர்களை மன்னித்து விட்டதுடன், விபீஷணனிடமிருந்து தங்களுக்கு வேண்டியவற்றைக் கேட்டு அறிந்து போகும்படியும் சொல்லுகிருர். ராமர் கருணை காட்டியிராமற் போனல் வானரர்கள் அவர்களைக் கொன்றிருப்பார்கள். அவர் யுத்தம் புரிந்த விதத்தையும் பார்ப்போம். கருடபகவான் ராமருக்கு வேண்டியவர் என்று சொல்லிக்கொண்டு, அவர்களுக்கு உதவி செய்ய வந்திருப்பதாகக் கூறியபொழுது, அவர் ஓர் அபூர்வமான விதத்தில் ராமரை அழைத்துப் பேசுகிருர்.

अहं सखा ते काकुत्स्थ प्रियः प्राणो बहिश्चरः ।
गरुत्मानिह सम्प्राप्तो युवयोः साह्यकारणात् । VI. 50. 46.

"பகைவனிடங்கூட அன்பு காட்டுகிறவனே!" என்று ராமருடைய முக்கியமான சிறந்த குணங்களில் ஒன்றை எடுத்துக் கூறுகிருர்:—

सखे राघव धर्मज्ञ रिपूणामपि वत्सल । VI. 50. 56.

கடைசியாக ஒரு விஷயம்: ராவணனுக்கும் தனக்குமுள்ள வேற்றுமையை நினைத்து விபீஷணன் அவனது அந்திமக்கிரியைகளைச் செய்ய விருப்பமில்லாமல் இருந்தபொழுது, தம் பகைவனுடைய உயர்வை ராமர் தாம் மறக்காமலிருக்கிருர்.

யுத்தவீரர்களுள் சாமர்த்தியமும் பலமும் முக்கியமானவை. ஒருவன் நல்ல சக்தியும் வீரமும் பொருந்தியவனுக இருந்தால் நிச்சயம் மற்ருெரு வீரன் அவனைக் கொண்டாடாமலிருக்க மாட்டான். ஆகவே ராமர் விபீஷணனிடம், "ராவணன் தீய அதர்ம வழியில் சென்றவன்தான். ஆயினும், அவன் மிகவும் உயர்ந்தவன் என்பதையும் நினைவு கூரவேண்டும். அவன் பெரிய வீரன்; இந்திராதி தேவர்களிடங்கூடத் தோல்வியுருதவன். மரணம் எய்திவிட்டால் அப்புறம் சண்டை பகை என்பதெல்லாம் ஏது? ஆகவே விதிப்படி அவனுக்குச் செய்ய வேண்டிய காரியங்களைச் செய்" என்கிருர். "உன் சகோதரன் எனக்கும் சகோதரன் போன்றவனே" என்று அவர் மேலும் கூறுவது அவருடைய பெருந்தன்மையை எவ்வளவு நன்ருகக் காட்டுகிறது!

अवश्यं तु क्षमं वाच्यो मया त्वं राक्षसेश्वर ।
अधर्मानृतसंयुक्तः कामं त्वेष निशाचरः ॥
तेजस्वी बलवान् शूरः संयुगेषु च नित्यशः ।
शतक्रतुमुखैर्देवैः श्रूयते न पराजितः ॥
महात्मा बलसम्पन्नो रावणो लोकरावणः ।
मरणान्तानि वैराणि निर्वृत्तं नः प्रयोजनम् ।
क्रियतामस्य संस्कारो ममाप्येष यथा तव । VI. 114. 99-102.

உரையாசிரியர்கள், 'மமாப்யேஷ யதா தவ' என்ற இடத்துக்குச் சரியான விளக்கம் கொடுக்கிருர்கள். "அவன் இறந்தபிறகு அவனை என் சகோதரனுகவே கருதுகிறேன். அவனுடைய உத்தரக் கிரியைகளை நீ செய்யாவிட்டால் நான் செய்யத் தயாராக இருக்கிறேன்" என்று ராமர் கூறுவதாக அவர்கள் விளக்குகிருர்கள். அது சற்றும் மிகையல்ல என்றுதான் தோன்றுகிறது.

## 9

### ராமருடன் வாதாடிய பரதன்

இன்று, வழக்கத்துக்கு மாருக, ராமாயணத்திலுள்ள ஒரு பிரசித்தமான இடத்தைப்பற்றிச் சிறிது விஸ்தாரமாக ஆராய்ந்து கூறலாம் என்று நினைக்கிறேன். சித்திரகூடத்தில் ராமருக்கும் பரதனுக்குமிடையே நிகழ்ந்த சம்வாதம்தான் அது. விண்ணுலகத்தவர்கள்கூடச் சிறந்த தர்மோபதேசமாக அதைக் கருதினர் என்பது வால்மீகியின் கவிவன்மைக்கு ஒரு சான்ருக அமைகிறது. அவ்வளவு விஸ்தாரமாக அதைப்பற்றிச் சொல்வது உங்கள் பொறுமையைச் சிறிது சோதிப்பதாக இருக்கலாம். உங்களுக்குச் சலிப்பை உண்டாக்குமோ என்ற கவலையில்லாமல் நானும் பேசவில்லை. ராமருடைய குணச் சிறப்பு இங்கு இன்னும் விசேஷமாக விளங்குகிறது. அயோத்யா காண்டத்தில், 100, 112 ஆகிய இரண்டு ஸர்க்கங்களில் இந்த உரையாடல் நன்ருக விவரிக்கப்பட்டிருக்கிறது. முதல் நான்கு ஸர்க்கங்கள் அதிக முக்கியமானவையல்ல. ஒரே ஒரு ரசமான விஷயத்தைக் குறிப்பிடுவதோடு அவற்றை விட்டு மேலே செல்லுகிறேன். 103-ஆம் ஸர்க்கத்தின் முடிவில் இந்தச் சம்வாதத்தைப்பற்றிக் கூறும்பொழுது கவி, ராமர், லக்ஷ்மணன், பரதன் ஆகிய மூவரை மட்டுமே குறிப்பிடுகிருர். சத்ருக்கினனைப்பற்றி அவர் பிரஸ்தாபிக்கவில்லை. பாலகாண்டத்தில் அநேக இடங்களில் லக்ஷ்மணனைப் பற்றிப் பிரஸ்தாபம் இல்லாமலிருப்பது உங்களுக்கு நினைவிருக்கலாம். கவி இவ்வாறு வர்ணிக்கிருர் :—

> स राघवः सत्यधृतिश्च लक्ष्मणो
> महानुभावो भरतश्च धार्मिकः ।
> वृताः सुहृद्भिश्च विरेजुरध्वरे
> यथा सदस्यैः सहितास्त्रयोऽग्नयः ॥ II. 103. 32.

இங்கு மூன்று அக்கினிகள்தாம் உவமையாகக் கூறப்படுகின்றன. இந்த விசேஷமான நிகழ்ச்சியில் சத்ருக்கினனைக் குறிப்பிடுவது அவ்வளவு அவசியமில்லை என்று கவி எண்ணியிருக்கலாம். ஆனல் முழுவதும் அவ்வாறு இருக்க முடியாது; ஏனெனில் கவி மூன்று

அக்கினிகளை உவமையாகக் கூறுகிருர். சகோதரர்களின் முதற் சந்திப்பு இது. பிரசித்தமான 'கச்சித்' ஸர்க்கத்துக்குப் பிறகு 102-ஆம் ஸர்க்கத்தில், தந்தைக்குச் செய்ய வேண்டிய கிரியைகள் கூறப்படுகின்றன. அதற்குப் பிறகு ராமர், "இவ்வளவு பெரிய சேனையோடும் மந்திரி பிரதானிகளோடும் இங்கே வரக் காரணம் என்ன?'' என்று கேட்கிருர். உடனே பரதன் தம் இருவருக்கு மிடையே நேரப்போகும் வாக்குவாதத்திற்கு வேண்டிய மூன்று விஷயங்களை எடுத்துக்கூறுகிருன். முதலில், இக்ஷ்வாகு வம்சத்தின் பரம்பரையாக வந்துள்ள சம்பிரதாயம் மூத்த மகன் பட்டத்துக்கு வருவது என்பதை எடுத்துக் கூறுகிருன். இரண்டாவது, தன் தாய் அதர்மமான வழியில் தான் விரும்பிய காரியத்தை நிறைவேற்றி யதை அவன் சிறிதும் விரும்பவில்லை. "அவளது முயற்சி வெற்றி பெறக்கூடாது. நான் அதைப் பயன்படுத்திக்கொள்ள மாட் டேன்'' என்கிருன். மூன்ருவது காரணம், ஜனங்கள் ராமரையே ராஜ்யத்தை ஏற்று ஆள வேண்டும் என்று ஏகமனதாய்க் கோரு வதே என்று கூறி முடிக்கிருன். இங்கே சில சுலோகங்களை எடுத்துக் கூறுகிறேன் :—

स्त्रिया नियुक्तः कैकेय्या मम मात्रा परन्तप ।
चकार सुमहत् पापमिदमात्मयशोहरम् ।। II. 104. 6.

''என் தாய் கைகேயியினுல் தூண்டப்பட்டு நம் தந்தை இந்தக் காரியத்தைச் செய்துவிட்டார். பெரிய பாவத்தைச் செய்து மிகுந்த இழிவையும் அவள் சம்பாதித்துக்கொண்டுவிட்டாள்'' என்கிருன்.

सा राज्यफलमप्राप्य विधवा शोककर्शिता ।
पतिष्यति महाघोरे निरये जननी मम ।। II. 104. 7.

தாயினிடம் பக்தியுள்ள மகன் இவ்விதம் பேசமாட்டான். ஆனுல் சந்தர்ப்பம் அவ்வாறு பரதனைப் பொறுமையிழக்கச் செய் கிறது. தாயைப்பற்றி நினைவு வரும்போதெல்லாம், ''குலத்தின் பெருமைக்கும் தன் பெயருக்கும் என் பெயருக்கும் அல்லவா களங் கத்தை உண்டுபண்ணிவிட்டாள்? ராஜ்யமே அழிந்துபோய்விட் டதே!'' என்று பரிதவிக்கிருன். அவனுல் அதை மறக்க முடிய வில்லை.

एभिश्च सचिवैः सार्धं शिरसा याचितो मया ।
भ्रातुः शिष्यस्य दासस्य प्रसादं कर्तुमर्हसि ।। II. 104. 12.

''இந்த மந்திரி முதலானவர்களுடன் சேர்ந்து தலைவணங்கிக் கேட்டுக்கொள்கிறேன். சகோதரனும் சிஷ்யனும் தாஸனுமான என்னிடம் தயை புரிய வேண்டும்'' என்று யாசிக்கிருன். ஆனுல் ராமர் இதற்கெல்லாம் வசமாகக் கூடியவர் அல்ல. முதல்

முதலில் மகன் தன் தாயை இவ்விதம் கொடுமையாக நடத்தக் கூடாது என்று ராமர் அவனைக் கண்டிக்கிறார். ஆயினும் ராமரே கைகேயியின் செயலை ஒப்புக்கொள்ளவில்லை என்பதை நாம் அறிவோம். தாயின் ஒவ்வொரு செயலையும் மகன் அலசி ஆராய்ந்து பார்ப்பது அவ்வளவு சரியல்ல என்பது அவர் கருத்து. பரதன் வாயில் வந்தபடி தாயைப் பேசுவது பெரிதும் முறை தவறானது என்றே அவர் எண்ணுகிறார்.

न चापि जननीं बाल्यात् त्वं विगर्हितुमर्हसि ॥ II. 104. 17.

"சிறுபிள்ளைத்தனமாகத் தாயை நிந்திப்பது அழகல்ல. உன்னை உத்தரவிட அவளுக்கு உரிமை இல்லையா? அவளுக்கு அத்தகைய அதிகாரம் இல்லையென்று ஏன் நினைக்கிறாய்? தந்தையைப் போலத் தானே தாயும்?'' என்று கூறுகிறார். இந்தக் கருத்தை நாமும் நினைவிற் கொள்ள வேண்டும்.

यावत् पितरि धर्मज्ञे गौरवं लोकसत्कृते ।
तावद्धर्मभृतां श्रेष्ठ जनन्यामपि गौरवम् ॥ II. 104. 21.

''தந்தையைப் போலவே தாய்க்கும் தன் விருப்பத்தைக் கூறுவதற்கு அதிகாரம் உண்டு.''

एताभ्यां धर्मशीलाभ्यां वनं गच्छेति राघव ।
मातापितृभ्यामुक्तोऽहं कथमन्यत् समाचरे ॥ II. 104. 22.

''தாயும் தந்தையும் சேர்ந்து என்னைப் பதினான்கு ஆண்டுகள் காட்டில் வசிக்க வேண்டுமென்று கட்டளையிட்டார்கள்'' என்கிறார். 'தர்மசிலாப்யாம்' என்று, உலகம் முழுவதும் நிந்தனைக்கு ஆளாகிய கைகேயியையும் சேர்த்தே சொல்லுகிறார். அவர்களைத் 'தர்ம சிலர்கள்' என்று கூறுகிறார். மற்றோர் இடத்தில், 'அவர்கள் தவறு ஒன்றுமே செய்யவில்லை' என்றுகூடச் சொல்லுகிறார். இம் மாதிரி ஒரு மகன் அந்தச் சமயத்தில் கூறுவது மிகவும் அபூர்வம். கைகேயியின் சார்பாகப் பேசுவது நியாயமாகவே தோன்றுகிறது அவருக்கு. உண்மையில் அவள் என்னதான் அப்படிச் செய்து விட்டாள்? தன் உரிமையைத்தானே கேட்டாள்! வெகு காலமாகப் பயன்படுத்தாமல் இருந்த, கணவர் கொடுத்த, வரங்கள் இப்பொழுது ஒரு கொடிய காரியத்துக்கு உபயோகமாயின. தனக்கு உள்ள உரிமையைக் கேட்பதில் தவறென்ன? ராஜ்யத்தி லுள்ள சுகபோகங்களை இழந்து காட்டில் காய்கிழங்குகளைத் தின்று எளிய வாழ்க்கை வாழ்வது மற்றச் சாதாரண மனிதர்களுக்குத் தோன்றுவது போல் ராமருக்குக் கஷ்டமாகத் தோன்றவில்லை என்பதை நாம் நினைவுகொள்ள வேண்டும். கஷ்டங்கள் அவருக்குச் சகஜமாகவே தோன்றின. அவை அவர் உள்ளத்தைத் துன்புறுத்த வில்லை. ஆகவேதான் தசரதரையும் கைகேயியையும் அவர் 'தர்ம

சீலர்கள்' என்கிறார். ''எனக்கு இது தவறாகத் தோன்றவில்லை. தன் ஒரே மகனுக்காகத் தனக்கு உள்ள உரிமையைத்தான் அவள் கேட்டாள். அது எப்படித் தவறாகும்? தந்தையும் தாம் ஏற்கனவே செய்திருந்த உறுதிமொழியினால் கட்டுண்டவரானார்'' என்று முடிவாகக் கூறுகிறார். இந்தச் சம்வாதம் இரவில் நிகழ்ந்தது.

மறுநாள் காலைக்கடன்கள் முடிந்த பிறகு, ராமரும் பரதனும் முதல்நாள் இரவு நடந்த சம்வாதத்தை மீண்டும் தொடங்கினர். இதன் முடிவைத் தெரிந்துகொள்வதற்காக, பரதன் மேற் கொண்ட முயற்சி வெற்றிபெற வேண்டுமே என்ற ஆவலுடன், மற்ற அனைவரும் ஏதோ ஒரு பெரிய நிகழ்ச்சியைக் காணும் வாய்ப்புக் கிட்டப்போகிறது என்ற எண்ணத்துடன் அங்கு வந்து கூடுகிறார்கள்.

''ராஜ்யம்தான் எனக்கு இல்லை என்றாகிவிட்டதே என்கி றீர்கள். மகனுக்குக் கொடுக்கும்படி தசரதர் ராஜ்யத்தை என் அன்னையிடம் கொடுத்தார். அதைத் தசரதரிடமிருந்து பெற்று என் தாய் என்னிடம் கொடுத்தாள். நல்லது; அப்படியே இருக் கட்டும். நியாயப்படி இப்பொழுது ராஜ்யம் என்னுடையது. அதை என் விருப்பப்படிச் செய்யும் உரிமையோடு உங்களுக்கு அளிக்கிறேன்; எடுத்துக்கொள்ளுங்கள்'' என்று பரதன் ராமனை வேண்டுகிறான்.

सान्त्विता मामिका माता दत्तं राज्यमिदं मम । II. 105. 4.

''என் தாயின் விருப்பம் நிறைவேறிவிட்டது. இனியும் உங்களுக்கு என்ன ஆக்ஷேபம்? இப்பொழுது ராஜ்யம் என்னு டையது. அதைப் பெற்றுக்கொள்ளுங்கள். சட்டபூர்வமாகத் தவறு ஒன்றுமில்லாமலிருக்கிறது'' என்கிறான்.

तद्ददामि तवैवाहं भुङ्क्ष्व राज्यमकण्टकम् ॥ II. 105. 4.

பதிலுக்கு ராமர், 'விதி' என்பதைப்பற்றி ஒரு பெரிய பிரசங்கம் செய்கிறார். காலம், விதி என்பதுதான் யாவற்றுக்கும் காரணம். நாம் நடப்பதெல்லாம் விதிப்படிதான் இருக்கும். யாவும் ஏற்கனவே விதித்தபடிதான் நடக்கின்றன. அப்படியிருக்க அவற்றை எதிர்த்து வேறு விதமாக நடக்க நாம் முயலுவதில் பயன் யாது? இங்கே பதினாறு சுலோகங்கள் வருகின்றன. பல பேருண்மைகளை அவற்றில் காணலாம். அவற்றிற் சில, சொல்லிச் சொல்லி வெறும் வார்த்தைகளாகக்கூடத் தோன்றலாம். நல்ல வர்கள் கெட்டவர்கள் என்ற வித்தியாசமில்லாமல் கணக்கற்ற தடவை சொல்லியும் எழுதியும் கேட்டு அவை மட்டமாகிச் செல்லாக் காசுகள் போல் ஆகிவிட்டன என்பதை நாம் நினைவுகூர வேண்டும். ஆனால் ராமாயண காலத்தில் அவ்வாறு இருந்திருக்க

முடியாது. பெரிய உண்மைகள் பொதிந்திருக்கும் இந்தச் சுலோகங்கள் ராமர் வாயிலின்றும் வரும்பொழுது பின்னும் அதிக விசேஷமாகத் தோன்றியிருக்கும். நமக்கு இப்பொழுது அவை அர்த்தமற்ற வெறும் வார்த்தைகளாகப் படுகின்றன. இந்தப் பதினறு சுலோகங்களைச் சொல்லி அவற்றை ஒருவாறு மொழிபெயர்த்தும் கூறலாம் என்று நினைக்கிறேன்.

सर्वे क्षयान्ता निचयाः, पतनान्ताः समुच्छ्रयाः ।
संयोगा विप्रयोगान्ता मरणान्तं च जीवितम् ॥ II. 105. 16.

"குவிந்திருந்தவை யாவும் ஒரு நாள் ஒன்றுமில்லாமலாகின்றன. உயர்ந்து நின்றவை ஒரு காலத்தில் சரிந்து தரைமட்டமாகின்றன. சேர்ந்திருந்தது பிரிந்துவிடுகிறது. வாழ்க்கை மரணத்தில் முடிவடைகிறது."

यथा फलानां पक्वानां नान्यत्र पतनाद्भयम् ।
एवं नरस्य जातस्य नान्यत्र मरणाद्भयम् ॥ II. 105. 17.

"பழுத்த பழம் கீழே விழுந்துதான் ஆகவேண்டும். அதுபோல் பிறந்தவனும் இறந்துதான் ஆகவேண்டும்."

यथागारं दृढस्थूणं जीर्णं भूत्वावसीदति ।
तथावसीदन्ति नरा जरामृत्युवशं गताः ॥ II. 105. 18.

"கட்டடத்தைத் தாங்கும் உறுதியான பெரிய தூண்கள் நாளடைவில் ஜீரணமாகி விழுந்துவிடுவது போல் மூப்புக்கும் மரணத்துக்கும் வசமாகி மனிதர்களும் முடிவெய்துகிறார்கள்."

अत्येति रजनी या तु सा न प्रतिनिवर्तते ।
यात्येव यमुना पूर्णा समुद्रं लवणार्णवम् ॥ II. 105. 19.

"சென்ற இரவு மீண்டும் திரும்பி வருவதில்லை. யமுனா நதி கடலிற் சென்று கலந்தபிறகு மீண்டும் திரும்புவதுண்டா?"

अहोरात्राणि गच्छन्ति सर्वेषां प्राणिनामिह ।
आयूंषि क्षपयन्त्याशु ग्रीष्मे जलमिवांशवः ॥ II. 105. 20.

"வேனிற்காலத்தில் சூரியனின் செங்கிரணங்கள் ஜலத்தை வற்றச்செய்வது போல், இரவும் பகலும் மாறி மாறிச் சென்று, புவியிலுள்ள ஜீவன்களின் ஆயுளையும் அபகரித்துச் செல்கின்றன."

आत्मानमनुशोच त्वं किमन्यमनुशोचसि ।
आयुस्ते हीयते यस्य स्थितस्य च गतस्य च ॥ II. 105. 21.

"நின்றாலும் நகர்ந்தாலும் ஆயுள் குறைந்துகொண்டே போகிறது. நம்மைப்பற்றி வருந்த வேண்டுமே தவிர மற்றவரைப் பற்றி ஏன் வருத்தப்பட வேண்டும்?"

सहैव मृत्युर्व्रजति, सह मृत्युर्निषीदति ।
गत्वा सुदीर्घमध्वानं सह मृत्युर्निवर्तते ॥ II. 105. 22.

"கூடவே மரணம் செல்கிறது, கூடவே இருக்கிறது. எவ்வளவு தூரம் போனாலும் மரணத்தை விட்டு நாம் செல்ல முடியாது."

गात्रेषु वलयः प्राप्ताः श्वेताश्चैव शिरोरुहाः ।
जरया पुरुषो जीर्णः किं हि कृत्वा प्रभावयेत् ॥ II. 105. 23.

"தோல் தளர்ந்து சுருங்குகிறது. மயிர் நரைக்கிறது. மூப்பு மனிதனை ஆக்கிரமிக்கிறது. அதைத் தடுக்க அவன் என்ன செய்ய முடியும்?"

नन्दन्त्युदित आदित्ये नन्दन्त्यस्तमिते रवौ ।
आत्मनो नावबुध्यन्ते मनुष्या जीवितक्षयम् ॥ II. 105. 24.

"சூரியன் உதித்துவிட்டான், பொழுது விடிந்துவிட்டது என்று மனிதர்கள் களிப்படைகிறார்கள். அஸ்தமித்துவிட்டது என்றும் மகிழ்வெய்துகிறார்கள். ஆயுள் குறைந்துகொண்டு வருகிறதே என்று அவர்கள் அறிவதில்லை."

हृष्यन्त्यृतुमुखं दृष्ट्वा नवं नवमिहागतम् ।
ऋतूनां परिवर्तेन प्राणिनां प्राणसंक्षयः ॥ II. 105. 25.

"ருதுக்கள் ஒன்றன்பின் ஒன்றாக வரும்பொழுது மக்கள் மகிழ்கிறார்கள். ஆனால் அத்துடன் அவர்களின் ஆயுளும் குறைந்துகொண்டு வருகிறது அல்லவா?"

यथा काष्ठं च काष्ठं च समेयातां महार्णवे ।
समेत्य च व्यपेयातां कालमासाद्य कञ्चन ॥
एवं भार्याश्च पुत्राश्च ज्ञातयश्च धनानि च ।
समेत्य व्यवधावन्ति ध्रुवो ह्येषां विनाभवः ॥ II. 105. 26, 27.

"பெருங்கடலில் இரண்டு மரத்துண்டுகள் ஒன்றுசேருகின்றன. சிறிது நேரம் சேர்ந்து சென்றபிறகு பிரிந்துவிடுகின்றன. அது போலத்தான் மனைவி, பிள்ளை, சுற்றத்தார் ஆகியவர்களும் ஒன்று சேர்ந்து பிறகு பிரிந்துவிடுகிறார்கள். இந்தப் பிரிவைத் தவிர்க்க முடியாது."

नात्र कश्चिद्यथाभावं प्राणी समभिवर्तते ।
तेन तस्मिन् न सामर्थ्यं प्रेतस्यास्त्यनुशोचतः ॥ II. 105. 28.

"இயற்கையை யாரும் மீறுவது என்பது முடியாது. இறந்தவரைப்பற்றி வருந்துவதும் பயனற்றதே."

यथा हि सार्थं गच्छन्तं ब्रूयात् कश्चित् पथि स्थितः ।
अहमप्यागमिष्यामि पृष्ठतो भवतामिति ॥

एवं पूर्वैर्गतो मार्गः पितृपैतामहो ध्रुवः ।
तमापन्नः कथं शोचेद्यस्य नास्ति व्यतिक्रमः ॥ II. 105. 29, 30.

"மனிதன் போகும்பொழுது வழியில் ஒரு யாத்திரைக் கூட்டத்தைக் கண்டு, 'நானும் உங்களுடன் வருகிறேன்' என்று சொல்லுவது போலத்தான் வாழ்க்கைப் பயணம். நம் முன்னோர் அந்த வழியேதான் சென்றிருக்கிறார்கள். ஏற்கனவே சென்று கொண்டிருக்கும் கூட்டத்தில் மனிதன் போய்ச் சேர்ந்துகொள்ளுகிறான். இம்மாதிரி அநாதிகாலமாக நடந்துகொண்டிருக்கிறது. அதில் மாறுதல் ஏதுமில்லை. நாம் எப்படிக் குறைகூற முடியும்?''

वयसः पतमानस्य स्रोतसो वा निवर्तिनः ।
आत्मा सुखे नियोक्तव्यः सुखभाजः प्रजाः स्मृताः ॥ II. 105. 31.

''நதி எங்கேயாவது பின்னேக்கிச் செல்லுமா? அதுபோல் ஆயுளும் எப்போதும் குறைந்துகொண்டே வருகிறது. மனிதர்கள் சந்தோஷத்தையே நாடுகிறார்கள் என்பது யாவரும் அறிந்ததே. ஆனால் தர்மவழியில் சந்தோஷத்தைப் பெற முயல வேண்டும்.''

இத்துடன் 105-ஆம் ஸர்க்கம் முடிவடைகிறது. அடுத்த ஸர்க்கம் பரதனுடன் தொடங்குகிறது. இரண்டு சகோதரர்களிடையேயும் ஒருவரிடம் ஒருவர் மரியாதையுடன் பேச்சு ஆரம்பமாகிறது. ''சொன்னது எவ்வளவு சரியாக இருக்கிறது! எவ்வளவு நன்றாக இருக்கிறது!'' என்று ஒருவர் மற்றொருவர் பேசியதைப் பாராட்டுகிறார்கள். பிறகுதான் ஆக்ஷேபம் கிளம்புகிறது. ராமர் கூறியதையெல்லாம் பரதன் வெகுவாகப் புகழ்ந்து பேசுகிறான். ஆனால் அவனது உள்ளம் மட்டும் அவற்றை ஏற்கவில்லை. கைகேயியைப்பற்றி அவன் நெஞ்சம் இளகாமலே இருக்கிறது.

प्रोषिते मयि यत् पापं मात्रा मत्कारणात् कृतम् ।
क्षुद्रया तदनिष्टं मे प्रसीदतु भवान् मम ॥ II. 106. 8, 9.

''என்மீது தயைபுரிய வேண்டும். நான் இல்லாதிருந்த பொழுது, எனக்குச் சந்தோஷத்தைச் செய்ய வேண்டும் என்ற எண்ணத்துடன், என் தாய் இப்படி நடந்துவிட்டாள்.''

धर्मबन्धेन बद्धोऽस्मि तेनेमां नेह मातरम् ।
हन्मि तीव्रेण दण्डेन दण्डार्हां पापकारिणीम् ॥ II. 106. 9, 10.

"அவள் செய்த பாவத்துக்குப் பெருந்தண்டனை விதிக்க வேண்டும். தர்மத்துக்குப் பயந்தே நான் அவளை ஒன்றும் செய்யாமலிருக்கிறேன். உங்களுக்கு வெறுப்பை உண்டாக்கிவிடும் என்ற பெரும் பயம் வேறு எனக்கு. நம் தந்தையோ வயதாகி, அறிவு மழுங்கி, என் தாயின் கைப்பொம்மையாகிவிட்டார்'' என்று

கூறிவிட்டுப் பலரும் நினைவிற் கொள்ளக்கூடிய ஒரு பெரும் பேருண்மையைப் பரதன் தெரிவிக்கிறான்.

अन्तकाले हि भूतानि मुह्यन्तीति पुरा श्रुतिः ॥ II. 106. 13.

''வயதானால் மனிதர்கள் அறிவு மழுங்கிப் போய்விடுவார்கள் என்று சொல்வதுண்டு.''

राज्ञैवं कुर्वता लोके प्रत्यक्षं सा श्रुतिः कृता ॥ II. 106. 14.

''அந்த வார்த்தை நம் தந்தையின் விஷயத்தில் மிகவும் உண்மையாகிவிட்டது.''

பிறகு பரதன் ராமருக்கே உபதேசம் செய்கிறான். '' 'அபத்யம்' என்ற வார்த்தைக்குப் புத்திரன் என்று அர்த்தம் என்பது தங்களுக்குத் தெரியும். தந்தையைக் கீழே விழாதபடி பிள்ளைதான் காப்பாற்றுகிறான்; அதாவது நரகத்திலிருந்து புத்திரன் தந்தையை ரக்ஷிக்கிறான் என்பது நம் நம்பிக்கை.'' இதை எடுத்துக்கூறிப் பரதன் ராமருக்கு உபதேசிக்கிறான்.

साध्वर्थमभिसन्धाय क्रोधान्मोहाच्च साहसात् ।
तातस्य यदतिक्रान्तं प्रत्याहरतु तद्भवान् ॥ II. 106. 14, 15.

''நாம் வரம் கொடுத்துவிட்டோம் என்று எண்ணியோ அல்லது மனைவியின் கோபத்துக்குப் பயந்தோ ஏதோ ஒரு தவறு காரணமாக அநீதியான ஓர் ஆணையைத் தந்தை இட்டுவிட்டார். அப்பா செய்த அந்தத் தவற்றை நீங்கள் திருத்தியமைக்க வேண்டும். அவர் ஏதோ பிசகு செய்துவிட்டார் அறிவின்றி. நீங்கள்தாம் அதை மீண்டும் சரியாக்க வேண்டும்.''

पितुर्हि समतिक्रान्तं पुत्रो यः साधु मन्यते ॥ II. 106. 15.

''தந்தை செய்த தவற்றைத் திருத்துகிறவன்தான் 'பிள்ளை' என்ற பெயருக்கு உரியவனாவான்.''

तदपत्यं मतं लोके विपरीतमतोऽन्यथा ॥ II. 106. 16.

''தவற்றைத் திருத்தாமல் தந்தை சொன்னபடி ஒருவன் நடந்தால் அவனை 'அபத்யம்' என்று கூற முடியாது. தந்தையின் வீழ்ச்சிக்கு அவனே காரணமாவான்.''

मा भवान् दुष्कृतं पितुः ॥ II. 106. 16.

''அப்பா தவறாக இட்ட ஆணையை நீங்கள் நிறைவேற்றலாகாது. நீங்களும் அந்தப் பிழையையே செய்து அவரை நரகத்தில் ஆழ்த்திவிடக் கூடாது. அவரைக் காப்பாற்ற வேண்டும்'' என்கிறான். எவ்வளவு சாமர்த்தியமாகத் தனக்கு ஸாதகமாகும் விதத்தில் பேசுகிறான்!

சாதாரணமாக ராமாயணத்தில் எல்லாரும் ஒரு விஷயத்தைக் கவனிக்காமல் விட்டுவிடுவார்கள். பிறர் கண்ணுக்குப் படாததை நான் கண்டுபிடித்ததாகச் சொல்லிக்கொள்ளவில்லை. காண்டத்தின் ஆரம்பத்திலேயே தந்தையின் பிரதிக்ஞையை ராமர் சரியாக நிறைவேற்றினரா என்பதைப்பற்றிக் கேள்வி எழுகிறது. அவர் செய்தது தவறு என்று கருதியவர்கள் அதைப்பற்றி மனப்பூர்வமாக வாதாடினர்கள். அவர்களின் கட்சி இதுதான்: தசரதர் ராமருக்கு யுவராஜ பட்டாபிஷேகம் செய்யத் தீர்மானித்தார் என்பதுடன் அயோத்தியா காண்டம் தொடங்குகிறது. அவர் ராமரை உடனே அழைத்துவரச் சொல்லித் தமது விருப்பத்தைத் தெரிவிக்கிறார். பிறகு ஜனங்களுடைய சம்மதத்தையும் பெற வேண்டி ராஜ்யத்திலுள்ள பிரமுகர்கள், கவிகள், சிந்தனையாளர்கள் முதலியோரை ஒன்றுகூட்டித் தம் உத்தேசத்தை அறிவிக்கிறார். அதைக் கேட்டு அவர்கள் மட்டில்லாத மகிழ்ச்சியடைகின்றனர். ராஜ்யத்தை ஆளும் பொறுப்பை அதற்கு மிகவும் ஏற்றவரான தம் மூத்த புதல்வரிடம் அவர் ஒப்படைக்கத் தீர்மானித்ததை அவர்கள் அனைவரும் ஒரே வாக்காக ஆமோதித்துப் போற்றுகின்றனர். அதன் பின்புதான் மந்தரை வந்து கைகேயியின் மனத்தைக் கலைத்து, வெகு காலத்துக்கு முன்பு அளித்திருந்த வரங்களை ஞாபகப்படுத்தித் தசரதரைத் தர்மபாசத்தில் கட்டுண்டவராகச் செய்தது. ஆகவே தசரதரின் இரண்டாம் உறுதிமொழி இது. இதற்கு முன்பே ராமரிடமும் ஜனங்களிடமும் அவர் ஓர் உறுதிமொழி கூறிவிட்டார். ஆனால் கைகேயிக்கு அளித்த வாக்குத்தான் கடைசியில் நின்றது.

லக்ஷ்மணன், பரதன், இன்னும் மற்றுமுள்ளோர் அனைவரும் முதலில் அளித்த உறுதிமொழியின்படிதான் நடக்க வேண்டும் என்று தர்க்கித்தார்கள். தசரதர் கைகேயிக்கு அளித்த வாக்கையே பெரிதாக நினைப்பானேன்? ஆயினும் முதலில் அரசர் கூறியதை ஒரு வாக்குறுதியாகக் கூற முடியாது. பிரஜைகளுடைய நலத்துக்காகத் தசரதர் செய்ய விரும்பிய ஓர் ஏற்பாடு அது; அவ்வளவுதான். தமக்கு வயதாகிவிட்டதனால் ராஜ்ய பரிபாலனம் செய்யும் பொறுப்பைச் சிறிது புதல்வனிடம் ஒப்படைக்க விரும்பினர். அது மிகவும் யுக்தமான காரியம்தான்; எனினும் பிரஜைகளுடைய நலனையும் தம்முடைய சௌகரியத்தையும் உத்தேசித்துச் செய்தது. அதை ஒரு பெரிய வாக்குறுதியாக்கி நிறைவேற்றியாக வேண்டும் என்று கட்டாயப்படுத்தும் உரிமை யாருக்குமில்லை. சாதாரணமாக ஜனங்கள் அம்மாதிரி அதை எடுத்துக்கொள்ள முடியாது. ஆனால் கைகேயிக்கு அளித்த வாக்குறுதியையே அரசர் பெரிதாக நினைத்தது அவர்களுக்குப் பிடிக்கவில்லை. ஆகவே கட்சிக்காக அவர்கள் ராமருக்கு முடிசூட்ட விரும்புவ

தாகக் கூறியதை உண்மையான ஒரு பெரும் பிரதிக்ஞையாகச் செய்துவிட்டார்கள். முதலில் கூறியபடிதான் அரசன் நடக்க வேண்டும் என்பது அவர்கள் கட்சி. ராமருக்கு அது எப்படித் தோன்றியது என்பதைச் சிறிது கவனிப்போம். ராமாயணத்தில் அவர் நினைத்ததைப்பற்றித் தெளிவாக ஒன்றுமில்லை. ஆயினும் கேள்விகளாகக் கேட்டால் ராமர் இவ்வாறுதான் பதில் கூறுவார் என்று எனக்கு ஒருவாறு படுகிறது.

"தந்தை ஏதோ இரண்டு வாக்குறுதிகள் செய்திருக்கிறார். இந்த இரண்டில் நான் ஒன்றைத் தேர்ந்து எடுத்துக்கொள்ள வேண்டும். முதலில் சொன்னபடி நடந்தால் எனக்கு ஏதோ லாபகரமாக இருப்பதனால் அதை நான் மேற்கொண்டேன் என்று ஜனங்கள் நினைக்க மாட்டார்களா? ராமருக்கு நலனைத் தருவது அது என்று அவர்கள் கருதிவிடுவார்கள். நான் தர்மம் என்று நினைப்பது வேறு. இரண்டு விதமான கடமைகள் செய்யும்படி நேரும்பொழுது தியாகம் செய்யும்படியானதும் துன்பத்தை அளிப் பதுமான கடமையையே சிறிதும் தயங்காமல் நான் ஏற்றுக் கொள்வேன். சுயநல எண்ணங்களுக்கு அடிமையாகி நடந்தேன் என்பது கூடாது."

இவ்விதம்தான் ராமர் தமக்குள் ஆலோசித்திருப்பார் என்று நாம் நிச்சயமாகக் கூறலாம். இந்த விஷயத்தை ஏன் வற்புறுத்திக் கூறுகிறேன் என்றால், ராமருடன் பிறந்த சகோதரன் பரதன்; அவரைப் போலவே உதாரமும் பெருந்தன்மையும் பொருந்திய வன். அவருடைய உள்ளத்தை நன்கு அறிந்தவனாதலால் தர்மத் தையே பின்பற்றி நடக்க விரும்பினான். அவன் சொல்வதைப் பாருங்கள்: "உங்கள் குணம் எனக்குத் தெரியும். எப்பொழுதும் துன்பம் விளையும் காரியத்தையே நீங்கள் செய்ய விரும்புகிறீர்கள். கஷ்டத்தையே ஏற்று அநுபவிப்பீர்கள். தியாகம் செய்வ திலேயே ஆசை. அதை எப்படிச் செய்வது என்று நான் கூறு கிறேன்:—

अथ क्लेशजमेव त्वं धर्मं चरितुमिच्छसि ॥ II. 106. 21.

"துன்பத்தைத் தரும் கடமையைச் செய்யவேண்டும் என்றால் இப்படிச் செய்யலாமே!"

धर्मेण चतुरो वर्णान् पालयन् क्लेशमाप्नुहि । II. 106. 22.

"நான்கு வர்ணத்தாரையும் அவரவர் கடமைகளைச் சரிவரச் செய்யும்படி பார்த்துக்கொள்வது சுலபமான காரியமா? அது பொறுமையைச் சோதிக்கும் பெரும் கடமை அல்லவா? உங்கள் புத்தி முழுவதையும் அதில் ஈடுபடுத்த வேண்டும். அது உங்களை

இராத் தூக்கமில்லாமற் செய்துவிடும். இந்தக் கஷ்டத்தை ஏற்றுக்கொள்ளுங்கள்.''

चतुर्णामाश्रमाणां हि गार्हस्थ्यं श्रेष्ठमाश्रमम् ।
प्राहुर्धर्मज्ञ धर्मज्ञास्तं कथं त्यक्तुमर्हसि ॥ II. 106. 22, 23.

''எல்லா ஆசிரமங்களிலும் கிருகஸ்தாசிரமமே முக்கியமானது என்று சொல்லுவார்கள். தர்மம் எது என்று அறிந்தபிறகு அதை விட முடியுமா? பேசாமல் என் வேண்டுகோளைச் செய்யுங்கள்'' என்று கூறி, மேலும், ''நான் சிறுவன். அநுபவம் பற்றாத என் தோள்களில் அதிகச் சுமையை ஏற்றுகிறீர்கள். உங்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது அறிவு முதிர்ச்சியடையாத ஒரு சிறுபையன் என்பதைத் தவிர என்னைப்பற்றி வேறு என்ன சொல்ல முடியும்?'' என்கிறான்.

श्रुतेन बालः स्थानेन जन्मना भवतो ह्यहम् ॥ II. 106. 22.
हीनबुद्धिगुणो बालो हीनः स्थानेन चाप्यहम् ॥ II. 106. 24.
स कथं पालयिष्यामि भूमिं भवति तिष्ठति ।
भवता च विनाभूतो न वर्तयितुमुत्सहे ॥ II. 106. 24, 25.

''நீங்கள் இருக்கும்பொழுது நான் இவ்வளவு பெரிய பொறுப்பை ஏற்றுக்கொண்டால் மக்கள் என்ன சொல்லுவார்கள்? அயோத்தியிலிருந்து ஸ்திரீகள், புருஷர்கள் எல்லாரையும் அழைத்து வந்திருக்கிறேன். நம் குருமார்களும் வந்திருக்கிறார்கள். வஸிஷ்டர் இதோ இருக்கிறார். அபிஷேகத்திற்கு வேண்டிய சாமக்கிரிகள் அனைத்தும் இருக்கின்றன. கீத வாத்தியங்கள் அனைத்தும் தயாராக இருக்கின்றன. இங்கேயே உங்களுக்கு முடிசூட்டிவிடுவது என்பதுதான் என் உத்தேசம். இதை ஏற்றுக்கொள்ளுங்கள். இங்கேயே அபிஷேகம் செய்துவிடுகிறேன்.''

इहैव त्वाभिषिञ्चन्तु सर्वाः प्रकृतयः सह ।
ऋत्विजः सवसिष्ठाश्च मन्त्रवन्मन्त्रकोविदाः ॥ II. 106. 26, 27.

''நம் புரோகிதர்கள் அனைவரும் இங்கு இருக்கிறார்கள். வேதாத்தியயனம் செய்தவர்களும் இருக்கிறார்கள். இன்னும் என்ன வேண்டும்? இங்கேயே அபிஷேகம் நடக்கட்டும்'' என்கிறான்.

ஆனால் ராமர் எதற்கும் அசையவில்லை. ஒரே கண்டிப்பாக இருக்கிறார். இந்த நிகழ்ச்சியைக் கவலையோடு பார்த்துக்கொண்டு அங்குக் கூடியிருந்தோர் அனைவரும் இரண்டு விதமான உணர்ச்சிகளுக்கு ஆளாகின்றனர். பரதன் மேற்கொண்ட காரியம் வெற்றி பெறவேண்டும் என்பது அவர்களின் ஆவல். ராமர் பார்க்கும் விதமே அவர்களுக்குப் புதிதாக இருக்கிறது. ''பரதன் கூறுவதைக் கேட்டு ராமர் அயோத்திக்கு வந்து முடிசூட்டிக்கொண்டால்

நன்ருக இருக்கும். ஆனல் ராமர் தர்மத்தையே உறுதியாகப் பின் பற்றுவதாக இருக்கிருரே!'' என்கிருர்கள். ஆகவே, தர்மத்தில் ராமருக்கு உள்ள பற்றுதலை எண்ணி மகிழ்ச்சியும், அவர் அரசரா வதற்கில்லையே என்பதில் வருத்தமும் அவர்கள் கொள்ளுகின்றனர். அவர்கள் ஒரு வழியும் போக முடியாமல் தவிக்கின்றனர். ஒரு சமயம் மகிழ்ச்சியும் மற்ருெரு சமயம் வேதனையும் அவர்களைப் பீடிக்கின்றன. கவி கூறுவதைப் பார்ப்போம்:—

तदद्भुतं स्थैर्यमवेक्ष्य राघवे
समं जनो हर्षमवाप दुःखितः ।
न यात्ययोध्यामिति दुःखितोऽभवत्
स्थिरप्रतिज्ञत्वमवेक्ष्य हर्षितः ॥ II. 106. 34.

உடனே, தந்தையின் வாக்குறுதியைக் காப்பாற்றுவதில் அவர் எவ்வளவு திவிரமாக இருக்கிருர் என்று அவர்கள் வியப்படைந் தாலும், பரதன் கோரியதும் நிறைவேற வேண்டும் என்று விரும்பு கிருர்கள்.

அடுத்த ஸர்க்கத்தில், ராமர் மேலும் கூறுவதாவது:— "மூத்தவனை நான்தான் தந்தைக்குக் கீழ்ப்படிய வேண்டும், இளைய வனை நீ அவ்வாறு செய்ய வேண்டியதில்லை என்பதுதானே உன் அபிப்பிராயம்? காட்டில் வசிக்க வேண்டும் என்று எனக்கு ஒரு கடமையையும், முடிசூட்டிக்கொண்டு ராஜ்யத்தை ஆள வேண்டும் என்று உனக்கு ஒரு கடமையையும் அப்பா விதித்திருக்கிருர். உன் கடமையை நீ மறந்துவிட்டாயே!"

भवानपि तथेत्येव पितरं सत्यवादिनम् ।
कर्तुमर्हति राजेन्द्र क्षिप्रमेवाभिषेचनम् ॥ II. 107. 9.

"போய் முடிசூட்டிக்கொள். இங்கே காலதாமதம் செய்ய வேண்டாம். தந்தையின் விருப்பத்தை நான் நிறைவேற்றுவது போல் நீயும் நிறைவேற்று.''

ऋणान्मोचय राजानं मत्कृते भरत प्रभुम् ।
पितरं त्राहि धर्मज्ञ मातरं चाभिनन्दय ॥ II. 107. 10.

''தந்தை விரும்பியபடி செய்து அன்னைக்கும் களிப்பை உண்டாக்கு'' என்கிருர். அவரது மனத்தை மாற்றுவதற்கு 'அபத்யம்' என்று பரதன் கூறிய வார்த்தையையே ராமரும் உபயோகப்படுத்துகிருர்.

श्रूयते हि पुरा तात श्रुतिर्गीता यशस्विना ।
गयेन यजमानेन गयेष्वेव पितॄन् प्रति ॥ II. 107. 11.

''முன்ஞெரு காலத்தில் கயன் என்ற ஒரு பெரிய மனிதன் இருந்தான். அவன் கயா என்ற இடத்தில் ஒரு பெருவேள்வியைச்

செய்து பித்ருக்களைக் கரையேற்றினன். பிறகு அதேமாதிரி பின் வரும் சந்ததியாரும் செய்ய வேண்டும் என்று விதித்துவிட்டான்.

पुन्नाम्नो नरकाद्यस्मात् पितरं त्रायते सुतः ।
तस्मात् पुत्र इति प्रोक्तः पितॄन् यः पाति सर्वतः ॥ II. 107. 12.

"'புத்' என்ற நரகத்திலிருந்து பிள்ளை தந்தையைக் காப்பாற்றும்பொருட்டு 'இஷ்டாபூர்த்தம்' என்ற புத்ரேஷ்டி யஞ்ஞத்தைச் செய்கிறுன். அதனால்தான் அவனைப் புத்திரன் என்று சொல்லுகிறார்கள். என்னை அபத்யனாக இருக்கும்படிக் கூறினாய். நீ புத்திரனாக இரு என்று நான் உன்னிடம் கூறுகிறேன்'' என்று ராமர் பரதனுக்குச் சொல்லுகிறார்.

एष्टव्या बहवः पुत्रा गुणवन्तो बहुश्रुताः ।
तेषां वै समवेतानामपि कश्चिद्गयां व्रजेत् ॥ II. 107. 13.

"மனிதனுக்கு அநேக புத்திரர்கள் பிறக்க வேண்டும்; ஒன்று போதாது; இரண்டுகூடப் பயனில்லை. வாழ்க்கையில் எவ்வளவோ ஆபத்துக்கள் சூழ்ந்திருக்கின்றன. ஒரு புத்திரனாவது கயை சென்று சிராத்தம் செய்ய வேண்டும் என்று விரும்புகிறோம்" என்கிறார். ராமர் காலத்திலேயே கயை என்ற இடம் அவ்வளவு புனிதமாகப் பிரசித்தமாக இருந்திருக்கிறது. ஆகவே அநேக புத்திரர்கள் பிறந்து ஒருவனாவது கயைக்குச் சென்று பித்ருசிராத்தம் செய்ய வேண்டும் என்பது சாஸ்திரம்.

एवं राजर्षयः सर्वे प्रतीता राजनन्दन ।
तस्मात् त्राहि नरश्रेष्ठ पितरं नरकात् प्रभो ॥ II. 107. 14.

"சக்கரவர்த்திக்குப் புதல்வராகப் பிறந்து நீங்கள் ராஜ்ய சுகங்களை அநுபவிக்காமல் வனவாசத்திலுள்ள துன்பங்களை ஏற்று அநுபவிப்பது சகிக்க முடியாத வேதனையைத் தருகிறது" என்று பரதன் மீண்டும் மீண்டும் கூறவும், "அப்படிப்பட்ட கஷ்டம் ஒன்றுமில்லை" என்கிறார் ராமர். ராஜ்யத்தை இழந்து காட்டில் வசிக்க நேர்ந்ததை ஒரு துன்பமாகவே ராமர் கருதவில்லை. உண்மையில் அவருக்கு அது மிகவும் பிடித்திருந்தது. சீதையும் அயோத்தியில் இருப்பது போலவே சந்தோஷமாக இருக்கிறாள். எங்கு இருந்தாலும் அது தூய வாழ்க்கையாக இருக்க வேண்டும் என்பதுதான் அவர்கள் விரும்புவது. "என்னைப் பார்த்து வருந்த வேண்டாம். காட்டில் நான் கஷ்டப்படுகிறேன் என்று எண்ணாதே. நீ அயோத்தியில் ஆனந்தமாக இருக்கும்பொழுது நான் இங்கே கஷ்டப்பட்டுக்கொண்டிருப்பதாக நீ நினைத்துக்கொண்டிருக்கிறாய். அப்படி ஒன்றுமில்லை. நாம் இருவரும் சமமாகவே இருக்கிறோம்" என்று ராமர் பரதனிடம் கூறுகிறார்.

त्वं राजा भरत भव स्वयं नराणां
वन्यानामहमपि राजराण्मृगाणाम् ।
गच्छ त्वं पुरवरमद्य सम्प्रहृष्टः
संहृष्टस्त्वहमपि दण्डकान् प्रवेक्ष्ये ॥ II. 107. 17.

"நீ அயோத்திக்குச் சென்று ஜனங்களுக்கு அரசனுக இரு. நான் இங்கு வனவிலங்குகளுக்கு அரசனுக இருக்கிறேன். சந்தோஷமாக அயோத்திக்குப் போ. நான் திருப்தியோடு காட்டுக்குச் செல்கிறேன். எனக்கு அங்கு ஒரு துன்பமும் இல்லை."

छायां ते दिनकरभाः प्रबाधमानं
वर्षत्रं भरत करोतु मूर्ध्नि शीताम् ॥ II. 107. 18.

"சக்கரவர்த்திக் குடையின் நிழலில் நீ வீற்றிருக்கும்பொழுது நான் இங்கே மரங்களின் நிழலில் சுகமாக இருப்பேன். எனக்கு என்ன கஷ்டம்?"

एतेषामहमपि काननद्रुमाणां
छायां तामतिशयिनीं सुखी श्रयिष्ये ॥ II. 107. 18.

"உன்னுடன் சத்ருக்கினன் இருப்பான், எனக்கு மட்டும் இங்கே ஒருவருமில்லை என்று நினைக்கிருயா? எனக்கு உற்ற துணை லக்ஷ்மணன் இருக்கிருன். உன்னைவிட நான்தான் சந்தோஷமாக இருக்கப்போகிறேன். அயோத்திக்குத் திரும்பிச் செல்" என்று உபதேசிக்கிருர்.

शत्रुघ्नः कुशलमतिस्तु ते सहायः
सौमित्रिर्मम विदितः प्रधानमित्रम् ।
चत्वारस्तनयवरा वयं नरेन्द्रं
सत्यस्थं भरत चराम मा विषीद ॥ II. 107. 19.

பின்பு வரும் இரண்டு ஸர்க்கங்களையும் நான் விட்டுவிடலாம் என்று யோசிக்கிறேன். முதல் ஸர்க்கத்தில், ஜாபாலி என்பவர் லோகாயதமான வழியைப் பின்பற்றும்படி ராமருக்கு உபதேசிக்கிருர். அடுத்த ஸர்க்கத்தில், ராமர் அவருடைய தவருன கொள்கைகளைக் கண்டித்துப் பேசுகிருர். இந்த இரண்டு ஸர்க்கங்களையும் யாரோ பின்னுல் வந்தவர்கள் சேர்த்திருக்கிருர்கள் என்று சிலர் அபிப்பிராயப்படுகிருர்கள். அது எப்படியாயினும் அதனுல் கதைக்கு ஒன்றும் தடைநேரவில்லை. ராமர் ஜாபாலியை நிந்தித்துப் பேசுவதைக் கண்டு வஸிஷ்டர் இருவரையும் சமரசப்படுத்துகிருர். "ஜாபாலி வேண்டுமென்று கூறுகிருரேயன்றி உண்மையில் அப்படி அவர் நினைப்பவர் அல்ல. உன்னை அயோத்திக்கு எப்படியாவது அழைத்துச் செல்ல வேண்டும் என்ற ஆவலில், இம்மாதிரி பேசினுல்

ஒருவேளை கேட்பாயோ என்று நினைத்துப் பேசினர். ஆனல் உன்னிடம் அது முடியாது; உன் உறுதியை என்றும் எதுவும் கலைத்துவிடாது" என்று கூறிவிட்டு, இக்ஷ்வாகு வம்சத்தின் பெருமையை எடுத்துக்கூறத் தொடங்குகிறர்.

इक्ष्वाकूणां हि सर्वेषां राजा भवति पूर्वजः ।
पूर्वजे नावरः पुत्रो ज्येष्ठो राज्येऽभिषिच्यते ॥ II. 110. 35.

மனுவின் புத்திரன் இக்ஷ்வாகு. வஸிஷ்டர் மனுவின் நாளிலிருந்து அந்த வம்சத்திற்குக் குருவாக இருப்பவர். ஒவ்வொரு சமயமும் அரசன் இறந்தவுடன் மூத்த புதல்வன்தான் அரசனுவது வழக்கம். ஆகவே அவர் ராமரிடம், "அந்த வழக்கப்படி நீதான் வந்து அரசுரிமையை ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்று சொல்லி, பரதனது வேண்டுகோளை ஆமோதித்து அயோத்திக்குத் திரும்பி வரும்படி உபதேசிக்கிறர். மூத்தவன் இருக்கும்பொழுது இளையவன் எப்படி முடிசூட்டிக்கொள்ளலாம்? ராமர் பெரியோர் கூறுவதைக் கேட்பவர் என்று நினைத்து, அவர் மேலும், "தந்தையின் சொற்படி நடக்க வேண்டும் என்கிறய். அவர் வயது சென்றவர். நான் உன் குரு; உன் தந்தையைக்காட்டிலும் அதிக மதிப்புக்கு உரியவன். நான் கூறுவதை நீ கேட்க வேண்டும்" என்கிறர். ஆனல் ராமர் அவருக்கும் தக்க பதில் கூறுகிறர்:—

यन्मातापितरौ वृत्तं तनये कुरुतः सदा ।
न सुप्रतिकरं तत्तु मात्रा पित्रा च यत् कृतम् ॥ II. 111. 9.

"பெற்றேர் செய்ததற்குச் சரியானபடி பிள்ளை ஒருகாலும் கைம்மாறு செய்ய முடியாது. குரு தந்தைக்கு மேற்பட்டவர் என்று சொல்லாதீர்கள். நான் அதை ஒப்புக்கொள்ள மாட்டேன்."

यथाशक्तिप्रदानेन स्नापनाच्छादनेन च ।
नित्यं च प्रियवादेन तथा संवर्धनेन च ॥ II. 111. 10.

"பிள்ளைக்குப் பெற்றேர் எவ்வளவோ செய்கிறர்கள். அவை அன்பும் ஆதரவுமுள்ள செயல்கள். அவற்றை அளவிடவோ எடுத்துரைக்கவோ பதில்செய்யவோ யாரால்தான் முடியும்?"

स हि राजा जनयिता पिता दशरथो मम ।
आज्ञातं यन्मया तस्य न तन्मिथ्या भविष्यति ॥ II. 111. 11.

"என் தந்தை எனக்கு இட்ட கட்டளையை நான் நிறைவேற்றுமலிருக்க முடியாது."

இந்த இடத்தில் வஸிஷ்டரைப்பற்றிக் கொஞ்சம் சொல்ல வேண்டும். நான் கூறுவது பிசகாக இருக்கலாம். ஆனல் ராமாயணத்தில் அப்படித்தான் இருக்கிறது. தமது புகழ்பெற்ற

பேருக்குத் தக்கபடி அவர் நடந்துகொள்ளவில்லை என்று தோன்று கிறது. அவர் தர்மமே உருவானவர்; எல்லாமும் அறிந்தவர்; வேதங்களை முற்றும் கற்றுணர்ந்தவர்; பெரிய தவமியற்றியவர். இவ்வளவும் இருந்தும் அவர் அவற்றுக்கு ஏற்றபடி நடக்கவில்லை என்பது வியப்புக்கு உரிய விஷயம். தனியாகத் தம் கட்சியை எடுத்து ராமர் வாதாடியபொழுது, தர்மத்தையே கடைப்பிடித் தொழுகும் வஸிஷ்டர் தமக்குச் சாதகமாகப் பேசுவார் என்று ராமர் எதிர்பார்த்திருக்கலாம். அவர் ஏன் ஒருவராக, பக்கபலம் சிறிதும் இன்றிக் கஷ்டப்பட வேண்டும்? "பிதாவின் சொற்படி ராமன் நடப்பதுதான் சரி" என்று அவர் சொல்ல வேண்டாமா? அப்படி அவர் சொல்லியிருந்தால் எல்லாம் வேறு விதமாகியிருக்கும் அல்லவா? முதலில் எல்லாரும் சொல்லுகிறபடி அவரும் சொல்லிக் கொண்டிருந்தார். பரதன் கேகய நாட்டிலிருந்து வந்தபிறகு, சாஸ்திரம் சம்பிரதாயம் எல்லாவற்றையும் எடுத்துக்கூறி, அவனை முடிசூட்டிக்கொள்ளச் சொன்னார். "பிதா விண்ணுலகேகி விட்டார். தமையனோ காட்டிற்குச் சென்றுவிட்டான். அரசன் இல்லாத ராஜ்யத்தில் அராஜகம் ஏற்பட்டுவிடும்" என்றெல்லாம் உபதேசிக்கிறார். பரதன் அவருக்குப் பணிய மறுக்கிறான். பரதனைப் பற்றிக் கவி, "சபையில் எல்லார் முன்னிலையிலும் ஓவென்று அழுது, குருவை நிந்தித்தான்" என்கிறார்.

विललाप सभामध्ये जगर्हे च पुरोहितम् । II. 32. 10.

"இக்ஷ்வாகு வம்சத்துக் குருவான நீங்கள், எல்லாம் தெரிந்தவர், இப்படிப் பேசலாமா? என்னை அரசனாகும்படிக் கூறுகிறீர்களே. ராமர் இருக்கும்பொழுது என்னை முடிசூட்டிக்கொள்ளும்படி நீங்கள் கூறுவது கொஞ்சமும் அழகல்ல" என்கிறான் பரதன்.

பரதன் சளைக்காத அறிவாற்றலுள்ளவன். தன் கட்சி தோற்காதபடி அவனுக்கு எவையேனும் யுக்திகள் தோன்றிக்கொண்டே இருக்கும். "என் வேண்டுகோளை அண்ணா கேட்கவில்லை. நான் பிராயோபவேசம் செய்யப்போகிறேன். இந்த ரீதியில் ஒரு நிர்ப்பந்தத்தை உண்டாக்குகிறேன். இங்கேயே இந்தப் புல்தரையில் பட்டினியாகப் படுத்துக்கொண்டு அவர் என் சொற்படி கேட்கும் வரையில் தூக்கமில்லாமலிருப்பேன்" என்கிறான். சத்தியாக்கிரகத்தைப்பற்றி அறிந்த நீங்கள் ராமாயணத்தில் அதைப் பற்றித் தெரிந்துகொள்ள ஆவலுடன் இருப்பீர்கள். பரதன் சுமந்திரனிடம் குசாஸனத்தைக் கொண்டுவரும்படி உத்தரவிடுகிறான். வஸிஷ்டரைப் போலவே வெகு காலமாக இருந்துவரும் சுமந்திரன் பரதனது கட்டளையை உடனே செய்யவில்லை. அவன் ராமர் முகத்தைப் பார்க்கிறான். ராமர் அதை அநுமதிக்கவில்லை என்று தெரிகிறது. அவன் பேசாமலிருக்கவே பரதன், "நானே

போய் எடுத்து வருகிறேன்" என்று கூறி, அதை எடுத்து வந்து விரித்துப் படுத்துக்கொள்ளுகிறான். 'இப்பொழுது என்ன செய்யப் போகிறீர்கள்?' என்று கூறும் பாவனையில் ராமரை நோக்கவும், ராமர், "என்ன இது? நீ என்ன செய்கிறாய்? க்ஷத்திரியர்களாகிய நாம் பிராயோபவேசம் செய்யலாமா? கடன்காரனிடமிருந்து கடனை வாங்கும்பொருட்டுப் பிராம்மணன் செய்யும் செயல் அல்லவா இது? நாம் இதைச் செய்யவே கூடாது" என்கிறார்.

ब्राह्मणो ह्येकपार्श्वेन नरान् रोद्धुमिहार्हति ।
न तु मूर्धाभिषिक्तानां विधिः प्रत्युपवेशने ॥ II. 111. 17.

"இந்த முறையை நாம் ஒருபோதும் அநுசரிக்கக் கூடாது. க்ஷத்திரியனுக்கு இது ஏற்றதல்ல" என்கிறார். ஆயினும் வானர சேனை சமுத்திரத்தைத் தாண்டிச் செல்ல அணை கட்டுவதற்குச் சமுத்திரம் துணைபுரியாமலிருக்கவே, அதை அடக்குவதற்கு ராமர் செய்த உபாயம் என்ன? தாம் க்ஷத்திரியர் என்பதை அப்பொழுது மறந்துவிட்டாரா? அப்படித்தான் தோன்றுகிறது. இதிலெல்லாம் ஏதோ ஒருவிதப் பொருத்தம் காண்கிறது. பரதன் தன் முயற்சியில் வெற்றி பெறவில்லை. க்ஷத்திரியராக இருந்தும் ராமர் சத்தியாக்கிரகம் செய்து பயனடையவில்லை. மூன்று நாள் ஆகாரம் நித்திரை இல்லாமல் தர்ப்பையை விரித்துப் படுத்துக்கொண்டிருக்கிறார். சமுத்திரம் அடங்காமலிருக்கவே, "வில்லை எடுத்துச் சமுத்திரத்தை வற்ற அடித்துவிடுகிறேன் பார்" என்று கறுவியதும் சமுத்திரராஜன் தோன்றினான். அப்பொழுதும் ஸாமோபாயம் பயன்படவில்லை.

கிஷ்கிந்தா காண்டத்தில், வானரர்கள், சுக்கிரீவன் கூறிய கெடு தவறிவிட்டதனால் இனித் திரும்பிப்போய் மரணதண்டனைக்கு ஆளாக வேண்டியதுதான் என்று கருதி, அங்கதன் தலைமையில் எல்லாரும் பிராயோபவேசம் செய்யத் தீர்மானிக்கிறார்கள். அங்கதனுக்கு இந்தப் பிராயோபவேசத்தில் மிகுந்த பற்று இருப்பது போலத் தோன்றுகிறது. இரண்டு மூன்று தடவை அவன் அதைச் செய்ய உத்தேசிக்கிறான். ஜடாயுவின் உடன்பிறந்த சம்பாதி பசியினால் வருந்திக்கொண்டிருந்தபொழுது, இறக்கும் நோக்கத்துடன் படுத்திருந்த வானரர்களைக் கண்டார். "இந்தக் குரங்குகள் எல்லாம் மரணமடைந்தால் எனக்கு அப்புறம் உணவுக்குக் கவலையே இல்லை" என்று தம் அதிருஷ்டத்தை எண்ணி வாய்விட்டுக் கூறியதும், அதைப் படுத்திருந்த வானரர்கள் கேட்டு உடனே எழுந்துவிட்டனர் என்பது ராமாயணக் கதை.

சுந்தரகாண்டத்தில், அனுமாரும் பிராயோபவேசம் செய்வதைப்பற்றி யோசிக்கிறார்; ஆனால் செய்யவில்லை. பிராயோபவேசம் செய்வது ஒரு நல்ல வழக்கமாக அந்தக் காலத்தில் இருந்திருக்

கிறது என்பது இதிலிருந்து தெரிகிறது. சீதாதேவியைக் காணமல் தேடி அலைந்த அனுமார் பின்வருமாறு கூறுகிறார்:—

अदृष्ट्वा किं प्रवक्ष्यामि तामहं जनकात्मजाम् ।
ध्रुवं प्रायमुपैष्यन्ति कालस्य व्यतिवर्तने ॥ V. 12. 8.

சத்தியாக்கிரகம் செய்வதைப்பற்றி ராமாயணத்திலிருந்து நாம் அறிந்துகொள்வது என்னவெனில், அது பயனற்றது என்பதே.

ராமர் அனுமதிக்கவில்லை என்று தெரிந்ததும் பரதன் உடனே தன் விரதத்தைக் கைவிடவில்லை. தன்னுடன் வந்த அயோத்தி மக்களை நோக்கி, "நீங்கள் ஏன் ஒன்றும் கூறாமல் பேசாமலிருக்கிறீர்கள்? அவர் எவ்வளவு பிடிவாதமாக இருக்கிறார், பாருங்கள். நீங்கள் எனக்காகப் பேசுங்கள்" என்று வேண்டிக்கொள்ளுகிறான். இரண்டு தரப்பிலும் நேர்ந்த வாதங்களைக் கேட்டிருந்த அவர்கள் ராமர் நாட்டுக்குத் திரும்ப வேண்டும் என்று விரும்பினாலும் அவரிடம் அவ்வாறு கூறத் தைரியமற்றவராக இருந்தனர். "தங்கள் தமையனார் சொல்லுவதே சரி என்று தோன்றுகிறது. நாங்கள் என்ன செய்வது?" என்று கூறிவிடுகின்றனர். பிறகு ராமர் பரதனிடம், "பார்; உன்னைச் சேர்ந்தவர்களே உன்னைக் கைவிடுகின்றனர். நீ செய்ய உத்தேசிக்கும் இந்தச் சத்தியாக்கிரகம் தவறு. எழுந்திரு. நீ செய்த பிசகுக்கு நீ பிராயச்சித்தம் வேறு செய்ய வேண்டும். போய் ஆசமனம் செய்துவிட்டு என்னை வந்து தொடு. பரிசுத்தமாகிவிடுவாய்" என்கிறார்.

பிராயோபவேசம் செய்வதை நிறுத்திய பரதன் வேறொரு விதமாகத் தன் வாதத்தைத் தொடங்குகிறான்: "ஒரு பிள்ளை துறவியாகவும் ஒரு பிள்ளை அரசனாகவும் இருக்கும்படித் தந்தையின் ஆணை என்கிறீர்கள். நல்லது; பிதாவின் விருப்பப்படியே இருக்கட்டும். நீங்கள் போய் அயோத்தியில் அரசாளுங்கள். நான் துறவியாகக் காட்டுக்குச் செல்லுகிறேன். நமக்குள் நாம் மாற்றிக்கொள்ளலாம். பதினான்கு வருஷங்கள் நான் வனவாசம் செய்கிறேன். நீங்கள்தாம் அதைச் செய்ய வேண்டும் என்பது என்ன?" என்கிறான்.

यदि त्ववश्यं वस्तव्यं कर्तव्यं च पितुर्वचः ।
अहमेव निवत्स्यामि चतुर्दश समा वने ॥ II. 111. 26.

ராமர் அங்கே கூடியிருப்போரை நோக்கி, "உங்கள் அனைவரையும் அழைத்து வந்தவன் பேசும் அறியாமையைப் பாருங்கள். பதினான்கு ஆண்டுகள் காட்டில் துறவியைப் போல் வாழ்க்கை நடத்த வேண்டுமென்று ஆணையிடப்பெற்ற நான் அதை மற்றொருவனுக்கு மாற்றலாமா? அது நியாயமாகுமா? நான் செய்ய வேண்டியதை மற்றொருவன் எப்படிச் செய்ய முடியும்?" என்று கேட்கிறார்.

विक्रीतमाहितं क्रीतं यत् पित्रा जीवता मम ।
न तल्लोपयितुं शक्यं मया वा भरतेन वा ॥ II. 111. 28.

''வாங்கியோ, விற்ருே அல்லது அடைமானம் வைத்தோ தந்தை விவகாரம் செய்யும்பொழுது நான் அதை எப்படித் தடுக்க முடியும்? பரதனுவது நானுவது அதை ஒன்றும் மாற்ற முடியாது. தந்தை எப்படிச் செய்கிருரோ அதற்கு நாங்கள் கட்டுப்பட்டவர்கள்.''

उपाधिर्न मया कार्यो वनवासे जुगुप्सितः । II. 111. 29.

''இதோ பார். இப்படிச் செய்ய உன் தாய்க்கு முழு உரிமையும் உண்டு.'' தம் வாதத்திற்கு வலிமை தேடும் வேகத்தில் கைகேயியை முற்றும் ஆமோதிக்கிருர்.

युक्तमुक्तं च कैकेय्या पित्रा मे सुकृतं कृतम् ॥ II. 111. 12.
वृतो राजा हि कैकेय्या मया तद्वचनं कृतम् ।
अनृतान्मोचयानेन पितरं तं महीपतिम् ॥ II. 111. 32.

''தந்தையின் பிரதிக்கினையை நான் காப்பாற்றிவிட்டேன். இனி நீ உன் பங்குக்குச் செய்ய வேண்டும்'' என்கிருர்.

அப்பொழுது அங்கே கூடியிருந்த மகரிஷிகள் தேவர்கள் அனைவரும், ''ராமர் சொல்வது சரி. அவர் இவ்வாறு செய்வதுதான் தசரதரை நரகத்திற்குச் செல்வதினின்றும் ரக்ஷிப்பதாக இருக்கிறது. கைகேயிக்கு அவர் பட்ட கடன், அவர் அவளுக்குக் கொடுத்த வாக்குறுதி ராமரால் மீட்கப்பட்டதனுல்தான் இப்பொழுது அவர் ஸ்வர்க்கத்தில் இருக்கிருர். தாம் பட்ட கடனிலிருந்து மீண்டு அவர் ஸ்வர்க்கத்தில் ஆனந்தமாக இருக்கிருர். அதை மாற்றி நீ அவரை அயோத்திக்குத் திரும்பி வர வேண்டும் என்கிருய்'' என்கிருர்கள்.

பரதன் இன்னமும் தோல்வியை ஏற்றுக்கொள்ளவில்லை. அவன் கீழே விழுந்து ராமரின் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, ''நல்லது; வாதத்தில் என்னை வென்றுவிட்டதாக நீங்கள் நினைக்கிறீர்கள். அப்படியே இருக்கட்டும். ஆனுல் தக்க அறிவில்லாத நான் போய் ராஜ்ய பரிபாலனம் செய்ய முடியுமா? யார் எனக்குக் கீழ்ப்படிவார்கள்? எல்லாரும் 'ராமர்தாம் எங்களுக்கு வேண்டும்' என்கிருர்கள். என்ன செய்வேன்? ராஜ்யத்தை ஆளுவதற்கு எனக்குச் சக்தி இல்லையே!'' என்கிருன்.

रक्षितुं सुमहद्राज्यमहमेकस्तु नोत्सहे ।
पौरजानपदांश्चापि रक्तान् रञ्जयितुं तथा ॥ II. 112. 11.

''மழையில்லாமல் எங்கும் வறண்டு கிடக்கும்பொழுது விவசாயிகள் கைகளைக் கூப்பி இந்திரனை மழையை வர்ஷிக்கும்படி

வேண்டிக்கொள்வது போல், மந்திரிகள் உறவினர்கள் நாட்டுமக்கள் அனைவரும் உங்களையே அரசராக வேண்டும் என்று விரும்புகின்றனர்'' என்கிறான்.

त्वामेव हि प्रतीक्षन्ते पर्जन्यमिव कर्षकाः ॥ II. 112. 12.

பின்பு வரும் இந்தச் சுலோகம் அவ்வளவு தெளிவாக இல்லை.

इदं राज्यं महाप्राज्ञ स्थापय प्रतिपद्य हि ।
शक्तिमानसि काकुत्स्थ लोकस्य परिपालने ॥ II. 112. 13.

ஒரு வியாக்கியானகாரர் இதற்கு ஒருவிதமாகப் பொருள் கூறுகிறார். அதுவே சரியென்று எனக்குத் தோன்றுகிறது. கடைசியாகப் பரதன், ''இந்த ராஜ்யம் உங்களுடையது. நீங்கள் அதை ஏற்றுக்கொண்டு உங்களுக்குப் பதிலாக வேண்டுமானால் ஒரு பிரதிநிதியை ஏற்படுத்துங்கள். நீங்கள் தேர்ந்தெடுப்பவன் ராஜ்யத்தை ஆள்வதற்குத் தகுந்தவனாக இருப்பான். ஆகவே, உங்களுக்குப் பதிலாக யாரையாவது உங்கள் பேரில் ராஜ்யபரிபாலனம் செய்ய நியமியுங்கள்'' என்று கேட்டுக்கொள்ளுகிறான். ராமருக்கு இது சம்மதமாக இருக்கிறது.

आगता त्वामियं बुद्धिः स्वजा वैनयिकी च या ।
भृशमुत्सहसे तात रक्षितुं पृथिवीमपि ॥ II. 112. 16.

''நான் கூறியதை உடனே ஒப்புக்கொண்டாயே! இதிலிருந்தே அயோத்தியை ஆளுவதற்கு நீ முற்றும் தகுந்தவன் என்று ருஜுவாகிறது.''

अमात्यैश्च सुहृद्भिश्च बुद्धिमद्भिश्च मन्त्रिभिः ।
सर्वकार्याणि संमन्त्र्य सुमहान्त्यपि कारय ॥ II. 112. 17.

''உனக்கு ஏதாவது சந்தேகம் எழுந்தால் ஆளுவதில் அநுபவமுள்ள மந்திரிகள் உனக்கு அநேகர் இருக்கிறார்கள். அவர்கள் உனக்குத் தக்க யோசனை கூறுவார்கள். அவர்களின் துணைக்கொண்டு அரசை ஆண்டுகொண்டிரு. நான் திரும்பிவிடுவேன் என்பதில் உனக்கு இன்னும் நம்பிக்கை இருந்தால் அதை உன் மனத்தினின்றும் அறவே அகற்றிவிடு. அது மட்டும் முடியாது.''

लक्ष्मीश्चन्द्रादपेयाद्वा हिमवान् वा हिमं त्यजेत् ।
अतीयात् सागरो वेलां न प्रतिज्ञामहं पितुः ॥ II. 112. 18.

''நடக்கக்கூடாதது எல்லாங்கூட நடந்துவிடும். உலகில் எது தன் இயல்பை இழந்து வேறு விதமானாலும் நான் மட்டும் என் தர்மத்தைக் கைவிட முடியாது'' என்கிறார்.

முன்பே நான் இந்தச் சுலோகத்தை எடுத்துக் கூறியிருக்கிறேன். கடைசியாக ராமர் கைகேயியின் தவறான செயல்களை

மறந்து, "அவளைத் தாய்க்கு உரிய அன்புடனும் ஆதரவுடனும் நடத்த வேண்டும்" என்று பரதனிடம் கேட்டுக்கொள்ளுகிறார். எந்தச் சமயத்திலும், தம்மை ஒருவிதத்தில் விரோதியாக நினைத்துக்கொண்டிருப்பவர்களின் விஷயத்திலுங்கூட, ராமர் தம் கடமையை மறந்துவிடமாட்டார் என்பது இதிலிருந்து புலனாகிறது அல்லவா? தன் பிள்ளைக்குப் போட்டியாக வந்தவன் என்று ராமரைக் கருதினாள் கைகேயி. தனக்கு இடைஞ்சல் இல்லாமல் இருக்கும்பொருட்டு அவரை நாட்டை விட்டு அகற்ற எண்ணினாள்.

कामाद्वा तात लोभाद्वा मात्रा तुभ्यमिदं कृतम् ।
न तन्मनसि कर्तव्यं वर्तितव्यं च मातृवत् ॥ II. 112. 19.

"கெட்ட எண்ணத்துடன் அவள் தவறு செய்தவள்தான். ஆனால் நீ அதை நினைவிற் கொள்ளக்கூடாது. அது சரியல்ல. அதையே மனத்தில் வைத்துக்கொண்டு நீ அவளிடம் பழகக் கூடாது. சாதாரணமாக ஒரு மகன் தன் தாயினிடம் எவ்விதம் நடந்துகொள்வானோ அவ்விதம் நீ நடந்துகொள்ள வேண்டும்" என்று ராமர் பரதனிடம் கூறுகிறார்.

मातरं रक्ष कैकेयीं मा रोषं कुरु तां प्रति ।
मया च सीतया चैव शप्तोऽसि रघुसत्तम ॥ II. 112. 27, 28.

இனி, பின்வரும் நிகழ்ச்சிதான் கடைசியாக எல்லார் மனத்திலும் பதியும்படியாக இருக்கிறது. திடீரென்று தங்க வேலைப்பாடமைந்த இரண்டு பாதுகைகளைப் பரதன் வெளியே எடுக்கிறான். அபிஷேகம் செய்துகொள்ள ராமர் மனமுவந்து ஒப்புக்கொண்டால் அவை உபயோகமாக இருக்கும் என்று எண்ணியே அவன் அவற்றை எடுத்து வந்திருக்க வேண்டும். வஸிஷ்டரும் அவற்றை எடுக்கும்படி பரதனிடம் கூறியதும், அவன் ராமரிடம், "இதோ இந்தப் பாதுகைகள் இருக்கின்றன. இவற்றின் மீது ஏறி நின்று பிறகு என்னிடம் கொடுங்கள்" என்கிறான். ராமர் ஏறி நின்றதும் அவர் கால்களின் ஸ்பரிசத்தினால் அந்தப் பாதுகைமீது அவர் சக்தி முழுவதும் ஆரோபணமாகிவிட்டது என்று மக்கள் சொல்லிக்கொண்டார்கள். பரதன் அவற்றை எடுத்துப்போய், சிம்மாசனத்தில் வைத்து, ராமர் ஆளுவது போலவே அவருக்குப் பிரதிநிதியாக இருந்து, ராஜ்ய பரிபாலனம் செய்கிறான். ராமர் ஏறி நின்ற பாதுகைகளைப் பரதன் தன் தலைமீதே தாங்கிச் சென்றதாகவும் கூறப்படுகிறது. 115-ஆம் ஸர்க்கத்தில் இந்தச் சம்பவத்தைப்பற்றிப் பரதன் எவ்விதம் நினைத்தான் என்பது தெரிய வருகிறது.

एतद्राज्यं मम भ्रात्रा दत्तं सन्न्यासवत् स्वयम् ।
योगक्षेमवहे तस्य पादुके हेमभूषिते ॥ II. 115. 14.

''ராமர்தாம் அரசர். அவர் என்னிடம் தம் ராஜ்யத்தை ஒப்படைத்திருக்கிறார். அவருக்குப் பதிலாக அதைப் பரிபாலனம் செய்கிறேன். சொத்துக்கு உடையவர் அவரே. நான் அவருக்காக அதைக் காப்பாற்றுகிறவன். அது நியாயமே தவிர எனக்கு அதில் துளியும் உரிமை இல்லை. இந்தப் பாதுகைகளே அரசன்'' என்கிறான்.

भरतः शिरसा कृत्वा सन्न्यासं पादुके ततः ।
अब्रवीद्दुःखसन्तप्तः सर्वं प्रकृतिमण्डलम् ॥ II. 115. 15.

தன்முன் கூடியிருக்கும் பிரஜைகளைக் கண்டு பரதன் நொந்த உள்ளத்துடன், ''இந்தப் பாதுகைகளுக்காகத்தான் தர்மம் இந்த நாட்டில் நிலைநிற்கும்; எனக்காக அல்ல'' என்று கூறிவிட்டுப் பாதுகைகளுக்கு அபிஷேகம் செய்கிறான்.

छत्रं धारयत क्षिप्रमार्यपादाविमौ मतौ ।
आभ्यां राज्ये स्थितो धर्मः पादुकाभ्यां गुरोर्मम ॥ II. 115. 16.
ततस्तु भरतः श्रीमानभिषिच्यार्यपादुके ।
तदधीनस्तदा राज्यं कारयामास सर्वदा ॥ II. 115. 26.

ஏதாவது செய்யவேண்டி யிருக்கும்பொழுதும் எவையேனும் விலையுயர்ந்த காணிக்கைகள் கிட்டும்பொழுதும் அவற்றைப் பாதுகைகளின் முன்வைத்து எல்லா ராஜகாரியங்களையும் அவற்றினிடம் ஒப்பித்தபிறகு அவன் மேல் நடக்க வேண்டியவற்றைச் செய்வான்.

यदा हि यत् कार्यमुपैति किञ्चि-
दुपायनं चोपहृतं महार्हम् ।
स पादुकाभ्यां प्रथमं निवेद्य
चकार पश्चाद्भरतो यथावत् ॥ II. 115. 27.

ராம பரத ஸம்வாதத்தில் வெற்றி பெற்றவர் யார் என்பது வெகு எளிதாகத் தீர்ந்துபோயிற்று என்று நமக்குத் தோன்றுகிறது. உண்மையில் இருவரும் வெற்றி பெற்றனர்; இருவரும் தோல்வியடைந்தனர் என்றே சொல்ல வேண்டும். அதுதான் இதிலுள்ள வேடிக்கை. வெளிப்படையாகப் பார்க்கும்பொழுது தோற்றவன் பரதன்தான். தமையனை அயோத்திக்கு எப்படியாவது திரும்பி அழைத்துச் செல்ல வேண்டும் என்று வந்தவன் அப்படிச் செய்யாமலே செல்ல வேண்டியதாயிற்று. ஆனால் மற்றொரு விதமாகப் பார்க்கும்பொழுது அவன் வெற்றி பெற்றவன் என்று கூறலாம்.

ராமர் லக்ஷ்மணன் சீதை ஆகிய மூவரும் நாட்டை விட்டுக் கானகம் சென்றபிறகு ஒரு தடங்கலுமில்லாமல் பரதனுக்கு யுவராஜபட்டம் கட்டுவதென்று கைகேயி விரும்புகிறாள்.

தசரதரும் இன்னும் ஏனையோரும் அவ்விதமே நடக்குமென்று எண்ணியிருக்கின்றனர். பதினான்கு வருஷங்கள் கழித்து ராமர் திரும்பி வருவதற்குள் அவரை அனைவரும் மறந்துவிடுவார்கள் என்று வேறு மந்தரை கைகேயிக்கு நம்பிக்கையூட்டுகிறாள். இணை யற்ற சௌந்தரியம் பொருந்திய பெண்களுள் சிறந்த அணிகலன் போன்ற சீதையை யாராவது அபகரிக்க எண்ணுவான். ராமர் அதற்காக யுத்தம் செய்யவேண்டிவரும். அவளை ஒருகால் அடியோடு இழந்துவிட்டால் ராமர் பிறகு உயிர்தரிக்க மாட்டார். லக்ஷ்மண னும் அவரைப் பின்பற்றிவிடுவான். இவ்விதம் நிச்சயமாக நடக்கும். அதில் சந்தேகமில்லை. பரதன்தான் அரசனாக வேண்டும். ராஜ்யம் முற்றும் அவன் கைக்குச் சென்றுவிடும் என்பதுதான் அவர்களின் திட்டம். ஆனால் பரதன் தன் புத்தியினாலும் யுக்தியினாலும் அதை மாற்றிவிடுகிறான்.

ராமர் வனம் சென்றாலும் அயோத்திக்கு அவர்தாம் அரசர்; தான் அவர் பாதுகைகளின் மூலம் அவருக்குப் பதிலாக ஆண்டு வருவது என்பதை எப்படியோ அவரை ஒப்புக்கொள்ளும்படிப் பரதன் செய்துவிடுகிறான். ஆகவே வெற்றி இருவருக்கும்தான் என்று நினைப்பதில் தவறில்லை என்று தோன்றுகிறது. சத்தியத்தில் வெற்றி பெற்றவர் ராமர் என்றும், சட்டபூர்வமாக வெற்றி பெற்றவன் பரதன் என்றும் கூறலாம். அதோடு ராமருடைய பாது கைகளின்மூலம் ராஜ்யத்தை ஆளும் அவர் திறமை, தைரியம், அறிவு, கண்காணிப்பு ஆகிய எல்லாச் சக்திகளையும் அவன் பெற்ற தாக வால்மீகி கூறுகிறார். அவ்விதமே அனைவரும் நம்புகின்றனர்.

இந்தப் பிரசித்தமான கட்டம் இவ்வாறு முடிவடைகிறது. நேரமிருந்து இந்த இடத்தைப் படிப்பவர்கள் எவ்வளவோ விஷயங் களை இதிலுள்ள அழகிய சுலோகங்களிலிருந்து தெரிந்துகொள்ள லாம். சாதாரணமாக மற்ற இடங்களில் கவி சொற்களைத் தாராளமாக உபயோகித்து இயற்றுவார். இங்கு மிகவும் அர்த்த புஷ்டியுடன் குறைந்த சொற்களில் உயர்ந்த விஷயங்களை அடக்கி இயற்றுகிறார். சொல்லும் பொருளும் ஒன்றோடொன்று இணைந்து படிப்பதற்கு மிக்க கவர்ச்சியை உண்டுபண்ணுவனவாகவும், படிப் போரின் உள்ளத்தையும் வாழ்க்கையையுமே தூய்மைப்படுத்துவன வாகவும் அமைந்திருக்கின்றன.

# 10

## வாலிவதம் பற்றிய விவாதம்

ராமரின் குணசித்திரத்தை முடிக்கு முன்பு, அநேக நூற்றுண்டுகளாக மிக்க வேகத்துடனும் சூட்டுடனும் வாக்கு வாதத்திற்கு இலக்காகியிருக்கும் இரண்டு முக்கியமான விஷயங்களை எடுத்துக் கூற வேண்டும் என்று நினைக்கிறேன். இரண்டு நிகழ்ச்சிகள் இரு சாராரிடையே வாக்குவாதத்தைக் கிளப்புவனவாக உள்ளன. இரு தரப்பிலும் வர்தத்திற்குத் தகுந்த பலம் இருக்கிறது. ஆயினும் நான் எந்தக் கட்சியையும் ஆதரித்துத் தீர்மானமாக எதையும் சொல்லப்போவதில்லை. ராமாயணத்தைப் படிப்பவருக்கு இரண்டு கட்சியினருடைய அபிப்பிராயத்தையும் தெரிந்துகொள்வது பயனளிப்பதாக இருக்கும்.

இன்று வாலிவத நிகழ்ச்சியை மட்டும் எடுத்துக்கொள்வதாக இருக்கிறேன். யுத்த காண்டத்தின் முடிவில், சீதையின் விஷயத்தில் ராமர் நடந்துகொண்ட விதம் பெரும் சர்ச்சைக்குக் காரணமாக உள்ளது. அதைப்பற்றிக் கூறுமல் விட்டுவிடுகிறேன். தொடக்கத்தில் நாம் கவனிக்க வேண்டிய முக்கியமான விஷயங்களை எடுத்துக் கூறுவது நல்லது. 'மறைந்திருந்து ராமர் வாலியைக் கொன்ருர்' என்று குறை கூறுவோர் சொல்லுகிருர்கள். 'அவனைக் கொன்றதே தர்மத்துக்கு விரோதம்' என்றும் குற்றம் கூறுகிருர்கள். இத்துடன், முக்கியமல்லாத சில சிறு விஷயங்களையும் சேர்த்துக் கொள்ளுகிருர்கள். தற்காலத்து மனுேபாவத்தோடு கூடிய எனது சில நண்பர்கள், அரசர்களிடம் எவ்விதமான சர்வாதிகாரமும் ஒரு பெரும் கெட்ட குணம் என்றே கருதுகின்றனர். நாம் அந்நிய ஆட்சியின் கீழ்ச் சுதந்திரமற்றவர்கள்; ஆகவே பிறர் கையால் எவ்வித அடக்குமுறையும் நமக்கு வெறுப்பை அளிப்பதாக இருக்கிறது. அதுவும் இந்தப் பெரும் போரின் விளைவாக உலகம் முழுவதும் சிறியது பெரியது என்ற வித்தியாசமில்லாமல் எல்லா நாடுகளிலும் சுதந்திர உணர்ச்சி, எல்லாப் பேச்சிலும் செயலிலும் கிளம்பியிருக்கிறது. இம்மாதிரி சமயத்தில் ஒரு பெரிய தேசத்தின் மீது மற்ருெரு சிறிய தேசம் உரிமை கொண்டாடுவது, ஓர் அரசனுக்குப் பல சிற்றரசர்கள் கப்பம் கட்டுவது ஆகியவை உகந்தவை

யாக இல்லாமலிருப்பதில் ஆச்சரியமில்லை. அற்பமான சுவேச்சாதிகாரம் என்று அதைக் கருதுகிறோம். அரசர்களிடையே இது பெரும் பேராசையினால் விளைவதே தவிர வேறில்லை. பலக் குறைவான தேசத்தின் மீது குதிரையேறுவது என்பதும் இதுதான். இந்தச் சர்வாதிபத்தியத்தின் உரிமையோடுதான் ராமர் பேசுகிறார். தற்காலத்தின் மனப்போக்குக்கு, இது ராமருடைய குணத்திற்குச் சற்று ஒவ்வாதிருப்பது போலத் தோன்றுகிறது.

பல நூற்றாண்டுகளுக்கு முன்பு சக்கரவர்த்தியாக இருந்த ஒருவரைப் பற்றியுள்ள ஒரு பழமையான பெருங் காவியத்தைப் படிக்கும் நாம் இக் காலத்துக் கொள்கைகளை மனத்தில் கொண்டு ராமருடைய கருத்துக்களை நிர்ணயிக்க முடியாது. திருப்தியோடு இருப்பது பிராம்மணனுக்கு உள்ள பிரத்தியேகமான குணம் என்பதை நாம் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். க்ஷத்திரியனுக்கு அது சிலாக்கியமானதல்ல. அது பலவீனத்தின் அறிகுறியாகத் தோன்றும். தன் நாட்டின் எல்லையை விரிவுபடுத்திக் கொண்டே போய்ப் பல நாடுகளைக் கைப்பற்றிச் சக்கரவர்த்தியாக விரும்பி, அல்லும் பகலும் பாடுபட்டுக்கொண்டிருக்கும் க்ஷத்திரிய வீரனுக்குத்தான் மதிப்பு அதிகம். பல நாடுகளில் தன் அதிகாரத்தைச் செலுத்துவதற்காகவே பெரிய யாகங்களைச் செய்வது. இருப்பதை வைத்துக்கொண்டு திருப்தியோடு இருப்பது ஓர் அரசனுக்கு உகந்ததாக அந்தக் காலத்தில் கருதப்படவில்லை. தன் நாட்டைப் பெரிதாக்கிப் பிற நாட்டினரைத் தன் அதிகாரத்துக்குக் கீழ்ப்படியச் செய்து பெரும்புகழ் எய்தவில்லை என்றால் அவன் அரசனாக இருக்கத் தகுதியற்றவன் என்றே பிறர் அவனைக் கருதுவார்கள். ஆகவே, 'பூமண்டலம் முழுவதும் நம்மைச் சேர்ந்தது' என்ற முறையில் ராமர் பேசியதை நாம் ஒன்றும் குறை கூற முடியாது.

பரதனால் நியமிக்கப்பட்டவராக, அந்த உரிமையைக்கொண்டு தாம் வாலியைக் கொன்றதாக ராமர் கூறுகிறார். பரதன் அயோத்திக்கு அரசன். அதனாலேயே பாரதவர்ஷம் முழுவதும் அவன் ஆளுகைக்கு உட்பட்டது. கிஷ்கிந்தையில் ஆளும் அரசன் தவறாக நடந்தால் அவனைச் சிக்ஷிக்கப் பரதனுக்கு அதிகாரம் உண்டு. ஆகவே பரதனுடைய சகோதரனோ அல்லது அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த வேறு எவனாயினும் ஒருவனோ, பரதனுக்குப் பதிலாக அந்த அரசனுக்குத் தண்டனை விதிக்க உரிமையுள்ளவனாவான். வாலியைக் கொன்றதற்கு மேற்கூறியவற்றைத்தான் ராமர் காரணமாக எடுத்துக் கூறுகிறார். 'வாலியின் தவறுகளுக்குத் தகுந்த தண்டனை விதிப்பது ராமரின் அதிகாரத்துக்கு உட்பட்ட செயலா?' என்பதுடன், 'தம்பியின் மனைவியைச் சுவிகரித்துக் கொண்டதற்கு மரணதண்டனைதான் நியாயமாக விதிக்கப்பட

வேண்டியதா?' என்ற கேள்வியும் எழுகிறது. இந்திய சரித்திரத்தில், நந்தகுமார் என்பவன் பத்திரத்தில் கள்ளக் கையொப்பம் இட்டதற்காக மரணதண்டனை விதிக்கப்பெற்றான் என்று படித்திருப்பது நினைவுக்கு வருகிறது அல்லவா? கள்ளக் கையெழுத்துக்கு மரணதண்டனை சட்டத்தில் விதிக்கவில்லை என்பதனால் அதைப் பெரும் அநீதியாகச் சரித்திர ஆசிரியர்கள் கருதினார்கள் என்று தெரிகிறது. ஆயினும் அக் காலத்தில் கிழக்கிந்தியக் கம்பெனியார் அத்தகைய கொள்கை எதையும் மேற்கொள்ளவில்லை. எவனாவது ஒருவனால் அசௌகரியமும் தொந்தரவும் ஏற்பட்டால் அவனைப் பிடித்து இஷ்டமான தண்டனை விதிப்பதைப்பற்றி அவர்கள் பெரிதாக நினைக்கவில்லை. வாலிக்கு மரணதண்டனை விதிப்பதில் ராமரும் மேற்கூறியவிதமே நினைத்திருப்பார் என்று தோன்றுகிறது.

கேட்கப்படும் மற்றொரு கேள்வி: 'ராமருடைய நோக்கம் முழுவதும் சீதையை ராவணனிடமிருந்து மீட்பது. அதை ஒரு நிமிஷத்தில் செய்து முடிக்க வல்லவனான வாலியை அவர் ஏன் தம் நண்பனாக்கிக்கொள்ளவில்லை? வாலி மிக்க பலமுள்ளவன். ராவணனையே எளிதில் வென்று அடக்கியவன் என்று எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டவன். அப்படியிருக்க, அவனை விட்டு, அவனுக்கு இளைத்தவனான சுக்கிரீவனது நட்பை ராமர் நாடுவானேன்?'

மற்றொரு கேள்வி: 'முதற் சந்திப்பிலேயே ஏன் ராமர் வாலியைக் கொல்லவில்லை? ஏன் அப்பொழுது அவனைக் கொல்லாமல் விட்டுப் பிறகு சுக்கிரீவனை மறுபடியும் போய் அவனைத் துவந்துவ யுத்தத்திற்கு அழைக்கும்படிக் கூற வேண்டும்? அதற்கு ராமர் கூறிய காரணம் அவ்வளவு திருப்திகரமாக இல்லை' என்பதுதான் பொதுவாக எல்லாருடைய அபிப்பிராயம். உரையாசிரியர்களும் ராமாயண பாராயணம் செய்பவர்களும் ராமருடைய இந்தத் தகாத செயலுக்குக் காரணம் தேட மிகவும் சிரமப்படுகிறார்கள்.

மற்றொரு கேள்வி; எனக்குத் தோன்றுகிறதே தவிர இதை எனக்கு முன் யாரும் கிளப்பவில்லை என்று நினைக்கிறேன். 'சுக்கிரீவன் மனைவி ருமாவை வாலி சுவீகரித்துக்கொண்டதற்கு மரணதண்டனை அவசியம் என்று ராமர் நினைத்தது சரியா?' என்பது என் கேள்வி. இந்தப் பிரச்னைகளையெல்லாம் நான் ஆராய்ந்து கூறலாம் என்று இருக்கிறேன். ஆனால் அதற்காக வால்மீகி ராமாயணத்தை விட்டு, வேறு புராணங்களையோ, நம்மிடையே பழக்கத்திலுள்ள பிறமொழி ராமாயணங்களையோ நான் எடுத்துக்கொள்ளப்போவதில்லை. வால்மீகி இயற்றியிருப்பதையே பிரமாணமாக வைத்துக்கொண்டு மற்றவற்றை விட்டுவிடுவோம். சாஸ்திரசம்பந்தமான வேறு சந்தேகங்களைப்பற்றியெல்லாம் நாம் எதற்குக் கவலைப்பட வேண்டும்?

வால்மீகியே வெளிப்படையாகக் கூறியிருப்பதை மீறி, 'ராமர் மறைந்து நின்று வாலியைக் கொல்லவில்லை' என்று வாதிப்பவர்களும் இருக்கிறார்கள். 'தன்னைக் குறிபார்த்து அவர் நின்று கொண்டிருந்தது வாலிக்குத் தெரியாது' என்கிறார்கள். அவனுக்குத் தெரியாது என்றாலும், ராமர் அவனைக் கொன்றதைப்பற்றி அவர்கள் தவறாக நினைக்க விரும்பவில்லை. 'அவர் நேருக்கு நேர் நின்று அம்பை எய்தாரேயன்றி மறைந்திருந்து எய்யவில்லை' என்று அவர்கள் வாதிக்கிறார்கள். ஆனால் வால்மீகி என்னவோ நிச்சயமாக அப்படிச் சொல்லவில்லை. ராமாயணத்தில் கூறியிருப்பது பின்வருமாறு:—

सर्वे ते त्वरितं गत्वा किष्किन्धां वालिनः पुरीम् ।
वृक्षैरात्मानमावृत्य व्यतिष्ठन् गहने वने ॥ IV. 12. 14.

'மரங்களுக்குப் பின் மறைந்துகொண்டு, இருண்ட பிரதேசத்தில் நின்றுகொண்டு' என்று காண்கிறது. 'வ்ருக்ஷை:, கஹநே வநே' என்ற சொற்களுக்கு வேறு விதமான பொருள் இருக்க முடியாது. மறைந்திருந்து தன்னை அடித்ததாக வாலி ராமரைக் குற்றம் சாட்டியபொழுது ராமர் ஒன்றும் பதில் கூறவில்லை. அவர் அதை மறுக்காததுடன், தாம் செய்தது சரி என்றும் கூறுகிறார். "ஆம், நான் அப்படித்தான் செய்தேன். ஆனால் நீ ஒரு வானரம்தானே! வேட்டையாடுவதற்கு ஏற்ற ஒரு பிராணி. என்னைப் போன்ற அரசர்கள் உன்னை வேட்டையாடுவதற்கு உரிமையுள்ளவர்கள். அவர்கள் மறைந்தோ, வேறு தந்திர சாதனங்களைக் கொண்டோ வேட்டையாடலாம். அதில் ஒன்றும் பிசகில்லை. உன்னை எனக்குத் தகுந்த எதிரியாக நினைத்து ஏன் நேரில் சண்டைபோட வேண்டும்? உனக்கு முன்னமே தெரிவித்தோ அல்லது உன் பலத்தை என்னுடன் சண்டையிட்டுப் பரிக்ஷித்தோ பார்க்க நான் ஏன் இடம் கொடுக்க வேண்டும்? ராமருடைய எதிர்வாதம் இது.

இதிலிருந்து, அவர் நேரில் நின்று யுத்தம் புரிந்து வாலியைக் கொல்லவில்லை என்பது தெளிவாகிறது. அவர் மறைமுகமாகக் கொன்றது, சாதாரணமாக யுத்தவீரர்களுள் மிகவும் தவறான செயலாகவே கருதப்படுவது. இதைப் பின்னும் கொஞ்சம் தெளிவாக விளக்க, இரண்டு பிரபல வியாக்கியானங்களை எடுத்துக் கூறுகிறேன். மிகச் சிறந்த ராமபக்தரான கோவிந்தராஜர்—அவரைக் காட்டிலும் பெரிய ராமபக்தர் உலகில் கிடையாது — எவ்வளவு தெளிவாகக் கூறமுடியுமோ அவ்வளவு தெளிவாகக் கூறுகிறார்:—

'प्रतिज्ञातं च रामेण तथा वालिवधं प्रतीति प्रतिज्ञानिर्वाहाय छन्नाऽपि वालिवधः कृतः ।' IV. 16. 37-38.

''வாலிவதம் ராமர் மறைந்து நின்று செய்ததுதான். ஆனால் சுக்கிரீவனுக்கு வாக்குறுதி கொடுத்துவிட்டதனால் அவ்வாறு செய்யும்படியாயிற்று'' என்கிறார். மற்றோர் இடத்தில், இன்னும் சிறிது மேலே போய்,

'यदि रामो वालिनः पुरतस्तिष्ठेत्'

'ராமர் வாலிக்கு எதிரில் நின்றிருந்தால்' என்று ஆரம்பித்து,

'तदा विदिततदीयप्रभावतया वाली प्रह्वो भवेत् । तदा तद्वधो न युक्तः । प्रतिज्ञा च व्याहन्येत । तद्द्वारा तन्मित्रं रावणोऽपि शरणं व्रजेत् । देवकार्यं च लुप्येत । अतः प्रच्छन्नो वालिनमवधीत् ।' IV. 18. 45.

'தன் எதிரியின் அளவற்ற பராக்கிரமத்தை அறிந்து வாலி ராமரை ஒருவேளை சரணமடைந்துவிடக்கூடும். தம்மைச் சரண மடைந்தவனோடு ராமர் யுத்தம் புரியமாட்டார். அப்பொழுது சுக்கிரீவனுக்கு அவர் செய்த பிரதிக்ஞை வீணாகிவிடும். வாலியின் உற்ற நண்பனான ராவணனும் வந்து ராமரைச் சரணடைந்துவிடுவான். பிறகு, தேவர்களைக் காக்க அவர் மேற்கொண்ட காரியம் நிறைவேறாது. ஆகவே அவர் மறைந்திருந்து கொல்லுவது மிகவும் அவசியமாகிறது' என்பது கோவிந்தராஜரின் வியாக்கியானம்.

அந்தக் காலத்தில் ஒப்புக்கொள்ளப்பட்ட உயர்ந்த பராக்கிரமத்திற்கு ராமர் செய்தது உகந்ததா, நியாயமாகுமா? அந்த நாளிலும் அது தவறு என்றுதான் கருதப்பட்டதாகத் தெரிகிறது. எந்தச் சுத்தவீரனும் மறைந்திருந்து எதிரியைத் தாக்கமாட்டான். ராமாயணத்திலிருந்தே இதற்கு ஒரு நல்ல விளக்கம் உங்களுக்கு எடுத்துக்காட்டுகிறேன். யுத்த காண்டத்தில், யுத்தம் நடக்கும் கட்டத்துக்குச் செல்வோம். இரண்டு தரப்பிலுமுள்ள சிறந்த வீரர்கள் போரில் ஈடுபட்டிருக்கிறார்கள். ராமர், லக்ஷ்மணன், அனுமார், சுக்கிரீவன், நீலன், இன்னும் மற்றுமுள்ளோர் ஒரு புறம். ராவணனும் அவனைச் சேர்ந்த அரக்கர்களும் மற்றொரு புறம். நேருக்கு நேரே நிற்கிறார்கள். அனுமாரை அடையாளம் கண்டு கொண்டு ராவணன் அவர் மார்பில் ஓங்கி ஓர் அறை அறைகிறான். அதனால் நிலைகலங்கிய அனுமார் உடனே சமாளித்துக்கொண்டு ராவணன் மார்பில் பலமாக ஓர் அறை விட்டதும் ராவணனும் அதைப் பொறுக்காமல் தடுமாறுகிறான். ''மெச்சினேன் உன் வீரத்தை. நீ கொடுத்த அறை என்னையே தடுமாறச் செய்து விட்டது'' என்று அனுமாரைப் பாராட்டுகிறான். எதிரியின் பலத்தையும் சாமர்த்தியத்தையும் புகழுவது ஒரு பெருவீரனுக்கு லக்ஷணம் அல்லவா?

ஆனால் அனுமார் கூறிய பதில் என்ன என்கிறீர்கள்? ''என்னைப் புகழ்வது கிடக்கட்டும். அந்த அறைக்குப் பிறகும் என்னைப் புகழ்

வதற்கு நீ உயிரோடு இருக்கிறாயே! எனக்கு அது எவ்வளவு அவமானத்தைத் தருகிறது!'' என்கிறார். இதைக் கேட்டுக் கோப மடைந்த ராவணன் அறைவதற்குப் பதிலாக ஓங்கி அனுமாரின் மார்பில் ஒரு குத்து விடுகிறான். அதனால் அனுமார் பொறிகலங்கிக் கண் இருண்டு நினைவற்றுவிடுகிறார். பிறகு ராவணன் அவரை விட்டு, சேனாதிபதியான நீலனை எதிர்க்கிறான். இதன் நடுவில் மயக்கம் தெளிந்து எழுந்த அனுமார் வட்டியும் முதலுமாகப் பதில் கொடுக்க ராவணன் இருக்குமிடத்திற்குச் செல்லுகிறார். ஆனால் அவன் நீலனுடன் போர் புரிந்துகொண்டிருப்பதைக் கண்டு, அப்பொழுது அவனை ஒன்றும் செய்யலாகாது என்று கருதுகிறார்.

विप्रेक्षमाणो युद्धेप्सुः सरोषमिदमब्रवीत् ॥
नीलेन सह संयुक्तं रावणं राक्षसेश्वरम् ।
अन्येन युध्यमानस्य न युक्तमभिधावनम् ॥ VI. 59. 73, 74.

'மற்றொருவனோடு போர் புரிந்துகொண்டிருக்கும்பொழுது அவனைத் தாக்குவது முறையல்ல' என்று எண்ணி, அனுமார் பேசாமலிருக்கிறார். ராவணன் தனியாக இருக்கும்பொழுது அவனைச் சண்டைக்கு இழுக்க வேண்டும் என்று அனுமார் தம் பழிக்குப் பழியை நிறுத்தி வைக்கிறார். 'மற்றொருவனோடு சண்டையிட்டுக்கொண்டிருக்கும் சமயத்தைப் பயன்படுத்திக்கொள்வது முறைதவறானது' என்ற அனுமாரின் கருத்தைக் கொண்டு ராமரின் செயலை நோக்கும்பொழுது, நமக்கு எப்படிப் படுகிறது? ராமருடன் நேரில் நின்று யுத்தம்புரிய வாலி சக்தியற்றவனல்ல என்பதில்லை. ராமர் அந்த இடத்தில் இருந்தது அவனுக்குத் தெரியாது. ஆகவே அது ஒரு பெரிய அதர்ம யுத்தம் என்றுதான் சொல்ல வேண்டும்.

ராமருடைய செயல்பற்றிச் சிறிது பொறுத்துக் கவனிப்போம். ராமர் ஏன் இப்படிச் செய்தார், அவர் என்ன நினைத்து இவ்விதம் செய்தார் என்று தெரிந்துகொள்வதற்குச் சில ஸர்க்கங்களையே முழுவதும் படித்துப் பார்த்தால்தான் விளங்கும். ராமாயணத்திலிருந்தே நமக்கு உதவி கிடைக்கலாம். அந்த ஸர்க்கங்களைப் படித்து அங்கங்கே வரும் சில சொற்களைக் கவனித்தால் இலேசாகச் சிறிது வெளிச்சம் கிடைப்பது போலத் தோன்றுகிறது. முதலில், இப்பொழுது முக்கியமில்லாவிட்டாலும் பின்னால் முக்கியமாகும் ஒரு விஷயத்தைக் கவனிக்க வேண்டும். வாலியின்மீது சுக்கிரீவனுக்கு இரண்டு குற்றச்சாட்டுகள். ஒன்று உண்மையானது, மற்றொன்று அவனாக நினைத்துக்கொண்டது. அவற்றைப்பற்றிச் சுக்கிரீவன் அனுமாருக்குச் சொல்லி, அனுமார் ராம லக்ஷ்மணர்களிடம் கூறுகிறார். சுக்கிரீவனுடைய மனைவி ருமாவை வாலி கவிகரித்துக்கொண்டது ஒரு குற்றம். தன்னைக் கிஷ்கிந்தையை

விட்டு விரட்டியதாக நினைத்துக்கொண்டது இரண்டாவது குற்றம். ராஜ்யம் உண்மையில் வாலியினுடையது. அறியாமல் அரசனுக முடிசூட்டப்பெற்ற சுக்கிரீவனிடமிருந்து வாலி அதை மீண்டும் எடுத்துக்கொண்டான். தன் சொந்த ராஜ்யத்தை அவன் எடுத்துக் கொண்டதை, சுக்கிரீவன் அனுமார் ஆகிய இருவரும், சுக்கிரீவனுக்குச் சொந்தமான ராஜ்யத்தை வாலி அநியாயமாக அபகரித்துக் கொண்டதாக ஆக்கிவிடுகிருர்கள்.

स हि राज्यात् परिभ्रष्टः कृतवैरश्च वालिना ।
हृतदारो वने त्यक्तो भ्रात्रा विनिकृतो भृशम् ॥ IV. 4. 27.

''மனைவியை அபகரித்துக்கொண்டு, சொந்த ராஜ்யத்திலிருந்தும் அவனை விரட்டிவிட்டான். சகோதரனுக்குத் துரோகமிழைத்துவிட்டான்'' என்கிருர்கள். சுக்கிரீவன் மிகவும் ஜாக்கிரதையாக ராமரிடம் சொல்லுகிருன்:—

वालिना निकृतो भ्रात्रा कृतवैरश्च राघव ।
वालिनो मे महाभाग भयार्तस्याभयं कुरु ॥
कर्तुमर्हसि काकुत्स्थ भयं मे न भवेद्यथा । IV. 5. 24, 25.

''அண்ணு வாலியிடம் நான் பயந்துகொண்டிருக்கிறேன். அவன் என்னைவிட வலிமை வாய்ந்தவன். என்னை நாட்டைவிட்டுத் துரத்தி அவமானப்படுத்திவிட்டான். அவனிடமிருந்து தாங்கள் என்னைக் காப்பாற்ற வேண்டும்'' என்கிருன். இவ்வளவுதான் அவன் கூறுகிருன். வாலியைக் கொல்வதைப்பற்றி அவன் ஏதுமே கூறவில்லை. ஆனுல் ராமர் அவனுக்குத் தைரியம் அளிப்பதற்காகக் கூறுகிருர்:—

वालिनं तं वधिष्यामि तव भार्यापहारिणम् । IV. 5. 27.

''உன் மனைவியை அபகரித்த வாலியை நான் கொன்று விடுகிறேன்.''

अमोघाः सूर्यसङ्काशा ममैते निशिताः शराः ॥ IV. 5. 27.

"சூரியன் போன்ற அதிகூர்மையான வீண்போகாத அம்புகள் என்னிடம் இருக்கின்றன'' என்கிருர். 'பாணங்கள்' என்று பன்மையைப் பயன்படுத்துவதைக் கவனிக்கவேண்டும். வாலியைக் கொல்வதற்கு அநேக அம்புகளை விடத் தயாராக இருப்பதாகத் தெரிகிறது.

तमद्य वालिनं पश्य क्रूरैराशीविषोपमैः ।
शरैर्विनिहतं भूमौ विकीर्णमिव पर्वतम् ॥ IV. 5. 29, 30.

''குறிபார்த்து எய்த என் கூர்மையான அம்புகளைக் கொண்டு அவனை ஒரு நொடியில் வீழ்த்திவிடுகிறேன். ஆசிவிஷோபமை:— கொடிய விஷம் போன்ற அம்புகள்'' என்று கூறுகிருர்.

வாலியோடு நேருக்கு நேர் நின்று யுத்தம் புரிவதாகவே ராமர் அப்பொழுது நினைத்திருப்பது போலத் தோற்றுகிறது. இல்லை யென்றால் தம்மிடம் அநேக அம்புகள் இருப்பதை அவர் கூறுவானேன்? மறுபடியும் சுக்கிரீவனிடம்,

उपकारफलं मित्रमपकारोऽरिलक्षणम् ।
अद्यैव तं हनिष्यामि तव भार्यापहारिणम् ॥ IV. 8. 21.

"இன்றே நான் வாலியை வதம் செய்துவிடுகிறேன்" என்று பிரதிக்ஞை செய்கிறார். பிறகு சுக்கிரீவன் தன் குறைகளைப்பற்றிச் சொல்லுகிறான்:—

पुराहं वालिना राम राज्यात् स्वादवरोपितः ।
परुषाणि च संश्राव्य निर्धूतोऽस्मि बलीयसा ॥
हृता भार्या च मे तेन प्राणेभ्योऽपि गरीयसी । IV. 8. 32. 33.

"என் ராஜ்யத்தை என்னிடமிருந்து பறித்துக்கொண்டான். உயிருக்கு உயிரான என் மனைவி ருமாவைத் தன் மனைவியாக்கிக் கொண்டான்" என்கிறான்.

மற்றோர் இடத்தில், ராமர் தம் அம்புகளைப்பற்றி மறுபடியும் கூறுகிறார்:—

अमोघाः सूर्यसङ्काशा ममैते निशिताः शराः ।
तस्मिन् वालिनि दुर्वृत्ते निपतिष्यन्ति वेगिताः ॥
यावत् तं नाभिपश्यामि तव भार्यापहारिणम् ।
तावत् स जीवेत् पापात्मा वाली चारित्रदूषकः ॥ IV. 10. 32, 33.

"உனக்குப் பெருந்தீங்கிழைத்த உன் விரோதி வாலி என் கண்ணில் பட்டதுமே உயிரிழந்துவிடுவான். அவன் என் கண்ணில் படவேண்டியதுதான்; அப்புறம் அவன் உயிர் உடலில் நில்லாது" என்கிறார். ராமர் என்ன நினைத்தார் என்பது நமக்குத் தெரிகிறது. அன்றே வாலியைக் கொன்றுவிட வேண்டும் என்று அவர் கருதுகிறார். அதில் ஒரு சந்தேகமும் ஏற்படக் கூடாது. சரியான யுத்தம் புரிய நேர்ந்து அதிகமான அம்புகளையும் உபயோகிக்கும்படியாக இருக்கும் என்றுதான் ராமர் அப்பொழுது எண்ணியிருப்பார்.

மனிதரான ராமரைக்காட்டிலும் எவ்வளவோ மடங்கு பலமுள்ளவன் வாலி என்று கருதிய சுக்கிரீவன், ராமரால் தனக்கு உதவ முடியுமோ என்று சந்தேகித்து, அவருடைய பலத்தைப் பரீட்சிக்க விரும்புகிறான். அதற்காக இரண்டு பரீட்சைகள் வைக்கிறான். அவற்றில் ஒன்று, வரிசையாக நின்ற ஏழு ஸாலமரங்களைக் காட்டி, சுக்கிரீவன், "இந்த மரங்களில் ஒன்றை வாலி பிடித்து

உலுக்கினுல், உடனே மரம் ஓர் இலே இல்லாமல் உதிர்ந்து மொட்டையாகிவிடும். எல்லா மரங்களேயும் நொடியில் அவ் விதமே செய்துவிடுவான்'' என்கிருன். இவ்வாறு தமது பலத்தை அவன் சந்தேகித்தது ராமருக்குச் சிறிது ரோஷத்தை உண்டுபண்ணு கிறது. அலட்சியமாக ஓர் அம்பை எடுத்து ஸாலமரங்களே நோக்கி எய்கிருர். அது அந்த ஏழு ஸாலமரங்களேயும் துளேத்துப் பிறகு பூமியைத் துளேத்துச் சென்று, மறுபடியும் இருந்த இடத்துக்கே வந்து சேருகிறது. சுக்கிரீவன் பிரமித்துப்போகிருன். இத்தகைய பராக்கிரமமுள்ளவரைச் சந்தேகித்தோமே என்று வருத்தமுற்று, அவர் கால்களில் விழுந்து, ''ஆகா! என்ன பராக்கிரமம்! இவ்வாறு கனவிலும் நினைக்கவில்லே. நீங்கள் விரும்பினுல் எல்லாத் தேவர் களேயுங்கூடக் கொல்ல இயலும். உங்களே என் துணேயாகப் பெற்றது பற்றிப் பெருமையும் சந்தோஷமும் அடைகிறேன்'' என்கிருன்.

येन सप्त महासाला गिरिर्भूमिश्च दारिताः ।
बाणेनैकेन काकुत्स्थ स्थाता ते को रणाग्रतः ॥ IV. 12. 9.

''உங்களே எதிர்த்து நின்று போர் புரியக்கூடியவன் எவன் இருக்கப்போகிருன்? ஒரே அம்பினுல் ஏழு ஸாலமரங்களேயும் துளேத்த உங்களேப் போல வேறு யார் செய்யமுடியும்?'' என்கிருன். அவர்களின் சம்பாஷணேயில், 'இவ்விதம் ஒரே அம்பைக் கொண்டு கொல்வது' என்ற எண்ணம் தோன்றுகிறது. இந்தச் சிறு விஷயங் களேயெல்லாம் நாம் நினேவில் வைத்துக்கொள்ள வேண்டும். ராம ருடைய மனம் தெளிவாக விளங்காமல், தகாத நோக்கங்களே யெல்லாம் அவர்மீது ஏற்றிச் சொல்வது சரியல்ல. ஆகவே, 'ஒரே அம்பைக் கொண்டு என்ன செய்யலாம்? ராமர் சரியானபடி குறி பார்த்து எய்தால் அந்த ஓர் அம்பு என்ன என்ன வேலே செய்ய முடியும்?' என்ற யோசனே அவர்களுக்கு முதல்முதலில் உதித் திருக்கலாம். இதை நாம் நினேவுபடுத்திக்கொள்ள வேண்டும்.

तमद्यैव प्रियार्थं मे वैरिणं भ्रातृरूपिणम् ।
वालिनं जहि काकुत्स्थ मया बद्धोऽयमञ्जलिः ॥ IV. 12. 11.

''நீங்கள் உலகிலுள்ளோர் அனேவரிலும் பெரிய வீரர். உங்களே வணங்குகிறேன். வாலியை இன்று ஒழித்து எனக்கு உதவிபுரியுங்கள்'' என்கிருன் சுக்கிரீவன். கிஷ்கிந்தைக்குச் சென்று வாலியை அவன் துவந்துவ யுத்தத்திற்கு அழைக்கிருன். ராமர், லக்ஷ்மணன், அனுமார் ஆகிய மூவரும் அடர்ந்த மரங்களுக்குப் பின் மறைந்து நிற்கிருர்கள். மிகுந்த பலசாலியான வாலி, சுக்கிரீவனே ஒரு நொடியில் தோல்வியுறச் செய்கிருன். ராமர் இருக்கும் இடத்தைச் சுக்கிரீவன் நோக்குகிருன். இதன் நடுவில், நண்பன்

உயிரிழக்கும் ஆபத்தில் சிக்கியிருப்பதை அறிந்த ராமர் அம்பை எடுத்து வாலியைக் குறிபார்த்து எய்ய நினைக்கிறார். ஆனால், ஒருவரையொருவர் கட்டிப் புரண்டபொழுது உருவம், நிறம், ஆகிருதி, திறமை யாவற்றிலும் வாலியும் சுக்கிரீவனும் ஒரேமாதிரி இருந்ததனால் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. அதனால் அம்பை எய்யாமல் நிறுத்தியதாக ராமர் கூறுகிறார். தவருகச் சுக்கிரீவன்மேல் அம்பை எய்து அவனைக் கொன்றுவிட்டால் அவருடைய காரியமும் கெட்டுப்போகும் அல்லவா?

यन्नावगच्छत् सुग्रीवं वालिनं वापि राघवः ।
ततो न कृतवान् बुद्धिं मोक्तुमन्तकरं शरम् ॥ IV. 12. 20.

சுக்கிரீவன் யார், வாலி யார் என்று அடையாளம் தெரியாதிருக்கும்பொழுது, உயிரைப் பறிக்கும் அந்த ஒரே அம்பை அவர் எப்படி எய்வது? உயிரைக் காப்பாற்றிக்கொள்ளச் சுக்கிரீவன் அவ்விடத்தை விட்டு ஓடித் தன் இருப்பிடமான ரிச்யமூக பர்வதத்தை அடைகிறான். அங்கே ராம லக்ஷ்மணர்கள் அனுமாருடன் திரும்பி வந்ததும் சுக்கிரீவன் ராமரைப் பார்த்து, "ஐயா! நண்பரே! வாலியைக் கொல்லப்போவதில்லை என்று முன்பே என்னிடம் சொல்லியிருந்தால் நான் அவனைச் சண்டைக்கு அழைத்தே இருக்கமாட்டேன். என் நிலையைப் பாருங்கள். என்னைப்பற்றி எனக்கே வெட்கமாக இருக்கிறது. வாலியைக் கொல்ல இஷ்டமில்லை என்பதை என்னிடம் ஏன் கூறவில்லை?" என்று கேட்கிறான். "எனக்கு ஒரே குழப்பமாக இருந்தது" என்கிறார் ராமர்.

ततोऽहं रूपसादृश्यान्मोहितो वानरोत्तम ।
नोत्सृजामि महावेगं शरं शत्रुनिबर्हणम् ॥ IV. 12. 32.

"என் கொடிய அம்பை எய்து உங்களில் ஒருவரைக் கொன்றுவிடலாம். ஒருவேளை அந்த அம்பு உன்மீது பட்டு நீ உயிரிழந்துவிட்டால் அப்புறம் என் நிலைமை என்ன? லக்ஷ்மணன் என்ன செய்வான்? இலங்கையில் சீதைதான் என்ன செய்வாள்? அதை யோசித்துப் பார். உன்னைக் கொன்ற பின் என் வாழ்க்கையின் பயன் யாவுமன்றோ நாசமாகிவிடும்!" என்கிறார்.

जीवितान्तकरं घोरं सादृश्यात्तु विशङ्कितः ।
मूलघातो न नौ स्याद्धि द्वयोरपि कृतो मया ॥ IV. 12. 33.

"அந்த எண்ணம் தோன்றவுமே வாலியைக் கொல்லாமல் விட்டேன். உன்னைத் தனியாக அடையாளம் கண்டுகொள்வதற்கு நீ ஏதாவது அணிந்துகொள். போய் மறுபடியும் உன் தமையனை

யுத்தத்திற்குக் கூப்பிடு. நான் உனக்குக் கொடுத்த வார்த்தையை நிறைவேற்றுகிறேன்'' என்கிறார்.

तस्माद्युध्यस्व भूयस्त्वं मा मा शङ्कीश्च वानर ॥ IV. 12. 36.

''இனிமேல் என்னைப்பற்றிச் சந்தேகம் வேண்டாம்.''

अस्मिन् मुहूर्ते सुग्रीव पश्य वालिनमाहवे ।
निरस्तमिषुणैकेन वेष्टमानं महीतले ॥ IV. 12. 37.

''அவனை வெளியில் அழைத்து வந்து போருக்குக் கூப்பிடு. ஒரே அம்பினால் ஒரு நொடியில் அவனைக் கொன்றுவிடுகிறேன்'' என்கிறார். அதுதான் அவர் செய்த பிரதிக்ஞை.

सर्वे ते त्वरितं गत्वा किष्किन्धां वालिपालिताम् ।
वृक्षैरात्मानमावृत्य व्यतिष्ठन् गहने वने ॥ IV. 14. 1.

பிறகு எல்லாரும் போய் அடர்ந்த மரங்களுக்குப் பின் மறைந்து நிற்கிறார்கள். மறுபடியும் ராமர் சுக்கிரீவனிடம்,

अद्य वालिसमुत्थं ते भयं वैरं च वानर ।
एकेनैव प्रमोक्ष्यामि बाणमोक्षेण संयुगे ॥ IV. 14. 10, 11.

''ஒரே ஓர் அம்பினால் இன்றே நான் வாலியினிடம் உனக்கு உள்ள பயத்தை நீக்குகிறேன்'' என்கிறார். இதிலிருந்து, நேருக்கு நேர் நின்று அநேக அம்புகளைக் கொண்டு போர் புரியும் எண்ணம் ராமரின் மனத்தை விட்டு அகன்றுவிட்டது என்பது புலனாகிறது. வாலியைக் கண்டதுமே உடனே கொன்றுவிடுவதாக அவர் மீண்டும் மீண்டும் சுக்கிரீவனுக்கு வாக்குறுதியளிக்கிறார். ஒரே அம்பினால் வாலியைக் கொல்லும் எண்ணம் அவர் மனத்தில் வேரூன்றிவிடுகிறது. வால்மீகியும், ராமருடைய பராக்கிரமத்துக்குச் சான்றாக, ஒரே அம்பினால் வாலியைக் கொன்றதை அடிக்கடி கூறுகிறார். ஆகவே நாம் என்ன விதமாக நினைத்தாலும் அஜாக்கிரதையாகவோ தற்செயலாகவோ நிகழ்ந்ததாக மட்டும் இதை நினைப்பதற்கில்லை. அது போகிறது. இது வேண்டுமென்று செய்ததுதான். கௌரவத்துக்குப் பங்கம் விளைந்தாலும் வேறு விதமாக நினைக்க முடியாது.

இரண்டாவது முறை சுக்கிரீவன் போருக்கு அழைத்ததும், கெட்டிக்காரியான வாலியின் மனைவி தாரை அவனைப் போக வேண்டாமென்று தடுக்கிறாள். மிகவும் சமத்காரமாகப் பேசிப் பார்க்கிறாள். அவள் பிள்ளை அங்கதன் சில ஒற்றர்களிடமிருந்து, 'ஏதோ பெரிய பக்கபலத்துடன்தான் சுக்கிரீவன் இரண்டாம் முறை வந்திருக்கிறான்' என்பதைத் தெரிந்துகொண்டு, தாயினிடம் வந்து ராமரைப்பற்றிச் சொல்லியிருக்கிறான். எளிதில் வாலி

கேட்காமலிருப்பதைப் பார்த்து அவள் தனக்குத் தெரிந்தது அனைத்தையும் சொல்லுகிறாள். "யாருடன் சண்டை போடப் போவதாக நினைத்துக்கொண் டிருக்கிறீர்கள்? சுக்கிரீவனோடு அல்ல. அவனை வியாஜமாக வைத்து உண்மையில் ராமரோடு அல்லவா யுத்தம் புரிய வேண்டும்?" என்கிறாள்.

रामः परबलामर्दी युगान्ताग्निरिवोत्थितः ।
निवासवृक्षः साधूनामापन्नानां परा गतिः ॥ IV. 15. 19.

"துன்பப்படுகிறவர்களுக்கு அவர் பெரிதும் உதவி செய்பவர். உதவி நாடுவோருக்கு உற்ற துணையாக இருப்பவர். வெகுண்டெழுந்தால் பிரளய காலத்து அக்கினி போன்றவர். அவரை எதிர்க்க முடியாது."

आर्तानां संश्रयश्चैव यशसश्चैकभाजनम् ।
ज्ञानविज्ञानसम्पन्नो निदेशे निरतः पितुः ॥
धातूनामिव शैलेन्द्रो गुणानामाकरो महान् ।
तत् क्षमो न विरोधस्ते सह तेन महात्मना ॥ IV. 15. 20, 21.

"நீங்கள் சண்டைக்குப் போக வேண்டாம். ராமரை எதிரியாக்கிக் கொள்ளாதீர்கள். அவர் மிக மிகப் பெரியவர்" என்கிறாள். இதற்கு முன்பு ராமரைப்பற்றிக் கேள்விப்படாதிருந்த தாரைகூட, அவரைப்பற்றி எப்படியெல்லாம் நினைத்துக்கொண்டிருக்கிறாள் என்பதைக் காட்டவே இந்தச் சுலோகங்களை எடுத்துக் கூறினேன். "சுக்கிரீவனோடு சண்டை வேண்டாம். அவனோடு சமாதானம் செய்துகொள்ளுங்கள்" என்று அவள் வாலிக்கு உபதேசிக்கிறாள். "சுக்கிரீவனையே யுவராஜாவாக அபிஷேகம் செய்யுங்கள்" என்று மேலும் கூறுகிறாள். ஆனால் ஒரு விஷயம் மட்டும் புத்திமதி கூறாமல் விட்டுவிடுகிறாள். நீங்கள் இதைக் கவனிக்க வேண்டும்: விபீஷணன், கும்பகர்ணன் முதலியவர்களை ராவணன் யோசனை கேட்டபொழுது அவர்கள் சீதையை ராமரிடம் திருப்பி அனுப்பிவிடும்படிக் கூறியதை ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும். வாலிக்குப் புத்திமதி கூறிய தாரை, "சுக்கிரீவன் பெரிய குற்றம் கூறிக்கொண்டிருக்கிறான். ருமாவை அவனிடம் திருப்பியளித்துவிடுங்கள். ராஜ்யம் போய்விட்டது என்ற குறையோடு ருமாவை இழந்துவிட்டதைப் பற்றியும் பெரிதும் கஷ்டப்படுகிறான். சுக்கிரீவனோடு சமாதானம் செய்துகொள்ள வேண்டும் என்றால் அவனுக்கு யுவராஜப் பட்டம் கட்டி அவன் மனைவியையும் அவனிடம் அனுப்பிவிடுவது நல்லது" என்று கூறியிருக்கலாம். ருமாவைப் பற்றித்தான் சகோதரர்களுக்குள் பெரிய தகராறு. கூர்மையான புத்தியும் முன்யோசனையுமுள்ள

தாரை ஏன் வாலிக்கு அவ்வாறு புத்திமதி கூறவில்லை? இது எனக்கு விளங்கவில்லை.

இரண்டாவது யுத்தத்திலும் சுக்கிரீவன் சீக்கிரம் நிதானமிழந்து தோல்வியடையும் நிலையில் இருக்கிறான். அதைக் கண்டு உடனே ராமர் ஒரே அம்பினால் வாலியைக் கொன்று வீழ்த்துகிறார்.

ततो धनुषि सन्धाय शरमाशीविषोपमम् ।
पूरयामास तच्चापं कालचक्रमिवान्तकः ॥
ततस्तेन महातेजा वीर्योत्सिक्तः कपीश्वरः ।
वेगेनाभिहतो वाली निपपात महीतले ॥ IV. 16. 33, 36.

இவ்வாறு வாலிவதம் ஆகிறது. ஒரே அம்பினால் வாலியைக் கொல்ல வேண்டும் என்பதுதான் மிகவும் முக்கியமாக இருந்திருக்கிறது என்பதை எடுத்துக் காட்ட முயன்றேன். அன்றே அப்பொழுதே அவனைக் கொல்லுவதும் வெகு முக்கியமாகக் கருதப்பட்டிருக்கிறது. முதல் யுத்தத்தில் ராமர் வாலியைக் கொல்லாமல் விட்டதைக் கண்டு சுக்கிரீவனுக்குப் பெருத்த சந்தேகங்கள் எழுகின்றன. தாம் கூறியபடியே செய்வதாக ராமர் அவனுக்குப் பலத்த நம்பிக்கையை உண்டாக்கிய பின்பும், அவன் மீண்டும் சண்டைக்குச் சென்றபொழுது அவன் மனத்தில் சந்தேகம் இல்லாமலில்லை. வாலியைக் கொல்வதைத் தள்ளிப்போட்டுச் சண்டையை வளரச் செய்து, சுக்கிரீவன் ஆச்சரியமும் ஆத்திரமுமடையும்படி ராமர் எப்படிச் செய்வார்? இந்த விதமாகத்தான் ஆராய்ந்து பார்க்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. வெகு காலத்துக்கு முன் நடந்ததைப் பற்றி நாம் ஒன்றும் திடநிச்சயமாகச் சொல்ல முடியாது. ஆயினும் மேற்கூறியபடி ஆலோசித்துப் பார்த்தால், சிறிது வெளிச்சம் உண்டாகலாம் என்று தோன்றுகிறது.

இந்த வாலி யார்? அவனைப்பற்றிச் சிறிது யோசித்துப் பார்ப்போம். வீரத்தில் வாலியைவிட ராமர் குறைந்தவர் என்றோ, வாலியோடு யுத்தம் புரிவதில் ராமருக்குச் சிறிது அச்சம் இருந்தது என்றோ நான் சொல்லவில்லை. அம்மாதிரி எண்ணம் எனக்குச் சிறிதும் இல்லை. ஆயினும் ராவணனைக்கூட ராமர் எளிதில் கொல்லவில்லை அல்லவா? பலத்தில் இருவரும் சமமாக இருந்ததனால் யார் ஜயிப்பார், யார் தோற்பார் என்பது நிச்சயமில்லாமல் ஒரு சமயம் இருந்தது. யுத்தத்தைக் காண்பதற்குக் கூடியிருந்த தேவர்கள் மகரிஷிகள்கூட, 'முடிவு என்ன ஆகுமோ?' என்ற கவலையோடு இருந்தனர். இந்திரனிடம், ''இது சரியான யுத்தமல்ல. ராவணன் ரதத்தில் இருந்து சண்டை போடுகிறான். ராமரோ பூமியில் நின்று போடுகிறார். உங்கள் ரதத்தை அவருக்கு

அனுப்புங்கள்'' என்று கூறுகிறார்கள். இந்திரன் அப்படியே அனுப்புகிறான். மாதலியே சாரதியாக வருகிறான். புதிதாக வில், அம்புகள், கேடயம் முதலியவற்றையும் கொண்டு வந்து கொடுக்கிறான். அப்பொழுதும் சண்டையில் வெற்றி தோல்வி நிச்சயமில்லாமலே இருக்கிறது. மகரிஷிகள் அகஸ்தியரை ராமருக்கு உதவி புரியும்படி கேட்டுக் கொள்ளுகிறார்கள். அகஸ்தியர் ராமர் காதில் ஆதித்யஹ்ருதயம் என்ற மந்திரத்தை உபதேசிக்கிறார். கடைசியாக, இன்னும் சண்டையில் ராவணன் சளைக்காமல் இருக்கவே, மாதலி ராமரிடம், ''நான் தங்களுக்குச் சொல்ல வேண்டிய அவசியமில்லை. பிரம்மாஸ்திரத்தை உபயோகிக்க வேண்டிய சமயம் இது. யோசிக்க வேண்டாம். பிரம்மாஸ்திரத்தைப் போடுங்கள்'' என்கிறான். ராவணனுடன் யுத்தம் புரிந்தபொழுது ராமர் தளர்ந்து போய் இவ்விதம் உதவி பெற்ற பிறகே மீண்டும் யுத்தம் புரிகிறார் என்று தெரிகிறது.

ராவணனைக்காட்டிலும் வாலி எவ்வளவோ பலம் பொருந்தியவன். ராவணன் அவனை யுத்தத்திற்கு அழைக்கக் கிளம்பிய பொழுது தெற்குச் சமுத்திரத்தில் வாலி சந்தியாவந்தனம் செய்து கொண்டிருந்ததாகவும், அப்பொழுது பின்புறத்தில் யாரோ தீய எண்ணத்துடன் நிற்பதை அறிந்து அருகில் வந்ததும், அவனை அப்படியே பிடித்துக் கஷ்கத்தில் இடுக்கிக்கொண்டு உலகமெல்லாம் சுற்றிவிட்டுக் கடைசியாகத் தன் இருப்பிடத்திற்கு வந்து அவனைக் குற்றுயிராக்கிக் கீழே விட்டதாகவும் உத்தரகாண்டத்தில் கூறப்படுகிறது. வாலியின் பலத்தைக் கண்டு ராவணன் பெரும் வியப்படைந்து கூறுகிறான் :—

अहो बलमहो वीर्यमहो गाम्भीर्यमेव च ।
येनाहं पशुवद्गृह्य भ्रामितश्चतुरोऽर्णवान् ॥ VI. 34. 37.
त्रयाणामेव भूतानां गतिरेषा प्लवङ्गम ।
मनोऽनिलसुपर्णानां तव चात्र न संशयः ॥ VI. 34. 39.

''இதுவரையிலும் நீ செய்த இந்தப் பெருஞ் செயலைச் செய்யக் கூடியவர்கள் மூன்றே பேர். மனம், வாயு, கருடன் ஆகிய அந்த மூவரையும் நான் அறிவேன். நான்காமவனாக உன்னை அவர்களோடு சேர்க்க வேண்டும்'' என்கிறான்.

பிறகு அனுமாரையும் இவர்களோடு ஐந்தாவதாகச் சேர்க்க வேண்டும்.

त्वया सह चिरं सख्यं सुस्निग्धं पावकाग्रतः ।
दाराः पुत्राः पुरं राष्ट्रं भोगाच्छादनभोजनम् ॥ VII. 34. 40-41.

''வா, அக்கினிஸாக்ஷியாக நாம் இருவரும் என்றென்றும் நண்பர்கள் என்று சத்தியம் செய்துகொள்வோம். எல்லாவற்றை

யும் நமக்குள் சமமாகப் பகிர்ந்துகொள்வோம். எந்த விஷயத்திலும் நமக்குள் வேற்றுமை இல்லாதபடி நண்பர்களாக இருப்போம்'' என்று ராவணன் உரைக்கிறுன். இதிலுள்ள அதிசயம் யாதெனில், 'தாரா: புத்ரா:—மனைவிகள் பிள்ளைகள்' என்று சேர்த்துச் சொல்லுகிறுன். அந்தக் காலத்தில் மனைவியும் ஒரு முக்கியச் சொத்தாகக் கருதப்பட்டு வந்ததாகத் தெரிகிறது. அப்பொழுது சுக்கிரீவனுக்குச் சரியாக ராவணனும் வாலியின் அரண்மனையிலேயே இருந்திருக்கிறுன்.

स तत्र मासमुषितः सुग्रीव इव रावणः ॥ VII. 34. 44.

அதாவது, தம்பி சுக்கிரீவனைப் போலவே ராவணனிடமும் வாலி பரிவும் அன்பும் காட்டினுன் என்று தெரிகிறது.

அப்படிப்பட்ட வாலியுடன் நேருக்கு நேர் நின்று ராமர் போர் புரிவதென்றுல் என்ன ஆகும்? ராமர் தோற்றுவிடுவார் என்று நான் கூறவில்லை. என் எண்ணம் அது அல்ல. ராவணனுக்கும் ராமருக்கும் ஏழு நாள் ஓயாத யுத்தம் நடந்தது என்று வால்மீகி சொல்லுகிறுர். ''அந்த ஏழு நாளும் யுத்தம் மும்முரத்தில் சிறிதும் குறையவில்லை. ஒருவருக்கொருவர் பலத்திலோ சாமர்த்தியத்திலோ சற்றும் தளர்ந்தவர்களாகவும் இல்லை'' என்கிறுர்.

देवदानवयक्षाणां पिशाचोरगरक्षसाम् ।
पश्यतां तन्महद्युद्धं सर्वरात्रमवर्तत ॥ VI. 110. 37.

''தேவர், தானவர், யக்ஷர் முதலியோரும் யுத்தம் நடப்பதைப் பார்த்தவண்ணம் இருந்தார்கள்'' என்கிறுர்.

नैव रात्रं न दिवसं न मुहूर्तं न च क्षणम् ।
रामरावणयोर्युद्धं विराममुपगच्छति ॥ VI. 110. 38.

ராவணனேடு ஏழு நாள் யுத்தம் புரிய வேண்டியிருந்தது என்றுல், வாலியோடும் ஏழெட்டு நாள் சண்டை போடும்படியாகவே இருந்திருக்கும். சுக்கிரீவன் பொறுமையிழந்திருப்பான்; ஒரேயடியாக நடுங்கியுமிருப்பான். வாலியை ஒரே நாளில் கொன்றுவிடுவதாக ராமர் செய்த பிரதிக்ஞை நிறைவேறியிருக்காது. அந்தக் காலத்தில் நடந்த சண்டைகளில் நேருக்கு நேரே சண்டை என்றுல் உடனே எதிரியைக் கொன்றுவிட முடியாது. எய்த முதல் அம்புக்கு வெற்றி கிட்டாது. எதிரி அதைத் தன் அம்பினுல் தடுத்துவிடுவான். அப்புறம், இரண்டாவது மூன்றுவது என்று அம்புகள் எய்ய வேண்டியிருக்கும். இருவருள் ஒருவர் முழுக்க முழுக்க அறவே சளைத்து ஒய்ந்து போனுல்தான் வெற்றி யாருக்கு என்பது நிச்சயமாகும். வாலி ராமர் யுத்தத்திலும் அவ்வாறுதான் நேர்ந்திருக்கும். ராமர் வெற்றியடைவதைப்பற்றி

ஐயமொன்றுமில்லை என்றாலும், அநேக நாள் இந்தச் சண்டை நீடித்து நடந்திருக்கும்; சுக்கிரீவன் பொறுமையை முற்றும் இழந்து தவித்திருப்பான் என்று கூறலாம்.

வியாக்கியானகாரர்கள் வால்மீகி கூறியதை விட்டு, வேறு கதைகளை எடுத்துச் சொல்லுகிறார்கள். அவற்றில் ஒன்றை முக்கியமாகச் சொல்லலாம். ராமாயணத்திலும் அதற்கு ஆதாரம் இருக்கிறது. யுத்தத்திற்குச் செல்லும்பொழுது அணிந்துகொள்வதற்கென்று இந்திரன் வாலிக்கு ஒரு தங்கமாலையை அளித்தான் என்பது நமக்குத் தெரியும். அதனால் வாலிக்கு ஏதோ ஒரு சக்தி உண்டாகி, யுத்தத்தில் வெற்றி ஏற்படும் என்ற நம்பிக்கை இருந்தது. இதற்கு மேல் வால்மீகி ஒன்றும் கூறவில்லை. வேறு ஓர் இடத்தில் இதைப்பற்றி இருப்பதாகக் கோவிந்தராஜர் எடுத்துக் கூறுகிறார்:—

एतत्काञ्चनमालाधारणकाले यः पुरो युद्धायागच्छति
तस्य बलं सर्वं तवैव भविष्यतीति महेन्द्रेण दत्तामित्यर्थः। IV. 11. 39.

பகைவன் எதிரில் வந்தால் அவன் பலம் முழுவதும் வாலிக்குப் போய்விடுமாம். இதில் எவ்வளவு உண்மை இருந்ததோ, ராமர் இதை அறிந்தாரோ என்னவோ, நமக்குத் தெரியாது. ஆனால் மறைந்திருந்து கொன்றதற்கு இதுவும் ஒரு காரணமாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

'வாலியோடு ராமர் உடன்படிக்கை செய்துகொண்டிருக்கலாமே! அவனுக்கு இளைத்தவனான சுக்கிரீவனை ராமர் தேர்ந்தெடுப்பானேன்?' என்ற கேள்வி எழுகிறது. கபந்தனை வதம் செய்வதற்கு முன்பு, சுக்கிரீவனைப்பற்றி ராமருக்கு ஏதும் தெரியாது. இந்தக் கபந்தன்தான், 'ரிசியமுகத்தில் இருக்கும் சுக்கிரீவனிடம் சென்றால் அவன் உதவிசெய்வான்' என்று ராமருக்கு முதல்முதலில் கூறியவன். "உலகம் முழுவதையும் அதன் அமைப்பையும் நன்றாக அறிந்தவன் சுக்கிரீவன். ராவணனைப் பற்றியும் எல்லாம் அவனுக்கு நன்றாகத் தெரியும். அவனிடம் சென்று விசாரிக்கலாம்" என்று கூறித் தொடர்ந்து, "சுக்கிரீவன் நேர்மையானவன். தங்களைப் போல் அவனும் மனைவியை இழந்து வருந்துகிறான். ஆகவே தங்களிடம் அவனுக்கு அநுதாபம் உண்டாகும். நீங்கள் இருவரும்தாம் நட்புக் கொள்வதற்கு ஏற்றவர்கள். போய் அவனுடன் உடன்படிக்கை செய்துகொள்ளுங்கள்" என்கிறான்.

சுக்கிரீவனைத் தேடி ராமர் வந்ததற்கு இதுதான் காரணம். ஒரேமாதிரி நிலைமையில் இருப்பவர்களுக்குள் ஓர் ஆழ்ந்த அநுதாபம் இருப்பதுண்டு. தம்மைப் போல் மனைவியை இழந்தவன் என்ற எண்ணமே ராமருக்குச் சுக்கிரீவனிடம் பாசத்தை உண்டாக்குகிறது. 'சுக்கிரீவனால்தான் என் கஷ்டத்தை உணர

முடியும்' என்று ராமர் கருதுகிறார். ஆகவே இருவரும் ஒருவருக்கொருவர் உதவிபுரிவதாகப் பிரதிக்ஞை செய்துகொள்கின்றனர். ஆனால் வாலியோ? பதவியிலும் போகத்திலும் திளைத்துக்கொண்டிருப்பவன். ராமரிடம் அநுதாபம் கொள்வதற்கு அவனுக்கு என்ன காரணம் இருக்கிறது? வாலி அடிபட்டு விழுந்தபிறகு ராமரைக் கேட்கும் கேள்வி ஒரு பெரிய கேள்வி என்று எனக்குத் தோன்றவில்லை. "என்னிடம் ஏன் நீங்கள் உதவி கேட்கவில்லை? உங்கள் மனைவியை இங்கே கொண்டுவந்துவிடும்படி நான் ராவணனுக்குக் கூறினால் அவன் உடனே ஓடிவந்து அப்படியே செய்திருப்பானே!" என்று கூறுகிறான். ஆனால் ராவணனும் அவனும் நண்பர்கள். சேர்ந்து எவ்வளவோ காரியங்களைச் செய்பவர்கள். வாலி தான் சொன்னபடி செய்திருப்பானோ என்பது சிறிது சந்தேகம். எல்லாம் தீர்ந்த பிறகு இப்பொழுது அதைச் சொல்வதற்கு அவனுக்கு எளிதாக இருக்கிறது.

முதல் தடவையிலேயே ஏன் ராமர் உடனே வாலியைக் கொல்லவில்லை? ராமருடைய சங்கடமான நிலைமையைப்பற்றிச் சொன்னேன். சகோதரர்களுக்குள் அடையாளம் தெரியாமல் ராமர் தடுமாறினார் என்பதை யாரும் நம்ப விரும்பவில்லை. உரையாசிரியர்களும் ஒருவரும் அதை நம்பியதாகத் தெரியவில்லை. "ராமர் கண்டிப்பாக அடையாளம் தெரிந்துகொண்டிருப்பார். அவருக்கு ஒன்றும் கஷ்டமில்லை" என்கிறார்கள். யுத்தம் முடிந்து சுக்கிரீவன் தோல்வியுற்று ஓடிவரும்பொழுது, வாலி யார் என்பது தெரியாமலிருக்குமா? மேலும், அங்கு அனுமார் வேறு இருந்தார். அவரைக் கேட்டிருக்கலாம் அல்லவா? அவர் சுலபமாகக் காட்டியிருப்பாரே! எப்படியும் ராமருக்கு எப்படித் தன் விரோதியை அடையாளம் தெரியாமலிருக்கும்? ஒருவர் மிகவும் சாதுரியமாக, "ஆயுள் ஏற்கனவே விதிக்கப்பட்டது. வாலிக்கு இன்னும் சில மணி நேரம் உயிர்வாழ்வதற்கு இருந்தது. அதனால்தான் ராமர் அவனைக் கொல்லும் அம்பை எய்யாமல் பேசாதிருந்தார்" என்று கூறுகிறார். கோவிந்தராஜர், "வாலி யார், சுக்கிரீவன் யார் என்பது ராமருக்கு நன்றாகத் தெரியும். என்னவோ அந்தச் சமயத்தில் அவர் அசிரத்தையாக இருந்துவிட்டார்" என்கிறார்,

ईदृशे विषय एवंविधानृतवचनं न दोषायेत्यप्यनेन ध्वनितम्। IV.12 32

என்று திலகர் கூறுகிறார். 'ராமருக்கு வேறு என்ன என்னவோ எண்ணங்கள். நாம் அவை என்னவென்று கூற முடியாது. தமக்கு அடையாளம் தெரியவில்லை என்று அவர் மேலுக்குச் சொன்னதே தவிர அது உண்மையானதல்ல' என்று இரண்டு வியாக்கியானகாரர்களும் கூறுகிறார்கள். சகோதரர்களுக்குள் ஒருவனை எப்பொழுதும் தோற்கடிக்கக்கூடிய பலமுள்ளவனை ராமர் அடை-

யாளம் கண்டுகொள்ள முடியாது என்று முடிவுகட்டுவது கொஞ்சம் கஷ்டம்தான். எனக்கு ஓர் எண்ணம் தோன்றுகிறது: வால்மீகி கூறியிருப்பதை ஆதாரமாகக் கொண்டு அதைத் தைரியமாகக் கூறுகிறேன். வாலியும் சுக்கிரீவனும் முதல் தடவை போரிட்டுக் கொண்டிருந்தபொழுது, வாலியோடு நேரில் சண்டைபோடுவதா, அல்லது மறைந்திருந்த இடத்திலிருந்தே தாக்குவதா என்பதைப் பற்றி ராமர் தமக்குள் நிச்சயம் செய்திருக்க மாட்டார். 'மறைந்து நின்று அம்பு எய்வதா? அது இழிவு அல்லவா?' என்று அவர் யோசித்துத் தயங்கியிருக்கலாம். உடனே ஏழெட்டு நாள் சண்டையை நீடிக்கச் செய்து, வெற்றி தோல்வியைப்பற்றிச் சந்தேகம் எழுவதைக்காட்டிலும், வாக்களித்தபடி உடனே கொன்றுவிட அவர் நிர்மாவித்திருக்கலாம்.

ராமரின் மனத்தை அறிவதற்கு ராமாயணத்தில் ஒரு பிரசித்தமான இடம் இருக்கிறது. ராமர் தம்முடைய அநுபவத்திலிருந்து விபிஷணனுக்குச் சில வார்த்தைகள் கூறுகிறார். ''யுத்தம் புரியும் பொழுது வெற்றி எந்தப் பக்கம் என்பது நிச்சயமில்லை. சண்டையில் எல்லாம் சந்தேகம்தான். யாருக்கு வெற்றி என்று ஒருவரும் உறுதியாகக் கூற முடியாது'' என்கிறார்.

नैकान्तविजयो युद्धे भूतपूर्वः कदाचन ।
परैर्वा हन्यते वीरः परान् वा हन्ति संयुगे ॥ VI. 112. 18.

எப்பொழுதும் ஒரே பக்கம் வெற்றி என்பது இதுவரையில் இல்லை. எதிரிகளினால் தாக்கப்பட்டுத் துன்பப்பட்டாலும் முடிவில் அவனே வெற்றியடையலாம். வெற்றி தோல்வியை யாரும் நிர்ணயிக்க முடியாது. ராமரே இவ்விதம் கூறும்பொழுது, அவரையும் இந்தச் சந்தேகத்திற்கு உட்படும்படி ஏன் செய்யலாகாது? அதில் ஒரு தவறுமில்லை. ஆகவே, முதல் தடவை வாலியுடன் நேரில் போய்ச் சண்டைபோடும் எண்ணத்துடன் அவர் வாலியின் மேல் அம்பு எய்யவில்லை. இது தக்க சமயமல்ல என்றும் அவர் நினைத்திருக்கலாம். சந்தேகத்தின்பேரில் ஒரு நிமிஷம் தயக்கம் ஏற்பட்டது என்று சொல்லலாம். இது சம்பாவிதமேயாகும்.

ஏதோ ஒரு விதமாக நான் அதற்குச் சமாதானம் கூறினாலும் வாலி சுக்கிரீவர்களை ராமர் அடையாளம் கண்டுகொள்ளவில்லை என்பதை நாம் ஏன் நம்பக்கூடாது என்றுதான் தோன்றுகிறது. அவரே அப்படிச் சொல்லியிருக்கும் பொழுது நாம் அதைச் சந்தேகிப்பது சரியா? ஆயினும் ஏதாவது வேறு காரணம் வேண்டுமென்றால் எல்லாச் சமாதானங்களையும் போல் நான் கூறிய சமாதானமும் சரியென்றே வைத்துக்கொள்ளலாம்.

ராமரே ஸர்வாதிபத்தியத்தைப் பற்றிப் பேசுகிறார். அவர் கூறுகிறார்:—

इक्ष्वाकूणामियं भूमिः सशैलवनकानना ।
मृगपक्षिमनुष्याणां निग्रहप्रग्रहावपि ॥
तां पालयति धर्मात्मा भरतः सत्यवानृजुः ।
धर्मकामार्थतत्त्वज्ञो निग्रहानुग्रहे रतः ॥
तस्य धर्मकृतादेशा वयमन्ये च पार्थिवाः ।
चरामो वसुधां कृत्स्नां धर्मसन्तानमिच्छवः ॥
ते वयं धर्मविभ्रष्टं स्वधर्मे परमे स्थिताः ।
भरताज्ञां पुरस्कृत्य निगृह्णीमो यथाविधि ॥ IV. 18. 6, 7, 9, 11.

"இந்தப் பூமண்டலம் முழுவதும் இக்ஷ்வாகு வம்சத்து அரசர்களைச் சேர்ந்தது. நான் முடிசூட்டிய அரசனல்ல என்றாலும், அரசனுக்கு உறவினனாகத் தவறு செய்தவர்களைத் தண்டிக்க அதிகாரமுள்ளவன்'' என்கிறார். அத்தகைய அதிகாரத்தையும் சக்தியையும் தாமே ஏற்றுக்கொண்டு நடப்பது எப்படி நியாயமாகும்? பரதன் அவரைத் தனக்குப் பிரதிநிதியாக நியமிக்கவில்லை. கோவிந்தராஜர், "பரதன் நியமிக்காவிட்டாலும் அவர் அப்படிக் கூறியது பொய்யாகாது" என்கிறார்.

यद्यपि भरतेन नादेशः कृतः, तथापि नेदमसत्यम् । यथाकथञ्चित् भरतेन राज्यभरणस्य स्वीकृतत्वात् तदन्येषां तत्कुलीनानां तदादिष्टत्वं सिद्धमिति हृदयम् ॥

"பரதன் அரசனானவுடனே அவனைச் சேர்ந்தவர்களும் அந்தப் பதவியில் பங்குடையவர்களே. அரசன் இல்லாதிருக்கும்பொழுது அவன் என்ன செய்வானோ அதை அந்த உறவினர்கள் செய்யலாம்" என்கிறார்.

திலகருடைய வியாக்கியானம் இன்னும் கொஞ்சம் அதிக சமத்காரமாக இருக்கிறது. என்ன என்ன சந்தேகங்கள் எழும் என்பதை முன்னதாகவே எதிர்பார்த்து, "பரதன் தனக்கு அதிகாரம் அளித்திருக்கிறான் என்று ராமரே சொல்லுகிறார். பரதன் பட்டத்திற்கு வந்தவுடன் அவனுக்கு உள்ள அதிகாரம் அவனது உறவினர்களுக்கும் கொஞ்சம் கிட்டியிருக்கும். ஆகவே ராமர் அந்த அதிகாரத்தைக் கொண்டு வாலியைக் கொன்றிருக்கலாம். மேலும், ராமரே பரதனைத் தமக்குப் பதிலாக ராஜ்யமாளும்படி நியமித்திருப்பதனால் முழு அதிகாரமும் அவரைச் சேர்ந்ததாகும்'' என்று கூறுகிறார். பரத ராம ஸம்வாதத்தின்பொழுது, முடிவில் ராமர்தாம் நியாயமாக அரசர்; பரதன் அவருக்குப் பதிலாகத்தான் ராஜ்யமாள வேண்டும் என்று தீர்மானமாயிற்று. ஆகவே பரதனுக்கு அதிகாரத்தை அளித்தவர், தாமே அதை ஏற்று நடக்க உரிமை உள்ளவர் அல்லவா? அதை யார் ஆக்ஷேபிக்க

முடியும்? எப்பொழுது வேண்டுமோ அப்பொழுது ராமர் அந்த அதிகாரத்தைச் செலுத்திக்கொள்ளலாம். கடைசியாக ராமர் வாலியைப்பற்றிக் கூறுவது:—

**ज्येष्ठो भ्राता पिता चैव यश्च विद्यां प्रयच्छति । IV. 18. 13.**

''சுக்கிரீவன் உனக்குத் தம்பி. அவனை நீ பிள்ளை போலப் பாவிக்க வேண்டும். அவன் மனைவியை நீ சுவீகரித்துக்கொண்டது உன் நாட்டுப்பெண்ணையே மனைவியாக்கிக் கொண்டது போல் ஆகும்'' என்று ராமர் வாலியிடம் கூறுகிறார்.

**औरसीं भगिनीं वापि भार्यां वाप्यनुजस्य यः ।। IV. 18. 22.**

இதை எதற்காகச் சொல்லுகிறேன் என்றால், இதில் ஒரு விஷயம் கவனிப்பதற்கு இருக்கிறது. யுத்தகாண்டத்தின் முடிவில், ராவணனது அந்தப்புரத்திலிருந்து சிதையை அழைத்து வரும் பொழுது ராமர் மிகவும் கடுமையான முகத்துடன் வீற்றிருக்கிறார். அவளை அங்கே கூடியிருந்த அனைவர் முன்னிலையிலும், உலகம் தவறாக நினைக்கலாம் என்ற எண்ணத்தில், திரஸ்கரித்துப் பேசுகிறார். ''மிகவும் கெட்ட ஒழுக்கமுடைய ராவணனுடைய அதீனத்தில் ஒரு வருஷம் முழுவதும் வசித்த உன்னைத் தூய்மையானவள் என்றால் யார் நம்புவார்கள்? நான் கூறினாலும் யார் கேட்பார்கள்? ஆகவே உன்னை மீண்டும் என் மனைவியாக, என் பட்டமகிஷியாக, நான் ஏற்றுக்கொள்வதற்கில்லை'' என்கிறார்.

ராவணனுக்கு வசியமாகாமல் சிதை அசோகவனத்தில் இருந்த நிலையை அனுமார் நேரில் கண்டு வந்து சொல்லியிருக்கிறார். ஆயினும் ஒரு நிமிஷம் சந்தேகப்பட்டு அவளை நிராகரித்துக் கடுமையாக, ''இனிமேல் நீ எனக்குத் தேவையில்லை. நீ எங்கு வேண்டுமானாலும் போகலாம். என்ன வேண்டுமானாலும் செய்யலாம்'' என்கிறார் ராமர். அவ்விதமே வாலியிடம், ''தம்பியின் மனைவியை அபகரித்தவன் நீ. தம்பியின் மனைவியைச் சுவீகரித்துக் கொண்டாய். உன் நாட்டுப் பெண்ணோடு நீ இருப்பது முற்றும் தர்ம விரோதமானது. நீ மிகவும் ஒழுக்கமற்றவன். அதற்கு மரண தண்டனைதான் அளிக்க வேண்டும்'' என்கிறார். இஷ்டப்பட்டோ இஷ்டமில்லாமலோ தன் மனைவி வாலியின் மனைவியாக வாழ்ந்துகொண்டிருக்கிறாள் என்று தெரிந்ததும், வாலியைக் கொன்று மனைவியை மீட்டுக் கொடுக்கும்படி ராமரைச் சுக்கிரீவன் வேண்டிக்கொண்டான் என்றால், மனைவியின் சீலத்தைப்பற்றி அவன் எவ்வளவு கவலை கொண்டிருக்க வேண்டும்? அத்தகைய மனைவியைப் பற்றியோ அத்தகைய கணவனைப் பற்றியோ நாம் என்ன நினைப்பது? ''நீ அவளை மனைவியாக்கிக் கொண்டிருக்கிறாய்'' என்று ராமர் வாலியிடம் கூறுகிறார். ஆகவே

அவளுடைய தூய்மை கெட்டுவிட்டது என்பதில் சந்தேகமில்லை. அதற்காகச் சுக்கிரிவன் என்ன செய்தான்? அவளை அக்கினிப் பிரவேசம் செய்யச் சொல்லவில்லை. இரண்டொரு நாள்கூட அவன் காத்திருக்கவில்லை. அவளை உடனே தன்னிடம் அழைத்துக் கொண்டான். கெடு தவறிவிட்டதென்று ராமர் கோபத்துடன் அனுப்பிய லக்ஷ்மணன் சென்றபொழுது சுக்கிரிவன் ருமாவுடன் இன்பத்தில் ஆழ்ந்து கிடக்கிறான்.

रुमां तु वीरः परिरभ्य गाढं
वरासनस्थो वरहेमवर्णः ।
ददर्श सौमित्रिमदीनसत्त्वं
विशालनेत्रः सुविशालनेत्रम् ॥ IV. 33. 66.

ருமாவை இறுகக் கட்டியணைத்திருக்கும் நிலையில் லக்ஷ்மணன் சுக்கிரிவனைக் காண்கிறான். இந்த இடத்தில் வால்மீகி ஹாஸ்யத் தோடு அந்த இருவருக்குமுள்ள வித்தியாசத்தை வர்ணிக்கிறார். இருவரும் விசால நேத்திரர்களாக இருக்கின்றனர். பழக்க மில்லாத இந்த அபூர்வக் காட்சியைக் காண லக்ஷ்மணனுடைய கண்கள் அகலமாக விரிகின்றன. லக்ஷ்மணன் பார்த்ததை அறிந்து சுக்கிரிவனுடைய கண்களும் நன்றாகத் திறந்து காண்கின்றனவாம்.

சுக்கிரிவன் மனைவியின் தூய்மையை அதிகம் பொருட்படுத்த வில்லை என்று தெரிகிறது. தன்னைப் பிரிந்து தன் தமையனது மனைவியாக வாழ்ந்தவளை அவன் மீண்டும் சகஜமாக ஏற்றுக் கொள்ளுகிறான். இம்மாதிரி எங்கும் நடக்காது என்று நான் கூறவில்லை; எவ்வளவோ நடக்கின்றன. ஆனால் மனைவியை அபகரித்தவனைக் கொன்று அவளை மீட்டுக் கொடுக்கும்படி மற்றொருவனை வேண்டிக்கொள்பவன் எவனும் இருக்க முடியாது. ஏதாவது நகையா சாமானா, எடுத்தவனிடமிருந்து மீண்டும் அப்படியே பெற்றுக்கொள்வதற்கு? உயிருக்கு மேலாக இருந்த மனைவி அல்லவா? சுக்கிரிவனைப்பற்றி ஒன்றும் எனக்கு அக்கறை இல்லை. ராமருடைய முரண்பாடான நடவடிக்கையைப் பற்றிக் கூறுகிறேன். வாலியோடு வாழ்ந்த ருமா மீண்டும் சுக்கிரி வனால் ஏற்கப்பெற்று அவனுக்கு மனைவியாக வாழ்கிறாள் என்பதை அறிந்த ராமர், தம் மனைவி, ஸ்திரீகளைப் பலாத்காரம் செய்து துன்புறுத்தும் கெட்ட ஒழுக்கமுடைய ராவணனுடைய வசத்தில் நிராதரவாக நிரபராதியாக இருந்தவள் என்று தெரிந்தும் எப்படி நடந்துகொண்டார்? சுக்கிரிவன்-ருமா விஷயத்தில் எவ்வளவோ அநுதாபத்தோடு இருந்த ராமருக்கு, உலகம் முழுவதும் போற்றிய கற்புக்கரசி சீதையின் விஷயத்தில் மட்டும் ஏன் துளியும் அநுதாபம் உண்டாகவில்லை?

# 11

## மாசற்ற கற்புக்கும் சோதனை

ராவண வதம் முடிந்த பிறகு சீதையை ராமர் நிராகரித்த சம்பவத்தை இன்று எடுத்துக்கொள்வோம். வாலிவதத்தைப் போலவே இதுவும் பெரிய சர்ச்சைக்கு விஷயமாக இருக்கிறது. 'சீதையை நிராகரிக்க வேண்டிய அவசியமே இல்லை' என்று சிலர் நினைக்கிறார்கள். வேறு சிலர், 'ராமர் தவறே செய்யக் கூடாதவர்' என்ற எண்ணத்தினால், 'அவர் செய்தது சரி' என்று நிரூபிக்க முயலுகிறார்கள். எப்பொழுதோ நடந்த ஒரு நிகழ்ச்சியை இப்பொழுது நாம் யோசித்து முடிவு செய்வது சிரமம். வெகு கால மாகச் சர்ச்சைக்கு உட்பட்ட ஒரு விஷயத்தைப்பற்றி ஒருவரும் முடிவாக எதுவும் சொல்லவும் முடியாது. ஆயினும் ராமாயணத் தைப் பக்தி சிரத்தையோடு படிக்கும் நாமும் புதிதாக ஏதோ கண்டுபிடித்துச் சொல்வோம் என்ற நம்பிக்கை இல்லாவிட்டாலும் இரு தரப்பின் சார்பாகவும் என்ன என்ன சொல்லலாம் என்ற எண்ணத்துடன் அதைப்பற்றிப் பேசலாம் என்று தோன்றுகிறது.

முதலில், நம் மதிப்பிற்கு உரிய ஆராய்ச்சியாளர்கள் கிளப்பும் இரண்டு விஷயங்களைப் பார்ப்போம். ஒன்று, வால்மீகி ராமா யணத்தில் இல்லாதது; ராமாயணக் கதையை அப்படியே வைத்து எழுதியிருப்பதாகக் கூறும் வேறு புத்தகங்களை ஆதார மாகக் கொண்டது. சீதையைத் தூக்கிச் செல்வதற்காக ஜனஸ் தானத்தில் ராவணன் வந்தவுடன் நிஜசீதை அக்கினிப் பிரவேசம் செய்து மறைந்துவிட்டாள். பின்வரும் காண்டங்களில் வரும் சீதை மாயாசீதை என்பது அந்த ராமாயணங்களிலுள்ள கதை. இதையே நம்மில் அநேகர் ஆவலோடு நம்புகிறார்கள். ஆனால், இதனால் ராமாயணத்தின் ரசம் அடியோடு போய்விடுகிறது. மாயாசீதையின் கஷ்டங்களைப் பற்றி நமக்கு நிஜமான அக்கறை எப்படி உண்டாகும்? ராமரும் லக்ஷ்மணனும் சீதையைப் பிரிந்து வருந்துவதும், சீதையைத் தேடும் பிரதிக்ஞையை மறந்ததற்காகச் சுக்ரீவனைக் கொல்வதாகப் பயமுறுத்துவதும், சீதையைக் காணாது அவர்கள் அழுது புலம்புவதும் எல்லாம் இந்த மாயாசீதைக்காகத் தான் என்ற கதையை நம்புவது சுலபமான காரியமா? ராமா யணக் கதையில் பாதிக்கு மேல் நிஜ சீதை அல்ல என்ற நம்பிக்கை

யுடன் அவளது கஷ்டங்களுக்காக வருந்தவும், அவள் சந்தோஷப் படும்பொழுது சந்தோஷப்படவும் யாரால்தான் முடியும்? அது அதிசயம்தான்; அது நடக்கக் கூடியதல்ல. ஆகவே ராமாயணக் கதையிலுள்ள சுவாரஸ்யத்தை அடியோடு அகற்றிவிடும் இந்த மாயாசீதைக் கதையை நான் விட்டுவிடுகிறேன்.

மற்ருெரு விஷயமும் இங்குக் குறிப்பிடத் தகுந்தது. மாயா சீதைக் கதையைப்பற்றி நான் கூறியதை நீங்கள் ஒப்புக்கொண் டாலும், இந்த விஷயத்தை ஒருவேளே ஒப்புக்கொள்ளாமலிருக்க லாம்; ஆயினும் நான் நினைப்பதைத் தெளிவாகக் கூறிவிடுவது நல்லது. பழைய ஆசாரமுள்ளவர் சிலர் நம்மிடையே இருக் கிருர்கள். குணத்திலும் பிறரது அநுதாபத்தைப் பெறும் விஷயத் திலும் ஆண் பெண் இருபாலரிடையே பெரிதும் வேறுபாடு இருப்ப தாக அவர்கள் நினைக்கிருர்கள். 'ஒரு பெண் எவ்வளவு உயர்ந்த வளாக, தூய்மையுள்ளவளாக இருந்தபோதிலும் அவள் தனியே தைரியமாகத் தனக்குத் தோன்றியதை எடுத்துக் கூறவோ மறுத் துப் பேசவோ கூடாது. 'சீதாதேவியும் கடைசியில் ஒரு பெண்ணே; ஆகையால் புருஷனுக்கு உட்பட்டவள்தான். முக்கிய விஷயங் களில் அவள் தன் விருப்பப்படி நடக்க அதிகாரமற்றவள்' என்றெல் லாம் கருதுகிருர்கள். அவள் சொல்வதோ நடப்பதோ சரியாக வும் இருக்கலாம்; தவருகவும் இருக்கலாம். அதைப்பற்றி அவர் களுக்குக் கவலேயில்லே. 'தானே தீர்மானிக்க அவளுக்கு அதிகார மில்லே' என்பதுதான் அவர்களின் கருத்து.

ராமர் மாரீசனேத் துரத்திச் சென்ற பிறகு அவருடைய ஓலக் குரல் போன்ற குரலேக் கேட்டபொழுது போய்ப் பார்க்க லக்ஷ்மணன் தயங்கவும், தனக்கு ஏற்பட்ட கவலேயிலும் பயத்திலும் சீதை தன்னே மறந்தவளாக லக்ஷ்மணனுடைய சீலத்தையே சந்தே கித்துப் பலவாறு அவனே அவதூறு செய்ததன் பயன், பாதுகாக்க வேண்டிய அவளேத் தனியே விட்டு லக்ஷ்மணன், பாதுகாப்புச் சற்றும் தேவையில்லாத ராமரைத் தேடிப் போக வேண்டிய தாயிற்று. ஆணுக்குக் கீழ்ப்பட்டவள் பெண் என்ற கொள்கையை ஆதரிப்பவர்கள், லக்ஷ்மணனேத் தவருக நினேத்துக் கண்டபடி நிந்தித்துப் பேசியதனுல் விளேந்த பெரும் பாவத்தின் பயனுகவே, பின்பு சீதைக்கு அவ்வளவு துன்பங்கள் ஏற்பட்டன என்கிருர்கள். 'அவள் செய்த அபசாரத்துக்கு உரிய தண்டனே இது' என்பது கோவிந்தராஜரின் வியாக்கியானம்.

रावणागमनमारभ्य एतावत्पर्यन्तं सीतायाः परमभागवतभूतलक्ष्मणापचारफलमुपपादितम् ॥ VI. 119. 34-35.

அந்தக் கொள்கையை நாம் ஒன்றும் கவனிக்க வேண்டிய தில்லே என்று நினேக்கிறேன். சீதையைப்பற்றிக் கூறும் சமயம்

வரும்பொழுது, இதுபோன்ற இன்னும் மற்றச் சந்தர்ப்பங்களில் அவள் நடந்துகொண்டதை ஆதரித்து இரண்டொரு வார்த்தைகள் கூறலாம் என்று கருதுகிறேன். சீதை தான் புரிந்த குற்றங்களுக்குத் தண்டனையாகக் கஷ்டங்களை அநுபவித்தாள் என்று வால்மீகி நினைத்துச் சொல்லியிருப்பதாகக் கூறும் கதையை இப்பொழுது விட்டுவிடுவோம்.

சீதையை நிராகரித்த சமயத்தில், ராமர் சீதை ஆகிய இருவரின் மனநிலை எவ்வாறு இருந்தது என்பதை அறிய ராமாயணத்தில் அந்த இடத்தைக் கொஞ்சம் பார்ப்போம். விபீஷணனைப் போய்ச் சீதையை அழைத்து வரக் கூறியபொழுது ராமர், "ஸ்நானம் செய்து நன்றாக அலங்கரித்துக்கொண்டு அவள் வரட்டும்" என்று குறிப்பாக உத்தரவிட்டு அனுப்புகிறார். விபீஷணன் சீதையினிடம் சென்று இந்தச் செய்தியைத் தெரிவித்தபொழுது அவள் கலக்கமடைந்து, "இப்படியே அழுக்கடைந்த வஸ்திரத்துடனும், சோகம் தேங்கிய முகத்துடனும் அவரைத் தரிசிக்க விரும்புகிறேன். ஸ்நானம் செய்து அலங்கரித்துக் கொண்டு செல்ல என்னால் முடியாது. இங்கே எப்படிக் கஷ்டப்பட்டேனோ அந்தக் கோலத்துடனேயே செல்வேன்" என்கிறாள். ராமரின் முகத்திலிருந்து ஏதோ சரியில்லை என்று ஊகித்த விபீஷணன், "தேவி, தாங்கள் கணவரின் கட்டளைப்படி நடப்பதே நல்லது" என்று கூறுகிறான். பதியே தெய்வம் என்று கருதிய சீதை விபீஷணன் கூறியபடி ராமர் முன் செல்லுகிறாள்.

அவளைச் சிவிகையில் ஏற்றிச் செல்லும்பொழுது பெரிய ஆரவாரம் உண்டாகிறது. தடியையும் கம்பையும் தாங்கிய ஆட்கள் ஜனங்களை இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் ஒதுக்கும் பொழுது சிலருக்கு அடி விழுந்து பெரிய அமளி ஏற்படுகிறது. இதைக் கண்டு பொறுக்காமல் ராமர், "ஜனங்களை எதற்கு அடித்துத் துன்புறுத்துகிறீர்கள்? அவர்கள் எல்லாரும் எனக்கு வேண்டியவர்கள். சீதையை அவர்கள் பார்க்கட்டுமே! அதில் என்ன தவறு? பெண்ணுக்கு அவளது சீலமும் நற்குணமுமே பாதுகாப்பாகும். இந்த ராஜமரியாதைகளும் ஆடம்பரமும் எதற்காக? திரையும் மறைவும் எதற்கு? ஒழுக்கமல்லவா அவளைப் பாதுகாக்க வேண்டும்? ஒரு கொடிய யுத்தம் முடிந்து, துன்பமும் கஷ்டமும் சூழ்ந்துள்ள இந்தச் சமயத்தில், அவளை எல்லாரும் பார்ப்பதில் பிசகு ஒன்றுமில்லை. மேலும், என் அருகில்தானே அவள் இருக்கப் போகிறாள்! அதில் நிச்சயம் தவறு ஏதேனும் இருக்க முடியுமா?" என்கிறார்.

இப்படிக் கூறும்பொழுதே அவர் அடைந்துள்ள பரபரப்பு வெளியாகிறது. கடுமையாகப் பேசினாலும் ஒரு பக்கமாகத்

தாழ்ந்த தலேயுடன் வீற்றிருக்கிருர். பொதுவாகப் பெண்கள் பிறர் கண்ணில் படாமல் மறைவாக இருப்பதைக் கண்டித்துப் பேசினுலும், சீதை அப்படி இருப்பதைப்பற்றி வெறுப்புற்றவராக இருப்பதைக் கண்டு சுக்கிரீவன், லக்ஷ்மணன், விபீஷணன் ஆகிய அனைவரும் அச்சமடைகின்றனர். ராமரின் மனத்தில் நிம்மதி இல்லே. ஏதோ கஷ்டம் விளேயப்போகிறது என்று அவர்கள் கவலேப்படுகின்றனர்.

சீதை பல்லக்கிலிருந்து இறங்கி, ராமரின் உத்தரவின்பேரில் சில அடிகள் நடந்து அவரை அணுகுகிருள். அவர்முன்பு நிற்கும் பொழுது அவரது முகத்தைப் பார்க்க அவளுக்கு எவ்வளவு ஆவலிருக்கும் என்பது கூருமலே விளங்கும். அவரது முகத்தைப் பார்க்கும்பொழுது அங்கே அவள் கண்டது, எல்லாரையும் போலவே அவளேயும் அச்சத்தில் ஆழ்த்துகிறது. வெகு நாள் பிரிந்திருந்த அன்புள்ள கணவன் அல்ல தான் மீண்டும் காண்பவன் என்று அவளுக்குத் தெரிகிறது. ஒரு குற்றவாளிக்கு விதிக்கும் தண்டனேயை ஏற்றுக்கொள்ள அவள் இப்பொழுது நீதிஸ்தலத்தில் இருக்கிருள். தொடக்கத்திலேயே ராமர் பேசிய வார்த்தைகள் அவளுக்குப் பெரும் கலக்கத்தை உண்டுபண்ணுகின்றன. கடமையைச் செய்து இக்ஷ்வாகு வம்சத்தின் பெருமையைக் காத்ததுடன், மனேவியை அபகரித்துச் சென்றவனேக் கொன்று தம் பௌருஷத்தையும் நிலேநாட்டியதாக அவர் கூறுகிருர். ''அவமானம் நீங்கிவிட்டது. ஆயினும் உனக்காக நான் இவ்வளவும் செய்யவில்லே'' என்று அவர் கூறும்பொழுதே, சீதைக்குத் தனக்கு வரப்போகும் கஷ்டம் என்னவென்று தெரிந்துவிடுகிறது. அவள் அவரது முகத்தை நிமிர்ந்து நோக்கும்பொழுது அந்தப் பார்வை, வேடன் எய்த அம்பினுல் அடிபட்ட மானின் அச்சத்துடன் கூடிய மருண்ட பார்வை போல இருந்தது என்று வால்மீகி வர்ணிக்கிருர். ராமர் தம் புருவங்களேச் சுளித்துக் கடுத்த முகத்துடன் தோன்றுகிருர்.

स बद्ध्वा भ्रुकुटीं वक्त्रे तिर्यक्प्रेक्षितलोचनः ।
अब्रवीत् परुषं सीतां मध्ये वानररक्षसाम् ॥ VI. 118. 12.

அவரது இதயம் இரண்டாகப் பிளக்கிறது.

जनवादभयाद्राज्ञो बभूव हृदयं द्विधा ॥

இப்பொழுது வாசித்தாலும் நம் மனம் தாங்காத சொற்கள் அவர் வாயினின்று வெளிப்படுகின்றன.

प्राप्तचारित्रसन्देहा मम प्रतिमुखे स्थिता ।
दीपो नेत्रातुरस्येव प्रतिकूलासि मे दृढम् ॥ VI. 118. 17.

"உன் சீலத்துக்குக் களங்கம் ஏற்பட்டுவிட்டது." ராமரா இப்படிப் பேசுகிறார் என்று தோன்றுகிறது அல்லவா? "உன் ஒழுக்கத்துக்கு இழுக்கு நேர்ந்துவிட்டது. கண்வலியுள்ளவன் ஒளியைக் காண அஞ்சுவது போல உன்னைப் பார்க்க என் கண்கள் கூசுகின்றன" என்கிறார். இந்த உவமையே ராமருடைய குற்றத்தை வெளிப்படுத்துவதாக ஒரு வியாக்கியானகாரர் சமத்காரமாகக் கூறுகிறார். 'விளக்கின் ஒளியில் ஒரு குற்றமும் இல்லை. அது ஒரு தவறும் செய்யவில்லை. அதைக் காண்பவனின் கண்கள்தாம் நோய் காரணமாக அதைக் காணக் கூசுகின்றன' என்கிறார். ஆனால் அப்படி வேடிக்கையாகக் கூறினாலும் வேறு பயன் என்ன?

तद्गच्छ ह्यभ्यनुज्ञाता यथेष्टं जनकात्मजे ।

"உன் இஷ்டப்படி நீ எங்கு வேண்டுமானாலும் போய்க்கொள்."

एता दश दिशो भद्रे कार्यमस्ति न मे त्वया ॥ VI. 118. 18,

"இந்தப் பத்துத் திக்குகளிலும் நீ எங்கு வேண்டுமானாலும் போகலாம். உன்னால் இனி எனக்கு ஒன்றும் ஆகவேண்டியதில்லை.

कार्यमस्ति न मे त्वया ॥

"உயர்ந்த குலத்தைச் சேர்ந்த எவன்தான் அந்நிய புருஷன் ஒருவன் வீட்டில் ஒரு வருஷம் வாழ்ந்த தன் மனைவியை மீண்டும் சந்தோஷத்தோடும் ஆசையோடும் ஏற்றுக்கொள்வான்?"

कः पुमान् हि कुले जातः स्त्रियं परगृहोषिताम् ।
तेजस्वी पुनरादद्यात् सुहृल्लेख्येन चेतसा ॥ VI. 118. 19.

"சூரிய வம்சத்தில் பிறந்தவன் என்றும், ரகுவின் வழியில் தோன்றியவன் என்றும், தசரதருடைய புதல்வன் என்றும் பெருமைப்படுகிற நான் ராவணன் தொட்டுத் தூக்கிச்சென்ற உன்னை எப்படி மீண்டும் சேர்த்துக்கொள்வேன்?"

रावणाङ्कपरिभ्रष्टां दृष्टां दुष्टेन चक्षुषा ।
कथं त्वां पुनरादद्यां कुलं व्यपदिशन् महत् ॥ VI. 118. 20.

"என் பராக்கிரமத்தினால் அந்தத் தீய அரக்கனிடமிருந்து உன்னை மீட்டுக்கொண்டு வந்தேன். என் பெயரை நிலைநாட்டியாயிற்று. என் பெயருக்குச் சிறிது காலம் ஏற்பட்டிருந்த களங்கத்தைத் துடைத்துவிட்டேன்."

तदर्थं निर्जिता मे त्वं यशः प्रत्याहृतं मया ।
नास्ति मे त्वय्यभिष्वङ्गो यथेष्टं गम्यतामितः ॥ VI. 118. 21.

"இனி உன்னிடம் எனக்கு ஒரு நாட்டமுமில்லை."

नास्ति मे त्वय्यभिष्वङ्गः ।

"என்னிடம் விடைபெற்று உனக்கு இஷ்டமான இடத்திற்குச் செல்லலாம்."

....यथेष्टं गम्यतामितः ।
इति प्रव्याहृतं भद्रे मयैतत् कृतबुद्धिना ।

"நான் நன்கு யோசித்துத்தான் இந்த முடிவுக்கு வந்திருக்கிறேன்" என்கிறார் ராமர். இவ்விதம் அவள் மறுத்துக் கூறுவதற்கு ஒன்றும் இடமில்லாமல் பேசுகிறார்.

लक्ष्मणे भरते वा त्वं कुरु बुद्धिं यथासुखम् ॥
सुग्रीवे वानरेन्द्रे वा राक्षसेन्द्रे विभीषणे ।
निवेशय मनः सीते यथा वा सुखमात्मनः ॥ VI. 118, 22, 23.

"லக்ஷ்மணனோ, பரதனோ, சுக்கிரீவனோ, விபீஷணனோ இந்த நால்வரில் நீ யாரை வேண்டுமானாலும் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். நான் ஒன்றும் நினைக்கவில்லை" என்கிறார்.

அவர் அவளுக்கு அளிக்கும் சுதந்திரத்தைப் பாருங்கள். ராமர் கூறிய தகாத மொழிகளைக் கேட்டுத் திகைப்படைந்த வியாக்யானகாரர்கள், படிப்போர் அந்த மொழிகளைத் தவருகக் கருதக்கூடாது என்று கவலையடைந்து, இந்த நால்வரில் யாரிடமாவது சீதை அடைக்கலம் தரும்படி வேண்டிக்கொள்ளலாம் என்பதைத் தவிர வேறு விதமாக எதுவும் ராமர் நினைத்திருக்க முடியாது என்கின்றனர். ஆனால் ராமர் கூறிய மொழியின் கடுமையைக் குறைக்க வேண்டிய அவசியம் ஏதுமில்லை என்றே எனக்குத் தோன்றுகிறது. அவர் கடுமையாகப் பேச வேண்டும் என்றுதான் பேசியிருக்கிறார். அவர் மனம் அதிருப்தியோடு குமுறிக்கொண்டிருக்கிறது; அமைதியில்லாமல் தத்தளித்துக்கொண்டிருக்கிறது. ஐயமின்றி அவளது தூய்மையைச் சந்தேகித்தவராக, "களங்கத்தோடு வரும் உன்னை எப்படி மீண்டும் அழைத்துக்கொள்வேன்? உனக்குப் பூரண சுதந்திரம் அளிக்கிறேன். இனி நீ எனக்குத் தேவையில்லை" என்கிறார்.

கோபத்தோடு இருப்பவன் என்ன வேண்டுமானாலும் பேசுவான் அல்லவா? கோபத்தில் கண்டதைப் பேசுகிறவர்களைத்தான் எல்லாரும் அறிவோமே! தினமும் காலையில் நல்ல தைலம் தடவி மிருதுவான சீப்பினால் பெண்ணின் கூந்தலை ஜாக்கிரதையாக வாரிப் பின்னும்பொழுது பெண்ணின் மயிர் அடர்த்தியாக வளர்ந்திருப்பதைப் பெருமையோடு பக்கத்தில் இருப்பவர்களிடம் சொல்லிக்கொள்ளும் அன்புள்ள ஒரு தாயே, கோபம் வந்தால், "இந்த மயிரைப் பொசுக்க வேண்டும்" என்று சொல்வதைக் கேட்டிருக்கிறோம் அல்லவா? இம்மாதிரிப் பேச்சுக்கள் நமக்குப் புதியவையல்ல. ஒரு தந்தைக்குக் கோபம் வந்தாலோ,

ஒரு தாய் கோபித்துக்கொண்டாலோ, ஒரு கணவன் கோபம் கொண்டாலோ, பேசும் வார்த்தைகளுக்கு வரம்பு ஏது? ஆனால், 'ராமர் விஷயத்தில் அப்படியெல்லாம் கூறலாமா?' என்று கேட்க லாம். நான் கூறுவது, 'ராமர் எல்லாரையும் போல் மனிதர்தாம். கோபம் வந்தபொழுது அசட்டுத்தனமாகப் பேசிவிட்டார்' என்பதே. அப்புறம் மிக மிக வருத்தப்பட்டிருப்பார்; சந்தேகமே இல்லை. அவர் பேச்சின் கடுமையைக் குறைக்க வேண்டிய அவசி யமே இல்லை. கடைசியாக அவர் கூறுவது:—

न हि त्वां रावणो दृष्ट्वा दिव्यरूपां मनोरमाम् ।
मर्षयेत चिरं सीते स्वगृहे परिवर्तिनीम् ॥ VI. 118. 24.

"இத்தகைய ரூபஸௌந்தரியமுள்ள உன்னைக் கண்டு ராவணன் பொறுத்திருப்பானா? அவனோ மகா துஷ்டன். உன் தூய்மை கெடாமல் அவனது சம்ரட்சணையில் நீ ஒரு வருஷம் இருந்திருக்க முடியுமா? அது சாத்தியமா?'' என்கிறார். 'ஒரு வருஷம் அவன் எப்படிப் பேசாதிருப்பான்?' என்று குத்திக்காட்டுகிறார். 'ந ஹி த்வாம் ராவண:......ஸ்வக்ருஹே. அதுவும் நீ அவனது அந்தப் புரத்திலேயே இருக்கும்பொழுது' என்று அவநம்பிக்கையோடு பேசுகிறார். அசோகவனத்தில் சீதை இருந்த நிலையைப்பற்றி, நம்பிக்கையுள்ள தமது தூதர் அனுமாரின் வாயிலாக ராமர் கேட்டறிந்திருக்கிறார். ராவணனையும் அவனது ஆசைவார்த்தை களையும் அவள் துச்சமாக மதித்துப் பேசியதையும், ராமரிடம் அவளுக்கு உள்ள குன்றாத பக்தியையும், அவரைப்பற்றிச் சொல்லும்படி அவள் ஆவலோடு வேண்டிக்கொண்டதையும்பற்றி அனுமார் அவரிடம் விவரித்திருக்கிறார். ''அவரையே அல்லும் பகலும் தியானித்துக்கொண்டிருப்பதாகச் சொல். எனக்கு வேறு நினைவு இல்லை. அவருக்காகவே உயிர் வாழ்கிறேன். ஒரு வருஷம் முடியும் வரையிலும் என்னை நெருங்கக்கூடாது என்று ராவணனிட மிருந்து உறுதிமொழி வாங்கிக்கொண்டிருக்கிறேன். அதற்குள் என்னை மீட்டுச் செல்ல வேண்டும்'' என்று சீதை அனுமாரிடம் கூறுகிறாள் அல்லவா? ஆகவே ராவணன் அவளைத் தீண்டியிருப்ப தாக நினைப்பதற்கு ஒரு காரணமுமில்லை. ஒரு வருஷம் அவன் அவளுக்குத் தவணை அளித்திருக்கிறான். ஒரு பெண்ணை அவளுக்கு விருப்பமில்லாமல் பலாத்காரம் செய்தால் தலை வெடித்துப்போகும் என்று ஒரு சாபம் ராவணனுக்கு இருந்ததை ராமர் அறிந்திராத போதிலும், அரக்கியரின் நடுவில் சீதை எத்தகைய துன்பம் அநு பவித்துக்கொண்டிருந்தாள் என்பதையும், ஒரு வருஷம் முடிவதற் குள் ராமர் வந்து தன்னை மீட்டுச் செல்வார் என்ற நம்பிக்கையி னாலேயே அவள் உயிர் தரித்திருந்தாள் என்பதையும் அனுமார் வந்து சொல்லியிருப்பாரே! அப்படியிருந்தும், அவளது தூய்மையை

நிரூபிக்க இவ்வளவு சாட்சியங்கள் இருந்தும், ராமர் அத்தகைய கடுஞ்சொற்களே அவளேப் பார்த்துக் கூறியிருக்கிருர். அக்கினிப் பிரவேசம் ஆனபிறகு அக்கினி பகவானே நேரில் வந்து, ''சீதை களங்கமற்றவள்; பரிசுத்தமானவள்; உனக்குத் துரோகமிழைக்கக் கூடிய பாவத்தை அவள் சிறிதும் செய்யவில்லே. அவளே ஏற்றுக் கொள், ராமா'' என்று கூறியதும்தான் ராமர் அவளே ஏற்றுக் கொள்கிருர்.

''அவளே நான் சந்தேகிக்கவில்லே. அவளுடைய சீலத்தைப் பற்றி எனக்குச் சிறிதும் ஐயமில்லே. தன் பாதிவிரத்திய அக்கினி யிஞலேயே ராவணனே அவள் எரித்துவிடக் கூடியவள் என்பது எனக்குத் தெரியாதா? அவளது தூய்மையைக் கெடுக்க முயன்ருல் தன் உயிருக்கே ஹானி ஏற்பட்டுவிடும் என்று ராவணனும் அறிந் திருப்பான் என்பதையும் அறிவேன்'' என்றெல்லாம் அவள் தீக்குளித்து நிரூபித்த பிறகு ராமர் உயர்த்திப் பேசுகிருர். அவர் பேசியது நூற்றுக்கு நூறு உண்மையே என்ருல், அவளே முதலில் கடுமையாகப் பேசியதெல்லாம் பொய்யாகவும் போலிக் கோபத் துடனும் பேசியதாக வைத்துக்கொள்ள வேண்டும். இரண்டும் ஒன்றுக்கொன்று முரணுக இருப்பதாகத் தோன்றுகிறது அல்லவா? உண்மையாக, ஒருவிதமாகவும் இல்லாமல் ராமர் மிகவும் குழப்ப மடைந்த நிலேயில் இருந்தார் என்றுதான் சொல்ல வேண்டும். நம் உள்ளத்தையே நாம் சோதித்துப் பார்க்க வேண்டும். இம்மாதிரி சம்பவம் நமக்கு நேர்ந்திருந்தால் நாமும் இப்படித்தான் தயங்கி யிருப்போம். 'அவள்மேல் தவறு இல்லே; நாம்தான் அவளேத் தவருக நடத்துகிருேம்' என்று ஒரு பக்கம் தோன்றுகிறது. மறு பக்கம் ராவணனுடைய ஒழுக்கமற்ற தன்மையையும்,பலவந்த மாகக் கொண்டுவந்து அந்தப்புரம் முழுவதும் நிரப்பியிருக்கும் ஸ்திரீகளேயும், சீதையின் இணேயற்ற சௌந்தரியத்தையும் பற்றி எண்ணும்பொழுது என்னவெல்லாமோ தோன்றி அவருக்குக் கோபம் எல்லே மீறுகிறது. இந்த இரண்டு விதமான எண்ணங் களில் அகப்பட்டு அவர் மனம் குழம்புகிறது. தவருன எண்ணம் மேலோங்குகிறது. அதனுல் ஏற்பட்ட பல உணர்ச்சிகளுக்கு ஆளாகி அவர் எல்லார் எதிரிலும் அவளே நிந்தித்து நிராகரிக்கிருர். மேலுக்குக் கோபம் வந்தவர் போல் அவர் பேசவில்லே. உண்மை யாகவே அவளேப் பழித்துப் பேசியிருக்கிருர். பின்னேடு தம் செய லுக்கு வருந்தியதும் உண்மையே!

நாமே யோசித்துப் பார்ப்போம். ஏதோ தீங்கு நேர்ந்து விட்டது போல் சந்தேகப்படும்போது, உடனே அந்தச் சம்சயம் நீங்கி, எல்லாம் சந்தோஷகரமாக முடியவும், நாமும், ''முதலி லேயே எனக்குத் தெரியுமே. அவள்மேல் ஒரு குற்றமுமில்லே; அவளேச் சந்தேகிக்கக்கூடாது என்று தோன்றிக்கொண்டே இருந்

11

தது'' என்றெல்லாம் உற்சாகத்தோடு கைதட்டிக்கொண்டு கூறுவோம் அல்லவா? முதலில் ஒரு சந்தேகம் மேலோங்குகிறது. இருண்ட மேகங்களினின்றும் விடுபட்டுச் சூரியன் பிரகாசிக்க எங்கும் பிரகாசமாவது போல், மற்ரேர் எண்ணம் மேலெழும்புகிறது. முதலில் அவர் நிஜமாகப் பேசவில்லை; அப்புறமும் அவர் பேசியது நிஜமல்ல என்றெல்லாம் நினைப்பதற்கு ஒரு காரணமுமில்லை. இரண்டு சமயமும் அவர் பேசியது நிஜம்தான். ஒரு சமயம் ஒரு விதமான எண்ணம்; மற்ெருரு சமயம் மற்ெருரு விதமான எண்ணம்; அவ்வளவுதான். இம்மாதிரிதான் நாம் அதை அர்த்தம் செய்துகொள்ள வேண்டும். அத்தகைய பெரும் கஷ்டமான சோதனைச் சமயங்களில் ராமரும் எல்லாரையும் போலவே நடந்துகொண்டார் என்று வால்மீகி காட்டியதாகவே நான் நிச்சயமாக நினைக்கிறேன்.

எல்லோரும் நம்மை 'என்ன முட்டாள்தனம்!' என்று இகழும் பொழுது, 'ஒன்றும் முட்டாள்தனமில்லை; எனக்கு முன்பே தெரியும்' என்று சொல்லிக்கொள்வோம். ராமர் சீதையினிடம் பலவாருன கடுஞ் சொற்களைப் பேசியபொழுது அவள் தன் தூய்மையை நிரூபிக்க வேண்டுமென்று எத்தகைய உத்தரவும் இடவில்லை என்பதை நாம் நினைவுகொள்ள வேண்டும். அவள் எங்கு வேண்டுமானாலும் போகலாம் என்பதனுலேயே அவளுக்குச் சோதனையை ஏற்படுத்தியவராக, ''இனி உனக்கு எது நடந்தாலும், நீ இறந்தாலும் எனக்குக் கவலையில்லை'' என்பது போல், ''இனி நீ எனக்குத் தேவையில்லை'' என்கிருர். இத்துடன் அவளே தன்னைப் பற்றிச் சொல்லிக்கொள்ளட்டும் என்று விட்டுவிடுகிருர். நற்குலத்தில் பிறந்த ஒரு கணவன் நற்குலத்தில் பிறந்த மனைவியை நோக்கிக் கூறும் வார்த்தைகள் அல்ல ராமர் கூறியவை என்று சொன்ன சீதை, ''ராவணன் என்னைப் பலவந்தமாகத் தொட்டுத் தூக்கிச் சென்றபொழுது நான் என்ன செய்ய முடியும்?'' என்று கேட்கிருள்.

यद्यहं गात्रसंस्पर्शं गतास्मि विवशा प्रभो ।
कामकारो न मे तत्र दैवं तत्रापराध्यति ॥ VI. 119. 8.

''என் விருப்பத்தின்பேரில் அவன் என்னைத் தூக்கிச் சென்ருனு? நான் என்ன செய்வேன்? அப்பொழுது நான் என் வசத்தில் இல்லையே! அப்படி இருந்தும் ஒரு சாதாரண ஸ்திரீயை ஒரு சாதாரணப் புருஷன் பேசுவது போலப் பேசுகிறீர்கள்'' என்கிருள். அவளும் கொஞ்சம் கடுமையாகவே பதில் சொல்லுகிருள்.

न तथास्मि महाबाहो यथा त्वमवगच्छसि ।
प्रत्ययं गच्छ मे येन चारित्रेणैव ते शपे ॥ VI. 119. 6.

தவறு செய்தவள் பேசும் விதமாகவே அவள் பேசவில்லை.

पृथक्स्त्रीणां प्रचारेण जातिं तां परिशङ्कसे ।
परित्यजेमां शङ्कां तु यदि तेऽहं परीक्षिता ॥ VI. 119. 7.

இவ்வளவு வேண்டிய பிறகும் ராமரின் மனம் இளகவில்லை என்று கண்டதும், லக்ஷ்மணனை நோக்கி, "இனி அக்கினிப் பிரவேசம் செய்வதைத் தவிர வேறு வழி இல்லை. சிதையை மூட்டு. அது ஒன்றுதான் என் துன்பத்துக்கு மருந்தாகும்" என்கிறாள்.

चितां मे कुरु सौमित्रे व्यसनस्यास्य भेषजम् ।
मिथ्योपघातोपहता नाहं जीवितुमुत्सहे ॥ VI. 119. 18.

இனி அக்கினிப் பிரவேசம்தான் கதி என்று அவள் கூறியதும் அங்கு ஒரே நிச்சப்தம் குடிகொள்கிறது. லக்ஷ்மணன், சுக்கிரீவன், விபீஷணன், ஜாம்பவான் யாருமே வாய்திறக்கவில்லை. ராமரை எதிர்த்துப் பேச யாருக்கும் துணிவில்லை. கவி வர்ணிக்கிறார்:—

न हि रामं तदा कश्चित् कालान्तकयमोपमम् ।
अनुनेतुमथो वक्तुं द्रष्टुं वाप्यशकत् सुहृत् ॥ VI. 119. 22.

எல்லாரும் வேறு பக்கம் பார்த்தவண்ணமாக இருக்கின்றனர். ராமரின் முகத்தைப் பார்க்க அஞ்சியவர்களாக நடுங்கியவண்ணம் நிற்கின்றனர். அவரது உத்தம குணங்கள் உலகறிந்தவையாக இருந்தமையால் அவர் எதையும் செய்யக்கூடிய துணிவுடையவராக இருக்கிறார் என்பதை முன்பே நிரூபித்திருக்கிறேன். பெரிய தவறு செய்தாலும் ஒருவருக்கும் அதை மறுத்துக் கூறத் தைரியமில்லை. உத்தரகாண்டத்திலும் இம்மாதிரி நிகழ்ச்சி வருகிறது. அதைப்பற்றிப் பிறகு கூறுகிறேன். உள்ளத்தைக் கலக்கும் இந்தச் சம்பவத்தின் இறுதியில் எல்லார் மனமும் இளகும்படி ராமரும் சீதையும் மீண்டும் ஒன்றுசேர்ந்ததைக் காட்டுவதற்கே போல், தேவதைகள் அங்கு வந்து குழுமியபொழுது, தசரத சக்ரவர்த்தியே வந்து ராமரோடு பேசினார் என்றும், சீதையை மகள் என்றே அழைத்து அவளை வேண்டிக்கொண்டார் என்றும் கூறுகிறார்கள். தசரதர் சொல்லுகிறார்:—

कर्तव्यो न तु वैदेहि मन्युस्त्यागमिमं प्रति ।

"சீதையே! ராமன் உன்னை நிராகரித்தான் என்று வருத்தப் படாதே. அதற்காக அவனிடம் கோபம் கொள்ளாதே."

रामेण त्वद्विशुद्ध्यर्थं कृतमेतद्धितैषिणा ॥ VI. 122. 34.

"உன் தூய்மையை உலகுக்குத் தெரியப்படுத்துவதற்கென்றே அவன் உன்னைத் தியாகம் செய்தான். அதற்காகவே, 'எங்கு வேண்டுமானாலும் செல்; இனி நீ எனக்குத் தேவையில்லை' என்று

கூறினன். அதை அப்படியே நிஜமாக நம்பி ராமன்மேல் வெறுப் படையாதே'' என்கிருர்.

ராமரின் மனம் மாறிய பிறகுதான் எல்லாம் நடக்கின்றன. சீதை உள்ளமுடைந்து பரிதவித்த காட்சி முடிந்து யாவும் மீண்டும் இனியவையாக மாறியபிறகு எல்லாரும் யாவும் நல்லதற்கென்றே ஏற்பட்டதாகக் கருதுகிருர்கள். சீதையின் கற்பைச் சந்தேகித்து ராமர் நடந்ததற்குக் காரணம் வேண்டும் அல்லவா? ஆதாரமற்றிருப்பினும் அந்தச் சந்தேகம் அவர் மனத்தில் உறுத்திக்கொண்டிருந்திருக்கிறது.

பின்பு நேர்ந்த சம்பவத்திற்குச் சிறிதும் காரணமே இல்லை. அயோத்தியில் யாரோ அவதூறு செய்கிருர்கள் என்ற செய்தி ராமருக்கு எட்டுகிறது.

शृणु राजन् यथा पौराः कथयन्ति शुभाशुभम् ।
चत्वरापणरथ्यासु वनेषूपवनेषु च ॥ VII. 43. 13.

நகரத்திலுள்ள ஆண் பெண்கள் ராமரையும் சீதையையும் பற்றித் தங்களுக்குத் தோன்றியபடி பேசிக்கொள்கிருர்கள். ''ராவணனுடைய அந்தப்புரத்தில் ஒரு வருஷம் இருந்திருக்கிருள் சீதை. அவளுடன் எப்படி ராமன் மீண்டும் வாழ்க்கை நடத்துவது? அவருக்கு அது சம்மதமாக இருக்குமா?''

कीदृशं हृदये तस्य सीतासंभोगजं सुखम् ।
अङ्कमारोप्य तु पुरा रावणेन बलाद्धृताम् ॥ VII. 43. 17.

''ராவணன் தூக்கிச் சென்று அரக்கியர் மத்தியில் இருந்தவளை ராமர் எப்படி மீண்டும் மனைவியாக ஏற்றுக்கொள்ள இசைவார்?'' என்றெல்லாம் பேசுகிருர்கள். மனித இயல்பை நன்கு அறிந்திருக்கும் தமது திறமையைக் கவி பின்வருமாறு வெளியிடுகிருர்:—

अस्माकमपि दारेषु सहनीयं भविष्यति ।

''இனி நாமும் நம் மனைவி ஒழுக்கமற்றவளாக இருந்தால் பேசாமல் பொறுத்துக்கொள்ள வேண்டியதுதான்'' என்கிருர்கள்.

यथा हि कुरुते राजा प्रजा तमनुवर्तते ॥ VII. 43. 19.
एवं बहुविधा वाचो वदन्ति पुरवासिनः ।
नगरेषु च सर्वेषु राजन् जनपदेषु च ॥ VII. 43. 20.

''நகரத்து வீதிகளிலோ சுற்றுப்புறக் கிராமங்களிலோ சென்ருல் ஜனங்கள் இப்படித்தான் பேசிக்கொள்ளுகிருர்கள்.'' இத்தகைய செய்தி எட்டியதும் ராமருக்குத் தயக்கமுண்டாகிறது.

लङ्काद्वीपे महेन्द्रेण मम हस्ते निवेशिता ।
अन्तरात्मा च मे वेत्ति सीतां शुद्धां यशस्विनीम् ॥ VII. 45. 10.

"என்ன பிதற்றல் இது? எனக்குத்தான் முதலில் சிறிது சந்தேகம் உண்டாயிற்று. ஆயினும் சீதை உலகோர் முன்னிலேயில் அக்கினிப் பிரவேசம் செய்ததும் தேவதைகளே நேரில் வந்து அவள் தூய்மையை மெய்ப்பித்தார்களே. அவள் களங்கமற்றவள் என்று என் உள்ளம் கூறுகிறது. உலகில் நல்ல பெயர் என்றும் கெட்ட பெயர் என்றும் ஒன்று உண்டு" என்கிருர்.

पौरापवादः सुमहांस्तथा जनपदस्य च ।
अकीर्तिर्यस्य गीयेत लोके भूतस्य कस्यचित् ॥ VII. 45. 12.

இதை நம்புவது கடினமாக இருக்கிறது. 'சில பேர் சேர்ந்து ஒரு மனிதன் தவருக நடப்பதாக அவனேப்பற்றி அவதூறு செய்து விட்டால் நியாயமாகவோ அநியாயமாகவோ அத்தகைய மனிதனுக்குப் பரலோகத்திலும் நல்ல பெயர் இல்லாமற் போய் விடும்' என்று ராமர் நினேப்பதாகத் தோன்றுகிறது. விடாமல் சில பேர் ஒருவனேப்பற்றிப் பழித்துப் பேசிய வண்ணமாக இருந்தால் அதுவே அவனே அழிப்பதற்குப் போதும்.

पतत्येवाधमाँल्लोकान् यावच्छब्दः प्रकीर्त्यते ।
अकीर्तिर्निन्द्यते देवैः कीर्तिर्लोकेषु पूज्यते ॥ VII. 45. 13.

அந்தக் கெட்ட பெயர் இருக்கும் வரையில், இவ்வுலகில் நல்ல பெயரை இழந்தவன் மறு உலகிலும் நல்ல கதியை அடையமாட் டான். அங்கேயும் அவனேப் பழித்துப் பேசுவார்கள். கீர்த்தி வேண்டுமென்று எல்லாரும் பாடுபடுகிருர்கள்.

कीर्त्यर्थं तु समारम्भः सर्वेषां सुमहात्मनाम् ।
अप्यहं जीवितं जह्यां युष्मान् वा पुरुषर्षभाः ॥ VII. 45. 14.

தம் மூன்று சகோதரர்களேயுங்கூடப் புறக்கணித்து ராமர் இம்மாதிரி கூறுகிருர்: "என் வாழ்க்கையை முடித்துக்கொள் வேன். யுஷ்மாந் வா புருஷர்ஷபா: - உங்களேயும் கொல்ல வேண்டு மானுலும் கொன்றுவிடுவேன். அபவாதபயாத் பீத: - கெட்ட பெயரைப் பற்றி உள்ள பயத்தில் என்னேயே வேண்டுமானுலும் கொன்றுகொள்வேன் என்ருல், கிம் புநர் ஜநகாத்மஜாம்- சீதையைப் பற்றிக் கேட்பானேன்? என் பெயரைக் காப்பாற்ற உங்களேக் கொல்வேன். என்னேயும் கொன்றுகொள்வேன்" என்கிருர்.

சீதையைத் தியாகம் செய்வது சகோதரர்களேத் தியாகம் செய்வது போல அவ்வளவு பெரிதல்ல என்பது இதிலிருந்து தெரி கிறது. பழைய காலத்தில் மனேவி கணவனுடைய சொந்த உடைமை போன்றவள்; அவளே அவன் எது வேண்டுமாயினும் செய்யலாம் என்ற எண்ணம் இருந்தது. ராவணன் போன்றவனுல்

அவள் சீலத்துக்குப் பங்கம் ஏற்பட்டால், அதனுல் அவளுக்கு ஒன்றும் ஹானி இல்லை. அவள் பெயருக்குப் பதில் அவள் கணவன் பெயருக்குத்தான் மாசு உண்டாகும். அவனது பெயர், குலம் இவற்றின் பெருமைக்கு இழிவு ஏற்பட்டுவிடும். அதற்காக அவன் பழிவாங்க வேண்டும். இது பழங் காலத்து மனிதர்களின் கொள்கை. பொருமையினுல் தூண்டப்பட்டுப் பயங்கரமான குற்றங்களை மாந்தர் செய்ததாக வர்ணிக்கின்றன அந்தக் காலத்து வீரப் பிரதாபக் கதைகள். இதை நாம் நினைவில் கொள்ளவேண்டும். அந்தக் காலத்தில் ஒரு ஸ்திரீ சுதந்திரமாக இருந்தாள் என்பது இல்லை. சீதை விஷயமாக ராமர் நடந்துகொண்டதைப் பற்றி மற்ருெரு மகாகவி காளிதாஸர் கூறியதை இங்கு எடுத்துக் காட்டுகிறேன். அதனுல் நான் வால்மீகியைவிடக் காளிதாஸரின் வார்த்தைக்கு அதிக மதிப்புக் கொடுப்பதாக அர்த்தமில்லை. ஆயினும் பெரிய கவியாகிய காளிதாஸர் கூறுகிறபடி நாமும் நினைப்பது சௌகரியமேயாகும்.

निश्चित्य चानन्यनिवृत्ति वाच्यं त्यागेन पत्न्याः परिमार्ष्टुमैच्छत् ।

'தம் பெயருக்கு நேர்ந்த களங்கமானது மனைவியைத் துறப்பதனுல் அல்லாது வேறு எதனுலும் நீங்காது' என்று கண்டவுடன் தான் ராமர் சீதையைத் தியாகம் செய்து அந்தக் களங்கத்தை நீக்க விரும்பினுர் என்று கூறி, மேலும் காளிதாஸர் சொல்லுகிறுர்:—

अपि स्वदेहात् किमुतेन्द्रियार्थाद्यशोधनानां हि यशो गरीयः ॥

—ரகுவம்சம் 14. 35.

க்ஷத்திரியர்கள் மதிப்புணர்ச்சியை யாவற்றுக்கும் மேல் உயர்வாகக் கருதி நடப்பது போல மற்ற யாரும் நடக்க முடியாது. அவர்கள் வாழும் நிலையில் சாதாரண மனிதர்களால் ஒரு நிமிஷமும் உயிர்வாழ இயலாது. மதிப்புணர்ச்சிக்கு அவர்கள் அளித்திருக்கும் ஏற்றத்தைச் சாதாரண மனிதர்கள் அறிந்து போற்றுவதுகூட எளிதல்ல. அவர்களுக்குப் புகழ்தான் பெருஞ் செல்வம். உயிருக்கு மேல் அது பெரிது. அதை நிலைநாட்டிக்கொள்வதற்காக அவர்கள் எங்கு வேண்டுமானுலும் போய்ப் போர்புரியத் தயார். ஒரு பெரிய சேனைக்கு எதிராகத் தன் மதிப்பைக் காப்பதற்காகத் தனியாகவே ஒருவன் தைரியமாகப் போர் புரிவான். பெரிய வீரன் என்ற பெயரை நிலைநாட்டிக் கொள்வதற்காக எவ்வளவு கொடிய ஆபத்துக்களையும் எதிர்க்கத் துணிவார்கள் என்று ராஜபுத்திரர்களைப் பற்றிய கதைகளைப் படித்திருக்கிறோம் அல்லவா?

வீரமும் பராக்கிரமமுமே அனைத்துக்கும் மேற்பட்டவை என்ற கொள்கையுடன் வாழ்ந்து வரும் மனித வர்க்கங்கள் உலகில் இருப்பதை அறிவோம். யாவரையும்விட அதிகமாக மேற்கூறிய கொள்கையுடன் இருப்பவர் உலகில் ஜப்பானியர் என்று கூறலாம்.

ஜப்பானியச் சக்கரவர்த்தி மிகாடோவிடமுள்ள பக்தியே அதற்குக் காரணம். சண்டையில் தோல்வி ஏற்பட்டுவிட்டால் அந்தத் தளபதியோ அல்லது தோல்விக்குப் பயந்து ஓடிய படைவீரனே பெரிய ராஜத்துரோகம் செய்தவனுகக் கருதப்படுகிருன். ஜப்பான் நாட்டு அரசன் மிகாடோவை மக்கள் தெய்வமாகவே போற்று கிருர்கள். அவர்களின் நம்பிக்கை அப்படிப்பட்டது. ஆகவே ஆங்கில அமெரிக்க ஸோல்ஜர்கள், ''ஆபத்து வந்தால் நாம் ஓடி விடுவோம். ஆனல் இந்த ஜப்பானியர் பயங்கரமானவர்கள். அவர்களே ஓடச்செய்வது முடியாது. செத்தாலும் சாவார்களே தவிர ஒருகாலும் ஓடமாட்டார்கள்'' என்று ஜப்பானியர்பற்றிக் கூறுவார்கள். ருஷியாவுக்கும் ஜப்பானுக்கும் போர் நடந்த பொழுது யுத்தக் கப்பல்கள் போக முடியாதபடி, போர்ட் ஆர்தர் என்ற இடத்தை அடைத்துவைக்க வேண்டியதாயிற்று. இரண்டு பெரிய கப்பல்களே மூழ்க அடித்துத்தான் அந்தக் காரியத்தைச் செய்யும்படியாக இருந்தது. கப்பலுக்கு நூறு பேரை ஏற்றி அவர் களோடுதான் அந்தக் கப்பல்களே மூழ்கச்செய்வதும் சாத்திய மாயிற்று. கப்பலின் அதிகாரி இருநூறு பேரைக் கேட்டார். உடனே ஐயாயிரம் பேர் முன்வந்து தாங்கள் இறக்கச் சித்தமாக இருப்பதாகக் கூறினர் என்று கேட்டிருக்கிறேம் அல்லவா? ஜப்பானியரின் வீரம் அத்தகையது.

முன்காலத்தில் ராஜபுத்திரர்கள் இம்மாதிரி உயிரைத் திருண மாக மதிப்பதில் பெயர் பெற்றவர்களாக இருந்தனர். அவர் களுக்கு மதிப்புணர்ச்சிதான் பெரிது. அதற்காகத் தன் உயிரையே ஒரு மனிதன் கொடுக்கச் சித்தமாக இருப்பான் என்ருல் அவன் வேறு எதைப்பற்றிக் கவலேப்படுவான்? மனேவி கேவலம் போகத் திற்கென்று ஏற்பட்டவள். மனம் ஒரே வருத்தத்தில் ஆழ்ந்து கிடக்கும்பொழுது புத்தி ஒரே நிலேயில் இருப்பதில்லே. தெளிவாக யோசிக்கும் சக்தியும் குறைந்துபோகிறது. இம்மாதிரி ஒரு நிலேமை நமக்கு ஏற்படுவதாக வைத்துக்கொள்வோம். இந்த நிலேயில் எந்த மனேவியை நம் அன்பையெல்லாம் கொட்டிப் போற்றி மதித்து நம் உயிருக்கும் மேலாகக் கருதுகிருேமோ அந்த மனேவியே, எது உயர்வு என்று சீர்தூக்கிப் பார்க்கும் நெருக்கடியான சமயத்தில், மிகவும் தாழ்ந்த நிலேக்கு இறங்கிவிடுகிருள். அவள் நம் உடல் வேட்கைக்கு ஒரு கருவியாகப் பயன்படுவதைத் தவிர வேறு ஓர் உயர்வும் அவளுக்கு இல்லே.

சீதையைத் துறப்பதென்று ராமர் நிச்சயம் செய்கிருர். தம் மனச்சாட்சிக்கு விரோதமாக அவளேத் தியாகம் செய்வதென்று தீர்மானித்தது மட்டும் அல்ல; அதை ரகசியமாக ஒருவருமறியாமல் செய்தது அவருக்கே பெருங்குறையை உண்டாக்குகிறது. சீதையி னிடமும் அவர் அதைக் கூறவில்லே. கர்ப்பவதியாக இருந்த சீதை

வனத்திலுள்ள ரிஷிகள் ரிஷிபத்தினிகள் ஆகியவருடன் ஒரு நாள் தங்கிவிட்டு வர விரும்பியதனுல், அவளே அழைத்துப் போய் வனத்தில் விட்டு வரும்படி ராமர் லக்ஷ்மணனுக்கு உத்தர விடுகிருர். ரகசியமாக லக்ஷ்மணனிடம் அவர், ''அவள் விருப்பப் படி நடப்பது போல் வெளிப்படையாகக் கூறி, அங்கே சென்றதும் அவளேத் தனியே விட்டு வந்துவிடு'' என்கிருர். இங்கே ஒரு ரஸ மான விஷயத்தைக் கவனிக்க வேண்டும்:—

न चास्मिन् प्रतिवक्तव्यः सीतां प्रति कथंचन ॥ VII. 45. 19.

சகோதரர்களிடமும் மற்றுமுள்ளவர்களிடமும், ''என்னை ஆக்ஷேபித்து ஒன்றும் கூருதீர்கள். நான் நிச்சயம் செய்துவிட்டேன்'' என்கிருர். ''க்ருதபுத்திநா, நாத்ர கார்யா விசாரணு—இதுபற்றி யோசிக்க வேண்டாம்'' என்றெல்லாம் மேலும் மேலும் கூறுகிருர்.

अप्रीतिर्हि परा मह्यं त्वय्येतत् प्रतिवारिते । VII. 45. 20.

''இதை மறுத்து, இதை ஆக்ஷேபித்து, நீங்கள் ஏதேனும் கூறினுல் எனக்கு மிகுந்த அதிருப்தியை உண்டாக்குவீர்கள்.''

शापिता च मया यूयं भुजाभ्यां जीवितेन वा । VII. 45. 21

"என் உயிரின்மேல் ஆணே. என் கால்களின்மேல் ஆணேயிட்டுக் கூறுகிறேன். நீங்கள் ஒன்றும் ஆக்ஷேபம் செய்யாமல் நான் கூறியதைச் செய்ய வேண்டும்'' என்கிருர்.

'கால்கள்மீது ஆணேயிடுவது' கொஞ்சம் நூதனமானது. இரண்டு மூன்று இடங்களில் ராமாயணத்தில் இவ்வாறு குறிப்பிடப் பட்டிருக்கிறது. பெரியவன் சிறியவனே ஏதாவது செய்யச் சொல்லும்பொழுது இப்படிச் சொல்லுவதாக வருகிறது. தாம் கூறியபடி சிறியவன் செய்யமாட்டானே என்று அவருக்குச் சந்தேகம். கர தூஷணர்கள் பதினுலாயிரம் ராக்ஷஸர்களுடன் போருக்கு வந்தபொழுது ராமர் இவ்விதமே கூறுகிருர். சீதையை அழைத்துக்கொண்டு குகைக்குள் போய் இருக்கும்படி லக்ஷ்மண னிடம் சொன்னபொழுது, ''நானே அவர்கள் அனைவருடனும் போர் புரிகிறேன். என் கைகளினுலேயே அவர்களைக் கொல்ல வேண்டும் என்று பிரதிக்கினை செய்திருக்கிறேன். இந்தப் பெருமை யில் வேறு யாருக்கும் பங்கு அளிக்க எனக்கு இஷ்டமில்லை'' என்கிருர்.

तस्माद्गृहीत्वा वैदेहीं शरपाणिर्धनुर्धरः ।
गुहामाश्रय शैलस्य दुर्गां पादपसंकुलाम् ॥ III. 24. 12

"என் உத்தரவை நீ மீறலாகாது. நான் சொல்வதை நீ கேட்க வேண்டும். என் கால்கள் மீது ஆணேயிட்டுக் கூறுகிறேன்'' என்கிருர்.

शापितो मम पादाभ्यां गम्यतां वत्स मा चिरम् ॥ III. 24. 13.

வாலி சுக்கிரீவனிடம், "இந்தக் குகையின் வாசலில் நீ இரு. நான் உள்ளே போய், துந்துபியைக் கொன்றுவிட்டு வருகிறேன். நீ இங்கேயே இரு; நான் மட்டும் போய் வருகிறேன்" என்கிருன்.

इह त्वं तिष्ठ सुग्रीव बिलद्वारि समाहितः ।
यावदत्र प्रविश्याहं निहन्मि सहसा रिपुम् ॥ IV. 9. 13.

"நான் போய் என் சத்துருவைக் கொன்றுவிட்டு வரும்வரையில் நீ இங்கேயே இரு" என்று இவ்விதம் கால்கள் மீது ஆணையிட்டு, வாலி குகைக்குள் செல்லுகிருன்.

मया त्वेतद्वचः श्रुत्वा याचितः स परन्तपः ।
शापयित्वा च मां पद्भ्यां प्रविवेश बिलं महत् ॥ IV. 9. 14.

இம்மாதிரி ஆணையிட்டுச் சபதம் செய்வது கொஞ்சம் நூதனமானது என்றுதான் சொல்ல வேண்டும். சிறியவர்கள் பெரியவர்களின் கால்களைத் தொட்டு வணங்குவதனுல் அந்தக் கால்களைச் சிறியவர்கள் பக்தியுடன் வணங்குவதற்கு உரியவையாக வைத்து இவ்விதம் ஆணையிடும் வழக்கம் வந்திருக்க வேண்டும் என்று நினைக்கிறேன்.

மிகவும் வேகத்தோடு கூடிய மனித உணர்ச்சியைப்பற்றி இன்று குறிப்பிட்டேன். நம்மை மறக்கச் செய்து மிகவும் பதற்றத்தை உண்டாக்கி, மிருகங்கள் போல நடக்கச் செய்யும் உணர்ச்சிகளுள் மிகவும் கொடியது பொருமை. அதுவும் மனைவியின் ஒழுக்கத்தைப்பற்றி ஏதேனும் சந்தேகம் தோன்றிவிட்டால் அப்பொழுது உண்டாகும் பொருமையுணர்ச்சி, அனைத்திலும் பின்னும் அதிகக் கொடியதாகும். நற்பண்பை அறவே இழந்து, பழிக்குப் பழி வாங்க வேண்டுமென்ற எண்ணத்தையே அது மேலோங்கச் செய்யும். நற்குலத்தில் பிறந்து உண்மையிலேயே பெரியவனுகவும் தன் கௌரவத்தில் பற்றுள்ளவனுகவும் உள்ள ஒருவன், ரூபவதியான தன் மனைவியைப் பிறர் இச்சிக்கலாம் என்று சந்தேகித்துவிட்டால், அப்பொழுது ஏற்படும் இந்தப் பொருமையுணர்ச்சியைப் போலக் கேவலமும் குரூரமுமானது வேறு எதுவுமில்லை. மிகவும் உயர்ந்த இயல்பும், அந்தச் சமயத்தில் மிகவும் குரூரமும் ஆத்திரமும் கொண்ட செயலைச் செய்யத் துணிந்துவிடுகிறது. ஆகவே, இந்தப் பொருமையுணர்ச்சிக்கு வசமாகி ராமரும் சீதையைப் பரித்தியாகம் செய்ய நினைத்தார். "இனி நீ எனக்குத் தேவையில்லை. உனக்கு எது நேர்ந்தாலும் இனிமேல் எனக்குக் கவலை இல்லை. இந்தப் பரந்த உலகில் நீ எங்கு வேண்டுமானுலும் போகலாம்" என்கிருர்.

அவர் உண்மையாகவேதான் அப்படிப் பேசினர். மிகவும் உயர்ந்தவன், தன் பெயருக்குக் களங்கம் ஏற்படுவதைச் சகிக்காதவன், தன் சொந்தக் கௌரவத்தையே அனைத்திலும் உயர்வாக மதிப்பவன் - அப்படிப்பட்ட மனிதன்தான் மனைவிமீது சந்தேகம் தோன்றி, மனம் நிலைகுலைந்து, மிகக் கொடிய செயல்களைச் செய்ய அஞ்சாதவன்.

மகாகவிகள் இந்தப் பொருமைக் குணத்தை நன்கு ஆராய்ந்து அது எப்படி மனத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கெடுத்துத் தீய எண்ணங்களையும் தீய செயல்களையும் செய்யத் துணியும்படி ஆக்குகிறது என்று கண்டறிந்து கூறுகிருர்கள். மனித உள்ளத்தில் இந்தப் பொருமைக் குணம் வளருவது எங்கும் ஒரேமாதிரி இருப்பதுடன், பெரிய கவிகள் அதை எடுத்துக்காட்டிச் சில சமயம் ஒரே விதமாகவே வர்ணிக்கிருர்கள். தீராதி தீரனை மற்றொரு கதாநாயகன் எப்படி இந்த உணர்ச்சிவசப்பட்டான் என்பதைக் கூறுகிறேன். அவன் மேல்நாட்டு இலக்கியத்தைச் சேர்ந்தவனுனல் என்ன? பெருஞ்சிறப்பு வாய்ந்த இலக்கியங்கள் யாவும் பொதுவாக உலகம் முழுவதுக்குமே சொந்தமாகும். ஷேக்ஸ்பியர் என்ற மகாகவி இயற்றிய ஒதெல்லோ என்னும் நாடகத்தில், இந்தப் பொருமைக் குணத்தின் தீய வடிவத்தை அவர் அப்படியே சித்திரிக்கிருர். பெருந்தன்மையுள்ள ஒதெல்லோவின் உயர்குணத்தை இந்தப் பொருமைப் பேய் எப்படி மட்டமாக்கிப் பாழ்படுத்தியது! அவன் போர்க்களத்தில் பெரிய வீரன். கபடமற்றவன். ஐயாகோ என்பவன் அவனது உள்ளத்தைக் கெடுத்துச் சந்தேகப்பொறியை வைத்துப் பலவேறு தந்திரங்களினுல் அதை வளர்த்துப் பெரிய ஜ்வாலையாக்கவே, அது எல்லாரையுமே எரித்துவிடும் போல் ஆகிவிட்டது. பொருமைக் குணத்தைப் பற்றிக் கூறும்பொழுது அவன் சொல்லுகிருன்:—

Trifles light as air
Are to the jealous confirmations strong
As proofs of holy writ.
—Othello, Act III, Scene iii, 322-324.

வால்மீகி ராமாயணத்தில் இந்தப் பொருமைக் குணத்தின் வேகத்தைப்பற்றிப் படிக்கும்பொழுது, இவ்விதமே மற்றொரு பெரிய இலக்கியத்திலுள்ள உயர்ந்த பாத்திரமானது எப்படிப் பொருமைக்கு அடிமையாகித் தன் வசமிழந்தது என்று தெரிகிறது. ஒதெல்லோவுக்காவது சந்தேகப்படுவதற்கு ஒரு கைச் சவுக்கம் இருந்தது. அவன் ஏதோ பார்த்தான், கேட்டான் என்று இருந்தது. ராமருக்கோ ஒன்றுமில்லை. அவர் சொல்லக் கூடியதெல்லாம், "நீ மகா ரூபவதியாக இருக்கிருய். ராவணனே மகா துஷ்டன். நீ அவனது அதீனத்தில் இருக்கும்பொழுது எப்படித்

தவறு ஒன்றுமில்லாமலிருக்க முடியும்?'' என்பதே. நிச்சயமாகச் சொல்ல முடியாத—ஊகமாகச் சொல்லக் கூடிய—சந்தேகம்; அவ்வளவுதான். ஒதெல்லோ விஷயத்திலோ,

Dangerous conceits are, in their natures, poisons,
Which at the first are scarce found to distaste,
But with a little act upon the blood,
Burn like the mines of sulphur.

—Othello, III, iii, 326-329.

டெஸ்டிமோனாவைக் கழுத்தை நெரித்துக் கொன்றாயிற்று. எல்லாம் முடிந்து உண்மையும் வெளியான பிறகு, கடைசியாக, லடவிகோ என்பவன் ஒதெல்லோவை நோக்கி, ''இந்தக் காரியம் செய்த உன்னைப் பற்றி என்ன சொல்லுகிறது?'' என்று கேட்கிறான். ராமர் கூறுவதைப் போலவே அவனும் எவ்வளவு இயல்பாகவும் உண்மையாகவும் கூறுகிறான்! அவன் சொல்வதைக் கேளுங்கள்:—

Why, anything:
An honourable murderer, if you will;
For nought did I in hate, but all in honour.

—Othello, V, ii, 293-295.

''என் சொல்லுங்களேன். ஒரு நேர்மையான கொலைகாரன் என்று வேண்டுமானாலும் சொல்லுங்கள். நான் செய்தது ஆத்திரத்தினால் அல்ல, துவேஷத்தினால் அல்ல; மிகவும் நேர்மையானது'' என்கிறான். பிறகு கடைசியில் உலகோரிடமே விடைபெற்றுக் கொள்பவன் போல், பொறாமையினால் விளையும் பெருங்கேடுகளை எடுத்துக் காட்டுகிறான்:—

Speak of me as I am; nothing extenuate,
Nor set down aught in malice; then must you speak
Of one that lov'd not wisely but too well;
Of one not easily jealous, but, being wrought,
Perplex'd in the extreme; of one whose hand,
Like the base Indian, threw a pearl away
Richer than all his tribe; of one whose subdued eyes
Albeit unused to the melting mood,
Drop tears as fast as the Arabian trees
Their med'cinable gum.

—Othello, V, ii, 342-351.

பெரிய யுத்தவீரன் ஒதெல்லோ, தன்னைச் சுற்றிலும் மனிதர் கொலையுண்டு விழுவதைக் கண்டவன்; கண்டும் மனம் கலங்காதவன். ''கண்ணீர் என்பது என்ன என்பது எனக்குத் தெரியாது

நான் கண்ணீர் விட்டதே இல்லை'' என்கிறான். அப்படிப்பட்டவன் சொல்லுகிறான்:—

of one whose subdued eyes
Albeit unused to the melting mood,
Drop tears as fast as the Arabian trees
Their med'cinable gum.

மனித இயல்பு எத்தகையது என்பது இதிலிருந்து தெரிகிறது. பொறாமை எப்படி நம் நற்பண்பைக் கெடுத்து, இல்லாததை இருப்பதாக எண்ணும்படி நம் கண்ணைக் குருடாக்கி, நம்மை மிருகங்கள் போல நடக்கச் செய்கிறது என்பதைப் பார்த்தோம். டென்னிஸன் என்ற ஆங்கில மகாகவி ஓர் உயர்ந்த கதாநாயகனைப் படைத்திருக்கிறான். ஆர்தர் என்ற அரசன் பெரிய வீரன். நற்பெயரில் பெருமதிப்புள்ளவன். அனைவரிடத்திலும் அன்பு செலுத்துவதும், துன்பமுற்றவர்களின் துன்பத்தைத் துடைப்பதும், தவறு செய்தவர்களைப் பட்சபாதமின்றித் தண்டிப்பதுமான நற்பண்புகள் உள்ளவன். தன்னைப் போன்ற சிறந்த வீரர்களின் கூட்டத்தை உருவாக்கி, நாட்டினின்றும் அடக்கமில்லாத மிருகத்தன்மையை அறவே ஒழித்துப் பெரிய லட்சியங்களைக் கைக்கொள்ளும்படிச் செய்கிறான். ஜனங்கள் ராமரைப் போலவே அவனையும் தெய்வாம்சமாகவே போற்றிக் கொண்டாடுகிறார்கள்.

அவனுடைய மனைவி குனிவியர் என்பவளின் தவறான ஒழுக்கத்தினால் அவன் ஏற்படுத்திய திட்டங்கள் நாசமாகி, நாட்டுக்கே பெருங்கேடு உண்டாகிறது. தன் கணவனின் வீரர்களுள் மிகச் சிறப்பு வாய்ந்த லான்ஸ்லாட் என்பவனைக் காதலித்து, அந்த குனிவியர் என்பவள் தன் கற்புநெறியினின்றும் பிறழ்ந்துவிடுகிறாள். இதுவே காரணமாக, ஆர்தர் உருவாக்கிய வீரர்களின் கூட்டமே சிதைந்து போகவும், ஆர்தரின் வாழ்க்கையே அவமானத்தினால் குன்றி ஒடுங்கிப்போகும்படி ஆகிறது. தன்னால் கணவனுக்கு ஏற்பட்ட இழிவைக் கண்டதும் பச்சாத்தாபத்தினால் மனம் வருந்தி, குனிவியர் ஒரு கன்னிமாடத்தில் அடைக்கலம் புகுகிறாள். பெரும் போரிட்டு யுத்தகளத்தினின்றும் திரும்பிய ஆர்தர் தனக்கு மரணம் கிட்டியதை அறிந்ததும், தன் பேரன்புக்குப் பாத்திரமாக இருந்த மனைவியைக் கண்டு பேசாமல் இவ்வுலகை நீத்துச் செல்ல விரும்பவில்லை. வாழ்க்கையில் தான் சாதிக்க விரும்பிய பெருஞ்செயல்களை அழிவுபடுத்தியதுடன் தன் பெயருக்கும் மாசு உண்டாக்கிய மனைவியைப் பார்த்து விடைபெற்றுக் கொள்வதற்காக அவன் அவள் இருந்த கன்னிமாடத்திற்குச் செல்லுகிறான். இந்தக் கடைசி நிகழ்ச்சியில்தான் கவியின் முழுத் திறமையும் வெளியாகிறது.

அவளைக் கடுமையாக ஏசுவதற்குப் பதிலாக, ஆர்தர் அவள் செய்த தீங்கை எடுத்துக் கூறுகிறான். ராமரைப் போலவும் ஒதெல்

லோவைப் போலவும் அல்லாமல், அவளை மன்னிக்கவும் முயலு கிறான். பொறுமை அவனது உள்ளத்தில் கருவாகவே நின்று விட்டது. அதை அவன் அடக்கி வென்றுவிடுகிறான். இது மிகவும் அதிசயமானது அல்லவா? உலகில் சாதாரணமாக இம்மாதிரி நடப்பதில்லை. மனைவி ஒழுக்கம் தவறியவள் என்றால் கணவன் அவளை எப்படி மன்னிப்பான்? அவளது இழிவையே தனக்குப் பயன்படுத்திக்கொள்ளும்படி அவ்வளவு மானமற்றவனாக இருந் தால்தான் அம்மாதிரி நடப்பான். அத்தகைய மனிதர்களும் உலகில் இருக்கிறார்கள். ஆனால் ரோஷமுள்ளவனுக்கு அதில் வெறுப்புத்தான் உண்டாகும். ஆர்தர் தெய்வாம்சம் உள்ளவன் என்று எல்லாரும் கருதியபடி, அவன் சாதாரண மனிதன் பேச இயலாத விதம் மனைவியிடம் பேசுகிறான். எல்லாரும் அந்த இடத் தைப் படித்திருப்பீர்கள். ஆயினும் ஒரு தரம் படித்துவிட்டால் அப்புறம் படிக்க வேண்டியதில்லை என்று இருக்காது. உயர்ந்த கருத்துக்கள் மனத்தை உருக்கும் அழகான மொழியில் எழுதப் பெற்றிருப்பதைப் படிப்பதில் எப்படிச் சலிப்பு உண்டாகும்? உங்களுக்கு அந்த வரிகள் மனப்பாடமாகியிருந்தால் மிகவும் நல்ல தாயிற்று. அதைப் படிக்கப் படிக்க நம் மனம் எவ்வாறு பெருமிதம் அடைகிறது! அதைப் படிக்கிறேன், கேளுங்கள். குனிவியர் மன்னிப்பை வேண்டி, ஆர்தரின் காலடியில் விழுந்து கிடக்கிறாள்.

'For think not, tho' thou wouldst not love thy lord,
Thy lord has wholly lost his love for thee.
I am not made of so slight elements.
Yet must I have thee, woman, to thy shame.
I hold that man the worst of public foes
Who either for his own or children's sake,
To save his blood from scandal, lets the wife
Whom he knows false, abide and rule the house:
For being thro' his cowardice allow'd
Her station, taken everywhere for pure,
She like a new disease, unknown to men,
Creeps, no precaution used, among the crowd,
Makes wicked lightnings of her eyes, and saps
The fealty of our friends, and stirs the pulse
With devil's leaps, and poisons half the young.
Worst of the worst were that man he that reigns!
Better the king's waste hearth and aching heart
Than thou reseated in thy place of light,
The mockery of my people, and their bane.'

He paused, and in the pause she crept an inch
Nearer, and laid her hands about his feet.
Far off a solitary trumpet blew.
Then waiting by the doors the warhorse neigh'd
As at a friend's voice, and he spake again:
'Yet think not that I urge thy crimes,
I did not come to curse thee, Guinevere,
I, whose vast pity almost makes me die
To see thee, laying there thy golden head,
My pride in happier summers, at my feet.
The wrath which forced my thoughts on that fierce law,
The doom of treason and the flaming death,
(When first I learnt thee hidden here) is past.
The pang—which while I weigh'd thy heart with one
Too wholly true to dream untruth in thee,
Made my tears burn—is also past—in part.
And all is past the sin is sinn'd, and I,
Lo! I forgive thee, as Eternal God.
Forgives: do thou for thine own soul the rest.
But how to take last leave of all I loved?
O golden hair, with which I used to play
Not knowing! O imperial-moulded form,
And beauty such as never woman wore,
Until it came a kingdom's curse with thee—
I cannot touch thy lips, they are not mine,
But Lancelot's: nay, they never were the king's.
I cannot take thy hand; that too is flesh,
And in the flesh thou hast sinn'd; and mine own flesh,
Here looking down on thine polluted cries
"I loathe thee:" yet not less, O Guinevere,
For I was ever virgin save for thee.'

ராமரைப் போலவே ஆர்தரும் மனைவியைத் தவிர வேறு ஸ்திரீயை அறியாதவர்.

I love thee still.
Let no man dream but that I love thee still.
Perchance, and so thou purity thy soul,
And so thou lean on our fair Father Christ,
Hereafter in that world where all are pure
We two may meet before high God, and thou
Wilt spring to me, and claim me thine, and know

I am thine husband—not a smaller soul,
Nor Lancelot, nor another.'

—Guinevere, 504-563.

பெருங் குற்றம் செய்து பெருங் கேட்டை விளைவித்த ஒரு பெண்ணை மன்னிப்பது சாதாரண மனிதனின் செய்கையல்ல. ராமாயணத்திலும் இம்மாதிரியான ஒரு கதை இருக்கிறது. அகல்யை வால்மீகியின் சொற்படி பெரிய தவறு இழைத்தவள். பர்த்தாவான கௌதமரின் வாழ்வையும் பாழ்பண்ணியவள். ஆயினும் கௌதமர் என்ன செய்கிறார்? ஆயிரம் வருஷங்கள் பிரிந்திருக்கிறார்கள். ராம லக்ஷ்மணர்கள் அந்த ஆசிரமத்துக்கு வந்து ராமர்பாதம் பட்டதும் அவள் பரிசுத்தமடைகிறாள். கௌதமரும் அவளை முன்போலவே தம் அன்பு மனைவியாக ஏற்றுக்கொள்ளுகிறார். கள்ளங்கபடமற்ற எளிய வாழ்வு நடத்திய பழங்காலத்தில் அவ்வளவு பெருந்தன்மை மனிதர்களுக்கு இருந்தது! பெருங்குற்றம் தான் எனினும், குற்றமில்லாதவர் யார்? தவறு செய்யாமல் யார் இருக்க முடியும்? தவறு மனிதனுக்குச் சகஜம். மன்னிப்பது தெய்விகமானது. மன்னிக்கும் மனப்பான்மை மிகவும் உத்தம குணத்தைச் சேர்ந்தது. கவிதையுலகில் மன்னிப்பு மிகவும் போற்றப் பெறுகிறது. மனைவியின் துரோகத்தினால் உள்ளம் நொந்து வருந்திய பொழுது அகல்யையை மன்னித்த கௌதமரையும், 'மறு உலகில் தூய்மையடையட்டும்' என்று கருதி, குனிவியரை மனமார மன்னித்த ஆர்தரையும் இந்த க்ஷமை - ஈவிரக்கம் - என்ற பெருங் குணத்துக்கு உதாரணமாகக் கூறலாம்.

நமக்கு என்றென்றும் பெரிய படிப்பினைகளாக அமைந்திருக்கின்றன இந்தச் சிறப்பு வாய்ந்த கதைகள். பொறாமை மனிதனுக்குச் சகஜமான குணம். அது சாதாரணமாக எல்லாரிடத்திலும் காண்கிறது என்பதனால் அது ஒரு நல்ல குணம் என்று நான் கூறவில்லை. அது மனிதனுக்கு இயல்பாக இருக்கும் உணர்ச்சி; பெரிய குற்றம் செய்வதற்கு ஹேதுவாக உள்ளது. அதை எல்லை மீறாமல் அடக்கி வைக்க வேண்டும். தவறு செய்தான பின்பும் அதை மன்னிப்பதற்கு உரிய காலம் வரும். செய்த தவற்றுக்கு வருந்திப் பிறகு தூய வாழ்க்கையை மேற்கொண்டால் அதற்கு மன்னிப்புக் கிடைக்கும் என்கிறான் ஆர்தர். மன்னிக்கும் குணம் மனிதனுக்கு இருப்பினும் அது தெய்விகமானது. பொறாமைக்கு வசமாகிப் பிறரைத் தண்டிக்கும்பொழுது நாம் வெறும் மனிதர்களாகவே இருக்கிறோம். மேற்கூறிய பெரிய உதாரண புருஷர்களைப் பின்பற்றி, நமக்குத் தவறு செய்தவர்களை மன்னித்து விட்டால், அந்த நிமிஷத்தில் நாம் மனிதர்கள் அல்ல; உயர்ந்த தெய்விக நிலையை எய்துகிறோம்.

## 12

### பரதனிடம் ஒரு குறை

ராமரைப்பற்றி வெகுவாய்ப் பேசிவிட்டேன். இனி அவரை விட்டு, ராமாயணத்திலுள்ள வேறு பாத்திரங்களை எடுத்துக் கொள்வோம். ஆயினும் மற்றவர்களைப்பற்றிப் பேசும்பொழுது அவரைப்பற்றியும் அடிக்கடி சொல்லும்படியாக இருக்கும். ராமாயணத்தில் பலவேறு ஆண் பெண் கதா பாத்திரங்கள் இருக்கின்றன. ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு பாத்திரத்தில் ஈடுபாடு அதிகமாக இருக்கும். அதையே வாழ்க்கையில் சிறந்த லட்சியமாக அவர்கள் கருதுவார்கள். அநேக விதமான கதா பாத்திரங்கள் இருப்பதனால், ஒருவருக்கு உகந்ததாகப் படுவது மற்றொருவருக்குப் படாமலிருப்பதில் ஆச்சரியமில்லை. வாழ்க்கையில் நாம் மேற்கொண்டிருக்கும் லட்சியங்களைப் போலவேதான் கதைகளிலும் நாம் தேடுவோம். நம் படிப்பு, பழக்க வழக்கங்கள், நமது சுபாவம், குணம் இவற்றுக்கு ஏற்றாற் போலத்தான் கதைகளில் நாம் போற்றும் பாத்திரங்களும் காணப்படும். ராமாயணத்தில் அனைவருக்கும் மேல் சிறந்தவனாகச் சிலர் பரதனை வர்ணிப்பார்கள். சிலர் லக்ஷ்மணனை உயர்ந்தவனாகப் போற்றுவார்கள். அனுமாரிடமே ஈடுபட்டவர்கள் சிலர். பக்தர்களில் சிறந்தவனாக விபீஷணனைக் கூறுகிறவர்கள் உண்டு. லக்ஷ்மணனுக்குச் சமமாக—லக்ஷ்மணனுக்கும் மேலாகவே—சிலர் அவனைப் போற்றுவதை அறிந்திருக்கிறோம். ஸ்ரீராமரைத் தவிர வேறு யாரையும் அவ்வளவு உயர்வாகக் கருத என் மனம் இடம் கொடுப்பதில்லை. மற்றவர்கள் ஒவ்வொரு விதத்தில் மிகச் சிறந்தவர்கள்தாம். ஒவ்வோர் உயர்ந்த குணத்திற்கு ஒவ்வொருவர் உதாரண புருஷர்களாக விளங்குகிறார்கள். ராமரைத் தவிர ஒருவர் மற்றவரைவிட அதிகம் என் மதிப்புக்குப் பாத்திரமாக உள்ளவர் என்று சொல்ல முடியாது. அவர்கள் யாவரையும் ஒரே விதமான பக்தியுடன் நான் படித்துப் போற்றுகிறேன். தம் பேச்சிலிருந்தும் செயல்களிலிருந்தும் அவர்கள் எவ்விதம் தோற்றம் அளிக்கிறார்களோ, வால்மீகி அவர்களை எவ்விதம் சித்திரிக்கிறாரோ, அவ்விதமே நான் அவர்களை அறிய விரும்புகிறேன்.

ராமாயணத்தில் மூன்று பெரிய ராஜ்யங்கள் வருகின்றன. அயோத்தி, கிஷ்கிந்தை, இலங்கை என்ற மூன்று ராஜ்யங்களிலும் அரசபதவி மாறுகிறது. ஒவ்வொன்றிலும் மூத்தவன் இழந்த ராஜ்யத்தை இளையவன் கைப்பற்றுகிறான். இது ஒரு விந்தை அல்லவா? அயோத்தியில் மூத்தவன் தன் தவற்றினால் அரசுரிமையை இழக்கவில்லை; சந்தோஷமாகவே அதைத் தம்பிக்கு அளிக்கிறான். மற்ற இரண்டிலும் பெரிய சச்சரவு ஏற்பட்டு, மூத்தவன் தன் உயிரையே இழக்க நேருகிறது. இரண்டிலும் தம்பியே அண்ணன் இறப்பதைக் கோருகிறான்.

அயோத்தியைப்பற்றிப் படிக்கும்பொழுது மற்றொரு பெரிய விஷயம் புலனாகிறது: ராமர் பரதனுக்கு ராஜ்யத்தைச் சந்தோஷமாக அளித்தார் என்பது மட்டுமில்லை; பரதனும் அதே விதமாகவே தன்னலம் சிறிதுமின்றி, ராமர் மட்டும் ஏற்றுக்கொள்வதாக இருந்தால், ராஜ்யத்தை அவருக்கே மீண்டும் அளித்திருப்பான். இப்படிச் சகோதரர் இருவர், ஒரு பெரிய ராஜ்யத்தை ஒருவர் மற்றொருவருக்கு அளிக்க நினைப்பது கொஞ்சம் அதிசயமானது அல்லவா? குழந்தைகள் அழுகல் பூசனிக்காயை 'எனக்கு வேண்டாம், எனக்கு வேண்டாம்' என்று ஒருவர் மற்றொருவரிடம் தள்ளுவது போல் இருக்கிறது. ஆனால் பெரிய ராஜ்யம் அழுகல் பூசனிக்காய் ஆகுமா? தான் ஏற்றுக்கொள்வது சரியல்ல என்று கருதி, அதை மற்றொருவருக்கு அளிப்பதுதான் உசிதம் என்று கருதியதே அதற்குக் காரணம். இதுதான் மற்ற இரண்டைக் காட்டிலும் வித்தியாசமாக உள்ளது. ஆயினும் சுக்கிரீவனோ விபீஷணனோ பேராசை பிடித்தவன், கெட்ட எண்ணமுள்ளவன் என்று நினைத்துவிடக் கூடாது. அவ்விருவரும் மிகவும் நல்லவர்களே. ஆயினும் தமையனிடமிருந்து ராஜ்யத்தைப் பெற விரும்பியவர்கள். தமையன் பெரிய பாவி; சரியான முறையில் அவன் ராஜ்ய பரிபாலனம் செய்யவில்லை; தன் ஆளுகையில் ராஜ்யம் சீர்திருத்தம் அடையும் என்று இவர்கள் நம்பியவர்கள். இவர்கள் ராஜ்யத்தை விரும்பியதும், அதற்காக அண்ணன்மார்களின் மரணத்தைக் கோரியதும் உண்மையே.

சுக்கிரீவனைப்பற்றிச் சில சுலோகங்கள் இருக்கின்றன. ஆனால் சமீபத்தில்தான் அவைபற்றிக் கூறியிருப்பதனால், இப்பொழுது பின்னும் கூறி உங்களைக் கஷ்டப்படுத்துவதாக இல்லை. ராமர் எவ்வளவு சீக்கிரம் வாலியைக் கொன்றாலும் நல்லது; தான் இழந்த மனைவியையும் ராஜ்யத்தையும் அடைந்துவிடலாம் என்று சுக்கிரீவன் விரும்பியது உங்களுக்குத் தெரியும் அல்லவா? விபீஷணன் ராவணனை விட்டு ராமரைச் சரணமாக அடைந்தபொழுது, ராவணன் இறந்தவுடன் இலங்கைக்கு அரசனாக விரும்புகிறான் என்று சுக்கிரீவன் முதலியவர்கள் சரியாக ஊகிக்கின்றனர்.

அதில் ஒரு சந்தேகமுமில்லை. ராமரே, "ராஜ்யகாங்க்ஷீ ச ராக்ஷஸ:— விபிஷணன் ராஜ்யத்தை அடைய விரும்பித்தான் இங்கு வந்திருக்கிறான்" என்கிறார். யுத்தம் ஆரம்பித்து ராமரின் பக்கம் வெற்றி பெறுவது சந்தேகத்தில் இருக்கும்பொழுது, லக்ஷ்மணன் சக்தியாயுதத்தினால் அடிபட்டுப் பிழைப்பது அரிது என்று ஆகிவிட்டால் தாமும் உயிரை விட்டுவிடுவதாக ராமர் கூறுகிறார். அந்த எண்ணத்துடன் எல்லாரிடமும் விடைபெற்றுக்கொள்ளும்பொழுது ஒரே ஓர் எண்ணம் அவர் மனத்தைத் துன்புறுத்துகிறது. விபிஷணன் அவரைச் சரணடைந்தபொழுது அவனை உண்மையில் இலங்கைக்கு அரசனாவதற்கு முன்பே அபிஷேகம் செய்விக்கிறார். யுத்தத்தில் தோல்வி ஏற்பட்டால் பிறகு அவனுக்கு வாஸ்தவமான அபிஷேகம் எப்படி நடக்கும்?

तच्च मिथ्याप्रलप्तं मां प्रधक्ष्यति न संशयः ।

"விபீஷணனுக்குக் கொடுத்த உறுதிமொழியை நிறைவேற்ற முடியாதே என்பதுதான் என் கவலை. அவனை இலங்கையில் பட்டாபிஷேகம் செய்துவைக்க முடியாமற் போயிற்றே என்றுதான் வருந்துகிறேன்" என்கிறார்.

यन्मया न कृतो राजा राक्षसानां विभीषणः ॥ VI. 49. 22.

விபிஷணனே, 'இனி ஒன்றும் பிரயோஜனம் இல்லை' என்று கண்டதும், தன் அதிருஷ்டத்தைக் குறித்து வருந்துகிறான். "ஜீவந் அத்ய விபந்நோஸ்மி — உயிருடனிருந்தும் திராத் துன்பத்தை அடைந்துவிட்டேன். இனி அரசனாகும் நம்பிக்கைக்கு இடம் எங்கே?" என்கிறான்.

प्राप्तप्रतिज्ञश्च रिपुः सकामो रावणः कृतः ॥ VI. 50. 19.

"ராவணனுடைய ஆசைகள் யாவும் அல்லவா ஒன்றுவிடாமல் நிறைவேறுகின்றன?" என்று புலம்புகிறான்.

யுத்தகாண்டத்தில், இவ் விஷயமாக ஒரு நல்ல இடம் வருகிறது. ராமருக்குப் பிரதிநிதியாகப் பரதன் அயோத்தி ராஜ்யத்தை ஏற்று, அவருடைய பாதுகைகளையே அவருக்குப் பதிலாகச் சிம்மாசனத்தில் இருத்திப் பதினான்கு வருஷம் ராஜ்யபரிபாலனம் செய்ததை அறிவோம். தன்னிடம் ஒப்படைக்கப்பட்டது ராஜ்யம்; அதைச் சர்வ ஜாக்கிரதையாகப் பாதுகாக்க வேண்டும் என்று கருதுகிறான் பரதன். பதினான்கு வருஷம் முடிந்து ராமர் அயோத்திக்குத் திரும்பி வந்தபொழுது, பரதன் ராஜ்யத்தைச் சரியாகக் காத்துத் திரும்ப அளிக்கும் முயற்சியில் வெற்றி பெற்றதை மகிழ்ச்சியுடன் தெரிவித்து அவரை வரவேற்கிறான். ராமரை முதல் முதலில் அவன் கேட்டுக்கொண்டது, பாதுகைகளை மீண்டும் அவர்

தம் கால்களில் அணிந்துகொள்ள வேண்டும் என்பதே. தானே அவற்றை அவர் கால்களில் அணிவிக்கிறான்.

पादुके ते तु रामस्य गृहीत्वा भरतः स्वयम् ।
चरणाभ्यां नरेन्द्रस्य योजयामास धर्मवित् ॥ VI. 130. 52. 53.

''என்னிடம் அடைக்கலமாக அளித்த பொருளை நான் தங்களிடம் மீண்டும் அப்படியே அளிக்கிறேன்'' என்கிறான்.

अब्रवीच्च तदा रामं भरतः स कृताञ्जलिः ॥
एतत् ते रक्षितं राजन् राज्यं निर्यातितं मया । VI. 130. 53, 54.

''என் ஜன்மம் ஸபலமாகிவிட்டது. என் ஆசை நிறைவேறிவிட்டது.''

अद्य जन्म कृतार्थं मे संवृत्तश्च मनोरथः ॥ VI. 130.54.

''பதினான்கு ஆண்டுகளுக்கு முன்பே தங்களை அயோத்திக்கு அரசராக்க முயன்றேன். நீங்கள் வந்து அதை ஏற்றுக்கொள்ள மறுத்தீர்கள். அந்தக் காலம் முடிந்து தாங்கள் திரும்பி வந்தீர்கள். அந்த ஆனந்தத்தை அநுபவிக்க நான் தெய்வாதீனமாக உயிருடன் இருக்கிறேன்.''

यस्त्वां पश्यामि राजानमयोध्यां पुनरागतम् । VI. 130. 55.

"பொக்கிஷத்தை வந்து பாருங்கள். நெற்களத்தையும் ஆயுதசாலையையும் பார்வையிட வேண்டும்.''

अवेक्षतां भवान् कोशं कोष्ठागारं पुरं बलम् । VI. 130. 55.

''தங்கள் பாதுகைகளின் மகிமையினால் நான் அவற்றையெல்லாம் பத்து மடங்கு அதிகமாகப் பெருக்கியிருக்கிறேன்'' என்கிறான்.

भवतस्तेजसा सर्वं कृतं दशगुणं मया । VI. 130. 56.

பிறகுதான் ஓர் அதிசய நிகழ்ச்சி நடைபெறுகிறது. சுக்ரீவன், விபீஷணன், இன்னும் முக்கியமான வானரவீரர்கள் யாவரும் சகோதரர்களிடையே நிகழும் இந்தச் சம்பாஷணையை வியப்புடன் கேட்டுக்கொண்டு நிற்கின்றனர். பதினான்கு வருஷம் காட்டில் இருந்து, இழந்த மனைவியையும் தமது மதிப்பையும் திரும்பப்பெற்று ராஜ்யத்தை ஏற்றுக்கொள்ளத் தமையன் வருவதும், அதைப் பன் மடங்காக விருத்தியாக்கி மகிழ்ச்சி நிறைந்த உள்ளத்துடன் தம்பி திருப்பி அளிப்பதுமான நிகழ்ச்சி அவர்களை வியப்பில் ஆழ்த்துவதுடன், அவர்களின் மனத்தையும் உருக்குகிறது. அதைக் காண எல்லாரும் கண்ணீர் சொரிந்தனர் என்றே வால்மீகி கூறுகிறார்.

तथा ब्रुवाणं भरतं दृष्ट्वा तं भ्रातृवत्सलम् ॥
मुमुचुर्वानरा बाष्पं राक्षसश्च विभीषणः । VI. 130. 56, 57.

எல்லாரும் அழுதனர் என்றாலும், விபீஷணன், சுக்கிரீவன் இவர்களின் உள்ளம் எப்படி இருந்ததென்று அறிய எனக்கு ஆவல் உண்டாகிறது. அவ்விருவரும் தங்கள் தமையனைக் கண்டு எவ்வளவு பயந்தார்கள்; எப்படி வெறுத்தார்கள்; அவன் ஒழிய வேண்டுமென்று எவ்வளவு பிரார்த்தித்தார்கள்; எவ்வளவு உபாயங்களெல்லாம் செய்தார்கள்; அவன் இறந்தபிறகு எவ்வளவு களிப்புடன் பட்டாபிஷேகம் செய்துகொண்டார்கள்! அதையெல்லாம் இப்பொழுதுள்ள நிகழ்ச்சியுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் பொழுது அவர்கள் கண்ணீர் பெருக்கியதில் ஆச்சரியமென்ன? அவர்களால் இத்தகைய உணர்ச்சியைக் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியாது. ராமருக்கும் பரதனுக்கும் உள்ள அன்பும் மதிப்பும் அவர்களுக்குப் பேரதிசயமாகத்தான் தோன்றியிருக்கும்.

இப்பொழுது பரதனுடைய குணத்தைப் பற்றிக் கொஞ்சம் விஸ்தாரமாக ஆராயலாம் என்று நினைக்கிறேன். பிறகு விபீஷணனையும் சுக்கிரீவனையும் பார்ப்போம். இந்த மூவரிலும் பரதன் ஒரு தனிப் பீடத்தில் நிற்கிறான். அவனுடைய பேச்சையும் செயலையும் பார்க்கும்பொழுது, அவன் நிரம்பத் தீர்மானமும் பிடிவாதமும் உள்ளவன் என்று தெரிகிறது. ராமனுக்கு எதிராக நின்று விடாப் பிடியாக வாதாடியதிலிருந்து அந்தத் தீர்மானமும் பிடிவாதமும் நிதரிசனமாக விளங்குகின்றன. ராமர் ஒருவர்தாம் தீர்மானத்தில் அவனை மிஞ்சக் கூடியவர். அவருக்குத்தான் அவனும் சிறிது தாழ்ந்து கொடுப்பவன். மற்ற எவருக்கும் அவன் அசைந்து கொடுக்க மாட்டான். அவன் பேச்சு அத்தனையும் தெளிவும் வேகமும் அழுத்தமும் நிரம்பியவை. தயக்கமோ சந்தேகமோ அணுவளவும் அவனிடம் கிடையாது. மாமனுடனும் பாட்டனுருடனும் அநேக வருஷம் இருந்து சலுகை அடைந்ததனால் ராமரைத் தவிர வேறு யாரிடமும் அவனுக்குப் பயமில்லை என்று தோன்றுகிறது. அவன் எதற்காக ஒருவரிடம் பயப்பட வேண்டும்? அவனைக் கட்டிலடங்காத இளங்காளையாகவே வர்ணிக்கலாம்.

இத்தகைய சந்தர்ப்பத்தில் லக்ஷ்மணன் எப்படி நடந்திருப்பான் என்று ஆலோசித்துப் பார்ப்பது ரஸமாக இருக்கும். அவ்விருவருக்குமிடையேதான் என்ன வேற்றுமை! இருவரும் பெருந்தன்மையுள்ளவர்கள்; தன்னலமற்றவர்கள்; இருப்பினும் வெவ்வேறாகவே தோன்றுகிறார்கள். "இதைச் செய்" என்று ராமர் சொல்லிவிட்டால் லக்ஷ்மணன் உடனே அவருக்குக் கீழ்ப்படிந்துவிடுவான். ராமர் சொல்வதோ செய்வதோ சரியில்லை என்று தோன்றி ஏதாவது சொல்ல நினைத்தால், ராமர் கையை அசைத்தால் போதும்; அவனது தடையெல்லாம் பறந்தோடிவிடும். ராமருக்காக லக்ஷ்மணன் தன்னையே துறந்துவிடத் தயாராக இருப்பான். அவர் இட்ட பணிகளைச் செய்யும் கேவலம் ஒரு கருவியாகவே

தன்னைக் கருதுவான். ஆனால் அது உயிருள்ள ஓர் கருவி. சில சமயம் அதற்கு அபிப்பிராயங்கள் உண்டு; அவ்வளவுதான்.

பரதன் முற்றும் வேறு விதமானவன். ராமருக்கு மாறாக அவன் நினைத்தால், "நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன்; எனக்கு அநுமதி கொடுங்கள்" என்பான். மிகவும் பணிவாகத் தான் பேசுவான்; என்றாலும் தன் மனத்தில் இருப்பதைத் தயக்க மில்லாமல் கூறுவான். அவனுடைய இயல்பு தனித்தன்மையோடு கூடியது. அதற்கேற்ப அவன் நடக்கும்பொழுது அவனிடம் அனை வருக்கும் ஒரு பெருமதிப்பு உண்டாகும். எவ்வளவு பெருந் தன்மையுடனும் உதார குணத்துடனும் அவன் ராமரிடம் நடந்து கொண்டான்! அவனது தீர்மானமும், தமையனைத் தன் வழிக்குக் கொண்டு வருவதற்கு அவன் காட்டிய சமயோசித புத்தி யுக்தி களும் நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றன அல்லவா? ஆனால் லக்ஷ்மணனிடம் நமக்கு ஏற்படும் அன்பு பரதனிடம் ஏற்படுமா என்று சந்தேகம் உண்டாகிறது. லக்ஷ்மணனிடம் நம் உள்ளம் முழுவதையும் பறிகொடுப்போம். ஆனால் பரதனிடம் நமக்கு அன்பைக்காட்டிலும் மரியாதையே அதிகம் தோன்றும். "நீ மிகவும் பெரியவன்; மிகவும் உயர்ந்தவன்" என்று வணக்கத்தோடு அவனை நோக்கிக் கூறுவோம். மரியாதை, வியப்புப் போன்ற உணர்ச்சிகள் பரதனிடம் எனக்கு ஏற்படுகின்றன. லக்ஷ்மணனோ என் அன்பு முழுவதையும் கவர்ந்துவிடுகிறான். உங்களுக்கும் அதே விதமான உணர்ச்சிகள்தாம் இருக்கின்றனவா? எனக்குத் தெரியவில்லை. அதற்கு என்ன காரணம் என்று பார்ப்போம். தசரதருடைய அபரக் கிரியைகள் முடிந்தபிறகு, வஸிஷ்டர் பரதனை முடி சூட்டிக்கொள்ளும்படிக் கூறியபொழுது, "இல்லை, நான் முடிசூட்டிக்கொள்ளப் போவதில்லை" என்கிறான்.

विललाप सभामध्ये जगर्हे च पुरोहितम् । II. 82. 10.

சபையோர் முன்னிலையில் அவன் 'ஓ'வென்று அழுது வஸிஷ் டரையும் கண்டிக்கிறான். "உங்களைப் போன்ற சகலமும் தெரிந்த ஒருவர், வயது சென்றவர், இக்ஷ்வாகு வம்சத்தின் சம்பிரதாயப் படி ஜேஷ்டபுத்திரனுக்கே உரியதான ராஜ்யத்தை இளையவனான என்னை ஏற்றுக்கொள்ளும்படிக் கூறுவது மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது. நீங்கள் எப்படி இவ்விதம் பேசுகிறீர்கள்? நான் ஏற்றுக் கொள்ள முடியாது. ராஜ்யத்தை ராமருக்கே அளிக்கப் போகிறேன்" என்கிறான்.

பரதனைப் போன்ற இளைஞன் சபையோர் முன்னிலையில் வஸிஷ்டரைப் போன்ற ஒரு பெரியவரைக் கண்டிப்பதற்கு எவ் வளவு தைரியம் தன்னம்பிகை இருக்க வேண்டும்! ஆனால் இந்த ஒரு விஷயம் தவிர மற்றவற்றில் அவன் நிரம்பப் பணிவோடு இருக்

கிருன். கௌசல்யையை அவன் காணச் சென்றபொழுது, கைகேயியின் செயலுக்கு அவள் புதல்வனும் உடந்தையாகத்தான் இருப்பான் என்று அவள் சகஜமாகக் கருதி அவனைக் கண்டதும் படபடப்போடு பேசுகிருள்.

इदं ते राज्यकामस्य राज्यं प्राप्तमकण्टकम् । II. 75. 11.

எந்தச் சொல் பரதனுடைய உள்ளத்தைக் கூரிய அம்பு போல் தைக்குமோ அந்தச் சொல்லேயே அவள் உபயோகிக்கிருள். பரதனுக்கு ராஜ்யத்தில் ஆசை இல்லை. தாய் தவறு செய்துவிட்டாள் என்று கூறி அவன் அதைத் திருப்பிக் கொடுக்கவே விரும்புகிருன். ஆனல் கௌசல்யை, "ராஜ்யம் உனக்கு வேண்டுமென்று நீ விரும்புகிருய் என்று தெரிகிறது" என்கிருள்.

विव्यथे भरतस्तीव्रं व्रणे तुद्येव सूचिना ॥ II. 75. 17.

அந்த வார்த்தை அம்பு போல் பரதனுடைய உள்ளத்தைத் துளைக்கிறது. கௌசல்யை மேலும் கடுமையாகப் பேசுகிருள். ராமனுக்கு இல்லாமல் பரதனுக்குத்தான் ராஜ்யத்தைக் கொடுக்க வேண்டும் என்று நிர்மானித்தபொழுது, துக்கத்தில் தசரதர் என்ன என்னவோ கூறுகிருர் அல்லவா? அவற்றில் ஒன்று, "தன் பொருட்டுத் தாய் செய்த பிழையை ஒப்புக்கொண்டு பரதன் ராஜ்யத்தை ஏற்றுக்கொள்ள விரும்பினுல் நான் அவனைத் தியாகம் செய்துவிடுவேன். நான் இறந்தபிறகு அவன் எனக்குக் கிருத்தியங்கள் செய்ய வேண்டியதில்லை" என்கிருர். கோபம் வரும் பொழுது எல்லாரும் அவ்விதம் பேசுவது வழக்கம்தான். "நான் செத்துப்போனல் எனக்காக நீ ஸ்நானம் செய்ய வேண்டியதில்லை. நீ ஒன்றும் என்பொருட்டுச் செய்ய வேண்டாம்" என்று கோபத்தில் கூறுவதுண்டு. தகப்பனுக்கும் பிள்ளைக்குமிடையே என்ன மனஸ்தாபம் இருந்தபோதிலும் பிள்ளை தந்தைக்குச் செய்ய வேண்டிய கிருத்தியங்கள் நிற்குமா? ஆனல் பிள்ளை மீது கோபம் கொள்ளும்பொழுது தகப்பன் இவ்விதம் பேசுவது சகஜம் தான். ஆகவே தசரதரும்,

भरतश्चेत् प्रतीतः स्याद्राज्यं प्राप्येदमव्ययम् ।
यन्मे स दद्यात् पित्रर्थं मां मा तद्दत्तमागमत् ॥ II. 42. 9.

"அவன் அளிக்கும் அன்னம் என்னை வந்து அடையாது. எனக்கு அது வேண்டியதில்லை" என்கிருர். 'உத்தரக்கிரியை ஒன்றும் அவன் எனக்குச் செய்ய வேண்டாம்' என்பதுதான் அதற்குப் பொருள். அவர் கூறியது கௌசல்யைக்கு ஞாபகம் இருக்கிறது. அவனை 'ராஜ்யகாம' என்று கூறியதுடன் அவள் மேலும், "பரதா, நானும் சுமித்திரையும் ராமன் இருக்குமிடம் செல்லுகிறேம். அக்கினிஹோத்திரத்தை எடுத்துக்கொண்டு

சித்திரகூடத்திற்குச் செல்லுவேன். அதை இங்கு வைத்திருக்க மாட்டேன்'' என்கிருள். அக்கினிஹோத்திரம் இல்லாவிட்டால் கிரியைகளை விதிப்படிச் செய்ய முடியாது அல்லவா? அவள் மூத்த மகிஷி ஆனதால் அக்கினிஹோத்திரம் அவள்வசம் இருந்தது. அதை எடுத்துக்கொண்டு சென்றுவிடுவதாக அவள் கோபத்தோடு சொல்லுகிருள்.

अथवा स्वयमेवाहं सुमित्रानुचरा सुखम् ।
अग्निहोत्रं पुरस्कृत्य प्रस्थास्ये यत्र राघवः ॥ II. 75. 14.

பித்ருக்களுக்கும் சந்ததிகளுக்குமிடையே எவ்வளவு பிரியம் இருக்கிறதோ அதைப் பொறுத்துத்தான் பிள்ளைகள் இடும் சிராத்த கர்மாக்களின் பலனும் இருக்கும் என்ற நம்பிக்கை நமக்கு உண்டு அல்லவா? அந்த நம்பிக்கைதான் இங்கும் குறிப்பிடப்படுகிறது. ராமரைச் சித்திரகூடத்தில் சந்திக்கும்பொழுது பரதன், ''நம் தந்தை இறந்துவிட்டார். அவருக்குச் செய்ய வேண்டிய கிருத்தியங்களை நான் செய்தாகி விட்டது. ஆனால் நீங்களும் செய்ய வேண்டும். நீங்கள் செய்வதுதான் நம் தந்தையின் ஆத்மாவுக்கு அதிகத் திருப்தியை அளிப்பதாக இருக்கும்'' என்கிருன்.

प्रियेण किल दत्तं हि पितृलोकेषु राघव । II. 101. 8.

''அதுதான் அக்ஷயமாக இருக்கும் என்று சொல்லுகிருர்கள்.''

अक्षय्यं भवतीत्याहुर्भवांश्चैव पितुः प्रियः ॥ II. 101. 8.

''அப்பாவுக்கு நீங்கள் மிகவும் பிரியமான புதல்வர் அல்லவா?''

त्वामेव शोचंस्तव दर्शनेप्सु-
स्त्वय्येव सक्तामनिवर्त्य बुद्धिम् ।
त्वया विहीनस्तव शोकरुग्ण-
स्त्वां संस्मरन् स्वर्गमवाप राजा ॥ II. 101. 9.

''தந்தை இறக்கும்பொழுது அவரது கடைசி நினைவு உங்களைப் பற்றித்தான். உங்களைப் பார்க்க வேண்டும் என்ற ஆவலில் உங்களுக்காகக் காத்திருந்தார். அவர் உள்ளம் முழுவதும் உங்களிடமே லயித்திருந்தது. நீங்கள் போனபிறகு அவர் சோகம் தணியவே இல்லை. ஆகவே, நீங்கள் செய்யும் சிராத்தகாரியம்தான் நான் செய்ததைவிட அவருக்கு அதிகம் உகந்ததாக இருக்கும்'' என்கிருன்.

பரதனை ராஜ்யத்தை விரும்பியவனென்று குற்றம் சாட்டிக் கௌசல்யை தந்தைக்குச் செய்ய வேண்டிய கிருத்தியங்களைச் செய்ய முடியாதபடி அக்கினிஹோத்திரத்தை எடுத்துச் செல்லுவதாகக் கூறியபொழுதுதான், அவனது துயரம் எல்லைமீறுகிறது. கரைகடந்த வேதனையுடன் நூற்றுக் கணக்கான சபதங்கள் செய்

கிறான். ஒரு ஸர்க்கம் முழுவதும் அவன் செய்யும் சபதங்கள்தாம். "ராமரை அரசுதுறந்து காட்டிற்குச் செல்லும்படி நான் செய்ய வில்லை; நான் அப்படிச் செய்ய விரும்பியிருந்தால் எனக்கு இன்ன இன்ன பாவங்கள் வரட்டும்'' என்று பரதன் அடுக்கிக்கொண்டு போகிறான். எல்லாச் சுலோகங்களும் 'யஸ்யார்யோநுமதே கத:' என்ற சொற்களுடன் முடிகின்றன. அந்தச் சமயத்தில் பரதன் அவ்வளவெல்லாம் ஒரே மூச்சில் பேசியிருக்க முடியாது என்பது நிச்சயம். மனிதனின் நற்பண்புகளையும் கடமைகளையும் எடுத்துச் சொல்ல வேண்டும் என்பது கவியின் கருத்து. அதை அவர் பரதன் வாயிலாக வெளியிடுகிறார். "அந்தக் கடமையைச் செய்யத் தவறியவனுடைய பாவம் எனக்கு வரட்டும், இந்தத் தவற்றைச் செய்தவளது பாவம் என்னை வந்தடையட்டும்'' என்று பரதனைக் கூறும்படிச் செய்கிறார். உரையாசிரியர்களும், 'வாழ்க்கையில் மனிதனுக்கு உள்ள தர்மங்களை எடுத்துச் சொல்வதற்காகத்தான் பரதன் கூறுவது போலக் கவி சொல்லுகிறார்' என்கிறார்கள். இரண்டு சுலோகங்கள் கேட்கும்பொழுது ஒரு விதமாக இருக்கின்றன. ஸம்ஸ்கிருத மொழியைப் புதிதாகக் கற்றுக் கொள்ளுகிறவர்கள் சரியானபடி உச்சரித்துப் பார்ப்பதற்காகக் கவி அவற்றை இயற்றியிருப்பார் என்று நினைக்கிறேன்.

अधर्मो योऽस्य सोऽस्यास्तु यस्यार्योऽनुमते गतः ॥ II. 75. 23, 25.

எளிமையான சுலோகம்தான். ஆனால் அக்ஷரங்கள் ஒரே மாதிரி யாக வருவதனால் சொல்லும்பொழுது தடுமாறலாம். பரதன் இந்தச் சபதங்களைச் செய்து முடித்தவுடன் கௌசல்யையின் உள்ளம் நெகிழ்ந்துவிடுகிறது. "அப்பா! இப்படியெல்லாம் நான் பேசியதைப்பற்றி வருந்துகிறேன்'' என்கிறாள்.

दिष्टया न चलितो धर्मादात्मा ते सहलक्ष्मणः ।
वत्स सत्यप्रतिज्ञो मे सतां लोकानवाप्स्यसि ॥ II. 75. 62.

"லக்ஷ்மணனைப் போலவேதான் நீயும் என்பதை நான் அறிய வில்லை. நீ சத்தியம் தவறாதவன் - ஸத்யப்ரதிஜ்ஞ:. ஸத்துக்களாக உள்ளவர்கள் அடையும் உலகத்திற்கு நீயும் செல்வாய்.''

इत्युक्त्वा चाङ्कमानीय भरतं भ्रातृवत्सलम् ।
परिष्वज्य महाबाहुं रुरोद भृशदुःखिता ॥ II. 75. 63.

இப்படிக் கூறிய கௌசல்யை பரதனை மடிமீதிருத்தி அணைத்துக் கொண்டு துக்கம் தாங்காமல் கண்ணீர் சொரிகிறாள்.

लालप्यमानस्य विचेतनस्य प्रनष्टबुद्धेः पतितस्य भूमौ ।
मुहुर्मुहुर्निःश्वसतश्च दीर्घं सा तस्य शोकेन जगाम रात्रिः ॥ II. 75. 65.

இரவு முழுவதும் பரதன் தரையில் விழுந்து அழுது புரண்டு கொண்டும், சில சமயம் பிரக்ஞையோடும், சில சமயம் பிரக்ஞை இல்லாமலும், ராமர் பெயரைச் சொல்லிக்கொண்டும் கழித்ததாக வால்மீகி வர்ணிக்கிறார். தந்தையின் உத்தரக் கிரியைகள் முடிந்ததும் ராமரைப் போய் அழைத்து வந்துவிடுவதென்று அவன் தீர்மானம் செய்துகொள்ளுகிறான். அவன் ராமரைக் கண்டு என்ன என்ன கூறினான் என்பதை நாம் ஏற்கனவே அறிந்து கொண்டிருக்கிறோம். அதையெல்லாம் மறுபடியும் நான் விஸ்தாரமாக இன்று எடுத்துக் கூறப்போவதில்லை. பரதன் ராமரிடம், "நம்மில் யாராவது காட்டில் வசிக்க வேண்டுமென்றால் நான் போய் வசிக்கிறேன். நீங்கள் அயோத்திக்குத் திரும்பிச் செல்லுங்கள்" என்கிறான். அதற்கு ராமர், "ஒருவருக்குப் பதிலாக மற்றொருவர் செய்யும் காரியம் அல்ல இது. அவரவர்களுக்கு விதிக்கப்பட்டதை அவரவர்தாம் செய்ய வேண்டும்" என்கிறார்.

ராமருக்குப் பதிலாகத் தான் காட்டுக்குப் போகலாம் என்ற எண்ணம் பரதனுக்குச் சித்திரகூடத்தில் திடீரென்று உண்டானதல்ல. கைகேயி கூறிய செய்தி கேட்டுத் தாங்கொணாத் துன்பத்தை அடைந்தபொழுதே அவனுக்கு அது தோன்றியிருக்கிறது. காட்டுக்குப் போய் ராமரை அழைத்து வந்து அவருக்குத் தாசனாகப் பணிபுரிவதனால், அவள் போட்டிருந்த திட்டங்களைக் குலைக்கப்போவதாக அவளிடம் முதலிலேயே கூறுகிறான்.

निवर्तयित्वा रामं च तस्याहं दीप्ततेजसः ।
दासभूतो भविष्यामि सुस्थितेनान्तरात्मना ॥ II. 73. 27.

தான் காட்டிற்குச் சென்று வசிப்பதனால், ராமருக்கு இழைத்த தீங்குக்குப் பிரதி செய்யப்போவதாக வேறு கூறுகிறான்.

आनाय्य च महाबाहुं कौसल्याया महाबलम् ।
स्वयमेव प्रवेक्ष्यामि वनं मुनिनिषेवितम् ॥ II. 74. 31.

"ராமரை அழைத்து வந்து முடிசூட்டி அரசராக்கிய பிறகு முனிவர்கள் வசிக்கும் காட்டிற்கு நானே போய் வசிப்பேன்."

रामः पूर्वो हि नो भ्राता भविष्यति महीपतिः ।
अहं त्वरण्ये वत्स्यामि वर्षाणि नव पञ्च च ॥ II. 79. 8.

"அவருக்குப் பதிலாக அந்தப் பதினான்கு வருஷம் நானே வனத்தில் வாழ்வேன்" என்கிறான். அவனுடைய நோக்கம், 'என் தாய் விரும்பியது நிறைவேறக் கூடாது. அவள் பேருக்குத்தான் என் தாய்' என்பதுதான்.

न सकामां करिष्यामि स्वामिमां मातृगन्धिनीम् ।
वने वत्स्याम्यहं दुर्गे रामो राजा भविष्यति ॥ II. 79. 12.

தான் காட்டுக்குப் போய்த் தாயைப் பழிக்குப் பழி வாங்குவதென்று அவன் எண்ணுகிறுன். "என்னை அரசனுக்கவும் ராமரைக் காட்டுக்கு அனுப்பவும் எண்ணினுய் அல்லவா? நாங்கள் அதை மாற்றிக்கொள்வோம். அதுவே உனக்குப் பெரிய தண்டனையாகும். நான் காட்டுக்குச் சென்று உனக்கு மிகுந்த துன்பத்தை உண்டாக்குகிறேன் பார்." இதுதான் அவன் விரும்பியது. காட்டில் கங்கைக்கு இக்கரையில் குகனை அவன் சந்தித்தபொழுது, குகன் முதலில் அவனைச் சந்தேகிக்கிறுன். குகன் ராமருக்கு மிகவும் வேண்டியவனுகையால், 'எதற்கு இவ்வளவு பெரிய சேனையுடனும் அரண்மனையிலுள்ளோர் அனைவருடனும் பரதன் ராமரைப் பார்க்க விரும்புகிறுன்?' என்று வியப்படைகிறுன். பரதனது வருகை நல்ல நோக்கத்துடன் இராது என்று தீர்மானித்து, அவனை நேரிடையாகவே, "இங்கு வரக் காரணம் என்ன?" என்று கேட்கிறுன். பரதன் தன் உத்தேசத்தைக் கூறியதும் அவன் திருப்தியடைகிறுன்.

धन्यस्त्वं न त्वया तुल्यं पश्यामि जगतीतले ।
अयत्नादागतं राज्यं यस्त्वं त्यक्तुमिहेच्छसि ॥ II. 85. 12.

"என்ன பெருந்தன்மையுள்ளவன் நீ! உன்னைப் போன்றவனை இவ்வுலகில் காண்பது அரிது. ஒரு சிரமமுமில்லாமல் பெரிய ராஜ்யம் கிடைத்திருக்கிறது. அதை ஏற்றுக்கொள்வதில் ஒரு தவறுமில்லை. அப்படியிருக்க, தர்மத்தையே பெரிதாகக் கருதி அதைத் துறக்க விரும்புகிறுயே! உனக்கு இணையாக உலகில் யாரைக் கூற முடியும்?" என்று போற்றுகிறுன்.

ராமர், சீதை, லக்ஷ்மணன் ஆகிய மூவரும் கங்கைக்கரையில் ஓர் இரவு தங்கியதாக அவன் கூறியதைக் கேட்கவும், பரதன் பெரிதும் மனம் வருந்தி, "இந்தக் காட்டுக்கு வருவதற்காக ராமரும் சீதையும் ஸகல சுகங்களையும் துறந்தார்கள். இந்தப் புல் தரையில் கேவலம் சாதாரண மனிதர்கள் போல் அவர்கள் படுத்து உறங்கியிருக்கிறுர்கள். ராமர் எங்கே படுத்துக் கொண்டார்? சீதாதேவி எங்கே படுத்துக்கொண்டாள்? அவர்கள் அப்புறம் என்ன செய்தார்கள்? எல்லாம் ஒன்றும் விடாமல் சொல்" என்று குகனைக் கேட்கிறுன். எவ்வளவு சொன்னுலும் அவனுக்குத் திருப்தி உண்டாகவில்லை. ராமர் உணவு ஏதும் உட்கொள்ளாமல் லக்ஷ்மணன் கொண்டு வந்த தண்ணீரை மட்டும் அருந்தினுர் என்று குகன் சொன்ன கதையைக் கேட்டுக்கொண்டு இரவு முழுவதும் கழிக்கிறுன். குகன் தன் இருப்பிடத்திற்குச் சென்றதும் அந்த இடத்தைக் குகனைப் போலவே தானும் புனிதமாகக் கருதிச் சுற்றிப் பார்த்து, சீதை படுத்திருந்த இடத்தையடைந்து சொல்லுகிறுன்:—

मन्ये साभरणा सुप्ता सीतास्मिन् शयने शुभा ।

"நகைகள் அணிந்தபடியே சீதை படுத்து உறங்கியிருக்கிருள் என்று நினைக்கிறேன்."

**तत्र तत्र हि दृश्यन्ते सक्ताः कनकबिन्दवः ॥** II. 88. 14.

"இங்குமங்கும் தங்கமணிகள் சிதறிக்கிடக்கின்றன" என்கிருன். 'கட்டாந்தரையில் படுத்துக் கொண்டதனுல் உராய்ந்து சில மணிகள் உதிர்ந்து போயிருக்கும்' என்று நினைக்கிருன். அதிக நாட்கள் ஆகாததனுல் படுத்திருந்த அடையாளங் கூடத் தெரிகிறது.

**उत्तरीयमिहासक्तं सुव्यक्तं सीतया तदा ।**

"சீதையின் உத்தரீயம் இவ்விடத்தில் கீழே புரண்டு கிடந்திருக்கும்."

**तथा ह्येते प्रकाशन्ते सक्ताः कौशेयतन्तवः ॥** II. 88. 15.

"அதனுல்தான் அங்கேயே பட்டிழைகள் உத்தரீயத்தினின்றும் பிரிந்து கீழே கிடக்கின்றன." நகைகளிலிருந்து அவ்வளவு சுலபமாகத் தங்கம் பெயர்ந்து விழும் என்ருல் அந்தக் காலத்தில் நகைகள் செய்யும் திறமை அவ்வளவு உயர்வாக இருந்திருக்க முடியாது என்று நினைக்கிறேன். ராமர், சீதை, லக்ஷ்மணன் ஆகிய மூவரும் ஸகல சௌக்கியங்களேயும் துறந்து எப்படி எளிய வாழ்க்கையை மேற்கொண்டார்கள் என்பதைக் கண்டதும், பரதன் சொல்லுகிருன்:—

**अद्यप्रभृति भूमौ तु शयिष्येऽहं तृणेषु वा ।**

"நானும் இனிமேல் இப்படித்தான் வாழப்போகிறேன். மிருதுவான பஞ்சணை மெத்தையில் நான் இனித் துயிலப்போவதில்லை. கீழே வெறும் தரையிலோ அல்லது புல்தரையிலோதான் படுத்துக்கொள்வேன்."

**फलमूलाशनो नित्यं जटाचीराणि धारयन् ॥** II. 88. 26.

"காய் கனி கிழங்குகளைத்தான் இனி நான் சாப்பிடப் போகிறேன். ஜடைதரித்து, மரவுரியை அணிந்துகொள்வேன்."

**तस्यार्थमुत्तरं कालं निवत्स्यामि सुखं वने ।**
**तं प्रतिश्रवमामुच्य नास्य मिथ्या भविष्यति ॥** II. 88. 27.

"ராமர் செய்த பிரதிக்கினை நிறைவேற்றப்படும். அது வீண் போகாது. ஒருவர் காட்டில் வசிக்க வேண்டும் என்பது அந்தப் பிரதிக்கினை. அதன்படி நான் காட்டில் வசிக்கப் போகிறேன்."

**वसन्तं भ्रातुरर्थाय शत्रुघ्नो मानुवत्स्यति ।**

"ராமருக்குப் பதில் நான் காட்டில் வசிக்கும்பொழுது சத்ருக்கினன் என்னுடன் இருப்பான். ராமருடன் லக்ஷ்மணன்

அயோத்திக்குத் திரும்பிச் சென்று ராஜ்ய பரிபாலனம் செய்வான்.''

लक्ष्मणेन सह त्वार्यो ह्ययोध्यां पालयिष्यति ॥ II. 88. 28.

''அயோத்திக்கு அவர்கள் சென்றதும் அங்குள்ள பிராம்மணர்கள் விதிப்படி அவருக்கு அபிஷேகம் செய்யட்டும். இந்த என் பிரதிக்ஞையைத் தேவதைகள் நிறைவேற்றி வைக்க வேண்டும்'' என்கிறான்.

अभिषेक्ष्यन्ति काकुत्स्थमयोध्यायां द्विजातयः ।
अपि मे देवताः कुर्युरिमं सत्यं मनोरथम् ॥ II. 88. 29.

இவ்விதம் பேசினாலும், உடனே பரதன் தன் உயர்ந்த வஸ்திரங்களைக் களைந்து, மரவுரியைத் தரித்துக்கொள்ளவில்லை. மறுநாள் காலையில் பரத்வாஜாச்ரமத்துக்குச் செல்லும்பொழுது, 'வஸாநோ வாஸஸீ க்ஷௌமே'-இடையிலும் மேலும் பட்டுவஸ்திரம் அணிந்திருந்ததாக வால்மீகி கூறுகிறார். ஆகவே, அவன் மரவுரி தரித்துச் செல்லவில்லை என்று தெரிகிறது. ராமரைக் காணச் செல்லும்பொழுது ஜடைதரித்து மரவுரி அணிந்து சென்றதாகக் கவி கூறுகிறார்.

जटिलं चीरवसनं प्राञ्जलिं पतितं भुवि । II. 100. 1.

ராமரிடம் செல்வதற்கு முன்பு வழியெல்லாம் சத்ருக்கினனிடம் தன் உள்ளத்து வேதனை அனைத்தையும் கொட்டிப் பேசிக்கொண்டு போகிறான். 'ந மே ஶாந்திர் பவிஷ்யதி- இதைச் செய்து முடிக்கும் வரையில் எனக்கு மன அமைதி இருக்காது' என்று மீண்டும் மீண்டும் சொல்லுகிறான்.

यावन्न रामं द्रक्ष्यामि लक्ष्मणं वा महाबलम् ।
वैदेहीं वा महाभागां न मे शान्तिर्भविष्यति ॥ II. 98. 6.

''ராமர் லக்ஷ்மணன் சீதை ஆகிய மூவரையும் பார்க்கும் வரையில் நான் நிம்மதியடையமாட்டேன்.''

यावन्न चन्द्रसंकाशं द्रक्ष्यामि शुभमाननम् ।
भ्रातुः पद्मपलाशाक्षं न मे शान्तिर्भविष्यति ॥ II. 98. 7.

''தாமரையிதழ் போன்ற கண்களையுடைய பூர்ணசந்திரனை நிகர்த்த ராமர் முகத்தைக் காணும் வரையில் எனக்கு நிம்மதி இருக்கப்போவதில்லை.''

सिद्धार्थः खलु सौमित्रिर्यश्चन्द्रविमलोपमम् ।
मुखं पश्यति रामस्य राजीवाक्षं महाद्युति ॥ II. 98. 10.

''லக்ஷ்மணன் பாக்கியசாலி. ராமருடன் கூடவே இருக்கும் பாக்கியம் பெற்றிருக்கிறான். களங்கமற்ற சந்திரனையொத்த

ராமர் முகத்தை அவன் எப்பொழுதும் தரிசித்துக்கொண்டிருக்கிருன்."

यावन्न चरणौ भ्रातुः पार्थिवव्यञ्जनान्वितौ ।
प्रग्रहीष्यामि शिरसा न मे शान्तिर्भविष्यति ॥ II. 98. 8.

''ராமரைக் கண்டு அவர் காலடியில் விழுந்து, சக்கரவர்த்தி லக்ஷணங்களோடு கூடிய அவர் சரணங்களை ஸ்பர்சிக்கும் வரையில் எனக்கு மன அமைதி ஏற்படாது.''

यावन्न राज्ये राज्यार्हः पितृपैतामहे स्थितः ।
अभिषेकजलक्लिन्नो न मे शान्तिर्भविष्यति ॥ II. 98. 9.

''அவர் அயோத்திக்குச் சென்று அபிஷேகம் செய்துகொண்டு ராஜஸிம்மாசனத்தில் வீற்றிருக்கும் வரையில் நான் நிம்மதி அடையமாட்டேன்'' என்கிருன்.

பரதனிடம் ராமருக்கும் நம்பிக்கை அசாத்தியமாக இருக்கிறது. அவர் காட்டுக்குச் செல்லும்பொழுது அவரைத் தொடர்ந்து செல்லும் நகரத்து மக்கள், ''தங்களைத்தான் நாங்கள் சரணமடைந்திருக்கிறோம். எங்களை வேறு யாரிடமும் ஒப்பிக்கலாகாது'' என்று கெஞ்சுகிருர்கள். ராமர் அவர்களை நோக்கிச் சொல்லுகிருர்:—

या प्रीतिर्बहुमानश्च मय्ययोध्यानिवासिनाम् ।
मत्प्रियार्थं विशेषेण भरते सा विधीयताम् ॥ II. 45. 6.

"என்னிடம் வைத்திருக்கும் பிரியத்தையெல்லாம் நீங்கள் பரதனிடம் வையுங்கள்.''

स हि कल्याणचारित्रः कैकेय्यानन्दवर्धनः ।
करिष्यति यथावद्वः प्रियाणि च हितानि च ॥ II. 45. 7.

"பரதன் நல்ல பண்புகள் ஒருங்கே அமையப்பெற்றவன். அவன் யாவற்றையும் சரியாகச் செய்வான். உங்களுக்கு எது பிரியமோ, எது நன்மையோ, அவை யாவற்றையும் அவன் செய்வான்'' என்கிருர்.

தான் அடைய வேண்டிய பதவியை மற்ருெருவன் அடையும் பொழுது அவனைப்பற்றி எங்கேயாவது இம்மாதிரி சொல்லக் கேட்டிருக்கிறீர்களா?

ज्ञानवृद्धो वयोबालो मृदुर्वीर्यगुणान्वितः ।
अनुरूपः स वो भर्ता भविष्यति भयापहः । II. 45. 8.

"வயதில் இளைஞுயினும் அவன் அறிவில் முதிர்ந்தவன். வீரம் பொறுமை முதலிய நற்குணங்கள் நிறைந்தவன்'' என்கிருர்.

ஒரே ஒரு நாள்தான் ராமர் பரதனுக்குப் பெரியவர். அவர் அவனைப் 'பாலன்—குழந்தை' என்கிருர்.

"உங்களுடைய இன்னல்களையெல்லாம் அவன் தீர்த்து வைப்பான்" என்கிருர். பிறகு அவர் லக்ஷ்மணனிடம் பேசும் பொழுது, "நாம் இல்லாதிருக்கும்பொழுது நம் தாய்தந்தையர் கஷ்டப்படுவார்கள் என்று நினைக்கிருயா? பரதன் எவ்வளவு நல்லவன்?" என்கிருர்.

भरतः खलु धर्मात्मा पितरं मातरं च मे ।
धर्मार्थकामसहितैर्वाक्यैराश्वासयिष्यति ॥ II. 46. 7.

"இனிய மொழிகளினுல் அவன் அவர்களுக்கு ஆறுதல் கூறுவான். லக்ஷ்மணு, வருந்தாதே. தாய்தந்தையருக்காக நான் கவலைப்படவில்லை. அவர்களைப் பரதன் நன்ருகப் பார்த்துக் கொள்வான்."

भरतस्यानृशंसत्वं विचिन्त्याहं पुनः पुनः ।
नानुशोचामि पितरं मातरं चापि लक्ष्मण ॥ II. 46. 8.

"நீயும் நானும் பார்த்துக்கொள்வது போலவே பரதன் அவர்களைக் கவனித்துக்கொள்வான்" என்கிருர். அரண்ய காண்டத்தில், லக்ஷ்மணன் ஒரு சமயம் கைகேயியைப் பற்றிக் கடுமையான மொழிகளைக் கூறியபொழுது ராமர் அவனைத் தடுத்து, "சிற்றன்னை கைகேயியைப்பற்றி எதற்குப் பேசுகிருய்? பரதனைப்பற்றிப் பேசு" என்கிருர்.

न तेऽम्बा मध्यमा तात गर्हितव्या कथंचन ।
तामेवेक्ष्वाकुनाथस्य भरतस्य कथां कुरु ॥ III. 16. 37.

"தர்மாத்மாவான பரதனைப்பற்றிப் பேசு. சிற்றன்னையைப் பற்றிப் பேசி எதற்கு மனத்தைத் துன்புறுத்திக் கொள்ள வேண்டும்?"

निश्चितापि हि मे बुद्धिर्वनवासे दृढव्रता । III. 16. 38.

"பதினுன்கு வருஷம் காட்டில் வசிக்க வேண்டும் என்ற என் தீர்மானம் திடமானது. ஆயினும் பரதனைப்பற்றி நினைக்கும் பொழுது அந்தத் தீர்மானம் கொஞ்சம் சலிக்கிறது. அவனைப் போய்ப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் உண்டாகிறது."

भरतस्नेहसंतप्ता बालिशीक्रियते पुनः ॥ III. 16. 38.

"சித்திரகூடத்துக்கு அவன் வந்தபொழுது என்ன அன்பும் இனிமையுமுள்ள பேச்சுக்களைப் பேசினுன்! என்னுல் அவற்றை மறக்க முடியுமா?"

संस्मराम्यस्य वाक्यानि प्रियाणि मधुराणि च ।
हृद्यान्यमृतकल्पानि मनःप्रह्लादनानि च ॥ III. 16. 39.

"இந்தப் பதினான்கு ஆண்டுகள் கழித்து உங்களோடெல்லாம் நான் மீண்டும் எப்பொழுது சேர்ந்திருக்கப் போகிறேன்?" என்கிறார்.

कदा न्वहं समेष्यामि भरतेन महात्मना ।
शत्रुघ्नेन च वीरेण त्वया च रघुनन्दन ॥ III. 16. 40.

இது நிற்க. யுத்த காண்டத்திற்குச் செல்வோம். ராவணவதம் முடிந்து விபீஷணனை இலங்கைக்கு அரசனாக அபிஷேகம் செய்தபின் சீதையின் அக்கினிப் பிரவேச நிகழ்ச்சியும் இனிது முடிவுபெறுகிறது. ராமர் அயோத்திக்குத் திரும்பிச் செல்லக் கிளம்பியதும் இரண்டொரு நாள் இருந்து போகும்படி விபீஷணன் அவரைக் கேட்டுக் கொள்ளுகிறான். "இந்த இலங்கைக்கு வந்து என்னை அரசனாக்கும் பேருபகாரம் செய்துவிட்டுச் சிறிதுகூட என் உபசாரங்களைப் பெற்றுக்கொள்ளாமல் நீங்கள் திரும்பிப்போவது நியாயமா?" என்று வேண்டுகிறான்.

पूजितोऽहं त्वया सौम्य साचिव्येन परन्तप ॥
सर्वात्मना च चेष्टाभिः सौहृदेनोत्तमेन च । VI. 124. 17, 18.

அப்பொழுது ராமர், "நீ எனக்கு வேண்டியது செய்தாகி விட்டது. உன் சிறந்த நட்பினாலும், எல்லா விஷயங்களிலும் முழு உள்ளத்துடன் நீ செய்த உதவியினாலும் எனக்கு எவ்வளவோ செய்தவனாகிறாய். இதுவே போதும். இதற்கு மேல் எனக்குத் தேவையில்லை" என்கிறார்.

न खल्वेतन्न कुर्यां ते वचनं राक्षसेश्वर ॥ VI. 124. 18.

"ஏன் இப்படிப் பேசுகிறேன்? நீ சொல்வதைக் கேட்க எனக்கு இஷ்டமில்லை என்று நினைக்கிறாயா? அல்ல; உன் அழைப்பைச் சந்தோஷமாகவே ஏற்றுக்கொள்வேன். மரியாதையற்றவன் அல்ல நான். ஆயினும் இங்கு நான் இனியும் தாமதிக்க முடியாது."

तं तु मे भ्रातरं द्रष्टुं भरतं त्वरते मनः ।
मां निवर्तयितुं योऽसौ चित्रकूटमुपागतः ॥ VI. 124. 19.

"என் தம்பி பரதன் அரண்மனையிலுள்ளோர், நகரத்து மக்கள் யாவருடனும் என்னைத் தேடி வந்து எவ்வளவு கெஞ்சிக் கேட்டுக் கொண்டான்? என் பிரதிக்கினையையே பெரிதாக நினைத்துச் சிறிதும் மனமிளகாமல் அவன் வேண்டுதலை மறுத்தேன். அதை நினைத்து இப்பொழுது மனம் வருந்துகிறது" என்கிறார்.

शिरसा याचतो यस्य वचनं न कृतं मया । VI. 124. 20.

ராமருடைய சகோதரன் என்பதற்காகப் பரதனுடைய குணத்திலுள்ள ஒரு விஷயத்தைச் சொல்லாமல் விட எனக்கு மன

மில்லை. ஆராய்ச்சிக்கு அது அவ்வளவு திருப்திகரமானதல்ல. நான் ஒன்றும் அதை ஒரு தோஷமாகக் கூறப்போவதில்லை. பரதன் மிகவும் உயர்ந்தவன்தான். இதனால் அவன் சிறப்பு ஒன்றும் குறையாது. தங்களுக்கு ஏதோ கெடுதல் நேர்ந்துவிட்டதாகத் தோன்றிவிட்டால் அதனால் பெரும் துவேஷம் தோன்றிச் சிலருடைய இயல்பான குணம் சிறிது மாறுகிறது. பிள்ளை தாயினிடம் நடந்துகொள்ளும் முறைமையைப் பரதன் முழுவதும் பின்பற்றவில்லை. தந்தையினிடம் அவன் எவ்வளவோ பக்தியோடு இருக்கிறான். ஆனால் அறிவு தடுமாறிக் கைகேயியின் விருப்பத்திற்கு இணங்கியதைப்பற்றி மிகவும் கடுமையாகப் பேசுகிறான். எவ்வளவு காலமாய்க் கைகேயியை உலகம் நிந்தித்து வருகிறது! தான் செய்த குற்றத்தின் பலனை அவள் நன்கு அநுபவித்தாகிவிட்டது. எல்லாரும் அவளை அப்படி வைது சாபமிடுகிறார்கள். இம்மாதிரி விவகாரங்கள் பெரிய ராஜாங்கங்களில் எவ்வளவோ நடப்பது உண்டு. அது ஒன்றும் புதிதல்ல. மகனுக்கு ராஜ்யம் வேண்டு மென்று தாய் சூழ்ச்சி செய்வது மிகவும் சகஜமானது. ஆனால் ராமர் மூத்த புதல்வனாக உள்ள இக்ஷ்வாகு வம்சத்தில் இது நடந் திருக்கக் கூடாது. முதலில் அவள் எவ்வளவு நல்லவளாக இருக் கிறாள்! பரதனுக்கு மேலேயே ராமரிடம் அன்புள்ளவளாகவும் இருக்கிறாள். அப்படிப்பட்டவளை மந்தரை வெகு சாமர்த்தியமாக மாற்றிவிடுகிறாள். அயோத்தியில் நடந்தது எதையும் அறியாமல் மாமன் வீட்டில் இருக்கும்பொழுதே, பரதன் அயோத்தியிலிருந்து வந்த தூதர்களிடம் என்ன சொல்லுகிறான்? அவர்கள் அவனிடம் உண்மையைக் கூறாமல், ஏதோ முக்கிய அலுவலைக் கவனிப்பதற்காக அயோத்திக்கு அவனை வரச் சொல்லுகிறார்கள். ராமர், லக்ஷ்மணன், கௌசல்யை இவர்களைப்பற்றியெல்லாம் அயோத்திக்குக் கிளம்பு முன் பரதன் அவர்களை விசாரிக்கிறான். ஒவ்வொருவரையும் பற்றி மிகவும் அன்போடு கேட்கிறான். கௌசல்யை, சுமித்திரை இவர் களைப்பற்றிக் கேட்கும்பொழுது, 'இருவரும் தர்மம் தெரிந்தவர்கள் -தர்மஜ்ஞா' என்கிறான். கைகேயியைப்பற்றி விசாரிக்கும்பொழுது அவன் பேசுவதைக் கேளுங்கள். அவளைப்பற்றி ஒரு தவறும் அறியாதிருக்கும்பொழுதே சொல்லுகிறான்:—

आत्मकामा सदा चण्डी क्रोधना प्राज्ञमानिनी ।
अरोगा चापि मे माता कैकेयी किमुवाच ह ॥ II. 70. 10.

"என் அன்னை கைகேயி சுயநலமே உருவானவள். சிறிய விஷயங்களுக்கெல்லாம் கோபமடைகிறவள். தன்னையே மிகவும் உயர்வாகக் கருதுகிறவள். என்ன சொல்லியனுப்பியிருக்கிறாள்?" என்று கேட்கிறான். தாய் எவ்வளவு கெட்டவளாக இருந்தாலும், நமக்கு அவளைப்பற்றிக் குறைவான எண்ணம் இருந்தபோதிலும்,

வந்த தூதர்களிடம் இப்படி யாரேனும் பேசுவார்களா? பிறரைப் பற்றி உண்மையைக் கூற வேண்டும் என்பது என்ன விதி? ஒருவரும் கேட்காமலிருக்கும்போது, தாயைப்பற்றித் தனயன் கெடுதலாகச் சொல்ல வேண்டிய அவசியமே இல்லை. பரதனிடமுள்ள இந்தத் தோஷத்தை நான் மன்னிக்க முடியாது. தாய் எவ்வளவு கெட்டவளாக இருந்தாலும் அவளைப்பற்றி அவ்வாறு பேசுவது சிறிதும் சரியல்ல. அவளைப்பற்றி அநாவசியமாகப் புகழ்ந்து பேச வேண்டாம். ஆனால் பிறர் அவளை இகழ்ந்து பேசும்பொழுது, அவன் பேசாமல் மௌனமாக இருக்க வேண்டும். அவ்வாறு இல்லாமல் அவனே அவளைத் தூற்றிக்கொண்டு கிளம்புவது பெரிதும் தவறானது.

கேகயநாட்டிலிருந்து திரும்பிவந்து அவள் தனக்காகச் செய்த காரியத்தைப் பரதன் அறிந்ததுமே அவளைக் கண்டபடி நிந்திக்கிறான். இரண்டொரு சுலோகங்களை எடுத்துக் கூறுகிறேன்:—

त्वत्कृते मे पिता वृत्तो रामश्चारण्यमाश्रितः ।
अयशो जीवलोके च त्वयाहं प्रतिपादितः ॥ II. 74. 6.

"உன்னால் தந்தை இவ்வுலகை நீத்துப் போய்விட்டார். ராமரையும் காட்டுக்கு அனுப்பியாயிற்று. என் பெயருக்கு என்றென்றும் நிலைத்திருக்கக்கூடிய களங்கத்தை உண்டுபண்ணிவிட்டாய். பதியைக் கொன்ற நீ இனி என்னுடன் பேச வேண்டாம்."

मातृरूपे ममामित्रे नृशंसे राज्यकामुके ।
न तेऽहमभिभाष्योऽस्मि दुर्वृत्ते पतिघातिनि ॥ II. 74. 7.

"நீ அசுவபதி மகாராஜாவுக்குப் பிறந்தவள் அல்ல. அவருடைய குலத்துக்கும் பெரிய இழுக்கு உண்டாக்கிவிட்டாய்."

न त्वमश्वपतेः कन्या धर्मराजस्य धीमतः ।

"ராக்ஷஸ ஜாதியில் பிறக்க வேண்டியவள் அந்தக் குலத்தில் பிறந்துவிட்டாய்."

राक्षसी तत्र जातासि कुलप्रध्वंसिनी पितुः ॥ II. 74. 9.

"அக்கினியில் விழுந்து ஏன் உயிரை மாய்த்துக் கொள்ளாமலிருக்கிறாய்?"

सा त्वमग्निं प्रविश वा स्वयं वा दण्डकान् विश ।

"ராமரையும் சீதையையும் அனுப்பிய இடத்திற்கே நீயும் சென்றுவிடு."

रज्जुं बधान वा कण्ठे न हि तेऽन्यत् परायणम् ।

"அல்லது கழுத்தில் கயிற்றைச் சுருக்கிட்டுக்கொள். வேறு எதுவும் உனக்குத் தக்க பிராயச்சித்தமாகாது."

अहमप्यवनिं प्राप्तो रामे सत्यपराक्रमे ।
कृतकृत्यो भविष्यामि विप्रवासितकल्मषः ॥ II. 74. 34.

"ராமரை அழைத்துவந்து ராஜ்யத்தை அவரிடம் ஒப்படைத்து விட்டால் என் கடமை முடிந்துவிடும். என் பெயருக்கு நீ உண்டாக்கிய இழிவைத் துடைப்பதற்கு அது ஒன்றுதான் வழி" என்றெல்லாம் வசைமாரி பொழிகிறான்.

அந்தச் சமயத்தில் விநோதமான சம்பவம் ஒன்று நிகழ்கிறது. கைகேயி தன் நன்றிப்பெருக்குக்கு வெகுமதியாக அளித்த பலவித ஆபரணங்களை அணிந்துகொண்டு மந்தரை அங்கு வருகிறாள். 'ராஜமகிஷிகளுக்கு ஏற்ற விலையுயர்ந்த அந்த ஆபரணங்களை அணிந்துகொண்டு அலங்கரித்துக்கொண்ட மந்தரை ஒரு குரங்கு போல் தோன்றினாள்' என்கிறார் வால்மீகி. அவளது வருகையை அறிந்து யாரோ சத்ருக்னனிடம் தெரிவிக்கிறார்கள். "இவ்வளவு அனர்த்தங்களுக்கும் மூலகாரணம் அவள்தான். அவற்றுக்கு வெகுமதியாகப் பெற்ற நகைகளை அணிந்து உல்லாசமாக வருகிறாள்" என்கிறார்கள். கோபம் எவ்வளவு எல்லைமீறிப் போனாலும் இந்தக் காலத்தில் அம்மாதிரி செய்வது அபூர்வம். இதைக் கேட்டதும் சத்ருக்னன் அவளை மயிரைப் பிடித்துக் கீழே தள்ளுகிறான்.

तस्या ह्याकृष्यमाणाया मन्थरायास्ततस्ततः ।
चित्रं बहुविधं भाण्डं पृथिव्यां तद्व्यशीर्यत ॥ II. 78. 17.

அப்படித் தள்ளியதும், அவள் அணிந்திருந்த நகைகள் மாலைகள் யாவும் கழன்றும் அறுந்தும் கீழே நான்கு பக்கமும் சிதறிப் போகின்றன.

तेन भाण्डेन सङ्कीर्णं श्रीमद्राजनिवेशनम् ।
अशोभत तदा भूयः शारदं गगनं यथा ॥ II. 78. 18.

அவள் உடம்பில் எங்கே பார்த்தாலும் கணக்கில்லாத நகைகளை அணிந்திருக்கவேண்டும். அவை தரையில் சிதறிக் கிடப்பதைப் பார்க்கும்பொழுது, நக்ஷத்திரங்களோடுகூடிய ஒரு துண்டு ஆகாயத்தினின்றும் பூமியில் கிடப்பது போல் தோன்றிற்று என்று கவி வர்ணிக்கிறார். அவளைக் காப்பாற்றுவதற்காக அவளுக்கு வேண்டியவர்கள் கைகேயியிடம் ஓடிப்போய்ச் சொல்லுகிறார்கள். கைகேயி வந்து சத்ருக்னனைத் தடுக்கிறாள். பரதன் அவளைச் சிறிதும் கவனிக்காமல் சத்ருக்னனிடம், "போனால் போகிறது. அவளை விட்டுவிடு. ஸ்திரீகளை ஒன்றும் செய்யலாகாது" என்கிறான்.

अवध्याः सर्वभूतानां प्रमदाः क्षम्यतामिति । II. 78. 21.

கைகேயியும் அவளை விட்டுவிடும்படி வேண்டிக்கொள்ளுகிறாள். பரதன் சத்ருக்னனிடம், "இந்தப் பாவியைச் சந்தோஷமாக

யமனுலகு அனுப்புவேன். தாயைக் கொன்றவன் என்று ராமருக்கு என்மீது வெறுப்பு உண்டாகுமே என்ற எண்ணத்தினுல்தான் பேசாமலிருக்கிறேன். அப்படி இல்லையென்ருல் இந்த க்ஷணமே இவளைத் தொலைத்துவிடுவேன்'' என்கிருன்.

हन्यामहमिमां पापां कैकेयीं दुष्टचारिणीम् ।
यदि मां धार्मिको रामो नासूयेन्मातृघातकम् । II. 78. 22.

மகன் தாயைப்பற்றிக் கூறும் சொற்களா இவை?

''இந்தக் கூனியை நீ கொன்ருய் என்று தெரிந்தால், அப்புறம் அவர் என்னுடனே உன்னுடனே உயிருள்ள அளவும் ஒரு வார்த்தையும் பேசமாட்டார்'' என்கிருன்.

इमामपि हतां कुब्जां यदि जानाति राघवः ।
त्वां च मां च हि धर्मात्मा नाभिभाषिष्यते ध्रुवम् ॥ II. 78. 23.

பரத்வாஜ ஆச்ரமத்திற்குச் செல்லும்பொழுதும் அவன் என்ன செய்கிருன்? முதலில் பரத்வாஜருக்கும் பரதனைப்பற்றி ஐயம் உண்டாகிறது. பரதன் அதை அகற்றியதும் அவர் திருப்தி யடைந்து அவனுக்கு உத்தரவு கொடுக்கிருர். மறுநாள் காலையில் பரதனும் சத்ருக்கினனும் தங்கள் தாய்மார்களுடன் அவருக்கு வந்தனம் செய்யும்பொழுது பரத்வாஜர் ஸ்திரீகளைப்பற்றிப் பரதனிடம், ''இவர்கள் ஒவ்வொருவரும் யார் என்று எனக்குக் கூறு'' என்று கேட்கிருர். முதலில் பரதன் கௌசல்யையையும், பிறகு சுமித்திரையையும் பற்றி மிகவும் உயர்வாகக் கூறி அறிமுகப்படுத்துகிருன். தன் தாயைப்பற்றிச் சொல்லும்பொழுது அவனது சொற்களைப் பாருங்கள்:—

यस्याः कृते नरव्याघ्रौ जीवनाशमितो गतौ ।

''எவளுடைய தீச்செயலினுல் ராமர், லக்ஷ்மணன் இவ்விருவருடைய வாழ்வும் பாழாகிவிட்டதோ;

राजा पुत्रविहीनश्च स्वर्गं दशरथो गतः ॥ II. 92. 25.

''பிள்ளையின் பிரிவாற்ருமையினுல் தசரதர் ஸ்வர்க்கம் சென்ருரோ, யாரால் மேற்கூறிய துன்பங்களெல்லாம் நேர்ந்தனவோ;

क्रोधनामकृतप्रज्ञां दृप्तां सुभगमानिनीम् ।
ऐश्वर्यकामां कैकेयीमनार्यामार्यरूपिणीम् ॥ II. 92. 26.

''இவள்தான், இந்தக் கொடிய பாவிதான், என் தாய்.''

ममैतां मातरं विद्धि नृशंसां पापनिश्चयाम् ।
यतोमूलं हि पश्यामि व्यसनं महदात्मनः ॥ II. 92. 27.

''இவளால் எனக்கு முடிவில்லாத் துன்பம் ஏற்பட்டுவிட்டதே'' என்கிருன்.

மகன் தாயைப்பற்றி இந்த ரீதியில் பேசுவதைக் கேட்டு, பரத்வாஜருக்கு ஒரே திகைப்பு உண்டாவது நியாயமே அல்லவா? பின்னால் வரப்போவதை அறியும் சக்தியையுடைய அவர், "அப்பா, அவளைப் பழித்துப் பேசாதே. அவள் செய்தது என்ன என்பது உனக்குத் தெரியாது. உலகத்துக்கே க்ஷேமத்தை அளிக்கக் கூடியதை அல்லவா அவள் செய்திருக்கிறாள்? எல்லாருக்கும் அதனால் நன்மையே உண்டாகப்போகிறது. இப்படிக் கண்டபடி அவளை நீ பேசலாகாது" என்று புத்திமதி கூறுகிறார்.

ஆயினும் பரதன் தன் அபிப்பிராயத்தை மாற்றிக்கொள்ளவேயில்லை. கைகேயியின் மனநிலை முற்றும் மாறிவிட்டது என்பது நிதர்சனமாகத் தெரிந்தும் அவன் முன்போலவே அவளை நிந்தித்துப் பேசுகிறான். தசரதரை அவருடைய பெருமையின் உச்சியினின்றும் கீழே தள்ளித் துன்பக் கடலில் ஆழ்த்திய கைகேயி அல்ல அவள் இப்பொழுது. கௌசல்யையுடனும் சுமித்திரையுடனும் ஒரே வண்டியில் அமர்ந்து சென்றதே, ராமன் திரும்பி வருவதை அவளும் விரும்பினாள் என்பதற்கு அத்தாட்சியாகும் என்கிறார் கவி. ஆனால் பரதனது மனம் மட்டும் என்னவோ மாறவேயில்லை. சித்திர கூடத்தில் ராமருடன் பேசும்பொழுது அவன் கூறுகிறான்:—

प्रोषिते मयि यत् पापं मात्रा मत्कारणात् कृतम् ।
क्षुद्रया तदनिष्टं मे प्रसीदतु भवान् मम ॥ II. 106. 8.

"அந்த இரக்கமற்றவள் நான் இல்லாதிருக்கும்பொழுது இந்தக் கொடிய பாவத்தைச் செய்துவிட்டாள். நான் அதற்குப் பொறுப்பாளி அல்ல. என்னை மன்னியுங்கள். தர்மத்துக்கு விரோதமாயிற்றே என்று பார்க்கிறேன். இல்லாவிட்டால் அவளைக் கொன்றுவிடுவேன்" என்று ராமரிடமே பரதன் பேசுகிறான்.

धर्मबन्धेन बद्धोऽस्मि तेनेमां नेह मातरम् ॥
हन्मि तीव्रेण दण्डेन दण्डार्हां पापकारिणीम् । II. 106. 9-10.

எல்லா விஷயங்களையும் பேசித் தீர்த்தபிறகு அவன் மறுபடியும், "என் தாய் செய்ததைக் கவனிக்க வேண்டாம். அவற்றை மனத்தை விட்டு ஒழித்துவிடுங்கள். அவள் ஒரு பாவி. அவளால் எல்லாம் கெட்டு நாசமாகிவிட்டது. தர்மத்துக்குப் பயந்தே இப்பொழுது நான் அவளைக் கொல்லாமல் விடுகிறேன்" என்கிறான். மறுபடியும் ராமர் மிகப் பெருந்தன்மையோடு கைகேயியைப் பற்றிக் கூறுகிறார். நான் முன்பே சில சுலோகங்கள் எடுத்துக் கூறியிருக்கிறேன். கடைசியில் ராமர், "அவளுக்கு ஒன்றும் நீ தீங்கு செய்யலாகாது. அவளை நிந்தித்துத் துன்புறுத்தி ஒன்றும் செய்வதில்லை என்று சீதையின் மீதும் என் மீதும் நீ ஆணையிட்டுச் சொல்ல வேண்டும்" என்று கேட்டுக்கொள்கிறார்.

தன் காரியம் வெற்றி பெறுமற் போனபிறகு—அவ்வாறு சொல்ல எனக்கு மனமில்லை—பரதன் அயோத்திக்குத் திரும்பும் கடைசிச் சம்பவத்துக்கு வருவோம். அதன் கடைசி சுலோகம் பின்வருமாறு:—

तं मातरो बाष्पगृहीतकण्ठ्यो दुःखेन नामन्त्रयितुं हि शेकुः ।

தாய்மார் மூவரும் ராமரிடம் விடைபெற்றுக்கொள்ள விரும்புகிறார்கள். ஆனால் துக்கத்தினால் அவர்களின் நெஞ்சு அடைத்துக் கொள்ளுகிறது. பேச்சு வெளிவரவில்லை. இவர்கள் இப்படியிருக்க, ராமர் என்ன செய்கிறார்? அவர் மட்டும் தைரியத்தோடு இருக்க முடியுமா?

न त्वेव मातॄरभिवाद्य सर्वा रुदन् कुटीं स्वां प्रविवेश रामः ॥ II. 112. 31.

அவரும் ஒரு வார்த்தையும் பேச முடியாமல், அவர்களை நமஸ்கரித்துவிட்டுக் கண்ணீர் மல்கப் பர்ணசாலைக்குள் செல்லுகிறார்.

வியாக்கியானகாரர்கள் 'ஸர்வா:' என்ற வார்த்தையை முக்கியமாகக் குறிப்பிடுகிறார்கள். கைகேயியையும் ராமர் அன்புடனும் பக்தியுடனும் நமஸ்கரித்ததாக ஏன் வால்மீகி பிரத்தியேகமாகக் குறிப்பிட வேண்டும்? இதனால் கைகேயியின் தோஷம் நீங்கியது தெளிவாகிறது என்கிறார் வியாக்கியாதா ஒருவர். அது ஒன்றும் அவசியமில்லை.

अनेन कैकेय्या दोषराहित्यं सूचितम् ।

கைகேயி செய்த ஒரு குற்றத்துக்காக அவளை நமஸ்கரிக்கும் கடமையைக் கைவிடக் கூடியவர் அல்ல ராமர். மற்றவர்களைப் போலவே அவளும் அவருக்குத் தாய் ஸ்தானத்தில் இருப்பவள். அவளுக்குச் செய்ய வேண்டிய கடமையை அவர் ஒரு கணமும் மறந்ததில்லை. கௌசல்யை, சுமித்திரை இவ்விருவரிடமும் தாம் கொண்டுள்ள மதிப்பை அவளிடமும் கொள்ள அவர் ஒருபோதும் தயங்கமாட்டார்.

கைகேயியும் தான் செய்த தவற்றுக்கு வருந்திக்கொண்டு தான் இருக்கிறாள். 'ஸர்வா:' என்று கவி பிரத்தியேகமாகக் குறிப்பிட்டுக் கைகேயி பச்சாத்தாபப்படுவதாக வியாக்கியான காரர்கள் கூறும்படிச் செய்வானேன்? எனக்கு ஒரு விதமான பொருள் படுகிறது. அது சரியாக இருக்கும் என்றே நினைக்கிறேன். பரதனுக்கு ஒரு பாடம் கற்பிக்கவே ராமர் விரும்பினார் என்று எனக்குத் தோன்றுகிறது. தன் கடமையை முற்றும் மறந்து பரதன் அவளைப்பற்றி அடக்கமின்றி நிந்திக்கிறான். கௌசல்யையையும் சுமித்திரையையும் வணங்கியது போலவே அவளையும் அதே விதமான பக்தியுடன் வணங்கி எழுந்து, மகனுக்கு உள்ள கடமை என்ன என்பதை எடுத்துக்காட்டியதாகவே கருதலாம்.

அதுதான் அவரது நோக்கமாக இருக்க வேண்டும். வியாக்கியானத்தில் மற்றொரு வாக்கியம் காண்கிறது. இந்த நாட்டில் சாதாரணமாகக் கையாளும் ரீதியிலேயே அது அமைந்திருக்கிறது. ஆனால் அது முற்றும் தவறாகவே எனக்குப் படுகிறது.

रुदन् कुटीं स्वां प्रविवेश रामः ।

என்று படித்தேன் அல்லவா? 'கண்களில் நீர் மல்க ராமர் பர்ண சாலைக்குள் சென்றார்' என்கிறார் கவி. அதன் பொருள் அப்படியே இருந்தால் என்ன? அது மிகவும் அழகான வாக்கியம். ராமரிடம் நம் உள்ளம் முழுவதையும் ஈடுபடச் செய்கிறது. 'ருதந்நிவ-அழுவது போல் அபிநயம் செய்துகொண்டு' என்று அதற்கு வியாக்கியானம் செய்யப்படுகிறது. 'அவதார புருஷரான ராமர் சாதாரண மனிதரைப் போல் அழலாகாது' என்பதற்காக அந்த அர்த்தம் கூறப்படுகிறது. ஆனால் நம்மைப் போலவே அவர் அழுதார் என்று நான் கூற வேண்டும் போல் நமக்கு இருக்கிறது. அப்பொழுது தான் அவருடைய பெருமையை நாம் உணருகிறோம். பதினான்கு ஆண்டுகள் பிரியப்போகும் தாய்மார்களையும் அன்புச் சகோதரனையும் எண்ணி ராமர் துக்கம் தாங்காமல் கண்ணீர் சொரிந்தார் என்று அதற்கு அப்படியே பொருள் கொள்வதுதான் எனக்கு உகந்ததாகப் படுகிறது.

அந்தப் பதினான்கு வருஷங்களில் என்னவெல்லாம் நடக்குமோ, என்ன துன்பங்களெல்லாம் நேருமோ, யார் கண்டது? ஒன்றும் தெரியாமல் யாவும் இருள்மயமாக இருந்த சமயம் அது. ராமர் அழுதார் என்றால் உண்மையாக அவர் அழுதிருக்கலாம் என்று நாம் ஏன் நம்பக்கூடாது? அவர் மனம்விட்டு அழுதார் என்றுதான் இருக்க வேண்டும்.

# 13

## சுக்கிரீவன் சுபாவம்

சுக்கிரீவனுடைய வரலாற்றை இரண்டு பகுதிகளாகப் பிரிக்கலாம். ஒன்று, உயர்ந்தது; மற்றொன்று, தாழ்ந்தது. முன் பகுதியில் தன் பதவி அந்தஸ்து யாவற்றையும் இழந்து கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் நிலை அவனுடையது. யாவற்றிலுமே அவனைக் காட்டிலும் பன்மடங்கு மேலோங்கி நிற்கும் தமையனின் முன் அவன் எடுபட முடியவில்லை. தன்னிடம் அவனுக்கு நம்பிக்கை இல்லை. எல்லாரையும் வேறு சந்தேகிக்கிறான். தனக்குப் பக்கபலம் தேடியவனாக, அவன் சிரமப்படும் நிலைமையில் இருக்கிறான். அந்தச் சிரமங்கள் தீர்ந்து தனக்கு உரியதான நிலையை அடைந்ததும், அவனுக்குப் பழைய தெம்பும் தைரியமும் உண்டாகின்றன. ராமனையும் லக்ஷ்மணனையும் முதல்முதலில் கண்டபொழுது, தன்னைக் கொல்லுவதற்காக வாலி அனுப்பிய ஆள்கள் அவர்கள் என்றே எண்ணி அவன் பயப்படுவது கொஞ்சம் வேடிக்கையாகவே இருக்கிறது. ஹனுமாரிடம் தன் சந்தேகங்களைக் கூறுகிறான். ஆனால் ஹனுமார் அவ்வாறு நினைக்காததுடன், சுக்கிரீவனை அவனது அர்த்தமற்ற சந்தேகங்களுக்காகச் சிறிது கடிந்துகொள்கிறார். கேவலம் ஒரு நம்பிக்கையுள்ள மந்திரி அவ்வாறு பேசுவது கொஞ்சம் ஆச்சரியமாக இருக்கிறது. கூட இருந்த நளன், நீலன், தாரன் ஆகியவர்களும் மிகவும் சாமர்த்தியமுள்ளவர்களே என்றாலும் ஹனுமார் யாவரிலும் சிறந்தவராக விளங்குகிறார்.

சுக்கிரீவனுடைய கலவரத்தைக் கண்டு ஹனுமார் வியப்படையும் ஒரு சுலோகத்ததைப் பார்ப்போம்:—

अहो शाखामृगत्वं ते व्यक्तमेव प्लवङ्गम ।
लघुचित्ततयात्मानं न स्थापयसि यो मतौ ॥ ॥ IV. 2. 17.

"இப்படிப் பயப்படுவதிலிருந்தே, நீங்கள் ஒரு வானரர் என்பதை வெளியிட்டுக் கொள்கிறீர்கள்" என்கிறார்.

சுக்கிரீவனும் அனுமாரும் வானரர்களுக்குள் மிகவும் உயர்ந்தவர்கள். மனிதர்களைவிடத் தாங்கள் மிகவும் தாழ்ந்தவர்கள் என்று சாதாரணமாய்ச் சொல்லிக் கொள்ள மாட்டார்கள்.

எப்படியும் தங்களுக்குள் தங்கள் இனத்தையே குறைத்துச் சொல்லிக்கொள்ள மாட்டார்கள் அல்லவா? 'கபித்வம்' என்று மனிதர்கள் இகழ்ந்து பேசலாமே தவிர, வானரர்கள் அவ்வாறு தங்களையே இகழ்ந்து பேசிக் கொள்வார்களா? ஆகவே, தங்கள் இனத்தையே இகழ்ந்து பேசுவது போல் அனுமார் பேசுவது கொஞ்சம் ஆச்சரியமாக இருக்கிறது. ராமாயணத்தை இயற்றியவர் ஒரு மனிதர் என்ற ரகசியத்தை நாம் இதிலிருந்து அறிந்து கொள்ளலாம். சுக்கிரீவனும் அனுமாரும் தாங்கள் வானரர்கள் என்பதை மறந்து பேசும் வார்த்தைகளை அவர்கள் வாயிலிருந்து வருவதாகக் கவி எழுதுகிறார்.

ராமரும் சுக்கிரீவனும் நண்பர்கள் என்று ஒப்பந்தம் செய்து கொண்டதும், ஒருவரிடம் ஒருவர் பெருநம்பிக்கை கொண்டவர்களாகின்றனர். ஆரம்பத்தில் அவ்வளவு நம்பிக்கையோடுதான் பேசிக்கொள்ளுகிறார்கள்.

ततोऽग्निं दीप्यमानं तौ चक्रतुश्च प्रदक्षिणम् ॥
सुग्रीवो राघवश्चैव वयस्यत्वमुपागतौ ।
ततः सुप्रीतमनसौ तावुभौ हरिराघवौ ॥
अन्योन्यमभिवीक्षन्तौ न तृप्तिमुपजग्मतुः ।
त्वं वयस्योऽसि मे हृद्यो ह्येकं दुःखं सुखं च नौ ॥ IV. 5. 16-18.

அக்கினியை வலம் வந்து, கைகளைக் கோத்துக்கொண்டு, ஒருவருக்கொருவர் உண்மையாக இருப்பதாகப் பிரதிக்கினை செய்து கொண்டதும், இருவரும் ஒருவரையொருவர் நிதானமாகப் பார்த்துக் கொள்ளுகிறார்கள். தகுந்த நண்பனைத் தேர்ந்தெடுத்ததாக இருவரும் திருப்தியடைகிறார்கள். "இனி நம் இருவருடைய சுக துக்கங்களும் ஒன்றே" என்று கூறிக் கொள்கிறார்கள். நண்பர்களானதும் ராவணன் வாலியிடம் கூறியது உங்களுக்கு நினைவிருக்கிறதா? மறந்திருந்தால் ஞாபகப்படுத்துகிறேன்:—

दाराः पुत्राः पुरं राष्ट्रं भोगाच्छादनभोजनम् ।
सर्वमेवाविभक्तं नौ भविष्यति हरीश्वर ॥ VII. 34. 41.

"வானரேச்வரா! சகல போகங்கள் ஐசுவரியங்கள் மனைவி பிள்ளைகள் பட்டணம் ராஜ்யம் எல்லாம் நம் இருவருக்கும் பொதுவானவையே" என்கிறான் ராவணன். இது உத்தர காண்டத்தில் வரும் சுலோகம். அதைப் பெரிய பிரமாணமாக எடுத்துக்கொள்ள வேண்டாம் என்று சிலர் நினைக்கலாம். வியாக்கியானகாரர்கள் தங்களுக்கு வேண்டும்போது மேற்கோள்கள் எடுத்துக் கொள்ளுகிறார்கள்; வேண்டாதபோது விட்டுவிடுகிறார்கள். 'தாரா:' என்று மனைவியையும் ராவணன் சேர்த்துச் சொல்வது கொஞ்சம் விநோதம் அல்லவா? தன் அந்தப்புரத்தி

லுள்ள கணக்கற்ற ஸ்திரீகளை அவ்வளவுதான் ராவணன் மதித்தான் என்றும் இதிலிருந்து ஒருவாறு நாம் ஊகிக்கலாம்.

பிறகு ஒரு சிறு விஷயத்தைப்பற்றி, நன்கு படித்தவர்கள் பெரியதாக எடுத்துப் பேசுகிறார்கள். நண்பர்கள் என்று ஒப்பந்தம் செய்துகொள்ளுமுன் சுக்கிரீவன் ராமரைச் சில முக்கியமான கேள்விகள் கேட்கிறான். அவற்றுக்கு ராமர் தாம் நேராகப் பதில் கூறாமல், லக்ஷ்மணன்மூலம் பதில் கூறுகிறார். இது ராஜாங்க சம்பிரதாயங்களில் சேர்ந்தது. தம்மைப் போலவே அரசபதவியில் இருப்பவர்களோடுதான் அரசர்கள் பேசலாம். மந்திரிகள் மந்திரிகளோடுதான் பேசுவார்கள். இந்த வழக்கம்தான், ராமருடைய பெருமையை மதிக்காமல் சுக்கிரீவன் பேசியதாகவும், அதன் விளைவாகத்தான் பிறகு அவனுக்குச் சில கஷ்டங்கள் நேர்ந்ததாகவும் மக்களைக் கருதும்படிச் செய்திருக்கிறது. ஆனால் அம்மாதிரி நினைப்பதற்கு இடமே இல்லை. சுக்கிரீவன் ஒரு மரக்கிளையை ஒடித்து ராமரை உட்காரச் செய்து, தானும் உட்கார்ந்துகொள்கிறான். அனுமாரும் அதேமாதிரி ஒரு மரக்கிளையை ஒடித்து லக்ஷ்மணனை உட்காரச் செய்து, தாமும் உட்கார்ந்துகொள்கிறார். ராமருடைய பெருமைக்கு எவ்வகையான இழிவும் இதிலிருந்து சுக்கிரீவன் காட்டியதாக நினைப்பதற்கில்லை. தெரிந்தோ தெரியாமலோ நட்பின் தொடக்கத்திலேயே சுக்கிரீவன் ராமர் விஷயத்தில் மரியாதைக் குறைவாக நடந்துகொண்டான் என்று நான் எண்ணவில்லை.

பிறகு ராவணன் இருக்கும் இடம், அவன் பலம் ஆகியவற்றைக் கேட்டபொழுது சுக்கிரீவன் உண்மையைக் கூறாமல் மறைத்தான் என்று அவன்மீது குற்றம் கூறப்படுகிறது.

न जाने निलयं तस्य सर्वदा पापरक्षसः ।
सामर्थ्यं विक्रमं वापि दौष्कुलेयस्य वा कुलम् ॥ IV. 7. 2.

ராவணனைப்பற்றிய முழு விவரங்களும் தனக்குத் தெரியா என்று சுக்கிரீவன் கூறுகிறான். அவன் மொத்தமாக ஏதோ சொல்கிறானே தவிர, அதிலிருந்து அவன் வேண்டுமென்று மறைத்ததாகக் கூற முடியாது. ஆயினும் சுக்கிரீவனுக்கு அவ்வளவு தெரியாமலிருக்கவும் நியாயமில்லை. ராவணனைப்பற்றி அவனுக்கு நன்றாகத் தெரியும். ஆயினும் ராமருக்கு நம்பிக்கை உண்டுபண்ணும் அளவுக்கு அவன் தெரிந்துகொண்டிருக்கவில்லை. ஆனால், உத்தர காண்டத்தில் கூறியிருப்பதைப் பார்த்தால், அவன் வேண்டுமென்று பொய் சொன்னதாகவே தோற்றுகிறது. தம்பியான சுக்கிரீவனைப் போல ராவணனும் வாலியின் அரண்மனையில் ஒரு மாதம் முழுவதும் தங்கியிருந்ததாக அதில் கூறப்பட்டிருக்கிறது. அது நிஜம் என்றால் சுக்கிரீவன் பெரிய குற்றம் செய்ததாகத்தான் கொள்ளவேண்டும்.

ஆயினும், நட்பின் தொடக்கத்திலேயே சுக்கிரீவன் நம்பிக்கைத் துரோகம் செய்யக்கூடியவன் என்று எனக்குத் தோன்றவில்லை. ஏனெனில், கீழ்க்கண்ட சுலோகத்தில்,

एवमुक्तस्तु सुग्रीवो रामेणार्तेन वानरः ।
अब्रवीत् प्राञ्जलिर्वाक्यं सबाष्पं बाष्पगद्गदः ॥ IV. 7. 1.

'சுக்கிரீவன் பொங்கிவந்த அழுகையினால் தொண்டை தழுதழுக்கக் கைகூப்பிக்கொண்டு ராமருக்குப் பதில் கூறுகிறான்' என்று இருக்கிறது. தெளிவாகப் பேச முடியாதிருக்கும்பொழுது, சுக்கிரீவன் பொய் சொல்லியிருக்க நியாயமில்லை. ராமருக்கும் தம்மிடம் அவன் ஏதோ மறைத்திருப்பதான எண்ணம் தோன்றவில்லை.

मधुरं सान्त्वितस्तेन सुग्रीवेण स राघवः ।
मुखमश्रु परिक्लिन्नं वस्त्रान्तेन प्रमार्जयन् ॥ IV. 7. 15.

கண்ணீர் சோர நிற்கும் சுக்கிரீவனைக் காண ராமர் கண்களினின்றும் நீர் பெருகுகிறது. தமது உத்தரீயத்தின் நுனியினால் ராமர் அதைத் துடைத்துக்கொள்கிறார்.

एष च प्रकृतिस्थोऽहमनुनीतस्त्वया सखे ।
दुर्लभो हीदृशो बन्धुरस्मिन् काले विशेषतः ॥

ஆகவே, சுக்கிரீவனிடம் ஏதும் ஒளிவு மறைவு இல்லை என்பதற்கு நல்ல அத்தாட்சி இருக்கிறது. ராமருக்கும் சுக்கிரீவனுக்கும் நல்ல ஒற்றுமை இருந்ததாகவே தெரிகிறது. எந்த விதமான அவநம்பிக்கையும் இருக்கவில்லை என்றும் கூறலாம். சீதாதேவியைத் தேடுவதற்கு, உரிய காலத்திலேயே சுக்கிரீவன் கட்டளைகள் பிறப்பித்ததிலும் ஒரு சந்தேகமும் இல்லை. எல்லா வானரர்களும் பதினைந்து நாளைக்குள் வந்துசேர வேண்டும் என்று உத்தரவிட்டதுடன், அனுமாரையும் சேனாதிபதியான நீலனையும் மீதிக் காரியங்களையும் தாமதமில்லாமல் உடனே கவனிக்கும்படி உத்தரவிடுகிறான். ஆகவே, கவனிக்காமல் அசிரத்தையாக இருந்த குற்றம் அவனைச் சேராது. சுக்கிரீவன் செய்திருப்பதைத் தாரை கூறியதும் லக்ஷ்மணன் தான் தவறாகக் கண்டபடி பேசியதற்காகப் பெரிதும் மன்னிப்புக் கேட்டுக்கொண்டதை நான் முன்பே கூறியிருக்கிறேன்.

हरींश्च वृद्धानुपयातु साङ्गदो
भवान् ममाज्ञामधिकृत्य निश्चिताम् ।
इति व्यवस्थां हरिपुङ्गवेश्वरो
विधाय वेश्म प्रविवेश वीर्यवान् ॥ IV. 29. 30.

'எல்லாம் சரியாக நடக்கும்' என்ற நம்பிக்கையுடன் சுக்கிரீவன் அந்தப்புரத்துக்குச் செல்லுகிறான். அவன் செய்த ஒரு பெருந்

தவறு என்னவென்றால், கொஞ்சம் அதிகமாகவே கேளிக்கைகளில் ஈடுபட்டு, ராமரின் நினைவில்லாமலே இருந்ததுதான். பிறர் துன்பம் அறியும் இயல்புள்ளவனாக இருந்தால், ராமர் மனவருத்தமுற்று இருக்கும்பொழுது, தான் இவ்வளவு கேளிக்கைகளில் ஆழ்ந்திருக்க லாகாது என்று உணர்ந்திருப்பான். ஆகவே, சுக்கிரீவன் முதலில் பிறருடன் பழகுவதில் மிக்க ஜாக்கிரதையாக இருந்ததுடன், பிறரைப் புகழுவதற்கும் அதிக மனமில்லாதவனாக இருக்கிறான். பின்பு, லக்ஷ்மணனுடன் சேர்ந்து, விபீஷணனைத் தங்களுடன் சேர்த்துக்கொள்வதில் விருப்பமில்லை என்பதை அறிவிக்கும் பொழுதும் அவனுடைய மேற்கூறிய இயல்பு வெளியாகிறது. ராவணனிடமிருந்து நேராக வரும் ஒருவனை நன்றாகச் சோதித்துப் பார்க்காமல் சேர்த்துக்கொள்வதை அவன் விரும்பவில்லை. இது ராமருடைய இயல்புக்கும் அவனது இயல்புக்கும் உள்ள பெரிய வேற்றுமையை நன்றாக எடுத்துக்காட்டுகிறது.

ராமருடைய நல்லதிருஷ்டம், அவரைச் சுற்றிலும் நல்ல மனிதர்களே இருக்கிறார்கள். ஆயினும் அநேக விஷயங்களில் ராம ருடைய உயர்ந்த குணம் மேலும் உயர்ந்து விளங்கும்படியாகவும் அவர்கள் உதவுகிறார்கள். அவருக்கு ஈடு இணையில்லாமல் உலகில் அவ்வளவு உயர்வாக ஒரு மனிதனும் இருக்க முடியாது என்று கவி வேண்டுமென்றே ஒருவருக்கு மேல் ஒருவரை உயர்வாகவே காட்டி யிருக்கிறார். சுக்கிரீவன், விபீஷணன், பரதன், லக்ஷ்மணன் போன் றவர்கள் இருக்கிறார்கள். ஆனால் அவர்களிடம் காணும் குறைகளு மின்றி, அவர்கள் அனைவருக்கும் மேல் மிகச் சிறந்த குணமுள்ள வனும் இருக்கலாம் அல்லவா? இந்த உண்மையைக் காண்பிப்பதற் காகவே கவி ராமரைச் சுற்றிலும் இத்தகைய உத்தமமான பாத்திரங்களைச் சிருஷ்டித்து வைத்திருக்கிறார். கவியின் உத்தேசமே அதுதான். ராமர் தம்முடைய கொள்கையை எடுத்துக் கூறுகிறார். அதை யாரும் புரிந்துகொள்ள இயலவில்லை.

सकृदेव प्रपन्नाय तवास्मीति च याचते ॥
अभयं सर्वभूतेभ्यो ददाम्येतद्व्रतं मम । VI. 18. 33-34.

ராஜ்யத்தை இழந்து வானரசேனையுடன் வேறு புதிய தேசத்தை நோக்கிச் செல்லும் ஒருவன், ''என்னிடம் அடைக்கலம் என்று யார் வந்தாலும் உடனே நான் அவனைக் காப்பாற்றுவேன். எனக்கு வேறொன்றும் தேவையில்லை. சத்துருக்களிடமிருந்தும், ஆபத்துக்கள் அனைத்திலிருந்தும் நான் அவனுக்கு அபயம் அளிக் கிறேன்'' என்கிறான் என்றால், இத்தகைய தயையையும் கருணை யையும் யார் கற்பனை செய்ய முடியும்? அதை மேலும் உறுதிப் படுத்தி அவர் கூறுகிறார்:—

आनयैनं हरिश्रेष्ठ दत्तमस्याभयं मया ।
विभीषणो वा सुग्रीव यदि वा रावणः स्वयम् ॥ VI. 18. 34-35.

"நான் அவனுக்கு அபயம் அளித்துவிட்டேன். அவனை இங்கு அழைத்து வாருங்கள். அவனுக்கு மட்டுமல்ல, ராவணனே வந்து என்னைச் சரணமடைந்தாலும் அவனுக்கும் அடைக்கலம் தந்து அவனை நிச்சயம் காப்பாற்றுவேன்" என்கிறார்.

லக்ஷ்மணன் எப்பொழுதும் அதிகம் பேசுகிறவனல்ல; அதுவும் ராமரின் எதிரில் அவரை மறுத்துப் பேச இயலாதவனுதலால், சுக்கிரீவனைப் பேசும்படிச் செய்கிறுன். ராமர் பேசியதைக் கேட்க, சுக்கிரீவன் ஆச்சரியத்திஞல் பேச்சற்றுவிடுகிறுன்.

किमत्र चित्रं धर्मज्ञ लोकनाथ सुखावह ॥
यत्त्वमार्यं प्रभाषेथाः सत्त्ववान् सत्पथे स्थितः । VI. 18. 36-37.

"ஸர்வதர்மங்களும் தெரிந்தவராய், பௌருஷம் மிக்கவரான தாங்கள் இம்மாதிரி பேசுவதில் என்ன ஆச்சரியம்?" என்று கூறி, மேலும் பேசுகிறுன். இங்கே சுக்கிரீவனுடைய நல்ல மனம் வெளியாகிறது.

मम चाप्यन्तरात्मायं शुद्धं वेत्ति विभीषणम् ।
अनुमानाच्च भावाच्च सर्वतः सुपरीक्षितः ॥
तस्मात् क्षिप्रं सहास्माभिस्तुल्यो भवतु राघव ।
विभीषणो महाप्राज्ञः सखित्वं चाभ्युपैतु नः ॥ VI. 18. 37-38.

"விபீஷணன் சரியானவன்தான் என்று உள்ளூற எனக்கும் தோன்றுகிறது. இத்தகைய ஆதரவு அவனுக்குக் கிடைத்திருக்கும் பொழுது இனி அவனைப்பற்றி என்ன சந்தேகம்? அவன் வரட்டும். எங்களில் ஒருவனுகவே அவனை நடத்துவோம்" என்கிறுன். அவன் மீதுள்ள அவநம்பிக்கை குறைந்து, அவனுக்கு உதவிபுரிய முழுச் சம்மதத்தோடு இருக்கிறுன் சுக்கிரீவன்.

சமுத்திரக்கரைக்கு வந்து அணைகட்டத் தொடங்குமுன்பே, சுக்கிரீவன், நல்ல வீரமும் பலமுமுள்ளவனுகையால், "நாம் இங்கு வந்து சேர்ந்துவிட்டோம். இலங்கையைக் கண்டதுதான் தாமதம்; ராவணவதம் முடிந்ததென்று வைத்துக்கொள்ளுங்கள். அவன் நம் கண்ணில் பட்டதுமே உயிரிழப்பது நிச்சயம்" என்று ராமரிடம் உறுதியோடு கூறுகிறுன்.

तां दृष्ट्वा तु पुरीं लङ्कां त्रिकूटशिखरे स्थिताम् ॥
हतं च रावणं युद्धे दर्शनादुपधारय । VI. 2. 10-11.

இதிலிருந்து அவனது பெருந்தன்மை புலனுகிறது. பேதோபாயத்திஞல் சுக்கிரீவனைத் தன் பக்கம் சேர்த்துக்கொள்வதற்காகச்

சுகன் என்ற ஒற்றனை ராவணன் அனுப்புகிறான். சுகன் வந்து அப்படியே சுக்கிரீவனிடம் ஏதோ தந்திரயாகப் பேசுகிறான். அவர்களுக்குள் என்ன பேச்சு நடந்தது என்பதை வால்மீகியே ஒன்றும் கூறவில்லை. சுக்கிரீவன் ராவணனுக்குச் சரியான பதில் சொல்லியனுப்புகிறான். மித்திரன் என்று கெட்ட மனிதன் சொல்வதைக் கேட்டுத் தன் கடமையினின்றும் தான் மீற முடியாது என்கிறான்.

न मेऽसि मित्रं न तथानुकम्प्यो न चोपकर्तासि न मे प्रियोऽसि ।
अरिश्च रामस्य सहानुबन्धः, न मेऽसि वालीव वधार्ह वध्यः ॥
निहन्म्यहं त्वां ससुतं सबन्धुं सज्ञातिवर्गं रजनीचरेश ।
लङ्कां च सर्वां महता बलेन क्षिप्रं करिष्यामि समेत्य भस्म ॥

VI. 20. 23-24.

"நீ ராமருக்கு விரோதி. உன்னால் எமக்கு ஒரு நன்மையும் ஏற்படாது. வாலி போன இடத்திற்குத்தான் நீயும் போக வேண்டும் என்பதே என் விருப்பம். உன்னை வதம் செய்து இந்த இலங்கையையும் தீக்கிரையாக்குவேன்" என்கிறான்.

சுக்கிரீவன் மற்றொரு சாகசகாரியம் புரிகிறான். அதையும் எடுத்துக் கூறுகிறேன். யுத்தம் இன்னும் சரியானபடி தொடங்கவில்லை. எல்லாரும் ஸுவேல மலைக்குச் சென்று, சந்திரோதயமானதும் இலங்கையையும் அதற்குச் செய்திருக்கும் பாதுகாப்புகளையும் பார்வையிடுகிறார்கள். திடீரென்று ராவணனை ஒழித்து விடுவதாகத் தான் செய்த பிரதிக்ஞை சுக்ரிீவனுக்கு நினைவு வருகிறது. பெரிய வீரனாகையால், மேலும் யோசியாமல், ஒருவரையும் கேட்காமலே கிளம்பி, ராவணன் இருக்குமிடம் சென்று யுத்தத்திற்கு அழைக்கிறான். மற்ற மல்ல யுத்தங்களை எல்லாம் இதற்கு இணையாகக் கூற முடியாது. வால்மீகி உள்ளூறப் பெரிய யுத்தவீரராக இருந்திருக்க வேண்டும். யுத்த காண்டம் முழுவதும் விதம் விதமான சண்டைகளை விதம்விதமாக வர்ணித்திருக்கிறார். அநேகமாக ஒரே விதமாக இருந்தாலும், பலத்துக்கு ஏற்ற பலத்தை இணைசேர்த்துச் சண்டைபோட வைப்பது, படிக்கும்பொழுது வியப்பில் ஆழ்த்துகிறது. ராவணனுக்கும் சுக்கிரீவனுக்கும் நடந்த சண்டை ஒரு பெரிய ஸர்க்கம் முழுவதும் வர்ணிக்கப்படுகிறது.

लोकनाथस्य रामस्य सखा दासोऽस्मि राक्षस । VI. 40. 10.

"நானும் ராமரும் நண்பர்கள். நான் அவருடைய தாசன். அவருக்கு உதவவே வந்திருக்கிறேன். என்னை அவர் தம்மைச் சேர்ந்தவனாகக் கருதுகிறார். நண்பன் என்ற முறையில் இருந்தாலும் நான் உண்மையில் அவருக்குத் தாசன்தான்" என்று சுக்கிரீவன் கூறுகிறான்.

கிஷ்கிந்தையில் அவர்கள் சந்தித்தபொழுது, அவர்கள் இருவரும் தம்மைச் சம அந்தஸ்து உள்ளவர்களாகவே நினைக்கின்றனர். சுக்கிரீவனே ராமருடைய குணத்தையும் பௌருஷத்தையும் பரீக்ஷித்துப் பார்க்கிறன். அதிலிருந்து அவருடைய மேன்மையை உணர்ந்து, அவருக்குத் தாசனுகிறன். ராவணனுடன் மல்யுத்தம் செய்யும்பொழுது அவனுடைய மகுடத்தைப் பறிக்கிறன். ராவணன் மிகவும் கோபமுற்றுச் சுக்கிரீவனை வெல்ல முடியாமல், தன் தந்திரங்களைக் கையாளத் தொடங்குகிறன். ராமருக்கு இந்தத் தந்திரங்கள் பிடிக்கமாட்டா என்று தெரியும் ஆகையால், சுக்கிரீவன் ராவணனைத் தக்கபடி அவமானப் படுத்தியாகிவிட்டது என்று நினைத்து, மீண்டும் கிளம்பி ராமர் இருக்குமிடம் வந்து சேருகிறன்.

'ராமபார்ஶ்வம்' என்ற சொல்லை எடுத்துக்கொண்டு, வியாக்கியானகாரர்கள், "ராமர்முன் வந்து நிற்பதற்கு வெட்கப்பட்டுக் கொண்டு அவர் பக்கத்தில் வந்து நின்றன்" என்று வியாக்கியானம் செய்திருக்கிறர்கள். அப்படிச் செய்வது ஏதோ சமத்காரமாக இருப்பதுபோல் தோன்றுகிறதேயன்றிச் சரியாகத் தோன்றவில்லை. ராமர் சுக்கிரீவனை, "என்ன சாகசம் செய்துவிட்டாய்! எனக்கு அடுத்தபடியாகச் சேனையை வகித்து நடத்துகிறவன் நீ. உன் உயிரையும் பொருட்படுத்தாமல் இவ்விதம் செய்யலாமா? யாரையும் கேட்காமல் பெரிய தவறு செய்துவிட்டாயே. எல்லாரையும் அல்லவா பேராபத்துக்கு உள்ளாக்கிவிட்டாய்? நீ சத்துருவின் கைகளில் சிக்கித் தவித்துக்கொண்டிருக்கும்பொழுது என்ன ஆகுமோ என்ற கவலையில் நான் பின்வரும் முடிவுக்கு வந்தேன்: 'சுக்கிரீவனுக்கு ஏதாவது நேர்ந்துவிட்டால் என்ன செய்வது? அதற்காக, வந்த காரியத்தை நிறுத்தாமல், ராவணனைக் கொன்று, சீதையை மீட்டு, விபீஷணனை இலங்கைக்கு அரசனுக்கி, அயோத்திக்குத் திரும்புவேன். அங்கே சென்று எனக்குப் பதிலாகப் பரதனை அயோத்திக்கு அரசனுக அபிஷேகம் செய்துவிட்டால் பிறகு என் காரியம் முடிந்தது' என்று நினைத்தேன்" என்று அன்போடு கடிந்துகொள்ளுகிறர். சுக்கிரீவன் வெட்கமடைந்து, "தங்கள் மனைவியைத் தூக்கிச் சென்றவனைப் பார்த்துக்கொண்டு என்னல் எப்படிப் பேசாமலிருக்க முடியும்? என் இரத்தம் கொதித்தது" என்கிறன்.

तव भार्यापहर्तारं दृष्ट्वा राघव रावणम् ।
मर्षयामि कथं वीर जानन् पौरुषमात्मनः ॥ VI. 41. 9.

மற்றொரு நிகழ்ச்சி: அதில் சுக்கிரீவன் நடந்துகொண்டதைப் பற்றி என்ன சொல்வதென்று எனக்குத் தெரியவில்லை. மலைபோல் கும்பகர்ணன் யுத்தகளத்தில் பிரவேசிக்கிறன். அனுமார்,

சுக்கிரீவன் போன்ற பெரிய வீரர்களுக்குக்கூட அவனுடன் போர் புரிவது லேசானதல்ல. வரும்பொழுதே வானரர்களைப் பிடித்துத் திறந்த வாயில் போட்டுக்கொண்டு வருகிறான். இரண்டு மூன்று ஸர்க்கங்கள், கும்பகர்ணனின் பிரம்மாண்டமான ஆகிருதியையும் பலத்தையும் விவரிக்கின்றன. கேவலம் முரட்டுப் பலத்தைக் காட்டும் சண்டையை ரசமாகக் கவி வர்ணிக்கிறார். கும்பகர்ணன் யுத்தகளத்துக்கு வந்தபொழுது, சுக்கிரீவன் அவனுக்கு எதிராக நிற்கிறான். பெரிய வீரனாக இருந்தாலும் கும்பகர்ணனுக்கு அவன் ஈடாவானா? கும்பகர்ணன் அவனை அப்படியே பிடித்துக் கக்கத்தில் இடுக்கிக்கொண்டு, ''தலைவனை வேலைதீர்த்தாகிவிட்டது. நான் போய் என் வெற்றியை முழக்குகிறேன்'' என்கிறான். அலட்சியமாக நடந்துகொண்டே சுக்கிரீவனை ஓர் இறுக்கு இறுக்குகிறான். இதைத் தூரத்திலிருந்து பார்த்துக்கொண்டிருந்த அனுமார், 'என் யஜமானர் அகப்பட்டுக்கொண்டிருக்கிறார். நான் பார்த்துக் கொண்டு பேசாமலிருப்பதா? அது தவறாயிற்றே! ஆயினும் சுக்கிரீவன் சாமர்த்தியசாலி; ஏதாவது உபாயம் செய்து தப்பித்துக் கொள்வார். நான் உதவிக்குச் சென்றால் பிறகு ஒருகாலும் மன்னிக்கமாட்டார். அவரை ஆபத்திலிருந்து விடுவிக்க என் உதவி வேண்டியிருந்தது என்று எங்கும் வெளியாகிவிடும்' என்று யோசிக்கிறார். அனுமார் நினைத்தது போலவே சுக்கிரீவன் தப்பித்து கொள்ள வழி கண்டுபிடிக்கிறான். மெள்ளத் திமிறிக்கொண்டு கும்பகர்ணனின் மூக்கைக் கடித்துக் கைநகங்களினால் காதுகளைப் பிய்த்தெறியவும் கும்பகர்ணன் அவனைப் பொத்தென்று கீழே விடுகிறான். உடனே சுக்கிரீவன் கிளம்பி ராமர் இருக்குமிடம் வந்து சேருகிறான்.

சுக்கிரீவன் அநேக வீரச்செயல்கள் புரிகிறான். மூன்று பெரிய அரக்கர்களை வதம்செய்த பெருமை அவனைச் சேர்ந்தது. அனுமார், அங்கதன், சுக்கிரீவன் ஆகிய மூவரும் முறையே மூன்று ராக்ஷசர்களை வதம் செய்கிறார்கள். சுக்கிரீவன் கொன்றது கும்பன், விரூபாக்ஷன், மகோதரன் ஆகியோரை. இவர்களைக்காட்டிலும் உயர்ந்த வீரர்களை அனுமார் யமனுலகுக்கு அனுப்புகிறார். மகோதரன் வதத்தை வால்மீகியே மிகவும் உற்சாகத்துடன் வர்ணிக்கிறார்.

சுக்கிரீவனுடைய ஒரு மேலான குணத்தை இப்பொழுது எடுத்துக்கொள்ளலாம் என்று நினைக்கிறேன். முதலிலிருந்தே அவன் தாக்ஷிண்யமின்றிக் கடும் தண்டனை விதிப்பவன் என்று கூறப் படுகிறான். சிறிய குற்றத்துக்கும் மரணதண்டனை அளித்துவிடுவான். அப்படியிருந்தும் ராமாயணம் முழுவதும் ஓரிடத்திலாவது சுக்கிரீவன் யாருக்கும் அத்தகைய தண்டனை விதித்ததாகத் தெரியவில்லை. ஆயினும் எல்லாருக்கும் அவனிடம் அத்தகைய பயம். நூற்றுக் கணக்கான வானரர்கள் மதுவனத்தை அழித்தபொழுது, அவன்

னைமுற்று அவர்கள் அனைவரையும் கொன்றுவிடும்படி உத்தரவிட்டிருக்கலாம். அனுமார் இலங்கையினின்றும் வெற்றியுடன் திரும்பி வந்தபொழுது ஏற்பட்ட மகிழ்ச்சியில், வானரர்கள் மதுவனத்திற்குள் நுழைந்து, பழங்களைத் தின்று, மரங்களை நாசம்செய்து, தேனையெல்லாம் குடித்துவிடுகிறார்கள். அந்த வனத்தைக் காத்து வருகிறவனான ததிமுகன் என்பவன், அனுமார் உட்பட எல்லா வானரர்களும் இவ்வாறு வனத்தை அழிப்பதைக் கண்டு அவர்களிடம் சென்று தடுக்கிறான். ஆனால் அவர்கள் அலட்சியமாகத் தங்கள் பின்புறத்தைக் காட்டினதாகக் கவி வேடிக்கையாகக் கூறுகிறார். இவர்கள் செய்த அடாத காரியங்கள் சுக்கிரீவனுக்கு உடனே அறிவிக்கப்படுகின்றன. அதைக் கேட்டுச் சுக்கிரீவன் ராமரிடம், "இந்த வானரர்கள் இப்படித் தைரியமாக மதுவனத்தில் புகுந்து துவம்சம் செய்ய மாட்டார்கள். அவர்கள் தேவியைப் பார்த்துவிட்டுத்தான் வந்திருக்க வேண்டும். குற்றம் செய்தாலும் அவர்களை நான் தண்டிக்கப்போவதில்லை. அவர்கள் பெரிய காரியத்தைச் சாதித்துவிட்டு வந்திருக்கிறார்கள்" என்கிறான்.

இப்பொழுது இவ்வளவு உயர்ந்த குணமுள்ளவனான சுக்கிரீவனிடம் ஒரு குறையையும் எடுத்துக் கூறப் போகிறேன். சிறந்த குணங்களிடையே அவனுக்கு ஒவ்வொரு சமயம் சிறிது பலக் குறைவு ஏற்படுகிறது. அவன் மனவுறுதி தளருகிறது. சுயம்பிரபையின் குகையினின்றும் வெளிவந்த வானரர்கள் சம்பாதியின் உதவியினால் சீதை இருக்குமிடம் தெரிந்து இலங்கைக்கு எப்படிச் செல்வதென்று யோசித்துக்கொண்டிருந்தபொழுது, சுக்கிரீவன் கொடுத்திருந்த தவணை முடிந்து தங்கள் காரியம் வெற்றியில்லாமற் போனதற்காக மரணதண்டனை ஏற்க வேண்டுமே என்று எண்ணிப் பிராயோபவேசம் செய்வதாகத் தீர்மானிக்கிறார்கள். தங்கள் உயிரை மாய்த்துக் கொள்வதுதான் நியாயமானது என்று கூறியவன் அங்கதன். அப்பொழுது அங்கதனுடைய மாமனான தாரன், "எல்லாரும் சுயம்பிரபையின் குகையில் போய் வசிக்கலாம்" என்கிறான். அங்கதன் அதற்குச் சம்மதிப்பவன் போல் தோன்ற, அனுமார் கலவரமடைந்து பலவிதமாய்ப் பேசி அங்கதனது மனத்தைத் திருப்ப முயல்கிறார். "சுக்கிரீவன் உனக்கு எவ்வளவோ செய்திருக்கிறான். அவனுக்குப் பிறகு அரசனாகப் போகிறவன் நீ. உனக்கு அவன் ஒரு தீங்கும் செய்யமாட்டான். நாம் எல்லாரும் திரும்பிப் போய்விடுவோம்" என்கிறார்.

स्थैर्यं सत्त्वं मनश्शौचमानृशंस्यमथार्जवम् ।
विक्रमश्चैव धैर्यं च सुग्रीवे नोपपद्यते ॥
भ्रातुर्ज्येष्ठस्य यो भार्यां जीवतो महिषीं प्रियाम् ।
धर्मेण मातरं यस्तु स्वीकरोति जुगुप्सितः ॥

कथं स धर्मं जानीते येन भ्रात्रा महात्मना ।
युद्धायाभिनियुक्तेन बिलस्य पिहितं मुखम् ॥ IV. 55. 2-4.

"தமையன் குகையினுள் சென்றிருக்கிறான் என்று தெரிந்திருந்தபொழுது அதன் வாயிலைப் பெரிய பாறையினால் அடைத்துவிட்டு ஊருக்கு வந்து அரசனாக அபிஷேகம் செய்துகொண்டு தமையன் மனைவியையும் ஸ்வீகரித்துக்கொண்டவன் ஓர் உயர்ந்த மனிதனா? அவன் கடமையுள்ள சகோதரன் ஆவானா?" என்று அங்கதன் ஆக்ஷேபிக்கிறான். வாலி மாயாவியைக் கொல்லவில்லை; மாயாவிதான் வாலியைக் கொன்றுவிட்டான் என்று சுக்கிரீவன் அப்பொழுது நம்பியிருக்கலாம். அவன் அப்படி நினைப்பதற்கு ஏதாவது காரணங்கள் இருந்தனவா என்று கவி கூறவில்லை. சுக்கிரீவனும் ஒன்றும் இருப்பதாகச் சொல்லவில்லை. ஒரு வருஷம் காத்திருந்த பிறகு, குகைக்கு வெளியே இரத்தம் பெருகுவதைக் காண்கிறான். அது வாலியினுடைய இரத்தம் என்று நினைத்துச் சுக்கிரீவன் அந்த அசுரனை வெளியே வராவண்ணம் தடுக்கும்பொருட்டுப் பாறையினால் குகைவாசலை மூடிவிடுகிறான். "சந்தேகம் இருந்தால் உள்ளே போய்ப் பார்த்திருக்கலாமே! வானரர்களை அழைத்துப் போயிருக்கலாமே!" என்றெல்லாம் கேள்விகள் தோன்றக்கூடும் அல்லவா? ஆயினும் கவி, சுக்கிரீவன் தவறிழைத்ததாகக் கூறவில்லை. அவன் வாலிக்குப் பதில் அரசனாகச் சிம்மாசனத்தில் வீற்றிருக்க விரும்பவில்லை. மந்திரிகள் அவனை வற்புறுத்தவே அவன் அரைமனத்துடன் அதற்குச் சம்மதித்தான் என்கிறார்.

இந்தச் சமயத்தில் சுக்கிரீவன் நல்ல மனஉறுதியுள்ளவனாகத் தோன்றவில்லை. சௌகரியமான இரண்டு வழிகள் இருக்கும்பொழுது, சுலபமும் அதிகப் பயனுள்ளதுமான வழியையே தேர்ந்தெடுக்கத் தோன்றும் அல்லவா? அங்கதன் தாயாதி; இறந்து போன வாலியின் மகன். ஆகையால் அவன் சுக்கிரீவனைப்பற்றித் தவறாக நினைப்பது நியாயமே அல்லவா? அவனை எப்படிக் குற்றம் கூறுவது? 'சுக்கிரீவன் அவசரக்காரன். எப்பொழுதும் தனக்குச் சாதகமான லகுவான வழியையே பின்பற்றக்கூடியவன். சகோதரனான வாலியை வஞ்சித்ததுடன், ஆணையிட்டு நட்புப் பூண்ட ராமரிடமே நன்றியற்றவனாக இருக்கிறான்' என்று அங்கதன் சுக்கிரீவனைக் குற்றம் சாட்டுகிறான். "ராமரையே மறந்தவன் வேறு யாரைத்தான் மறக்க மாட்டான்?" என்கிறான்.

सत्यात् पाणिगृहीतश्च कृतकर्मा महायशाः ।
विस्मृतो राघवो येन स कस्य तु कृतं स्मरेत् ॥ IV. 55. 5.

அங்கதன் கூறியது தவறு. சுக்கிரீவன் வானரர்கள் யாவரையும் ஒன்றுகூட்டிச் சீதையைத் தேடுவதற்கு ஏற்பாடு

னைமுற்று அவர்கள் அனைவரையும் கொன்றுவிடும்படி உத்தரவிட்டிருக்கலாம். அனுமார் இலங்கையினின்றும் வெற்றியுடன் திரும்பி வந்தபொழுது ஏற்பட்ட மகிழ்ச்சியில், வானரர்கள் மதுவனத்திற்குள் நுழைந்து, பழங்களைத் தின்று, மரங்களை நாசம்செய்து, தேனையெல்லாம் குடித்துவிடுகிறார்கள். அந்த வனத்தைக் காத்து வருகிறவனான ததிமுகன் என்பவன், அனுமார் உட்பட எல்லா வானரர்களும் இவ்வாறு வனத்தை அழிப்பதைக் கண்டு அவர்களிடம் சென்று தடுக்கிறான். ஆனால் அவர்கள் அலட்சியமாகத் தங்கள் பின்புறத்தைக் காட்டினதாகக் கவி வேடிக்கையாகக் கூறுகிறார். இவர்கள் செய்த அடாத காரியங்கள் சுக்கிரீவனுக்கு உடனே அறிவிக்கப்படுகின்றன. அதைக் கேட்டுச் சுக்கிரீவன் ராமரிடம், ''இந்த வானரர்கள் இப்படித் தைரியமாக மதுவனத்தில் புகுந்து துவம்சம் செய்ய மாட்டார்கள். அவர்கள் தேவியைப் பார்த்துவிட்டுத்தான் வந்திருக்க வேண்டும். குற்றம் செய்தாலும் அவர்களை நான் தண்டிக்கப்போவதில்லை. அவர்கள் பெரிய காரியத்தைச் சாதித்துவிட்டு வந்திருக்கிறார்கள்'' என்கிறான்.

இப்பொழுது இவ்வளவு உயர்ந்த குணமுள்ளவனான சுக்கிரீவனிடம் ஒரு குறையையும் எடுத்துக் கூறப் போகிறேன். சிறந்த குணங்களிடையே அவனுக்கு ஒவ்வொரு சமயம் சிறிது பலக் குறைவு ஏற்படுகிறது. அவன் மனவுறுதி தளருகிறது. சுயம்பிரபையின் குகையினின்றும் வெளிவந்த வானரர்கள் சம்பாதியின் உதவியினால் சீதை இருக்குமிடம் தெரிந்து இலங்கைக்கு எப்படிச் செல்வதென்று யோசித்துக்கொண்டிருந்தபொழுது, சுக்கிரீவன் கொடுத்திருந்த தவணை முடிந்து தங்கள் காரியம் வெற்றியில்லாமற் போனதற்காக மரணதண்டனை ஏற்க வேண்டுமே என்று எண்ணிப் பிராயோபவேசம் செய்வதாகத் தீர்மானிக்கிறார்கள். தங்கள் உயிரை மாய்த்துக் கொள்வதுதான் நியாயமானது என்று கூறியவன் அங்கதன். அப்பொழுது அங்கதனுடைய மாமனான தாரன், ''எல்லாரும் சுயம்பிரபையின் குகையில் போய் வசிக்கலாம்'' என்கிறான். அங்கதன் அதற்குச் சம்மதிப்பவன் போல் தோன்ற, அனுமார் கலவரமடைந்து பலவிதமாய்ப் பேசி அங்கதனது மனத்தைத் திருப்ப முயல்கிறார். ''சுக்கிரீவன் உனக்கு எவ்வளவோ செய்திருக்கிறான். அவனுக்குப் பிறகு அரசனாகப் போகிறவன் நீ. உனக்கு அவன் ஒரு தீங்கும் செய்யமாட்டான். நாம் எல்லாரும் திரும்பிப் போய்விடுவோம்'' என்கிறார்.

स्थैर्यं सत्त्वं मनश्शौचमानृशंस्यमथार्जवम् ।
विक्रमश्चैव धैर्यं च सुग्रीवे नोपपद्यते ॥
भ्रातुर्ज्येष्ठस्य यो भार्यां जीवतो महिषीं प्रियाम् ।
धर्मेण मातरं यस्तु स्वीकरोति जुगुप्सितः ॥

कथं स धर्मं जानीते येन भ्रात्रा महात्मना ।
युद्धायाभिनियुक्तेन बिलस्य पिहितं मुखम् ॥ IV. 55. 2-4.

"தமையன் குகையினுள் சென்றிருக்கிறுன் என்று தெரிந்திருந்தபொழுது அதன் வாயிலேப் பெரிய பாறையினுல் அடைத்துவிட்டு ஊருக்கு வந்து அரசஞக அபிஷேகம் செய்துகொண்டு தமையன் மனேவியையும் ஸ்வீகரித்துக்கொண்டவன் ஓர் உயர்ந்த மனிதனு? அவன் கடமையுள்ள சகோதரன் ஆவானு?" என்று அங்கதன் ஆக்ஷேபிக்கிறுன். வாலி மாயாவியைக் கொல்லவில்லே; மாயாவிதான் வாலியைக் கொன்றுவிட்டான் என்று சுக்கிரீவன் அப்பொழுது நம்பியிருக்கலாம். அவன் அப்படி நினேப்பதற்கு ஏதாவது காரணங்கள் இருந்தனவா என்று கவி கூறவில்லே. சுக்கிரீவனும் ஒன்றும் இருப்பதாகச் சொல்லவில்லே. ஒரு வருஷம் காத்திருந்த பிறகு, குகைக்கு வெளியே இரத்தம் பெருகுவதைக் காண்கிறுன். அது வாலியினுடைய இரத்தம் என்று நினேத்துச் சுக்கிரீவன் அந்த அசுரனே வெளியே வராவண்ணம் தடுக்கும்பொருட்டுப் பாறையினுல் குகைவாசலே மூடிவிடுகிறுன். "சந்தேகம் இருந்தால் உள்ளே போய்ப் பார்த்திருக்கலாமே! வானரர்களே அழைத்துப் போயிருக்கலாமே!" என்றெல்லாம் கேள்விகள் தோன்றக்கூடும் அல்லவா? ஆயினும் கவி, சுக்கிரீவன் தவறிழைத்ததாகக் கூறவில்லே. அவன் வாலிக்குப் பதில் அரசஞகச் சிம்மாசனத்தில் வீற்றிருக்க விரும்பவில்லே. மந்திரிகள் அவனே வற்புறுத்தவே அவன் அரைமனத்துடன் அதற்குச் சம்மதித்தான் என்கிறுர்.

இந்தச் சமயத்தில் சுக்கிரீவன் நல்ல மனஉறுதியுள்ளவஞகத் தோன்றவில்லே. சௌகரியமான இரண்டு வழிகள் இருக்கும் பொழுது, சுலபமும் அதிகப் பயனுள்ளதுமான வழியையே தேர்ந்தெடுக்கத் தோன்றும் அல்லவா? அங்கதன் தாயாதி; இறந்து போன வாலியின் மகன். ஆகையால் அவன் சுக்கிரீவனேப்பற்றித் தவருக நினேப்பது நியாயமே அல்லவா? அவனே எப்படிக் குற்றம் கூறுவது? 'சுக்கிரீவன் அவசரக்காரன். எப்பொழுதும் தனக்குச் சாதகமான லகுவான வழியையே பின்பற்றக்கூடியவன். சகோதரனை வாலியை வஞ்சித்ததுடன், ஆணேயிட்டு நட்புப் பூண்ட ராமரிடமே நன்றியற்றவஞக இருக்கிறுன்' என்று அங்கதன் சுக்கிரீவனேக் குற்றம் சாட்டுகிறுன். "ராமரையே மறந்தவன் வேறு யாரைத்தான் மறக்க மாட்டான்?" என்கிறுன்.

सत्यात् पाणिगृहीतश्च कृतकर्मा महायशाः ।
विस्मृतो राघवो येन स कस्य तु कृतं स्मरेत् ॥ IV. 55. 5.

அங்கதன் கூறியது தவறு. சுக்கிரீவன் வானரர்கள் யாவரையும் ஒன்றுகூட்டிச் சீதையைத் தேடுவதற்கு ஏற்பாடு

செய்திருப்பது தெரிந்து லக்ஷ்மணன் சுக்கிரீவனிடம் மன்னிப்புக் கேட்டது நமக்குத் தெரியும் அல்லவா? இது அங்கதனுக்கும் தெரியும். அப்படி இருந்தும் ராமருக்குச் செய்ய வேண்டிய கடமையைச் சுக்கிரீவன் மறந்துவிட்டதாக அவனைக் குற்றம் சாட்டுகிறான்.

"'வானர சேனையை அனுப்பாவிட்டால் நன்றியற்றவனாகத் தவறு செய்தவனாவேனே' என்று அவனுக்குப் பயமா, அல்லது லக்ஷ்மணனது வில்லிலிருந்து கிளம்பும் பாணங்களைக் கண்டு பயமா?" என்று கேட்கிறான்.

लक्ष्मणस्य भयाधेन नाधर्मभयभीरुणा ।
आदिष्टा मार्गितुं सीता धर्मस्तस्मिन् कथं भवेत् ॥ IV. 55. 6.

"கடமையுணர்ச்சி அல்ல; பயமேதான் அதற்குக் காரணம்" என்று சுக்கிரீவனைப் பழித்துப் பேசுகிறான்.

न चाहं यौवराज्येन सुग्रीवेणाभिषेचितः ॥
नरेन्द्रेणाभिषिक्तोऽस्मि रामेणाक्लिष्टकर्मणा । IV. 53. 30-31.

"என்னை யுவராஜ பதவியில் ஏற்றியவன் சுக்கிரீவன் அல்ல; ஸ்ரீராமரே அல்லவா?" என்கிறான். அங்கதன் கூறியது உண்மை. அவனை யுவராஜாவாக ஆக்கியவர் ராமர்தாம்.

स पूर्वं बद्धवैरो मां राजा दृष्ट्वा व्यतिक्रमम् ॥
घातयिष्यति दण्डेन तीक्ष्णेन कृतनिश्चयः । IV. 53. 31-32.

"நான் திரும்பிச் சென்றால், தன் ஞாதி தனக்குப் பிறகு அரசனாகக் காத்திருப்பவன் என்று சுக்கிரீவன் என்னைப்பற்றி நினைத்துக் கொள்வான். உடனே எனக்கு மிகக் கடுமையான தண்டனை விதிப்பான்" என்று அங்கதன் மேலும் கூறுகிறான்.

வால்மீகி இங்கு ஒரு முக்கியமான விஷயத்தைக் குறிப்பிடுகிறார். இப்படியெல்லாம் பேசிவிட்டு அங்கதன், அனுமாரையும் மற்றுமுள்ள வானரர்கள் யாவரையும் நோக்கி, "நீங்கள் உங்கள் இஷ்டப்படி செய்யலாம். பிராயோபவேசம் செய்து உயிரை மாய்த்துக்கொள்ள எனக்கு முழுச் சம்மதம் என்றாலும் உங்கள் முடிவின்படி நடக்க எனக்கு ஆக்ஷேபம் இல்லை" என்கிறான். அவர்கள் யோசித்துத் தீர்மானம் செய்வதைத் தான் பின்பற்றுவதாக அவன் கூறியதும், வானரர்கள் அனைவரும் அவனது பணிவைக் கண்டு சந்தோஷித்து அவன்பக்கம் பேசத் தொடங்குகிறார்கள்.

विवेश चाङ्गदो भूमौ रुदन् दर्भेषु दुर्मनाः ।
तस्य संविशतस्तत्र रुदन्तो वानरर्षभाः ॥

नयनेभ्यः प्रमुमुचुरुष्णं वै वारि दुःखिताः ।
सुग्रीवं चैव निन्दन्तः प्रशंसन्तश्च वालिनम् ॥ IV. 55. 17, 18.

"சுக்கிரீவன் அரசனுவதற்கு உரிமையற்றவன். வாலி மிகவும் நல்லவன்" என்றெல்லாம் சுக்கிரீவனை நிந்தித்தும் வாலியைக் கொண்டாடியும் வானரர்கள் பேசுகிறுர்கள். பிறகு ராமருடைய உதவிக்காகச் சுக்கிரீவன் திரட்டிய வானரசேனையின் கணக்கும் பலமும் விரிவாகக் கூறப்பெறுகின்றன. வாலியைக் கொன்ற ராமரால் சுக்கிரீவனுக்கு எல்லா வலிமையும் கிட்டுகிறது. ராமருடைய உதவியினுல் அவன் பெரும் சக்தியுள்ளவனுகிறுன். இத்தகைய திரண்ட பலத்தையுடையவன் யுத்தத்தில் எவ்வாறு தோல்வியடைவான்?

## 14

### விபீஷணன் தேசத்துரோகியா?

1907-ஆம் வருஷத்தில் பாரதநாட்டின் அரசியல் உலகில் ஒரு சம்பவம் நிகழ்ந்தது. அதை வைத்து இன்று பிரசங்கத்தைத் தொடங்கலாம் என்று எண்ணுகிறேன். பிரசித்தி பெற்ற தாதாபாய் தலைமையில் காங்கிரஸ் மகாநாடு முடிந்தது. தாற்காலிகமாக எல்லாரும் எதிர்பார்த்துப் பயந்த பிளவு, காங்கிரஸில் உண்டாகவில்லை. அடுத்த வருஷம் பிளவு ஏற்படாத படி பார்த்துக்கொள்ள வேண்டுமெனக் காங்கிரஸ் அங்கத்தினர்கள் நினைக்கலாயினர். ஆனால் அவர்களின் எண்ணம் பலிக்கவில்லை. 1906-ஆம் வருஷத்துக் காங்கிரஸ் மகாநாடு முடிந்ததும், அதில் முக்கியப் பங்கு கொண்டிருந்த கோகலே, இந்தியாவில் பல இடங்களில் கூட்டம் போட்டுப் பேசி, பிரிட்டிஷ் ஆட்சியின் தொடர்பை அறவே ஒழிப்பதும், பிரிட்டிஷ் சம்பந்தமான யாவற்றையும் அடியோடு விலக்குவதுமான செயல்கள் பெரும் தீங்குக்குக் காரணமாகும் என்பதை இளைஞர்களுக்கு எடுத்துக்காட்ட நினைத்தார். வட இந்தியாவில் சுற்றுப்பயணம் செய்து அவர் செய்த பிரசங்கங்களுக்கு நல்ல பயன் ஏற்பட்டது. காங்கிரஸின் பலத்தைக் குறைக்க வேண்டுமென்று பல இன்னல்களைக் கிளப்பியவர்களின் உள்ளத்தில் மேற்படி பிரசங்கங்களைக் கேட்டதனால் வேதனை உண்டாயிற்று.

அந்தக் காலத்தில் வங்காளத்தில் 'வந்தே மாதரம்' என்ற ஒரு தினசரிப் பத்திரிகை மிகவும் பிரபலமாக இருந்தது. அரவிந்த கோஷ்தாம் அதன் ஆசிரியர். கோகலேயின் பிரசங்கங்கள் அந்தப் பத்திரிகையில் அப்படியே பிரசுரமாயின. ஒரு நாள் 'விபீஷணன் ஒழிக!' என்று அதில் வெளியான தலையங்கம் எல்லாருக்கும் வியப்பை உண்டாக்கியது. பிரிட்டிஷ் ஆட்சியின் கட்சியைச் சேர்ந்தவராகக் கோகலே பேசியது, வெகு வேகத்துடன் கிளம்பியிருந்த காங்கிரஸுக்கு விரோதம் அல்லவா? சொந்த அண்ணனான ராவணனை விட்டு, எதிரிக் கட்சியைச் சேர்ந்த ராமனிடம் சென்ற விபீஷணனை ஒத்திருந்தது அவர் செய்கை என்பதே அதன் தாத்பர்யம். என் குருவான கோகலேயைப்

பற்றிக் குறிப்பிட்டது எனக்கு வருத்தத்தை அளித்தது. அதுவும் துரோகி என்பதற்கு விபீஷணனைக் கூறியது, பின்னும் அதிகமான வருத்தத்தை உண்டுபண்ணியது. விபீஷணன் பெரிய பக்தன்; தர்மத்தையே பெரிதாகக் கருதி அதைச் சிரத்தையுடன் அநுசரிப் பவர்களுக்கு ஓர் உதாரண புருஷனாக விளங்குகிறவன் என்ற நம்பிக்கையுள்ளவன் நான். அத்தகைய விபீஷணன் தர்மத்தைக் கைவிட்டுத் தன் நாட்டையும் தன் உறவினர்களையும் எதிரிகளின் தாக்குதலுக்கு உள்ளாக்கியதாக ஜனங்கள் தூற்றும்படிச் செய்வதா? அவ்விதம் இதுவரையும் விபீஷணனை ஒரு துரோகியாக நான் கருதியதே இல்லை.

விசாரித்துப் பார்த்ததில், ஓர் உன்னதமான கொள்கையைக் கைவிட்டு நம்பிக்கைத் துரோகியாக இருப்பவனை 'விபீஷணன்' என்று கூறுவது வட இந்தியாவில் வழக்கம் என்று தெரிந்ததும், எனக்கு மிகவும் வருத்தமாக இருந்தது. ராமாயணத்தைப் படித்து அநுபவிப்பதில் வட இந்தியா தென்னிந்தியா ஆகிய இரண்டுக்கும் உள்ள பெரிய வித்தியாசம் புலனாயிற்று. ஆயினும், நன்றாக விசாரித்துப் பார்த்ததில், நான் அந்தச் சமயத்தில் கருதியபடி அவ்வளவு அதிகமான வேற்றுமை இல்லை என்று தெரிந்தது. இந்தப் பக்கத்திலும் அரசியலுணர்ச்சியில் ஈடுபட்டு விபீஷணனை இகழ்ச்சிக்கும் நிந்தனைக்கும் ஆளாக்கிப் பேசுவோர் அநேகர் உண்டு. வட இந்திய நாடுகளிலும் அவனை உயர்ந்தவனாக மதிப்பவர் பலர் இருக்கலாம். ஆயினும், கணக்கெடுத்துப் பார்த்தால் அவனுக்கு விரோதமாக இருப்பவர்களே அங்கே அதிகம் இருப்பார்கள். வால்மீகியே விபீஷணனை மிகவும் உத்தம மானவனாக ராமாயணத்தில் வர்ணித்திருக்கிறார். ஆயிரமாயிரம் ஆண்டுகளாகப் பக்தர்களுக்குள் ஓர் உன்னதலட்சியமாக விளங்கு கிறவன், விசிஷ்டாத்வைதக் கொள்கையின்படி பிரபத்தி தத்து வத்தை முறைப்படி கடைப்பிடித்தவன் என்றெல்லாம் போற்றக் கூடிய விபீஷணன், அரசியல்வெறி பிடித்தவர்களால் இகழ்ச்சிக்கும் நிந்தனைக்கும் ஆளாவது ஒரு பெரும் துரதிருஷ்டம் என்று எனக்குத் தோன்றுகிறது. அதைப்பற்றி எனக்கு வருத்தமாகவே இருக்கிறது.

இன்று, பழைய சம்பிரதாயக் கருத்துக்களில் சிரத்தையுள்ள நாம் விபீஷணனைத் தவறாக நினைக்காமல், வால்மீகி வர்ணித்தபடி நேரான விதத்தில் எடுத்துக்காட்ட விரும்புகிறேன். அக்காலத்து ரீதிக்கேற்ப, விபீஷணன் மிகவும் நேர்மையான மனிதன். இக் காலத்து ரீதிக்கும் ஏற்றபடி அவன் மிகவும் நேர்மையானவனே என்றுதான் கூற வேண்டும். விபீஷணனுடைய குணத்தைச் சற்று ஆராய்ந்து பார்ப்போம். முதலில், 'துரோகி என்பவன் யார்?' என்ற கேள்வி எழுகிறது. தேசத்தை முற்றுகையிட்டு, யுத்தத் திற்கு வந்திருக்கும் சத்துருவினிடம் சொந்த நாட்டையும்

மக்களையும் காட்டிக் கொடுப்பவன் 'நம்பிக்கைத் துரோகி' என்று அழைக்கப்படுகிறான். அரசியல்வாதி அல்லது சமூகத் தொண்டாற்றுகிறவன் தன் சொந்த நலனுக்காக, வேறு பதவியோ பட்டமோ பெறுவதற்காக, நாட்டின் விடுதலைக்காகப் பாடுபடும் தேசபக்தர்களின் முயற்சிகளைக் கெடுத்தானானால் அவனை நாம் தேசத் துரோகி என்று கருதுகிறோம். அரசியல் கட்சிகளுள் எழும் ஆழ்ந்த துவேஷத்தைப் பற்றி எனக்கு என்றுமே நல்ல எண்ணம் கிடையாது. அரசியல் நம் வாழ்க்கையில் மேலாக உள்ளது தானே! அது உட்புகுந்து நம் உண்மையான இயல்பின் அடித் தளம் வரையிலும் செல்ல முடியுமா? நம் பரலோக வாழ்வுக்கும் அதற்கும் ஒரு சம்பந்தமும் இல்லை. அதனால் கடவுளின் அருளையும் நாம் பெற இயலாது. அப்படி இருக்க, அரசியல் கொள்கை ஒன்றைப் பின்பற்றியவர்கள், அதற்கு விரோதமான கொள்கை யுடையவர்களை, அவர்கள் எவ்வளவு நல்லவர்களாக இருந்தாலும், சமூகத்துக்கு வேறு வழிகளில் எவ்வளவு பெரிய சேவை செய்தாலும், எவ்வளவு உத்தமமான மனிதர்களாக இருந்தாலும், நாட்டிற்கே பெரும் விரோதிகள் என்று பழித்துப் பேசுவானேன்?

அரசியலில் எல்லாக் கட்சிகளுக்கும்தான் இடம் இருக்கிறது என்று எனக்குத் தோன்றுகிறது. சகல அரசியல் உண்மையும் அறிவும் ஒரே கட்சியில்தான் இருக்கும் என்பதில்லை. நல்ல சட்ட திட்டத்தோடு கூடிய ஒவ்வோர் அரசியல் கட்சியிலும் நல்ல அரசியலறிவும் உண்மையும் இருக்கத்தான் இருக்கும் என்பது தெரிந்தால் எந்தக் கட்சிக்கும் மற்றக் கட்சிகளுடைய உதவி வேண்டியிருக்கும். தேசசேவை செய்வதில் எல்லாக் கட்சி களும் ஒன்றுக்கொன்று வேண்டியவையே. காலக் கோளாறு காரணமாக, ஒருவர் ஒரு கட்சியில் இருந்துகொண்டு மற்றொருவர் செய்யும் வேலைக்குக் குந்தகமாகவும் இருக்கலாம். ஆனால், நமக்கு விரோதமான கட்சியில் இருப்பவர்கள் என்பதற்காக, உயர்ந்த மனிதர்களை அவதூறு செய்யலாகாது. இந்த விஷயத்தை இன்றைப் பிரசங்கம் ஆரம்பிக்கு முன்பு கொஞ்சம் விவரித்துச் சொல்ல வேண்டுமென்று நினைத்தேன். பெயர், சொத்து, கோர்ட்டு விவகாரம் இவை யாவையும் விட, அரசியல் விவகாரங்களில் ஈடுபட்டு ஒருவரையொருவர் வாயில் வந்தபடி அவதூறு செய்வது அதிகமாக இருக்கிறது. இதுதான் எனக்கு விளங்குவதில்லை. நம் பிள்ளைகள் அரசியலைப்பற்றித் தெரிந்துகொள்ளாமலிருப்பதே நல்லது என்று நான் நினைக்கிறேன்.

எதிர்க் கட்சியின் தலைவன் என்பதற்காக, ஒரு பெரிய மனிதனை மிகக் கேவலமாக இழிவுபடுத்திப் பேசத் தொடங்குகிறார்கள் இளைஞர்கள். தேசத்துக்கு நலம் ஏற்பட வேண்டுமானால், ஒன்று, அவன் சாக வேண்டும்; அல்லது, அவனை வேலைதீர்க்க வேண்டும்

என்றெல்லாம் நினைத்து விடுகிறார்கள். நற்குணமும் நற்பண்புகளும் உடையவர்கள் எல்லா அரசியல் கட்சிகளிலும் இருப்பார்கள். இளைஞர்கள் இப்படிக் குறுகிய மனப்பான்மையோடு இருப்பது தவறு என்று, கல்லூரி மாணவர்களுக்கு நன்கு போதிப்பவன் பேருபகாரியாவான். என் வாழ்நாளில் அந்த ஆசை நிறைவேறப் போவதில்லை. இளைஞர்கள் வயதானவர்களைப் பழிப்பதில் குதூகலம் அடைகிறார்கள். நானே நிறைய அநுபவித்திருக்கிறேன். உண்மையிலேயே நாடு போற்றக்கூடிய உத்தமர்கள் இளைஞர்களால் அநியாயமாக அவதூறு செய்யப்படுவதுண்டு. ஜனநாயக அரசியலில் இது முக்கிய அம்சம் என்று கூறலாம். ஜனநாயகம் இல்லாத காலத்தில் இம்மாதிரி நடக்கவில்லை. இது அமெரிக்கா இங்கிலாந்து ஆகிய இரண்டு நாடுகளிலும் மிகவும் சகஜமாக இருக்கிறது. வெகு காலமாக அரசியலில் வேரூன்றியுள்ள நாடுகள் அவை. ஜனநாயகத்தினால் அங்கு நன்மையைவிடத் தீமைகளே அதிகம் விளைந்திருக்கின்றன என்பது என் அந்தரங்க அபிப்பிராயம்.

அனைத்திலும் சிறந்த ஆட்சி ஜனநாயக ஆட்சிதான். ஆனால் அதில் இருப்பவர்கள் நேர்மையும் மனத்திடமும் உள்ளவர்களாக இருக்க வேண்டும். அநுபவமில்லாதவர்கள் அதைப் பெரிதும் கெடுதலாக்கிவிடுகிறார்கள். தூற்றுதலும் பகையுமே அரசியலின் நிரந்தரமான அம்சங்கள் என்று கருதுகிறவர்கள் அவர்கள். இந்தத் தீமை அந்நிய நாட்டிலிருந்து நம் நாட்டில் புகுந்திருக்கிறது. இதை வேருடன் கல்லிப் பறித்து எறிய வேண்டும். சிறந்த பக்தனான விபீஷணனை இழிவாக்கிப் பேசுவதற்கும் இதுவே காரணம் என்ற எண்ணம்தான், என்னைப் பெரிய பிரசங்கம் செய்யத் தூண்டியிருக்கிறது. நமது அரசியல் ஒழுங்காக இருந்தால், 'தேசபக்தி' என்ற சொல்லுக்கு இந்தக் காலத்தில் நினைக்கும் பொருள் இல்லாமலிருந்தால், விபீஷணனுடைய பெயருக்கும் இத்தகைய மாசு ஏற்பட்டிருக்காது.

தேசபக்தி என்றால் என்ன? என் பேச்சில் நான் உபயோகிக்கும் சொற்களில் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். அரசியலில் ஒரு கட்சியைச் சேர்ந்தோர், தேசத்தலைவர் யாராவது பேசும் பொழுது, தங்கள் இஷ்டப்படி அர்த்தம் செய்துகொள்ளுகிறார்கள். பேச்சின் உண்மையான அர்த்தத்தைக் கவனிப்பதில்லை. நான் சொல்வதைச் சரியாகக் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும். உங்களுக்குத் தோன்றியபடி நினைத்துக்கொள்ளக் கூடாது. தேசபக்தி என்பது மனிதனுக்கு உள்ள நற்குணங்களில் ஒன்று அல்ல; அது ஓர் உணர்ச்சியேதான். அது ஒரு சிறந்த உணர்ச்சி; உன்னதமான உள்ளத்தினின்றும் எழுவது. ஆனால், அதனால் நன்மையோ தீமையோ, தேசபக்தியின் விளைவுகள் நலனுக்கோ அல்லது கெடு

தலுக்கோ ஏற்படுவது. இந்த உணர்ச்சியைச் செலுத்தும் விதத்தைப் பொறுத்திருக்கிறது.

குழந்தையினிடம் தாய் கொண்டுள்ள அன்பைப் பார்ப்போம். குழந்தைக்காகத் தாய் தன் உயிரையே கொடுக்கத் தயாராக இருப்பாள். குழந்தையின் நலனுக்காக அவள் எதைத்தான் செய்ய மாட்டாள்? ஆயினும், குழந்தைகளின் சுபாவத்தையும் அவர்களின் உடல்நலனையும் அடியோடு கெடுக்கும் தாய்மார்கள் எவ்வளவுபேர் இருக்கிறார்கள்! எவ்வளவு ஆசையும் பரிவும் இருந்தும், குழந்தைக்காக எதையும் தியாகம் செய்பவளாக இருந்தும், அறிவில்லாத தாய் குழந்தையைச் சரியான வழியில் வளர்க்க முடியாது. அவளது மிதமிஞ்சிய அன்பே குழந்தையின் சபலத்தைத் தூண்டி, முழுக்க முழுக்கக் கெட்ட குணத்தை வளர்க்கவே ஏதுவாகும். அன்பின் விளைவு, கெடுதலாகவும் ஆகக்கூடும். பஞ்சகாலத்தில் குழந்தைகளைப் பட்டினியினின்றும் காப்பாற்ற முடியாமல் உயிரை மாய்த்துக் கொள்ள நினைத்து, அதற்கு முன்காரியமாகக் குழந்தைகளையும் கொன்றுவிடும் தாய்களையும் பார்த்திருக்கிறோம் அல்லவா? தாயின் அன்பு செய்யும் வினையைப் பாருங்கள். நினைக்க முடியாத பயங்கரக் காரியங்களைக்கூடச் செய்யும்படி அது செய்துவிடுகிறது என்று எடுத்துக்காட்ட நினைத்தேன். இதற்கு மாறாக, ஒரு தாயோ தந்தையோ குழந்தைகளைக் கெட்ட பழக்கங்கள் அணுகாமல் காத்து, நல்ல பழக்க வழக்கங்களை மேற்கொள்ளச் செய்து விடுவார்கள். அத்தகைய பெற்றோர் இருப்பது, தேசத்துக்கே எவ்வளவு நன்மையை அளிக்கும் சக்தியாக அமையும்! ஆகவே, நமது பலமும் வேகமுமுள்ள உணர்ச்சிகள்-அவை மிகச் சிறந்த உணர்ச்சிகளேயாயினும்-உயர்ந்த செயல்களுக்குப் பயன்படுவனவாக இருந்தால் நலமாக இருக்கும். அத்தகைய தேசபக்திதான் சிறந்தது. இல்லாவிட்டால் நம் நோக்கங்கள் எவ்வளவு நல்லனவாக இருந்தாலும் தீமையே விளைவிப்பனவாகி விடுகின்றன. எல்லா உத்தமக் குணங்களோடும் ஒருவரும் பிறப்பதில்லை. ஆராய்ந்து பார்த்தால், முதலில் மிகச் சாதாரணக் குணங்களாக இருப்பவைதாம், பிறகு நல்ல சேர்க்கையினாலும், பயன்படுத்தும் நல்ல முறையினாலும் நாளடைவில் உயர்வும் புனிதமும் பெறுகின்றன. கல்விமுறையின் முக்கிய நோக்கம், அத்தகைய பண்புகளை இளவயதிலேயே உள்ளத்தில் ஊன்றிவிடும்படி இருக்க வேண்டும் என்று இப்பொழுது கருதுகிறோம்.

தேசபக்தி என்பது எப்படி வளர்ந்தது என்பதைச் சுருக்கமாகக் கூறுகிறேன். முதலில் அதற்கு என்ன பொருள் இருந்ததோ அது இப்பொழுது இல்லை. குடும்பம் கிராமம் என்ற சிறு வட்டத்திற்குள் அது இருந்தது. நாளடைவில் நம்மைச் சேர்ந்தவர்கள், நம் மக்கள் என்றெல்லாம் விரிந்து பரந்தது. நம் சரித்திரத்தில் கோசலர்கள் வைதேகர்கள் என்று தனிப் பெயர்களுடன் இருந்

தார்கள். தனி நாடோ தேசமோ ஒருவருக்குமில்லை. ஒரு வகுப்பைச் சேர்ந்தவனுக்கு அந்த வகுப்பின் நலம்தான் முக்கிய நோக்கமாக இருக்கும். ஜனங்கள் ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குக் குடிபோகத் தொடங்கினர்கள். அதனல் அந்த உணர்ச்சி நாட்டையும் பற்றிக்கொண்டது. ஆகவே, வெகுநாள் பழக்கத்தினல் நம் மனிதர்களைக்காட்டிலும் இந்தத் தேசபக்தி என்பது நாம் பிறந்த நாட்டைப்பற்றியே சாதாரணமாகக் கூறுவதாக மாறிவிட்டது. இப்பொழுது தேசபக்தியின் உச்சநிலையானது, இந்தியநாடு முழுவதையும் அதிலுள்ள ஜனங்களையும் சேர்த்துச் சொல்வதாக இருக்கிறது. பம்பாய்க்காரர்கள், வங்காளிகள் என்று தங்களைச் சொல்லிக்கொள்பவர்களை முதிர்ந்த தேசபக்தர்கள் அல்லவென்று கருதுகிறோம். இந்தியா முழுவதையும் சேர்த்தால்தான் தேசபக்தி என்று ஆகும். தான் ஒரு வங்காளி, மற்றது எப்படிப் போனலும் தனக்கு ஒன்றுமில்லை என்று நினைப்பவனை மிகவும் மட்டமாக நினைக்கிறோம். தான் முற்றும் ஒரு ஹிந்து, முஸ்லிம் அல்லது சீக்கியன் என்று ஒருவன் சொல்லிக்கொண்டால், அவன் சரியான தேசபக்தன் அல்ல என்று கூறிவிடுவோம். இருபது வருஷங்களுக்கு முன்பு இந்த நாட்டில் ஒவ்வொருவரும், "நான் முதலில் ஓர் இந்தியன்; அப்புறம்தான் ஹிந்து அல்லது முஸ்லிம்" என்று பெருமையுடன் சொல்லிக்கொள்வர். அதுதான் உண்மையான தேசபக்தியின் லட்சணம் என்று கருதியது எனக்கு ஞாபகமிருக்கிறது. அந்தோ! இப்பொழுது அரசியல் எவ்வளவு தாழ்வடைந்து கெட்டுப்போயிருக்கிறது! இன்று, "நான் ஒரு முஸ்லிம்; முஸ்லிமே நான்; இந்தியன் அல்ல" என்று உரக்கக் கத்தும் முஸ்லிம்கள் எவ்வளவு பேர் இருக்கிறர்கள்! ஹிந்துக்களும் அதற்கு எதிராக இதேமாதிரி இரைச்சல் போடுகிறர்கள். மிகச் சில வருஷங்களில் எவ்வளவு மாறுதல் உண்டாகிவிட்டது! இந்திய மக்களை ஒன்றுக நினைப்பது மிகக் குறைவாகிவிட்டது. சென்ற சில தலைமுறைகளாகத்தான் இப்படி ஒரு புதுமை கிளம்பியிருக்கிறது!

இன்னும் இரண்டொரு விஷயங்களைச் சொல்ல வேண்டியிருக்கிறது. நமது லட்சியங்கள் வரவரத் தாழ்ந்துகொண்டிருக்கும் பொழுது, உலகில் வேறு நாடுகளில் உணர்ச்சிகளை அடக்கி உத்தம மனிதர்களாக உள்ளவர்கள் என்ன செய்கிறர்கள்? அவர்கள் தங்கள் நாட்டு அரசியலைச் சிறந்ததாகக் கருதுவது மட்டுமின்றி, அயல்நாட்டுடன் உறவுகொள்ளும் அரசியலையும் மிகச் சிறந்ததாகக் கருதுகிறர்கள். உலகம் முழுவதையும் ஒன்றுகவும், மக்கள் அனைவரையும் ஒரே இனமாகவும் எண்ணுகிறர்கள். தேசபக்தி அதாவது உலகம் முழுவதையும் ஒன்றுக இணைக்கும் பக்திதான் வேண்டும் என்று தற்காலத்தில் பெரிய சிந்தனையாளர்களின் உள்ளங்களில் ஒரு பேரெண்ணம் தோன்றி வளர்ந்துகொண்டிருக்கிறது. இப்படி

இருக்கும்பொழுது நாம் பழைய சிறுசிறு வகுப்புகளாகப் பிரிந்து அரசியல்வாதம் புரிவது எவ்வளவு வருத்தத்திற்கு இடமாகியிருக்கிறது! இந்த விதமான தேசபக்தியைத்தான் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் மாணவர்களுக்குப் போதிக்க வேண்டும் என்று கருதுகிறவர்களும் இருக்கிருர்கள்.

ஸ்ரீராமரைக் கண்டு, அவருடைய உயர்ந்த குணங்களையும் மக்களை உய்விப்பதற்காக வந்தவர் என்பதையும் அறிந்து, விபீஷணன் அவருடைய மேலான பண்புகளில் ஈடுபட்டுத் தன் தீய சூழ்நிலையிலின்றும் அகன்று, ராமரிடம் வந்தடைந்தால், அது மனிதத்தன்மைக்குப் பெருத்த இழிவு என்று ஆகிவிடுமா? எனக்கு விளங்கவில்லை. விபீஷணன் செய்தது இதுதான்; வேறு தவறு எதையும் அவன் செய்துவிடவில்லை. மற்றவர்களைப் போலவே, ராமரும் ஓர் உத்தம புருஷர் என்று கருதியதோடு மட்டும் விபீஷணன் நிற்கவில்லை; 'அவர் உத்தம குணங்களுக்கெல்லாம் இருப்பிடமான ஓர் லட்சிய புருஷர்; அவரை உதாரணமாகக் கொண்டு பின்பற்றுவதுடன் அவருக்கு அடிபணிந்து பணிபுரிய வேண்டும்' என்றும் அவன் கருதினுன். ராமரைப் போன்ற ஓர் உயர்ந்த மனிதரை ஒருவன் நேரில் கண்டுங்கூட, அவருக்கு அடிபணிய வேண்டும் என்ற எண்ணம் உண்டாகாமற் போகலாம்; கூடவே பின்பற்றிச் செல்லும் அளவுக்குப் பக்தி ஏற்படாமலும் இருக்கலாம். ஆனுல், அத்தகைய உணர்ச்சிகள் தோன்றிய ஒருவனை நாம் பழிக்காமலிருக்க வேண்டும். அதற்கு வேண்டிய மன உறுதி நமக்கு இல்லையே என்று நாம் வருத்தப்பட வேண்டும். பிற்போக்கான நம் புத்தியைக் குறைகூற வேண்டுமே தவிர, அத்தகைய உணர்ச்சிவசப்பட்டு உயர்ந்து நிற்கும் மனிதனைப் பழித்துப் பேசலாகாது.

நான் கொஞ்சம் அதிகமாகப் பேசுவதாகத் தோன்றலாம். "உலகம் முழுவதும் ஒன்று என்று நாம் இப்பொழுது நினைக்கும் தேசபக்தியைப் பற்றியா விபீஷணன் நினைத்துக் கொண்டிருந்தான்?" என்று நீங்கள் கேட்கலாம். நான் அப்படிச் சொல்லவில்லை. இந்த உலகம் முழுவதும் வியாபிக்கும் தேசபக்தியைப் பற்றி விபீஷணனுக்கு ஒன்றும் தெரியாது என்பது மட்டுமல்ல; இலங்கையைப் பற்றிக்கூட அவன் ஒன்றும் கஷ்டப்படவில்லை. ராமன், ராவணன் ஆகிய இருவரையும் அவன் ஆராய்ந்து பார்த்தான். தனக்கு உணவும் உடையும் அளித்து, நாட்டில் உயர்ந்த அந்தஸ்தையும் அளித்தவன் சகோதரன் என்று இருந்தும், ராவணன் தீய குணங்களுள்ளவன் என்று அவன் கருதினுன். அவன் தனக்கு எவ்வளவு செய்திருந்தாலும் அவை யாவும் ராமருக்கு நிகராகுமா? உலகிலுள்ள தீய குணங்கள் அனைத்தும் ராவணனிடம் குடிகொண்டிருந்தன. 'சேர்ந்து வாழ்வதற்கு

இயலாதபடி ராவணன் அவ்வளவு கெட்டவன் என்றால், விபீஷணன் இலங்கையை விட்டு வேறு எங்காவது போய்ப் பேசாமலிருப்பதற்கென்ன? ராமருக்கு ஏன் உதவி செய்ய வேண்டும்?' என்று கேட்போர் சிலர் இருக்கிறார்கள். இந்திரஜித் அதைத்தான் தன் சிற்றப்பனிடம் கேட்டான். அதற்கு ஏற்கனவே பதில் கூறியாகிவிட்டது.

கெட்டவனோ நல்லவனோ, ஏதாவது ஒன்றுதான் இருக்க முடியும். இரண்டு பக்கமும் நல்லது என்று இருந்தாலன்றி ஒருவன் ஒரு பக்கத்திலும் சேராமலிருக்க முடியாது. ஆனால், தர்மம் எது, அதர்மம் எது என்பதில்தான் எல்லா வித்தியாசமும் இருக்கிறது. பெரிய நெருக்கடியான ஒரு சந்தர்ப்பத்தில், தர்மத்துக்கும் அதர்மத்துக்கும் பெருத்த போராட்டம் நிகழும்பொழுது, தர்மத்தைப் பின்பற்றக் கூடிய நிலையிலுள்ள ஒருவன் அதைப் பின்பற்றி நல்ல செயல்களில் ஈடுபடுவதற்குப் பதிலாகப் பேசாமல் கையைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருப்பதா? அப்படிச் செய்பவர்களை நான் அதிகம் கண்டதில்லை. விபீஷணன் அம்மாதிரி ராமரையும் ராவணனையும்பற்றி நினைக்க முடியாது. ஒருவரோடும் சேராமல் விபீஷணன் இருக்க வேண்டுமென்று சொல்லுவது சரியல்ல. இடத்துக்கும் காலத்துக்கும் நன்மையை அளிப்பதாக இருந்தால் அது சரியாக இருக்கும். தர்மம் எது, அதர்மம் எது என்று பிரிக்க முடியாமல், தர்மத்தையே பின்பற்ற வேண்டும் என்றும் நினைத்தால், அப்பொழுது நாம்தாம் ஏதாவது முடிவாகத் தீர்மானம் செய்ய வேண்டும். ஏதோ ஒரு பக்கத்தில் நாம் சேர்ந்துதான் ஆகவேண்டும். ஒன்றிலும் சேராமலிருப்பது என்பது முடியாது. கதைகளில்கூட அம்மாதிரி நான் படித்ததில்லை. லிட்டன் என்ற ஆங்கிலக் கதாசிரியர் ஒருவரது நாவலில், ஒரு பெரிய மனிதன் நாட்டின் அலுவல்களில் பெரும் பங்குள்ளவன், ஒரு கட்சியிலும் சேர மனமில்லாதவனாக இருந்துவிட்டான் என்று கூறியிருக்கிறது. அந்தச் சம்பவங்கூட ஒரே நாவலில்தான் வருகிறது. ராவணனை விட்டுச் செல்ல வேண்டுமென்று இருந்தாலும், விபீஷணன் ராமரிடமாவது அடைக்கலம் புகாமலிருக்கலாம் என்று கூறுகிறவர்கள், மனித இயல்பையும், உலகில் அவன் எதற்குப் பிறந்து வாழ்கிறான் என்பதையும் அறியாமல் பேசுகிறார்கள்.

"ராமரிடம் வந்தடைந்தாலும் ராமர் பக்கத்தில் இருந்து கொண்டு கும்பகர்ணன், இந்திரஜித், பிரகஸ்தன் முதலியவர்களைக் காட்டிக்கொடுத்து, இலங்கையின் இரகசியப் பாதுகாப்புக் காவல்களையெல்லாம் வெளியிட்டு, விபீஷணன் ராமருக்குப் பேருதவி எதற்காகச் செய்ய வேண்டும்?'' என்று சிலர் கேட்கிறார்கள். இந்தக் கேள்வி, கேட்கும்பொழுதுதான் நன்றாக இருக்கிறது.

ராமர் பக்கத்தில் சேர்ந்ததும் தன்னால் இயன்ற உதவியைச் செய்வதுதானே சரி! தர்மம் அதர்மத்தை வெல்லுவதற்கும், நன்மை தீமையை வெல்லுவதற்கும்தானே அவன் அந்தப் பக்கம் சேர்ந்துகொண்டான்?

மற்றொரு கேள்வியும் உண்டு. அதற்கும் என் பதில் நேரானது தான். "ராவணனுடைய வதத்துக்காகவும் ராமருடைய வெற்றிக் காகவும் அவன் தன் சக்தி முழுவதையும் செலவழிக்கட்டும். ஆனால் அவனே அரசனாக முடிசூட்டிக் கொள்ளுவானேன்? தனக்கு அதில் விருப்பமில்லை என்று சொல்ல முடியாதா?" என்று கேட்கிறார்கள். அரசபதவியைப் பெறவே விபீஷணன் முயற்சி செய்தான் என்று ராமாயணத்திலேயே சொல்லியிருக்கிறது. யுத்தத்தில் வெற்றி ராவணனுக்குத்தான் ஏற்படும் போலிருக் கிறது என்று விபீஷணனே இரண்டொரு சமயம் சந்தேகப்பட்டுக் கூறியிருக்கிறான். ஒரே ஒரு விஷயம் கூறுகிறேன்; அதை வைத்துக்கொண்டு ராமாயணத்தைப் பார்க்கலாம். விபீஷணன் ராஜ்யத்தை எப்படித் துறப்பான்? உயிரோடு இருப்பவன் அவன் ஒருவன்தானே? இலங்கையில் கிழவர்கள் குழந்தைகள் விதவைகள் ஆகியவர்களைத் தவிர வேறு யாரும் உயிருடனில்லை. எல்லாரும் அழிந்து போனபிறகு இலங்கையில் முடிசூட்டிக் கொள்ள யாருக்கு மனம் வரும்? அந்தப் பயங்கர யுத்தத்தின் விளைவாக, அனைத்துமே நாசமான பிறகு அந்த அரசபதவியை எவன் விரும்புவான்? ராமர், சீதை இவர்களின் பட்டாபிஷேக வைபவத்தைக் காண அத்தனை வானரர்களும் புஷ்பக விமானத்தில் ஏறிச் சென்றபொழுது, இலங்கையிலிருந்து விபீஷணன் ஒருவன் தான் சென்றான். கூடச் செல்வதற்கு வேறு யாருமில்லை. ஆகவே, லங்கா ராஜ்யத்தை அடைவதற்குப் பேராசை பிடித்த விபீஷணன் மிக்க ஆவலோடிருந்தான் என்று கூறுவது தவறு. அவன் இலங்கைக்கு அரசன் ஆனது கடமையுணர்ச்சியினால்தான் என்று சொல்ல வேண்டும். துன்பமுற்ற அந்த ராஜ்யத்தை ஆள, நேர்மையும் அறிவுமுள்ள ஒரு மனிதன் வேண்டும் அல்லவா? இவ்வாறுதான் எனக்குத் தோன்றுகிறது. ராஜ்யத்தை ஆள வேண்டும் என்ற ஆவல் இருக்கலாம். ஆனால் நன்மை தீமைகளின் வேற்றுமையை உணர்ந்து மக்களுக்கு நலத்தைச் செய்யும் ஆசை தான் அதற்குக் காரணமாகும். இலங்கைக்கு அரசன் ஆனதே விபீஷணனுடைய தன்னலம் கருதாத உள்ளத்தைக் காட்டுகிறது.

அடுத்த பிரசங்கத்தில் நான் அதைப்பற்றிக் கூறுவதாக இருக் கிறேன். நான் எடுத்துக்காட்டும் குறிப்புக்களிலிருந்து நீங்களே அதைத் தெரிந்துகொள்ளலாம். நான் கேவலம் வெளிப்பூச்சாக ஒன்றும் காட்டவில்லை. விபீஷணனுடைய குணத்தை நீங்களே உள்ளபடி அறிந்துகொள்ள வேண்டும் என்பதற்காகத்தான்

சொல்லுகிறேன். அப்படிப்பட்ட உன்னதமான குணமுடைய மனிதனைத் 'தேசத் துரோகி', 'பேராசை பிடித்தவன்', 'தனக்கு யாவற்றையும் அளித்த சொந்த அண்ணனையே வஞ்சித்துத் துறந்து சென்றவன்' என்றெல்லாம் தூற்றுவதா? தேசத் துரோகம் செய்து அதைச் சத்துருவுக்குச் சொந்தமாக்கவில்லை. இலங்கையிலுள்ளவன் ஒருவனிடமே லங்கா ராஜ்யத்தை ராமரும் ஒப்படைப்பதாகத்தான் இருந்தார். ஆகவே, தன் சொந்த நாட்டையே அயலான் ஒருவனுக்குக் காட்டிக்கொடுத்து, அந்த நாட்டுக்கு அடிமையாக இருந்து, அந்நிய ஆட்சியின் கொடுமையை அநுபவிக்கும் பேச்சே இதில் இல்லை.

## 15

### சுக்கிரீவனும் விபீஷணனும்

என் மதிப்புக்கு உரியவராகவும், பெருங் கல்வியறிவாளராகவுமுள்ள நண்பர் ஒருவர், ஒரு சமயம், "யுத்தம் தொடங்கு முன்னமே ராமர் விபீஷணனுக்குப் பெயரளவில் ராஜ்யாபிஷேகம் செய்து வைத்தது போல, சுக்கிரீவனுக்கு ஏன் செய்யவில்லை?" என்று ஒரு பிரச்னையைக் கிளப்பினர். அவரே அதற்குப் பெரிய சமாதானமும் கூறினர். ஆனால் அது எனக்குச் சரியாகப் படவில்லை. இன்று முதலில், சுக்கிரீவனுக்கும் விபீஷணனுக்குமுள்ள வேற்றுமையைப்பற்றிச் சில வார்த்தைகள் கூறலாம் என்று நினைக்கிறேன். 'பிரபத்தி தத்துவத்தை விளக்கும் பக்தியே உருவானவன்' என்று விபீஷணன் அனைவராலும் ஒப்புக்கொள்ளப் பட்டவன். ராமாயணத்தில் விபீஷண சரணாகதி, பாகவதர்கள் எப்பொழுதும் உபன்யசிக்கும் கட்டம். சகோதரனை ராவணனிடம் அச்சம் கொண்டு அவனை எதிர்த்து, விபீஷணன் ராமரிடம் சரணமடைகிறான். ஆனால், ராமரும் சுக்கிரீவனும் முதல்முதலில் சந்தித்தபொழுது, ராமரைப்பற்றி லக்ஷ்மணன் அனுமாரிடம் கூறுவது எவ்வளவு வேறு விதமாக இருக்கிறது!

अहं चैव हि रामश्च सुग्रीवं शरणं गतौ ॥
एष दत्त्वा च वित्तानि प्राप्य चानुत्तमं यशः ।
लोकनाथः पुरा भूत्वा सुग्रीवं नाथमिच्छति ॥
पिता यस्य पुरा ह्यासीत् शरण्यो धर्मवत्सलः ।
तस्य पुत्रः शरण्यश्च सुग्रीवं शरणं गतः ॥
सर्वलोकस्य धर्मात्मा शरण्यः शरणं पुरा ।
गुरुर्मे राघवः सोऽयं सुग्रीवं शरणं गतः ॥
यस्य प्रसादे सततं प्रसीदेयुरिमाः प्रजाः ।
स रामो वानरेन्द्रस्य प्रसादमभिकाङ्क्षते ॥ IV. 4. 17-21.

"என் அண்ணனும் நானும் சுக்கிரீவனிடம் அடைக்கலம் வேண்டுகிறோம். அயோத்தியை விட்டு வரும்பொழுது அவர் தம்முடைய அளவற்ற செல்வத்தை எல்லோருக்கும் வழங்கிப்

புகழடைந்தவர். அனைவருக்கும் சரணமாக இருப்பவர் சுக்கிரீவனிடம் சரணமடைந்திருக்கிறார். எவருடைய தயைக்காக உலகம் முழுவதும் ஆவலுடன் காத்திருக்குமோ, அத்தகையவர் சுக்கிரீவனுடைய தயையை நாடி வந்திருக்கிறார்'' என்கிறான். இம்மாதிரி பல சுலோகங்கள் இருக்கின்றன. ராமரை நாடும்பொழுது சுக்கிரீவன் விபீஷணன் இவ்விருவருடைய மாதிரியும் எவ்வளவு வேறாக இருக்கிறது என்பதை அவை காண்பிக்கின்றன. ராமர் சுக்கிரீவனைத் தஞ்சமாக அடைந்தார். விபீஷணன் ராமரைத் தஞ்சமாகப் பற்றினான். இதில் ஒரு சந்தேகமும் இல்லை. எல்லா விதத்திலும் சுக்கிரீவன் ராமருக்குச் சமமாகவே இருக்கிறான். இருவரும் ஒருவருக்கொருவர் உதவி கோரினார்கள். ஆகவே இருவரும் ஒரே நிலையில் இருந்தனர் என்று கூற வேண்டும். கடைசி வரையிலும் இந்த நிலை மாறவே இல்லை என்பதும், ராமர் திரும்பி அயோத்திக்குச் சென்று பட்டாபிஷேகம் செய்துகொள்ளுமுன் பரதனைக் கண்டபொழுது பரதன் அவ்விருவரையும் எவ்வாறு வரவேற்றான் என்பதிலிருந்து நன்கு தெரிகிறது. மிகவும் நுட்பமாகக் கவனித்தால்தான் தெரியக் கூடியது என்றாலும் இந்த வித்தியாசத்தை வால்மீகியே புலப்படும்படிச் செய்திருக்கிறார் என்று நான் நினைக்கிறேன்.

अथाब्रवीद्राजपुत्रः सुग्रीवं वानरर्षभम् ॥
परिष्वज्य महातेजा भरतो धर्मिणां वरः ।
त्वमस्माकं चतुर्णां तु भ्राता सुग्रीव पञ्चमः ॥
सौहृदाज्जायते मित्रमपकारोऽरिलक्षणम् । VI. 130. 44-46.

பரதன் சுக்கிரீவனைக் கண்டதும் அவனைத் தழுவிக்கொண்டு, "நாங்கள் சகோதரர்கள் நால்வர். இனி எங்கள் ஐந்தாவது சகோதரனாக உன்னைப் பாவித்து வரவேற்கிறேன்'' என்கிறான். எவ்வளவு நெருக்கமான உறவு பாருங்கள்! விபீஷணன் வந்தபொழுது பரதன் மிருதுவாக,

विभीषणं च भरतः सान्त्ववाक्यमथाब्रवीत् ।
दिष्ट्या त्वया सहायेन कृतं कर्म सुदुष्करम् ॥ VI. 130. 46-47.

"ராமருக்கு உதவியாக நின்று அரும்பெரும் செயல்கள் செய்திருக்கிறீர்கள்'' என்கிறான். விபீஷணனுக்கு அத்தகைய வரவேற்புக்கு மேல் இல்லை. இதில்தான் சுக்கிரீவனுக்கும் விபீஷணனுக்குமிடையே உள்ள வித்தியாசம் வெளியாகிறது. தங்கள் ஒப்பந்தப்படி சுக்கிரீவன் கடல் போன்ற சேனையைத் திரட்டி உதவுகிறான். திரண்ட சேனை என்பது மட்டுமல்ல; அனுமார், ஜாம்பவான், அங்கதன், நளன் போன்ற வீரர்களைக் கொண்ட சேனை அது. அவ்வாறின்றி, விபீஷணன் நான்கு மந்திரிகளோடு தான்

ஒருவனாகவே வருகிறான். விபீஷணன் தன்னையே கொண்டு வந்தான் என்பது மிகப் பெரிதல்லவா?

ராமாயணத்தைப் படித்துக் கதை தெரிந்தவர்கள் ராவணனை ஜயிப்பதற்கு இன்றியமையாதவன் சுக்கிரீவனேயன்றி விபீஷணன் சிறிதுமல்ல என்பதை அறிவார்கள் அல்லவா? ஸேது கட்டுவதற்கு முன்பு விபீஷணன் அங்கு வருகிறான். தனக்காகவே அங்கு வந்து சேருகிறான். அவனால் மிக்க உபகாரம் இருந்தாலும், ராமருடைய காரியத்துக்கு அவன் பெரிதும் தேவையானவன் என்று கூற முடியாது. அவன் வேண்டிய உதவி செய்கிறான். சில சிரமமான சமயங்களில் அவனது உதவி மிகவும் முக்கியமானதாக இருந்தாலும், சுக்கிரீவனைப் போல அவன் இன்றியமையாதவன் என்று சொல்ல முடியாது.

சுக்கிரீவனுக்கு ராமருடைய பெருமை தெரியாது. அவர் யார் என்றே முதலில் அவன் அறிந்துகொள்ளவில்லை. "நான் உனக்கு உதவி செய்கிறேன்" என்று ராமர் கூறியபொழுது, அவருடைய தகுதியைப் பற்றியே அவன் சந்தேகப்படுவது போலத் தோன்றுகிறது. தன் தமையன் வாலியின் முன் ராமர் நிற்க முடியுமோ என்றே அவனுக்கு ஐயம் உண்டாகிறது. ராமர் தம் சக்தியைக் காட்டி நிரூபிக்க வேண்டுமென்று விரும்புகிறான். இரண்டு பரீட்சைகளுக்குப் பிறகுதான் அவனுக்குத் திருப்தி ஏற்படுகிறது. விபீஷணனோ ராமருடைய மேன்மையையும் பராக்கிரமத்தையும் முற்றும் அறிந்தவனாக இருக்கிறான்.

சுக்கிரீவன் விஷயத்தில் அவனுக்கு முடிசூட்டுவதற்கு அதிகம் சிரமப்படும்படியாக இல்லை. பரீட்சை நடந்த அன்றே வாலிவதம் ஆகிவிடுகிறது. எல்லாம் ஒரு நொடியில் முடிந்துவிட்டதனால் அவர்கள் இருவரும் நெருங்கிய நண்பர்களாகிறார்கள். ராமரின் பராக்கிரமம் ருசுவான பிறகு சுக்கிரீவன் வாலியைப் போருக்கு அழைக்கிறான். ராமர் வாலியைக் கொன்றுவிடுகிறார். உடனே சுக்கிரீவனுக்குப் பட்டாபிஷேகம் ஆகிவிடுகிறது. ராவணன் விஷயத்தில் போல் பெரிய யுத்தம் நடக்கவில்லை. ஸேதுகட்டி இலங்கையை அடைந்து ராவணனுடைய சேனையை அழித்து, அவனுடைய பிள்ளைகள் தளபதிகள் அனைவரையும் கொன்று முடிவில் அவனையும் வதம் செய்வதற்கு எவ்வளவோ நாளாகிறது. ஆகவே, விபீஷணனுக்கு உடனே முடிசூட்ட இயலாததுடன், யுத்தத்தின் வெற்றியைப் பற்றியும் நிச்சயமில்லாமலிருக்கிறது. ராமர் செய்த பிரதிக்ஞையையே நம்பியிருக்க வேண்டியதாகிறது. அதனால்தான் ராமர், "எவ்வளவு கஷ்டங்கள் இருந்தாலும் நான் செய்த பிரதிக்ஞையை நிறைவேற்ற முடியாமற் போய்விடும் என்று நினைக்க வேண்டாம். கொஞ்சம் காலமாகும். பெரிதும் சிரமப்பட

வேண்டியதாகவும் இருக்கும். ஆயினும் என் வார்த்தையை மெய்ப்பிப்பதற்காக ராவணவதம் முடிவதற்கு முன்பே இந்தப் பெயரளவிலுள்ள அபிஷேகத்தைச் செய்கிறேன்'' என்கிறார். சுக்கிரீவன் விஷயத்தில் இம்மாதிரிப் பிரதிக்ஞையை நம்பிக் காலம் தள்ள வேண்டிய அவசியம் ஏதுமில்லை. பிரதிக்ஞை செய்வதற்குள் நிறைவேற்றப்பட்டுவிடுகிறது. இதுதான் ஒருவர் விஷயத்தில் உண்மையான பட்டாபிஷேகமும், மற்றவர் விஷயத்தில் அவ்வாறு இல்லாமலிருப்பதற்கும் காரணமாகும்.

பட்டாபிஷேகத்தையே எடுத்துக்கொண்டு பார்ப்போம். முடி சூட்டிக்கொண்ட பிறகுதான், ஒப்பந்தம் செய்துகொண்டபடி சுக்கிரீவன் செய்ய வேண்டிய கடமைகள் நிறைவேற்றப்படுவன வாக இருக்கின்றன. சீதையைத் தேடும் முயற்சி பிறகுதான் தொடங்குகிறது. விபீஷணன் விஷயத்திலோ முடிசூட்டிய பிறகு செய்ய வேண்டியது ஒன்றுமே இல்லை. இந்த வித்தியாசத்தைப் பற்றி மேலும் ஒரு வார்த்தை: விபீஷணனைவிடச் சுக்கிரீவன் பின்னும் உயர்ந்த நிலையில் இருக்கிறான் என்பதை எடுத்துக்காட்டும் பொழுது மற்றொரு விஷயத்தைக் கூறி நிறுத்துகிறேன். சுக்கிரீவன் ராமருக்குச் சமமான அந்தஸ்தில் இருக்கலாம். ஆயினும் அவன் தன்னை ராமரின் தாஸனாகவே கூறிக்கொள்கிறான். "ராமர் என்னைத் தம் நண்பனாகக் கருதுகிறார் என்றாலும் நான் அவருடைய தாஸனே'' என்கிறான். இதனால் சுக்கிரீவன் மிகுந்த அடக்கமுள்ளவன் என்று தெரிகிறது. விபீஷணனுக்குச் சுக்கிரீவனுடைய அந்தஸ்து இல்லை என்றாலும், ராமர் லக்ஷ்மணன் பரதன் சத்ருக்கினன் ஆகிய நால்வரும் சுக்கிரீவனைவிட அதிகப் பிரியமும் நம்பிக்கையும் விபீஷணனிடத்தில் கொண்டிருந்தார்கள் என்று எனக்குத் தோன்றுகிறது. உத்தரகாண்டத்தில்தான் ராமருடைய உறவினால் விபீஷணனுக்கு ஏற்பட்ட ஓர் அபூர்வமான பலன் குறிப்பிடப்படு கிறது. அதாவது விபீஷணன் சிரஞ்ஜீவிப்பதவியை அடைகிறான். என்றும் சிரஞ்ஜீவியாக இருப்பவர்களில் விபீஷணனும் ஒருவன் என்பது இந்துக்களின் நம்பிக்கை.

மற்றொரு விஷயத்தை இங்கே குறிப்பிட விரும்புகிறேன்: விபீஷணன் ராமரிடம் சரணமடைந்தபொழுது, அவன் எப்படிப் பட்டவன் என்பது ராமருக்குத் தெரியாது. ஆனால் அவருக்குத் தெரிந்திருக்கலாம் என்பதற்குச் சில இடங்களில் அத்தாட்சி இருக் கிறது. அரண்யகாண்டத்தில், சூர்ப்பணகையைக் கேட்கும் பொழுது அவள், "எனக்கு மூன்று சகோதரர்கள் இருக்கிறார்கள். ஒருவன் இலங்கையின் அதிபதி ராவணன்; இந்த உலகத்தையே வென்றவன். மற்றொருவன் கும்பகர்ணன்; மிக்க பலமுள்ள பெரிய வீரன்'' என்று கூறிவிட்டுக் கடைசியாக விபீஷணனைப்பற்றிக் கூறு கிறாள்: "ராக்ஷஸஜாதியில் பிறந்தும் அவன் தர்மாத்மா' என்

15

கிருள். ஆகவே, ராமருக்கு அவனைப்பற்றித் தெரியாதிருக்க முடியாது. சுந்தரகாண்டத்தில், சீதை ராவணனுடைய மூர்க்கத் தனத்தைப்பற்றி அனுமாரிடம் கூறும்பொழுது. "அப்போதைக்கப் போது விபீஷணனுடைய மனைவி தன் பெண்ணிடம் எனக்கு ரகசிய மாகச் செய்தி சொல்லியனுப்புவாள். திரிகால ஞானியான ஒரு ஜோசியன்—அவன் கூறுவது எப்பொழுதும் பலிக்குமாம்; அவன் ராவணனிடம், 'சீதையினால் உங்களுக்குப் பெரிய கஷ்டம் உண்டாகும். ராமரிடம் அவளைத் திரும்ப அளித்துச் சமாதானம் செய்துகொள்ளுங்கள்' என்று கூறினனாம். ஆனால் ராவணன் அதைக் கேட்கவில்லை. அவன் என் விஷயத்தில் இன்னும் கெட்ட எண்ணத்துடனேயே இருக்கிறான்" என்று கூறுகிறாள். அனுமார் இந்த விஷயத்தை ராமரிடம் கூறியிருக்கலாம் அல்லவா?

சுந்தரகாண்டத்தில், அனுமார் ராவணனிடம் கொண்டுவரப் பட்டபொழுது, இலங்கையில் அவரால் விளைந்த பல நாசங்களை எண்ணிக் கோபமுற்ற ராவணன் அவரைக் கொல்ல உத்தரவிடு கிறான். அனுமாரை யாரும் கொல்ல முடியாது என்று இருந்தாலும், ராவணனுடைய உத்தரவு அதுதான். விபீஷணன் அது சரியல்ல என்று கண்டித்து, "நம்மைப் போன்ற அரசன் ஒருவனிடமிருந்து வரும் தூதனைக் கொல்வது வழக்கமில்லை. அவனுக்கு அளிக்கக் கூடிய தண்டனைகள் அநேகம் இருக்கின்றன. வதத்தைப்பற்றிக் கூறவில்லை. கொன்றால் தூதனைக் கொன்ற அபகீர்த்தி உண்டாகும்" என்கிறான். ராவணன் அவனது வார்த்தையைக் கேட்டு, "நல்லது, வேறுவிதமான தண்டனைகள் இருக்கின்றன. இவனுக்குச் சரியான தண்டனை ஒன்று இருக்கிறது. இவன் வாலில் நெருப்பு வைத்து விடச் சொல்கிறேன். மற்ற வானரர்களின் நடுவில் இவன்மட்டும் வாலில்லாமல் இருக்கட்டும்" என்கிறான். அப்புறம் நடந்தது நமக்குத் தெரியும். இந்தச் சமாசாரத்தையும் அனுமார் மறந் திருக்க முடியுமா?

விபீஷணன் தன் நான்கு மந்திரிகளுடன் ஆகாயத்தில் நின்ற படியே, ராமரிடம் தான் வந்திருப்பதைக் கூற வேண்டும் என்ற பொழுது, லக்ஷ்மணன், அனுமார், ஜாம்பவான், சுக்ரீவன் ஆகி யோரிடம் ராமர் யோசனை கேட்கிறார். சுக்ரீவனும் லக்ஷ்மண னும் விபீஷணனைச் சேர்த்துக்கொள்வதை ஆக்ஷேபிக்கின்றனர். அனுமார் ஒருவர்தாம் அவனைச் சேர்த்துக் கொள்வதை ஒப்புக் கொள்ளுகிறார். ஆயினும் அவரும், இலங்கையில் இருந்தபொழுது தம்முடைய உயிரைக் காப்பாற்றியதுடன், இலங்கையைத் தகனம் செய்வதற்கு உதவியாக இருந்தவனும் விபீஷணன்தான் என்பதைக் கூறாமல் விடுகிறார். ஒருவேளை அவர் ஏற்கனவே அதைக் கூறியிருந் தாலும் இருக்கலாம். ஆனால் விபீஷணனைச் சேர்த்துக் கொள்வ தைப்பற்றி ஆலோசனை நிகழும்பொழுதுதான் அவர் அதைச்

சொல்லியிருக்க வேண்டிய சமயம். அனுமார் ராமருக்கு அப்பொழுது அதை ஞாபகப்படுத்தியதாகத் தெரியவில்லை. ராமரும் விபீஷணனுக்குச் சாதகமாக அதை நினைவில் வைத்துக் கொள்ளவில்லை. அனுமாரைப்பற்றிக் கூறும்பொழுது, மூன்று நான்கு சமயங்களில் அனுமார் மறதியினால் தவறியதை எடுத்துக் கூறும்படியிருக்கும். சிறுவயதில் ரிஷிகளிடம் ஏதோ விளையாடியதன் விளைவாக, நினைவுறுத்தினாலன்றி அவருக்குத் தம் பலம் தெரியாமலிருக்கும்படி அவர்கள் சாபமிட்டதாக ஒரு கதை உண்டு. அந்தச் சாபம் காரணமாக, அவருக்கு அடிக்கடி மறதி ஏற்படும்படியாயிற்று என்று எனக்குத் தோன்றுகிறது. தம் பலத்தைப்பற்றி நினைவு இல்லாதிருப்பதுடன் அவசியமானபொழுது முக்கிய விஷயங்களையும் மறந்துவிடும்படியாகிறது. அதுதான் அந்தச் சாபத்துக்கு அர்த்தம்.

ராமரைச் சேர்ந்தவர்கள் விபீஷணனைப்பற்றிப் 'பிறவியில் ராக்ஷஸனாயினும் தர்மாத்மா' என்றெல்லாம் புகழும்பொழுது, இந்திரஜித்துக்கு விபீஷணனிடத்தில் மீளாத துவேஷம் ஏற்படுகிறது. இருவரும் ஒருவரையொருவர் மிகவும் கடுமையாக நிந்திக்கும் இரண்டு இடங்கள் ராமாயணத்தில் காண்கின்றன. இந்திரஜித் பேசுவதைக் கேட்கும்பொழுது, தற்காலத்து அரசியல் வாதிகளில் ஒருவர் அன்றைக்குப் பேசுவதாகவே தோன்றும்; அதாவது, 'தேசபக்தியே அனைத்திலும் சிறந்தது. உறவினரிடம் உண்மையான விசுவாசத்துடன் இருப்பதே உயர்ந்த குணம். தர்மத்தைக் கைவிடும்படி இருந்தாலும் தேசபக்தியைப் பின்பற்ற வேண்டும்' என்பதாகத் தோன்றும். இந்திரஜித் கூறும் வார்த்தைகள் யாவரும் ஒப்புக்கொள்ளும்படியாகவே இருக்கின்றன. தர்மாத்மா என்பதற்காகவே இந்திரஜித்துக்கு விபீஷணனிடம் பெரும் துவேஷம் உண்டாகிறது.

सत्त्वेन वीर्येण पराक्रमेण शौर्येण धैर्येण च तेजसा च ।
एकः कुलेऽस्मिन् पुरुषो विमुक्तो विभीषणस्तात कनिष्ठ एषः ॥
ऐरावतो विस्वरमुन्नदन् स निपातितो भूमितले मया तु ।
विकृष्य दन्तौ तु मया प्रसह्य वित्रासिता देवगणाः समग्राः ॥
सोऽहं सुराणामपि दर्पहन्ता दैत्योत्तमानामपि शोकदाता ।
कथं नरेन्द्रात्मजयोर्न शक्तो मनुष्ययोः प्राकृतयोः सुवीर्यः ॥
VI. 15. 3, 6, 7.

"எப்படிப்பட்ட தம்பி உங்களுக்கு! நம் குலத்து உயர்ந்த குணங்களில் எதுவுமே அவரிடம் இல்லையே! இந்திரனுடன் போர் புரிந்தபொழுது ஒரு சமயம் நான் ஐராவதத்தையே கீழே வீழ்த்தி அதன் கொம்புகளையும் பறித்தவன் அல்லவா? என்னைக் கண்டு

பயந்து ஓடிய தேவர்களை அந்தக் கொம்புகளினால் அடித்துத் துரத்தினேன். அப்படிப்பட்ட என்னுடைய இந்தச் சிற்றப்பன் எப்படி இருக்கிறான்? இவர்களைக் கண்டா நான் பின்வாங்குவேன்? அவர்கள் இருவரும் கேவலம் மனிதர்கள் அல்லவா?'' என்கிறான். இந்தச் சொற்களைக் கேட்டு விபீஷணனுக்குச் சிறிது கோபம் உண்டாகிறது.

न तात मन्त्रे तव निश्चयोऽस्ति बालस्त्वमद्याप्यविपक्वबुद्धिः ।
तस्मात् त्वया ह्यात्मविनाशनाय वचोऽर्थहीनं बहु विप्रलप्तम् ॥
त्वमेव वध्यश्च सुदुर्मतिश्च स चापि वध्यो य इहानयत् त्वाम् ।
बालं दृढं साहसिकं च योऽद्य प्रावेशयन्मन्त्रकृतां समीपम् ॥
धनानि रत्नानि विभूषणानि वासांसि दिव्यानि मणींश्च चित्रान् ।
सीतां च रामाय निवेद्य देवीं वसेम राजन्निह वीतशोकाः ॥
VI. 15. 9, 11, 14.

''நீ இளைஞன்; அநுபவமில்லாதவன். பெரியவர்கள் சந்தித்துப் பெரிய விஷயங்களைப் பேசும் இடத்தில் உன்னை யார் அழைத்தார்கள்? அது பெரும் தவறு. விளைவுகளைப்பற்றி யோசியாமலே நீ அறிவற்று அர்த்தமற்ற வார்த்தைகளைப் பேசுகிறாய். யோசித்துப் பேசு'' என்று கூறிவிட்டு, விபீஷணன் ராவணனை நோக்கி, ''கவலையும் கஷ்டமுமின்றி நிம்மதியாக வாழ வேண்டும் என்றால், போய் ராமனின் கால்களில் விழுங்கள். விலையுயர்ந்த பொருள்களை எடுத்துக்கொண்டு, சீதையையும் அழைத்துக்கொண்டு போய், அவரிடம் சேர்ப்பியுங்கள். இல்லாவிட்டால் பெரிய அனர்த்தம் நேரும்'' என்கிறான். அதற்குப் பதில் ராவணன் கூறுவது இலக்கியத்திலேயே பிரசித்தமாக அமைந்துள்ளது.

वसेत् सह सपत्नेन क्रुद्धेनाशीविषेण वा ।
न तु मित्रप्रवादेन संवसेच्छत्रुसेविना ॥
जानामि शीलं ज्ञातीनां सर्वलोकेषु राक्षस ।
हृष्यन्ति व्यसनेष्वेते ज्ञातीनां ज्ञातयः सदा ॥
नित्यमन्योन्यसंहृष्टा व्यसनेष्वाततायिनः ।
प्रच्छन्नहृदया घोरा ज्ञातयस्तु भयावहाः ॥ VI. 16. 2, 3, 5.

''விபீஷணா, நீ என் ஞாதி, தாயாதி. தாயாதியை ஒருபோதும் நம்புவதற்கில்லை. பொறாமையும் பகையும் குடிகொண்டவன் தாயாதி. பரமவிரோதியின் அருகில் சென்று வசிக்கலாம். பாம்புடன்கூட விளையாடலாம். ஆனால் அறிவுள்ளவன் தாயாதியோடு இருக்கமாட்டான். தாயாதி இனிமையாகப் பேசுவான்; ஆனால் அவனது உள்ளத்தில் துவேஷம் குடிகொண்டிருக்கும்.

அவன் நம் எதிரிக்கு வேண்டியவனாக இருப்பான். ஒருவனுக்குக் கஷ்டம் வந்தால் அவனுடைய ஞாதிகள் சந்தோஷப்படுவார்கள். ஞாதியை ஒருபோதும் நம்பலாகாது. அவனால் எப்பொழுதும் ஆபத்தே உண்டாகும். இதயத்தில் பகையுடன் அவன் சிரித்தபடி இருப்பான்'' என்கிறான்.

'ததா அநார்யேஷு ஸௌஹ்ருதம்' என்ற பல்லவியுடன் அநேக சுலோகங்களுக்குப் பிறகு ராவணன் விபீஷணனைப் பின் வரும் சொற்களுடன் தன்னிடமிருந்து விலக்கிவிடுகிறான்: "உன்னைத் தவிர வேறு யாராவது இவ்விதம் பேசியிருந்தால் அவனை உடனே தொலைத்திருப்பேன். நீ என் தம்பி என்றாலும் எனக்கு விரோதியாகிவிட்டாய். இங்கிருந்து உடனே ஓடிவிடு'' என்கிறான்.

விபீஷணன் போகும்பொழுது, ''உங்களுக்கு இறுதிக்காலம் நெருங்கிவிட்டது. அதனால்தான் எச்சரிக்கைப்படுத்தும் என் வார்த்தைகளை நீங்கள் கவனிப்பதாக இல்லை. நான் இல்லாமல் சந்தோஷமாக இருங்கள், கெட்ட வழியிலிருந்து நல்வழிப்படுத்தும் என் வார்த்தைகள் தங்கள் உள்ளத்தில் ஏறவில்லை. உலகின் இயல்பு இதுதான். நாசமாக வேண்டுமென்று விதி இருந்தால் நண்பர்கள் தடுத்து நிறுத்தும் சொற்கள் யாவும் பயனற்றவையாகிவிடும்'' என்று கூறிவிட்டு, ராமர் இருக்குமிடம் வந்து, ஆகாயத்தில் நின்றபடியே வானரர்களை நோக்கி, ''என் பெண்டு பிள்ளைகளைத் துறந்து ராமரைச் சரணமாக அடைந்துவிட்டேன். என் தமையன் என்னைக் கண்டபடி பேசித் தனக்குக் குற்றேவல் புரியும் ஊழியன் போல் அவமானப்படுத்தியதனால் நான் விட்டு வந்துவிட்டேன்'' என்கிறான். அப்புறம் அவனைச் சேர்த்துக் கொள்வதைப்பற்றி நடந்த ஆலோசனை நமக்குத் தெரியும். முடிவாக ராமர், ''ராவணனே என்னிடம் அடைக்கலம் புகுந்தாலும் நான் கைவிடமாட்டேன்'' என்கிறார். "என் செல்வம், புகழ், உறவினர் அனைத்தையும் நான் துறந்துவிட்டேன். இனி நான் உங்களைச் சேர்ந்தவன்; முழுக்க முழுக்கச் சேர்ந்தவன்'' என்கிறான் விபீஷணன். அப்பொழுது ராமர் பின்வருமாறு பிரதிக்ஞை செய்கிறார்:—

अहं हत्वा दशग्रीवं सप्रहस्तं सहानुजम् ।
राजानं त्वां करिष्यामि सत्यमेतद् ब्रवीमि ते ॥
अहत्वा रावणं संख्ये सपुत्रजनबान्धवम् ।
अयोध्यां न प्रवेक्ष्यामि त्रिभिस्तैर्भ्रातृभिः शपे ॥ VI. 19. 19, 21.

"எல்லோர் முன்னிலையிலும் நான் இந்தப் பிரதிக்ஞையைச் செய்கிறேன். ராவணனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் கொன்று,

பிறகு நான் உன்னை இலங்கைக்கு அரசனாக்குகிறேன். என் சகோதரர் மூன்று பேர் பேரிலும் ஆணையிட்டுக் கூறுகிறேன்: ராவணனைக் கொன்று உனக்கு முடிசூட்டாமல் நான் அயோத்திக்குத் திரும்பிச் செல்வதில்லை'' என்று சபதம் செய்கிறார்.

இனி, இந்திரஜித் விபீஷணன் இருவரையும்பற்றியுள்ள ஒரு விசேஷமான கட்டத்துக்கு வருவோம். ராமாயணத்திலேயே மிகவும் உயர்ந்த காவியச் சுவையும் சிறந்த வர்ணனையும் அமைந்த வெகு ரஸமான இடமாதலால் கொஞ்சம் விஸ்தாரமாகவே கூறலாமென்று நினைக்கிறேன். இந்திரஜித் யுத்தகளத்தில் பிரவேசித்ததும் வழக்கமான தன் மாயாஜால வித்தைகளைக் காட்டுகிறான். முதலில் நாகாஸ்திரத்தை விடுகிறான். அந்த அஸ்திரம் ராம லக்ஷ்மணர்களின் உடம்பு முழுவதும் துளைத்துவிடுகிறது. அவர்கள் மூர்ச்சித்து விழுந்ததும் எல்லாரும் அவர்கள் இறந்துவிட்டதாகவே நினைத்துத் துயருறுகிறார்கள். சுக்கிரீவன், அங்கதன், நீலன் முதலிய சிறந்த வானரர்கள்கூட என்ன செய்வதென்று அறியாமல் குழம்புகிறார்கள். ஆனால் ஒருவர் கண்ணுக்கும் படாத இந்திரஜித் விபீஷணன் கண்ணுக்குத் தென்பட்டுவிடுகிறான். அந்த நாகபாணம் ராம லக்ஷ்மணர்களின் உயிருக்கு ஒன்றும் தீங்கு செய்யாது என்று அவனுக்குத் தெரியும். சிறிது மயக்கம் உண்டுபண்ணுவதைத் தவிர உயிருக்கு ஹானி ஏற்படாது. அனைவரிலும் அதிகத் துக்கத்தில் ஆழ்ந்திருந்த சுக்கிரீவனை, ''யுத்தம் என்றால் இப்படித்தான். ஒரு சமயம் நமக்கு வெற்றி என்றால் மற்றொரு சமயம் நம் விரோதிக்குக் கிட்டும். இப்பொழுது இந்திரஜித்துக்கு மேல்கையாக இருக்கிறது. ராம லக்ஷ்மணர்கள் இந்த மயக்கத்தினின்றும் விடுபட்டு எழுந்து விடுவார்கள். இனி வருத்தம் வேண்டாம்'' என்று அவன் தேற்றுகிறான். ''தர்மமுள்ள கட்சியில் நாம் இருவரும் சேர்ந்திருக்கிறோம். நமக்கு எப்படிக் கஷ்டம் உண்டாகும்? இவர்களிடமுள்ள சிநேகத்தினால் இந்தப் பயம் ஏற்பட்டிருக்கிறது. அதிக அன்பினாலேயே எப்பொழுதும் கவலை உண்டாகும். செய்ய வேண்டியதைச் செய்யாமல் இப்படித் தலையைத் தொங்கவிட்டு அழுதுகொண்டு இருக்கலாகாது'' என்கிறான். அதிகச் சிநேகமே உயிருக்கு ஆபத்தை விளைவித்துவிடும். இந்த 'அதி' என்றுமே தீங்கை விளைவிக்கும் என்ற கருத்து, ஸம்ஸ்கிருதத்தில் சாதாரணமாக உள்ளது. அதி-ஸ்நேஹ: பாபஶங்கி (சாகுந்தலம், IV. 19-20).

அரண்யகாண்டத்தில், லக்ஷ்மணன் ராமரைத் தேற்றும் பொழுது, ''இத்தகைய அதிகமான அன்புக்கு வசமாகலாகாது. ஜலத்தில் நனைந்த திரியாயினும் நிறைய எண்ணெய் இருந்தால் அந்த எண்ணெய் முழுவதையும் உறிஞ்சித் தானும் எரிந்துவிடும். தங்கள் உள்ளம் சாந்தமாக இருந்தாலும், அளவுக்கு மிஞ்சிய இந்தச் சிநேகம் பெரும் தீங்கை உண்டுபண்ணிவிடும்'' என்கிறான்.

இந்திரஜித்தின் நாகாஸ்திரம் ராம லக்ஷ்மணர்களின் உயிருக்குத் தீங்கிழைக்காமல் பிரக்ஞையற்றவர்களாக மட்டும் அடித்த பொழுது விபீஷணன் இவ்விதம்தான் சுக்கிரீவனுக்குத் தேறுதல் கூறினன்.

இதன்பின் ஒரு விசேஷமான சம்பவம் நிகழ்கிறது. இந்திரஜித் யுத்தகளத்திலிருந்து திரும்பிப்போய், ராவணனிடம் ராம லக்ஷ்ம ணர்களை அடித்து வீழ்த்தியதையும், அதனல் வானரசேனை முழுவ தும் செயலற்றுப் போகவும், முடிவில் அவ்விருவரும் வதம் செய்யப் பட்டதையும் கூறுகிருன். அதைக் கேட்டு ராவணன் பெருமகிழ்ச்சி யடைகிருன். வானரசேனை முழுவதும் சோகத்தில் ஆழ்ந்து கிடக் கிறது. ராமர் தன்னை மீட்டுச் செல்லும் நம்பிக்கை அடியோடு அற்றுப்போகும் வண்ணம் சீதைக்குப் பெரிய மனக்கஷ்டத்தை அளித்து வஞ்சிக்க விரும்புகிருன் ராவணன். புஷ்பக விமானத்தில் அவளை ஏற்றி யுத்தகளத்துக்கு அழைத்துச்சென்று, பிரக்ஞையற்றுக் கிடக்கும் ராம லக்ஷ்மணர்களைக் காட்டும்படி அரக்கிகளுக்குக் கட்டளையிடுகிருன். தான் கொண்ட நம்பிக்கையையெல்லாம் அடியோடு இழந்து சீதை தனக்கு வசமாவாள் என்பது அவனது எண்ணம்.

போர்க்களத்திற்கு வந்து ராம லக்ஷ்மணர்கள் விழுந்து கிடப்பதைக் கண்டதும் சீதை அழுது புலம்புகிருள். அப்பொழுது திரிஜடை, "அம்மா, வருந்தாதே, அவர்களின் முகங்களைப் பார். உயிரிழந்தவர் போல் காணவில்லையே! அவர்கள் இறக்கவில்லை" என்று கூறிச் சீதையைத் தேற்றுகிருள். அந்தச் சமயத்தில், இருவரில் அதிக பலசாலியான ராமர் சுயநினைவுபெற்று எழுந்திருக் கிருர். பக்கத்தில் லக்ஷ்மணன் நினைவற்றுக் கிடப்பதைக் காணவும் மனம் ஒடிந்துபோய், "சுக்கிரீவா, உன் கடமையைச் செய்து விட்டாய். உண்மையான நண்பன் நீ. நீயும் மற்றவர்களும் உங்களால் இயன்ற உதவியெல்லாம் அளித்துவிட்டீர்கள். உங்கள் கடமை முடிந்துவிட்டது. இனி நீங்கள் திரும்பிப் போகலாம். நான் இங்கேயே என் உயிரை விடப்போகிறேன்" என்கிருர். இவ்வாறு ராமர் சோகத்தில் ஆழ்ந்து பேசவும் எல்லோரும் துயரத் துடன் தலைகுனிந்து நிற்கிருர்கள்.

இந்தச் சந்தர்ப்பத்தில் கவி ஒரு சிறு நிகழ்ச்சியை உள்ளே புகுத்துகிருர். இவர்கள் இந்த நிலையில் இருக்கும்பொழுது, மேனி முழுவதும் கறுப்புப் போர்வையால் மறைத்துக் காணப்பட்ட ஓர் உருவம் இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் திரும்பாமல், நேரே ராம லக்ஷ்மணர் இருக்கும் இடத்துக்கு வருகிறது. இந்திரஜித்தே ராம லக்ஷ்மணர்களைக் கொல்வதற்காகத் திரும்பி வருகிருன் என்று அனைவரும் எண்ணுகின்றனர். வானரர்கள் அனைவரும் அவன்மீது ஒன்ருகப் பாய்வதற்குப் பதிலாக அங்கிருந்து ஓட்டமெடுக்கின்

றனர். சுக்கிரீவன் அந்தக் கறுப்பு உருவம் தன்னை நட்புரிமையோடு அழைப்பதைக் காண்கிறான். அது யாருமல்ல; விபீஷணன்தான்! உடனே வானரர்கள் திரும்பி வந்து, அவர்களைச் சூழ்ந்து நிற்கவும், விபீஷணன் துயரத்தோடு, "எல்லாம் இந்திரஜித்தினால் விளைந்திருக்கிறது. என் நம்பிக்கை அவ்வளவும் வீணாயிற்று. ராவணன் வெற்றியடைந்துவிடுவான். 'ராமரையும் லக்ஷ்மணனையும் கொன்று விடுவேன்' என்று மார்தட்டிக்கொண்டு அவன் கூறியது உண்மையாகிவிடும்" என்று அங்கலாய்க்கிறான். இவ்விதம் விபீஷணன் வருந்துவதைக் கண்ட சுக்கிரீவன், "இல்லை, இவ்விருவரும் உயிர் துறக்கவில்லை. ராவணனை இவர்கள் கட்டாயம் வதம் செய்வார்கள்" என்று அவனைத் தேற்றுகிறான். இத்துடன் திருப்தியடையாமல், சுஷேணனைப் பார்த்து, "இவ்விருவரையும் கிஷ்கிந்தைக்குக் கொண்டுபோய் விடு. ராவணனை வதம் செய்து சீதையையும் நான் மீட்டு அழைத்து வருகிறேன்" என்கிறான். ராம லக்ஷ்மணர் மயக்கமுற்றுக் கிடப்பதைக் கண்டு இவர்கள் அனைவரும் எவ்வாறு மனம் குழம்பித் தவித்தார்கள் என்பதைக் கவி இவ்வாறு சமத்காரமாக எடுத்துக் காட்டுகிறார்.

இதற்குப் பின் ஒரு பிரசித்தமான சம்பவம் நிகழ்கிறது. அதில் விபீஷணன் நடந்துகொண்ட சிறந்த முறையை விளக்கும் இடத்தை இங்கே பார்ப்போம். கும்பகர்ணன் பிரகஸ்தன் ஆகிய இருவரும் சீதையை அபகரிக்க ராவணன் செய்த உபாயங்களை அங்கீகரிக்கவில்லை. ராமரிடம் சீதையைக் கொண்டுபோய் விடுவதுதான் சரி என்பது அவர்கள் செய்த உபதேசம். "தாங்கள் மந்திராலோசனைக்கு அழைத்தபொழுதுதான் நாங்கள் இந்த முடிவுக்கு வந்தோம். சீதையை மீண்டும் ராமரிடம் சேர்ப்பிப்பது தான் நியாயமென்று எனக்குத் தோன்றுகிறது. அது கூடாது என்று தங்கள் நிர்மானமாக இருப்பதனால் நாம் யுத்தம் புரிந்தாக வேண்டும் என்று ஏற்பட்டுவிட்டது. என்னை எவ்வளவோ கௌரவித்து வெகுமதிகள் வழங்கியிருக்கிறீர்கள். நான் தங்கள் நன்மையைச் செய்யாதிருப்பேனா? என் க்ஷேமத்தைக் கோருபவர் தாங்கள். தாங்கள் செய்வது சரியல்ல என்றாலும் நான் தங்களுக்காக இந்த யுத்தத்திற்குச் செல்லத் தயாராக இருக்கிறேன்" என்று ராவணனிடம் பிரகஸ்தன் கூறுகிறான். கும்பகர்ணனும் இம்மாதிரியே பேசுகிறான். "தன் பலத்தையும் பிறர் பலத்தையும் சரியாகத் தெரிந்துகொள்ளாதவன் தவறான வழியில் சென்று பல இன்னல்களை அடைந்து, முடிவில் தன் உயர்ந்த நிலையினின்றும் கீழிறங்கி விடுகிறான். முன்பே நாங்கள் தங்களுக்கு எடுத்துச் சொன்னோம். ஆனால் அது தங்கள் காதில் ஏறவில்லை. சீதையை ராமரிடம் அனுப்பிவிடுவதுதான் நல்லது. ஆனால் அது தங்களுக்கு ஏற்கவில்லை. தங்கள் இஷ்டப்படி செய்யுங்கள்" என்று கூறுகிறான்.

ராவணன் பவ்யமாகவே, ''ஆம், நீங்கள் இருவரும் எனக்குச் சரியான புத்திமதிதான் கூறினீர்கள். அன்று அறிவின்மை காரணமாகவோ அல்லது என் வீரச் செருக்குக் காரணமாகவோ நான் உங்கள் பேச்சைக் கேட்கவில்லை. இனிமேல் அது பயனில்லை. அதையே மீண்டும் மீண்டும் சொல்லிக்கொண்டிருப்பானேன்? இப்பொழுது எது சரி என்பதைப்பற்றி யோசியுங்கள். சென்றதைக் குறித்து யாரும் அழுதுகொண்டிருக்க முடியாது. சென்றது சென்றதுதான். ஒப்புயர்வற்ற பலம் பொருந்திய கும்பகர்ணன் நீதான் என்றால் நான் செய்த தவற்றை நீயே சரி செய்ய வேண்டும். கஷ்டப்படுகிறவர்களைக் காப்பவன்தான் உண்மையான சகோதரன்'' என்கிறான். அதற்குக் கும்பகர்ணன், ''உங்களுடைய உடன்பிறந்த சகோதரன் என்ற முறையில் நான் எனக்குச் சரி என்று தோன்றியதைக் கூறினேன். இனி என் வீரத்தைக் காண்பீர்கள். ராமனையும் லக்ஷ்மணனையும் கொன்று வானரர் அனைவரையும் அஞ்சியோடச் செய்வேன்'' என்ற முறையில் பேசுகிறான்.

எந்தக் காலத்திலும் தர்மசங்கடமான நிலை ஏற்படும்பொழுது, எந்தக் கடமை சிறந்தது என்று நிர்ணயிக்க முடியாமல் போராட்டம் நிகழ்கிறது. அப்பொழுது ஒவ்வொருவரும் ஒவ்வொரு கடமையைச் சிறந்ததாகத் தேர்ந்தெடுப்பார்கள். கும்பகர்ணனையும் பிரகஸ்தனையும் குற்றம் சொல்ல முடியாது. அப்படித்தான் மகாபாரதத்தில் பீஷ்மரையும் குற்றம் கூறுவதற்கில்லை. இரண்டு பெரிய கடமைகள் நம் எதிரே தோன்றும்பொழுது, தீர யோசித்தபிறகே ஒன்றைத் தேர்ந்தெடுப்போம் அல்லவா? ஆனால் நாம் வெவ்வேறு உள்ளமும் பழக்கமும் உள்ளவர்களாகையால், ஒருவர் மற்றவரைக் கோழை என்றோ, துரோகி என்றோ நிந்திப்பது தவறு. இரண்டு கடமைகளும் சிறந்தவையே. அதனால் அவற்றைப் பின்பற்றிய இருவகை மாந்தரும் பெரியவர்களே என்றுதான் கூற வேண்டும். கும்பகர்ணன் யுத்தகளத்தில் யாரும் செய்ய முடியாத வீரதீரச் செயல்களைப் புரிந்துவிட்டு, முடிவில் ராமரால் வதம் செய்யப்படுகிறான். அந்தச் செய்தியைக் கேட்ட ராவணன், ''என் வலக் கை போய்விட்டதே!'' என்று கூறி, மீண்டும் பச்சாத்தாபத்துடன், 'எனக்கு நல்ல புத்தி கூறிய சகோதரன் தர்மாத்மா விபீஷணனை விரட்டினேனே என்றுதான் இப்பொழுது வருந்துகிறேன். அது இப்பொழுது எனக்கே தீங்கு விளைவித்துவிட்டது. ராமருடைய பெருமையையும், 'அவர் யார்? எதற்காக இங்கு வந்திருக்கிறார்? அவருடைய பலம் என்ன? என் பலம் என்ன?' என்பதையும் அறியாமலிருந்துவிட்டேன். என்னைப்பற்றி நானே வெட்கமடைகிறேன்' என்றெல்லாம் எண்ணி வருந்துகிறான். ஆனால் அது ஒரு க்ஷணம்தான் நிற்கிறது.

இதன் பின் விபீஷணன் ஒரு பெரிய உபகாரம் செய்கிறன். இந்திரஜித் யாரும் அறியாமல் ஒரு பெரிய மாயவித்தையைச் செய்யும் முயற்சியில் இருக்கிறன். அதைச் சரியாகச் செய்து முடித்துவிட்டால் அப்புறம் அவனை வெல்லுவது சுலபமல்ல. அவன் மறைந்து யுத்தம் புரிவதோடு, வெல்ல முடியாமலும் ஆகிவிடுவான். ஆயினும், தக்க சமயத்தில், விபீஷணன் ராம லக்ஷ்மணர்களுக்கு அவர்களைச் சூழ்ந்திருக்கும் இந்த விபத்தைத் தெரிவித்து, இந்திரஜித் ந்யக்ரோத மரத்தடிக்குச் செல்லுமுன் அவனை வதம் செய்யும்படி லக்ஷ்மணனிடம் கூறுகிறன். லக்ஷ்மணன் உடனே அங்கே சென்று இந்திரஜித்தைப் போருக்கு அழைக்கிறன். இந்திரஜித் பெரிதும் மனக்கலக்கமுற்றுத் திரும்பியதும் விபீஷணனைக் காண்கிறன். "என் தந்தையின் ஆதரவில் பிறந்து வளர்ந்தவர் எனக்கு எப்படித் தீங்குசெய்ய முடியும்? நீர் தர்மாத்மா அல்ல; தர்மதூஷணர் ஆவீர். உம்மால் குலத்துக்கே பெருத்த அவமானம். உம்மைக் கண்டு எல்லோரும் வெட்கமடைகிறேம். எதிரியின் பக்கத்தில் அடிமையாகிவிட்டீர். இந்த இரண்டு கடமைகளுக்குமுள்ள பெரிய வேற்றுமையை நீர் அறியவில்லை. இது எங்கே? அது எங்கே?" என்று குற்றம் சாட்டுகிறன். பக்திக்கு இதைவிடச் சிறந்த விளக்கம் இருக்க முடியாது.

इह त्वं जातसंवृद्धः साक्षाद्भ्राता पितुर्मम ।
कथं द्रुह्यसि पुत्रस्य पितृव्यो मम राक्षस ॥
न ज्ञातित्वं न सौहार्दं न जातिस्तव दुर्मते ।
प्रमाणं न च सोदर्यं न धर्मो धर्मदूषण ॥
शोच्यस्त्वमसि दुर्बुद्धे निन्दनीयश्च साधुभिः ।
यस्त्वं स्वजनमुत्सृज्य परभृत्यत्वमागतः ॥
नैतच्छिथिलया बुद्धया त्वं वेत्सि महदन्तरम् ।
क्व च स्वजनसंवासः क्व च नीचपराश्रयः ॥
गुणवान् वा परजनः स्वजनो निर्गुणोऽपि वा ।
निर्गुणः स्वजनः श्रेयान् यः परः पर एव सः ॥
यः स्वपक्षं परित्यज्य परपक्षं निषेवते ।
स स्वपक्षे क्षयं प्राप्ते पश्चात् तैरेव हन्यते ॥ VI. 87. 11-16.

"நீர் உம் தமையனைப்பற்றிக் கூறுவதெல்லாம் சரியாக இருக்கலாம். அதற்கு மேலும் இருக்கலாம். உமக்கு வேண்டியவனும் எவ்வளவு கெட்டவனுக இருப்பினும் ஏற்றவனுகவே இருக்கலாம். ஆயினும் அந்நியன் அந்நியனே ஆவான். எங்களை வஞ்சித்து இப்பொழுது எதிரியின் பக்கம் சேர்ந்திருக்கிறீர். உம்மால் ஆக

வேண்டிய காரியம் ஆனதும் எங்களோடு சேர்த்து உம்மையும் அவர்கள் வேலைதீர்த்துவிடுவார்கள்'' என்று குத்தலாகப் பேசுகிறான். விபீஷணன் தனக்குச் சாதகமாக ஏதோ கூறுகிறான். ஆனால் குற்ற மறுப்பைக்காட்டிலும் குற்றச்சாட்டு அதிகம் பலமுள்ளதாக இருக்கிறது. வாலிவதத்தின் பொழுது ராமர் கூறிய சமாதானத்தைக்காட்டிலும் அவர்மீது வாலி சாட்டிய குற்றங்கள் அதிக நியாயமுள்ளவையாக இருந்தன அல்லவா?

''நான் ராக்ஷஸ இயல்புள்ளவன் அல்ல என்று உனக்குத் தெரியும். அப்படியிருந்தும் என்னை நிந்திக்கிறாய். நான் உங்கள் குலத்தில் பிறந்தவனே தவிர உங்களில் ஒருவன் அல்ல. சகோதரன் தீயவன் என்று தெரிந்தால் அவனை ஏன் விட்டுச் செல்லக்கூடாது? பிறருடைய சொத்தையோ, பிறருடைய மனைவியையோ ஒருவன் அபகரித்தால், தீப் பிடித்த வீட்டை விட்டுச் செல்வது போல, அவனைத் திரஸ்கரித்துவிட்டுச் செல்லலாம். இத்தகைய தோஷங்களுக்காகத்தான் உன் தந்தையை விட்டுச் சென்றேன். நீ யமன் கையில் சிக்கிக்கொண்டுவிட்டாய். ஏன் மேலும் மேலும் பிதற்றிக் கொண்டிருக்கிறாய்?'' என்று விபீஷணன் விடை கூறுகிறான்.

अयुक्तं निधनं कर्तुं पुत्रस्य जनितुर्मम ।
घृणामपास्य रामार्थे निहन्यां भ्रातुरात्मजम् ॥
हन्तुकामस्य मे बाष्पं चक्षुश्चैव निरुध्यति ।
तमेवैष महाबाहुर्लक्ष्मणः शमयिष्यति ॥ VI. 90. 17-18.

''இதோ என் சகோதரன்மகன் போர்க்களத்தில் நிற்கிறான். அவனை நான் கொல்லத்தான் வேண்டும். சொந்தச் சகோதரன் மகனையே கொல்வது முறையன்று. ஆயினும் இந்த உறவினால் எழும் அன்பையும் பாசத்தையும் ராமருக்காகத் தள்ளிவிட்டு இந்திரஜித்தைக் கொல்வேன். ஆனால், வில்லை எடுத்து நாணேற்றிக் குறிபார்க்கும்பொழுது கண்களில் நீர்மல்கிக் கண்களை மறைக்கிறது. குறி தவறிவிடும் போலிருக்கிறது. லக்ஷ்மணனே இதைச் செய்யட்டும்'' என்கிறான். தர்மசங்கடமான நிலை விபீஷணனின் உள்ளத்தை எவ்விதம் கலக்குகிறது, பாருங்கள்!

# 16

## விபீஷணன் சுயநலவாதியா?

இந்திரஜித்தின் மாயவித்தைகளை அறிவதில் விபீஷணனுக்குப் பிரத்தியேக சாமர்த்தியம் இருந்தது. அவற்றை ஊடுருவிச் சென்று அவன் கண்டுபிடித்துவிடுவான். அத்துடன் ராமர் பக்கத்தில் மனச்சோர்வும் அச்சமும் ஏற்பட்டபொழுதெல்லாம் அவற்றை அகற்றித் தைரியமூட்ட வல்லவனுகவும் அவன் இருந்தான். தக்க சமயத்தில் யோசனை கூறுவது, எச்சரிக்கை செய்வது போன்ற உபகாரங்களை, எவ்வளவோ தடவை-அதர்ம வழியைப் பின்பற்றி வவர்கள் என்று தான் ஒதுக்கிய உறவினர்களுக்குத் தீங்கு விளையுமே என்ற கவலை இல்லாமல்-அவன் செய்து வந்திருக்கிருன். இப்பொழுது ஏற்கனவே நான் கூறிய ஒரு சம்பவத்தை மீண்டும் குறிப்பிட வேண்டியிருக்கிறது. சீதையைப் போன்ற ஒரு மாய உருவை யுத்தகளத்தில் கொண்டுவந்து, அனுமாரை முன்னிட்ட பல வானரர்களுடன் போர் புரியும்பொழுது, இந்திரஜித் வெட்டி வீழ்த்துகிருன். அதை அனுமார் ஓடித் தடுக்க முயலும்பொழுது, ராக்ஷஸர்கள் வந்து அவரைச் சூழ்ந்துகொள்ளுகிருர்கள். அதைக் கண்டு வானரர்களும் அவர்களைச் சூழ்ந்துகொள்ள, இரு தரப்பினரும் கைகலக்குகின்றனர். இந்தக் குழப்பத்தில் பாவம்! அனுமார் தாம் நினைத்ததைச் செய்ய முடியாமற் போகிறது. அவர் இரைந்து இந்திரஜித்தை நிந்திக்க, இந்திரஜித்தும் பதிலுக்கு, "போரில் பாவம் என்பது கிடையாது. எதிரிகளுக்குத் துன்பம் விளைவிப்பது எதுவோ அதைச் செய்ய வேண்டியதுதான்" என்கிருன். இது ஹிட்லர் முறையைப் பின்பற்றியதாக இருக்கிறது. அநேக நூற்றுண்டுகளுக்கு முன்பே இந்திரஜித் ஹிட்லர் முறையை அநுசரித்திருக்கிருன்.

மாயாசீதையை இந்திரஜித் வதம் செய்தபிறகுதான் அனுமாருக்கு அவகாசம் கிடைக்கிறது. ஆனல் அதற்குள் காரியம் மிஞ்சிப் போய்விடுகிறது. எதிரிகளிடம் தோல்வியடைந்த சமயங்களில் இது ஒன்று. சீதையைக் காக்க இயலாமற் போனதுடன் எதிரிகளுடன் மூண்ட போரில் வெற்றியும் கிடைக்காமற் போகிறது. சேனையை யுத்தகளத்திலின்றும் திருப்பிச்சென்று ராமரிடம் நடந்

தலைக் கூறவும், உடனே ராமர் மூர்ச்சித்துவிடுகிருர். அதைக் கண்டு வருந்தி, லக்ஷ்மணன் தர்மத்தையும் அதனிடம் ராமருக்கு உள்ள சிரத்தையையும் பற்றி நிந்தித்துப் பேசுகிருன். "தர்மத்தை நீங்கள் பின்பற்றியதன் விளைவைப் பாருங்கள்! பொருள்தான் பெரியது" என்கிருன். சிறிது பொறுத்து விபீஷணன் அங்கு வந்து விஷயத்தை அறிந்ததும், ராமரிடம் தைரியமாக இருக்கச் சொல்லி, "அனுமார் ஏதோ ஏமாந்திருக்கிருர். தேவி இறக்கவில்லை. கொல்லப்பட்டது மாயாசீதையே தவிர வேறில்லை" என்கிருன். பின்வரும் சுலோகங்களில் அதற்குக் காரணங்களையும் கூறுகிருன்:—

मनुजेन्द्रार्तरूपेण यदुक्तं च हनूमता ।
तदयुक्तमहं मन्ये सागरस्येव शोषणम् ॥
अभिप्रायं तु जानामि रावणस्य दुरात्मनः ।
सीतां प्रति महाबाहो न च घातं करिष्यति ॥
याच्यमानस्तु बहुशो मया हितचिकीर्षुणा ।
वैदेहीमुत्सृजस्वेति न च तत् कृतवान् वचः ॥
नैव साम्ना न दानेन न भेदेन कुतो युधा ।
सा द्रष्टुमपि शक्येत नैव चान्येन केनचित् ॥
वानरान् मोहयित्वा तु प्रतियातः स राक्षसः । VI. 84. 9-13.

"துக்கத்தினுல் மதிமயங்கி அனுமார் நடக்கக் கூடாத ஒன்றைத் தங்களிடம் வந்து சொல்லியிருக்கிருர். கடல் எங்கே யாவது வற்றிப் போவதுண்டா? அதுபோல இதுவும் நடக்கக் கூடாததே! என் அண்ணனின் உள்ளம் எனக்குத் தெரியும். என்ன செய்தாலும் தேவியை ஒருநாளும் கொல்வது என்பது மட்டும் அவனுல் முடியாது. அவளுக்கு எவ்வகையான தீங்கும் ஏற்படாது. தேவியைத் தங்களிடம் மீண்டும் சேர்ப்பித்துவிடும்படி அவனு டைய நலத்துக்காகவே எவ்வளவோ தடவை அவனை வேண்டிக் கொண்டிருந்திருக்கிறேன். ஆனுல் என் சொற்கள் அவன் காதில் ஏறவேயில்லை. தாங்கள் அஞ்ச வேண்டாம். என் சகோதரன் மகன் இந்திரஜித் பெரிய மாயாவி. அனைவரையும் அவன் ஏமாற்றி யிருக்கிருன்." விபீஷணன் இவ்விதம் கூறியதைக் கேட்டு ராமர் சமாதானமடைந்து, மீண்டும் போருக்குப் புறப்படுகிருர். அப் பொழுது அவர் காட்டிய பராக்கிரமத்தின் முன் நிற்க வலியற்று ராவணன் போர்க்களத்திலிருந்து ஓடும்படியாயிற்று என்கிருர் கவி.

விபீஷணனுடைய பக்தியைப்பற்றி மட்டும் சொல்வதாக இருப்பதனுல் மேலே சொல்லுகிறேன். ராமரும் ராவணனும் கடைசியாகப் போர் புரிகிருர்கள். விபீஷணன் தன் உறவினர் களின் குற்றம் குறைகளை எடுத்துக்காட்டித் தக்க யோசனையும்

சமாதானமும் அவ்வப்போது கூறியதுடன், யுத்தத்திலும் பெரும் வீரச் செயல்களைப் புரிகிறான். இந்தக் கடைசி யுத்தத்தில் ராம லக்ஷ்மணர்களாலும் கதாபாணியான விபீஷணனாலும் ராவணன் பெரிதும் சிரமத்தை அடைகிறான். அப்பொழுது ராவணனுடைய தேர்க்குதிரைகளை விபீஷணன் தன் கதையால் கொன்று வீழ்த்திய தாகவும், தன் சொந்தச் சகோதரனாலேயே தனக்கு விளைந்த தீங்கைக் கண்டு ராவணன் கடுங்கோபம் கொண்டதாகவும் கூறப் படுகிறது. கோபத்தில் ராவணன் அவனைக் கொல்லச் சக்தி யாயுதத்தை அவன் மீது பிரயோகிக்கிறான். இதை அறிந்து லக்ஷ்மணன் அந்தச் சக்தியாயுதத்தை நாசம் செய்ய அம்புகளை எய்கிறான். ராவணனுக்குச் சினம் மூள்கிறது. மற்றொரு சக்தி யாயுதத்தை எடுத்து அவன்மீது பிரயோகிக்கவும், லக்ஷ்மணன் இடையில் புகுந்து, "நான் அதைத் தாங்கிக்கொள்கிறேன். விபீஷணன்மீது அது விழ வேண்டாம்" என்கிறான். யுத்தத்தில் இவ்வாறு யார் செய்ய முடியும்? அதன் விளைவாக, லக்ஷ்மணன் சக்தியால் அடிபட்டுக் கீழே விழுகிறான். அது அவன் உயிரைக் குடித்துவிட்டது போலத் தோன்றுகிறது.

मोक्षितस्ते बलश्लाघिन् यस्मादेवं विभीषणः ।
विमुच्य राक्षसं शक्तिस्त्वयीयं विनिपात्यते ॥ VI. 101. 23.

"இந்தச் சக்தி நேராகப் பாய்ந்து உன் உயிரை அபகரிக்காமல் திரும்பாது" என்கிறான் ராவணன். லக்ஷ்மணனைப்பற்றிக் கூறிய பொழுது, ஏற்கனவே இந்தச் சம்பவத்தையும் அதன் பின் நடந்த தையும் கூறியிருக்கிறேன். இப்பொழுது விபீஷணனுடைய வரலாற்றில் ஈடுபட்டிருக்கிறோம். லக்ஷ்மணனால் மரணத்தி னின்றும் காப்பாற்றப்பட்ட விபீஷணன் ராமருக்கு மேலும் சிறந்த உதவிகளைச் செய்யும் வாய்ப்புக்களைப் பெறுகிறான்.

கடைசியாக, ராவணன் ராமருடன் போர்புரிந்து முடிவில் வதம் செய்யப்பட்டதும், தேவர் மனிதர் உட்படச் சகல ஜீவராசிகளும் அந்தக் காட்சியைக் கண்டு மகிழ்வெய்திய கட்டத் துக்குச் செல்வோம். உலகத்துக்கே பரம விரோதி ஒருவன் மடிந் ததும் இயற்கையே பெரும் களிப்படைந்தது. தாம் விரும்பி எதிர் பார்த்ததே நிறைவேறினாலும், உறவினர்களே கொடிய பகைவர் என்று இருந்தும், அவர்களின் நிலையைக் கண்டு பரிதவிக்கும்படி வால்மீகி செய்வது வழக்கம். ராவணன் கொலையுண்டதும் விபீஷணனுக்கு ஒரே வருத்தம் உண்டாகிறது. நேரே அவன் விழுந்து கிடக்கும் இடத்திற்குச் சென்று புலம்புகிறான்.

तदिदं वीर संप्राप्तं मया पूर्वं समीरितम् ।
काममोहपरीतस्य यत् ते न रुचितं वचः ॥

यत्र दर्पात् प्रहस्तो वा नेन्द्रजिन्नापरे जनाः ।
न कुम्भकर्णोऽतिरथो नातिकायो नरान्तकः ॥
न स्वयं त्वममन्येथास्तस्योदर्कोऽयमागतः । VI. 112. 4-6.

ராவணன் உயிருடன் இருந்தால், அவன் கேட்கத் தகுதியற்ற வார்த்தைகள் இவை. ஒருவன் அடிபட்டு யுத்தகளத்தில் கிடக்கும் பொழுது, தான் கூறிக் கேளாத புத்திமதியையும் எச்சரிக்கையையும் நினைவூட்டுவதில் என்ன பயன்? "இப்படி ஆகும் என்று நான் கூறியதே நடந்துவிட்டது. மோகத்தினல் மதிமயங்கி என் சொல்லை நீங்கள் கேட்கவில்லை. கேட்டிருந்தால் பெரியவர்கள் உங்களை இந்தத் தகாத செயலினின்றும் தடுத்திருப்பார்கள். இப்பொழுது அதன் பலனை முற்றும் அநுபவித்துவிட்டீர்கள்" என்று வருந்துகிருன்.

முதலில் ராவணனுடைய உறவினர்களில் தான் ஒருவனே உயிருடன் இருப்பதனுல் அவனது அந்திமக் கிரியைகளைச் செய்ய நினைக்கிருன். அவனைத் தகனம் செய்ய வேண்டுமா என்று ராமரைக் கேட்டுக்கொள்ளுகிருன். "உயிருடன் இருந்தபொழுது பலம், வீரம், தானம் முதலிய உத்தம குணங்கள் எவரிடம் விசேஷமாக இருந்தனவோ அப்படிப்பட்டவர் இதோ ரணகளத்தில் உயிரிழந்து கிடக்கிருர். அவர் அநுபவித்த போகங்கள் என்ன! செல்வங்கள் என்ன! அவருக்குப் பணிபுரிய எத்தனை பணியாட்கள்! தம்மிடம் நட்புக் கொண்டவர்களுக்குக் கணக்கில்லாத செல்வத்தை வாரி வழங்கினர். எதிரிகளையோ சிம்ம ஸ்வப்னமாக நடுங்கச் செய்தார். இவை மட்டுமன்றி எத்தகைய நியமத்துடன் யாகாதி கர்மாக்களை விதிபூர்வமாகச் செய்திருக்கிருர்! இத்தகைய பிரபாவமுள்ளவருடைய உத்தரக்கிரியைகளைச் செய்ய அநுமதி கொடுக்க வேண்டும்" என்று விபீஷணன் கேட்டுக்கொண்டதும் ராமர், "மரணத்திற்குப் பிறகு தீர்க்க வேண்டிய கடன்கள் இல்லை. மரணத்தோடு பகை தீர்ந்துவிடுகிறது. அதற்குப் பிறகும் துவேஷத்தைப் பாராட்டுதல் கூடாது. இனிமேல் ராவணனிடம் நமக்கு என்ன விரோதம்? நாம் கோரியது நிறைவேறிவிட்டது. நீயும் நானும் ஒன்று என்று பிரதிக்ஞை செய்துகொண்டோம். ஆகவே உனக்குத் தமையன் எனக்கும் தமையன் ஆவான். அவனுக்குச் செய்ய வேண்டிய கிரியைகளில் நானும் சேர்ந்து கொள்ளக் கடமைப்பட்டவன். நீ செய்யாதுபோனுல் நான் செய்வேன்" என்கிருர். இதுபற்றி மற்ருெரு விஷயம் சற்றுப் பொருத்தமில்லாமலிருக்கிறது. ஆனுல் வியாக்கியானகாரர்கள் எடுத்துச் சொல்லும் நீதி தெளிவாக இருப்பதனுல் எடுத்துக் கூறுகிறேன்.

मरणान्तानि वैराणि निर्वृत्तं नः प्रयोजनम् ।
क्रियतामस्य संस्कारो ममाप्येष यथा तव ॥ VI. 112. 26.

''ராவணன் இனி எனக்கு என்ன செய்ய முடியும்? என் மனைவியை அவன் அபகரித்துச் சென்றான். என் ஆப்த நண்பன் ஜடாயுவைக் கொன்றான். எனினும் அவனால் இனி ஒரு தீங்கும் இல்லை'' என்று வியாக்கியானகாரர் பொருள் கூறுகிறார். விபீஷணனைச் சுவிகரித்துக்கொள்வதற்கு முன்பு தாம் கூறியதை ராமர் நினைவு வைத்துக்கொண்டு பேசுவது போலிருக்கிறது.

विभीषणो वा सुग्रीव यदि वा रावणः स्वयम् । VI. 18. 35.

"ராவணனே நேரில் வந்து என்னைச் சரணமடைந்தாலும் நான் அவனை ஏற்றுக்கொள்வேன் என்று நான் சொன்னது ஏதோ பேச்சுக்காகக் கூறிய சொற்கள் அல்ல. ராவணன் என்னைத் தேடி வர வேண்டும்; அவனை மன்னித்து ஏற்றுக்கொள்ள வேண்டும் என உண்மையாகவே என் அந்தரங்கத்தில் அவா இருந்தது. அவனுக்கு நன்மை செய்ய வேண்டும் என்று நினைத்தேன். ஆனால் அவன் அதற்கு இசையவில்லை. அவனுடைய இயல்பான விபரீதகுணம் வெற்றியடைந்தது. ஆகவேதான் அவன்,

द्विधा भज्येयमप्येवं न नमेयं तु कस्यचित् ।
एष मे सहजो दोषः स्वभावो दुरतिक्रमः ॥ VI. 36. 11.

'இரண்டு துண்டுகளாக ஒடிந்தாலும் ஒடிவேனேயன்றி ஒருவருக்கும் வளைந்து கொடுக்க மாட்டேன். அது என் பெரும் துர்க்குணமாக இருக்கலாம். ஆயினும் அது என் கூடப்பிறந்தது. தன் இயல்பை யார் மாற்ற முடியும்?' என்று கூறினான்'' என்கிறார்.

ராமருடைய உயர்ந்த குணத்துக்கு இதை ஓர் உதாரணமாகக் கூறலாம் என்று நினைத்தேன். நான் கூறிய அர்த்தத்தில் ராமர் மேற்கண்ட வார்த்தைகளைக் கூறினார் என்றால் அதில் ஒன்றும் வியப்பே இல்லை. ராமர்தாம் அவ்வாறு கூற முடியும். சிறிது பொறுத்து, துரதிருஷ்டவசமாக, விபீஷணனுக்கு ஒரு சந்தேகம் தோன்றுகிறது. சாஸ்திரத்துக்கும் நம் வழக்கத்துக்கும் விரோதமாக ஜனங்களிடையே ஒரு நம்பிக்கை இந்தக் காலத்திலும் முன் போலவே அதிகமாக இருந்துவருவதை நான் ஏற்கனவே எடுத்துக் கூறியிருக்கிறேன். அதாவது—ஒருவன் நமக்கு எவ்வளவு இரத்த சம்பந்தமுள்ள உறவினனாயினும் ஒரு ஸம்ஸ்காரமும் செய்து அவனுக்காகத் திட்டுக் காக்க வேண்டாம் என்பது. கோபம் வந்த பொழுது நாம், ''நான் செத்தால் நீ ஸ்நானங்கூடச் செய்ய வேண்டாம்'' என்று கூறுகிறோம் அல்லவா? ''நீ செத்துப்போனாய் என்று கேட்ட அன்றே நான் பால் குடிப்பேன்'' என்று ஒருவன் கோபத்தில் கூறுவதுண்டு. பரதன் ராமரிடம், ''நான் அருகே இருந்ததனால்தான் தந்தைக்கு உத்தரக்கிரியைகளைச் செய்தேன். ஆனால் நீங்கள் இருந்து செய்வது போல் அந்தக் கிரியைகள்

பயனுள்ளவையாக இருக்கமாட்டா. தந்தையின் ஆத்மாவும் திருப்தியடைந்திருக்காது. மிகவும் பிரியமானவர்கள் செய்தால் தான் அவற்றுக்குப் பலனுண்டு என்று சொல்லுகிறார்கள். தங்கள் பிரிவைத் தாங்காமல் பிதா மரணமடைந்தார். நீங்கள் அவருக்குச் செய்தால்தான் அவரது ஆத்மா நற்கதியடையும்'' என்கிறான்.

இத்தகைய வருத்தம்தான் விபீஷணனை இப்பொழுது பீடிக் கிறது. தங்கள் இருவருக்கும் இருந்த துவேஷம் நினைவுக்கு வரவும், தான் ராவணனுக்குப் பிரேதகிருத்தியங்கள் செய்வது முறையோ என்ற சந்தேகம் எழுகிறது. ''பெரிதும் தீய குணம் படைத்தவன் அவன் செய்த தீமைகளுக்கு அளவே இல்லை. எத்தனை கற்புடைய மங்கையரை அவன் கெடுத்திருக்கிறான்! பிறருக்குத் தீங்கிழைப் பதிலேயே அவனுக்குப் பெருமகிழ்ச்சி. எனக்குத் தமையனே தவிர உண்மையில் அவன் பரம விரோதியே ஆவான். இப்பொழுது அந்திமக்கிரியைகளை நான் செய்யாது போனால், 'கொடியவன்', 'ஈவு இரக்கமற்றவன்' என்று என்னை எல்லாரும் பழிப்பார்கள். ஆயினும் இறந்தபிறகும் தமையனிடம் துவேஷம் பாராட்டியவன் என்று என்னைப் பழிக்கும்பொழுது, ராவணன் செய்த தீச்செயல் களையும் அவனால் கெடுக்கப்பட்ட பெண்களையும் பற்றி நினைவு எழவும், விபீஷணன் செய்தது சரியே என்று கூறுவார்கள்'' என் றெல்லாம் சிந்திக்கிறான். ஆனால் ராமர் அதை ஒப்புக்கொள்ள வில்லை என்பதை நாம் அறிவோம். ராவணனுடைய பெருமை யையும், அவன் இயற்றிய பெரும் தவத்தையும், தேவர்களைக்கூட வெல்லக்கூடிய பராக்கிரமத்தையும் ராமர் அவனுக்கு ஞாபகப் படுத்துகிறார். தன் தவவலிமையால் தேவர்களிடமிருந்து அரிய வரங்களைப் பெற்றவன். அவன் சாதாரணமானவன் அல்ல.

விபீஷணனிடம் சுயநலமோ அற்பத்தனமோ சிறிதும் இல்லை என்று காட்டுவதற்காக அவனைப் பற்றியும் அவன் காரியங்களைப் பற்றியும் கூறினேன். தன்னை வளர்த்து ஆளாக்கிய தன் சொந்தச் சகோதரனுக்கே துரோகம் செய்தவன் என்று அவனுக்குப் பெரும் பழி ஏற்பட்டது. உறவினர்களிடம் உண்மையான விசுவாசத் துடன் இருப்பதைக்காட்டிலும் உலகில் எவ்வளவோ மேலான உணர்ச்சிகள் இருக்கின்றன. நியாய சபையில் தம் உறவினன் என்று அவனுக்குச் சாதகமாக ஒரு நீதிபதி தீர்ப்பளித்தால் நாம் அவரைப் பாராட்டுவோமா? தம் சொந்த மைந்தர்களே எனினும் அவர்கள் செய்தது குற்றம் என்று தண்டிக்கும் அரசர்களைப் போற்றுகிறோம். இருந்தாலும் ஜனங்களுக்குத் தீங்கிழைத்துக் கொடியவனாக இருந்த சகோதரனை விட்டுச் சென்றதற்காக விபீஷணனை ஏன் குற்றம் சாட்ட வேண்டும்? இந்தத் தவறான எண்ணத்தை அகற்றி விபீஷணனை அவனுக்கு உரிய ஸ்தானத்தில் வைத்துப் போற்றுவதே மேல் அல்லவா?

# 17

## அனுமாரின் மறதி

அனுமாரின் குணத்திலுள்ள அநேக விஷயங்கள் நம் உள்ளத்தைக் கவருகின்றன. அதனால்தான் மக்கள் அவரிடம் முற்றும் ஈடுபடுகின்றனர். அனுமார் பெரியவர் என்று சொன்னால் அந்தச் சொல்லின் முழுப் பொருளும் அவருக்குப் பொருந்தும். அவர் செய்துள்ள காரியங்கள் அனைத்தையும் சேர்த்துக் கணக்கிட்டால், மற்ற எவருடைய காரியங்களும் அவற்றுக்கு ஈடாகமாட்டா. தம் தேகபலத்தைக் கொண்டு மற்ற எவரும் செய்ய இயலாத காரியங்களை அவர் செய்திருக்கிறார். தேகபலத்தையும் மனோபலத்தையும் கொண்டு சாதிக்க வேண்டிய காரியங்கள் அவருக்கு வாய்த்தன. அவரும் அவற்றை வியக்கத்தக்க விதமாகச் செய்து முடித்திருக்கிறார். ராமரையும் அவருக்கு நேர்மாறான இயல்புடைய ராவணனையும் தவிர, அவரைக் காட்டிலும் உயர்ந்தவர் ராமாயணத்திலேயே இல்லை என்று கூறலாம். ராமரைப் பற்றிக் கூறும்பொழுது சில குறைகள் புலப்பட்டாற் போல, அனுமாரின் சிறப்பையும் குறைப்பவையான சில குறைகள் காண்கின்றன. அவற்றைத் தெளிவாக எடுத்துக் காட்டிய பிறகு, பக்தி, கடமை ஆகிய உணர்ச்சிகளின் உச்சநிலையில் அவர் செய்துள்ள உயர்ந்த காரியங்களை எடுத்துக் கூறலாம் என்று நினைக்கிறேன்.

அனுமாரைப்பற்றி நினைக்கும்பொழுது, எல்லாம் மிகவும் உயர்வாகவே தோன்றுகிறது. வாலிக்கும் கும்பகர்ணனுக்கும் நிகரான பலசாலி அவர். ராமரிடம் எல்லையற்ற பக்தி கொண்டவர். ராமரிடமுள்ள அளவற்ற பிரேமையில் யாரையும் அவரிடம் அணுக விரும்பாததுடன், அவர் ஏவினாலும் ஏவாவிட்டாலும் அவருக்கு நன்மையளிக்கும் பணிகளையே செய்வதில் மிகுந்த ஆர்வமுள்ளவர். அறிவுடனும் நிதானத்துடனும் யோசனை சொல்லக் கூடியவர். எதையும் முன்கூட்டியே அறிந்து காரியங்களைச் சரிவர நிறைவேற்றுவதில் அனுமாருக்கு நிகர் யாருமில்லை. ஆயினும் நான் சொல்லப் போவதைத் தவருக எடுத்துக்கொள்ள வேண்டாம். சரியாகப் புரிந்துகொள்ளாமலிருப்பதில் ஒரு விசேஷமுமில்லை. நல்லது கெட்டது இரண்டையும்தான் நாம் எடுத்துக்கொள்ள

வேண்டும். ராமருடைய குணத்தைப்பற்றிக் கூறியபொழுது, எவ்வளவு விஷயங்களில் அவர் எல்லாரையும் போல் சாதாரண மனிதராக விளங்கினுர்; எனினும் அவற்றையெல்லாம் வென்று முடிவில் சீலம், தர்மம் இவற்றின் உச்சிக்கு உயர்ந்து நிற்கிருர் என்பதை விவரித்திருக்கிறேன் அல்லவா? அவர் மனவுறுதியிழந்து காணப்படும்பொழுது நமக்கு நிகராக இருப்பதுபோலத் தோன்று கிருர். அந்த மனத் தளர்ச்சியை வென்று, தமது இயல்பான தெய்விகத்தன்மையை எய்தி நிற்கும்பொழுது, சிறந்த லக்ஷ்ய புருஷராக அவரை அப்பொழுது போற்றுகிருேம். நாம் தினமும் வணங்கும் தெய்வபுருஷராகவே அவர் திகழ்கிருர். நற்குண நற் பண்புகளின் விளைவு அதுதான்.

வால்மீகியும் இந்த விஷயத்தை நன்கு அறிந்திருக்கிருர் என்று நினைக்கிறேன். அனுமார் வானரஜாதியில் பிறந்தவர். ஆகவே வானர இயல்புள்ளவர். பிறப்பிலும் பழக்கத்திலும் குரங்கினத் தைச் சேர்ந்தவர் என்பதை நினைக்கும்பொழுதுதான், அவருடைய உயர்வு பின்னும் அதிகமாகத் தோன்றுகிறது. வானரங்களுக்குள்ள சில குணங்கள் அவருக்கு இல்லாமலிருக்குமா? ராமருக்கு மிகவும் வேண்டியவராக, அத்தியந்த பக்தராக, நிகரற்ற தீரச் செயல்கள் புரிந்து உயர்நிலையடைந்தும் அவருடைய தாழ்ந்த பிறப்பின் சாயல்கள் ராமாயணத்தில் பல இடங்களில் காண்கின்றன. அதில் ஒரு தவறுமில்லை. நாம் பிறப்பதும் வளர்வதும் கடவுளின் செயல் அல்லவா? சிறுகுழந்தையாக இருந்தபொழுதே அனுமார் சூரிய னிடத்திலேயே தம் பலத்தைப் பரீக்ஷித்துப் பார்த்ததாகச் சொல்வ துண்டு. சூரியன் அவரை அடித்ததும் அவர் ஒரு மலையுச்சியில் விழுந்து தம் தாடையில் அடிபட்டுக்கொண்டாராம். அதிலிருந்து அவருக்கு அனுமார் என்ற பெயர் ஏற்பட்டதாம். தந்தை வாயு பகவானுடைய அநுக்கிரகத்தினுல் பல தேவதைகளிடமிருந்து அவருக்கு அநேக வரங்கள் வாய்க்கின்றன. அந்த வரங்களுள், அஸ்திர சஸ்திரங்களினின்றும் அவருக்கு மரணம் கிடையாது என்பது ஒன்று. சிறுவயதிலேயே அவருக்கு அபாரமான பலம் கிட்டுகிறது. அதனுல் ரிஷிகளுடைய ஆசிரமங்களுக்குச் சென்று அவர்கள் செய்யும் யாகங்களுக்குத் தீங்கு செய்வார். ஹவிஸ்ஸை எடுத்து இறைத்துவிடுவார். தாய் தந்தையர் வந்து அவரை வேண்டிக்கொண்டபின்பும் அவர் இத்தகைய சேஷ்டைகளை விட வில்லை. ரிஷிகள் வெகு காலம் இதைப் பொறுத்துக்கொண்டு ஒன்றும் சொல்லாமலிருக்கின்றனர். அதைப் பயன்படுத்திக் கொண்டு அனுமாரின் சேஷ்டைகள் மேலும் பொறுக்க முடியாமற் போகவே, பிறர் ஞாபகப்படுத்தினுலன்றி தம் பலம் தமக்கே தெரியாமற்போகும்படி அவருக்கு அவர்கள் ஒரு சிறு சாபம் இடு கின்றனர். தம் பலத்தைக் காண்பிக்க வேண்டிய சமயத்தில்

அவருக்குத் தம் பலமே மறந்துபோகும். மிகவும் முக்கியமான காரியமாக இருந்தால் யாராவது வந்து அவருக்கு அதை ஞாபகப் படுத்திச் செயலில் இறங்கச் செய்ய வேண்டும்.

அகஸ்தியருடன் பேசிக்கொண்டிருக்கும்பொழுது ராமரே, ''வாலியையும் சுக்கிரீவனையும்விட அனுமான் அதிக பலசாலி என்று சொல்லக் கேட்டிருக்கிறேன். சுக்கிரீவனுக்கு வேறு வேண்டியவன். அப்படியிருக்கும்பொழுது வாலியை அவனே கொன்றிருக்கலாமே! ஏன் அப்படிக் கொல்லவில்லை? வெகு காலத்திற்கு முன்பே இதைச் செய்திருக்கலாமே?'' என்று அகஸ்தியரிடம் கேட்கிறார். அப்பொழுது அனுமாருக்குத் தம் பலம் தெரியாது என்ற கதையை அகஸ்தியர் ராமருக்குக் கூறுகிறார். ஆனால் அது திருப்திகரமான பதில் என்று கூற முடியாது. சுக்கிரீவனுக்குத் தெரிந்திருக்கலாம் என்றால், அவன் அனுமாருக்கு ஞாபகப்படுத்தியிருக்கலாமே! காற்றும் நெருப்பும் போல இளவயது முதற்கொண்டு அவர்கள் இருவரும் நண்பர்கள். வாலிக்கும் சுக்கிரீவனுக்கும் பகை ஏற்பட்டு விரோதிகளான பிறகு, தம் பலத்தை உபயோகித்து அனுமார் வாலியை உடனே கொல்லாததற்குக் காரணம், அவ்விருவரைக் காட்டிலும் தாமே அதிக பலவான் என்பதை அவர் அறியாதது தான். சுக்கிரீவனுக்கு அவருடைய சக்தி தெரியாது. அனுமாருக்கும் அது தெரியாது. அவருக்கு இத்தகைய மறதி ஏற்பட்டிருந்தது. இந்தக் காலத்தில் இதை 'அம்னேஷியா' (amnesia) என்று சொல்லுகிறார்கள். சாதாரணமாகச் சொற்கள், பெயர்கள் இவைதாம் மறந்துபோகும். அனுமார் விஷயத்தில் அவருக்குத் தம் சக்தி எத்தகையது என்பதுதான் மறக்கும் என்று வால்மீகி குறிப்பிடுகிறார். தம் சக்தி மட்டுமல்ல; வேறு மூன்று நான்கு விஷயங்களிலும் அவருக்கு இந்த மறதி இருப்பதாகத் தெரிகிறது. அவற்றிலும் மறதி என்றுதான் கவி நினைத்திருக்க வேண்டும். இதை அவ்வளவு நிச்சயமாகச் சொல்ல எனக்குத் தைரியமில்லை. வேறு பல சமயங்களில் அவருக்கு இந்த மறதிதான் ஏற்பட்டிருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. ஒன்று, யாவற்றையும்விட முக்கியமாக எனக்குப் படுகிறது.

சுக்கிரீவன் தவறு செய்ததாகக் கோபம்கொண்டு வாலி அவனை ஓரிடத்திலும் தங்கவொட்டாமலும் உலகம் முழுவதும் துரத்தியடித்துக்கொண்டும் இருந்தபொழுது, அவனைத் தொடர்ந்து சென்றவர்கள் அவனுடைய மந்திரிகள் நால்வர். அவர்கள் அனுமார், நளன், நீலன், தாரன் ஆவர். எல்லையற்ற பலத்தோடு கூடிய வாலியினாலும் தன்னிடம் அகப்படாமல் ஓடிய சுக்கிரீவனைத் துரத்திச் சென்று பிடிக்க முடியவில்லை. அவ்வாறு ஓடியதில்தான் பூமண்டலம் முழுவதும் தனக்குத் தெரிய வந்ததாகச் சுக்கிரீவன் கூறுகிறான். அப்பொழுது அனுமாருக்குத் திடீரென்று ஒன்று

ஞாபகம் வருகிறது; அது முதலிலேயே நினைவுக்கு வந்திருந்தால் அவ்வளவு கஷ்டமும் தீர்ந்திருக்கும். கிஷ்கிந்தைக்கு எதிரில் ரிசியமூகம் என்ற மலை இருக்கிறது. வாலியோ அவனால் அனுப்பப் பட்டவனோ அங்கே சென்றால் அவன் தலை ஆயிரம் சுக்கல்களாக வெடித்துவிடும் என்று ஒரு ரிஷி சாபமிட்டிருக்கிறார் என்ற விஷயம் அனுமாருக்கு முதலில் மறந்து போய்விடுகிறது. பிறகு அதிர்ஷ்ட வசமாக அவருக்கு நினைவுவந்து தாங்கள் காப்பாற்றப்பட்டதாகச் சுக்கிரீவன் ராமரிடம் கூறுகிறான்.

மற்றொரு சமயம் அவருக்கு ஏற்பட்ட மறதி என்னவென்று பார்ப்போம். லக்ஷ்மணனைப்பற்றி ஆராயும்பொழுது தாரை லக்ஷ்மணனுடன் பேசும் கட்டம் நினைவுக்கு வருகிறது அல்லவா? ''அவ்வளவு கோபம் கொள்ளக் கூடாது. சுக்கிரீவன் மிகவும் நல்லவன். உண்மையான நட்புள்ளவன். உங்கள் இருவரின் திருப்திக்காக என்னையும் இந்தக் கிஷ்கிந்தா ராஜ்யத்தையுங்கூடத் துறந்துவிடுவான்'' என்று தாரை கூறுகிறாள். லக்ஷ்மணனுடைய கோபத்தை ஒருவாறு தணித்துவிட்டு, ''தம் கடமையை என் கணவர் மறந்துவிடவில்லை. வானரர்கள் அனைவருமே இங்கு வந்து ஒன்றுசேரும்படி அவர் ஏற்கனவே உத்தரவிட்டாகிவிட்டது'' என்கிறாள். அதைக் கேட்டதும் லக்ஷ்மணன், தான் அவசரப்பட்டுச் சுக்கிரீவனைத் தவறாக நினைத்துவிட்டதாக அறிந்து, அமைதியாக நடந்துகொள்ளுகிறான். வானரர்கள் அனைவரையும் பதினைந்தாவது நாள் அங்கு வந்து சேரும்படி உத்தரவிடும்பொழுது, சுக்கிரீவன் அனுமாரைத்தான் கவனித்துக் கொள்ளும்படிக் கூறுகிறான். எல்லாப் பொறுப்பையும் அனுமாரிடம் ஒப்படைத்துவிட்டுச் சுக்கிரீவன் நிம்மதியாக அந்தப்புரத்துக்குச் சென்று சந்தோஷமாக இருக்கிறான். கடுங்கோபத்துடன் லக்ஷ்மணன் கிஷ்கிந்தை வாசலில் வந்து நிற்கிறான் என்று கேட்டதும், சுக்கிரீவன் அனுமாரிடம் ஏற்கனவே தான் கடமையைச் செய்தாகிவிட்டதே என்று கூறுகிறான். அனுமார் பெரிய கடமையுணர்ச்சியுடன், ''வேலை செய்யும் சமயம் வந்துவிட்டது. நீங்கள் அதைக் கவனிக்கவில்லை என்று தெரிகிறது. ராமர் தம் கோபத்தை லக்ஷ்மணன்மூலம் தெரிவித்திருக்கிறார். போய், கைகூப்பியவண்ணம் கால்களில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக்கொள்வது நல்லது'' என்று புத்திமதி கூறுகிறார்.

சுக்கிரீவன் தன் கடமையைச் செய்தாகிவிட்டது என்பதை அனுமார் மறந்துவிடுகிறார். அதோடு, உண்மையில் குற்றமுள்ளவர் தாமே என்பதும் அவருக்கு மறந்துபோகிறது. மேற்கொண்டு காரியம் ஒன்றும் நடக்கவில்லை என்றால் அதற்கு அனுமார்தாம் பொறுப்பாளியாக வேண்டும். யஜமானனிடம் விசுவாசமுள்ள ஆள் என்ன செய்வான்? ''சுக்கிரீவன் மேல் கோபம் கொள்ள

வேண்டாம். தவறு செய்தவன் நான்தான்'' என்று சொல்ல வேண்டும் அல்லவா? அப்படிச் செய்யாமல், சுக்ரீவன் மேல் லக்ஷ்மணன் கோபம் கொண்டதைத் தாமும் ஆமோதிக்கிறார். ஏன் என்ற கேள்வி எழுகிறது அல்லவா? ராம லக்ஷ்மணர்கள் மீதுள்ள பெரும் அன்பில் அவர்கள் கோபம் கொண்டதும், தாமும் அவர்களுடன் சேர்ந்துகொண்டு சுக்ரீவனைக் கடிந்துகொள்கிறார் என்று தான் கூற வேண்டும். மற்றொரு சமாதானம்: யஜமானன் கோபம் கொண்டால் வேலைக்காரனும் யஜமானனைவிட அதிகமாகக் கோபம் கொள்வதுண்டு. அனுமாரும் அந்த ரீதியைப் பின்பற்றியதாகக் கொள்ளலாம். ஆனால் இவற்றில் எதுவும் சரியாகத் தோன்றவில்லை. ரிஷிகளின் சாபம் இம்மாதிரி வேலைசெய்வதாக வால்மீகி நினைத்திருக்கலாம் என்று எனக்குத் தோன்றுகிறது.

மற்றொரு சமயத்தில் அவருக்கு ஏற்பட்ட மறதி மிகவும் முக்கியமானது. வாலி அடிபட்டு விழுந்ததும் தாரை ஓடிவந்து புலம்புகிறாள். வாலி அப்பொழுது இன்னும் உயிர் துறக்கவில்லை. தைரியமும், மனிதர்களுக்கு மேற்பட்ட அறிவும் பொருந்திய அனுமார், பெரிய ராஜதந்திரிகளுக்கு உள்ள சாமர்த்தியத்துடன் அங்கு வருகிறார். வாலியின் உடலை மடிமீது இருத்திப் புலம்பிக் கொண்டிருக்கும் தாரையின் அருகில் வந்தும், வாலிக்கு இன்னும் உயிர் இருக்கிறது என்பதை அவர் கவனிக்கவில்லை. இதை மறதி என்று சொல்ல முடியாது. ஆயினும் சரியாகக் கவனிக்காத தவறும் ரிஷிகள் சாபத்தினால் ஏற்பட்டது என்று வைத்துக்கொள்ளலாம். ''இனி அழுவதில் பயனில்லை. வாலி வீரசுவர்க்கம் அடைந்து விட்டார். மேற்செய்ய வேண்டிய காரியங்கள் எவ்வளவோ இருக்கின்றன. அவற்றை நினைத்துக்கொள்ளுங்கள். தங்கள் புதல்வன் அங்கதனுக்கு முடிசூட்ட வேண்டும். கிஷ்கிந்தை ராஜ்யத்தின் சிம்மாசனத்தில் அவன் வீற்றிருப்பதை அவன் தாயாகிய நீங்கள் கண்டு களிக்க வேண்டாமா?'' என்கிறார். ராம லக்ஷ்மணர்களைக் கண்டதுமே வாலிக்குப் பின் சுக்ரீவன் அரசனாவதைப்பற்றி அனுமார் யோசனை செய்யத் தொடங்குகிறார். ஆயினும் நியாயமாக அங்கதன்தான் முடிசூட்டிக் கொள்ள வேண்டும் என்று அவரது பெருந்தன்மையுள்ளம் கூறுகிறது.

सर्वे हि हरिशार्दूलाः पुत्रश्चायं तवाङ्गदः ।
इदं हर्यृक्षराज्यं च त्वत्सनाथमनिन्दिते ॥
ताविमौ शोकसन्तप्तौ शनैः प्रेरय भामिनि ।
त्वया परिगृहीतोऽयमङ्गदः शास्तु मेदिनीम् ॥
संस्कार्यो हरिराजश्च, अङ्गदश्चाभिषिच्यताम् ।
सिंहासनगतं पुत्रं पश्यन्ती शान्तिमेष्यसि । IV. 21. 8, 9, 11.

"இந்த வானரர்களுக்கு உத்தரவு அளியுங்கள். வாலியின் உடலைத் தகனம் செய்தபிறகு அங்கதனுக்கு அபிஷேகம் செய்ய முற்படுங்கள். அவன் சிம்மாசனத்தில் வீற்றிருப்பதைக் கண்டதும், கணவன் இறந்ததை மறந்துவிடுவீர்கள்" என்கிறார். சுக்கிரீவனுக்குப் பெரும் பக்கபலமாக இருப்பவர் ஒருவர் சுயப்பிரஜ்ஞையோடு இருந்தால் மேற்கண்டவாறு பேசுவாரா? அனுமாருக்கு உள்ள விநோதமான மறதிக்கு இதையும் ஓர் அத்தாட்சியாக எடுத்துக்கொள்ளலாம்.

தாரை மிகவும் கெட்டிக்காரி; ராஜ்யதந்திரத்தில் அனுமாரையும் மிஞ்சக்கூடியவள். "அங்கதன் முடிசூட்டிக் கொள்வதைப் பற்றி ஒன்றும் எனக்குக் கவலையில்லை. வாலி உயிரிழந்த பிறகு சுக்கிரீவன் அதிகாரபதவியை அடைந்துவிடுவான். இனி இந்த ராஜ்யம், அங்கதன், நான் எல்லாருமே சுக்கிரீவனுக்கு உட்பட்டவர்கள்" என்று அவள் கூறிவிடுகிறாள். அனுமார் கூறியதை அவள் கேட்கவில்லை. அனுமார் அடைந்த பெரும் தோல்விகளில் இது ஒன்று. "இந்த வீரனின் உடலை மடியில் தாங்கிக்கொண்டிருக்கும் பொழுது நான் அடையும் சந்தோஷம், நூறு அங்கதர்களைத் தாங்கும்பொழுதும் ஏற்படாது. இந்தக் கிஷ்கிந்தைக்கு நானும் அரசியல்ல; அங்கதனும் அரசனல்ல" என்கிறாள் தாரை.

வாலியின் மரணத்திற்காகச் சுக்கிரீவனே ஒரு ஸர்க்கம் முழுவதும் புலம்புகிறான். சுக்கிரீவன் நிஜமாகவே வாலி போனதைக் குறித்து வருந்துகிறான். அவனது நிகரற்ற வீரத்தையும் சக்தியையும் சிறந்த குணத்தையும்பற்றி நினைக்கும்பொழுது, 'நாம் எவ்வளவு விசுவாசமற்று நடந்துகொண்டோம்!' என்ற நினைவும் எழுந்து, அவன் பெரிதும் பரிதவிக்கிறான். தன்னைத் தானே நிந்தித்துக்கொண்டு, "நான் செய்த பெரிய குற்றத்துக்கு இனி உலகில் உயிர்வாழ எனக்குத் தகுதி இல்லை. நான் அக்கினிப் பிரவேசம் செய்து உயிரை மாய்த்துக் கொள்ளுகிறேன். நான் தங்களுக்குச் செய்யவேண்டிய உதவியை அங்கதன் செய்து முடிப்பான். நான் உயிரை விட்டுவிடுகிறேன்'' என்கிறான். கேவலம் விசனத்தில் அவன் அவ்வாறெல்லாம் கூறவில்லை. மனப்பூர்வமாகவே அந்தச் சொற்கள் அவன் வாயிலிருந்து வருகின்றன. தாரை அழுது புலம்புவதையும், சுக்கிரீவன் சோகத்தால் பரிதவிப்பதையும், வானரர்கள் அனைவருமே துக்கத்தில் ஆழ்ந்து அவ்விடத்தை விட்டு அகன்றதையும் கண்டு ராமரே மனம் வருந்துகிறார். 'நாம் என்ன செய்துவிட்டோம்!' என்று அவருக்கே பெருங் கலக்கம் ஏற்படுகிறது. பச்சாத்தாபத்தினாலேயே அனுமாரும், 'அங்கதனே நியாயமாக அரியாசனத்தில் ஏறவேண்டியவன்' என்று எண்ணியிருக்கலாம் அல்லவா? ரிஷிகளின் சாபத்தினால் ஏற்பட்ட மறதி காரணமாகத்தான் அவர் அவ்விதம் நடந்திருக்க வேண்டும்

என்றே எனக்குத் தோன்றுகிறது. அந்தச் சூழ்நிலையில் இயற்கை உணர்ச்சி மேலோங்கவும், அவர் யதார்த்தமாக யாவரையும்போல் பேசியிருக்கிறார். சுக்ரீவனுக்கு உற்ற நண்பராக அவனுடன் உலகமெல்லாம் சுற்றியலைந்த அனுமாராக அவர் இல்லை. அப்பொழுது வாலி அடிபட்டு விழுந்த அந்தச் சமயத்தில், ராமரையும் சுக்கிரீவனையும் போல அவரும் இயற்கையுணர்ச்சிக்கு வசமாகியிருக்கலாம் என்று நினைப்பதில் தவறு ஏதுமில்லை. இதைத் தவிர வேறுவிதமாக அதற்குச் சமாதானம் ராமாயணத்தில் காணப்படவில்லை. கவியும் மேற்கூறிய விதமே கருதியிருக்க வேண்டும். இவ்விதம் நினைப்பதில் அனுமாருக்கோ கவிக்கோ ஒரு குறையும் இல்லை. அனுமாருடைய பெருமைக்கு இதனால் இழுக்கு எதுவும் உண்டாகவில்லை. அங்கங்கே மறதியைக் காட்டும் சம்பவங்களை எண்ணிப் பார்க்கும்பொழுது அதுவே காரணமாக இருக்கலாம் என்று தோன்றுகிறது அல்லவா?

## 18

### அனுமாரின் தோல்விகள்!

சென்ற உபன்யாசத்தில், சீதையைத் தேட வானரர்களைத் திரட்டும் விஷயத்தில் அனுமாரின் மறதியைப்பற்றிச் சொன்னேன் அல்லவா? ராமாயணத்தை ஆழ்ந்து படிப்போருக்கு, நான் கொஞ்சம் அதிகமாகவே பொருளை நுழைத்துக் கூறியிருப்பதாகத் தோன்றலாம் என்று அஞ்சுகிறேன். வேறு சில சுலோகங்களை எடுத்துக்காட்டி அந்தச் சந்தேகத்தை நீக்க எண்ணுகிறேன். கடுங் கோபத்துடன் லக்ஷ்மணன் கிஷ்கிந்தைக்கு வந்தபொழுது சுக்கிரீவன் தன் கடமையைச் செய்ய மறந்துபோகவில்லை என்று நான் வாதம் புரிந்தது உங்களுக்கு நினைவிருக்கலாம். அதிக சுக போகத்தில் ஆழ்ந்து கிடந்தான் என்பதுதான் அவன் செய்த தவறு. அது லக்ஷ்மணனுக்கு எல்லையற்ற கோபத்தை உண்டாக்கியது. கடமையைச் செய்யத் தவறவில்லை என்றாலும் அவன் சிற்றின்பங் களில் ஈடுபட்டது அறிவின்மையே. தாரை வெஞ்சினத்தோடு நின்ற லக்ஷ்மணனிடம் இதைத்தான் கூறுகிறாள். சுக்கிரீவன் தவறு செய்ததாகவே முதலில் ஒப்புக்கொண்டு, முடிவில் தன் வாக்கு வன்மையினால் அவள் அவனைக் குற்றமற்றவனாகக் கருதும்படிச் செய்துவிடுகிறாள். கோவிந்தராஜர் மேற்கூறியவாறுதான் விளக்கம் செய்கிறார்:—

अपराधमङ्गीकृत्य सान्त्वयित्वा, इदानीं विचार्यमाणे अपराध एव नास्तीत्याह । IV. 35. 10-11.

லக்ஷ்மணனுக்கு எதிரில் அனுமாருக்கு இரண்டாம் முறையாகச் சுக்கிரீவன் உத்தரவிடுகிறான்.

प्रेषिताः प्रथमं ये च मया दूता महाजवाः ।
त्वरणार्थं तु भूयस्त्वं हरीन् संप्रेषयापरान् ॥
ये प्रसक्ताश्च कामेषु दीर्घसूत्राश्च वानराः ।
इहानयस्व तान् सर्वान् शीघ्रं तु मम शासनात् ॥
अहोभिर्दशभिर्ये हि नागच्छन्ति ममाज्ञया ।
हन्तव्यास्ते दुरात्मानो राजशासनदूषकाः ॥ IV. 37. 10-12

இந்தச் சமயத்தில், 'பதினைந்து நாட்களுக்குள் அனைவரும் வந்து சேர வேண்டும்' என்று திட்டமிடுவதற்குப் பதிலாகக் 'குறைந்தது பத்து நாட்கள்' என்ற தவணை விதித்து, வானரர்கள் அதற்குள் வந்துசேருவதைக் கவனித்துக்கொள்ளும்படி அனுமாருக்குக் கட்டளையிடுகிறான். ''வானரர்கள் சீக்கிரம் வந்தாக வேண்டும். இன்னும் துரிதமாக வர வேண்டுமென்று அவர்களுக்கு உத்தரவிடுங்கள்'' என்று கூறுகிறான்.

प्रेषितदूतत्वरणार्थोक्तिः स्वस्य प्रकृतकार्ये पूर्वमेव सावधानतां लक्ष्मणाय द्योतयितुम् ।

பதினைந்து நாள் தவணையைப் பத்து நாளாகக் குறைத்தது, தான் ஏற்கனவே செய்ய வேண்டியதைச் செய்தாகிவிட்டது, காரியம் தாமதமானதற்கு அனுமாரின் மறதியே காரணம் என்பதைச் சுக்ரீவன் லக்ஷ்மணனுக்கு எடுத்துக் காட்டுவதற்காகவே என்று வைத்துக் கொள்ளலாம். சுக்ரீவன் பிரத்தியேகமாக இரண்டு தரம் உத்தரவிட்டிருக்கும்பொழுதும் முழுப் பொறுப்பையும் ஏற்றுக்கொள்ள வேண்டிய அனுமார், சுக்ரீவன் ஏதோ தவறு இழைத்துவிட்டது போல் லக்ஷ்மணன் சார்பாகப் பேசியது அவருக்கு ஏற்பட்டுள்ள மறதியின் கோளாறே ஆகும்.

அவருடைய மறதியினால் ஏற்பட்ட மற்றொரு விஷயத்தை இப்பொழுது கூறுகிறேன்; ஆனால் அதனால் பெரிய தீங்கு ஒன்றும் நேர்ந்துவிடவில்லை. பின்வரும் சம்பவத்தைக் கவியே அனுமாரின் மறதிக்கு உதாரணமாக எடுத்துக் காட்டுகிறார். யுத்தகாண்டத்தில் 102-ஆம் ஸர்க்கத்தில் இது நிகழ்கிறது. ராவணன் சக்தி ஆயுதத்தை லக்ஷ்மணன் மீது பிரயோகித்ததும், அது மார்பில் பாய்ந்து லக்ஷ்மணன் பிரக்ஞையிழந்து கீழே விழுந்துவிடுகிறான். அதைக் கண்டு அனைவரும் மனம் வருந்த, ராமரும் ஒரே சோகத்தில் ஆழ்ந்துவிடுகிறார். ஜாம்பவானுக்கு நிகரான சுஷேணன் என்ற வானரன், சஞ்சீவி பர்வதத்திலிருக்கும் பிரபல ஓஷதிகள் ஞாபகத்திற்கு வரவே, அனுமாரைக் கூப்பிட்டுப் போய் அவற்றைக் கொண்டுவரும்படிக் கட்டளையிடுகிறான். சுஷேணன் கூறிய ஓஷதிகளை ஏற்கனவே பார்த்தவருக்குத்தான் அடையாளம் தெரியுமாகையால் அனுமார் அவற்றைக் கொண்டுவர உடனே கிளம்புகிறார். ஆனால் சஞ்சீவி பர்வதத்தை அடைந்து அந்த ஓஷதிகளைத் தேடும்பொழுது அவற்றின் அடையாளம் அவருக்கு மறந்து போகிறது. அவர் ஞாபகப்படுத்திக்கொள்ள முயன்றதைக் கவி ஐந்தாறு சுலோகங்களில் விவரிக்கிறார்.

'அந்தோ! என்ன செய்வது? எதற்காக நான் வந்தேனோ அதுவே எனக்கு மறந்துவிட்டதே! திரும்பிப்போய்ச் சுஷேணனிடம் சரியாகக் கேட்டுக்கொண்டு வரலாமா?' என்று அனுமார்

யோசிக்கிறார். பிறகு, முன் தடவை வந்தபொழுது அந்த மலைச் சிகரத்தையே பெயர்த்து எடுத்துக்கொண்டு வந்தது நினைவுக்கு வருகிறது. 'ஓஷதி எது என்பதைக் கண்டுபிடிப்பது சுஷேணனுடைய வேலை' என்று எண்ணி, அந்த ஓஷதி இருக்கும் பாகத்தையே பெயர்த்து எடுத்துக்கொண்டு போகிறார். சுஷேணன் தனக்கு வேண்டிய ஓஷதியை எடுத்து, அதன் ரஸத்தைப் பிழிந்து, லக்ஷ்மணனை மோக்கும்படிச் செய்ததும் லக்ஷ்மணன் சுயநினைவு பெற்று எழுந்திருக்கிறான். அனுமார் ஓஷதி பர்வதத்தைத் திரும்ப முன்பிருந்த இடத்திலேயே வைத்ததாகக் கவி இப்பொழுது கூறவில்லை. ஒருவேளை அவருக்கே மறதி ஏற்பட்டதோ என்னவோ!

மேலும் இரண்டு சம்பவங்களை எடுத்துக் கூறலாம். ஆனால் அவை அவ்வளவு முக்கியமானவை அல்ல. அனுமாருடைய மறதிக்கு உதாரணங்களாகக் கவி ஒருவேளை அவற்றை வைத்திருக்கலாம். அவருடைய ஞாபகக் குறைவைப் பின்னும் நன்றாகக் காட்டுகின்றன என்பதற்காகவே, இப்பொழுது அவற்றை எடுத்துக் கூறுகிறேன். பரதனுடைய குணசித்திரத்தைக் காட்டும்பொழுது, அரசபோகத்தை அநுபவிப்பதில் பரதனுக்குச் சுவை ஏற்பட்டிருக்குமோ என்று எல்லாரையும் போல் ராமருக்கும் சிறிது ஐயம் உண்டாக, அனுமாரை அனுப்பி அறிந்து வரச் சொன்ன சம்பவத்தை ஏற்கனவே கூறியது உங்களுக்கு நினைவிருக்கும். அயோத்திக்கு வரும் வழியில் ராமர் தங்கியிருந்தபொழுது, அனுமார் பரதனைப் பார்த்துவிட்டு வந்து, உள்ளபடி செய்தி சொல்ல வேண்டும். ஆனால் வரச் சொன்ன இடத்திற்கு அனுமார் திரும்பி வரவில்லை. அவர் பரதனோடு சேர்ந்து, ராமர் இருக்கும் இடத்துக்கு வருகிறார். அதனால், தாம் தெரிந்துகொண்டு வந்த விஷயத்தைத் தனியாக ராமரிடம் சொல்ல அவருக்கு அவகாசம் இல்லை. ராமருடைய விருத்தாந்தத்தைச் சொல்லும்பொழுது பரதன் முகத்தில் ஏற்படும் மாறுதல்களையும் உணர்ச்சிகளையும் கவனித்து அவனுடைய மனநிலைமையையும் அறிந்து வருவது அவருக்கு இட்ட பணி. அப்படி இருக்கும்பொழுது அவர் ஏன் அவ்விதம் செய்யவில்லை?

யஜமானருடைய கட்டளைகளை அலக்ஷ்யம் செய்யும் ஊழியர் அல்ல அவர். பரதனிடம் ராமரின் வரலாற்றைக் கூறும்பொழுது அவர் வேறு எண்ணங்களில் ஆழ்ந்திருக்க வேண்டும் என்பது என் அபிப்பிராயம். வேறு விஷயங்களில் கவனம் சென்றதனால் அவர் தாம் மேற்கொண்ட கட்டளையை மறந்திருக்கலாம். இது அவருக்கு வாய்த்திருந்த சாபத்துக்கு ஏற்றபடி இருக்கிறது. ஆனால் உரையாசிரியர் அதற்கு வேறு வகையான விளக்கம் தருகிறார். எனக்கு அது சரியென்று படவில்லை. அனுமார் திரும்பி

வந்து தாம் அறிந்து வந்ததைச் சொல்லும்படி ராமர் தீர்மான மாக ஒன்றும் கூறவில்லை. அவர் பரதனுடைய முகபாவத்தை இரண்டு நோக்கங்களுடன் கவனித்து, எது உண்மையோ அதை மட்டும் வந்து கூறும்படி பணித்ததாகச் சொல்லுகிறார். அனுமார் மீது மறதியினால் ஏற்படும் குற்றம் இல்லை என்பதையே மேற்படி விளக்கம் காட்டுகிறது. பரதனுக்கு ராஜ்யத்தில் விருப்பம் ஏற்பட்டிருக்குமோ என்று அறிந்துகொள்வதற்குப் பதிலாக ராமர் கூறியதைப் பின்வருமாறு கோவிந்தராஜர் வியாக்யானம் செய்கிறார்: "பரதனைப் போய்ப் பார்க்கும்பொழுது ராஜ்யத்தை ஏற்று அரசனாக இருக்கும்படிக் கேட்பதாக என் உத்தேசம். அவன் ஏற்றுக் கொள்ளலாம், அல்லது ஏற்றுக்கொள்ளாமலிருக்கலாம். நானே வலிய ராஜ்யத்தை அளிக்கும்பொழுது பரதன் சந்தோஷமாக ஏற்றுக்கொள்வானோ அல்லது மறுத்துவிடுவானோ தெரியாது. அவன் ஏற்றுக்கொள்ள மறுத்தால் நீ திரும்பி வர வேண்டாம். அவ்வாறின்றி அவன் ஏற்றுக்கொண்டால் வந்து என்னிடம் சொல்'' என்று அர்த்தம் கூறுகிறார். ஆனால் அது சரியாகத் தோன்றவில்லை. பரதனுடைய உயர்ந்த குணங்களைப்பற்றி அனுமார் வெகுவாகக் கேட்டிருப்பார். ஆகவே அவனைப் பார்த்துப் பேசிய பரபரப்பில் அவர் ராமர் கூறியதை மறந்திருப்பார் என்பது தான் தெளிவான காரணமாகப் படுகிறது.

மற்றொரு விஷயம், எளிதில் சமாதானம் கூறிவிடலாம். பரதனைச் சந்தித்ததும், சித்திரகூடத்துக்கு அவன் வந்து போன பிறகு நடந்த விருத்தாந்தம் அனைத்தையும் அனுமார் கதையாகக் கூறுகிறார். பரதன் ஒன்றுவிடாமல் கேட்க விரும்புகிறான். அனுமார் கூறியதில் ஒரு விஷயம் விட்டுப் போயிருக்கிறது. அது எப்படி விட்டுப்போயிற்று என்று விளங்கவில்லை. ராவணவதம் ஆனபிறகு சீதாதேவி அக்கினிப் பிரவேசம் செய்த சம்பவம் மட்டும் கூறப்பட வில்லை. அத்தகைய முக்கியமான சம்பவத்தை விட்டதற்கே ஒரு முக்கிய காரணம் இருக்க வேண்டுமென்று தோன்றுகிறது. ஏன் அதை அனுமார் மறந்துபோனார்? அது கேவலம் மறதியா? ஒரு வேளை அதனால் பரதன் ராமரைத் தவறாக நினைத்துவிடுவான் என்று எண்ணி, அந்தச் சம்பவத்தைக் கூற விருப்பமில்லாதிருக் குமோ! அப்படியானால், பரதன் மீதுள்ள அன்பினால், இந்தக் கொடுமையான வரலாறு அவன் காதில் விழ வேண்டாம் என்று அவர் நினைத்ததாக வைத்துக்கொள்ள வேண்டும். சாதாரணமாக எல்லாரும் செய்யும் தவறுதான் அது. விரும்பத்தகாத விஷயங் களை அவையாகவே வெளியாகுமுன் சொல்வதற்கு இஷ்டமில்லாத பொழுது, ஒன்றும் நடக்காதது போல் மௌனமாக இருந்து விடுவதுதான் வழக்கம் அல்லவா? இந்தச் சந்தேகம்தான் முழு வரலாற்றையும் சொல்லவொட்டாமல் தடுக்கிறது.

அனுமாருடைய சிறு மறதிகளைப்பற்றிக் கூறினேன். இன்னும் வேறு சில விஷயங்களும் இருக்கின்றன. அவருக்கு ஏற்பட்ட இரண்டு முக்கியத் தோல்விகளைப்பற்றி ஏற்கனவே குறிப்பிட்டேன். அனுமாருடைய அறிவுத் திறமையும், விஷயத்தை எடுத்துக் கூறும் வாக்குவன்மையும் அனைவரும் ஒப்புக்கொண்டவை. இருப்பினும் இரண்டு தடவை அவருக்கு எடுத்துக்கொண்ட காரியத்தில் பெரும் தோல்வியே ஏற்படுகிறது. முதலாவது, அங்கதனுக்கு முடிசூட்டும்படிக் கூறித் தாரையைச் சம்மதிக்கச் செய்ய அவர் எடுத்துக்கொண்ட முயற்சி. 'வருந்துவதை விட்டு அவள் இனி அங்கதனுக்கு முடிசூட்டி அவன் அரசனுவதைக் கண்டு மனம் தேற வேண்டும்' என்று தாரைக்கு உபதேசிக்கிருர். தாரை புலம்புவதைக் கண்டு சுக்ரீவன் முதலியோரையும், 'பெரிய குற்றம் செய்துவிட்டோம்; இனி இதன் விளைவு என்ன ஆகுமோ! என்ன பரிகாரம் செய்து அதைத் தடுக்கலாம்?' என்ற கவலை பாதிக்கிறது. வாலிக்குப்பின் அரசன் யார் என்ற கவலை, அனைத்திலும் பெரிதாக இருக்கிறது. வாலிக்குப் பிறகு தான் அரசனுவதைச் சுக்ரீவனே விரும்பாமல், உண்மையாகவே வருந்துவதாக அனுமாருக்குப் படுகிறது. மற்ற வானரர்களைப் போல் அவரும் வாலிக்காகக் கண்ணீர் விட்டு வருந்துகிருர். அப்படி இருந்தால், வாலிக்குப் பிறகு அங்கதன்தான் அரசனுக வேண்டும் என்று அனுமாரும் நினைத்திருக்கலாம் என்றே எனக்குத் தோன்றுகிறது. ஆகவேதான் தாரையிடம் அங்கதனுக்கு முடிசூட்டுவதைப்பற்றிக் கூறியிருக்கிருர். ஆனுல் எல்லை மீறிய துக்கத்திலும் தாரை தன் சுவாதீனத்தை இழக்கவில்லை. அவள் நிதானமாகவே இருக்கிருள். "இல்லை, வாலிக்குப் பிறகு சுக்ரீவனுக்குத்தான் யாவும் உரியவை. (ராஜ்யத்தோடு தன்னையும் சேர்த்துக்கொண்டாள் என்று நினைக்கிறேன்.) அவன்தான் அரசன். அங்கதனைப்பற்றி அவன்தான் தீர்மானிக்க வேண்டுமேயன்றி நான் அல்ல'' என்கிருள். என்ன அபார சாமர்த்தியமுள்ளவள்! புராணகாலத்துப் 'போர்ஷியா' என்று நான் ஒரு தரம் அவளைப்பற்றிக் கூறியிருக்கிறேன்.

அனுமாரின் மற்ருெரு முக்கியமான மறதியைப் பார்ப்போம். சுக்ரீவன் கொடுத்திருந்த ஒரு மாதத்தவணை முடிந்து அனுமாரும் ஏனையோரும் காரியசித்தியாகாமல் சுயம்பிரபையின் குகையில் காய் கனி கிழங்குகளைப் புசித்துக்கொண்டு சிறிது காலம் சுகமாக இருந்தபொழுது, 'திரும்பிப் போகாமல் இப்படியே இருந்துவிடலாம்' என்று அங்கதன் கொண்ட தீர்மானத்தினின்றும் அவனை அவரால் திருப்ப இயலாமற் போகிறது. எல்லோரும் சுக்ரீவன் விதிக்கும் மரணதண்டனைக்கு உள்ளாக வேண்டும். அங்கதனின் மாமனுன தாரன், 'சுயம்பிரபையின் குகையிலேயே சுகமாக இருந்துவிடலாம்' என்று யோசனை கூறுகிருன். அது அனுமாருக்குச்

சரியாகத் தோன்றவில்லை. "அங்கதனும் அவனோடு இத்தனை வானரர்களும் இங்கேயே தங்கிவிட்டால் அவனே இவ்விடத்திற்கு அரசனாகிவிடலாமே! சுக்கிரீவனுடைய ராஜ்யத்தில் ஒரு பகுதி போய்விடும். அங்கதனால் சுக்கிரீவனுக்கு ஆபத்துக்கள் உண்டாக லாம்" என்று அவர் தாமே கூறிக்கொள்கிறார். ஆகவே தம் சாமர்த்தியத்தையெல்லாம் உபயோகித்து, அங்கதனைக் கிஷ்கிந் தைக்குத் திரும்பிப் போகும்படிக் கூறுகிறார். "சுக்கிரீவனை எனக்கு நன்றாகத் தெரியும். உனக்கு ஒரு தீங்கும் அவன் செய்யமாட்டான்" என்கிறார். "இந்த வானரர்களை நம்பாதே! இவர்கள் உன்னையே நம்பிக்கொண்டிருக்க மாட்டார்கள். இவர்களுக்குப் பெண்டு பிள்ளைகள் இருக்கிறார்கள் அல்லவா?" என்று மேலும் தந்திரமாகப் பேசுகிறார். அங்கதன் அவர் வார்த்தைக்குச் செவிசாய்க்கவே இல்லை. "என் சிற்றப்பன் என்னிடம் எப்படி நடந்துகொள்வான் என்று எனக்குத் தெரியும். நான் வாலியின் பிள்ளை என்பதை அவன் மறப்பானா? மேலும், அவன் என்னை இளவரசனாகச் செய்ய வில்லையே!" என்கிறான். அங்கதன் சிறியவன். அவனிடமே அனுமாரின் தந்திரோபாயங்கள் பலிக்கவில்லை. இவையெல்லாம் கிஷ்கிந்தா காண்டத்தில்.

அடுத்த காண்டத்துக்கு வருவோம். அனுமாருடைய அபார சாமர்த்தியமுங்கூட எந்த எந்தச் சமயங்களில் பயன்படாமற் போயிற்று என்பதை மட்டும் எடுத்துக் கூறுகிறேன். அசோக வனத்தில் சீதாதேவியைக் கண்டு பேசியபொழுது சீதை அவரிடம் தான் பட்ட கஷ்டங்களையெல்லாம் படிப்போர் கண்ணீர் விடும்படி உருக்கமாக எடுத்துக்கூறி, ராம லக்ஷ்மணர்களுக்குத் தன்னால் இத்தகைய துன்பம் நேருவதைவிடத் தான் உயிர்துறந்து யாவ ருக்கும் நிம்மதியை அளிப்பதுதான் முறை என்று கூறுகிறாள். "ராமரும் லக்ஷ்மணனும் கடலை எவ்வாறு கடப்பார்கள்? வானர சேனை எவ்விதம் வந்து என்னை மீட்டுச் செல்லும்?" என்று அவள் கவலையுடன் கேட்டபொழுது அனுமாருக்குத் தாங்கவில்லை. "தேவி! ஏன் இப்படி வருந்த வேண்டும்? எனக்குத் தைரியம் இருக்கிறது; சக்தி இருக்கிறது. கடலைத் தாண்டி வந்தது போல மீண்டும் செல்ல முடியும். தங்களை என் முதுகின்மேல் ஏற்றிச் சென்று ஒரு நொடியில் தங்கள் கணவரிடம் சேர்ப்பித்துவிடு கிறேன். இந்தக் கவலை வருத்தம் அனைத்தையும் இனி விட்டொழி யுங்கள். தங்களைக் கொண்டுபோய்ச் சேர்ப்பதில் எனக்கு ஒரு சிரமமுமில்லை" என்கிறார். அப்பொழுது அவருடைய ஆகிருதி ஒரு பூனை அளவுதான் இருக்கிறது. யாரும் அறியாமல் இலங்கை முழு வதையும் தேடுவதற்காக அவர் அத்தகைய சிறிய உருவில் இருக் கிறார். அவளைத் தம் முதுகில் தாங்கிச் செல்வதாக அவர் கூறிய பொழுது அவளுக்கு அது மிகவும் விநோதமாகப் படுகிறது. மிருது

வான சுபாவமுள்ளவளாகையால் அவள் மெதுவாகச் சொல்லு கிருள்:—

हनुमन् दूरमध्वानं कथं मां वोढुमिच्छसि ।
कथं बाल्पशरीरस्त्वं मामितो नेतुमिच्छसि ॥ V. 37. 31-32.

"இவ்வளவு சிறிய உருவத்தோடு இருக்கும் நீ என்னை அவ்வளவு தூரம் எப்படித் தூக்கிச் செல்ல முடியும்?" என்று கேட்டதோடு நில்லாமல், "நீ ஒரு வானரமாகத்தானே தோன்றுகிருய்?" என்றும் மேலே கேட்டுவிடுகிருள்.

तदेव खलु ते मन्ये कपित्वं हरियूथप ॥ V. 37. 31.

அனுமாருக்குச் சிறிது ரோஷம் உண்டாகிவிடுகிறது. முதல் முதலாகத் தமக்குப் பெரிய அவமானம் நேர்ந்துவிட்டதாகத் தோன்றுகிறது. 'என் ஆகிருதி எப்படி என்பதை அவளுக்குக் காட்ட வேண்டும்' என்று தமக்குள்ளேயே கூறிக்கொண்டு, அவள் நினைப்பது போல் தாம் சிறிய உருவம் படைத்தவர் அல்ல; உண்மையிலேயே பலமும் சக்தியும் பொருந்தியவர் என்று அவளுக்கு நம்பிக்கை உண்டாகும் வண்ணம் தம் சுயரூபத்தை வளர்த்துக் கொள்ளுகிருர். "இப்பொழுது பாருங்கள். தங்களைத் தாங் குவதற்கு எனக்குச் சக்தி உண்டு என்பதை நம்புகிறீர்களா? இந்த இலங்கை முழுவதையும் இதிலுள்ள ஆண் பெண் அனைவரையும் ராவணன் உட்பட த்வம்ஸம் செய்து கடலில் எறிந்துவிடக் கூடிய தைரியமும் பலமும் எனக்கு உண்டு" என்கிருர்.

இது கொஞ்சம் மிகைபடக் கூறல்தான். அந்தக் காலத்தில் ஒரு போர்வீரன் யுத்தகளத்தில் நிற்கும்பொழுது மார்தட்டிப் பேசுவதுண்டு. அது நிஜமாக இருக்க வேண்டும் என்ற கணக்கில்லை. எதிராளியும் அதை அப்படியே நம்பிவிடமாட்டான். தமக்கு ஒரு வேகத்தை உண்டுபண்ணிக் கொள்வதற்காக அசகாய சூரர்கள் என்று ஜம்பமாகப் பேசிக்கொள்வர். அனுமாருக்கு விரோதிகள் யாருமில்லை, ஆனல் அவரைக் குறை கூறக்கூடியவர்கள் இருக் கிருர்கள். ஆகவே அவர் தம்மைப்பற்றிக் கொஞ்சம் அதிகமாகவே சொல்லிக்கொள்ளுகிருர். அவர் ஒரு சாதாரண வானரமாக இப் பொழுது சீதைக்குத் தோன்றவில்லை. அவருடைய பெருஞ்சக்தி அவளுக்கு விளங்குகிறது. சூரிய அறிவுள்ளவளாகையால் வேறு காரணத்தை எடுத்துக் கூறுகிருள்: "என்னைத் தூக்கிச் செல்லும் பொழுது ராக்ஷஸர்கள் உன்னைப் பின்தொடர்ந்து வருவார்கள். கடலுக்கு மேல் வானவெளியில் செல்லும்போது போரிட வேண்டி வரும். ராக்ஷஸர்களோடு போரிட்டு ஒருகால் தோல்வி ஏற்படலாம். சண்டையில் எதுவும் நிச்சயமாகச் சொல்லமுடியாது. (யுத்தத்தைப் பற்றி ஒரு பெண் பொதுவாகக் கூறுவது மிக அதிசயம் அல்லவா?)

ராக்ஷஸர்களிடம் அகப்படாமல் என்னைத் தூக்கிச் சென்றுவிடலாம் என்றாலும், தெரிந்து என் முழுமனத்தோடு ஓர் அன்னியன் என்னைத் தீண்டும்படிச் செய்வது சரியல்ல. அது கூடாது. 'ராவணன் தீண்டவில்லையா?' என்று கேட்கலாம். ஆம், உண்மையே! ஆனால் அப்பொழுது நான் என் வசத்தில் இல்லை. என்னை அவன் பலாத்கார மாகத் தொட்டுத் தூக்கிச் சென்றான். இப்பொழுது நானே இஷ்டப்பட்டு உன் முதுகில் ஏறிச் செல்ல வேண்டும் என்கிறாய். ராவணன் தீண்டியது போலவா இது? ஆயினும் ராவணனால் அபகரித்துச் செல்லப்பட்ட என்னை இவ்வாறு பின்கதவு வழியாகத் திரும்ப அழைத்துக்கொள்வது ராமருக்குத் தகுதியா? அவர் இங்கே வந்து ராவணனை அவன் குடும்பத்துடன் நாசம்செய்து என்னை அழைத்துச் சென்று, தமது புகழுக்கும் பெருமைக்கும் யாராலும் ஹானி ஏற்பட முடியாது என்று உலகுக்குக் காட்ட வேண்டாமா? அதன்பின்தான் என்னை மீட்டுச் செல்ல வேண்டும். ராவணன் என்னைத் தூக்கிவந்தது போலவே நீயும் செய்ய எண்ணுகிறாயா? ராவணனை வதம் செய்தபிறகு என்னை மீட்டுச் சென்றால் தான் அவர் புகழுக்கு முற்றும் உரியதாகும்'' என்கிறாள்.

அவள் கூறுவது சரியே என்று அனுமாருக்குப் படுகிறது. ''தேவி! ராமருடைய பத்தினி எப்படிப் பேசவேண்டுமோ அப்படிப் பேசிவிட்டீர்கள். தாங்கள் கூறுவது அவ்வளவும் சரியே. எதிரிகள் என்னைத் தாக்கலாம் என்று தாங்கள் பயப்படுவது நியாயம்தான். இத்தகைய பேராபத்தில் சிக்கியிருக்கும்பொழுது, 'நான் உன்னோடு வருவதாயில்லை; உரிய காலம் வந்து என்னை மீட்டுச் செல்லும் வரையில் காத்திருப்பேன்' என்று உலகில் வேறு எந்தப் பெண்மணி கூறுவாள்! ராமரே கேட்டுப் பெருமையடையும் விதம் தாங்கள் பேசினீர்கள். தாங்கள் பேசியது முழுவதையும் ஒன்றுவிடாமல் அவரிடம் போய்க் கூறுவேன். தாங்கள் பேசியபடியே சிறிதும் பிசகாமல் அப்படியே சொல்லுவேன். தங்கள் மனத்துக்கு விரோதமாகச் செய்ய வேண்டுமென்ற எண்ணம் எனக்கு இல்லை. ஒப்புயர்வற்ற ஓர் உத்தமியின் சரீரத்தைத் தொடும் பாக்கியத்தைப் பெற வேண்டும் என்ற எண்ணமும் இல்லை. ஸ்ரீராமருக்குத் திருப்தியை உண்டாக்கவே விரும்பினேன். இலங்கை கடலுக்கு அப்பால் இருக்கிறது. சுற்றிலும் பெரும் கோட்டைகள் பெருத்த காவலுடன் இருக்கின்றன. இலங்கையைத் தாக்குவது எளிதான காரியமல்ல. எனக்கு உள்ள பலம் எத்தகையது என்பது எனக்குத் தெரியும். அதனால்தான் தங்களை அழைத்துச் செல்வதாகக் கூறினேன். வேறு ஒருவிதமான எண்ணமுமில்லை. தங்களுக்கு என்னோடு வரப் பிரியமில்லை என்றால், நான் தங்களைக் கண்டு பேசியதைக் கேட்டுத் தங்கள் கணவருக்கு நம்பிக்கை ஏற்படும்வண்ணம் ஏதாவது அடையாளம் எனக்குத் தாருங்கள்'' என்கிறார்.

அனுமாருக்கு ஏற்பட்ட தோல்விகளில் இது ஒன்று. ஆனால் இந்தத் தோல்வி அவருக்கு ஏமாற்றத்தை அளிக்கவில்லை.

இப்பொழுது சுந்தரகாண்டத்தின் கடைசிக்குச் செல்வோம். ராவணவதம் முடிந்து விபீஷணன் முடிசூட்டப்பெற்ற பிறகு சீதைக்கு இனிமேல் சிறைவாசம் இல்லை. விபீஷணன் லங்காதிபதியாகிவிட்டபடியால் அவள் விடுதலை பெற்றுவிட்டாள் என்ற செய்தியைக் கூறும்படி ராமர் அனுமாரை அனுப்புகிறார். அனுமாருக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. அவர் வந்து மகிழ்ச்சி பொங்கப் பேசிய பேச்சைக் கேட்டுச் சீதையே திகைத்துவிடுகிறாள். "பெரிய பேச்சாளன்' என்று தனக்குள்ளேயே கூறிக்கொண்டு, "எனக்குத் தெரிந்தவர்கள் யாவரிலும் இப்படிப் பேசக்கூடியவன் நீ ஒருவன்தான்" என்று சீதை, தான் இவ்வளவு காலமாகக் காத்திருந்த சந்தோஷச் செய்தியைக் கேட்ட களிப்பில், அவரைக் கொண்டாடுகிறாள். எத்தகைய உயர்ந்த புகழுரை சீதாதேவியின் வாயிலிருந்து அனுமாருக்குக் கிடைத்திருக்கிறது! மற்றவர்கள் இத்தகைய பாக்கியத்தைப் பெற என்ன தவம் செய்வார்கள்! அவருடைய அதிருஷ்டத்தைக் கண்டு யாரும் பொறாமை கொள்ள முடியாது. "ஏறக்குறைய நம் போன்றவர்களிடம்தான் நமக்குப் பொறாமை உணர்ச்சி உண்டாகும்" என்று பேகன் என்ற ஆங்கில அறிஞர் கூறுகிறார். இங்கிலாந்து சக்கரவர்த்தியைக் கண்டோ, அமெரிக்க ஜனாதிபதியைக் கண்டோ யாரேனும் பொறாமை கொள்வார்களா?

சீதையின் பாராட்டுதலைப் பெற்று அனுமார் அடைந்த ஆனந்தத்துக்கும் பெருமைக்கும் அளவில்லை. பதிலுக்கு அவர் என்ன செய்தார் தெரியுமா? உங்களுக்கு ஒருவேளை ஏதோ தவறு நேர்ந்துவிட்டதாகத் தோன்றலாம். "இவ்வளவு நாளாகத் தங்களைப் பயமுறுத்தியும் கடுஞ்சொற்களைப் பேசித் துன்புறுத்தியும் வந்த இந்த அரக்கிகளை என்ன செய்யலாம், சொல்லுங்கள்! இவர்களை நன்றாக அடித்து உதைத்து என் ஆத்திரத்தைத் தீர்த்துக் கொள்ளுகிறேன். இந்த வரத்தைத்தான் நான் பதிலுக்குத் தங்களிடமிருந்து யாசிக்கிறேன்" என்கிறார். அனுமார் இப்படிக் கேவலம் தம் தேகபலத்தைப் பெருமைப்படுத்தியது அவருக்கே மிகக் குறைவை உண்டாக்குவதாக எனக்குத் தோன்றுகிறது. நாம் போற்றிப் பாராட்டிய தேவியை அரக்கிகள் கொடுமைப் படுத்தியதைக் காண, அவர் இரத்தம் கொதித்து எல்லையற்ற கோபத்தை உண்டாக்கியிருக்கிறது. சீதையின் தெய்விக சுபாவம் வெளியாவதற்கென்றே அவர் அந்தத் தகாத கடுஞ்சொற்களைக் கூறினார் என்று நினைக்கிறேன்.

சீதை கூறிய பதில் விலை மதிக்கத்தகாதது. எத்தகைய பொறுமை, பரிவு, மன்னிப்பு! அவள் பேசிய பேச்சின் உயர்வுக்கு

ஈடேது! "பாவம்! இந்தப் பெண்கள் என்ன செய்வார்கள்? யஜமானனுடைய கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடப்பவர்கள் இவர்கள். இவர்கள்மீது குற்றம் என்ன?" என்கிருள் சீதை. அவளது மன்னிக்கும் குணம்தான் என்ன! அந்தச் சொற்களைக் கேட்டு அனுமாருக்கும், 'ஆகா! நாம் கண்டபடிப் பேசிவிட்டோமே' என்று தோன்றியிருக்கும். தம் சுபாவமான குரங்குத்தன்மையை விட்டு, அறிவு தெளிந்து, விடைபெற்றுச் செல்வதே மேல் என்று அவர் கருதுகிருர்.

இனி இவ்விடத்தை விட்டு வேறு நிகழ்ச்சிகளைக் கவனிக்கலாம் என்று எண்ணுகிறேன். ஆயினும் இரண்டொரு விஷயங்களைக் குறிப்பிட்டுவிட்டு மேலே செல்வோம். தான் மீளுவதற்கு வழி இல்லையோ எனச் சீதை கலங்கித் தவித்துக்கொண்டிருந்தபொழுது திரிஜடை என்பவள் தான் ஒரு கனவு கண்டதாகவும், அதில் ராவணனும் கும்பகர்ணனும் அவர்களைச் சேர்ந்தவர்களும் படுகுழியில் விழுந்து தத்தளிக்க, ராமரும் லக்ஷ்மணனும் உயர்ந்த யானைகள் மீது வீற்றிருப்பதாகவும், அவர்களின் நடுவில் சீதை பெருமையுடன் அமர்ந்திருப்பதாகவும் கண்டதாகக் கூறுகிருள். "இந்த என் கனவு கட்டாயம் பலிக்கும். ராக்ஷஸிகளே! சீதையை இவ்வாறு துன்புறுத்துகிறீர்கள். ராமர் இலங்கையை ஜயித்துச் சீதையை மீட்க வரும்பொழுது நீங்கள் அவளைப் படுத்தியபாட்டைக் கேட்டு உங்களை நன்ருகப் பழிதீர்த்துவிடுவார். சீதையின் கால்களில் விழுந்து இப்பொழுதே அவளது மன்னிப்பை வேண்டிக்கொள்ளுங்கள்" என்று திரிஜடை அரக்கிகளைப் பார்த்துக் கூறுகிருள். அனுமார் சீதை ஆகிய இருவருமே அதைக் கேட்டுக்கொண்டிருக்கின்றனர். பிறகு அனுமார் அந்த அரக்கிகளுக்குத் தண்டனை அளிப்பதாகக் கூறும்பொழுது சீதை அவரைத் தடுக்கிருள். இந்தச் சமயத்தில் நமக்குத் திரிஜடை கண்ட கனவு நினைவுக்கு வருகிறது அல்லவா? நாம் இந்த இரண்டையும் இணைத்துப் பார்க்க வேண்டும் என்பதுதான் கவியின் நோக்கம் என்று எனக்குத் தோன்றுகிறது. நல்லவர்கள் காணும் கனவுகள் சாதாரணமாகப் பலிப்பதுண்டு. பின்வரும் சம்பவங்களை முன்கூட்டியே அவை அறிவிக்கின்றன. அனுமார் அரக்கிகளைத் தண்டிக்க விரும்பியதைச் சீதை தடுத்தது, திரிஜடை தான் கண்ட கனவைக் கூறி அரக்கிகளுக்குப் புத்திமதி கூறியதை மீண்டும் நமக்கு நினைவூட்டுவதாகும் என்பதே கவியின் கருத்து என்று கொள்ளலாம்.

இன்னும் இரண்டொரு விஷயங்களை இது சம்பந்தமாகக் கூற விரும்புகிறேன். ஆனல் அனுமாருடைய பெருமையை அவற்றினுல் குறைக்கலாகாது. அவருடைய உயர்வையும் பெருமையையும் சாதாரண அளவுகோலைக் கொண்டு நாம் அளவிட முடியாது. பிறரால் தேகபலத்தைக் கொண்டு சாதிக்கமுடியாத காரியங்களை

அவர் சாதித்திருக்கிருர். அவருடைய வீரதீரச் செயல்களை நாம் நினைவுகூர வேண்டும். அவருடைய மறதி, தோல்விகள், பலவீனங்கள், பெரும் தீரச்செயல்கள் யாவையும்பற்றிக் கூறினேன் அல்லவா? அவரைப்பற்றிக் கூறவேண்டிய அனைத்திலும் உயர்ந்த ஒரு விஷயம் மீதி இருக்கிறது. பெரும் உணர்ச்சி வசமாகி அவர் சிறப்புடன் மீண்ட சம்பவங்கள் இருக்கின்றன. சுந்தரகாண்டத்தி லிருந்து சில சுலோகங்களை எடுத்துக்கூறி அனுமாரைப்பற்றிய வர்ணனையை முடித்துக்கொள்ளுகிறேன். அவரைப் போன்ற ஒரு பாத்திரத்தைக் கற்பனை செய்து உயர்ந்த ரீதியில் அவரது சித்திரத்தைத் தீட்டிய கவியைப்பற்றி நாம் எவ்வளவு பெருமை கொள்ள வேண்டும்! கவி மிகைப்படுத்திக் கூறியிருப்பதாகச் சிலர் நினைக்கலாம். அந்தப் பாத்திரத்தின் வடிவமும் அளவும் நமக்குப் பெரிதல்ல; அதைப் படைத்த கவியின் மனேபாவமே நமக்கும் முக்கியமானது.

## 19

### அநுமாரின் வீரச் செயல்கள்

அநுமாருடைய வீரச் செயல்களைப்பற்றி இன்று பேசலாம் என்று நினைக்கிறேன். அவை அநேகம் என்பதோடு மிகவும் அரிய வையுங்கூட. பிறக்கும்பொழுதே அவை வெளியாகிவிடுகின்றன. சீதையினிடம் அவளுக்கு நம்பிக்கையுண்டாக்குவதற்காகவே தாம் சாதாரணக் குரங்கு போல் தோன்றினாலும், உண்மையில் வாயு பகவானின் புத்திரன் என்று சொல்லிக்கொள்ளுகிறார். அவரது பிறப்பு மிகவும் அதிசயமானது. அவர் தந்தையும் கேஸரி என்று பெயர் கொண்ட ஒரு வானரர்தாம். ஒரு மலைமீதுள்ள சுமேரு என்று பெயர் கொண்ட சிறிய பிரதேசத்துக்கு அரசர். ஒரு சமயம் சம்பராசுரன் என்பவன் ஒரு புண்ணிய தீர்த்தத்துக்கு வந்த யாத்திரிகர்களைத் துன்புறுத்தினான். அவனைக் கொல்வதற்குக் கேஸரியை அனுப்பினார்கள். அவர் போயிருந்த சமயத்தில் அவர் மனைவி அநுமாரைக் கருத் தரித்தாள். சாபவசத்தினால் அநுமாரின் தாய் வானரமாக இருந்தாலும், அதற்கு முன்பு அவள் ரூபவதியான பெண்மணியாகவே இருந்தாள். தன் மானிட உருவத்தை எடுத்துக்கொண்டு அவள் அரண்மனைத் தோட்டத்தில் உலாவிக்கொண்டிருந்தாள். அப்போது அவளது ரூபலாவண்யத்தைக் கண்டு மோகித்து வாயுபகவான் அவள் ஆடையைக் கலைத்துத் தேகமெங்கும் ஸ்பர்சித்தார். கடுங்கோபமடைந்து அவள் நாற்புறமும் நோக்கியபொழுது அவர், "கோபிக்காதே! உனக்கு ஒரு தீங்கும் செய்யமாட்டேன். உன் கணவனான கேஸரி தேவர்களுக்குப் பெரிய சகாயம் செய்திருக்கிறான். அதற்குப் பரிசாக என்னிடமிருந்து உனக்கு ஒரு குழந்தை உண்டாகும். அவன் மூவுலகங்களிலும் புகழ் வாய்ந்து அதிசயிக்கத்தக்க செயல்களைச் செய்யப் போகிறான்" என்றார்.

அருகிலிருந்த குகையில் விரைவில் அநுமார் பிறந்தார். பிறந்ததுமே அந்தக் குழந்தைக்குத் தாங்கொணாத பசி உண்டாயிற்று. உண்பதற்கு ஒன்றுமில்லாமற்போகவே வானத்திலுள்ள சூரியன் சிறந்த பெருங்கனியாக அவருக்குக் காட்சியளித்தான். இதைப்பற்றி இரண்டு விதமான கதைகள், ஒன்று நீளமாயும்

மற்றொன்று சுருக்கமாயும் ராமாயணத்திலேயே வருகின்றன. கடலைத் தாண்டுவதற்கு அனுமாரைத் தூண்டுவதற்காக ஜாம்பவான் கிஷ்கிந்தா காண்டத்தில் அவருக்கு இதை எடுத்துக் கூறுகிறார். சின்னஞ்சிறு குழந்தையாக இருந்தபொழுதே செய்த இத்தகைய செயல் அனுமாருக்கு நினைவுபடுத்தப்படுகிறது. அவருக்கு ஏன் இதை எடுத்துக் கூற வேண்டியிருந்தது என்றால், அவர் மிக்க மனச்சோர்வுடன் தனியே உட்கார்ந்திருந்தார். அங்கதனுக்குத் தாம் சொன்ன புத்திமதி வீணாகி, தாம் அவனுக்கு அடங்கிவிடும்படியாயிற்றே என்று அவர் வருந்திக்கொண்டிருக்கலாம். 'கடலைத் தாண்டி இலங்கைக்குச் செல்லத் தைரியமாக முன்வரக் கூடியவர் யாரேனும் உண்டா?' என்று அறிய அங்கதன் வானரர்களை ஒன்றுகூட்டி ஆலோசிக்கிறான். ஒரு ஸர்க்கம் முழுவதும் இதைப்பற்றியே வர்ணித்திருக்கிறது.

தங்கள் பலத்தைப்பற்றிப் பெருமை கொண்டிருந்த வானரர் அனைவரும் பேரிரைச்சலுடன் கூடிய கடலைக் கண்டதும் பயந்துவிடுகிறார்கள். ஒரு வானரம் தான் பத்து யோஜனைதூரம் தாண்டுவேன் என்று கூற, மற்றொன்று தான் இருபது யோஜனை தாண்ட முடியும் என்று கூறுகிறது. மூன்றாவது முப்பது என்று இப்படியே சொல்லிக்கொண்டு போகும்பொழுது, ஜாம்பவானிடம் வந்ததும் அவர் தாம் எவ்வளவு யோஜனை தாண்ட முடியும் என்பதைக் கூறாமல், பழைய சம்பவம் ஒன்றை நினைவுபடுத்திக்கொண்டு கூறுகிறார், "ஒரு சமயம் நான் பலிஷ்டனாக இருந்து இந்தப் பூமண்டலத்தை இருபத்தொரு தடவை சுற்றி வந்திருக்கிறேன். இப்பொழுது தொண்ணூறு யோஜனைதூரம்தான் என்னால் செல்ல முடியும்" என்கிறார். தன்னால் நூறு யோஜனைதூரமும் செல்ல முடியும்; ஆனால் திரும்பி வரமுடியாது என்கிறான் அங்கதன். பலம் குறைந்தாலும் ஜாம்பவானுடைய யோசனைக்கும் புத்திக்கும் குறைவில்லை. "நீ திரும்பிவர முடியும் என்றாலும் உன்னை விட்டு நாங்கள் இருக்க முடியாது. உன்னைக் கவனித்துக்கொள்ள வேண்டிய பொறுப்பு எங்களுடையது. எங்களுக்கு நீ தலைவன், எங்களை ஸம்ரக்ஷிப்பவன் என்றாலும், உன்னைப் பாதுகாக்க வேண்டிய கடமையினின்றும் தவறி உன்னை அபாயத்திற்கு உள்ளாக்க முடியாது" என்று அங்கதனிடம் அவர் கூறுகிறார். பிறகு அவர் அனுமாரிடம் சென்று, "உம்மைப்பற்றியே நீர் அறிந்துகொள்ளவில்லையே. உம்முடைய சகாயம்தான் இப்பொழுது தேவை" என்கிறார்.

சுந்தரகாண்டம் முதல் ஸர்க்கம் முழுவதும் அனுமார் கடலைத் தாண்டிய விதத்தைத்தான் வர்ணிக்கிறது. ஆகாயமார்க்கமாக அவர் போகும்பொழுது இரண்டோர் இடத்தில அவர் போவது தடைப்பட்டுச் சிறிது சண்டை போடும்படியாகவும் ஆகிறது.

அவைபற்றியெல்லாம் நான் கூறப்போவதில்லை. கடலைத் தாண்டியது மட்டுமல்ல, இலங்கையில் அவர் புரிந்த சாகசச் செயல்களும் விவரிக்கப்பெறுகின்றன. வெகு நேரம் அலைந்து சீதாதேவியைக் கண்டுபிடித்து அவளுடன் பேசியபிறகு, 'உடனே எதற்காகத் திரும்பிப்போக வேண்டும்? இன்னும் செய்யவேண்டிய காரியங்கள் மீதி இருக்கின்றன. உத்தம ஊழியனுகிய நான் இனி என்ன செய்ய வேண்டும் என்பதைக் கவனிக்க வேண்டும்' என்று தமக்குள் சொல்லிக்கொள்கிறுர். ராவணனை நேரில் கண்டு சிறிது மிரட்டிப் பார்க்க வேண்டுமென்று தீர்மானித்துக் கொள்ளுகிறுர். ஆனல் ராவணனை எப்படிக் காண்பது? அதற்காக ஓர் உபாயம் செய்ய நினைத்தார். 'இந்த அசோகவனத்தை அடியோடு அழித்து விடலாம். இலங்கையையும் நாசம் செய்யப் புகுந்தால் என்னை எதிர்க்க யாராவது அனுப்பப்படுவார்கள்' என்று எண்ணியதும், மளமளவென்று தம் நாசவேலையைத் தொடங்கினுர். தம்மை எதிர்த்து வந்தவர்களோடு யுத்தம் புரிந்து அவர் செய்த அற்புதச் செயல்களை யாவரும் அறிவோம் அல்லவா? ராவணனுடைய பிள்ளை அக்ஷகுமாரன் என்ற பெரிய வீரனையே அவர் வேலைதீர்த்து விடுகிறுர். பிறகு இந்திரஜித் வந்து, பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகித்து அவரைக் கட்டியதும் தமக்குத் தெரியும்.

ராவணனெதிரில் அவரை அழைத்துச் செல்லுகிறுர்கள். அவர் கட்டுண்டிருப்பதாக அவர்கள் எண்ணியிருந்தபொழுது பிரம்மாஸ்திரத்தினின்றும் அவர் விடுதலையடைந்து ராவண னெதிரில் நிற்கிறுர். சுக்கிரீவன் அனுப்பிய தூதன் என்று தம்மை அறிமுகப்படுத்தியவுடனே, ராவணனை அவமதித்துப் பேசுகிறுர். கோபமடைந்த ராவணன் அவரைக் கொல்லும்படி உத்தரவிட்டதும், விபீஷணன் அதைத் தடுக்கிறுன். பிறகு அவர் வாலில் தீவைக்கும்படி ராவணன் கட்டளையிடுகிறுன். அந்தத் தீயைக் கொண்டே அனுமார் இலங்கையைக் கொளுத்திவிடுகிறுர். இதுதான் அவரது முதல் சாகச காரியம். ஒரு நீண்ட ஸர்க்கம் முழுவதும் அவருடைய செயல்களைக் கவி மிகத் திறமையுடன் வர்ணிக்கிறுர். ஆயினும் அவற்றுக்கு மேலும் அற்புதச் செயல்களை அவர் செய்திருக்கிறுர்.

ராவணனே சேனைக்குத் தலைமைதாங்கி முதல்முதலில் யுத்தம் புரிந்த சம்பவத்திற்குச் செல்வோம். தளபதியான பிரகஸ்தன் நீலனுல் வதம் செய்யப்பட்டதைக் கண்டதும், 'இனி நான் வாளா இருக்கலாகாது' என்று எண்ணிய ராவணன் சேனையை ஒன்று சேர்த்துக்கொண்டு தானே யுத்தகளத்தில் பிரவேசிக்கிறுன். அனுமார் அவனை எதிர்க்கிறுர். ஒருவருக்கொருவர் அறிமுகமானவர்கள்தாம் என்றுலும் பலம் எத்தன்மையது என்பதை அறிந்தவர்கள் அல்ல. ''வில்லும் அம்புகளும் கொண்டு யுத்தம்புரிய

வானரர்களுக்குத் தெரியாது'' என்கிறார் அனுமார். மலைகளையும் மரங்களையும் பெருங்கற்களையும் எதிரியின்மேல் எறிந்து சண்டை செய்வதுதான் அவர்கள் வழக்கம். ராக்ஷஸர்களோ இரண்டிலும் வல்லவர்கள். சிலர் வில்லேந்தி அம்புகளைப் பொழிகின்றனர். சிலர் துவந்துவ யுத்தம்புரிவதில் சமர்த்தர்கள். ராவணன் இரண்டிலும் தேர்ச்சி பெற்றவன். அனுமாரின் மார்பில் ராவணன் ஓங்கி ஓர் அறை அறைகிறான். அதனால் சிறிது தடுமாறிய அனுமார் விரைவில் சுதாரித்துக்கொண்டு ராவணனுக்குப் பதிலுக்கு ஓர் அறை கொடுக்கிறார். அதன் சக்தியைக் கண்டு மெச்சி ராவணன், ''எனக்குச் சரியான எதிரிதான் நீ'' என்கிறான். அதற்குப் பதில் அனுமார், ''உன் புகழ்ச்சி எனக்குத் தேவையில்லை. என் அறைக்குப் பிறகும் நீ உயிரோடு இருக்கிறாயே என்று வெட்கமடைகிறேன். இதோ மற்றோர் அடி கொடுத்து உன்னை யமலோகத்துக்கு அனுப்புகிறேன்'' என்கிறார். இதைக் கேட்டுக் கோபமடைந்து ராவணன் அவரை ஓங்கி ஒரு குத்து விடுகிறான். அனுமார் நினைவிழந்துவிடுகிறார். அவரை விட்டு ராவணன் நீலனோடு போர் புரிகிறான். நினைவுபெற்று அனுமார் எழுந்து, நீலனோடு ராவணன் யுத்தம் புரிந்துகொண்டிருப்பதைக் கண்டு, ''பிறருடன் சண்டையிட்டுக் கொண்டிருப்பவனை எதிர்க்கலாகாது. அதை முடித்துக் கொண்டு வரும்வரையிலும் காத்திருப்பேன்'' என்கிறார். ராவணனால் அடிபட்டு நீலன் கீழே விழுந்தான் என்றாலும் அவன் உயிர் துறக்கவில்லை. அவன் தந்தை அக்கினிபகவான் அவனைக் காப்பாற்றுகிறார்.

அதன் பிறகு ராவணன் லக்ஷ்மணனுக்கு எதிராக நின்று பாணப் பிரயோகம் செய்கிறான். சரமாரியாக வர்ஷித்தும் பயனில்லை என்று கண்டு ராவணன் சக்தியாயுதத்தைப் பலமாக லக்ஷ்மணன் மார்பில் செலுத்துகிறான். அதைத் தாங்க இயலாதவனாக லக்ஷ்மணன் உயிரிழந்தவன் போல் தரையில் சாய்கிறான். அவன் விழுந்ததைக் கண்டதும், உண்மையில் இறந்துவிட்டானா என்று அறிய, ராவணன் அவனருகில் சென்று அவனைத் தூக்க முயல்கிறான். தன் பலமெல்லாம் கொண்டு அவனைத் தூக்க முயன்றும் முடியவில்லை. லக்ஷ்மணன் அசையவில்லை. தன் விஷ்ணுவின் அம்சம் நினைவுக்கு வரவே லக்ஷ்மணன் அசைக்க முடியாத கனமுள்ளவனாகிறான்.

அவனைத் தூக்கியெடுக்க முடிந்திருந்தால் ராவணன் கடலிலே அவனை எறிந்திருப்பான். சிறிது குழப்பத்துடன் அவன் நின்றிருந்த பொழுது அனுமார் அதைக் கண்டு மிக்க ஆத்திரத்துடன் அவனை அணுகி, அவன் மார்பில் மிகவும் பலமாக ஒரு குத்து விடுகிறார். ராவணன் நிற்க முடியாமல் மண்டியிட்டவண்ணம் கீழே விழ, அவனது பத்து வாய்களும் இரத்தம் கக்குகின்றன. அந்தச் சமயம்

பார்த்து அனுமார் லக்ஷ்மணனைத் தூக்கி எடுக்கிறார். தன்னைச் சேர்ந்தவன் என்று அறிந்து லக்ஷ்மணனும் இப்பொழுது இலேசாகி விடுகிறான். அனுமார் ராமரிடம் அவனைக் கொண்டுபோகிறார். அதன் பின்புதான் ராமர் எல்லையற்ற கோபத்தோடு ராவணனுடன் யுத்தம் புரிகிறார். இருவரும் வர்ஷித்த பாணங்களைக் கண்டு தேவர்களும் அதிசயிக்கிறார்கள். அனுமார் ராமரிடம், "கருடன் மீது வீற்றிருந்து மகாவிஷ்ணு அசுரர்களோடு யுத்தம் புரிந்தது போல், நான் தங்களை என் தோள்மீது தாங்கிக்கொள்கிறேன்; தாங்கள் போர்புரியுங்கள்" என்கிறார். ராமர் அதற்கு இசைந்து அவர் தோள்மீது உட்கார்ந்து யுத்தம்புரிகிறார். ராமரையும்விட அனுமார்மீதுதான் ராவணனுக்கு அளவுகடந்த கோபம் மூள்கிறது. அவர்மீது அம்புகளைக் கணக்கின்றிப் பொழிகிறான். உடம்பு முழுவதும் தைத்த அம்புகளுடன் அனுமார் பின்னும் அதிகப் பிரகாசத்தோடு விளங்குகிறார். ராவணன் அதிசயிக்கத்தக்கவாறு போர்புரிந்தும் ராமரை வெல்ல முடியவில்லை. ராமர் எய்த அம்புகளினால் அவன் கிரீடம் தாக்கப்பட்டுக் கீழே விழுகிறது. என்ன முயன்றும் முடியாமல் ராவணன் தோல்வியுற்று அவமானத்தால் குன்றிப்போகிறான். கிரீடத்தையிழந்து நிராயுதபாணியாக அவன் நிற்பதைக் கண்டு ராமர், 'இந்தச் சமயத்தைப் பயன்படுத்திக் கொள்வது சரியல்ல. அது வீரத்துக்கு இழுக்காகும்' என்று எண்ணி, ராவணனிடம், "திரும்பிப்போய் மீண்டும் போருக்கு வேண்டிய ஆயுதங்களுடன் வருவாய்" என்று கூறுகிறார். ராவணன் சந்தோஷத்துடன் யுத்தகளத்தை விட்டுச் செல்லுகிறான். இந்த யுத்தத்தினால் பிறகு ராமருக்கு ஏற்பட்ட எல்லாப் பெருமைகளும் அனுமாரையே சார்ந்தவையாகும்.

அடுத்து இந்திரஜித் வானரசேனைமீது பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகித்த கட்டத்துக்கு வருவோம். ராம லக்ஷ்மணர்கள் உட்பட அனைவரும் அஸ்திரத்தால் அடிபட்டுக் கீழே விழுகின்றனர். எல்லோரும் உயிரிழந்ததாக நினைத்து இந்திரஜித் பெருமகிழ்ச்சியுடன் அந்த வெற்றியைத் தந்தைக்கு அறிவிக்கச் செல்கிறான். இரவு வந்து எங்கும் ஒரே இருட்டாக இருக்கிறது. வானரர்கள் சிலர் உயிரிழந்து கிடக்கின்றனர். சிலர் சாவுடன் போராடிக் கொண்டிருக்கின்றனர். உயிருக்குச் சேதமில்லாமல் நன்றாக இருப்பவர் அனுமார், விபீஷணன் ஆகிய இருவரே! அனுமார் வெகு சீக்கிரம் நினைவுபெற்று எழுந்துவிடுகிறார். விபீஷணனுக்கு அடிபடவே இல்லை. அவர்கள் இருவரும் சந்தித்தபொழுது அனுமார், "என் கையில் தீப்பந்தம் இருக்கிறது. யுத்தகளத்துக்குச் சென்று நம்மால் இயன்ற உதவியைச் செய்வோம்" என்கிறார். அப்படியே இருவரும் பந்தத்தை எடுத்துக்கொண்டு சுற்றி வரும்போது, வேதனையுடன் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் ஜாம்பவா

னிடம் வருகின்றனர். மிகவும் ஈனசுரத்தில் ஜாம்பவான், "யாரது, விபீஷணரா? என் கண்ணுக்கு யார் என்று அறியச் சக்தியில்லை. குரலிலிருந்துதான் தெரிந்துகொள்ளுகிறேன். இங்கே எங்கேயாகி லும் அனுமாரைக் கண்டீரா?" என்று கேட்கிறார். அருகில் அனுமார் நிற்கிறார். விபீஷணன் அதற்குப் பதில் கூறாமல், "எல்லா ரும் படுகாயமடைந்து கிடக்கும்பொழுது ராம லக்ஷ்மணர்களைப் பற்றிக்கூடக் கேட்காமல் அனுமாரைப் பற்றி மட்டும் விசாரிக்கக் காரணமென்ன? சுக்கிரீவன், அங்கதன் இவர்களைப்பற்றி விசாரிக்க வில்லையே!" என்று கேட்கிறான். "தகுந்த காரணத்தோடுதான் கேட்கிறேன். அனுமார் உயிருடன் இருந்தால் வானரசேனை முழுவதும் உயிர்பெற்று எழுந்துவிடும். அவர் உயிருடனில்லை என்றால் எல்லோரும் இறந்ததற்குச் சமானமே! அவர் இல்லை என்றால் நம்மால் ஒன்றும் முடியாது. அவரிடமுள்ள விசேஷம் அது. பிதா வாயுபகவானுடைய பலம் முழுவதும் அவரிடம் இருக்கிறது" என்கிறார். ஜாம்பவானிடமிருந்து தம்மைப்பற்றிய இந்தப் புகழ்ச்சியைக் கேட்டு அனுமார் நன்றிப்பெருக்குடன் அவரை நமஸ்கரிக்கிறார்.

உடனே ஜாம்பவான், "நான் பிழைத்துவிட்டேன். உன்னை நம்பித்தான் நாங்கள் யாவரும் இருக்கிறோம். உன் முழுச் சக்தி யையும் முழுச் சாமர்த்தியத்தையும் பயன்படுத்தும் காலம் வந்துள் ளது. உதவிக்கு உன்னைத் தவிர வேறு யாரும் தெரியவில்லை. எல்லோருக்கும் உயிர் கொடு. ராம லக்ஷ்மணர்களை, நினைவிழக்கச் செய்திருக்கும் இந்த அஸ்திரத்தினின்றும் மீளும்படிச் செய்" என்கிறார். சக்தி வாய்ந்த நான்கு மூலிகைகளைச் சொல்லி அவற் றைக் கொண்டுவரும்படிக் கூறுகிறார். இமயமலையில் கைலாசத் திற்கும் ரிஷபமலைக்கும் இடையே அவை இருக்கின்றன. ஒன்று, இறந்தவரை உயிர்மீட்டும். ஒன்று, அம்புகளினாலேற்பட்ட காயங் களை ஆற்றும். ஒன்று, மரணம் கிட்டியதனால் உருமாறிய தேகத்தை மீண்டும் பழைய நிலைக்குக் கொண்டுவரும். மற்றொன்று, வெட்டுப் பட்ட அங்கங்களை மீண்டும் ஒன்றுசேர்க்கும் சக்தி உள்ளது. முன்பு நூறு யோஜனை தூரம் கடலைத்தாண்டியதுகூடப் பெரிதில்லை. உடனே அனுமார் தம் முழுப் பலத்தையும் உணர்ந்து, வெகு வேகமாக ஆகாயமார்க்கமாய்க் கிளம்புகிறார். இந்த அற்புதத்தை எவ்விதம் தேவர்களும் கண்டு அதிசயித்தார்கள் என்று கவி வர்ணிக்கிறார்.

ஜாம்பவான் குறித்த இடத்திற்குச் சென்று அந்த மூலிகைகளை அனுமார் தேடிப்பார்க்க, அவை தம்மை யாரோ கொண்டுபோக வந்திருப்பதை அறிந்து, உடனே மறைந்துகொள்கின்றன. அவற்றைக் கண்டுபிடிக்க இயலாமற்போகவே, அவை இருக்கும் மலையையே பெயர்த்து எடுத்துக்கொண்டு அனுமார் திரும்புகிறார்.

யுத்தகளத்தில் அவற்றைக் கொண்டுவந்து வைக்கிறார். வாயு பகவானால் கிளப்பப்பெற்ற அவற்றின் மணத்தை நுகர்ந்து, பிரக்ஞையிழந்து கிடந்த வானரர் அனைவரும் எழுந்து உட்காருகின்றனர். ராம லக்ஷ்மணர்களும் சுயநினைவுபெற்று எழுந்திருக்கவே, மீண்டும் வானரசேனை முழுவதும் உற்சாகத்துடன் கிளம்புகிறது. அனைவரும் பெரிதாகக் கோஷமிட்டுக்கொண்டு இலங்கையில் புகுந்து யாவற்றையும் அழிக்கத் தொடங்குகின்றனர்.

ஒரு சிறிய விஷயம் இங்கே கவனிக்கத்தக்கது: ராக்ஷஸர்களும் வானரர்களும் ஒருவரோடொருவர் யுத்தம்புரிந்து அடிபட்டுக் கிடக்கும்பொழுது அந்த ஒஷதிகள் வித்தியாசமில்லாமல் இருவரையும்தான் பிழைத்தெழச் செய்திருக்கும். ஆனால் லக்ஷக்கணக்கான ராக்ஷஸர்கள் உயிரிழந்தும் அவர்களின் உடல்கள் அங்கே கிடக்கவில்லை. 'அழிந்து போகக்கூடியவர்களை இறைவனே அறிவிழக்கச் செய்வான்' என்கிறார் கவி. உயிரிழந்த அரக்கர்களின் உடல்களை எல்லாம் உடனுக்குடன் கடலில் எறிந்துவிடும்படி ராவணன் உத்தரவிட்டிருந்தான். அவை கிடந்தால் எதிரிகளுக்குக் கணக்குத் தெரிந்துவிடும் என்ற பயம் அவனுக்கு. ஆகவே அந்தச் சிறந்த ஒஷதிகளின் மணத்தை நுகர்ந்து உயிர்பிழைக்க வழியில்லாமற் போகிறது அவர்களுக்கு. அனுமார் ஒஷதிபர்வதத்தை மீண்டும் அதன் இருப்பிடத்துக்கே கொண்டுபோய் வைத்துவிடுகிறார். இரண்டாம் முறையும் ஒஷதிகளைக் கொண்டு வந்தபொழுது, அனுமார் திரும்பக் கொண்டுபோய் வைத்ததை வேண்டுமென்றே சொல்லக் கவி மறந்துவிடுகிறார். சுலோகத்தில் நான்கில் ஓர் அடியில், பர்வதத்தைக் கொண்டுபோய் வைத்துவிட்டுத் திரும்பி ராமரிடம் வந்ததைக் கூறிவிடுகிறார். அனுமாருடைய வேகத்தைப் பற்றி இதிலிருந்து அறியலாம் என்ற நோக்கம் கவிக்கு இருக்கலாம்.

அனுமாரின் மற்றொருவிதமான தீரச் செயலைப்பற்றிச் சொல்கிறேன். போர்க்களத்தில் மிகுந்த பலத்தைக் காண்பிக்கக்கூடிய ஆச்சரியமான காரியங்களை அவர் செய்திருக்கிறார். ராவணனுடைய குமாரன் அக்ஷனைக் கொன்றது ஒன்று. இந்த யுத்தத்தில் அவர் வதம் செய்த கணக்கற்ற அரக்கர்களில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டியவர்கள் மூன்று பேர். அவர்கள் தேவாந்தகன், திரிசிரஸ், நிகும்பன் ஆவர். அரசன் ஒவ்வொருவனுக்கும் எதனாலோ நான்கு மந்திரிகள் என்றே கவி கூறுகிறார். வாலி, சுக்கிரீவன், ராவணன் ஆகிய மூவருக்கும் மந்திரிகள் நால்வர். அவர்கள் மிகவும் முக்கியமானவர்கள். வாலியின் மந்திரிகள் யாவர் என்று கூறப்படவில்லை. ராவணனுடைய பிரதம மந்திரிகள் துர்த்தரன், பிரகஸ்தன், மகாபார்சுவன், நிகும்பன் ஆகியோர். நிகும்பன் என்ற மந்திரியின் ஆலோசனைத் திறமையில் ராவணனுக்கு மிக்க நம்பிக்கை உண்டு. பிரகஸ்தனை அழைத்து, ''சேனாதிபதிகள்

அநேகர் இந்த யுத்தத்தில் மடிந்துவிட்டனர். இந்த வானரர்கள் மிகவும் பயங்கரமானவர்களாக இருக்கிறார்கள். அவர்களால் நம் சேனையில் முக்கியமானவர் அநேகர் கொல்லப்பட்டனர். நீ பெரிய சேனைத்தலைவன். உனக்கு நிச்சயம் வெற்றி கிட்டும் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. உன்னைத் தவிர நான் நம்பக்கூடியவர்கள் நான்கு பேர்தாம். அவர்கள் நான், கும்பகர்ணன், இந்திரஜித், நிகும்பன் ஆகியவர்களே! இலங்கையை நீதான் இப்பொழுது ரக்ஷிக்க வேண்டும்'' என்று கூறி, யுத்தத்திற்கு அனுப்புகிறான். கும்பகர்ணனுடைய பிள்ளைகளான கும்பனும் நிகும்பனும் போர்க்களத்துக்கு வருகிறார்கள். கும்பனைச் சுக்கிரீவன் கொன்றுவிடுகிறான். அதைக் கண்டு மிகுந்த ஆத்திரமடைந்து நிகும்பன் போருக்கு வந்து அனுமாரை எதிர்க்கிறான். அனுமார் வில்யுத்தம் செய்யாதவராகையால் நிகும்பன் அவருடன் துவந்துவ யுத்தம் செய்வதாகக் கூறுகிறான். கவி யுத்தத்தை வர்ணிக்கும் அற்புதத்தைச் சிறிது விவரிப்பதற்காக, அனுமார் நிகும்பன் இவ்விருவருடைய யுத்தத்தை அப்படியே மொழிபெயர்த்துக் கூற விரும்புகிறேன். நிகும்ப வதத்தைப்பற்றிய வர்ணனை இதோ:—

அண்ணன் கும்பன் யுத்தகளத்தில் மடிந்து கிடப்பதைக் கண்டதும் நிகும்பன் சுக்கிரீவனை எரித்துவிடுபவன் போல் நோக்குகிறான். பிறகு மந்தரமலையின் சிகரம் போன்ற தன் பெரிய கதையைக் கையிலெடுக்கிறான். கதையைச் சுற்றி ஒரு புஷ்பமாலை தொங்குகிறது. ஓர் அரக்கனின் கையின் ஐந்து விரல்கள் போல் அதன் இரும்புநுனி கூர்மையாக விளங்குகிறது. அதைச் சுற்றித் தங்கத்தினாலான பட்டை. அதன்மேல் வைரமும் மாணிக்கமும் வைத்திழைத்திருக்கிறது. யமனுடைய சூலம் போல் அதைக் காண, வானரர்களின் உள்ளம் பயத்தினால் நடுங்குகிறது; ராக்ஷஸர்களோ முன்னிலும் தைரியமடைந்து நிற்கிறார்கள். இந்திரனுடைய வஜ்ராயுதம் போன்ற கதையைச் சுழற்றிக்கொண்டு நிகும்பன் பயங்கரமாக வாய்விட்டுக் கர்ஜிக்கிறான். அவன் மார்பில் சிறந்த தங்கப் பதக்கம் மின்னுகிறது. தோள்களில் தோள்வளைகள் பிரகாசிக்க, காதுகளில் ரத்தின குண்டலங்கள் மின்னுகின்றன. கழுத்தில் ரத்தினஹாரம் பிரகாசிக்கிறது. வானவில்லோடும் மின்னலோடும் பிரகாசிக்கும் நீருண்ட மேகம் போல், நிகும்பன் மேனியில் ரத்தினாபரணங்கள் மின்ன, கையில் கதையுடன் நிற்கிறான். அவனது நீண்ட பெரிய கை, கதையைச் சுழற்றும் பொழுது, அதனின்றும் எழும் சப்தம் ஸப்த மருத்துக்களின் கர்ஜனை போல விளங்குகிறது. புகையின்றி அக்கினிபகவானே வந்தாற் போல அது ஜ்வலிக்கிறது. கதை சுழலும்பொழுது ஆகாயமே சந்திரன், கோள்கள், நக்ஷத்திரங்கள் ஆகியவற்றுடன் சுற்றிச் சுழல்வது போல் காணுகிறது. நிகும்பனுடைய ச்கோபத்துக்கு

சரியாக அவன் கதையிலுள்ள ரத்தினங்களும் பயங்கரமாக ஒளி விட்டுப் பிரகாசிக்கின்றன. மூவுலகத்தையும் அழிக்கும் பிரளய காலாக்கினி போல அவன் வானரசேனையை நடுங்கச்செய்கிறான். வானரர்களும் அரக்கர்களுங்கூடத் தங்களைப் பிடித்துள்ள கிலியில் அசைவற்றவராகின்றனர்.

அவர்கள் அனைவரின் நடுவில் அனுமார் ஒருவரே திறந்த மார்புடன் நிகும்பனை எதிர்த்து நிற்கக்கூடிய சக்தி பெற்றிருக்கிறார். நிகும்பனுடைய நீண்ட பெரிய கைகளினால் எறியப்பட்ட கதை அனுமாரின் மார்பைத் தாக்குகிறது. அந்த நிமிஷமே, என்ன ஆச்சரியம்! அனுமாரின் கற்பாறை போன்ற மார்பில் பட்ட கதை ஆயிரம் துண்டுகளாகி நக்ஷத்திரங்கள் தெறித்து விழுந்தாற்போல் ஜ்வலித்துக்கொண்டு சிதறுகிறது. அனுமார் அசையாமல் நிற்க, சுற்றிலும் பூமி அதிர்ந்து சேதம் ஏற்படுகிறது. மாருதி தம் பலமெல்லாம் சேர்த்து ஓங்கி, நிகும்பன் மார்பில் முஷ்டியால் ஒரு பெரும் குத்து விடுகிறார். இடியும் மின்னலும் கூடிய நீருண்டமேகம் போன்ற நிகும்பனுடைய பிரம்மாண்டமான உடல் அதைத் தாங்காமல் தள்ளாடுகிறது; அவன் வாயினின்றும் மூக்கினின்றும் இரத்தம் பெருகி ஓடுகிறது. ஆனால் உடனே தன்னைச் சமாளித்துக் கொண்டு, தன் வலிய கைகளினால் அனுமாரின் பெரிய உடலை அப்படியே அவன் தூக்குகிறான். அரக்கர் அனைவரும் களிப்புடன் எக்காளமிடுகின்றனர். ஆனால் அந்தச் சந்தோஷம் ஒரு கணமே நிற்கிறது. அதற்குள் தம் கைமுஷ்டிகளால் பலமாய்க் குத்தித் தம்மை விடுவித்துக்கொண்டு அனுமார் எதிரியைக் கீழே தள்ளி அவன்மீது விழுந்து மேலும் மேலும் ஓங்கிக் குத்தியவண்ணம் இருக்கிறார். பிறகு தம் இரு கைகளாலும் அவன் கழுத்தைப் பிடித்துத் திருகிப் பெருங் கர்ஜனையுடன் அருகிலுள்ள பாறையின் மீது மோதுகிறார். அவன் மடிந்துவிட்டான் என்று நிச்சயமானவுடன் வானரர் யாவரும் சந்தோஷத்தினால் ஆரவாரிக்கின்றனர். ஆகாயத்தில் மேகங்கள் முழங்கிப் பூமி களிப்படைகிறது. வானத்தினின்றும் மலர்மாரி பொழிகிறது. அரக்கர்களோ திகிலும் கலவரமும் அடைந்து நிற்கின்றனர்.

அனுமாருடைய கடைசிச் சாகசச் செயல், அவர் இரண்டாம் முறையாக இமயமலைக்குச் சென்று வந்தது. அதை இப்பொழுது கூறுகிறேன். அனுமாருடைய மறதியைப் பற்றி ஏற்கனவே சொல்லியிருக்கிறேன் அல்லவா? ராவணனுடைய சக்தியாயுதத்தினால் அடிபட்டு லக்ஷ்மணன் நினைவிழந்து கிடந்தபொழுது ஒஷதி பர்வதத்திலின்றும் ஒஷதிகளைக் கொண்டுவர வேண்டியதாகிறது. பிரபல வைத்திய நிபுணனான சுஷேணன் அனுமாரை மீண்டும் போய்க் கொண்டுவரும்படிக் கேட்டுக்கொள்ளுகிறான். அந்தச் சமயத்தில் அனுமாருக்கு நேர்ந்த பெருத்த இடையூறுகளின்

வரலாறுகள் இத்தாலி தேசத்துப் பதிப்பில் காண்கின்றன. அவர் ஓஷதிகளைக் கொண்டுவரப்போவதை அறிந்து, ராவணன் காலநேமி என்ற அசுரனை அவரைப் போகவிடாமல் தடுக்கும்படி அனுப்புகிறான். அனுமாருக்கு இதனால் மிகுந்த தாமதம் ஏற்படு கிறது. மாரீசனைப் போலவே காலநேமியும் ஒரு ரிஷிவேஷம் பூண்டு அனுமாரை வரவேற்று உபசரிக்கிறான். ஏமாந்துபோய் அனுமார் அதை ஏற்றுக்கொண்டுவிடுகிறார். தம் காரியத்துக்குத் தடங்கல் விளைவிக்கும் தந்திரமே அது என்று திடீரென்று அவருக்கு விளங்கவே, காலநேமியைக் கொன்றுவிட்டு ஓஷதிகளைக் கொண்டு வரச் செல்லுகிறார்.

அவை பிரகாசத்தோடு அவர் கண்ணில் தாமாகவே தென் படும் என்று சுஷேணன் கூறியிருக்கிறான். ஆனால் அவசரத்தில் அனுமார் சுஷேணன் கூறிய அடையாளத்தை மறந்துவிடுகிறார் என்று, நாம் படிக்கும் இந்த ராமாயணப் பதிப்பில் காண்கிறது. ஆகவே, ஓஷதிபர்வதத்தையே அனுமார் பெயர்த்து எடுத்துக் கொண்டு போகிறார். சுஷேணன் அவற்றின் ரசத்தைப் பிழிந்து லக்ஷ்மணன் நாசியில் நுகரும்படி செய்கிறான். லக்ஷ்மணன் தன் நினைவுபெற்று எழுந்திருக்கிறான்.

இன்னும் இரண்டொரு விஷயங்களை அனுமாரைப்பற்றிக் குறிப்பிடலாம். அவற்றை இன்னொரு சமயம் பார்த்துக்கொள் ளலாம். அவர் குணத்திலுள்ள வேறு சில விஷயங்களைப்பற்றி அடுத்த உபன்யாசத்தில் கூறலாமென்று இருக்கிறேன். இலங்கை யில் சீதாதேவியைத் தேடிக் கண்டுபிடித்து, அவளுக்குத் தம்மை அறிமுகப்படுத்தி நம்பிக்கையை உண்டாக்கி, ராம லக்ஷ்மணர்களைப் பற்றியும் அவர்கள் அவளுக்காகச் செய்திருக்கும் முயற்சிபற்றியும் கூறும் கட்டத்தை அடைவோம். சுந்தரகாண்டத்தில், சீதையின் சரித்திரம் மிகவும் மேன்மையாக விளங்குகிறது. இரண்டு உபன்யாசங்கள் அவளைப்பற்றியே சொல்லுவதாக இருக்கிறேன். சுந்தரகாண்டத்தில் அனுமாரின் செயல்களையே முழுவதும் கூற முடியாது. சீதையும் அதில் முக்கியமாக விளங்குகிறாள். பெயருக்கு ஏற்றாற்போல் சுந்தரகாண்டம் முழுவதும் அழகாக அமைந்திருக் கிறது. சீதை அனுமார் ஆகிய இருவரின் அரிய உணர்ச்சிகளிலும் அவர்களின் உரையாடல்களிலுமே அந்தக் காண்டத்தின் அழகு வெளியாகிறது.

## 20

### இறைவனே போற்றிய பக்தன்

மிகவும் சிரமமான காரியங்களில் ஈடுபட்டவர்கள் அநேகரைப் போலவே அனுமாரும் ஒரு சமயம் நம்பிக்கை, மற்ருெரு சமயம் நிராசை ஆகிய இரண்டு உணர்ச்சிகளுக்கிடையே அகப்பட்டுத் தத்தளிக்கிருர். ஒரு சமயம், 'நாம் எடுத்த காரியத்தில் வெற்றி பெற்றுவிடுவோம்' என்று தோன்றும். மற்ருெரு சமயம், 'நமக்கு அதைச் சாதிக்கச் சக்தி உண்டோ?' என்ற ஐயம் ஏற்பட்டுவிடும். இருவகை மனநிலைமையையும் மாறி மாறி நமக்குக் கவி எடுத்துக் காட்டுகிருர். இதுவரையில் அனுமார் புரிந்ததாகக் கூறிய சாகச காரியங்களில் எதுவும் பெரிதல்ல. சிறு குழந்தையாக அவர் செய்த காரியத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கும்பொழுது, கடலைத் தாண்டியது ஓர் அதிசயமான காரியமல்ல. பிறகு இமயமலைக்குச் சென்று அதன் சிகரத்தையே பெயர்த்துக்கொண்டுவந்து மீண்டும் முன்னிருந்த இடத்திலேயே வைத்து வந்ததுங்கூட மகத்தான செயல் என்று கூற முடியாது. ஆனல், கடலைத் தாண்டிய சம்பவம் தான் ராமாயணத்தில் பெரிதும் விசேஷமாகக் கூறப்பட்டிருக்கிறது. ஏனெனில், சீதாதேவியைக் கண்டு பேசியதற்கும் அதன் பின் விளைந்த வீரச் செயல்களுக்கும் அதுவே காரணம் அல்லவா? கருடனையும் வாயுபகவானையும் தவிர மற்ற எவரும் கடலைத் தாண்டுவது சாத்தியமல்ல என்பதன்ருே எல்லாருடைய நம்பிக்கை! கருடன், வாயு, அனுமார் ஆகிய மூவர் மட்டுமே கடலைத் தாண்ட வல்லவர்கள் என்று ராமாயணத்தில் ஐந்து இடங்களில் ராமர், சீதை, அனுமார் ஆகிய மூவராலும் கூறப்பட்டிருக்கிறது. ஆயினும், வால்மீகியே 'வேறு சிலராலும் அது சாத்தியம்' என்று கூறுகிருர். சர்ச்சைக்கு இடமுண்டாகும்படி சில முக்கிய விஷயங்களை இம்மாதிரி ஒவ்வொரு சமயம் ஒவ்வொரு விதமாகக் கூறுவது வால்மீகியின் இயல்பேயாகும்.

சுந்தரகாண்டத்தின், மூன்ருவது ஸர்க்கத்தில், குமுதன், அங்கதன், சுஷேணன், மைந்தன், துவிவிதன், சுக்கிரீவன், குசபர்வன், கேதுமாலன், அனுமார் இவர்களின் பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன. இரண்டாவது ஸர்க்கத்தில், அங்கதன், நீலன்,

சுக்ரீவன், அனுமார் ஆகியோரின் பெயர்கள் காண்கின்றன. யுத்த காண்டத்தில், மூன்றுவது ஸர்க்கத்தில் அங்கதன், துவிவிதன், மைந்தன், ஜாம்பவான், பனஸன், நளன், நீலன் ஆகியோர் குறிப்பிடப்பெறுகிறார்கள். இவ்விதம் மாற்றிக் கூறுவது வால்மீகியின் சுபாவமென்று வியாக்கியானகாரர்கள் கூறுகிறார்கள்.

சுந்தரகாண்டம், 30ஆம் ஸர்க்கத்தில், சிம்சுபாவிருக்ஷத்தினடியில் சீதாதேவியைக் கண்டதும் அனுமார் எவ்விதம் தம்மை அறிமுகப்படுத்திக்கொள்வது என்று யோசித்தபொழுது, 'மாறு வேஷத்திலிருக்கும் ராவணன் என்றே நினைத்துச் சீதை பயந்து ஒருவேளை கத்தினால், காவலிருக்கும் அரக்கர்களுக்குத் தெரிந்து உடனே சண்டைக்கு வருவார்கள்; நான் அவர்களுடன் யுத்தம் புரிய நேரிடும்' என்றெல்லாம் கவலை தோன்றுகிறது. அவர்களுடன் போர்புரிந்தபிறகு திரும்பிப் போவதற்குத் தமக்கு உடம்பில் பலம் இருக்குமோ அல்லது ஏதாவது அங்கஹீனம் ஏற்பட்டுத் திரும்பிச் செல்ல முடியாமலே போய்விடுமோ என்ற ஐயம் உண்டாகிறது. மேலே செய்யவேண்டிய கடமைகளுக்கு இடையூறாக இத்தகைய சண்டைகளை இழுத்துவிட்டுக்கொள்வது மதியீனம் என்று அவருக்குத் தோன்றுகிறது. 'சண்டைக்கு வந்தால் ராக்ஷசர்களை நன்றாக அடித்து நொறுக்கிவிடலாம். ஆனால், திரும்பிப்போக இயலுமா? நானே இதில் உயிரிழந்தாலும் அல்லது சிறைபிடிக்கப்பட்டாலும் ராமர் காரியம் என்ன ஆவது? வானரர்களில் வேறு யாராவது இதை ஏற்றுக்கொண்டு செய்து முடிப்பார்களா?' என்ற கேள்விகள் எழுகின்றன. அவற்றுக்குப் பதில் இல்லை என்றுதான் தோன்றுகிறது. 'ராமருக்கு உதவிசெய்யக் கூடியவர் வேறு யாரும் இல்லை என்றே நினைக்கிறேன். நான் போய்விட்டால் இந்தக் கடலைத் தாண்டக்கூடியவர் என்று யாரை நம்பலாம்? ஆயிரமாயிரம் அரக்கர்களை நான் கொன்று குவித்துவிடுவேன். ஆனால் இதில் என் பலம் அழிந்துவிட்டால், மீண்டும் கடலைத் தாண்டிச் செல்வது என்பது சிரம சாத்தியமாகிவிடும். ஆரம்பத்தில் எவ்வளவு தைரியம் இருந்தாலும் சண்டையில் வெற்றி தோல்வி நிச்சயமில்லை. ஏதேனும் தவறிழைத்துக் காரியத்தைக் கெடுத்துவிடலாகாது.' இவ்விதம் யோசனைக்குப் பிறகு, ராமருடைய குணங்களை எடுத்துரைத்தால் அவள் பயம் தெளிந்து நம்பிக்கை உண்டாகும் என்று முடிவுசெய்து, அவர் தம்மை வெளியிட்டுக் கொள்ளுகிறார்.

பிறகு அவர் சீதாதேவியுடன் பேசும்பொழுது, "சம்பாதியுடன் பேசிய பிறகு நாங்கள் கடற்கரையை அடைந்தோம். அனைவருக்கும் மனம் தளர்ந்துவிட்டது. நூறு யோஜனையுள்ள கடலைக் கண்டபொழுது எல்லாரும் ஒய்ந்து உட்கார்ந்துவிட்டனர். அவர்களின் மனச் சோர்வை அகற்றி நான் இந்தக் காரியத்தைச்

செய்து முடிப்பதாக ஏற்றுக்கொண்டேன். அப்படியே சாதித்தும் விட்டேன். ஒருவருக்கும் கடலைத் தாண்டுவது சுலபம் என்று தோன்றவில்லை" என்கிறார். இந்த இடத்தில் கொஞ்சம் புரியாதிருக்கலாம். அனுமார் விடைபெற்றுச் செல்லும்பொழுது, "வானரசேனை எண்ணிக்கையில் அதிகமாக இருக்கலாம். ஆனால் கடலைத் தாண்ட வேண்டுமே! அது முடியுமா? எனக்கு விடிவு இல்லை என்றுதான் தோன்றுகிறது" என்கிறாள் சீதை. "கடலைத் தாண்டி வருவதற்கு என்ன வழி? ராமர், லக்ஷ்மணர் இருவரும் மனிதர்கள். அவர்களால் முடியாது. கருடன், வாயு, நீ ஆகிய மூவர்தாம் அதில் வல்லமையுள்ளவர்கள். நான்காமவர் ஒருவரும் இல்லை. இந்த மாத முடிவில் ராவணன் மீண்டும் இங்கு வருவான். ஒன்று, நான் அவனுக்கு மனைவியாக வேண்டும். அது இல்லை என்றால், உயிர்துறக்க வேண்டும்" என்று மேலும் கூறி வருந்துகிறாள்.

அவளை இம்மாதிரி நிலையில் விட்டுச் செல்லலாகாது; எப்படியாவது தைரியம் கொள்ளச் செய்ய வேண்டும் என்று கருதிய அனுமார் பெரிதாக ஒரு பொய்யைச் சொல்லுகிறார். "தேவி இந்த வானரர்களைப்பற்றி உங்களுக்குத் தெரியாது. அவர்கள் எவ்வளவு பராக்கிரமசாலிகள்! கடல் சூழ்ந்த அவனியை அவர்கள் எவ்வளவோ தடவை சுற்றி வந்திருக்கிறார்கள். கோடிக்கணக்கான வானரர்களில் எனக்குச் சமமான பலமுள்ளவர்கள் உண்டு. என்னை விட மேம்பட்டவர்களும் இருக்கிறார்கள். ஆனால் என்னைவிடத் தாழ்ந்தவர் யாருமில்லை. நானே கடலைத் தாண்டி இங்கு வந்திருக்கும்போது, அவர்கள் வெகு சுலபமாக வந்துவிடுவார்கள். (இதுவும் உண்மையல்ல என்றுதான் கூற வேண்டும்.) தம்மிடமுள்ள சிறந்த மனிதர்களை அரசர்கள் தூதர்களாக அனுப்புவதில்லை; சாதாரண மனிதர்களைத்தான் அனுப்புவார்கள். அந்த வழக்கத்தின்படி சாதாரண வானரனான என்னை எங்கள் அரசன் சுக்கிரீவன் தேர்ந்தெடுத்து அனுப்பியிருக்கிறான். தேவி! வருந்தாதீர்கள். ஒரே தாண்டலில் எல்லா வானரர்களும் இங்கே வந்து குதித்துவிடுவார்கள்" என்கிறார். இப்படி உண்மைக்குப் புறம்பாக மிகைப்படுத்திப் பேசுவதற்கு அனுமார் கொஞ்சமும் தயங்கவில்லை. ஆயினும் அவர் அப்படித்தான் பேசியாக வேண்டும். இல்லாவிட்டால் சீதை ஏக்கத்தில் உயிரை மாய்த்துக்கொண்டு விடுவாள். ஆனால், எல்லாரையும் போல் சீதைக்கும், அனுமார் கூறுவதெல்லாம் தனக்குத் தைரியமும் நம்பிக்கையும் உண்டு பண்ணுவதற்கே தவிர வேறல்ல என்று தெரியும். அதனால்தான் இலங்கையைக் கொளுத்திய பிறகு அவர் மீண்டும் அவளிடம் விடைபெற வந்தபொழுது, "நீ, கருடன், வாயு ஆகிய மூவரி மட்டுமே கடலைத் தாண்டக்கூடியவர்கள்" என்கிறாள் சீதை.

கிஷ்கிந்தையை விட்டுப் புறப்படும்பொழுது வானரர்கள் அனைவரும் என்ன நினைத்தார்கள் என்பதைப் பார்ப்போம். அவர்கள் நான்கு திக்குகளிலும் சென்று தேடப் புறப்பட்ட பொழுது அவர்களில் ஒவ்வொருவனும், "நான் செய்துவிடுவேன். நான் ஒருவனை போதும். இவ்வளவு பேர்களை எதற்கு அனுப்ப வேண்டும்? ராவணனை ஒரு நொடியில் கொன்றுவிடுவேன். இந்த மரங்களை வேரோடு பெயர்த்தெறிவேன். மலைகளைத் தகர்த்துப் பூமியைக் குடைவேன். கடலையும் வற்ற அடித்துவிடுவேன்" என்று மார்தட்டிப் பேசுகிறான். இப்படித்தான் ஒன்றும் புரியாமலே நாம் காரியங்களைச் சாதித்துவிடுவதாக ஏற்றுக்கொள்ளுகிறோம் அல்லவா? நம்மால் முடியாதது ஒன்றுமில்லை என்று நினைத்துக் கொள்கிறோம். பிறகுதான் நம் தவற்றை அறிந்து வருந்துகிறோம். அனுமாரும் கொஞ்சம் மார்தட்டிப் பேசும் குணமுள்ளவராகவே இருக்கிறார். சீதாதேவியிடம் விடைபெற்றுக்கொண்டு, இலங்கை வாசிகள் என்றென்றும் நினைவு வைத்திருக்கும்படியான தீரச் செயல்களைப் புரிந்தபிறகு, அவர் வீதிகளில் பின்வருமாறு கோஷமிட்டுக்கொண்டு செல்கிறார்: "ஆயிரம் அரக்கர்கள் வந்தாலும் யுத்தத்தில் என்னை எதிர்க்க முடியாது. அவர்கள் என்ன செய்வது என்று அறியாமல் விழித்துக்கொண்டிருக்கும்பொழுதே இந்த இலங்கையை அழித்துவிட்டுத் தேவியிடம் விடைபெற்றுக் கடலைத் தாண்டிச் செல்வேன்" என்கிறார். இதை யுத்த வீறுப்பு என்பர். சண்டைக்குச் செல்பவர் எவரும் மனத்தளர்ச்சியைக் காட்டாமல் இவ்விதம் தம்மைப்பற்றிச் சொல்லிக்கொள்ள வேண்டியதுதான்.

ராவணனது சபைக்குச் சென்று, அவனெதிரில் அமர்ந்து, சுக்கிரீவனிடமிருந்து தூதுச் செய்தி கொண்டு வந்திருப்பதாக அனுமார் சொல்லுகிறார். ஆனால் உண்மையில் சுக்கிரீவன் ஒரு செய்தியும் அனுப்பவில்லையே! சுக்கிரீவன் குசலம் விசாரித்ததாக ஆரம்பித்தவர், உடனே பணிவையும் அடக்கத்தையும் கைவிட்டு, ராவணனை மிரட்டும் தோரணையில் பேசுகிறார்: "எவ்வளவோ காலமாகப் பல ராஜ்யங்களை அழித்து, எல்லோரையும் உன்கீழ் அடக்கிப் பெண்களை அபகரித்துக்கொண்டு அரசு செலுத்தி வருகிறாய். தேவதைகள் கொடுத்த வரங்களின் மகிமையினால் இவ்வளவும் சாத்தியமாகியிருக்கிறது. அந்தக் கட்டம் இப்பொழுது முடிந்துவிட்டது. இனிமேல் நீ செய்த கெட்ட காரியங்களின் பலன் உனக்குக் கிட்டப்போகிறது. கோடிக்கணக்கான வானரர்களிடையே, சீதையை அபகரித்துச் சென்றவர்களைப் பழிவாங்குவதாக ராமர் பிரதிக்ஞை செய்திருக்கிறார். கடலைத் தாண்டி இங்கே கொண்டு வந்து சிறை வைத்திருக்கும் சீதையை யார் என்று நினைத்தாய்? அவளைக் காலராத்திரி என்று தெரிந்துகொள். அவளால் இந்த இலங்கை அழியப்போகிறது. உன் கழுத்தைச்

சுற்றி இறுக இருக்கும் பெருங் கயிறு அவள். இன்னும் சில தினங்களில் அந்தக் கயிறு உன் கழுத்தை இறுக்கிவிடும். உன் இறுதிக் காலம் கிட்டிவிட்டது. பிழைக்க வேண்டுமென்ற ஆசை இருந்தால் சீதையை ராமரிடம் கொண்டுபோய் ஒப்பித்துவிட்டு அவரைச் சரண் அடை. ராமரை யுத்தத்தில் யாராலும் வெல்ல முடியாது. சிவன், பிரம்மா, இந்திரன் இவர்களில் ஒருவரும் ராமர்முன் நின்று போர்புரிய வல்லவர் அல்லர்'' என்கிறார்.

இந்தச் சுலோகத்தில் கவி ஞாபகமாக விஷ்ணுவின் பெயரைக் கூறாமல் விடுகிறார். ராமரே விஷ்ணுவின் அவதாரமாகையால், விஷ்ணு அவரை எதிர்க்க முடியாது என்று சொல்வது நகைப்புக் கிடம் அல்லவா? கவியின் மனதில் விஷ்ணுவும் ராமரும் ஒருவரே. அநேக சமயங்களில் விஷ்ணுவின் பெயரை அவர் குறிப்பிடுவதில்லை. ஓர் அதிசய விஷயம் என்னவெனில், ராமர் காந்தர்வாஸ்திரத்தைப் பிரயோகித்தபொழுது, 'ஒவ்வோர் அரக்கனின் எதிரிலும் அச்சம் விளைவிக்கும் வண்ணம் ராமர் நிற்பது போல் தோன்றிற்று' என்கிறார் கவி ராவணனுடைய மூலபலம் முற்றும் அழிந்ததும், தேவதைகள் பூமாரி பெய்தனர்; கந்தர்வர்கள் ஆனந்தநர்த்தனம் புரிந்தனர்; அப்பொழுது ராமருக்கே வெற்றியின் பெருமிதம் ஏற்படுகிறது. அந்தக் களிப்பில் தமக்குப் பின்னால் சுக்கிரீவன் அனுமார் விபீஷணன் முதலியோர் நிற்பதைப் பார்க்கிறார். அவர்களோ ஆச்சரியத்தினால் பிரமித்தவண்ணம் நிற்கின்றனர். ராமர் அவர்களை நோக்கி, "இந்த அஸ்திரத்தை நானோ அல்லது பரமசிவனோதான் பிரயோகிக்க முடியும்'' என்கிறார்.

एतदस्त्रबलं दिव्यं मम वा त्र्यम्बकस्य वा । VI. 94. 38.

அந்த அதிசயமான அஸ்திரமானது, எதிரி ஒவ்வொருவன் முன்பும் அதைப் பிரயோகித்தவன் பயங்கர உருவத்தில் நிற்பதாகத் தோன்றச் செய்யுமாம். இங்கேயும், ராமரே விஷ்ணு என்பதனால்தான் கவி விஷ்ணுவைக் குறிப்பிடவில்லை என்று தோன்றுகிறது.

ராமர் அனுமாரை எவ்விதம் கொண்டாடினார் என்பதைக் கூறப்போகிறேன். அனுமாருடைய பெருமையைப்பற்றி ராமர் தாம் சரியாகக் கூற முடியும். அவர் என்ன நினைத்தார் என்பதைப் பற்றி அறிய, மூன்று நான்கு சமயங்களில் ராமர் அவரைப்பற்றித் தாம் நினைத்ததை அப்படியே கூறுவதை நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். கிஷ்கிந்தாகாண்டத்தில், சுக்கிரீவன் தன் நான்கு மந்திரிகளுடன் ரிசயமூக பர்வதத்தில் அடைக்கலம் புகுந்திருந்த பொழுதுதான் ராம லக்ஷ்மணர்கள் அனுமாரை முதல்முதலில் சந்திக்கிறார்கள். சாதாரண மனிதரூபத்தில் அனுமார் அவர்களிடம் சென்று அவ்விருவரும் யாரென்று விசாரிக்கிறார்.

அப்பொழுது அவர் ஸம்ஸ்கிருத மொழியில் தம் வல்லமையைக் காட்டியதுடன் இங்கிதமாகவும் அழகாகவும் பேசுகிறார். ராம லக்ஷ்மணர்கள் அவரது பேச்சின் அழகைக் கண்டு வியக்கின்றனர்.

அரசசபையில் சில முறைகள் உண்டு. அரசன் அரசனோடுதான் பேச வேண்டும். மந்திரி மந்திரியோடு பேசுவான். ஆகவே அனுமார் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் ராமரே பதில் கூறலாம் என்றாலும், லக்ஷ்மணனைப் பேசச் சொல்லுகிறார். அனுமாரும் கேட்கும்படி ராமர் லக்ஷ்மணனிடம் அவரைப்பற்றி மிகவும் உயர்வாகப் புகழ்ந்து பேசுகிறார். லக்ஷ்மணனிடம் ராமர் கூறுவதைப் பார்ப்போம்:—

नानृग्वेदविनीतस्य नायजुर्वेदधारिणः ।
नासामवेदविदुषः शक्यमेवं प्रभाषितुम् ॥
नूनं व्याकरणं कृत्स्नमनेन बहुधा श्रुतम् ।
बहु व्याहरतानेन न किञ्चिदपशब्दितम् ॥
न मुखे नेत्रयोश्चापि ललाटे च भ्रुवोस्तथा ।
अन्येष्वपि च गात्रेषु दोषः संविदितः क्वचित् ॥
अविस्तरमसंदिग्धमविलम्बितमद्रुतम् ।
उरःस्थं कण्ठगं वाक्यं वर्तते मध्यमे स्वरे ॥
संस्कारक्रमसंपन्नामद्रुतामविलम्बिताम् ।
उच्चारयति कल्याणीं वाचं हृदयहारिणीम् ॥
अनया चित्रया वाचा त्रिस्थानव्यञ्जनस्थया ।
कस्य नाराध्यते चित्तमुद्यतासेररेरपि ॥
एवंविधो यस्य दूतो न भवेत् पार्थिवस्य तु ।
सिध्यन्ति हि कथं तस्य कार्याणां गतयोऽनघ ॥
एवंगुणगणैर्युक्ता यस्य स्युः कार्यसाधकाः ।
तस्य सिध्यन्ति सर्वार्था दूतवाक्यप्रचोदिताः ॥ IV. 3, 28-35.

"இவனைப் போலப் பேசுவதற்கு ஒருவன் மூன்று வேதங்களையும் நன்கு கற்றறிந்தவனாக இருக்க வேண்டும்" என்கிறார் ராமர். ஐந்து அல்லது ஆறு வாக்கியங்கள் ஒருவர் தவறில்லாமல் ஆங்கிலத்தில் பேசிவிடலாம்; ஆனால் அதற்கு மேல் பேசும்பொழுது தவறு செய்யாமலிருப்பது சாத்தியமல்ல. அதுபோல் நிறையப் பேசியும் அனுமார் ஒரு பிழையும் இல்லாமல் பேசியிருக்கிறார். "நல்ல வாக்குவன்மையுள்ளவனாக இருக்கிறான். அதற்கு வேண்டியவை எல்லாம் இவனுக்கு வசமாகியிருக்கின்றன. தன் பேச்சினால் ஒரு காரியத்தையும் இவன் கெடுத்துவிடமாட்டான். இவன் பேசுவதைக் கேட்க என் உள்ளம் களிப்பெய்துகிறது. இப்படிப் பேச

கிறவன் காலில் பரம விரோதியாக இருப்பவன்கூடப் பணிந்துவிடுவான். பெரிய காரியங்களைச் சாதிக்கும் எண்ணம் கொண்ட அரசன் எவனாவது இருந்தால் அவனுக்கு இவனைப் போன்ற மந்திரிதான் இருக்க வேண்டும். இவனைப் போன்ற ஆள் ஒருவன் கீழ் இருந்தால் அவனால் ஆகாத காரியம் இவ்வுலகில் ஒன்றுமே இருக்காது. அவனுக்கு யாவும் வெற்றியே தரும்'' என்றெல்லாம் ராமர் பாராட்டிப் பேசுகிறார்.

அனுமாரைப் பற்றிய இத்தகைய எண்ணம் ராமருக்குக் கடைசி வரையிலும் மாறாமலே இருக்கிறது. அதற்குக் காரணம், ஸம்ஸ்கிருத மொழியை அவர் சரியாக உச்சரித்துத் திறமையுடன் கையாண்டது மட்டுமல்ல; அவருடைய உயர்ந்த கடமைப்பற்றும், எந்தக் கடினமான காரியத்தையும் மேற்கொண்டு சாதிக்கும் வல்லவர் எனப் பார்த்தவரை நம்பச் செய்யும் சக்தியுமே காரணம் என்று கூறலாம். அவர் துணிந்து நிற்காத ஆபத்தோ, எதிர்த்துப் போராடாத எதிரியோ இல்லை. யஜமானனுக்குச் செய்யும் எவ்விதக் கைங்கர்யத்துக்கும் பின்வாங்கமாட்டார். நான்கு திக்குகளிலும் அனுப்பிய வானரர்களின் கூட்டத்தில் தாரன், ஜாம்பவான், நளன், நீலன், அனுமார் ஆகியோரும் இருக்கின்றனர். அவர்களில் யாராவது ஒருவர் ஸீதையைக் கண்டால், தான் ராமரிடமிருந்து வந்தவன் என்று அவளுக்குத் தெரிவிக்க ஏதாவது அடையாளம் வேண்டியிருக்கலாம். அவ்வாறு காண்பிக்க எதைக் கொடுப்பது? இந்த வானரர்களில் யாரை நம்பி அதைக் கொடுப்பது? இந்தக் காரியத்துக்கு அனுமார்தாம் தகுந்தவர் என்று ராமரும் சுக்கிரீவனும் தீர்மானிக்கிறார்கள். அனைவரையும் விட்டு அனுமாரை அழைத்துச் சுக்கிரீவன், ''இந்தப் பரந்த உலகில் எங்கே சென்றாலும் உமக்குத் தடையேதும் இருக்காது. வேகத்திலும் உமக்குச் சமானம் யாருமில்லை. எல்லாத் திக்குகளிலும் வானரசேனையை அனுப்பியிருந்தாலும் ராமரும் நானும் உம்மிடமே பிரத்தியேகமான ஒரு பொறுப்பை அளிக்கிறோம். கால தேசத்தைக் காரியத்துக்குச் சரியாகப் பயன்படுத்துவதற்கு வேண்டிய குணங்களும் சக்தியும் உம்மிடம்தான் பொருந்தியுள்ளன' என்கிறான். சுக்கிரீவனுக்கு அனுமாரிடமுள்ள பெருநம்பிக்கையைத் தாமும் ஏற்றுக்கொண்டு, ராமர் தம் முத்திரை மோதிரத்தை அவரிடம் அளிக்கிறார்.

अनेन त्वां हरिश्रेष्ठ चिह्नेन जनकात्मजा ।
मत्सकाशादनुप्राप्तमनुद्विग्नानुपश्यति ॥
व्यवसायश्च ते वीर सत्त्वयुक्तश्च विक्रमः ।
सुग्रीवस्य च संदेशः सिद्धिं कथयतीव मे ॥ IV. 44. 13-14.

"சீதையிடம் இந்த மோதிரத்தைக் காட்டினால், அவள் சந்தேகம் தெளிந்து, நான் அனுப்பிய தூதன் என்று உன்னை நம்புவாள். என் பிரிய நண்பன் சுக்கிரீவனே உன்னை இந்தக் காரியத்துக்குத் தகுந்தவன் என்று தேர்ந்தெடுத்திருப்பதனால் நான் வேறு யோசனையின்றி இந்த மோதிரத்தை உன்னிடம் ஒப்படைக்கிறேன்" என்று ராமர் கூறுகிறார். அனுமாரிடம் ராமருக்கு உள்ள பெருநம்பிக்கைக்கு இதுவே சிறந்த அடையாளம் அல்லவா?

சீதையைக் கண்டு வந்த சந்தோஷச் செய்தியைத் தாங்கிய இந்த அனுமார் ராமரைச் சந்திக்கும் கட்டத்துக்குச் செல்வோம். போய்வந்த செய்தியைக் கூறும்படி கேட்டபொழுது அனுமார், சீதை இருக்கும் தெற்குத் திசையை நோக்கிக் கைகூப்பி அஞ்சலி செய்தபின்பே பேசத் தொடங்குகிறார். என்ன பக்தி, என்ன கடமையுணர்ச்சி அவரிடம் குடிகொண்டிருக்கின்றன பாருங்கள்! இது அவரது தாழ்ந்த பிறப்பையே உயர்த்தி அவரது தெய்விகத் தன்மையைக் காட்டுகிறது அல்லவா? தேவியைக் கண்டு பேசிய விருத்தாந்தத்தைக் கூறியபிறகு, அவள் அளித்த சூடாமணியை எடுத்துக் கொடுக்கிறார். சூடாமணியைக் கண்டு ராமர் கண்ணீர் விடுகிறார். துக்கத்தின் வேகம் சிறிது அடங்கிய பிறகு, அவர் திரும்பி அனுமாரை நோக்கிக் கூறுகிறார்:—

किमाह सीता वैदेही ब्रूहि सौम्य पुनः पुनः ।
पिपासुमिव तोयेन सिञ्चन्ती वाक्यवारिणा ॥
चिरं जीवति वैदेही यदि मासं धरिष्यति ।
न जीवेयं क्षणमपि विना तामसितेक्षणाम् ॥
किमाह सीता हनुमंस्तत्त्वतः कथयाद्य मे ।
एतेन खलु जीविष्ये भेषजेनातुरो यथा ॥
मधुरा मधुरालापा किमाह मम भामिनी ।
मद्विहीना वरारोहा हनुमन् कथयस्व मे ॥ V. 65, 8, 10, 14-15.

"அவள் கூறிய வார்த்தைகளை என்னிடம் மீண்டும் மீண்டும் சொல்லு. அவையே என் உயிரை இவ்வுடலில் தரிக்கச்செய்யும். உயிரிழந்தவன் போன்ற என்னை மழைத்துளிகள் போன்ற அந்தச் சொற்களே உயிர் பிழைக்கச் செய்பவை. எங்கே, மறுபடியும் அந்த வார்த்தைகளைக் கூறு. மூர்ச்சித்துக் கிடக்கும் மனிதனின் முகத்தில் தண்ணீரைத் தெளிப்பது போல் அந்த வார்த்தைகள் என் காதுகளில் விழுந்து என் மூர்ச்சையைத் தெளிவிக்கும். இன்னும் ஒரு மாதம் தவணை இருக்கிறது. அதற்குள் நான் வந்து அவளை மீட்டு அழைத்துப் போவேன் என்றே அவள் அதுவரையிலும் உயிர் தரித்திருக்கிறாள் என்று கூறினாய் அல்லவா? அந்த ஒரு மாதம் அவள் ஜீவித்திருந்தால் போதும். அவளை விட்டு அதிக

நான் என்னால் பிரிந்திருக்க முடியாது. அவள் இன்னும் என்ன கூறினாள்? ஒன்றையும் நிறுத்த வேண்டாம். வைத்தியன் கொடுக்கும் மருந்தை நோயாளி நம்பியிருப்பது போல், நானும் அவள் வார்த்தைகளையே நம்பியிருக்கிறேன்'' என்கிறார்.

உலக இலக்கியங்களிலே இத்தகைய அன்பையும் துக்கத்தையும் வெளியிடும் வாக்கியங்களை நான் அதிகம் படித்திருப்பதாகக் கூற முடியாது. இதற்குப் பிறகு ராமர் அனுமாரைப் பின்னும் அதிகமாகப் புகழ்ந்து பேசுகிறார். இத்தகைய பேருதவியைச் செய்த ஒருவரை எவ்வளவு புகழ்ந்தால்தான் தகாது?

कृतं हनुमता कार्यं सुमहद्भुवि दुष्करम् ।
मनसापि यदन्येन न शक्यं धरणीतले ॥ VI. 1. 2.

''மற்ற எவனும் கனவிலும் நினைக்க முடியாத காரியத்தை அனுமான் எனக்காகச் செய்துவிட்டான்'' என்கிறார்.

தூதர்களாக அனுப்பக் கூடியவர்களைப்பற்றி வர்ணிக்கும் பிரசித்தமான சுலோகங்கள் மூன்று காண்கின்றன. அவர்களை மூன்று வகுப்பாக ராமர் பிரித்துக் கூறுகிறார். ஆனால் அவை தெளிவாகத் தெரியவில்லை. வால்மீகியின் கருத்தை விளக்கும்படியான சொற்கள் அந்தச் சுலோகங்களில் அமையவில்லை. ஆனால் அவற்றிலுள்ள கருத்து, தெளிவாகவே இருக்கிறது.

यो हि भृत्यो नियुक्तः सन् भर्त्रा कर्मणि दुष्करे ।
कुर्यात् तदनुरागेण तमाहुः पुरुषोत्तमम् ॥
भृत्यस्तु यः परं कार्यं न कुर्यान्नृपतेः प्रियम् ।
भृत्यो युक्तः समर्थश्च तमाहुर्मध्यमं नरम् ॥
नियुक्तो नृपतेः कार्यं न कुर्याद्यः समाहितः ।
भृत्यो युक्तः समर्थश्च तमाहुः पुरुषाधमम् ॥ VI. 1. 8-10.

பிறகு வந்த இலக்கியங்களில் வேலைக்காரர்களைப் பற்றிய இந்தப் பாகுபாடு மிகவும் பிரசித்தமாக விளங்குகிறது. மேற்கண்ட சுலோகங்களில் நமக்கு விளங்கிய கருத்துக்கள் என்னவென்று பார்ப்போம். உத்தமனான வேலைக்காரனுடைய லக்ஷணம் பின்வருமாறு— யஜமானன் வெளிப்படையாகக் கூறிய உத்தரவுகளைத் தவிர, வெளியிடாத அவன் மனத்திலுள்ள எண்ணங்களையும் அறிந்து, அவன் பிரத்தியேகமாகக் கூறிய பணிகளை நிறைவேற்றுவதுடன், அவன் கூறாது விட்டவற்றையும் அந்த வேலைக்காரன் செய்து முடிப்பான். அவனது அறிவும் யஜமான பக்தியும் அவற்றை யஜமானனுக்காகச் செவ்வனே செய்து முடிக்கத் தூண்டுகின்றன. யஜமானன் கூறியவற்றை மட்டும் செய்து, மேலும் ஏதும் செய்யாதவன் இரண்டாவது வகுப்பைச் சேர்ந்தவன்.

தன்னிடம் ஒப்படைத்த காரியத்தைச் செய்யாமலே திரும்பி வந்து, தன்னால் ஆகவில்லை என்று சொல்கிறவன் மூன்றாவது வகுப்பைச் சேர்ந்தவன்.

மேற்கூறிய உத்தம வேலைக்காரன் வகுப்பைச் சேர்ந்தவர் என்று அனுமார் பெரும்புகழுக்கு உரியவராகிறார். மனம் கொண்ட மட்டும் அவரைக் கொண்டாடிவிட்டு ராமர் மேலும், "உனக்குக் கொடுக்க என்னிடம் ஒன்றுமில்லையே! என்ன செய்வேன்?" என்கிறார். சீரும் செழிப்பும் மிகுந்த மகத்தான சாம்ராஜ்யத்தை ஆண்ட சக்கரவர்த்திதிருமகன், நினைத்ததும் வாரி வழங்கும் வள்ளலான ஸ்ரீராமர் இவ்வாறு பேசுகிறார். அப்படிப்பட்டவர் சகலத்தையும் துறந்து சுக்கிரீவனின் அதீனராக இருக்கிறார் இப்பொழுது. மேன்மை மிக்கவர் தம் மகிழ்ச்சியைத் தெரிவிக்கும் அடையாளமாக ஏதாயினும் கொடுக்காமல் இருக்கமாட்டார்கள். அவ்வாறே தம் அதிருப்தியையும் பிறர் அறியும்படி செய்து விடுவார்கள். அவர்களின் களிப்பே ஓர் பெரும் பேறு. அவர்கள் அதிருப்தி கொண்டால் அது நமது பெரும் துரதிர்ஷ்டம் என்று கொள்ள வேண்டும். ஒருவருக்குப் பரிசு அளிக்க நினைத்து இயலாமற் போவது அரசனுக்கு எவ்வளவு வேதனையைத் தரும் என்று நாம் நினைத்துப் பார்க்க வேண்டும். சீன தேசத்துச் சக்கரவர்த்தி ஒருவர் தங்கமும் வெள்ளியுமாகிய நாணயங்கள் நிரம்பிய மூட்டைகளுடன் இரண்டு மூன்று ஆட்களைத் தம்முடன் கூடவே வைத்திருப்பாராம். ஒருவரிடம் ஏதேனும் விசேஷம் தென்பட்டால் உடனே அவருக்குப் பரிசு அளித்துவிடுவாராம். யாரேனும் சாதுரியமாகவோ உயர்வாகவோ பேசினாலும் வெகுமதி அளிப்பாராம். உண்மையான மேன்மைக்கு இது ஒரு சிறந்த அத்தாட்சி அல்லவா? தாம் கொண்ட சந்தோஷத்துக்குப் பிரதிசெய்து வெளியிட வகையில்லாமற் போவதை விரும்பாத தனவான்களை நான் பார்த்திருக்கிறேன். தீனன் என்று ராமர் தம்மைச் சொல்லிக்கொள்ளுகிறார்.

इदं तु मम दीनस्य मनो भूयः प्रकर्षति ।
यदिहास्य प्रियाख्यातुर्न कुर्मि सदृशं प्रियम् ॥
एष सर्वस्वभूतस्तु परिष्वङ्गो हनूमतः ।
मया कालमिमं प्राप्य दत्तश्चास्तु महात्मनः ॥ VI. 1. 13-14.

"இத்தகைய செய்தியைத் தாங்கி வந்த உனக்குத் தகுந்த வெகுமதி என்னிடம் இல்லையே! ஆனால் நான் என்னையே வேண்டுமானால் அதற்குப் பிரதியாக அளிக்கலாம். இதோ நான் உன்னைச் சேர்த்துக் கட்டிக்கொள்ளுகிறேன். இதோ என் நெருங்கிய ஆலிங்கனம்" என்கிறார்.

அனுமாருக்கு இதைவிட வேறு பெரும்பேறு என்ன வேண்டும்? ராமாயணத்தில் மற்றோர் இடத்தில் இந்த ஆலிங்கனத்தின் மகத்துவத்தைப் பற்றிக் குறிப்பிடப்பெற்றிருக்கிறது. அரணிய காண்டத்தில், கர தூஷணர்களையும் பதினாலாயிரம் அரக்கர்களையும் கொன்று ராமர் திரும்பி வருகிறார். ஒரு மலைக் குகைக்குள் பத்திரமாக இருந்த சீதையும் லக்ஷ்மணனும் வெளியே வருகிறார்கள். அரக்கர்களைக் கொன்று வெற்றியுடன் திரும்பிய கணவனைக் கண்டதுமே சீதைக்கு மட்டில்லாத மகிழ்ச்சி உண்டாகிறது. 'காரணமில்லாமல் அரக்கர்களுடன் ஏன் சண்டையிட வேண்டும்?' என்று அவள் ராமரைக் கேட்டாள் அல்லவா? அவளுக்கு அந்த நினைவு வருகிறது.

तं दृष्ट्वा शत्रुहन्तारं महर्षीणां सुखावहम् ।
बभूव हृष्टा वैदेही भर्तारं परिषस्वजे ॥ III. 30. 39-40.

வீட்டில் ஒவ்வொருவரும் எப்படி நடக்க வேண்டும் என்ற முறைப்படிப் பார்க்கும்பொழுது, கணவனே முதலில் மனைவியை ஆலிங்கனம் செய்துகொள்ள வேண்டும். அடக்கம் மிகுந்த மனைவி தானே போய்க் கணவனை ஆலிங்கனம் செய்துகொள்வது மிகவும் அபூர்வம். இந்தச் சமயத்தில் சீதை அந்த முறையை மறந்து, ராமரைக் கண்டதும் ஆனந்த மிகுதியால் தானே ஓடிப்போய் ஆலிங்கனம் செய்துகொள்ளுகிறாள். மனைவியே வலிய வந்து கணவனை அணைத்துக்கொண்டால் அது அவனுக்குப் பேரானந்தத்தை அளிக்கும் அல்லவா?

ராவண வதம் முடிந்து விபீஷணனுக்கு முடி சூட்டியதும் அந்தச் செய்தியைச் சீதைக்குப் போய்க் கூறும்படி ராமர் அனுமாரை அனுப்புகிறார். அப்படியே அனுமார் போய்க் கூறியதும், அவருக்கு ஏதேனும் வெகுமதி அளிக்க வேண்டுமென்று விரும்புகிறாள் சீதை. "இத்தகைய செய்தியைக் கொண்டு வந்த உனக்கு அளிப்பதற்கு உரிய பரிசு என்னிடம் இல்லை. எதைக் கொடுத்தால் உனக்குத் தகுந்த பிரதியளித்ததாகும் என்று எனக்குத் தெரியவில்லை. என்னிடம் எவ்வளவு தங்கம் சிறந்த ரத்தினங்கள் இருந்தாலும், ஏன், இந்த மூன்று உலகங்களே இருந்தாலும் நீ கூறிய நற்செய்திக்கு இணையாக அவை ஆகமுடியாது" என்கிறாள் சீதை. பெரிய ராஜவம்சத்தில் பிறந்து இணையற்ற செல்வத்தில் வளர்ந்தவளாகையால், தன் மகிழ்ச்சிக்கு அறிகுறியாக ஏதேனும் கொடுத்தே பழக்கமானவள்.

கடைசியாகப் பட்டாபிஷேகக் கட்டத்துக்குச் செல்வோம். அந்த வைபவத்தைக் காண வானரர்கள் அனைவரும் வந்திருக்கின்றனர். இலங்காதிபதியான விபீஷணனும் தன் நான்கு மந்திரிகளுடன் வந்திருக்கிறான். மாதக் கணக்காக நடந்த

கொண்டாட்டம் இனிது முடிந்தபிறகு, வந்திருந்த விருந்தினர்களை ராமர் விடைகொடுத்தனுப்புகிறார். இப்பொழுது அனுமாரைப் பற்றி விசாரிப்போம். யுத்தகாண்டத்தின் இறுதியிலும் உத்தர காண்டத்திலும் இரண்டு வரலாறுகள் காண்கின்றன. அவை இரண்டும் ஒன்றுக்கு ஒன்று ஒவ்வாமல் இருந்தாலும் முக்கிய அம்சத்தில் ஒத்திருக்கின்றன. ராமர் அனுமாருக்கு ஒன்றும் கொடுக்கவில்லை. ரத்தினப் பதக்கத்தோடு விலையுயர்ந்த ஒரு முக்தாஹாரத்தைச் சீதைக்கு அளிக்கிறார். அதைத் தேவி தானே எடுத்துக்கொள்ளாமல் ஒரு நிமிஷம் கழுத்தில் அணிந்து, பிறகு அதைக் கழற்றிச் சுற்றிலும் பார்த்துவிட்டுப் பின்பு அனுமாரை நோக்குகிறாள். பிறகு ராமரையும் நோக்குகிறாள். அதைக் கண்டு ராமர் அவள் உள்ளத்திலிருப்பதை அறிந்து, அவள் தன் விருப்பப்படிச் செய்ய வேண்டும் என்பதற்காக, "தேவி! எவரிடம் இந்தக் குணங்கள் அனைத்தும் ஒன்றுசேர்ந்திருக்கின்றனவோ அவரிடமே இந்த முக்தாஹாரத்தை அளிப்பாயாக" என்கிறார்.

प्रदेहि सुभगे हारं यस्य तुष्टासि भामिनि ।
तेजो धृतिर्यशो दाक्ष्यं सामर्थ्यं विनयो नयः ॥
पौरुषं विक्रमो बुद्धिर्यस्मिन्नेतानि नित्यदा ॥ VI. 131. 81-82.

அந்தச் சிறந்த குணங்களுக்கெல்லாம் இருப்பிடமாக ஒரே ஒருவரைத்தான் குறிப்பிட முடியும். அவர் அனுமாரே. உத்தர காண்டத்தில் இது பின்னும் விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. முத்துமாலையைக் காட்டிலும் இன்னும் எவ்வளவோ உயர்ந்த பரிசுகள் அவருக்குக் கிடைக்கின்றன. அனைவரும் விடைபெற்றுச் செல்லும்பொழுது அனுமார் ராமரிடம் சென்று சொல்லுகிறார்:—

स्नेहो मे परमो राजंस्त्वयि तिष्ठतु नित्यदा ।
भक्तिश्च नियता वीर भावो नान्यत्र गच्छतु ॥
यावद्रामकथा वीर चरिष्यति महीतले ।
तावच्छरीरे वत्स्यन्ति प्राणा मम न संशयः ॥ VII. 40. 15-16.

"எனக்குத் தங்களிடம் என்றும் குன்றாத பிரேமை இருக்க வேண்டும். அத்தகைய பாக்கியத்தைத் தாங்கள் எனக்கு அருள வேண்டும். வேறொரு சிந்தனையும் எனக்கு இருக்கலாகாது. வேறொருவரும் தங்கள் மீதுள்ள என் பிரேமைக்கு உரியவராகவும் கூடாது. தங்கள் பெயர் உலகில் உள்ளளவும் நான் ஜீவித்திருக்க விரும்புகிறேன். என்றென்றும் நான் தங்கள் பக்தனாக இருக்க வேண்டும்" என்று அனுமார் வேண்டிக்கொள்கிறார். "நீ விரும்பிய படியே ஆகட்டும். என் சரித்திரம் மக்களிடையே வழங்கிக்கொண்டிருக்குமளவும் உன் புகழும் அதில் சேர்ந்திருக்கும். சிரஞ்சீவியாக

இருப்பாயாக'' என்று ராமர் அநுக்கிரகம் செய்கிறார். இதன்பின் ஓர் உயர்ந்த சுலோகம் வருகிறது:—

एकैकस्योपकारस्य प्राणान् दास्यामि ते कपे ।
शेषस्येहोपकाराणां भवाम ऋणिनो वयम् ॥ VII. 40. 22

''எனக்கு எவ்வளவோ சிறந்த உபகாரங்கள் செய்திருக்கிறாய். அவற்றுள் ஒவ்வொன்றுக்கும் என் உயிரே தக்க பிரதியாகும். நீ செய்துள்ள கணக்கற்ற உபகாரங்களில் ஒன்றுக்கு ஈடாக என் உயிரை அளிப்பதாக இருந்தாலும் நான் கடன்பட்டவனாகவே இருப்பேன். நான் உன்னிடம் பட்டுள்ள கடனைத் தீர்ப்பது என்பது ஒருநாளுமில்லை'' என்று ராமர் கொண்டாடுகிறார்.

मय्येव जीर्णतां यातु यत् त्वयोपकृतं हरे ।
नरः प्रत्युपकारार्थी विपत्तिमभिकाङ्क्षति ॥ VII. 40. 23.

பிரதியுபகாரத்தை எதிர்பார்ப்பது மேன்மை பொருந்தியவர்களுடைய குணமல்ல. பிறர் துன்பத்தில் இருக்கும்பொழுது நாம் அவர்களுக்கு உபகாரம் செய்கிறோம். பிறருடைய உயிர்களைக் காக்க நேரும்பொழுதுதான் சிறந்த காரியங்கள் செய்யப்படுகின்றன. நண்பன் உபகாரம் செய்வது என்றால், நாம் பெரிய கஷ்டத்தில் அகப்பட்டிருக்க வேண்டும். அதற்குத் தகுந்த பதிலுபகாரத்தை அந்த நண்பன் எதிர்பார்த்தால், அவனும் முதலில் கஷ்டப்பட வேண்டும். ஆகவே என்னிடமிருந்து உன் உபகாரங்களுக்குப் பதில் எதிர்பார்க்க வேண்டாம். நான் கஷ்டங்களுக்கு உள்ளாகிப் பெரிய யுத்தம் செய்யவேண்டியதாக இருந்தது. அந்தச் சமயத்தில் நீ பேருதவி செய்தாய். அந்த உதவிக்கு நான் பதில் செய்ய வேண்டுமென்றால் முதலில் உனக்குக் கஷ்டம் ஏற்பட்டு, அதிலிருந்து நான் உன்னை மீட்க வேண்டும். ஆகவே உன் உபகாரங்கள் பதிலை வேண்டாமல் என்னுடனேயே அற்றுப் போகட்டும்'' என்கிறார் ராமர். இந்தச் சுலோகத்திற்கு மற்றொரு பொருளும் கூறலாம்: ''நீ செய்த உபகாரங்களுக்கு ஒன்றும் நான் பதில் செய்வதாக இல்லை. பதிலை எதிர்பார்த்துத்தான் ஒருவன் எந்த நல்ல காரியத்தையும் செய்கிறான்.''

## அனுமாரின் எண்ண அலைகள்

இலங்கையைச் சாவதானமாகவும் சுலபமாகவும் சுற்றிப் பார்ப்பதற்கு வசதியாக அனுமார் தம்மை ஒரு பூனையளவு சிறிய உருவமாக்கிக் கொண்டார் என்று தெரிந்துகொண்டோம் அல்லவா? அவர் ராவணனுடைய அரண்மனையில் புகுந்து தேடிவரும்போது, சீதையைக் காணும் எண்ணத்துடன் அந்தப்புரத்தில் நுழைகிறார். அங்கே தாம் பார்க்க விரும்பாத பல காட்சிகளைப் பார்க்கிறார். ஆங்காங்கே ராவணனுடைய ஸ்திரீகள் இரவில் களியாட்டத்திற்குப் பிறகு பலவிதமாகக் கலைந்த ஆடைகளுடன் படுத்திருப்பதைப் பார்த்துக்கொண்டு வருப்பொழுது, ராவணனுடைய பட்டமகிஷியும் மிகவும் ரூபவதியுமான மந்தோதரியைக் கண்ணுற்று, அவள்தான் சீதையாக இருக்கலாம் என்று எண்ணி ஆனந்தக் கூத்தாடுகிறார். மிதமிஞ்சிய மகிழ்ச்சியில் குரங்குகளின் இயல்பின்படி அனுமார் நடந்துகொண்டார் என்று வால்மீகி நகைச்சுவையுடன் கூறுகிறார். அந்தப் பிரசித்தமான சுலோகம் இது:—

आस्फोटयामास चुचुम्ब पुच्छं ननन्द चिक्रीड जगौ जगाम ।
स्तम्भानरोहन्निपपात भूमौ निदर्शयन् स्वां प्रकृतिं कपीनाम् ॥
V. 10. 54.

தாம் எவ்விதத்தைச் சேர்ந்தவர் என்பதை மிகத் தெளிவாகக் காட்டுகிறார். அனுமாரைக் கவி எல்லா விதத்திலும் மிகவும் உயர்ந்தவராகக் காட்டியபோதிலும் எந்தச் சமயமும் அவர் எந்த இனத்தைச் சேர்ந்தவர் என்பதை நாம் மறந்துவிடாதபடி செய்துவிடுகிறார். "வாலைப் பூமியில் அடித்தும், வாலை முத்தமிட்டும், மேலிருந்து கீழே குதித்தும், கீழிருந்து மேலே ஏறியும், பாடியும், விழுந்தும் தம் குரங்கியல்பைப் பல விதமாகக் காட்டினார்" என்கிறார் வால்மீகி. ஆயினும் அவர் சாதாரண வானரம் அல்ல; வேதங்களையும் சாஸ்திரங்களையும் நன்கு கற்றறிந்தவர் என்பதற்கு அடையாளமாக, ராவணனுடைய அந்தப்புரத்தில அலங்கோலமாய்க் கலைந்த ஆடைகளுடன் படுத்திருக்கும் ஸ்திரீகளைப் பார்த்ததைத் தவறாகக் கருதி வருந்துகிறார்:—

निरीक्षमाणश्च तदा ताः स्त्रियः स महाकपिः ।
जगाम महतीं चिन्तां धर्मसाध्वसशङ्कितः ॥
परदारावरोधस्य प्रसुप्तस्य निरीक्षणम् ।
इदं खलु ममात्यर्थं धर्मलोपं करिष्यति ॥
न हि मे परदाराणां दृष्टिर्विषयवर्तिनी ।
अयं चात्र मया दृष्टः परदारपरिग्रहः ॥ V. 11. 38-40.

'இது சரியல்லவே! படுத்துத் துயின்றுகொண்டிருக்கும் ஸ்திரீகளைக் கவனித்துப் பார்த்தது முறைதவறு அல்லவா? தகாத எண்ணங்களைக் கிளப்பும் படி இந்தப் பரஸ்திரீகள் படுத்துத் துயின்று கொண்டிருப்பதைக் காணும்படி விதி என்னை இவ்விடத்தில் கொண்டு விட்டதே! இம்மாதிரி இதற்கு முன் நான் செய்ததில்லை. இப்பொழுது இந்த முறையற்ற செயலைச் செய்யும்படியாகி விட்டது' என்று கூறிக்கொள்ளுகிறார். மீண்டும் வேறோர் எண்ணம் தோன்றுகிறது:—

कामं दृष्टा मया सर्वा विश्वस्ता रावणस्त्रियः ।
न हि मे मनसः किञ्चिद्वैकृत्यमुपपद्यते ॥
मनो हि हेतुः सर्वेषामिन्द्रियाणां प्रवर्तने ।
शुभाशुभास्ववस्थासु तच्च मे सुव्यवस्थितम् ॥
नान्यत्र च मया शक्या वैदेही परिमार्गितुम् ।
स्त्रियो हि स्त्रीषु दृश्यन्ते सर्वथा परिमार्गणे ॥
यस्य सत्त्वस्य या योनिस्तस्यां तत्परिमृग्यते ॥
न शक्या प्रमदा नष्टा मृगीषु परिमार्गितुम् ॥
तदिदं मार्गितं तावच्छुद्धेन मनसा मया ।
रावणान्तःपुरं सर्वं दृश्यते न च जानकी ॥
किं नु मां वानराः सर्वे गतं वक्ष्यन्ति सङ्गताः ।
गत्वा तत्र त्वया वीर किं कृतं तद्वदस्व नः ॥
अदृष्ट्वा किं प्रवक्ष्यामि तामहं जनकात्मजाम् ।
ध्रुवं प्रायमुपैष्यन्ति कालस्य व्यतिवर्तने ॥ V. 11. 42-46; 12.7-8

'ஆயினும் இதில் என்ன தவறு? ராவணனுடைய ஸ்திரீகளை நான் வேண்டிய மட்டும் பார்த்தாயிற்று. ஆனால் என் மனம் என்னவோ அதனால் கொஞ்சமும் பாதிக்கப்படவில்லை. மனம் செலுத்தினால்தான் இந்திரியங்களும் வஸ்துக்களின் மீது சென்று வைக்கின்றன. இந்திரியங்களைச் சரியான வழியிலோ தவறான வழியிலோ செலுத்தும் இந்த மனம் என் கட்டுக்குள் இருக்கிறது. இது என்னை மீறிப் போகாது. சீதாதேவியைத் தேடிப் பார்ப்பதற்காக இங்கு வந்தேன். ஸ்திரீகள் இருக்கும் இடத்தில்தானே

அவள் இருப்பாள் என்று தோன்றியது சகஜமே அல்லவா? பெண்ணைப் பெண்கள் இருக்கும் இடத்தில்தானே தேடவேண்டும்! மான்களின் கூட்டத்தில் அவளைத் தேட முடியுமா? சுத்தமான மனத்துடன் இங்கு முழுவதும் சுற்றிப் பார்த்தாயிற்று. தேடியலைந்தது பயன் தரவில்லையே! என்ன செய்வது? திரும்பிச் சென்றால் வானரர்கள் அனைவரும் என்னைச் சூழ்ந்துகொண்டு, "என்ன செய்தி? என்ன செய்தாய்?" என்று கேட்பார்கள். சீதையைக் கண்டுபிடிக்காமலே திரும்பி வந்தபிறகு நான் என்ன பதில் சொல்வேன்? கொடுத்த தவணையோ தீர்ந்துவிட்டது. இனிப் பிராயோபவேசம் செய்து உயிரை மாய்த்துக்கொள்ள வேண்டியதுதான்' என்று ஒரு நிமிஷம் நினைக்கிறார்.

மீண்டும் மற்றோர் எண்ணம் தோன்றவே, ஒரு மூலை முடுக்கு மீதி இல்லாமல் தேடத் தொடங்குகிறார். நான்கு அங்குல இடங் கூட அவர் தேடாமல் விடவில்லை. அவ்வளவு சிறிய இடத்தில் சீதையை மறைத்து வைக்க முடியுமா? ஆகவே ஓய்ந்து போவதற்கு இடம் கொடாமல் மீண்டும் முயற்சி செய்து பார்க்கலாம் என்று தோன்றுகிறது.

अनिर्वेदः श्रियो मूलमनिर्वेदः परं सुखम् ।
अनिर्वेदो हि सततं सर्वार्थेषु प्रवर्तकः ॥
करोति सफलं जन्तोः कर्म यत् तत् करोति सः ।
तस्मादनिर्वेदकरं यत्नं चेष्टेऽहमुत्तमम् ॥ V. 12. 10-11.

'நம்பிக்கையைக் கைவிடலாகாது. இன்னும் தேடாத இடம் ஏதேனும் இருந்தால் போய்ப் பார்ப்பேன். மனிதன் எது செய்தாலும் வெற்றி பெறும் நம்பிக்கையை மட்டும் விடாமல் இருக்க வேண்டும்' என்று இம்மாதிரி பெரிதும் சிந்தனை செய்கிறார். சுந்தரகாண்டத்தின் பதின்மூன்றாவது ஸர்க்கம், அனுமார் தமக்குத் தாமே பேசிக்கொள்ளும் பெரிய ஸர்க்கம். அதை மொழிபெயர்த்துக் கடைசியில் சொல்லுகிறேன். இதன்பின் அனுமார் அசோகவனத்தை அடைந்து அங்கே சீதையைக் காண்கிறார். அவளைப்பற்றி ராமர் முழுவதும் வர்ணித்துக் கூறியதைக் கொண்டு அவள்தான் சீதை என்று நிச்சயிக்கிறார். அவளது அங்க அடையாளங்களை ஒன்றும் விடாமல் ராமர் எடுத்துக் கூறியிருந்ததனால் அவர் தவறிழைக்க முடியாது. அவளது அழகு அவருக்கு வியப்பை உண்டாக்குகிறது. அவள் இருக்கும் சோக நிலையைக் கண்டு ஆச்சரியமும் வருத்தமும் அடைகிறார். இணையற்ற அழகும் கற்பும் இணைந்து ஒன்றுசேர்ந்திருக்கும் சீதையைக் கண்டு, உலகம் முழுவதும் சுற்றி வந்திருக்கும் அனுமார் என்னவெல்லாம் நினைத்தார் என்பதைக் கவி கூறுகிறார்:

प्रनष्टापि सती यस्य मनसो न प्रणश्यति ।
इयं सा यत्कृते रामश्चतुर्भिः परितप्यते ॥
कारुण्येनानृशंस्येन शोकेन मदनेन च ।
स्त्री प्रनष्टेति कारुण्यादाश्रितेत्यानृशंस्यतः ।
पत्नी नष्टेति शोकेन प्रियेति मदनेन च ॥ V. 15. 48-50.

"ராமர் இழந்து பரிதவிக்கும் சீதாதேவி இதோ இருக்கிறாள். ஆனால் அவர் தம் இதயத்தை விட்டு அவளை இழக்கவில்லை. அவள் எப்பொழுதும் அவரது இதயத்திலேயே குடி கொண்டிருக்கிறாள். அவளுக்காக அவர் நான்கு விதமாக வருந்துகிறார்" என்கிறார். சீதையைக் குறித்து ராமர் நான்கு விததத்தில் அவளது பிரிவாற்றாமையை வெளியிடுகிறாராம். கவி வர்ணிக்கிறார். அது கொஞ்சம் நூதனமாக இருக்கிறது என்று கூறலாம். ராமரின் மனத்தில் நான்கு வித உணர்ச்சிகள் எப்படி உண்டாகும்? அவரை அண்டி அவரது பிரத்தியேக ஆதரவில் இருந்த ஒரு பெண்மணி அவரை விட்டுப் பிரிந்துவிட்டாள். அவள் யார்? அவருடைய மனைவி; அவரது அன்புக்கு உரியவள். ஆகவே பரிவு, பரிதாபம், சோகம், துக்கம் ஆகிய இந்த நான்கு விதத்திலும் ராமர் சீதையைப் பிரிந்து வருந்துகிறார் என்கிறார். அனுமார் சீதையைக் கண்டதும் அவருக்கு ராமரின் நினைவு உண்டாவது இயல்புதான் அல்லவா? ராமர் கஷ்டப்படுவதெல்லாம் அனுமாரின் நினைவுக்கு வருகிறது. கீழ்க்கண்ட சுலோகம் மிகவும் பிரசித்தமானது:—

दुष्करं कृतवान् रामो हीनो यदनया प्रभुः ।
धारयत्यात्मनो देहं न शोकेनावसीदति ॥ V. 15. 53.

இது மிகவும் அழகான சுலோகம். "ராமரின் இதயம் கடினமானது என்று நினைக்கிறேன். மற்ற எவராலும் செய்ய முடியாத காரியத்தை அல்லவா அவர் செய்கிறார்? இந்தத் தேவியைப் பிரிந்து அவர் இன்னும் உயிருடன் இருக்கிறாரே; அவர் வாழ்க்கை எவ்வளவு சிரமமானது!" என்கிறார். மீண்டும் ஓர் எண்ணம் எழுகிறது:—

तुल्यशीलवयोवृत्तां तुल्याभिजनलक्षणाम् ।
राघवोऽर्हति वैदेहीं तं चेयमसितेक्षणा ॥
यदि रामः समुद्रान्तां मेदिनीं परिवर्तयेत् ।
अस्याः कृते जगच्चापि युक्तमित्येव मे मतिः ॥
राज्यं वा त्रिषु लोकेषु सीता वा जनकात्मजा ।
त्रैलोक्यराज्यं सकलं सीताया नाप्नुयात्कलाम् ॥ V. 16. 5, 13, 14.

"ராமரும் சீதையும் ஒருவருக்கொருவர் இணையானவர்களே!" என்று புகழ்கிறார் இந்த நித்தியப் பிரம்மசாரி! "இருவரும் நல்ல பொருத்தமானவர்கள். இருவர் குலமும் ஏற்றத்தாழ்வில்லாமல் இருக்கின்றன. இருவரும் ஒருவருக்கு ஒருவர் ஏற்றவர். விலையற்ற இந்த மாணிக்கத்தை இழந்து ராமர் கோபவெறியில் சமுத்திரத்தை வற்ற அடித்துப் பூமியையும் இருந்த இடம் தெரியாமல் அடித்துவிட்டால் அது ஒன்றும் பெரிய தவறான செயல் என்று சொல்ல முடியாது. இழந்த இவள் மீண்டும் கிடைப்பதாக இருந்தால் வேறு எது தொலைந்தாலும் பெரிதில்லை. சீதையை ஒரு தராசிலும் மூவுலகத்தையும் மற்றொரு தராசிலும் வைத்தால் அது சீதைக்குச் சிறிதும் ஈடாகாது."

இந்தச் சமயத்தில் ராவணன் அங்கு வருவதை அனுமார் காண்கிறார். இதற்குப் பிறகு அநேக ஸர்க்கங்கள், அனுமார் அங்கு நிகழ்ந்தவற்றை மரத்தின் மீதிருந்து பார்த்த வரலாற்றைக் கூறுகின்றன. சோகமான அந்தக் காட்சிகளைக் கண்டு அனுமாரின் மனம் எவ்விதம் பரிதவித்தது? அதை மட்டும் கூறிவிட்டு மேலே செல்லுகிறேன். ராவணனும் பரிவாரங்களும் சென்றபிறகு, அரக்கியர் அனைவரும் களைத்துப்போய் உறங்கியதும், சீதையோடு பேசிப் பார்க்கலாம் என்று அனுமார் நிச்சயிக்கிறார். முதலில் பிராகிருத பாஷையில் பேசலாம் என்று யோசிக்கிறார். 'அவ்வாறு பேசவில்லை என்றால் ராவணன்தான் மாறுவேஷத்தில் வந்திருக்கிறான் என்று அவள் நினைத்துவிடுவாள். ஆகவே அவள் சந்தேகப்படாத விதம் பிராகிருதத்திலேயே பேசுவதுதான் நல்லது.' இவ்விதம் யோசித்தபிறகு அவள்முன் திடீரென்று போய் நிற்பது சரியல்ல என்று அவர் மனத்தில் படுகிறது. அவள் காதில் படும்படி ஏதாவது கூற வேண்டும் என்று யோசித்து, ராமரைப் பற்றியும் இக்ஷ்வாகு வம்சத்தைப் பற்றியும் பேசுவது என்று முடிவு கட்டுகிறார். ஏனெனில் அவளுக்குத் தன் உயிர், பிரகாசம் எல்லாம் ராமரே அல்லவா? 'ராமருடைய குணங்களை நான் கூறும்பொழுது அந்தச் சொற்கள் அவள் காதுக்கு இன்பமாக இருக்கும்' என்று எண்ணி அவர் ராமரைப்பற்றிக் கூறுகிறார். சீதை அப்பொழுதும் அவரை அச்சத்துடன் சுற்றி நோக்குகிறாள். அப்பொழுது அவர் மரத்திலிருந்து கீழிறங்கி வந்து, அவள் யார் என்று தெரிந்திருந்தும் பொதுவாக விசாரிக்கிறார்:—

रोदनादतिनिश्वासाद्भूमिसंस्पर्शनादपि ।
न त्वां देवीमहं मन्ये राज्ञः संज्ञावधारणात् ॥ V. 33. 10, 11.

"உங்களைப் பார்த்தால் தேவலோகத்து ஸ்திரீ என்று தோன்றவில்லை. ஏனெனில் பெருமூச்சு விடுகிறீர்கள்; கண்ணீர் சொரிகிறீர்கள்; உங்கள் பாதங்கள் பூமியின்மீது நிற்கின்றன. நீங்கள்

'ராமா, ராமா' என்று சொல்லிக்கொண்டிருப்பதனால் சீதையாக இருக்கலாம் என்று எண்ணுகிறேன். நான் ஊகித்தது தவறாக இருக்காது" என்கிறார்.

சீதை அதற்குப் பதில் தான் யார் என்று கூறி, முடிவில் சொல்லுகிறாள்:—

द्वौ मासौ तेन मे कालो जीवितानुग्रहः कृतः ।
ऊर्ध्वं द्वाभ्यां तु मासाभ्यां ततस्त्यक्ष्यामि जीवितम् ॥ V. 33. 31, 32.

"ராவணன் எனக்கு இரண்டு மாதம் தவணை கொடுத்திருக்கிறான். அதற்குள் என்னை மீட்டுச் செல்லாவிட்டால் என் உயிரை மாய்த்துக் கொள்ளும்படியாகும்" என்று கூறியபின், ராமர் அனுப்பிய தூதரே அனுமார் என்று தெரிந்து, பின்வரும் பிரசித்தமான பழமொழியை அவள் கூறுகிறாள்:—

कल्याणी बत गाथेयं लौकिकी प्रतिभाति मे ।
एति जीवन्तमानन्दो नरं वर्षशतादपि ॥ V. 34. 6.

"ஆயுள் மட்டும் இருந்தால் நம்பிக்கையை இழக்கவேண்டாம். என்றாவது ஒரு நாள் சந்தோஷம் நிச்சயம் ஏற்படும். நான் உயிரோடு இருக்கப்போவதில்லை என்று நினைத்தேன். இப்பொழுது ராமரிடமிருந்து நீர் என்னைத் தேடி வந்திருக்கிறீர்."

சிறிது தூரம் மேலே சென்று பார்ப்போம். 'என் கதி என்ன ஆகப்போகிறதோ?' என்று சீதை மறுபடியும் நிராசையோடு வருந்துகிறாள். அனுமார் அவள் இருக்கும் இடத்தைக் கண்டு பிடித்தாலும் ராமர் தம் வானரசேனையோடு இலங்கையை அடைந்து யுத்தம் புரிந்து தன்னை மீட்டுச் செல்ல வேண்டுமே என்று கவலைப்படுகிறாள். "ராமரைப் பற்றியும் லக்ஷ்மணனைப் பற்றியும் சொல்லும். அவர்கள் என்ன செய்துகொண்டிருக்கிறார்கள்? ஏன் இன்னும் என்னை அழைத்துப் போக வரவில்லை? என்னைப்பற்றி அவர்களுக்குக் கவலை இல்லையா? இதற்குள் அவர்கள் வந்து என்னை மீட்டுச் சென்றிருக்க வேண்டுமே! நான் இங்கேயே மடிய வேண்டியதுதான்" என்று வருந்துகிறாள். பிறகு தன்னைத் தேற்றிக்கொள்வதற்குப் போல், சித்திரகூடத்தில் ராமர் பரதனைக் கேட்டது போலவே அநேகம் கேள்விகள் கேட்கிறாள். மேலும் கூறுகிறாள்:—

न चास्य माता न पिता न चान्यः स्नेहाद्विशिष्टोऽस्ति मया समो वा ।
तावत्त्वहं दूत जिजीविषेयं यावत्प्रवृत्तिं शृणुयां प्रियस्य ॥
इतीव देवी वचनं महार्थं तं वानरेन्द्रं मधुरार्थमुक्त्वा ।
श्रोतुं पुनस्तस्य वचोऽभिरामं रामार्थयुक्तं विरराम रामा ॥ V. 36. 30, 31.

"என்னைவிட ராமரின் அன்புக்கு உரியவள் வேறு ஒருத்தியும் இவ்வுலகில் இல்லை. தாய், தந்தை, சகோதரர் யாரையும் எனக்கு மேலாகக் கூறமுடியாது. அவரைப்பற்றிக் கேட்கும் வரையில்தான் நான் உயிரோடு இருப்பேன்" என்கிறாள். மேற்கண்ட சுலோகத்தில் 'ராம' என்னும் பதத்தைக் கவி வெகு சமத்காரமாக நான்கு தடவை உபயோகப்படுத்துகிறார். ராமரையும் லக்ஷ்மணனையும் நினைத்துக்கொண்டு, தலைமீது கைகூப்பியவண்ணம் அனுமார் சீதைக்குப் பதில் கூறுகிறார். சீதையை நினைத்து ராமர் வருந்துவதை மிகவும் அழகான சுலோகங்களில் வர்ணித்துக் கூறுகிறார்:—

तवादर्शनजेनार्ये शोकेन स परिप्लुतः ।
न शर्म लभते रामः सिंहार्दित इव द्विपः ॥
मलयेन च विन्ध्येन मेरुणा मन्दरेण च ।
दर्दुरेण च ते देवि शपे मूलफलेन च ॥
यथा सुनयनं वल्गु बिम्बोष्ठं चारुकुण्डलम् ।
मुखं द्रक्ष्यसि रामस्य पूर्णचन्द्रमिवोदितम् ॥
क्षिप्रं द्रक्ष्यसि वैदेहि रामं प्रस्रवणे गिरौ ।
शतक्रतुमिवासीनं नाकपृष्ठस्य मूर्धनि ॥
न मांसं राघवो भुंक्ते न चापि मधु सेवते ।
वन्यं सुविहितं नित्यं भक्तमश्नाति पञ्चमम् ॥
नैव दंशान् न मशकान् न कीटान् न सरीसृपान् ।
राघवोऽपनयेद्गात्रात् त्वद्गतेनान्तरात्मना ॥
नित्यं ध्यानपरो रामो नित्यं शोकपरायणः ।
नान्यच्चिन्तयते किञ्चित् स तु कामवशं गतः ॥
अनिद्रः सततं रामः सुप्तोऽपि च नरोत्तमः ।
सीतेति मधुरां वाणीं व्याहरन् प्रतिबुध्यते ॥
दृष्ट्वा फलं वा पुष्पं वा यद्वान्यत् सुमनोहरम् ।
बहुशो हा प्रियेत्येवं श्वसंस्त्वामभिभाषते ॥
स देवि नित्यं परितप्यमानस्त्वामेव सीतेत्यभिभाषमाणः ।
धृतव्रतो राजसुतो महात्मा तवैव लाभाय कृतप्रयत्नः ॥
सा रामसङ्कीर्तनवीतशोका रामस्य शोकेन समानशोका ।
शरन्मुखे साम्बुदशेषचन्द्रा निशेव वैदेहसुता बभूव ॥ V. 36. 37-47.

"வெறிகொண்ட சிங்கத்தினால் துரத்தப்பட்டுக் கல்லிலும் முள்ளிலும் அலைந்து அடிபட்டுத் துன்புற்றிருக்கும் யானைபோல ராமர் வருந்துகிறார். தங்கள் பிரிவினால் ஏற்பட்டிருக்கும் பெரும் சோகமே வெறிகொண்ட சிங்கமென அவரைத் துன்புறுத்துகிறது" என்கிறார் அனுமார். ஒவ்வொருவரும் தமக்கு மிகவும்

பிரியமாக உள்ளதன்மீது ஆணையிட்டுச் சொல்வது வழக்கம். அயோத்தியா காண்டத்தில், கைகேயி பரதன்மீதும், தசரதர் ராமர் மீதும் ஆணையிடுகிறார்கள். அனுமாரோ தாம் புசிக்கும் பழங்கள், வசிக்கும் மரங்கள், மலைகள் இவற்றின்மீது ஆணையிடுகிறார்.

''தங்கள் கணவரைச் சீக்கிரமே காண்பீர்கள். ஐராவதத்தின் மீது வீற்றிருக்கும் இந்திரன் போல் பிரகாசிக்கும் ராமரை வெகு சீக்கிரமே தாங்கள் காணப்போகிறீர்கள். அவர் என் முதுகில் வீற்றிருப்பார். ராமர் தங்களைப் பிரிந்ததிலிருந்து மாமிசம் உண்பதில்லை'' என்கிறார். ராமாயணத்தில் ராமர், சீதை, லக்ஷ்மணன் யாரும் மாமிசம் உண்ணாதவர் என்று கூறவில்லை. அதற்கு மாறாக அவர்கள் புலால் உண்பவர்களாகவே அநேக இடங்களில் தெரிய வருகிறது. அதனால்தான் அனுமார், ''அவர் மாமிசம் புசிப்பதில்லை; மது அருந்துவதில்லை; கீழே உதிர்ந்து கிடக்கும் காய்கனிகளைக் கொண்டு நாளுக்கு ஒருவேளை பசியாறுகிறார். அவர் மனம் தங்களிடத்திலேயே லயித்திருக்கிறது. வேறொன்றும் அவருக்கு நினைவில்லை. தங்களுடைய ஞாபகத்தில் அவர் மற்ற எல்லாவற்றையும் அடியோடு மறந்துவிடுகிறார். பூச்சிகள் மேலேறிக் கடித்தாலும் அவர் அவற்றைத் தள்ளுவதில்லை. அவை தம்மீது ஊர்ந்துகொண்டு இருப்பதைக்கூட அவர் கவனிப்பதில்லை. தங்கள் நினைவில் மூழ்கியவராக, அவை கடித்துத் துன்புறுத்துவதையும் அவர் அறியாதவராகவே இருக்கிறார். தங்கள் நினைவில் தங்களைப் பற்றிய சிந்தனைகளிலேயே ஈடுபட்டவராகச் சோகத்தில் ஆழ்ந்துள்ள அவருக்கு வேறொன்றை நினைக்கப் பொழுது ஏது? சாதாரணமாக அவர் தூங்குவதே இல்லை. அப்படிச் சிறிது கண்ணை மூடினால் உடனே 'சீதே' என்று கூப்பிட்டுக்கொண்டே விழித்துக்கொள்ளுகிறார். பெண்களுக்குப் பிரியமான எந்தப் பொருளைக் கண்டாலும் உடனே அவருக்குத் தங்கள் நினைவு வந்து நீங்கள் எதிரில் இருப்பது போலவே எண்ணிப் பேசத் தொடங்குகிறார். தங்களைத் திரும்பி அடைவதைப்பற்றிய முயற்சிகளையே சதா செய்துகொண்டிருக்கிறார்'' என்கிறார்.

இந்த இடத்தில் கவி மிகவும் இயற்கையாகவும் அழகாகவுமுள்ள உவமையை வழங்குகிறார். கணவரைப்பற்றி அனுமார் கூறியதைச் சீதை கேட்டதும், ராமர் தன் நினைவாகவே இருப்பதைப்பற்றி மனஆறுதல் அடைந்தபோதிலும், தன்னைப் பிரிந்து வருத்தத்தில் ஆழ்ந்து தன்னை மீட்கும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார் என்று அறிந்து துயரமும் கொள்ளுகிறாள். மேகத்தினால் மறைக்கப்பட்ட சரத்காலச் சந்திரன் போல் அவள் முகம் அப்பொழுது இருந்தது என்று கவி அழகாக வர்ணிக்கிறார்.

அனுமார் தமக்குத் தாமே யோசித்ததை இப்பொழுது மொழி பெயர்த்துச் சொல்லுகிறேன். சுந்தரகாண்டத்தில், அனுமார்

யோசனை செய்ததை வர்ணிக்கும் திறமையில் கவி தம்மையே மிஞ்சிவிட்டார் என்று சொல்லலாம். அந்தச் சமயத்தில் அனுமாரின் மனநிலையைப் புரிந்துகொண்டு பார்த்தால் இன்னும் நன்றாக நாம் அநுபவிக்க முடியும். முதலில் ஓர் எண்ணம் தோன்றி அது முழுவதும் மனத்தை ஆட்கொண்டுவிடும். பிறகு அதை விட்டு வேறோர் எண்ணம் தோன்ற, அதையே மனம் தொடர்ந்து செல்லும். ஒவ்வோர் எண்ணத்தையும் பின்பற்றிக் கவி வர்ணித்துக் கூறுவது மிகவும் ரசமானது. பதின்மூன்றாம் ஸர்க்கத்தைப் பார்ப்போம்.

கோட்டை மதில்மீது சென்றபடியே அனுமார் பின்வருமாறு யோசிக்கிறார்: 'என் முயற்சி அவ்வளவும் வீணாகிவிட்டது. கோட்டை கொத்தளங்கள், நதி, வாய்க்கால், சிறு தடாகங்கள், தோட்டங்கள் எல்லாம் தேடியாயிற்று. ஓர் இடமும் மீதி இல்லை. இங்கேதானே சீதையைச் சிறை வைத்திருப்பதாகச் சம்பாதி சொன்னார்? பிரம்மஞானியான ஜனகரால் வளர்க்கப் பெற்றுப் புகழ் பெற்ற இக்ஷ்வாகு வம்சத்தில் வாழ்க்கைப்பட்ட அயோனிஜையான சீதை ஒருகால் வேறு கதியில்லாமல் ராவணனுக்கு வசமாகியிருப்பாளோ! ராமருடைய பாணங்களுக்குப் பயந்து ஒருவேளை ராவணன் தன் கைகளினின்றும் அவளைக் கீழே நழுவ விட்டிருப்பானோ! மேலே போகும்பொழுது கீழே கொந்தளிக்கும் கடலைக் கண்டு கேவலம் பயத்தினால் மிரண்டு அவள் உயிர் துறந்திருப்பாளோ! ராவணனுடைய முரட்டுக் கைகளில் சிக்கி ஒருகால் பெரிதும் துன்புற்றிருப்பாள். விமானத்தில் செல்லும்பொழுது திடீரென்று குலுக்கியதில் ஒருவேளை கடலில் விழுந்திருப்பாளோ என்னவோ! யாருக்குத் தெரியும்? தன் பலவந்தங்களுக்கு உட்படாமலிருக்கவே அந்த ராக்ஷசன் அவளைக் கோபத்துடன் ஒருவேளை கொன்று தின்றிருக்கவும் கூடும். அவன் தின்னாவிட்டாலும் அவனது அந்தப்புரத்திலிருக்கும் அரக்கியர் பொறாமைவெறி கொண்டு அவளைப் பக்ஷித்திருக்கலாம் என்றும் தோன்றுகிறது. இல்லை, பூர்ண சந்திரனையும் செந்தாமரையையும் பழிக்கும் ஸ்ரீராமரின் முகமண்டலத்தைத் தியானித்த வண்ணமே ஒருகால் அவள் ஆவி பிரிந்திருக்கும். உயிர் துறக்கும்பொழுது, 'ஹா ராமா! லக்ஷ்மணா! ஹா அயோத்தியே!' என்றெல்லாம் வாய்விட்டுப் புலம்பியிருப்பாள். இல்லை, ஒருவேளை அவள் உயிருடனேயே கூண்டிலடைக்கப்பட்ட கிளிபோல் 'ராமா, ராமா!' என்று கத்திக் கொண்டும் இருக்கலாம்.

'ஜனகருடைய பெண், ஸ்ரீராமரின் மகிஷி, கற்புக்கரசி, சீதாதேவிக்கு நேர்ந்த கதி என்ன? ஒன்றுக்கும் அஞ்சாத ஒரு ராக்ஷசனுடைய கையில் அல்லவா சிக்கியிருக்கிறாள்? ஸ்ரீராமன்

கவலையோடு கேட்கும் கேள்விக்கு என்ன பதில் சொல்லுவேன்? அவளைக் காணவில்லையே! எங்கே மறைத்து வைக்கப்பட்டிருக்கிருளோ? அல்லது இறந்தே போய்விட்டாளோ? ஒன்றும் தெரியவில்லையே! இதைப் போய்ச் சொல்லுவதா? அல்லது பேசாமலே இருந்துவிடுவதா? இந்த இக்கட்டான நிலைமையில் என்ன செய்வது? கிஷ்கிந்தைக்குத் திரும்பிப் போய், 'கடலைத் தாண்டி இலங்கைக்குச் சென்றதெல்லாம் நிஷ்பலமாயிற்று' என்று கூறினுல், சுக்கிரீவன் என்னைப்பற்றி என்ன நினைப்பான்? சோகத்தில் ஆழ்ந்திருக்கும் அந்தச் சகோதரர்கள்தாம் என்ன செய்வார்கள்?

'என்னை எதிர்பார்த்துக் காத்துக் கிடக்கும் வானரர்களுக்கு என்ன பதில் சொல்லுவேன்? நான் போய்ச் சீதையைக் காணவில்லை என்று கூறிய க்ஷணமே ராமர் துயரம் தாங்காமல் உயிர் துறந்துவிடுவார். ஒரு நிமிஷங்கூட அவரால் அதற்குப் பிறகு உயிர் தரித்திருக்க முடியாது. மிகவும் இளகிய நெஞ்சத்தினனுன லக்ஷ்மணனும் உயிரை விட்டுவிடுவான். ராமரும் லக்ஷ்மணனும் உயிரிழந்த செய்தியைக் கேட்டதும் பரதனுடைய உயிர் பிரிந்துவிடும். பரதன் இறந்த க்ஷணமே சத்ருக்கினனும் பிராணனை விட்டுவிடுவான். தாய்மார் கௌசல்யை, சுமித்திரை, கைகேயி ஆகிய மூவரும் அப்புறம் ஜீவித்திருப்பார்களா? ராமர் தனக்குச் செய்த உபகாரத்தையும் அதற்குப்பதில் தான்செய்யவேண்டியதையும் எண்ணி இந்தப் பெரும் துக்கத்தைத் தாங்காமல் சுக்கிரீவனும் உயிர் துறந்துவிடுவான். அவனுடைய ஆசைக்காதலி ருமாவும் கணவனை இழந்து வைதவ்யக் கோலத்தைத் தாளாமல் மாண்டுவிடுவாள். வாலி இறந்த துக்கத்திலிருந்து இன்னும் மீளாத ராணி தாரையும் அல்லவா உயிர் துறப்பாள்? தாய் தந்தை சிற்றப்பன் எல்லாரையும் இழந்துவிட்டு, பாவம்! அங்கதன் மட்டும் எவ்வாறு உயிர்வாழ்ந்திருப்பான்? சுக்கிரீவனுல் நன்கு பரிபாலிக்கப்பட்டிருக்கும் வானரர்களும் அரசனை இழந்து கதியற்றவர்களாக முட்டி மோதிக்கொண்டு உயிரை விடுவார்கள். காடு மலைகளில் ஒன்றுசேர்ந்து இனி அவர்கள் உற்சாகமாய் எங்கே விளையாடிப் பொழுது போக்குவார்கள்? ஆயிரக் கணக்காய் அவர்கள் தங்கள் பெண்டு பிள்ளைகளுடன் மலையுச்சியினின்று பெரும் பாறைகள்மீது விழுந்தும், விஷத்தைக் குடித்தும், தீக்கிரையாகியும், பட்டினி கிடந்தும், கூரிய வாளைப் பாய்ச்சிக்கொண்டு உயிரை விடுவார்கள். நான் திரும்பிக் கிஷ்கிந்தைக்குச் சென்றதும் கணக்கற்ற சாவுகள் அல்லவா ஏற்படும்? அயோத்தி அரசகுடும்பம் முழுவதும் அழிந்துவிடுமே! வானர வர்க்கமே ஒழிந்து போய்விடும்.

'சீதாதேவியைக் காணுமல் நான் திரும்பிக் கிஷ்கிந்தைக்குப் போகாமல் இருக்கலாம், அரசன் சுக்கிரீவனைப் பார்க்காமல் இருக்கலாம். நான் வருவதை எதிர்பார்த்து ராம லக்ஷ்மணர்கள்

உயிர் தரித்திருப்பார்கள். என்னுடன் வந்த வானரர்களும் உயிரோடு இருப்பார்கள். எடுத்த காரியத்தில் வெற்றி பெறுமல் இருப்பதைவிட, காஷாயத்தைத் தரித்து, மரத்திலிருந்து தாமாக உதிரும் காய்கனிகளைத் தின்று உயிர்வாழும் சந்நியாசியாகி விடுவதுதான் நல்லது. அல்லது, கடற்கரையில் மரங்களடர்ந்த பிரதேசத்தில் அக்கினிப் பிரவேசம் செய்துவிடுகிறேன். அல்லது, இந்த உடலை நரிகளுக்கு இரையாக்கிவிடுகிறேன். ஏன் இப்படியெல்லாம் யோசனை செய்ய வேண்டும்? என்னைப் போன்ற துர்க்கதி அடைந்தவன் ஆழ்ந்த நீருள் முழுகிச் சாவதுதான் உத்தமம் என்று பெரியோர் சொல்லியிருக்கிருர்கள் அல்லவா?

'ஆகா! முதலில் எல்லாம் எவ்வளவு வெற்றிகரமாகத் தோன்றிற்று! ஓர் உயர்ந்த புகழ்மாலை அல்லவா என்னை அலங்கரிக்கப் போகிறதென்று நினைத்தேன்! சீதாதேவியைக் காணுமல் எல்லாம் அடியோடு தீர்ந்து, முடிவிலாத் துன்பத்துக்கு ஆளாக்கிவிட்டதே! அடா! இதென்ன அசட்டுத்தனம்! மனம் ஏமாற்றத்துக்கு ஆளானுல் அப்புறம் எல்லாத் துரதிருஷ்டங்களும் ஒன்றன்பின் ஒன்ருக நேரும். வெற்றி வேண்டும் என்ருல் உயிருடன் இருக்க வேண்டும். பிராணனை விடாமலிருந்தால் நிச்சயம் வெற்றி பெறுவேன். என் தைரியம் பலம் எல்லாம் எங்கே போயின? இந்த ராவணனை ஒழித்துவிடுகிறேன். சீதாதேவியைக் கொன்றிருந்தால் அதற்குப் பழிவாங்கிவிடுவேன். அப்படி இல்லையென்ருல் அவனைச் சிறைப் பிடித்து ராமரிடம் கொண்டுபோய் விடுகிறேன். அது அக்கினி பகவானுக்கு நரபலி கொடுத்தது போல ஆகும். ஆயினும் ஏன் இப்படி வேண்டாத விதமெல்லாம் சிந்தனைக்கு இடம் கொடுக்க வேண்டும்? சீதாதேவி இருக்குமிடத்தை இன்னும் தேடிப் பார்ப்பேன். வெற்றி காணும் வரையில் தேடுவதை நிறுத்தலாகாது.

'இப்பொழுது வேறு ஏதோ ஓர் எண்ணம் என் கலங்கிய மூளையில் உதிக்கிறது. சீதை இங்கிருப்பதைச் சம்பாதி கூறிய வுடனே கிஷ்கிந்தைக்குச் சென்று ராமரை இங்கு அழைத்து வந்திருந்தால்? அவர் எவ்வளவோ வீரச் செயல்கள் புரியலாம். ஆனுல் சீதையைக் காணவில்லையென்ருல் அவரது கோபாக்கினி கிளம்பி எல்லா வானரர்களையும் எரித்துவிடுமே! நான் பேசாமல் இங்கேயே இருந்து என் வாழ்நாளைத் தவத்தில் கழிக்க வேண்டியதுதான். அதனுலேயாவது என் நிமித்தமாக வானர ஜாதி அழியாமல் மிஞ்சி நிற்கும். ஆகா! இதோ இங்கே பெரிய மரங்களடர்ந்த அசோகவனம் ஒன்று தென்படுகிறது. இவ்விடத்தை நான் தேடவில்லை. இப்பொழுது நான் தேடிப் பார்க்கிறேன். எனக்கும் மனத்தில் உற்சாகம் ஏற்படுகிறது. வசுக்கள், ருத்திரர்கள், ஆதித்தியர்கள், அசுவினிதேவர்கள், மருத்துக்கள் எல்லோருக்கும் அஞ்சலி செய்துவிட்டு இதில் பிரவேசிக்கிறேன். யாராவது ராக்ஷசர்கள்

வந்தால் அவர்களைத் தொலைத்துவிடுவேன்! ராமபத்தினியைக் கண்டுபிடித்து அவளை, ஒரு ரிஷிக்கு அவர் தவத்தின் பலனை அளிக்க வரும் தேவதை போல், ராமரிடம் கொண்டுபோய்ச் சேர்ப்பேன்.

'ஆகா! நல்ல யோசனை! இதோ சென்று பார்ப்பேன். ராமா! லக்ஷ்மணா! உங்களை நமஸ்கரிக்கிறேன். சீதாதேவியே! உங்களுக்கும் என் நமஸ்காரம். ருத்திரன், இந்திரன், யமன், வாயு, சந்திரன், அக்கினி, மருத்துக்கள் முதலிய தெய்வங்களே! உங்கள் எல்லாரையும் சாஷ்டாங்கமாய்விழுந்து பணிகிறேன். சுக்ரீவ மகாராஜனே! தங்களையும் மறக்கவில்லை. என்னை ஆசீர்வதியுங்கள். உங்கள் எல்லாருடைய ஆசிகளுடன், நன்ருய்ச் சம்ரக்ஷிக்கப்பட்டிருக்கும் இந்த வனத்தில் பிரவேசிக்கிறேன். என் தந்தையான வாயு பகவான் இங்கே மிருதுவாகச் சஞ்சரிக்கிருர். ராவணன் பார்வையில் அகப்படாமலிருக்க, ராம காரியத்திற்காக, மிகச் சிறிய உருவத்தை அடைகிறேன்.

'சீதாதேவியின் அங்க அடையாளங்களை ராமர் எனக்குத் தெளிவாக எடுத்துக் கூறியிருக்கிருர். அவளைப் பார்த்ததும் கண்டுபிடித்துவிடுவேன். பூர்ணசந்திரனைப் போலப் பிரகாசிக்கும் அவள் முகம். அழகிய நாசியும், முத்துப் போன்ற பற்களும், தாமரையிதழ் போன்ற கண்களுமாக, இனிய புன்னகையுடன் விளங்கும் அவளது முகம். அதைத் தரிசிக்கும் பாக்கியம் எனக்குக் கிட்டுமா? அந்த நீசஞன நிசாசரன் வஞ்சகமாகச் சந்நியாசி வேஷம் தரித்து அவளைப் பலாத்காரமாகத் தூக்கிவந்து இங்கு மறைத்து வைத்திருக்கிருன் அல்லவா? அந்தத் தெய்விக உருவத்தைக் காணும் பாக்கியம் இந்தக் கண்களுக்குக் கிடைக்குமா?' என்றெல்லாம் அனுமார் சிந்தனையில் ஆழ்கிருர். அவருடைய கவலைகள் சிறப்பான உருவத்தில் விளங்கும் சுலோகங்கள், இந்தக் காண்டத்திலேயே வேருேர் இடத்தில் வருகின்றன.

அனுமார் தம்மைக் கொல்லுவதற்கென்று வாலில் வைத்த நெருப்பைக் கொண்டே இலங்கையைக் கொளுத்திஞரே; அந்தத் தமது சாமர்த்தியத்தைக் குறித்து அவர் தாமே வியந்துகொள்ளுகிருர். ஊரை முழுவதும் கொளுத்திய பிறகு வாலைக் கடலில் தோய்த்து நெருப்பை அணைக்கிருர். இலங்கையைக் கொளுத்திய பிறகுதான், யோசனையில்லாமல் தாம் செய்ததன் விளைவைப் பற்றி அவருக்குக் கவலை எழுகிறது.

तत्र देवाः सगन्धर्वाः सिद्धाश्च परमर्षयः ।
दृष्ट्वा लङ्कां प्रदग्धां तां विस्मयं परमं गताः ॥ V. 54. 50.

தேவர் சித்தர்கள் பரம ரிஷிகள் ஆகியோர் இலங்கை தீக்கிரையானதைப்பற்றி ஆச்சரியமுற்றனரே தவிர ஒருவரும் சந்தோஷித்

ததாகக் கவி கூறவில்லை. தேவர்கள் இந்த நாசத்தைக் கண்டு சந்தோஷித்தார்கள் என்றால் அது அவர்களுக்குத் தகுமா?

तस्याभूत् सुमहांस्त्रासः कुत्सा चात्मन्यजायत ।
लङ्कां प्रदहता कर्म किंस्वित् कृतमिदं मया ॥ V. 55. 3.

தாம் செய்த காரியத்தைக் கண்ணுற்றதும் அனுமாருக்கு மனத்தில் ஓர் அச்சம் எழுந்தது. தம்மீதே அவருக்குப் பெரு வெறுப்பு உண்டாயிற்று. 'மனிதனுக்குக் கோபவெறி ஏற்பட்டால் என்னவெல்லாம் நடக்கின்றன! அவன் ஏதேதோ பேசி ஏதேதோ செய்யத் தொடங்குவான். மகான்கள் கோபத்துக்கு வசமாக மாட்டார்கள். அதற்கு வசமாகாமலே எதிர்த்துச் சமாளித்துக்கொள்வார்கள். நான் இப்பொழுது அப்படியல்லவா செய்ய வேண்டும்? கோபவெறியில் மனிதன் செய்யாத தவறு இல்லை. கோபத்துக்கு அடிமையானவன் பெற்றோரையே கொலை செய்துவிடுவான். குருவையும் கொன்றுவிடுவான். சாதுக்களைத் தூற்றுவான். என்ன பேசலாம், என்ன பேசக்கூடாது என்ற விவஸ்தையெல்லாம் கோபம் கொண்டவனுக்கு இல்லை. செய்யத் தகாத காரியம், பேசக்கூடாத பேச்சு என்பது எதுவுமே கோபத்துக்கு இலக்கானவனுக்குக் கிடையாது. அவன் எதையும் செய்வான். எதையும் பேசுவான். பாம்பு சட்டையை உரித்தெறிவது போலக் கோபத்தையும் தலைதூக்கவொட்டாமல் தன் பொறுமையினால் அடக்குகிறவன்தான் மனிதன். மனிதன் என்ற பெயருக்கு அவனே ஏற்றவன்' என்று இம்மாதிரியெல்லாம் அனுமார் சிந்திக்கிறார்.

மேலும் அவர் நினைக்கிறார்:— 'ஆகா! நான் ஒரு பெரும்பாவி! இலங்கை முழுவதும் எரிந்து போயிற்று என்றால் சீதாதேவியும் எரிந்து போயிருப்பாளே! சீதாதேவியின் க்ஷேமத்திற்காக அல்லவா இவ்வளவு முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன? இலங்கை எரியும்பொழுது அவளைக் காக்கத் தவறிவிட்டேனே! தீ வைப்பது எவ்வளவு சுலபமாக இருந்தது! கோபத்தில் அடிவேரையே அல்லவா பொசுக்கிவிட்டேன்! இலங்கை முழுவதும் எரிந்து சாம்பலாகக் காட்சியளிக்கிறதே! சீதை மட்டும் தீக்கிரையாகாமல் இருப்பாளா? என் தவற்றினால் இந்த விபத்து நேர்ந்திருந்தால் நான் இங்கேயே மடிந்துபோவதுதான் நல்லது. எப்படி என் உயிரை மாய்த்துக்கொள்வது? இந்தப் பெரு நெருப்பில் நானும் விழுந்து இறக்கட்டுமா? சமுத்திரத்தில் படவாக்கினிக்கு இரையாகிவிடுகிறேன்; அல்லது கடலிலுள்ள ஜலஜந்துக்களுக்கு என் உடல் உணவாகட்டும். மற்ற வானரர்களையெல்லாம் நான் எப்படித் திரும்பிப் போய்ப் பார்ப்பேன்?

'அந்த உத்தமச் சகோதரர்களின் நம்பிக்கையையெல்லாம் பாழடித்துவிட்டு எப்படித் திரும்பி அவர்கள் முகத்தில் விழிப்பேன்?

கோபத்துக்கு ஆளாகி என்னை மிகவும் கேவலமாக அல்லவா அடித்துக்கொண்டுவிட்டேன்? இந்த ரஜோகுணமானது என்னை முழுக்க ஆட்கொண்டு, தேவியைக் காக்க இயலாமற் செய்துவிட்டதே! அவள் இறந்துவிட்டாள் என்ற செய்தி கேட்டதும் ராம லக்ஷ்மணர் உயிரை விட்டுவிடுவார்களே! அதைக் கண்டு சுக்கிரீவன் தன் பந்துக்களுடன் உயிரை மாய்த்துக்கொள்வான். இந்தச் செய்தி பரதனையும் கொன்றுவிடும். அதற்குப் பிறகு சத்ருக்கினன் உயிரோடு இருப்பதேது? இக்ஷ்வாகு வம்சம் முழுவதும் அழிந்து போய்விட்டால் உலகமே அல்லவா மீளாத அந்தகாரத்தில் ஆழ்ந்துவிடும்! இவ்வளவு துன்பங்களுக்கும் மூலகாரணம் யார்? நான் அல்லவா? அறநெறியிற் செல்லும் வகையறியாமல் அசுரத் தனமான கோபத்தை அடக்கவும் சக்தியற்றிருப்பவன் நான்.'— இவ்விதம் அனுமார் துக்கமயமான சிந்தனைகளுக்கு ஆளாகி வருந்தும்பொழுது, சுபமான சகுனங்கள் ஏற்படுகின்றன. ஆயினும் அவற்றை அறியாமலே அவர் வேறொரு விதமான எண்ணத்தில் ஈடுபடுகிறார்:—

'சீசீ! எல்லாம் அவ்வளவு மோசமாகிவிடாது. கற்புக்கரசியான சீதாதேவியை அவளது கற்பே ரக்ஷிக்கும். அவளுக்கு நல்ல காலம் கிட்டியிருக்கிறது. உயிரை விடமாட்டாள். அக்கினியே அக்கினியை எரித்துச் சாம்பலாக்குமா? புருஷோத்தமரான ராமருடைய மனைவி தன் இணையற்ற கற்பின் மகிமையால் ரக்ஷிக்கப்பட்டவள். எவ்வாறு நெருப்பு அவளை ஸ்பர்சிக்கத் துணியும்? ஆம், அக்கினி என்னை ஒன்றும் செய்யவில்லையே! அக்கினி பகவான் தம் சகஜமான காரியத்தையே மறந்துவிட்டாரே! ராமருடைய பிரபாவமும் சீதாதேவியின் மாசில்லாத கற்புமே யாவற்றிற்கும் காரணம். ராமருடைய உள்ளக் கோயிலில் குடிகொண்டிருப்பவள் அவள். பரதன், லக்ஷ்மணன், சத்ருக்கினன் ஆகிய மூன்று சகோதரர்களாலும் தெய்வமாகப் போற்றி வணங்கப்பெறுபவள். அவளுக்கு எவ்விதம் தீங்கு உண்டாகும்? அனைத்தையும் எரித்துச் சாம்பலாக்கும் நெருப்பு, தேவியின் கைங்கரியத்தில் ஈடுபட்டவன் என்பதற்காக என்னை ஒன்றும் செய்யாமலிருக்கும்பொழுது, எப்படி அவளைத் தீண்டும்?

'ஆகா! இதை எப்படி மறந்துபோனேன்? ராமருக்குச் சகாயம் புரிவதற்காகச் செல்லுகிறேன் என்பதற்காக, மைனாக பர்வதம் கடலிலிருந்து எழும்பி எனக்கு அதிதி ஸத்காரம் செய்தது அல்லவா? அவருடைய அன்புக்கு உரியவள் மனம் வைத்தால் தன் ஒப்பற்ற கற்புநெறியின் பலத்தைக்கொண்டு அக்கினிபகவானையும் அல்லவா எரித்துவிடக்கூடும்! அவளெதிரில் அவர் சக்தி எம்மாத்திரம்! ஆகா! ஏதோ அசரீரி வாக்குக் கேட்கிறதே: ''இலங்கை முழுவதும் மாடமாளிகை கூடகோபுரங்களுடன்

எரிந்து சாம்பலாகிவிட்டது. ஜானகிதேவியை மட்டும் நெருப்பு ஒன்றும் செய்யவில்லையே! அதற்காக, தெய்வத்தைப் போற்று கிறோம்.'' '

இந்தச் சொற்களைக் கேட்டதுமே அனுமாரின் ஆனந்தத்துக்கு எல்லையில்லை.

ततः कपिः प्राप्तमनोरथार्थस्तामक्षतां राजसुतां विदित्वा ।
प्रत्यक्षतस्तां पुनरेव दृष्ट्वा प्रतिप्रयाणाय मतिं चकार ॥ V. 55. 36

சீதாதேவிக்கு ஒரு தீங்குமில்லை என்பதை அறிந்து, தம் வெற்றி யினால் ஏற்பட்ட பெருங் களிப்புடன் அனுமார் மீண்டும் ஒரு தடவை அவளைத் தரிசித்துவிட்டுச் செல்லலாமென்று நிச்சயிக் கிறார். சீதாதேவி அக்கினிபகவானைக் குறித்துச் செய்த பிரார்த் தனைகளே தம் உயிரையும் காத்தன என்பதை அனுமார் பின்பு அறியப்போகிறார். 'சீதோ பவ ஹநூமத:' என்று முடியும் நான்கு சுலோகங்களினால் சீதாதேவி அக்கினிபகவானைப் பிரார்த்திக்கிறாள்.

# 22

## தீய சக்தியின் வடிவம் - ராவணன்

இப்பொழுது ராமாயணத்திலுள்ள ஒரு பெரிய பாத்திரத்தை எடுத்துக் கொள்வோம். ஸ்ரீராமருக்கு நேர் எதிராக உள்ள பாத்திரம் ராவணன். இருவரும் ஒருவருக்கு மற்றவர் ஏற்றத் தாழ்வு அற்றவர்களாகவே இருக்கின்றனர். சக்தி என்பது வேறு, நற்குணம் என்பது வேறு. இரண்டும் எப்பொழுதும் சேர்ந்து இருப்பதில்லை. சிலரிடம் இவை சமமாக விளங்குகின்றன. இந்த இரண்டு குணங்களும் சேர்ந்து இருப்பவர்கள்தாம் உலகத்தைக் காப்பவர்களாகவும் ஆசார்யர்களாகவும் உள்ளவர்கள். ஆனால் அத்தகையவர் மிகச் சிலரே இருப்பர். நல்ல குணத்தோடு சேராத சக்தியை மட்டும் பெற்ற வகுப்பைச் சேர்ந்தவன் ராவணன். சக்தி அனைவரையும் ஈர்க்கும் தன்மை வாய்ந்தது. உலகில் அதைக் கண்டு மயங்காதவர் இல்லை. கொலை, களவு போன்ற தீச்செயல்களைப் பற்றிய பயங்கர நவீனங்களைக் கணக்கில்லாமல் படிக்கும் அமெரிக்க மக்கள் அந்த உற்சாகத்தை நன்கு அறிவார்கள். பெருங் குற்றமே என்றாலும் மிகப் பெரியதாக இருந்தால் மனத்தைக் கவரும் தனிச் சக்தி அதற்கு உண்டு அல்லவா? எங்கும் பரவி வரும் சினிமாவினால் விளையும் கெடுதல்களில் இது ஒன்று என்று கருதப் படுகிறது. பயங்கரமான காரியங்களின் விளைவுகளும் முடிவுகளும் உள்ள கதைகள், நவீனங்கள், கொலைகள், களவுகள், போலீசார் உளவு கண்டுபிடிக்க முடியாதபடி வெகு சாமர்த்தியமாகத் திட்டமிட்டு நடத்தும் கள்ளக் கடத்தல்கள் முதலிய தீச் செயல்கள் மனத்துக்குத் தனிக் கவர்ச்சியையும் மோகத்தையும் உண்டு பண்ணுகின்றன. என்னதான் தவறு என்று மனச்சாட்சி கண்டித்தாலும் அத்தகைய செயல்களைப் பார்ப்பதிலும் கேட்பதிலும் நமக்கு உள்ள உற்சாகம் குறைவதில்லை. கெடுதலையே விரும்பாத நல்ல குணமுடையவர்கள்கூட இத்தகைய புத்தகங்களை எழுதிய ஆசிரியர்களை வைதுகொண்டே அவற்றைத் தவறாமல் படிக்கிறார்கள்.

ராவணன் உலகில் காணாத மிகப் பெரிய கொடியவன். ஆயினும் அவனிடம் சில மேன்மையான குணங்களும் இருந்தன

என்பதை நாம் மறுக்க முடியாது. அபூர்வமான புத்தியும் சக்தியும் இல்லாதவன் பெருங் குற்றவாளியாகவும் இருக்க முடியாது. ராவணனுடைய குணத்தை ஆராய்ந்து பார்த்து, அவனிடமுள்ள உயர்வான அம்சங்கள் என்னவென்று காண்போம். அதற்குள் ஒரு விஷயத்தை நாம் கவனிக்க வேண்டும்: ராமரும் ராவணனும் நேர் விரோதமான இயல்புள்ளவர்கள். பேரியல்பும் நல்ல மனமும் ஒருங்கே படைத்த அபூர்வ குணம் உள்ளவர் ராமர். ராவணன் பெரும் சக்தி படைத்தவன்; ஆயினும் நற்குணமில்லாதவன். அது மட்டுமல்ல; ராமர் அவதரிப்பதற்கு முன்பே ராவணன் தன் சக்தியின் உச்ச நிலையை அடைந்து விட்டான். எவ்வளவோ ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு, அவனுடைய தீய செயல்களைத் தாங்க முடியாமல், தேவர்கள் ரிஷிகள் முதலியோர் மகாவிஷ்ணுவைச் சரணடைந்து, ராவண னிடமிருந்து தம்மைக் காக்க வேண்டிக் கொள்ளுகின்றனர். அவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கியே பகவான் தம்மை நான்கு அம்சங்களாகப் பிரித்துக்கொண்டு பூவுலகில் அவதரிக் கிறார். ஆகவே வயதை எண்ணிப் பார்க்கும்பொழுது ராமர் ராவணனைவிட வயதில் எவ்வளவோ சிறியவர். வால்மீகி கொடுத்திருக்கும் கணக்கை வைத்துக்கொண்டு பார்த்தால், ராவணனோடு நடந்த மகா யுத்தத்தின் பொழுது ராமருக்கு நாற்பது வயதுக்குள் இருக்கலாம் என்று தோன்றுகிறது.

ராவணன் தன் கடுந் தவத்தினால் தேவர்களைத் திருப்தி செய்து, அவர்களிடமிருந்து அநேகம் சக்திகளைப் பெற்று அவற்றைத் தீய வழியில் உபயோகித்து மிகக் கொடியோன் ஆகவே, அவனை ஒழிக்க வேண்டியது அவசியமாகிறது. மேலும், மற்றொரு விசேஷம் என்னவெனில், ராமாயணத்தில் அவன் செயற் படுவது பன்னிரண்டு மாதங்களுக்குத்தான். அந்தக் குறைந்த சமயத்திற்குள் அவன் மேலும் மேலும் துஷ்கிருத்யங்கள் புரிந்து அவற்றின் எல்லையை அடைந்துவிடுகிறான். ராவணனோடு ஒப்பிடும்பொழுது, ராமரே சிறுகுழந்தை என்றால் சீதையை என்னவென்று சொல்வது? அவள் இன்னும் சிறிய குழந்தையே தான் அல்லவா? ஆயினும் ராவணன் அவளைக் கண்டு மோகித் ததன் துன்ப விளைவுதான் ராமாயணக் கதை. ஏறக்குறைய இருபதினாயிரம் வயதுள்ள ஒருவன் இருபது இருபத்தைந்து வயதுள்ள ஒரு சிறு பெண்ணைக் காதலித்ததை வைத்துக் கதை வளர்ந்துகொண்டு போகிறது. இது பெரிய விந்தை அல்லவா? ஆனால் யாரும் இந்த விநோதங்களைக் கவனித்ததாகத் தெரியவில்லை. ராவணனைத் தமக்குச் சரியான வயதும் இயல்பும் உள்ளவனாகவே மதித்து ராமரும் சீதையும் நடந்துகொள்ளுகிறார்கள். இது ஒரு நூதனமான விஷயம்தான். ராவணனுடைய எதிரியான ராமர்

அவதரிப்பதற்குள் அவனுடைய துஷ்கிருத்யங்கள் தமது உச்ச நிலையை அடைய வேண்டியது அவசியமாக ஒருகால் இருக்கலாம். ஆயினும், வயதில் முதிர்ந்தவனான ஒருவன் மிகவும் சிறிய பெண் ஒருத்தியைக் காதலித்த கதைதான் ராமாயணத்தில் முக்கியம் என்பது கவனிக்கத் தக்கது.

எவ்வளவு உன்னத சிருஷ்டியாக ராவணனுடைய பாத்திரத்தை அமைத்திருக்கிறார் கவி என்பதை இப்பொழுது பார்ப்போம். ராவணன் கடுந்தவங்கள் இயற்றிப் பெற்ற பெரும் சக்திகளைக் கவனிப்போம். அவை மனிதர்களையும் ரிஷிகளையும் மட்டுமே வசப்படுத்தக் கூடியவை என்பதல்ல; தேவர்களைக்கூட வெல்லக் கூடியவை. இயற்கையையே அடக்கியாளும் சக்தியுள்ளவை. சீதைக்காக ராவணனுடன் போரிட்டபொழுது ஜடாயு கூறிய வார்த்தை சிறிது விநோதமாக இருக்கிறது. ஜடாயு ராவணனை நோக்கி, "எனக்கு வயதாகிவிட்டது. நீயோ இன்னும் வாலிபனாகவே இருக்கிறாய்" என்கிறார். (தமக்கு அறுபதினாயிரம் வயதாகிறது என்று ஜடாயு கூறியதை நாம் ஞாபகப் படுத்திக்கொள்ள வேண்டும். ராவணனுக்கு இருபதினாயிரம் வயது என்றால் அப்பொழுது ஜடாயுவும் அவனை வாலிபன் என்று கூறுவது நியாயம்தானே!)

षष्टिर्वर्षसहस्राणि मम जातस्य रावण ।
पितृपैतामहं राज्यं यथावदनुतिष्ठतः ॥
वृद्धोऽहं त्वं युवा धन्वी सशरः कवची रथी ।
तथाप्यादाय वैदेहीं कुशली न गमिष्यसि ॥
न शक्तस्त्वं बलाद्धर्तुं वैदेहीं मम पश्यतः । III. 50. 20-22.

"அறுபதினாயிரம் வருஷம் இந்தப் பறவையுலகில் நான் ஜீவித்து வருகிறேன். எனக்கு வயதாகிவிட்டது. உனக்கு இன்னும் இளமைப்பருவம் நீங்கவில்லை. உடலில் இளமையின் பலம் இருக்கிறது. வில்லேந்திப் போர்புரியும் திறமையுள்ளவனாக இருக்கிறாய். பெரிய ரதத்தில் வீற்றிருக்கிறாய். என்னிடம் இவற்றில் ஏதுமில்லை. ஆயினும் சீதாதேவியை நீ தூக்கிச் செல்வதைப் பார்த்துக்கொண்டு வாளா இருக்கமாட்டேன். என் மூச்சு இருக்கும்வரையில் இந்த அடாத செயல் நிகழ முடியாது" என்கிறார்.

ராவணன் செய்த தவத்தைப்பற்றிக் கொஞ்சம் கவனிப்போம். புராணங்களில்கூடக் கேட்டிராத விதத்தில் அவன் கடுந்தவம் செய்தவன். பிறக்கும்பொழுதே பத்துத் தலைகளோடு பிறந்தவன். ஒவ்வோர் ஆயிரவருஷமும் தவத்தின் முடிவில் தலைகளில் ஒன்றைக் கொய்து ஹோமம் செய்தவன். இவ்வாறு ஒன்பது தலைகளை ஹோமம் செய்து, பதினாயிரம் வருஷத் தவத்தின் இறுதியில்

பத்தாவது தலையை வெட்டி அக்கினியில் ஹோமம் செய்யக் கிளம்பியதும், பிரம்மதேவர் பிரசன்னமாகி, அவனுக்கு என்ன வேண்டுமென்று கேட்கிறார். அமரவாழ்வை ராவணன் கேட்கவும் பிரம்மா, "அது மட்டும் என்னால் இயலாது. என்றும் இறவாத அமரத்துவத்தை நீ அடைய முடியாது. ஆனால் எதனாலும் உனக்குத் தீங்கு நேராத வரத்தை நீ பெறலாம்'' என்கிறார். தேவர் அசுரர் ராக்ஷஸர் யக்ஷர் கின்னரர் கந்தர்வர் பன்னகர் யாரும் தன்னைக் கொல்ல முடியாது என்று இருக்க வேண்டும் என்று ராவணன் வரம் கேட்கிறான். 'மனிதர்கள் என்ன செய்ய முடியும்?' என்ற அலட்சியத்தினால் அவன் மனிதர்களைப்பற்றிக் கேட்கவில்லை என்று கூறியிருக்கிறது. ஆயினும் இந்த வரலாறு ஒரே மாதிரியாக இல்லை. ஒவ்வோர் இடத்தில் ஒவ்வொரு மாதிரியாக இருக்கிறது. பாலகாண்டத்தில் ஒரு விதம், உத்தரகாண்டத்தில் ஒரு விதம் காண்கிறது. ஆனால் அந்த வித்தியாசத்தில் ஒரு ரஸம் தோன்றுகிறது. 'மனிதர்களைப்பற்றி எனக்குக் கவலையே இல்லை. அவர்கள் என்னை ஒன்றும் செய்ய முடியாது' என்று கருதி ராவணன் அவர்களைக் கூறாமல் விட்டானோ, அல்லது மனிதர்களைச் சாதாரணமாகத்தான் சொல்லாமல் விட்டானோ, தெளிவாகத் தெரியவில்லை. உத்தரகாண்டத்தில் பின்வரும் சுலோகம் வருகிறது:—

सुपर्णनागयक्षाणां दैत्यदानवरक्षसाम् ।
अवध्योऽहं प्रजाध्यक्ष देवतानां च शाश्वत ॥
न हि चिन्ता ममान्येषु प्राणिष्वमरपूजित ।
तृणभूता हि ते मन्ये प्राणिनो मानुषादयः ॥ VII. 10. 19, 20.

"மேற்கூறியவர்கள் யாரும் என்னை ஒன்றும் செய்ய இயலாதவர்களாக இருக்க வேண்டும். மனிதர்கள் முதலியோரைப்பற்றி எனக்குச் சிறிதும் கவலை இல்லை. அவர்கள் அற்பமானவர்கள். அவர்கள் எனக்கு ஒரு தீங்கும் செய்யாமலிருக்க வேண்டும் என்று நான் எதற்காகக் கேட்க வேண்டும்?'' என்கிறான். பாலகாண்டத்தில் இந்த வரலாறே வேறு விதமாக இருக்கிறது:—

स हि तेपे तपस्तीव्रं दीर्घकालमरिन्दम ।
येन तुष्टोऽभवद् ब्रह्मा लोककृल्लोकपूर्वजः ॥
सन्तुष्टः प्रददौ तस्मै राक्षसाय वरं प्रभुः ।
नानाविधेभ्यो भूतेभ्यो भयं नन्यत्र मानुषात् ॥
अवज्ञाताः पुरा तेन वरदाने हि मानवाः । I. 16. 4-6.

மனித வர்க்கத்தைத் தவிர மற்ற எல்லாவற்றினிடமிருந்தும் பிரம்மா அவனுக்கு அபயம் அளிக்கிறார். மனிதர்களை மிகவும் அற்பமாக மதித்ததனால் ராவணன் அவர்களாலும் தனக்குத் தீங்கு

நேரலாகாது என்று வரம் கேட்கவில்லே. ஆகவே தேவர்கள் மகா விஷ்ணுவைப் பிரார்த்திக்கும்பொழுது, "மனிதன் ஒருவனைத் தவிர வேறு யாராலும் அவனைக் கொல்ல இயலாது" என்று கூறுகிறுர்கள். உத்தரகாண்டத்தில் 'மாநுஷாதய:' என்ற வார்த்தையைப்பற்றிச் சந்தேகம் எழுகிறது. ராவணன் மனிதனைப்பற்றி நினைக்கவில்லை என்றுல், வானரர்களைப்பற்றி எங்கே நினைத்திருக்கப்போகிருன்? அவர்களை இன்னும் மட்டமாக ,அல்லவோ கருதியிருப்பான்! இங்கே ஒரு ரஸமான தடயம் நமக்குக் கிடைக்கிறது. இரண்டு தரப்பிலும் போர் பலமாக நிகழ்ந்துகொண்டிருக்கும்பொழுது அனுமார் ராவணனுக்கு எதிரே நின்று போருக்கு அழைக்கிருர். அப்பொழுது அனுமார் பின்வருமாறு கூறுகிருர்:—

देवदानवगन्धर्वैर्यक्षैश्च सह राक्षसैः ।
अवध्यत्वं त्वया प्राप्तं वानरेभ्यस्तु ते भयम् ॥ VI. 59 55.

"உலகிலுள்ள எல்லாப் பிராணிகளும் உன்னை ஒன்றும் செய்ய இயலாமற்போனுலும் எங்கள் வானரசாதியினிடமிருந்து உனக்கு ஆபத்து உண்டு. நான் உன்னைக் கொல்லப்போகிறேன்" என்கிருர்.

பிரம்மாவினிடம் வரம் கேட்டபோது ராவணன் வானரர்களைப்பற்றிக் கேட்டிருக்க முடியுமா என்ற ஐயம் எழுகிறது. பால காண்டத்தில், ராமன் ராவணனேடு யுத்தம் புரியும்பொழுது அவருக்கு உதவிபுரிவதற்கென்றே வானரர்கள் சிருஷ்டிக்கப்பட்டதாகக் கூறியிருக்கிறது. ஆகவே அவர்கள் வெகு காலத்துக்குப் பிறகுதான் பூமியில் ஜனித்திருக்க வேண்டும். வயதில் மிகவும் சிறியவர்களாக இருக்க வேண்டும். ஆதலால் ராவணன் அவர்களை ஒரு பொருட்டாக நினைக்காதது ஆச்சரியமல்ல. ஆயினும் கவி தமது வழக்கப்படி நம்மால் அவிழ்க்க முடியாத ஒரு புதிரை இங்கும் போட்டுவைக்கிருர். தேவர்களோடு அமிர்தத்தைப் பருகியதனுல் வாலி, சுக்கிரீவன், நளன், நீலன், மைந்தன், துவிவிதன் முதலியோர் ராவணனைவிட எவ்வளவோ முதியவர்களாக இருக்க வேண்டும். ஆகவே, வானரர்கள் அனைவரும் ராவணனுக்குப் பின் வந்தவர் என்று கூற முடியாது. ராமாயணத்தில் இந்தக் காலக் கணக்கெல்லாம் எப்பொழுதும் புரியாமல் குழப்பமாகவே இருக்கும். சுந்தர காண்டத்தில் ராவணன் கூறியதிலிருந்து, சில வானரர்கள் அவனுக்கு முன்பே தோன்றி மிகவும் பிரபலமாக இருந்ததாகத் தெரிகிறது. சீதாதேவியைக் கண்டு பேசிய பிறகு அனுமார் இலங்கையில் பெருஞ் சேதம் விளைத்த செய்தியைக் கேட்டதும் ராவணன் கூறுவதைப் பார்ப்போம்:—

दृष्टा हि हरयः पूर्वं मया विपुलविक्रमाः ।
वाली च सहसुग्रीवो जाम्बवांश्च महाबलः ॥

नीलः सेनापतिश्चैव ये चान्ये द्विविदादयः ।
नैवं तेषां गतिर्भीमा न तेजो न पराक्रमः ॥
न मतिर्न बलोत्साहौ न रूपपरिकल्पनम् ।
महत् सत्त्वमिदं ज्ञेयं कपिरूपं व्यवस्थितम् ॥ V. 46. 10-12.

''எவ்வளவோ பலிஷ்டர்களான வானரர்களை நான் பார்த்திருக்கிறேன். நீங்கள் சொல்வதைப் பார்த்தால் இந்தக் குரங்கு அவர்களுக்கெல்லாம் மேல் பலமுள்ளது என்று தோன்றுகிறது. நீங்கள் வர்ணிக்கும் இந்த அனுமான் என்னும் குரங்கு வானர சாதியிலேயே காண முடியாத சக்தியும் பலமும் உள்ளதாக அல்லவோ காண்கிறது!''

ஆகவே, ராவணனது காலத்திலேயே வானரர்களும் இருந்திருக்கிறார்கள்; அவர்களைப்பற்றி அவனும் கேள்வியுற்றிருக்கிறான் என்று தெரிகிறது. அது எப்படியாயினும் அனுமாரைப்பற்றி ராவணன் கேள்விப்பட்டதில்லை என்பது சரியா? சீதாதேவியைத் தேடி அனுமார் இலங்கைக்கு வரும்பொழுது நல்ல பருவமும் பலமுமுள்ளவராக இருந்திருக்க வேண்டும் அல்லவா? குழந்தையாக இருந்தபொழுது கிரகணகாலத்தில் சூரியனைத் தேடி அவர் ஆகாயத்தில் கிளம்பினார் என்றும், சூரியனையும் சாயாக்கிரகங்களையும் காப்பதற்காக இந்திரன் வந்தான் என்றும் கூறப்பட்டிருக்கிறது. அந்தச் சமயத்தில் இந்திரன் அனுமாரின் இடக் கன்னத்தில் தன் வஜ்ராயுதத்தினால் அடித்ததைக் கண்டு வாயுபகவான் சினந்து தமது சஞ்சாரத்தை நிறுத்தவே, உலகம் முழுவதும் காற்று இல்லாமல் திணறியது. எங்கும் சலனமில்லாத நிலை ஏற்படவே எல்லாத் தேவர்களும் ஒன்றுகூடிப் பிரார்த்திக்க, வாயுபகவான் சாந்தமாகிறார். அனுமாருக்கு அப்பொழுது தேவர்கள் அநேக வரங்களை அளிக்கிறார்கள். இப்படி அனுமார் பாலப்பருவத்தில் சூரியனைப் பிடிக்கச் சென்றதும், வாயுபகவான் சஞ்சரிப்பது நின்று, எங்கும் மூச்சுத் திணறல் ஏற்பட்டு, வாயுபகவான் சாந்தமாக, அனுமாருக்கு வரங்களை வழங்கியதுமான வரலாறு எவ்வளவு பிரசித்தமானது! ராவணன் காதில் அது விழாதிருக்குமா?

ராவணனைக் காண எல்லாத் தேவதைகளுக்கும் நடுக்கம்; அவ்வளவு பெரியவன் ராவணன் என்று கவி கூறுகிறார். சூரிய பகவான் தம் உஷ்ணத்தைக் குறைத்துவிடுவார். வாயுபகவான் மெதுவாகச் சஞ்சரிப்பார். சமுத்திரராஜன் தன் பேரிரைச்சலை அடக்கிக்கொள்வான். நதிகள் மெதுவாகச் செல்லும். மலைகள் கரடுமுரடாக இருப்பதை மாற்றிக்கொள்ளும். இவ்விதம் ராவணனைக் கண்டு இயற்கையே தன் நியதியை விட்டுப் பயந்து நடுங்கிக் கொண்டிருக்கும் என்றெல்லாம் சொல்லியிருக்கிறது. தேவர்கள்

அனைவரும் ராவணனுக்கு அடங்கி நடக்கும்பொழுது, அனுமாரின் சாகசச் செயல்களைப்பற்றியும் அவன் கேள்வியுறுமல் இருந்திருக்க முடியாது. நளன் நீலன் முதலிய வானரர்களைப்பற்றிக் கேள்வியுற்றவன் அனுமாரைப்பற்றித் தெரிந்துகொள்ளாமலிருப்பது பொருத்தமாக இல்லை. ஆனால் ராமாயணத்தில் இதைக்காட்டிலும் அதிகப் பொருத்தமில்லாத விஷயங்கள் அநேகம் காண்கின்றன.

ராமர் சாதாரண மனிதராகப் பிறந்தவர்தாம். ஆனால் இளமையிலேயே அவருடைய தெய்வாம்சம் புலனுகிவிடுகிறது. அவருடைய குணுதிசயங்கள் உலகம் முழுவதும் பரவிப் பிரசித்தமாகியிருக்கின்றன. அவரது உயர்வு, போர் புரியும் திறமை, இயற்கையைக்கூட வெல்லும் சக்தி, உலகம் முழுவதும் எதிர்த்து வந்தாலும் கலங்காமல் நின்று வெல்லும் வன்மை ஆகிய யாவற்றையும் அனைவருமே அறிந்திருக்க வேண்டும். அந்தக் காலத்திலேயே அவரைப் பகவானின் அவதாரம் என்று கருதி அநேகர் பேசினுலும் அவரை ஒரு சாதாரண மனிதனைக்காட்டிலும் சிறிதும் உயர்வாக ராவணன் நினைத்ததாகத் தெரியவில்லை. எவ்வளவோ ருசுக்கள் ஒன்றன்பின் ஒன்றுகக் கிட்டியும் ராமன் சாதாரண மனிதனல்லன் என்பதை ராவணன் நம்ப மறுத்துவிடுகிறுன். அரண்யகாண்டத்தில், மாரீசனது வரலாறு வருகிறது. ராமரைப் பற்றி மாரீசன் நன்கு அறிந்தவன். அவருடைய திறமையையும் பெருமையையும் பற்றி அவனுக்கு நல்ல அநுபவம் உண்டு. ராமர் சாதாரண மனிதரல்ல என்பதும் அவனுக்குத் தெரியும். அவருடைய குணங்களைக் கண்டு அவன் அதிசயித்து ராவணனிடம் அவற்றை வர்ணித்துக் கூறுகிறுன். ஆயினும் ராவணன் பின்வருமாறு தான் நினைத்தபடியே பேசுகிறுன்:—

अनुक्त्वा परुषं किञ्चिच्छरैर्व्यापारितं धनुः ।
चतुर्दश सहस्राणि रक्षसामुग्रतेजसाम् ॥
निहतानि शरैर्दीप्तैर्मानुषेण पदातिना ।
खरश्च निहतः संख्ये दूषणश्च निपातितः ॥
हत्वा त्रिशिरसं चापि निर्भया दण्डकाः कृताः ।
पित्रा निरस्तः क्रुद्धेन सभार्यः क्षीणजीवितः ॥
स हन्ता तस्य सैन्यस्य रामः क्षत्रियपांसनः ।
दुश्शीलः कर्कशस्तीक्ष्णो मूर्खो लुब्धोऽजितेन्द्रियः ॥
त्यक्तधर्मा त्वधर्मात्मा भूतानामहिते रतः ।
येन वैरं विनारण्ये सत्त्वमास्थाय केवलम् ॥
कर्णनासापहारेण भगिनी मे विरूपिता ॥ III. 36. 8-13.

''அவன் கேவலம் ஒரு மனிதன். என் முன் எம்மாத்திரம்? குதிரை தேர் ஆகிய ஒன்றுக்கும் விதியில்லாமல் கால்களால் நடந்து செல்கிறவன். நான் அவனுக்கு ஒன்றும் தீமை செய்ய வில்லை. அவனாலும் எனக்கு ஒன்றும் நேரவில்லை. ஒரு சிறு கடுஞ் சொல்கூட எங்களிடையே இல்லாதிருக்கும்பொழுது அவன் பதினாலாயிரம் அரக்கர்களைக் கொன்றிருக்கிறான். பெரிய தீங்கு அவனால் நேர்ந்திருக்கிறது. இனி அவன் என் விரோதியாவான். என்னிடம் நடுங்கிக்கொண்டிருந்த தண்டகாரணியம் முழுவதும் இப்பொழுது நிர்ப்பயமான பிரதேசமாகிவிட்டது. என் அதிகாரம் இப்பொழுது அங்கே செல்லவில்லை. என் தங்கை சூர்ப்பணகையை ஒரு காரணமும் இல்லாமல் அவன் விரூபமாக்கி விட்டான்'' என்கிறான். அதற்கு மாரீசன், ''ராமனைப்பற்றி நீங்கள் தவறாக நினைத்துக்கொண் டிருக்கிறீர்கள். மிகவும் நல்லவன் அல்லவோ அவன்?'' என்கிறான்.

रामो विग्रहवान् धर्मः साधुः सत्यपराक्रमः । III. 37. 13.

''தர்மமே மனித உருக் கொண்டது போன்றவன்'' என்று மேலும் அவன் புகழ்ந்து பேசுகிறான். ஆனால் அது எதுவும் ராவணன் காதில் ஏறவில்லை. அவனுக்கு ஏதோ ஒரு விதக் குருட்டுத்தனம் இருப்பதாகவே கவி அமைத்திருக்கிறார். ராமரைப்பற்றி மற்றவர்கள் எவ்வளவு புகழ்ந்து பேசினாலும், அவரது குணங்களை எவ்வளவு எடுத்துக் கூறினாலும், ராவணன் அவற்றைச் சிறிதும் பொருட்படுத்தாமலே இருக்கிறான்.

त्वद्वाक्यैर्न तु मां शक्यं भेत्तुं रामस्य संयुगे ।
पापशीलस्य मूर्खस्य मानुषस्य विशेषतः ॥
यस्त्यक्त्वा सुहृदो राज्यं मातरं पितरं तथा ॥
स्त्रीवाक्यं प्राकृतं श्रुत्वा वनमेकपदे गतः ॥ III. 40. 4, 5.

''ஒரு ஸ்திரீயின் வார்த்தைக்குப் பணிந்து, வயதுசென்ற தாய் தந்தையரையும் ராஜ்யத்தையும் உற்ற நண்பர்களையும் ஒரே நிமிஷத்தில் விட்டு ஓடியவனைப் பெரிய வீரன், நற்குணசீலன், நான் அவனுக்கு மரியாதை செய்ய வேண்டும் என்றெல்லாம் கூறுகிறாய்'' என்கிறான் ராவணன். மனிதன் மனிதன் என்று வெகு அலட்சியமாகப் பேசுகிறான். அதனால் அல்லவா பிரம்மா விடம் மனிதனைப்பற்றி அவன் கேட்கவே இல்லை? ஜனஸ்தானத்தில் சீதையைக் கண்டு ராவணன் பேசும்பொழுது தன்னைக் கணவனாக ஏற்றுக்கொள்ளும்படிக் கேட்கிறான். விவாகத்தைப்பற்றிய அவ னது அபிப்பிராயங்கள் மிகவும் விசித்திரமாக இருக்க வேண்டும். தன்னைக் கணவனாக அங்கீகரிக்கும்படிக் கேட்பதுடன், அவன் சொல்லுகிறான்:—

अङ्गुल्या न समो रामो मम युद्धे स मानुषः। III. 48. 19.

"அந்த மனிதன் யுத்தத்தில் என் விரலுக்குக்கூடச் சமமாக வர முடியாதே!" என்கிறான். மனிதர்களைப்பற்றி அவன் கொண்டிருக்கும் பெரும் அலட்சியத்தைப் பாருங்கள். அடுத்த ஸர்க்கத்தில் மீண்டும் அவன் சீதையினிடம் அதையே கூறுகிறான்:—

त्यज्यतां मानुषो भावो मयि भावः प्रणीयताम् ।
राज्याच्च्युतमसिद्धार्थं रामं परिमितायुषम् ॥
कैर्गुणैरनुरक्तासि मूढे पण्डितमानिनि ।
यः स्त्रियो वचनाद्राज्यं विहाय ससुहृज्जनम् ॥
अस्मिन् व्यालानुचरिते वने वसति दुर्मतिः। III. 49. 13-15.

"அவன் இனி எங்கு உயிரோடு இருக்கப் போகிறான்! இன்னும் சில தினங்களில் என் கைகளினால் மரிக்கப்போகிறான். ராஜ்யத்தை இழந்து திரிகிறவன் உன்னை எப்படி ரக்ஷிக்கப் போகிறான்? மனிதர் மீதுள்ள நம்பிக்கையை விடு. அரசு, செல்வம், புகழ் யாவற்றையும் இழந்து காட்டில் கொடிய மிருகங்களிடையே வாழும் ஒரு மடையன் மீது அன்பு கொண்டிருக்கிறாயே! அது எவ்வாறு என்று எனக்கு விளங்கவில்லை" என்கிறான். அவளைத் தன் அரண்மனைக்குக் கொண்டு சென்று அழகாக அலங்கரித்திருந்த இடங்களையும் விசாலமான அறைகளையும் அவளுக்குக் காண்பித்து அவன் கூறுகிறான்:—

न देवेषु न यक्षेषु न गन्धर्वेषु नर्षिषु ।
अहं पश्यामि लोकेषु यो मे वीर्यसमो भवेत् ॥
राज्यभ्रष्टेन दीनेन तापसेन पदातिना ।
किं करिष्यसि रामेण मानुषेणाल्पतेजसा ॥
दुष्कृतं यत् पुरा कर्म वनवासेन तद्गतम् ।
यश्च ते सुकृतो धर्मस्तस्येह फलमाप्नुहि ॥ III. 55. 20, 21, 27, 28.

"வெகு நேர்த்தியாக அலங்கரிக்கப்பட்டிருக்கும் இந்த இடங்களையெல்லாம் பார். என்னையும் பார். இவ்வளவிற்குப் பிறகும் நீ ராமனை ஸ்மரிக்க முடியுமா? என்ன பாவம் செய்தாயோ, அதன் பலனைக் கணவனுடன் பதின்மூன்று வருஷம் கடுங் கானகத்தில் வசிக்கும்படியாயிற்று. இனி அந்தப் பாவம் தொலைந்து உனக்கு நல்ல காலம் கிட்டிவிட்டது. நீ செய்துள்ள சுகிருதத்தின் பலனை இனிமேல் அநுபவிக்கப் போகிறாய்" என்கிறான். ராமர் கேவலம் ஒரு மனிதர் என்ற எண்ணத்தை அவனால் அகற்றவே முடியாமலிருக்கிறது பாருங்கள். மீண்டும் சொல்கிறான்:—

स्वधर्मो रक्षसां भीरु सर्वथैव न संशयः ।
गमनं वा परस्त्रीणां हरणं सम्प्रमथ्य वा ॥

किं करिष्यसि रामेण सुभगे चीरवाससा ।
निक्षिप्तविजयो रामो गतश्रीर्वनगोचरः ॥
व्रती स्थण्डिलशायी च शङ्के जीवति वा न वा ।
न हि वैदेहि रामस्त्वां द्रष्टुं वाप्युपलप्स्यते ।
न चापि मम हस्तात् त्वां प्राप्तुमर्हति राघवः ॥
न रामस्तपसा देवि न बलेन न विक्रमैः ।
न धनेन मया तुल्यस्तेजसा यशसापि वा ॥ V. 20. 5, 25-28, 34.

"பரஸ்திரீகளைப் பலவந்தமாகக் கொண்டு வந்து தமக்கு வசமாக்கிக்கொள்வது எங்கள் ராக்ஷஸகுலத்தின் ஸ்வதர்மமே ஆகும். ராமன் உயிருடன் இருக்கிறானோ அல்லது இறந்து விட்டானோ தெரியவில்லை. அவன் உன்னை இங்கு வந்து காண்பது என்பது இயலாத காரியம். நீயும் அவனைப் பார்க்க முடியாது. இனி நீ அவனை உன் கண்முன் காண்பதேது? அப்படியே அவன் இங்கு ஒருவேளை வந்தாலும் என்னிடமிருந்து உன்னை மீட்டுச் செல்வது சாத்தியமில்லை" என்கிறான்.

பிறகு ராமர் தமது வானரசேனையுடன் ஸேதுபந்தம் செய்து இலங்கையை அணுகி எதிர்க்கத் தொடங்கியதும் ராவணன் மந்திராலோசனைச் சபை கூட்டி யோசிக்கிறான். அவனுடைய சிற்றப்பனான மால்யவான் என்பவன், "ராமன் ஓர் அவதார புருஷன் என்பதில் சந்தேகமில்லை. லோகக்ஷேமத்திற்காக மகா விஷ்ணுவே பூமியில் ராமனாக அவதரித்திருக்கிறார் என்று நினைக்கிறேன். ஆகவே ராமனுடன் சமாதானம் செய்துகொண்டு சீதையை அவனிடம் அனுப்பிச் சிநேகமாக இருப்பது நல்லது" என்று புத்தி கூறுகிறான். அந்தச் சொற்கள் ராவணனுக்கு ஏற்குமா? அவன் கடுங் கோபமடைந்து தன் சிறிய தந்தையான மால்யவானைத் தூஷிக்கிறான்:—

मानुषं कृपणं राममेकं शाखामृगाश्रयम् ।
समर्थं मन्यसे केन त्यक्तं पित्रा वनालयम् ॥ VI. 36. 4.

"ராமனை ஏன் ஒரு பொருட்டாக என்னிடம் வந்து கூறுகிறீர்கள்? அவனுக்கு உதவுகிறவர்கள் வானரர்கள். ராஜ்யத்தை விட்டு அவன் தந்தையே அவனைத் தள்ளியிருக்கிறார். இதைக் கடைசி வரையிலும் நான் ஒரு கை பார்த்துத்தான் விடப் போகிறேன். சீதையை நான் ஒருகாலும் விட முடியாது" என்கிறான். இப்பொழுதுதான், "த்விதா பஜ்யேயம்— நான் இரண்டு துண்டாக ஆனாலும் ஒருவருக்கும் வளைந்து கொடுக்க மாட்டேன். அது என்னிடமுள்ள கெட்ட குணமாக இருக்கலாம். நான் பிறக்கும்பொழுதே அதுவும் என்னுடன் வந்துவிட்டது.

என்ன செய்வது? சுபாவத்தை யார் மீற முடியும்? பிறவியிலிருந்தே இந்தப் பிடிவாதகுணம் என்னிடம் குடிகொண்டிருக்கிறது. அதனின்றும் நான் தப்ப முடியாது. ஆகவே நீங்கள் புத்தி கூறுவது வீண்தான்'' என்கிறன்.

ஆனல், உண்மையை இல்லையென்று மறுக்க முடியுமா? ராமருடைய போர்த் திறமையும் பலமும் ராவணனுக்கு நன்கு ருசுவாகின்றன. மனிதனுக இருந்தும் அவன் சாதாரண மனிதன் அல்ல என்பதை அவன் சீக்கிரமே அநுபவித்து அறியும்படியாகிறது. கடும்போர் புரிந்து முடிவில் தேரை முறித்து வில்லேயும் அம்பறுத் தூணியையும் இழந்து வாட்டத்துடன் பூமியில் நிற்கும்பொழுது, அவனுக்கு முதல் அநுபவம் ஏற்படுகிறது. விரும்பினுல் அந்தச் சமயத்தைப் பயன்படுத்திக்கொண்டு ராமர் இன்னும் சில பாணங்களேப் போட்டு அவனைக் கொன்றிருக்கலாம். ஆனுல், ராமர் உதாரகுணத்துடன், தேரின்றி ஆயுதங்களின்றிக் களேத்துப்போய் அவன் நிற்கும் நேரத்தைப் பயன்படுத்திக்கொள்ள விரும்பாமல், அவனை நகருக்குத் திரும்பிப்போய்க் களேப்பாறிய பிறகு மீண்டும் யுத்தத்திற்குத் தயாராகி வரச் சொல்லுகிருர்:—

कृतं त्वया कर्म महत् सुभीमं हतप्रवीरश्च कृतस्त्वयाहम् ।
तस्मात् परिश्रान्त इति व्यवस्यन् न त्वां शरैर्मृत्युवशं नयामि ॥
गच्छानुजानामि रणादितस्त्वं प्रविश्य रात्रिंचरराज लङ्काम् ।
आश्वास्य निर्याहि रथी च धन्वी तदा बलं द्रक्ष्यसि मे रथस्थः ॥
VI. 59. 142, 143.

ராமர் பெருந்தன்மையோடு கூறிய மொழிகள் ராவணனுக்கு விஷமாக இருந்திருக்கலாம். ''இன்று மிகவும் ஆச்சரியப்படும் விதம் போர்புரிந்திருக்கிருய். எங்கள் பக்கம் எவ்வளவோ வீரர் களேக் கொன்று குவித்துவிட்டாய். அதனுல் உனக்கு அதிகச் சோர்வு உண்டாகியிருக்கிறது. இப்பொழுது உன்னைச் சுலபமாக வேலே தீர்த்துவிடலாம். ஆனுல் நான் அப்படிச் செய்யப்போவதில்லே. போய் நன்ருகச் சிரமபரிகாரம் செய்தபிறகு புதிய ரதத்தில் ஏறிக்கொண்டு யுத்தகளத்துக்கு வா. நான் ரதமில்லாமல் பூமியிலேயே நின்று போர்செய்வேன். எதிரியோடு யுத்தம் புரியும் பொழுது என் பலம் எத்தகையது என்று அறிந்துகொள்வாய்'' என்கிருர். முதல்முதலாக ராவணன் அவமானத்தை யடைந்து யுத்தகளத்தை விட்டுச் செல்கிறன். அவனுக்கு முதல்முதலாகப் பயம் ஏற்படுகிறது.

स प्रविश्य पुरीं लङ्कां रामबाणभयार्दितः ।
भग्नदर्पस्तदा राजा बभूव व्यथितेन्द्रियः ॥

मातङ्ग इव सिंहेन गरुडेनेव पन्नगः ।
अभिभूतोऽभवद्राजा राघवेण महात्मना ॥
ब्रह्मदण्डप्रकाशानां विद्युत्सदृशवर्चसाम् ।
स्मरन् राघवबाणानां विव्यथे राक्षसेश्वरः ॥ VI. 60. 1-3.

"சிங்கத்தினுல் தாக்குண்ட யானை போலவும், கருடனுல் வதைக்கப்பட்ட சர்ப்பம் போலவும் ராவணன் ராமரால் பங்கம் அடைந்தான். படுக்கையில் தூக்கம் வராமல் எழுந்து உட்காரும் பொழுதும் ராமருடைய கூர்மையான பாணங்களை நினைவு கூர்ந்தான். பிரம்மதண்டம் போல மின்னல்வேகத்துடன் ஒவ்வொரு பாணமும் அவன் மீது பாய்ந்தது அல்லவா?" என்றெல்லாம் கவி வர்ணிக்கிருர். மேலும் அவர் சொல்லிக்கொண்டே போகிருர். ஆனுல் தனக்குச் சமமான எதிரியை இப்பொழுதுதான் முதல் முதலாக ராவணன் போரில் சந்தித்துத் தன் தோல்வியை ஒப்புக்கொள்ளும்படி ஆவதனுல் அது கவனித்துப் படிக்கக்கூடியதாகும்.

स काञ्चनमयं दिव्यमाश्रित्य परमासनम् ।
विप्रेक्षमाणो रक्षांसि रावणो वाक्यमब्रवीत् ॥
सर्वं तत् खलु मे मोघं यत् तप्तं परमं तपः ।
यत् समानो महेन्द्रेण मानुषेणास्मि निर्जितः ॥
इदं तद्ब्रह्मणो घोरं वाक्यं मामभ्युपस्थितम् ।
मानुषेभ्यो विजानीहि भयं त्वमिति तत् तथा ॥
देवदानवगन्धर्वैर्यक्षराक्षसपन्नगैः ।
अवध्यत्वं मया प्राप्तं मानुषेभ्यो न याचितम् ॥ VI. 60. 4-7.

"எவ்வளவு ஆயிரம் ஆண்டுகள் தவம் செய்தேன்! இந்திரனுக்குச் சமமான வீரமுள்ளவன் என்று புகழ்பெற்றவன் ஒரு மனிதனிடம் தோல்வியுற்றேன்" என்று ராவணன் வாய்விட்டுக் கூறுகிருன். பிரம்மதேவர் கொடுத்த வரங்களைப்பற்றி ஓர் புதிய அர்த்தம் கற்பித்துக் கூறுகிருன். பிரம்மா அவ்விதம் சரியாகச் சொல்லாவிட்டாலும் தன் மனக்கலக்கத்தினுலும் குழப்பத்தினுலும் பிரம்மா சொன்னதாகவே நினைத்துக்கொள்ளுகிருன். "ஆகா! பிரம்மா கூறியது உண்மையாகிவிட்டதே! அவர் கூறியது எவ்வளவு பயங்கரம்!" என்று நினைக்கிருன். 'இதெல்லாம் உன்னை ஒன்றும் செய்யாது; அதெல்லாம் ஒன்றும் செய்யாது' என்றுதான் அவர் சாதாரணமாகச் சொன்னுர். ஆனுல் ராவணனுக்கு இருந்த கவலையில், 'மனிதனிடமிருந்துதான் உனக்கு ஆபத்து' என்று அவர் கூறியதாகத் தோன்றுகிறது. நம் மனம் குழப்பமடைந்திருக்கும்பொழுது இப்படித்தான் எல்லாம் விபரீதமாகத்

தோன்றும். ராமருடைய பராக்கிரமம் தன் உயிருக்கே இறுதி விளைவித்துவிடுமோ என்று ராவணன் அஞ்சுகிறுன்.

विदितं मानुषं मन्ये रामं दशरथात्मजम् । VI. 60. 8.

இப்பொழுதுதான் முதல்முதலாக, 'ராமன் சாதாரண மனிதன்' என்பதை, அலட்சியமின்றிக் கூறுகிறுன். அவனிடம் ஏதோ விசேஷம் இருக்கிறதென்று அவனுக்குத் தோன்றுகிறது.

इक्ष्वाकुकुलनाथेन अनरण्येन यत् पुरा ॥
उत्पत्स्यते हि मद्वंशे पुरुषो राक्षसाधम ।
यस्त्वां सपुत्रं सामात्यं सबलं साश्वसारथिम् ॥
निहनिष्यति सङ्ग्रामे त्वां कुलाधम दुर्मते । VI. 60. 8-10.

ராவணன் திக்விஜயம் செய்யச் சென்றிருந்தபொழுது ஒரு சமயம் இக்ஷ்வாகு குல அரசனை அனரண்யனோடு போர்புரிய நேருகிறது. அப்பொழுது பெரிதும் துன்பமுற்ற அனரண்யனுடைய சாபம் ராவணனுக்குக் கிட்டுகிறது. "என் குலத்தில் தோன்றப் போகும் ராமன் எனப் பெயர் கொண்டவன் உன்னை யுத்தத்தில் கொல்லப்போகிறுன்" என்பது அந்தச் சாபம். ராவணனுக்கு இப்பொழுது அது நினைவுக்கு வருகிறது. இம்மாதிரியே தன் வாழ்க்கையில் ஏற்பட்ட இன்னும் பல சாபங்களும் அவனது நினைவில் எழுகின்றன.

शप्तोऽहं वेदवत्या च यदा सा धर्षिता पुरा ।
सेयं सीता महाभागा जाता जनकनन्दिनी ॥ VI. 60. 10, 11.

"வேதவதி என்ற பெண்மணியை நான் பலவந்தம் செய்த பொழுது, 'எப்படியோ உனக்கு முடிவு நான்தான்' என்று அவள் கூறினுள். அவள்தான் சீதையாகப் பிறந்திருக்கிறுள். அவளை என் அரண்மனையில் கொண்டுவந்து அதனுல் இவ்வளவு ஆபத்துக் களையும் சம்பாதித்துக்கொண்டேன்" என்று அவன் வருந்துகிறுன். மீண்டும் வேறு சாபங்கள் நினைவுக்கு வருகின்றன.

उमा नन्दीश्वरश्चापि रम्भा वरुणकन्यका ॥
यथोक्तास्तन्मया प्राप्तं न मिथ्या ऋषिभाषितम् । VI. 60. 11, 12.

உமாதேவியும் நந்திகேசுவரரும் அதே சமயத்தில் அவனுக்குச் சாபம் அளித்திருக்க வேண்டும். ஒரு சமயம் கைலாயத்துக்குச் சென்றவன் அந்த மலையையே தூக்க முயன்றதும் பரமசிவனுக்குக் கோபம் வருகிறது. உள்ளே போவதை நந்தி தடுக்கிறுர். ராவணன் திரும்பிப்பார்த்து நந்தியின் விநோதமான உருவத்தைக் கண்டதும் பெரிதாகச் சிரிக்கிறுன். நந்திக்கு அசாத்தியக் கோபம் உண்டா கிறது. ஆனுல் பரமேசுவரனுடைய உத்தரவின்றி யுத்தம்புரிய விரும்பாமல் வெறும் சாபம் இடுகிறுர்.

यस्माद्वानररूपं मामवज्ञाय दशानन ॥
अशनीपातसङ्काशमुपहासं प्रमुक्तवान् ।
तस्मान्मद्रूपसम्पन्ना मद्वीर्यसमतेजसः ॥
उत्पत्स्यन्ति वधार्थं हि कुलस्य तव वानराः ।
नखदंष्ट्रायुधाः क्रूरा मनस्सम्पातरंहसः ॥
युद्धोन्मत्ता बलोद्रिक्ताः शैला इव विसर्पिणः । VII. 16. 16-19.

"என் முகத்தைக் கண்டு பரிகாசமாகச் சிரிக்கிறாய். பூலோகத்தில் என்னைப் போன்ற உருவமும் பலமும் கொண்ட வானரசாதி தோன்றி, உன்னையும் உன் குலத்தவரையும் ஒழித்துவிடும். மலை போல் அவர்கள் பிரம்மாண்டமாக இருப்பார்கள். பற்களும் நகங்களுமே அவர்களுக்கு ஆயுதங்கள்" என்பதே அந்தச் சாபம்.

ஒரு முக்கியமான இடத்தை இப்பொழுது எடுத்துக்கூறுகிறேன். ராவணனுக்கு எந்தவிதமான ஆபத்தும் அவமானமும் இழிவும் வர முடியாது; அவன் பெருமை அத்தகையது என்று அவனைச் சேர்ந்தவர்கள் நினைத்தார்கள். அதிலிருந்து தெரிகிறது, ராமரிடம் முதல்முதலில் தோல்வியுற்றுக் களைப்பாறிப் பிறகு விளைந்த அவமான உணர்ச்சி. மீண்டும் யுத்தஸன்னத்தனாக வரும்படி அவர் கூறியது மேலும் குன்றிப்போகச் செய்ததைக் காண, அவனைச் சேர்ந்தவர்கள் பெரிதும் வெட்கமடைகிறார்கள். அந்தச் சமயத்தில் ராவணனுக்குக் கும்பகர்ணனுடைய ஞாபகம் எழுகிறது. பெரும் தூக்கத்திலிருந்து அவனை எழுப்ப நடக்கும் முயற்சிகள் நகைச்சுவை யளிப்பனவாக இருக்கின்றன. கும்பகர்ணன் ஒருவழியாக நித்திரை கலைந்து எழுந்து, "என்ன சமாசாரம்? ஏதோ பெரிய கஷ்டம் ஏற்பட்டிருக்க வேண்டும். இல்லாவிட்டால் அண்ணா என்னை எழுப்பும்படி உத்தரவிட்டிருக்கமாட்டான்" என்கிறான். அதற்கு யூபாக்ஷன் சொல்லுகிறான்:—

न नो दैवकृतं किञ्चिद्भयमस्ति कदाचन ।
मानुषान्नो भयं राजंस्तुमुलं सम्प्रबाधते ॥
न दैत्यदानवेभ्यो वा भयमस्ति हि तादृशम् ।
यादृशं मानुषं राजन् भयमस्मानुपस्थितम् ॥ VI. 60. 72-73.

"தேவர்களைப்பற்றி நமக்குப் பயமில்லை. கேவலம் ஒரு மனிதன் மூலமாக நமக்குப் பயம் உண்டாகியிருக்கிறது. யுத்தத்தில் வெற்றி கொண்ட ராமன், தோல்வியுற்று நின்ற ராவணனைக் கொல்லாமல், 'போய் நாளை வா' என்று அனுப்பிவிட்டான். இந்த அவமானத்தைச் சகிக்க முடியவில்லை. இதைவிட மானக்கேடு என்ன இருக்கிறது? தேவர்கள் தானவர்கள் முதலியோரிடமிருந்துகூட நேராத மிகப் பெரிய அவமானம் இப்பொழுது நம் அரசருக்கு ஓர் அற்ப மனிதனிடமிருந்து நேர்ந்துவிட்டது!" என்று கூறுகிறான்.

ராவணனது பெருமை குலைந்த முக்கியமான விஷயம், யுத்த காண்டத்தில், 106-ஆம் ஸர்க்கத்தில் ஒரு நூதனமான வரலாற்றில் வெளியாகிறது. ராமனுக்கும் ராவணனுக்கும் பெரும் போர் நடந்துகொண்டிருக்கிறது. ராமபாணங்களைத் தாங்க முடியாத நிலையில் ராவணன் தத்தளித்துக்கொண் டிருக்கிறான். ஆனால் போர்வெறியில் அடியோடு தான் நிலைகுலையப்போவதை அவன் அறியவில்லை. மேன்மேலும் யுத்தம் புரிந்துகொண் டிருக்கிறான். அந்தச் சமயத்தில், மிகவும் சாமர்த்தியசாலியான அவனுடைய ரதசாரதி, அவனுடைய தடுமாற்றத்தைக் கண்டு, ராமபாணங்களுக்கு நேரே இலக்காகாமலிருக்கும் வண்ணம் ரதத்தைச் சிறிது பின்னே செலுத்துகிறான். உடனே அதை ராவணன் அறியவில்லை. ராமனுக்கு எதிராகத் தான் இல்லாமலிருப்பதை அறிந்ததும் கடுங் கோபமடைந்து, தேரோட்டியைக் கண்டபடி கோபிக்கிறான்:—

त्वयाद्य हि ममानार्य चिरकालसमार्जितम् ।
यशो वीर्यं च तेजश्च प्रत्ययश्च विनाशितः ॥ VI. 106. 5.

"எவ்வளவோ ஆயிரம் வருஷங்களாகப் போரில் வல்லவன் என்ற என் புகழ் நிலைத்திருக்கிறது. நான் பின் நகர்ந்ததே இல்லை. ஒப்பற்ற வில்லாளி என்ற பெயரை நிலைநாட்டியவன் நான். என்னை எதிர்க்க யாரும் துணிந்ததில்லை. ரதத்தைப் பின்னேக்கிச் செலுத்தி எனக்கு இழிவைக் கொண்டுவந்துவிட்டாயே! இவ்வளவு வருஷங்களாக நிலைத்திருந்த புகழ் ஒரே க்ஷணத்தில் உன்னால் தொலைந்துவிட்டதே! இந்த ராமனை நான் வெகு அலட்சியமாக நினைத்திருந்தேன். என்னோடு போர்புரியத் தகுந்தவன் இவன் என்பது இப்பொழுதுதான் தெரிகிறது. இவன்முன் என் பராக்கிரமத்தை நிலைநாட்ட வேண்டுமென்று அல்லவா விரும்புகிறேன்?" என்கிறான்.

शत्रोः प्रख्यातवीर्यस्य रञ्जनीयस्य विक्रमैः ।
पश्यतो युद्धलुब्धोऽहं कृतः कापुरुषस्त्वया ॥ VI. 106. 6.

ராமருடைய மதிப்பைப் பெற வேண்டுமென்று ராவணன் நினைக்கத் தொடங்குகிறான். "யுத்தத்தில் வீரச் செயல்களில் நாட்டமுள்ளவன் ராமன். என் சாகசச் செயல்களைக் கண்டு அவன் வியப்பில் ஆழ்ந்துவிடுவான். யுத்தம்புரியத் துடிப்பவனைக் கோழையாக அடித்துவிட்டாயே!" என்று ராவணன் சாரதியினிடம் கூறுகிறான். தேரோட்டி சமயோசிதமாக நடப்பவன்; ராவணன் நினைத்தது தவறு என்பதையும், தான் செய்ததுதான் சரி என்பதையும் அவன் நிரூபிக்கிறான். அப்பொழுதுதான் தனக்கு வந்த ஆபத்து எத்தகையது என்று ராவணனுக்குப் புலனாகிறது. அவன் பெருந்தன்மையோடு தன் கழுத்திலிருந்த ஹாரத்தைக் கழற்றிச் சாரதியின் கழுத்தில் இடுகிறான்.

# 23

## ராவணனது பெருமை

சென்ற உபன்யாசத்தில், ராமரைக் கேவலம் சாதாரண மனிதன் என்று அலட்சியமாகக் கருதிய ராவணன் அவரது பராக்கிரமத்தினுல் விளைந்த நஷ்டங்களைக் கண்டு தன்னைக்காட்டிலும் அவர் மேலானவர் என்றே நினைக்கத் தொடங்கினுன் என்று சொன்னேன். ராவணனுடைய பெருமை இத்துடன் நிற்கவில்லை. மேலும் அவனைப்பற்றிச் சொல்லலாமென்று நினைக்கிறேன்.

இலங்கை முதலில் குபேரனுக்குச் சொந்தமாக இருந்தது. ராவணனும் அவனைச் சேர்ந்தவர்களும் பாதாளத்தில் வசித்து வந்தனர். ராவணன் பல வரங்களைப் பெற்றுப் பலசாலியானதும், இலங்கையைத் தன் சகோதரனுன குபேரனிடமிருந்து கைப்பற்ற முயலுகிறுன். அவனை விரட்டியடித்துப் புஷ்பகம் என்ற அவனது சிறந்த விமானத்தையும் கைப்பற்றுகிறுன். பிறகு இலங்கையைத் தலைநகரமாக்கி அதில் இருந்துகொண்டு மூவுலகங்களையும் ஜயிக்கிறுன். தேவர்கள் ரிஷிகள் அனைவரும் அவனுக்கு உட்பட்டவராகின்றனர். பலத்திலும் சக்தியிலும் அவனுக்குச் சமமான அநேக அரக்கர்கள் அவன்கீழ் இருந்து உலகம் முழுவதும் ஆதிக்கம் செலுத்துகின்றனர். அவன் தம்பியாகிய கும்பகர்ணன் பராக்கிரமத்தில் அவனுக்கு இணையானவன். ஆனுல் நீண்ட தூக்கம் அவனது சக்திக்குப் பங்கமாகிறது. இல்லாவிட்டால் அவனைக் கொல்வது சாத்தியமான காரியமல்ல. ராவணனுடைய மகன் மேகநாதன் என்பவன் மாயவித்தையில் வல்லவன்; மறைந்திருந்து போர் புரிவதில் நிகரற்றவன். அக்கினி பகவானைத் திருப்தி செய்து, வேண்டும்பொழுது அரிய வரங்களைப் பெறுவான். அதன் பயனுக இந்திரனேடு போர்புரிந்து முடிவில் அவனைக் கொணர்ந்து இலங்கையில் சிறைபிடித்து வைக்கும் பெருமையைப் பெறுகிறுன். பிரம்மதேவர் நேரில் வந்து வருந்திக் கேட்டுக்கொண்ட பிறகு அவனை விடுதலை செய்கிறுன். அதனுல் அவனுக்கு இந்திரஜித் என்ற பெயர் வாய்க்கிறது. ஆகவே தன்னைச் சேர்ந்தவர்களின் பெருமையினுலும் ராவணனது சக்தி பின்னும் அதிகமாகிறது. அதிகாயன் என்ற அவனது மற்ரெரு பிள்ளையும் மிக்க பராக்கிரமம் வாய்ந்தவன்.

மிகவும் சீரான முறையில் நிர்வாகம் செய்யாவிட்டால் ராஜ்யம் இவ்வளவு சீரும் சிறப்பும் அடைவது என்பது சாத்திய மல்ல. ராவணன் பராக்கிரமம் மிகுந்தவன் என்பது மட்டுமின்றி ராஜ்ய பரிபாலனத்திலும் தேர்ந்திருக்க வேண்டும் அல்லவா? ஊரின் ஒழுங்கையும் அங்குள்ள கல்விகேள்விகளின் பெருமையையும் சிறப்பையும், ராவணனுடைய ஆணைகள் அப்படியே நடைபெறும் விதத்தையும், அவன் மந்திராலோசனை செய்யும் திறமையையும் பற்றிக் கவி வர்ணிப்பதை நோக்கும்பொழுது, கேவலம் முரட்டுப் பலம் மட்டும் அல்ல, ராஜ்ய தந்திரமும், மனிதர்களை அடக்கி யாளும் திறமையும் மிகுந்தவன் ராவணன் என்று தெரிகிறது அல்லவா? பராக்கிரமத்திலும் யுத்தலாகவத்திலும் ராமருக்கு அடுத்தபடியானவன் என்றே கவி அவனை வர்ணிக்கிறார். இரண்டு முறை அவனுடைய சக்தி ஆயுதத்தினால் அடிபட்டு லக்ஷ்மணன் உயிரிழக்கும் நிலையில் இருந்து, ஔஷதிகளின் உதவியினால் பிழைத் தெழுகிறான். ஆகவே ராமருக்கு அடுத்தபடியான பராக்கிரம முள்ளவன் என்று ராவணனைக் கூறுவது பொருத்தமேயாம். எப்பொழுதாவது சுக்கிரீவனும் அனுமாரும் அவன் முன் போர் புரியத் தகுந்தவர்கள் என்று இருந்தும், அவனைக் கொல்வதற்கோ தோல்வியுறச் செய்வதற்கோ அவர்கள் வல்லவர்களல்ல. ராமர் ஒருவர்தாம் ராவணனைக் கொல்ல முடியும்; அதுவும் அவரால் எளிதில் கொல்வது என்பது சாத்தியமற்ற காரியம்.

ராவணனுடைய ரதத்தைச் சாரதி பின்னுக்கு நகர்த்தி ஓட்டிய சமயத்தில், அகஸ்தியர் வந்து, ராமருக்கு ஆதித்யஹ்ருதயம் என்ற மந்திரத்தை உபதேசிக்கிறார். அதன் உதவியினால்தான் ராமர் ராவணனைக் கொல்ல முடிந்தது என்று கூறப்படுகிறது. இரண்டு பேரும் களைத்துப் போயிருந்த சமயம். இந்திரன் தன் ரதத்தையும் சாரதி மாதலியையும் ராமருக்கு அனுப்பி வைக் கிறான். சிறந்த வில்லும் அம்புகளும் கவசமும் அளிக்கிறான். இதிலிருந்து ராவணன் ராமருக்கு முற்றும் நிகரானவன்; பகவான் ராமராக அவதரித்துப் போர் புரிந்ததனால்தான் தோல்வியுற்று மடிந்தான் என்று சொல்ல வேண்டும்.

ராவணனுடைய பெருமையைப்பற்றித் தாமே கூறுவதுடன் மற்றவர்கள் வாயிலாகவும் கவி எவ்விதம் வர்ணிக்கிறார் என்பதைப் பார்ப்போம். பால காண்டத்தில், ராவணன் செய்யும் அக்கிரமங்களைப் பற்றித் தேவர்கள் மகாவிஷ்ணுவிடம் சென்று முறையிடுகிறார்கள்:—

उद्वेजयति लोकांस्त्रीनुच्छ्रितान् द्वेष्टि दुर्मतिः ।

शक्रं त्रिदशराजानं प्रधर्षयितुमिच्छति ॥

ऋषीन् यक्षान् सगन्धर्वानसुरान् ब्राह्मणांस्तथा ।
अतिक्रामति दुर्धर्षो वरदानेन मोहितः ॥
नैनं सूर्यः प्रतपति पार्श्वे वाति न मारुतः ।
चलोर्मिमाली तं दृष्ट्वा समुद्रोऽपि न कम्पते ॥
तत्र त्वं मानुषो भूत्वा प्रवृद्धं लोककण्टकम् ।
अवध्यं दैवतैर्विष्णो समरे जहि रावणम् ॥ I.15. 8-10; 20, 21.

"அடிக்கடி இந்திரனையே மண்டையில் அடித்து வீழ்த்த வேண்டுமென்ற பேராசை அவனுக்கு மிகவும் பெரிதாக வளர்ந்து விட்டது. மூன்று உலகங்களையும் அவன் எதிர்க்கிறான். யாராவது சிறிது மேற்பதவிக்கு வந்துவிட்டால் உடனே பொறாமையுற்று அவனை அழித்துவிட முற்படுகிறான். தேவதைகள் அளித்த வரங்களினால் மதத்தையடைந்து எல்லோரையும் துன்புறுத்துகிறான். ஜகத்தை நியதியுடன் பரிபாலிக்கும் தேவர்களே அவனைக் கண்டு பயப்படுகிறார்கள். சூரியன் வெப்பத்தைக் காட்டத் துணிவதில்லை. வாயு பகவானும் மிகவும் மிருதுவாகச் சஞ்சரிக்கிறார். ராவணன் அருகில் இருந்தால் சமுத்திரம் அலையடங்கிச் செல்லுகிறது. தாங்கள் உலகில் மனிதனாக அவதரிக்க வேண்டும். தேவதையாகச் சென்று அவனோடு போர்புரிய முடியாது. மனித சரீரத்தைத் தாங்கிச் சென்று அவனைக் கொல்ல வேண்டும் என்று வேண்டிக்கொள்ளுகிறோம். அவன் மிகவும் மிஞ்சிப் போய் விட்டான். அவனை யாருக்கும் அடக்கச் சக்தியில்லை. அவன் செய்யும் அக்கிரமங்களும் கொடுமையும் சொல்லத் தரமல்ல" என்கிறார்கள்.

சீதையினிடம் ஒரு சந்நியாசி போல் வேஷம் தரித்து ராவணன் வருகிறான். அந்த வேஷத்திலும் அவனுடைய அமானுஷ்யமான பராக்கிரமம் வெளியாகிறது போலும். இயற்கைக்கு அவன் யார் என்று தெரிந்துவிடுகிறது. அவன் வரும்பொழுது என்ன நடக்கிறது, பாருங்கள்:—

तमुग्रतेजःकर्माणं जनस्थानरुहा द्रुमाः ।
समीक्ष्य न प्रकम्पन्ते न प्रवाति च मारुतः ॥
शीघ्रस्रोताश्च तं दृष्ट्वा वीक्षन्तं रक्तलोचनम् ।
स्तिमितं गन्तुमारेभे भयाद्गोदावरी नदी ॥ III. 46. 6-8.

"அங்குள்ள மரங்கள் யாவும் நடுங்குகின்றன; அவை அசையவில்லை. வேகமாகச் செல்லும் கோதாவரி நதியும் அவனைக் கண்டு பயந்து தன் வேகத்தை அடக்கி மெதுவாகச் செல்லுகிறது" என்கிறார் கவி. இவ்விதம் யாரைப்பற்றித்தான் கூற முடியும்? இயற்கைத் தேவதைகள் எல்லாம் அவனைக் கண்டு நடுங்குகின்றன.

'மஹாநாடகம்' என்ற நாடகத்தில், இயற்கையே ராவணனைக் கண்டு பயந்தது ரஸமாக வர்ணிக்கப் பெறுகிறது. சீதையை அப்பொழுதுதான் ராவணன் காண்கிறான். கண்டதும் உடனே மோகம் அவன் தலைக்கேறிவிடுகிறது. அரண்மனைக்குத் திரும்பி வந்து நேரே படுக்கைக்குச் சென்று தன் நிலை கொள்ளாமல் படுத்துப் புரளுகிறான். நித்திய காரியங்களைக் கவனிக்க முடியவில்லை. காலையில் பிரம்மதேவர் உட்பட எல்லாத் தேவர்களும் அவனுக்கு வந்தனம் செய்ய வருகிறார்கள். வாயிற்காப்போன் யஜமானனுடைய நிலைமையை அறிந்து, அவர்களைத் தங்கள் வழிபாடுகளைச் செலுத்தாமல் திரும்பிப் போகச் சொல்லுகிறான். பின்வருமாறு அவன் சர்வசகஜமாகக் கூறுகிறான் :—

ब्रह्मन्नध्ययनस्य नैष समयस्तूष्णीं बहिः स्थीयतां
स्वल्पं जल्प बृहस्पते जडमते नैषा सभा वज्रिणः ।
वीणां संहर नारद स्तुतिमुखालापैरलं तुम्बुरो
सीतायल्लकभल्लभग्नहृदयः स्वस्थो न लङ्केश्वरः ॥

—மஹாநாடகம்

''வேதாத்தியயனம் செய்ய இது சமயமல்ல; பேசாதிருங்கள், பிருகஸ்பதியே! பேச்சுவன்மையுள்ள நீர் கொஞ்சம் குறைவாகப் பேச வேண்டும். இது இந்திர சபையல்ல. நாரதரே, வீணையை மீட்ட வேண்டாம் ; அதை உறையில் போட்டு மூடும் ! ராவணர் வழக்கம் போல இல்லை. தொந்தரவு செய்யலாகாது. சீதையின் வகிடாகிய நூதனமான அம்பு ஒன்று அவர் மீது பாய்ந்துவிட்டது. அவளைப் பார்த்ததிலிருந்து அவர் தம் நிலையிழந்து தவிக்கிறார்'' என்கிறான். அத்தகைய ராவணனைக் கொல்லுவதற்குத்தான் விஷ்ணு பூலோகத்தில் மனிதனாக அவதரிக்கும்படியாகிறது.

ராவணனைப் போன்ற வீரர்கள் - அவனை உள்ளபடி அறியும் சக்தி வாய்ந்தவர்கள் - என்ன நினைத்தார்கள் என்பதை இப்போது பார்ப்போம். முதல்முதலில் அவனைச் சபையில் வீற்றிருக்கும் பொழுது கண்ட அனுமார் அவனுடைய தோற்றத்தைக் கண்டு வியந்ததைக் கவி கூறுவதைப் பார்ப்போம்:—

अहो रूपमहो धैर्यमहो सत्त्वमहो द्युतिः ।
अहो राक्षसराजस्य सर्वलक्षणयुक्तता ॥
यद्यधर्मो न बलवान् स्यादयं राक्षसेश्वरः ।
स्यादयं सुरलोकस्य सशक्रस्यापि रक्षिता ॥
अस्य क्रूरैर्नृशंसैश्च कर्मभिर्लोककुत्सितैः ।
तेन बिभ्यति खल्वस्माल्लोकाः सामरदानवाः ॥

अयं ह्युत्सहते क्रुद्धः कर्तुमेकार्णवं जगत् ।
इति चिन्तां बहुविधामकरोन्मतिमान् कपिः ॥
दृष्ट्वा राक्षसराजस्य प्रभावममितौजसः ॥ V. 49. 17-20.

இந்த ராக்ஷஸராஜனிடத்தில் எல்லா மேன்மைகளும் குடி கொண்டிருக்கின்றன. இவனைப் போன்ற பெருமையுள்ளவன் ஸ்வர்க்கத்திற்குக்கூட அரசனாக இருக்கலாம். இந்திராதி தேவதைகளும் இவன் காலடியில் பணிந்து கிடப்பார்கள். தன் முழுப் பெருமையையும் இவன் அடைய முடியாதபடி இவ்வளவு சிறப்பினின்றும் இவனைக் கொஞ்சம் குறைத்திருப்பது இவனது அதர்மமே! தன் சக்தியை நற்காரியங்களுக்கு இவன் பயன்படுத்தவில்லை. இவன் புலனடக்கமில்லாதவன்; அடாத செயல்களையெல்லாம் செய்கிறான். அதர்மம் இவ்விதம் தலைதூக்கி நிற்காவிட்டால், பூமி ஸ்வர்க்கம் ஆகிய இரண்டையும் இவனே ஆளக்கூடியவனாவான். தன் துஷ்கிருத்தியங்களினால் எல்லோரையும் விரோதியாக்கிக் கொண்டிருக்கிறான். நல்லவர் அனைவரும் இவனுக்கு எதிரிகளாகி விட்டார்கள்'' என்கிறார்.

பிறரிடமுள்ள உயர்வை அறியும் சக்தி வாய்ந்த அனுமாரின் மனத்தில், ராவணனை முதல்முதலில் கண்டதும் மேற்கூறிய எண்ணங்கள் தோன்றுகின்றன. அனுமாரைப் பார்த்ததும் ராவணனுக்கு என்ன தோன்றிற்று என்பதை அறிய ரஸமாக இருக்கும். இலங்கையை அழித்து நாசமாக்கியதுடன், அநேக ராக்ஷஸர்களையும் மகன் அக்ஷகுமாரனையும் அவர் கொன்ற செய்தி ராவணனுக்கு எட்டுகிறது. ஆகவே அனுமாருடைய பெருமை பார்த்தவுடனேயே அவனுக்குப் புலனாகிறது. 'ஒரு சமயம் கைலாசத்திற்குச் சென்றிருந்தபொழுது நந்தியைப் பார்த்துப் பரிகாசமாகச் சிரித்தேனே; அந்த நந்திதான் இப்பொழுது அனுமாரின் உருவத்தில் வந்திருக்கிறதோ! அல்லது ஒருவேளை பாணாசுரன்தான் இந்தத் தோற்றத்தில் வந்திருப்பானோ?' என்று யோசிக்கிறான். முதல்முதலில் சந்தித்தபொழுது அவ்விருவரும் இவ்விதம்தான் ஒருவரைப்பற்றி மற்றவர் நினைத்துக்கொள்ளுகிறார்கள்.

ராவணன் தன் பெரும் சேனையுடன், வானர சைனியத்துடன் கூடிய ராமரை எதிர்க்க வந்தபொழுது விபீஷணன் ஒவ்வொருவரையும் ராமருக்கு அறிமுகப்படுத்துகிறான். ராவணனைப்பற்றிக் கூறும்பொழுது அவன் விவரிக்கிறான்:—

यत्रैतदिन्दुप्रतिमं विभाति छत्रं सितं सूक्ष्मशलाकमग्र्यम् ।
अत्रैष रक्षोऽधिपतिर्महात्मा भूतैर्वृतो रुद्र इवावभाति ॥
असौ किरीटी चलकुण्डलास्यो नगेन्द्रविन्ध्योपमभीमकायः ।
महेन्द्रवैवस्वतदर्पहन्ता रक्षोऽधिपः सूर्य इवावभाति ॥ VI. 59. 24, 25.

இதில் ஒரு விஷயத்தை நாம் கவனிக்க வேண்டும்: 'வெறுப்புக்கும் நகைப்புக்கும் இடமில்லாமல் ராவணனை உண்மையில் மிகவும் உயர்ந்தவனாகவே நாம் நினைக்க வேண்டும்' என்று கவி விரும்புகிறார். அவர் கூறும் சிறந்த உவமைகளினின்றும் இது வெளியாகிறது. ருத்திரன், சூரியன் முதலியவர்களுடன் அவர் ராவணனை ஒப்பிட்டுக் கூறுகிறார். விபீஷணன் ராவணனைக் காட்டி அவனது பிரபாவத்தை எடுத்துக் கூறியபொழுது, தம் எதிரி எப்படிப்பட்டவன் என்பதை ராமர் ஒரே பார்வையில் அறிந்துகொள்ளுகிறார். அவருக்கு எப்படித் தோன்றியது என்று பார்ப்போம்:—

अहो दीप्तो महातेजा रावणो राक्षसेश्वरः ॥
आदित्य इव दुष्प्रेक्षो रश्मिभिर्भाति रावणः ।
सुव्यक्तं लक्षये ह्यस्य रूपं तेजस्समावृतम् ॥
देवदानववीराणां वपुर्नैवंविधं भवेत् ।
यादृशं राक्षसेन्द्रस्य वपुरेतत् प्रकाशते ॥ VI. 59. 26-28.

"சூரியனைப் பார்க்கக் கண் கூசுவது போல் அல்லவா இவனைப் பார்ப்பதற்கும் கண்கள் கூசுகின்றன! இந்தப் பிரகாசத்தில் என் பார்வை மங்கிவிட்டது. ஒரே ஒளிமயமாக அல்லவோ தோன்றுகிறது! இத்தகைய ஒளி தேவர்களிடங்கூட இராது என்று நினைக்கிறேன்." ராமரையும் அனுமாரையும் போன்றவர்களே இவ்விதம் மலைத்தார்கள் என்றால், சாதாரண மனிதர்களாகிய நாம் ராவணனை எவ்வாறு சரியாக மதிப்பிடுவது? ராவணவதம் முடிந்த பிறகு விபீஷணன் பின்வருமாறு பிரலாபிக்கிறான்:—

योऽयं विमर्देषु न भग्नपूर्वः सुरैः समेतैः सह वासवेन ।
भवन्तमासाद्य रणे विभग्नो वेलामिवासाद्य यथा समुद्रः ॥
अनेन दत्तानि सुपूजितानि भुक्ताश्च भोगा निभृताश्च भृत्याः ।
धनानि मित्रेषु समर्पितानि वैराण्यमित्रेषु च यापितानि ॥
एषोहिताग्निश्च महातपाश्च वेदान्तगः कर्मसु चाग्र्यवीर्यः ।
एतस्य यत् प्रेतगतस्य कृत्यं तत् कर्तुमिच्छामि तव प्रसादात् ॥
VI. 112. 22-24.

"உயிருடன் இருந்தபொழுது இவனுக்கு இணையாக யாருமே இருந்ததில்லை. அப்படிப்பட்டவன் இதோ மாண்டு கிடக்கிறான். எங்கே சென்று யாருடன் போர்புரிந்தாலும் அவர்களைக் கொன்று வெற்றியடைந்தான். உருண்டு புரண்டு வரும் கடலலைகள் கரையை அணுகியதும் அடங்கிவிடுவது போல் தன்னை எதிர்த்துப் போர்புரிந்ததும் அடங்கிவிட்டான். தன் வாழ்நாளில் எவ்வளவோ உயர்ந்த காரியங்களை இவன் செய்திருக்கிறான். தன்னிடம் யாசித்தவர்களுக்கு இரண்டு கைகளாலும் வாரிவாரி வழங்கியிருக்கிறான்.

மிகவும் உதார மனமுடையவன். இவன் கண்டு அநுபவிக்காதது இல்லே. தனக்குப் பணிபுரிந்தவர் அனைவரையும் சம்ரக்ஷித்திருக்கிறுன். நல்ல யஜமானன். திரட்டிய செல்வத்தைப் பெரிய மனத்துடன் நண்பர்களுக்குப் பகிர்ந்து அளித்தான். தன் சக்தியைப் பகைவர்களை அழிப்பதில் செலவிட்டான். சிறந்த நண்பன்'' என்றெல்லாம் புகழ்ந்து கூறுகிறுன். தர்மாத்மாவான விபீஷணனே 'தர்மகாரியங்களைச் செய்தவன்' என்று தன் சகோதரனைப்பற்றிக் கூற வேண்டுமென்ருல் அவன் எவ்வளவு புனிதமானவனுக இருந்திருக்க வேண்டும்!

''வேதாந்தத்தை நன்கு அறிந்தவன். சாஸ்திரோக்தமான காரியங்களைச் செய்வதில் இவனுக்கு நிகர் யாருமில்லை. சர்வ தர்மங்களையும் அறிந்த என் சகோதரன் இப்பொழுது உயிர்துறந்து விட்டான். இவனுடைய அந்திமக்கிரியைகளைச் செய்ய விரும்புகிறேன். அநுமதி கொடுக்க வேண்டும்'' என்று விபீஷணன் கேட்டுக் கொள்கிருன். உடனே வேறு யோசனை தோன்றிவிடுகிறது. ராமர் ராவணனைப்பற்றி உயர்வாகப் பேசி, அவனுக்குச் செய்ய வேண்டிய அந்திமக்கடன்களை அசட்டை செய்யலாகாது என்று விபீஷணனுக்குச் சொல்லுகிருர்:—

अधर्मानृतसंयुक्तः कामं त्वेष निशाचरः ॥
तेजस्वी बलवाञ्छूरः संयुगेषु च नित्यशः ।
शतक्रतुमुखैर्देवैः श्रूयते न पराजितः ॥ VI. 114. 99, 100.

''இவ்வளவு நல்ல காரியங்களைச் செய்தவன் என்பது எனக்குத் தெரியாது. ஆயினும் இவனைப்பற்றி நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன். தேவர்களோடு யுத்தம் புரிந்தும் வெற்றியைத் தவிரத் தோல்வியை ஒருபோதும் கண்டவனல்லன்.''

சம்ஸ்கிருதத்திலுள்ள இந்தப் பகுதி மிகவும் ரஸமானது. ராமருக்கும் ராவணனுக்கும் நடந்த கடைசி யுத்தத்தைப்பற்றிய வர்ணனை அது; படித்துப் பார்க்கத் தகுந்தது. அதை மொழி பெயர்க்க விரும்பாமல் சம்ஸ்கிருத சுலோகங்களை அப்படியே படிக்கிறேன். இரண்டொரு வார்த்தைகளுக்கு மட்டும் விளக்கம் கூறி நிறுத்திக்கொள்ளுகிறேன். ராமருக்கும் ராவணனுக்கும் நடந்த போர்தான் ராமாயணத்தின் உச்சகட்டமாகும். இருவரும் பராக்கிரமத்தில் சமமானவர். இருவரும் யுத்த தந்திரங்களில் கைதேர்ந்தவர்கள் என்னும்படி கவி வர்ணிக்கிருர்:—

गदानां मुसलानां च परिघाणां च निस्स्वनैः ।
शराणां पुङ्खपातैश्च क्षुभिताः सप्त सागराः ॥
क्षुब्धानां सागराणां च पातालतलवासिनः ।
व्यथिताः पन्नगाः सर्वे दानवाश्च सहस्रशः ॥

चकम्पे मेदिनी कृत्स्ना सशैलवनकानना ।
भास्करो निष्प्रभश्चासीन्न ववौ चापि मारुतः ॥
ततो देवाः सगन्धर्वाः सिद्धाश्च परमर्षयः ।
चिन्तामापेदिरे सर्वे सकिन्नरमहोरगाः ॥
स्वस्ति गोब्राह्मणेभ्योऽस्तु लोकास्तिष्ठन्तु शाश्वताः ।
जयतां राघवः संख्ये रावणं राक्षसेश्वरम् ॥
एवं जपन्तोऽपश्यंस्ते देवाः सर्षिगणास्तदा ।
रामरावणयोर्युद्धं सुघोरं रोमहर्षणम् ॥
गन्धर्वाप्सरसां सङ्घा दृष्ट्वा युद्धमनूपमम् ।
गगनं गगनाकारं सागरः सागरोपमः ॥
रामरावणयोर्युद्धं रामरावणयोरिव ।
एवं ब्रुवन्तो ददृशुस्तद्युद्धं रामरावणम् ॥
ततः क्रुद्धो महाबाहू रघूणां कीर्तिवर्धनः ।
सन्धाय धनुषा रामः क्षुरमाशीविषोपमम् ॥
रावणस्य शिरोऽच्छिन्दच्छ्रीमज्ज्वलितकुण्डलम् ।
तच्छिरः पतितं भूमौ दृष्टं लोकैस्त्रिभिस्तदा ॥
तस्यैव सदृशं चान्यद्रावणस्योत्थितं शिरः ।
तत् क्षिप्रं क्षिप्रहस्तेन रामेण क्षिप्रकारिणा ॥
द्वितीयं रावणशिरश्छिन्नं संयति सायकैः ।
छिन्नमात्रं तु तच्छीर्षं पुनरन्यत् स्म दृश्यते ॥
तदप्यशनिसङ्काशैश्छिन्नं रामेण सायकैः ।
एवमेकशतं छिन्नं शिरसां तुल्यवर्चसाम् ॥
न चैव रावणस्यान्तो दृश्यते जीवितक्षये ।
ततः सर्वास्त्रविद्वीरः कौसल्यानन्दवर्धनः ॥
मार्गणैर्बहुभिर्युक्तश्चिन्तयामास राघवः । VI. 110. 17-31.

ஏழு சமுத்திரங்களும் கலங்கிப் போகும்படி அவ்வளவு பயங்கரமான யுத்தம் அது. பூமி பாதாளம் ஆகிய இரண்டும் நடுங்குகின்றன. மேகங்களுக்கிடையே சூரியன் மறைப்புண்டிருக்கிறான். ராமருக்குச் சமமான பராக்கிரமமுள்ள ராவணன் தோல்வியடைய மாட்டான் என்று தோன்றியதும் எல்லோருக்கும் கவலை எழுகிறது. ''ராமனுக்குச் சமம் ராவணன். ராவணனுக்குச் சமம் ராமன். மூன்றாவதாக யாரையும் கூற முடியாது. ராமன் வெற்றியடையட்டும். ராவணன் தோல்வியுறட்டும்'' என்று அவர்கள் பிரார்த்திக்கின்றனர். அப்பொழுது ராமருக்கு ஒரு சிறந்த அஸ்திரம் நினைவுக்கு வந்து அதை ராவணன்மேல் விடுகிறார். அது அவன் பத்துத் தலைகளில் ஒன்றை அறுத்து வீழ்த்துகிறது. யக்ஷர்

கந்தர்வர் கின்னரர் யாவரும் விண்ணுலகில் நின்று, அந்தத் தலை கீழே விழுவதைப் பார்த்ததாகக் கவி கூறுகிறார். விழுந்த தலை இருந்த இடத்தில் மற்றொரு தலை தோன்றுகிறது. இரண்டு மூன்று அம்புகளை எய்து அந்தத் தலையை வீழ்த்தியும் உடனே புதிய தலையொன்று முளைத்தெழுகிறது. இவ்விதம் நூறு முறை வெட்டி வீழ்த்தியும் வற்றாமல் தலை மீண்டும் கிளம்பி ராவணனைக் கொல்வது சாத்தியமல்ல என்று தோன்றுகிறது.

मारीचो निहतो यैस्तु खरो यैस्तु सदूषणः ॥
क्रौञ्चारण्ये विराधस्तु कबन्धो दण्डकावने ।
यैः साला गिरयो भग्ना वाली च क्षुभितोऽम्बुधिः ॥
त इमे सायकाः सर्वे युद्धे प्रात्ययिका मम ।
किन्नु तत् कारणं येन रावणे मन्दतेजसः ॥ VI. 110. 31-33.

''மாரீசன், கரன், தூஷணன் ஆகியவர்களைக் கொன்றவை; கிரௌஞ்ச வனத்தில் விராதன், தண்டகையில் கபந்தன், வாலி ஆகியவரையும் கொன்று வீழ்த்தியவை; ஏழு ஸால மரங்களை ஊடுருவிச் சென்றவை; கடலையே கலங்கச் செய்தவை இந்த அம்புகள்; அப்படிப்பட்டவை ராவணனை அணுகிச் சக்தியற்றவை யாகிவிட்டனவே! இவற்றின் கூர்மை மழுங்கிவிட்டதே!'' என்று ராமர் சிந்தனையில் ஆழ்கிறார். பாணங்களை வர்ஷிக்கிறார் ராமர். ராவணனும் சளைக்கவில்லை. இராப்பகலாக ஏழு நாள் தொடர்ந்து யுத்தம் புரிகிறார்கள். ராவணனைத் தோற்கடிக்க முடியாமல் ராமர் சிரமப்படுவதை அறிந்து, இந்திரனது சாரதியான மாதலி ராமர் காதில், ''பிரம்மாஸ்திரத்தைப் போடுங்கள்'' என்று மெது வாகக் கூறுகிறான். யுத்தத்தில் தீவிரமாக ஈடுபட்டிருந்த ராமருக்கு அப்பொழுது என்ன செய்ய வேண்டும் என்பதை யோசிக்க அவகாச மில்லை. மாதலிக்கு அது நினைவு வரவே ராமருக்கு நினைவூட்டு கிறான். பிரம்மாஸ்திரத்தைப் போட்டதும் லோககண்டகனான ராவணன் கொல்லப்பட்டு விழுகிறான்.

இத்துடன் ராவணனுடைய பெருமையும் சக்தியும் அவன் பராக்கிரமமும் ஓங்கி வளர்ந்த பகுதி முடிவடைகிறது. அவனைச் சேர்ந்தவர்கள் வஞ்சனையின்றி அவனிடம் செலுத்திய விசுவா சத்தை அவன் எப்படிப் பெற்றான் என்பதை இனிக் கூற விரும்பு கிறேன். அதற்கு அரும்பெரும் குணங்கள் தேவை. தன்னிடம் வேலை செய்பவர்கள் செய்யும் உதவியின் திறமையை மெச்ச வேண்டுமானால் யஜமானனுடைய சொற்களில் தாராள மனப் பான்மை இருக்க வேண்டும். புகழ்ச்சியில் சிக்கனத்தைக் கடைப் பிடித்தால் அவர்கள் உள்ள நிறைவுடன் வேலை செய்ய மாட்டார்கள். ராவணன் இத்தகைய கலைகளிலெல்லாம் தேர்ந்

தவன். கும்பகர்ணனை ஆழ்ந்த பெரிய தூக்கத்தினின்றும் பிரயாசைப்பட்டுக் கிளப்பியதும், ராமரை எதிர்க்காமல் பணிந்து போகும்படித்தான் அவன் முதலில் ராவணனிடம் கூறுகிறான். அதைக் கேட்டு ராவணன் கோபம் கொண்டதும், "நீங்கள் நரகத்துக்குப் போக விரும்பினால் நான் எப்படித் தடுக்க முடியும்? ஆனால் உங்கள் தரப்பில்தான் போர்புரிவேன். நீங்கள் செய்திருப்பதை நான் ஒப்புக்கொள்ளாமற் போனாலும் அதற்காக நான் உங்களை விட்டுச் செல்ல மாட்டேன். என் பலம், சக்தி, சாமர்த்தியம் எல்லாவற்றையும் உங்களுக்கே பயன்படுத்துவேன்" என்கிறான் கும்பகர்ணன். அதைக் கேட்டதும் ராவணன் சந்தோஷமடைந்து, அவன் தன் முழுச் சக்தியையும் உபயோகப்படுத்த வேண்டும் என்று கருதித் தன் கழுத்திலிருந்த ஹாரத்தைக் கழற்றி அவன் கழுத்தில் இடுகிறான்.

अथासनात् समुत्पत्य स्रजं मणिकृतान्तराम् ॥
आबबन्ध महातेजाः कुम्भकर्णस्य रावणः ।
अङ्गदान्यङ्गुलीवेष्टान् वराण्याभरणानि च ॥
हारं च शशिसङ्काशमाबबन्ध महात्मनः ।
दिव्यानि च सुगन्धीनि माल्यदामानि रावणः ॥
श्रोत्रे चासञ्जयामास श्रीमती चास्य कुण्डले ।
काञ्चनाङ्गदकेयूरनिष्काभरणभूषितः ॥
कुम्भकर्णो बृहत्कर्णः सुहुतोऽग्निरिवाबभौ ।
सर्वाभरणनद्धाङ्गः शूलपाणिः स राक्षसः ॥
त्रिविक्रमकृतोत्साहो नारायण इवाबभौ ॥ VI. 65. 25-29, 31.

யுத்தகளத்தில் சேனைத்தலைவனது கைகளினால் மாலையிட்டுக் கௌரவிக்கப் பெற்றவர்கள்தாம் அந்தப் பெருமையின் அருமையை அறிவார்கள். ராவணனால் கௌரவிக்கப்பெற்ற கும்பகர்ணனும் நெய் விட்டு ஆஹுதி செய்யப்பெற்ற அக்கினி போல ஜ்வலிக்கிறான். ஸ்ரீமந்நாராயணனுடன் கும்பகர்ணனை ஒப்பிட்டுக் கூறுகிறார் கவி. மிகவும் பயங்கரமானவர்களாக இந்த ராக்ஷஸர்களைக் கவி வர்ணிப்பதில்லை. தங்கள் சக்தியைத் தவறான வழியில் உபயோகித்தவர்கள் என்றுதான் அவர்களைக் கருத வேண்டும். கடும் போருக்குப் பின் கும்பகர்ணன் ராமரால் கொல்லப்படுகிறான். இன்னும் எவ்வளவோ பேர் மடிகிறார்கள். இந்திரஜித்தும் மாள்கிறான்.

எல்லோரையும் இழந்து நின்ற ராவணனது கடைசி நிலைமைக்கு வருவோம். அனைவரையும் பறிகொடுத்தும் ராவணன் தைரியமிழக்கவில்லை. தானே யுத்தத்துக்குச் செல்கிறான். அது

தான் அவனுடைய அபூர்வமான இயல்பு என்று கூற வேண்டும். ஒவ்வொருவராகச் சேனைத் தலைவர்கள் மடிந்து போயும் மனம் தளராமல் அவன் எதிர்த்து நிற்கிறான். கும்பகர்ணன் இந்திரஜித் முதலியோர் உயிரிழக்கின்றனர். தங்கள் கதியும் அதுவே என்று தெரிந்தும் மற்றவர்கள் சந்தோஷமாகச் சண்டையிடுகின்றனர். யுத்தவெறி அத்தகையது. ராவணன் திரும்பியதும் அவன் பார்வை மகோதரன் மீது விழுகிறது. "தோழனே! இந்தக் கடும் போரில் என் நம்பிக்கையெல்லாம் உன்னிடம்தான் இருக்கிறது. நீதான் வெற்றியைக் கொண்டு வர வேண்டும். உன் புஜபலத்தினால் எதிரியைத் தாக்கி வீழ்த்துவாய் என்று நம்புகிறேன். என்னிடம் உனக்கு உள்ள நன்றி விசுவாசத்தை நீ காட்ட வேண்டிய காலம் இது. சீர்கேடு அடைந்திருக்கும் இலங்கையைக் காப்பாற்று" என்கிறான். இத்தகைய கஷ்ட நிலைமையிலும் எவ்வாறு மதி கலங்காமல் ராவணன் உற்சாகப் படுத்திப் பேசுகிறான் என்பதைக் காட்டவே இந்தச் சுலோகங்களை மொழிபெயர்த்துக் கூறினேன். அந்தச் சொற்களைக் கேட்டதும் வெற்றியடையும் பொறுப்பு தன்னுடையதே என்று மகோதரன் கருதுகிறான். சுக்கிரீவனோடு போர் புரிந்து சீக்கிரத்திலேயே மகோதரன் மரணமடைகிறான். ஆனால் உயிரை இழந்தும் மகோதரனது நெஞ்சம் ராவணனிடமுள்ள விசுவாசத்தை இழக்கவில்லை. ராவணனைச் சேர்ந்தவர்கள் இப்படி எந்தச் சமயத்திலும் எத்தகைய இக்கட்டான நிலையிலும் அவனுக்காகச் சண்டையிட்டு மகிழ்ச்சியுடன் உயிர்துறக்கத் தயாராக இருந்தது ராவணனுடைய சக்தியையும் அவனது பெரும் குணத்தையுமே காட்டுகிறது அல்லவா? அவன் உண்மையில் பெரியவன் என்பதில் சந்தேகம் என்ன?

ராவணன் மாரீசன் விஷயத்தில் தன் சாமர்த்தியத்தை எப்படி உபயோகித்தான் என்பதைப் பார்ப்போம். அவன் கூறியதற்கு இசையாமல் மாரீசன் வெகு தூரம் ஆக்ஷேபிக்கிறான். இருவரும் வெகு நேரம் பலமாக வாக்குவாதம் செய்கின்றனர். ஆனால் ராவணன் தன் நோக்கத்தை விடவில்லை. மாரீசன் எவ்வளவோ சாமர்த்தியமாக எடுத்துரைத்தும் ராவணன் அசைந்து கொடுக்கவில்லை. கடைசியாக ராவணனே மாரீசனது மனத்தை மாற்றித் தன் விருப்பத்தைச் செய்யும்படிச் செய்துவிடுகிறான். எவ்வளவோ துஷ்கிருத்தியங்களுக்குப் பிறகு மாரீசன் ஒரு துறவியாகித் தவம் செய்யும் முனிவனாக ஆகிறான். ராவணன் வெறி கொண்டவனாக மாரீசனிடம் சென்று சொல்லுகிறான்:—

आर्तोऽस्मि मम चार्तस्य भवान् हि परमा गतिः ॥ III. 36. 1.

''நான் மிகவும் கஷ்ட நிலையில் இருக்கிறேன். இப்பொழுது உன்னைத் தவிர வேறு யாரை நாடுவேன்? நீதான் எனக்குக் கதி'' என்று கூறுகிறான். அதற்கு மாரீசன், ''உன் செல்வத்தைக் கண்டு பொறாமை கொண்டிருப்பவர் யாரோ உன் அருகில் இருக்கிறார்கள். அவர்களை நீ நம்புகிறாய். ஆனால் அவர்களோ உன் நாசத்திற்கு வழி தேடுகிறவர்களாக இருக்கிறார்கள். அவர்களின் வார்த்தையைத் தள்ளிவிட்டு நான் சொல்வதைக் கேள்'' என்று உபதேசிக்கிறான்.

सुलभाः पुरुषा राजन् सततं प्रियवादिनः ।
अप्रियस्य च पथ्यस्य वक्ता श्रोता च दुर्लभः ॥ III. 37. 2.

''அரசர்கள் துர்ப்பாக்கியசாலிகள். மந்திரிகளையும் பிரதானிகளையும் அவர்கள் நன்கு சம்ரக்ஷிக்கிறார்கள். ஆனால் கஷ்டம் வந்து சரியான ஆலோசனை வேண்டும்பொழுது, இவர்கள் யஜமானனுக்கு நன்மையைச் செய்யக் கூடியதைத் தைரியமாக எடுத்துக் கூறாமல், அவனுக்குத் திருப்தியானவற்றையே கூறுகிறார்கள்; மனப்பூர்வமான யோசனை கூறுவதில்லை. கேட்கத் திருப்தியாகப் பேசக் கூடியவர்கள் ஆயிரக்கணக்கில் இருக்கிறார்கள். அப்ரியமாக இருந்தும் நல்லதைக் கூறுகிறவன் பெரிதும் அரியவன். அப்படி யாராவது கூறினாலும் அதைக் கேட்பவன் இன்னும் அரியவனே'' என்கிறான்.

பிறகு மாரீசன் தன் அநுபவத்தைக் கூறுகிறான். ''பதினைந்து வயதுள்ள சிறுவனாக இருந்தபொழுதே ராமனுடைய புஜபராக்கிரமத்தை நான் அறிவேன். ராமனுக்கு யுத்தப்பயிற்சி அளித்து அதில் தேர்ச்சி பெறச் செய்தவர் விசுவாமித்திரர். அவர் தசரதரிடம் சென்று தம் வேள்வியைக் காக்க ராமனை அனுப்பும்படி கேட்டு, அவனுக்கு எல்லா அஸ்திரங்களையும் உபதேசித்தார். என்னைத் தொலைப்பதற்காகத்தான் விசுவாமித்திரர் ராமனை அழைத்து வந்தார். அவன் முதல்முதலில் எய்த பாணங்களுக்கு இலக்கானவன் நான்தான்'' என்கிறான். அவன் கூறிய வரலாற்றில் லக்ஷ்மணன் பெயரைக் குறிப்பிடவில்லை. ராமரைப்பற்றி நினைக்கும்பொழுதே தனக்கு எப்படி நடுக்கம் ஏற்படுகிறது என்பதையும் அவன் கூறுகிறான்:—

वृक्षे वृक्षे च पश्यामि चीरकृष्णाजिनाम्बरम् ।
गृहीतधनुषं रामं पाशहस्तमिवान्तकम् ॥
अपि रामसहस्राणि भीतः पश्यामि रावण ।
रामभूतमिदं सर्वमरण्यं प्रतिभाति मे ॥
राममेव हि पश्यामि रहिते राक्षसाधिप ।
दृष्ट्वा स्वप्नगतं राममुद्भ्रमामि विचेतनः ॥

रक्षारादीनि नामानि रामत्रस्तस्य रावण ।
रत्नानि च रथाश्चैव वित्रासं जनयन्ति मे ॥ III. 39. 14-18.

"பாசக்கயிற்றுடன் யமனே எதிரில் நிற்பது போல் தோன்று கிறது. எதிரில் நிற்கும் ஒவ்வொரு மரமும் ராமனுகவே காட்சி யளிக்கிறது. 'ர' என்று ஆரம்பிக்கும் சொற்கள், ரத்தினம், ரதம் என்று இருந்தாலும், எனக்கு ஒரே பயத்தை உண்டுபண்ணு கின்றன" என்கிருன் மாரீசன். ராவணனது பெயரும் 'ரா' என்று ஆரம்பிக்கும்பொழுது, அவனிடம் அந்த எழுத்தைப்பற்றி மாரீசன் கூறுவது விந்தை அல்லவா? தனக்கு உட்பட்டவன் ஒளிவுமறை வில்லாமல் பேசுவது ராவணனுக்கு எவ்விதம் படுகிறது என்பதைக் கவி காட்டுகிருர். பிரியமாகப் பேசுகிறவர்களைத் தவிர நன்மை யைக் கூறுகிறவர் அவனுக்குத் தேவையில்லை என்று தெரிகிறது. மாரீசனுக்கு ராவணன் பதில் சொல்லுகிருன்:—

दोषं गुणं वा सम्पृष्टस्त्वमेवं वक्तुमर्हसि ।
अपायं वाप्युपायं वा कार्यस्यास्य विनिश्चये ॥
सम्पृष्टेन तु वक्तव्यं सचिवेन विपश्चिता ।
उद्यताञ्जलिना राज्ञो य इच्छेद्भूतिमात्मनः ॥
वाक्यमप्रतिकूलं तु मृदुपूर्वं हितं शुभम् ।
उपचारेण युक्तं च वक्तव्यो वसुधाधिपः ॥
सावमर्दं तु यद्वाक्यं मारीच हितमुच्यते ।
नाभिनन्दति तद्राजा मानार्हो मानवर्जितम् ॥ III. 40. 8-11.

"நல்லது எது, கெட்டது எது என்பதைக் கூறும்படி நான் உன்னைக் கேட்கவில்லை. எனக்கு ஏதோ ஒரு சிறு காரியம் செய்ய வேண்டும். அதைத்தான் உன்னிடம் கேட்கிறேன். உன்னை ஆலோசனை கேட்க, இப்பொழுது வரவில்லை. கெட்டிக்கார மந்திரி அரசன் கேட்டாலன்றித் தன் வார்த்தைகளை வெளியே விட மாட்டான். சுயமதிப்புள்ள எந்த அரசனும் நீ கூறுவது போன்ற யோசனைக்குச் செவிசாய்க்கமாட்டான்" என்கிருன் ராவணன். மாரீசனுடன் பேசும்பொழுது அவன் எவ்வளவு நுண்ணிய அறிவோடு சாமர்த்தியமாகப் பேசுகிருன் என்பதைக் கவனிக்க வேண்டும். தங்கமயமான மானுக மாறிச் சீதையின் எதிரில் சஞ்சரிக்கும்படி மாரீசனுக்கு அவன் யோசனை சொல்லுகிருன். அதைப் பின்பற்றிச் செல்லும்படி சீதை ராமரை வேண்டுவாள் என்கிருன். ஆயினும் உடனே வேருெரு நல்ல யோசனை அவனுக்குத் தோன்றுகிறது. மாரீசனுகிய பொன்மானைக் கண்டு மயங்கிச் சீதை அதைப் பிடிக்க வேண்டுமென்று ஆவல் கொண்டதும் அவன் அங்கிருந்து ஓடிவிட வேண்டும். ராமர் அவனைப் பின்பற்றிச்

செல்வார். சிறிது தூரம் சென்றதும், ராமருடையது போன்ற குரலில், "ஹா சீதே! லக்ஷ்மணா!" என்று இரைந்து கத்த வேண்டும் என்கிறான்.

ராவணனுடைய சிறந்த யோசனையைப் பாருங்கள். இப்படி அவன் தன் யோசனைகளில் ஆழ்ந்திருக்கும்பொழுது மாரீசன் அவனைக் கடிந்துகொள்ளுகிறான்; "ஒருவன் தீயவனாக இருந்து தவறு செய்ய, ஆயிரம் பேர் அவன் நிமித்தம் துன்பம் அநுபவிக்க வேண்டியதாகிறது. உலகில் இவ்வாறு அடிக்கடி நேருகிறது. தீங்கிழைத்தவன் மட்டும் கஷ்டப்படுவதில்லை" என்கிறான்.

अकुर्वन्तोऽपि पापानि शुचयः पापसंश्रयात् ।
परपापैर्विनश्यन्ति मत्स्या नागह्रदे यथा ॥
बहवः साधवो लोके युक्ता धर्ममनुष्ठिताः ।
परेषामपराधेन विनष्टाः सपरिच्छदाः ॥ III. 38. 26, 41. 13.

"ஒரு பெரிய குளத்தில் அநேக நல்லபாம்புகள் இருக்கின்றன. அவற்றைக் கொல்ல மனிதர்கள் முயலும்பொழுது அநேகம் சாதுவான மீன்களும் மடிகின்றன. துஷ்டர்களுடைய சகவாசத்தினாலேயே நல்லவர்களும் கஷ்டப்பட வேண்டியிருக்கிறது" என்று மாரீசன் கூறுகிறான்.

யுத்தகாண்டத்தில்,

एको हि कुरुते पापं कालपाशवशं गतः ।
नीचेनात्मापचारेण कुलं तेन विनश्यति ॥ VI. 38. 7.

"ஒருவனுடைய தீய ஒழுக்கத்தினால் அவனது குடும்பம், அவனது வர்க்கம் முழுவதுமே அழிந்துவிடுகிறது" என்கிறார் ராமர். பெரிய பதவியிலும் அதிகாரத்திலும் உள்ள ஒருவனை அநேகர் பின்பற்றி அவனுக்குக் கீழ்ப்படிந்து அவனுடைய விருப்பங்களைச் செய்கிறார்கள். அதனால் அவர்களும் கஷ்டப்பட வேண்டியதாகிறது. அரசனாக இருந்து ஒருவன் தனிநிலையில் கொடிய காரியங்களைச் செய்தால் அவற்றினால் மட்டுமே அநேகருக்குத் தீங்கு ஏற்படுகிறது என்பதில்லை; அரசியலில் அவன் செய்யும் தவறுகளும் விபரீதமான யோசனைகளுங்கூட ஆயிரக்கணக்கான மனிதர்களைப் பாதித்துவிடும். நாம் அதைத் தினமும் பார்க்கிறோம் அல்லவா? ராவணனை விட்டுச் செல்லும்பொழுது விபீஷணன் எச்சரித்தது போலவே மாரீசனும், "மனிதனது விதிப்படிதான் யாவும் நடக்கும். அப்பொழுது உற்ற நண்பர்கள் என்ன தடுத்தாலும் அது அவன் செவியில் ஏறாது. விதியின் வலிமை அது" என்கிறான்.

एवं कृत्वा त्विदं कार्यं यथेष्टं गच्छ राक्षस ।
राज्यस्यार्धं प्रदास्यामि मारीच तव सुव्रत ॥

प्राप्य सीताम्युद्धेन वञ्चयित्वा तु राघवम् ।
लङ्कां प्रतिगमिष्यामि कृतकार्यः सह त्वया ॥
न चेत् करोषि मारीच हन्मि त्वामहमद्य वै ।
एतत् कार्यमवश्यं मे बलादपि करिष्यसि ॥
राज्ञो हि प्रतिकूलस्थो न जातु सुखमेधते । III. 40. 23, 25, 26.

"'ஹா சீதே! லக்ஷ்மணு!' என்று கத்தி, லக்ஷ்மணனையும் சீதையை விட்டுச் செல்லும்படிச் செய்துபோய்விடு. பிறகு நான் பார்த்துக்கொள்ளுகிறேன். இந்தக் காரியத்தை நீ செய்தால் உனக்குப் பாதி ராஜ்யம் தருகிறேன். இதைச் செய்ய மறுத்தால் இப்பொழுதே உன்னை வேலை தீர்த்துவிடுவேன். பலவந்தப் படுத்தியாவது உன்னை இந்தக் காரியத்தைச் செய்யச் செய்வேன். என்னிடமிருந்து நீ தப்ப முடியாது" என்கிருன் ராவணன். மாரீசன் அவன் கூறியபடி நடக்கத் தீர்மானிக்கிருன். 'எப்படியோ இறக்கத்தான் வேண்டும். ராமபாணத்திலுலேயே உயிர் துறக்கிறேன்' என்று எண்ணுகிருன். ராவணனுக்குத் திருப்தி உண்டாகிறது.

प्रहृष्टस्त्वभवत् तेन वचनेन स रावणः ।
परिष्वज्य सुसंश्लिष्टमिदं वचनमब्रवीत् ॥
एतच्छौण्डीर्ययुक्तं ते सच्छन्दादिव भाषितम् ।
इदानीमसि मारीचः पूर्वमन्यो निशाचरः ॥ III. 42. 5, 6.

அப்பொழுது ராவணன் மாரீசனைத் தழுவிக்கொண்டு, "இப்பொழுதுதான் நீ உண்மையாக மாரீசன். இதுவரையிலும் வேறொருவனுக இருந்தாய்" என்கிருன்.

# 24

## பெண்களால் கிடைத்த சாபம்

ஸ்திரீகள் விஷயமாக ராவணனுடைய நடத்தையைப்பற்றி இன்று கூறலாமென்று இருக்கிறேன். அவன் அடைந்த கேடு முழுவதும் பெண்களினால்தான். ஆகவே அவனுடைய இந்த இயல்பை நாம் முழுக் கவனத்தோடு ஆராய வேண்டும். இளமையில் அவன் செய்த துஷ்கிருத்தியங்களின் வரலாறு உத்தர காண்டத்தில் காண்கிறது. ஸ்திரீகளை அபகரித்துச் செல்வதும், வசமாகாதவர்களைப் பலாத்கரிப்பதும் போன்ற செயல்களில் அவன் கணக்கில்லாமல் ஈடுபட்டவன். இவ்விதம் பல பெண்களை அவன் விரோதித்துக்கொண்டிருக்கிறான். அப்சரஸ் ஸ்திரீகளும் மற்றவர்களும் அவனுக்குக் கடும் சாபமிட்டிருக்கின்றனர்:—

यस्मादेष परक्यासु रमते राक्षसाधमः ।
तस्माद्वै स्त्रीकृतेनैव प्राप्स्यते दुर्मतिर्वधम् ॥
सतीभिर्वरनारीभिरेवं वाक्येऽभ्युदीरिते ।
नेदुर्दुन्दुभयः स्वस्थाः पुष्पवृष्टिः पपात च ॥ VII. 24. 20-22.

"பரஸ்திரீகளின் கற்பைப் பொருட்படுத்தாமல் இந்தக் கொடியவன் துன்புறுத்துகிறான். அவர்களுக்கு இழைக்கும் தீங்கே இவனது முடிவுக் காலத்துக்கு ஹேதுவாகும்" என்ற இவ் வார்த்தையைக் கேட்டதும் தேவலோகத்தில் துந்துபி வாத்தியங்கள் முழங்கின என்று கூறப்படுகிறது. ராவணனுக்கு ஏற்பட்ட சாபத்தைக் கேட்டுத் தேவலோகத்தில் பெரும் குதூகலம் உண்டாகிறது. அதே உத்தரகாண்டத்தில், மற்றொரு வரலாறும் காண்கிறது. குபேரனுடைய பிள்ளை நளகூபரன் என்பவன் ரகசியமான ஓரிடத்தில் ரம்பையைச் சந்திக்க ஏற்பாடு செய்திருந்தான். அவள் அவ்விடத்திற்குப் போய்க்கொண்டிருக்கும் பொழுது, வழியில் ராவணன் அவளைக் கண்டு மோகித்துப் பலவந்தமாகத் தன்னிச்சையைப் பூர்த்தி செய்துகொள்ளுகிறான். அவள் அதை நளகூபரனிடம் தெரிவிக்க, அவன் சாபமிடுகிறான்:—

अकामा तेन यस्मात् त्वं बलाद्भद्रे प्रधर्षिता ।
तस्मात् स युवतीमन्यां नाकामामुपयास्यति ॥

यदा ह्यकामां कामार्तो धर्षयिष्यति योषितम् ।
मूर्धा तु सप्तधा तस्य शकलीभविता तदा ॥
श्रुत्वा तु स दशग्रीवस्तं शापं रोमहर्षणम् ।
नारीषु मैथुने भावं नाकामास्वभ्यरोचयत् ॥
तेन नीताः स्त्रियः प्रीतिमापुः सर्वाः पतिव्रताः ॥
VII. 26. 55, 56, 59, 60.

"உன் விருப்பத்துக்கு விரோதமாக உன்னையடைந்து அநுபவித்த அவன் வேறு யாரையும் இம்மாதிரி செய்யமுடியாது. அவன் பலாத்கரிக்க முயன்றால் அவன் தலை ஏழு சுக்கல்களாக வெடித்து விடும்'' என்பது அந்தச் சாபம்.

அதை அறிந்தவுடன் அவன் எந்த ஸ்திரீயையும் பலாத்காரம் செய்வதை நிறுத்திக்கொள்ளுகிறான். ஆகவே, அவனது அந்தப்புரத்திலுள்ள, ராவணனால் கற்பழிக்கப்படாத அநேக ஸ்திரீகள் தாமாக விரும்பிச் செல்லாதவரையில் தங்கள் கற்புக்கு ஹானி இல்லை என்று மகிழ்கிறார்கள். ஆயினும் இதனால் ஒன்றும் ராவணன் தன் தீய ஒழுக்கத்தை விடவில்லை. நளகூபரனுடைய சாபம் பலமாக இருந்தாலும், ராவணன் இயற்றிய தவத்தின் வலிமை அந்தச் சாபத்தைப் பலிக்கவொட்டாமல் செய்ததனால், அவன் வழக்கம் போலவே தீய வழியில் செல்லுகிறான். ராமர் கடலைத் தாண்டிச் சேனையுடன் வருகிறார் என்ற செய்தியைக் கேட்டுச் சபை கூட்டி யோசிக்கும்பொழுது அவன் பின்வருமாறு கூறுகிறான்:—

महापार्श्व निबोध त्वं रहस्यं किञ्चिदात्मनः ।
चिरं वृत्तं तदाख्यास्ये यदवाप्तं मया पुरा ॥
पितामहस्य भवनं गच्छन्तीं पुञ्जिकस्थलाम् ।
चञ्चूर्यमाणामद्राक्षमाकाशेऽग्निशिखामिव ॥
सा प्रसह्य मया भुक्ता कृता विवसना ततः ।
स्वयम्भूभवनं प्राप्ता लोलिता नलिनी यथा ॥
तस्य तच्च तदा मन्ये ज्ञातमासीन्महात्मनः ।
अथ सङ्कुपितो वेधा मामिदं वाक्यमब्रवीत् ॥
अद्यप्रभृति यामन्यां बलान्नारीं गमिष्यसि ।
तदा ते शतधा मूर्धा फलिष्यति न संशयः ॥
इत्यहं तस्य शापस्य भीतः प्रसभमेव ताम् ।
नारोपये बलात् सीतां वैदेहीं शयने स्वके ॥ VI. 13. 10-15.

"முன்பு நடந்த விருத்தாந்தமொன்றைக் கூறுகிறேன். ஒரு சமயம் புஞ்சிகஸ்தலை என்ற பெண்மணி பிரம்மசபைக்குச் சென்று

கொண்டிருந்தாள். பேரழகியாக இருந்த அவளைக் கண்டு, மோகித்து உடனே பலாத்காரமாக அவளை என் இச்சைக்கு உட்படுத்திவிட்டேன். அலங்கோலமாக அவள் பிரம்மாவிடம் சென்றதும், அவர் நடந்ததை அறிந்து கோபத்துடன், 'இனிமேல் நீ யாராவது ஒரு பெண்ணை இவ்விதம் அவளது விருப்பமில்லாமல் பலாத்காரம் செய்தால் உன் தலை நூறு சுக்கலாக உடைந்துவிடும்' என்று சாபமிட்டார். அதை நினைத்து எனக்கு ஒரே நடுக்கம். அதிலிருந்து வரம்புமீறி நடப்பதேயில்லை. அதனால்தான் சீதையைக் கொண்டுவந்து இங்கே வைத்திருந்தும் அவளிடம் மிருதுவாகவே நடந்துகொள்ள வேண்டியிருக்கிறது. அவளது விருப்பத்துக்கு மாறாக அவளை ஒன்றும் செய்யாமலிருக்கிறேன்'' என்கிறான்.

ஆனால், இது அவன் நடத்தையில் ஒரு மாறுதலை ஏற்படுத்துகிறது. இத்தகைய கொடிய சாபத்தைப் பெற்ற பிறகு ஸ்திரீகளிடம் முரட்டுத்தனமாக நடந்துகொள்வதை விட்டு, மிருதுவாக இருக்கத் தொடங்குகிறான்.

பிறர் மனத்தைக் கவரும் கலையில் ராவணன் தேர்ந்தவனாக இருக்க வேண்டும். ஸ்திரீகளைப் பலவந்தமாகத் தன் இச்சைக்கு உட்படுத்த முடியாது என்று தெரிந்ததும் அவர்களிடம் பொறுமையாகவும் நயமாகவும் நடந்து அவர்களின் சம்மதத்தைப் பெறும் வழியைக் கையாளுகிறான். அவர்களே விருப்பத்துடன் அவனுக்கு வசமாகிறார்கள். சண்டையில் கணவர்களை அவன் வென்றதும் சிறைப்பிடித்து வந்த ஸ்திரீகள் சிலர். அவனைக் கண்டு மோகித்துத் தாமாகவே அவனை அடைந்தவர்கள் சிலர். அவனது அந்தப்புரத்தில் இருந்த ஸ்திரீகளைக் கண்டு அனுமார் நினைத்தது இது :—

राजर्षिपितृदैत्यानां गन्धर्वाणां च योषितः ।
राक्षसानां च याः कन्यास्तस्य कामवशं गताः ॥
युद्धकामेन ताः सर्वा रावणेन हृताः स्त्रियः ॥
समदा मदनेनैव मोहिताः काश्चिदागताः ॥
न तत्र काश्चित् प्रमदाः प्रसह्य वीर्योपपन्नेन गुणेन लब्धाः ।
न चान्यकामापि न चान्यपूर्वा विना वरार्हां जनकात्मजां ताम् ॥
न चाकुलीना न च हीनरूपा नादक्षिणा नानुपचारयुक्ता ।
भार्याऽभवत् तस्य न हीनसत्त्वा न चापि कान्तस्य न कामनीया ॥
V. 9. 68-71.

'சீதாதேவியைத் தவிர அந்தப்புரத்திலுள்ள ஸ்திரீகள் அனைவரும் ராவணனுக்கு மனைவியரானவர்களே! ஒரு ஸ்திரீயும் மற்றொருவனைக் காதலித்தோ மற்றொருவனுக்கு மனைவியாகவோ இருந்திருக்கமாட்டாள்' என்று அனுமார் எண்ணமிடுகிறார். இதிலிருந்து,

ராவணன் தவருக நடப்பதை விட்டு ஸ்திரீகளிடம் பிரியமாக நடந்து அவர்களின் உள்ளத்தைக் கவர்ந்ததனுல், அவர்கள் அவனுக்கு மனைவியராக விரும்பினர் என்றே தெரிய வருகிறது. அவர்களின் இஷ்டத்திற்கு விரோதமாக அவன் அவர்களை ஒன்றும் செய்யவில்லை. ராவணன் கொடியவன்; ஸ்திரீகளைத் துன்புறுத்து கிறவன் என்றெல்லாம் அவனைப்பற்றிக் கேட்டிருந்த அனுமார் இந்தக் காட்சியைக் கண்டதும் வியப்படைகிருர்.

बभूव बुद्धिस्तु हरीश्वरस्य यदीदृशी राघवधर्मपत्नी ।
इमा यथा राक्षसराजभार्याः सुजातमस्येति हि साधुबुद्धेः ॥ V. 9. 72.

கபடமற்ற அனுமார், 'ஆகா! ஸ்திரீகள் இப்படி ராவணனைக் கண்டு மோகமே கொண்டிருக்கிருர்களே! சீதையும் அவனுக்கு வசமாகியிருந்தால் அவன் பெரும் அதிருஷ்டசாலி என்றே சொல்ல வேண்டும்!' என்று நினைத்ததும் சரேலென்று தம்மை அடக்கிக் கொள்ளுகிருர்.

पुनश्च सोऽचिन्तयदार्तरूपो ध्रुवं विशिष्टा गुणतो हि सीता ।
अथायमस्यां कृतवान् महात्मा लङ्केश्वरः कष्टमनार्यकर्म ॥ V. 9. 73.

'ஆனுல், சீதாதேவி இந்த ஸ்திரீகளைப் போல் அல்ல. அவள் ராவணனுக்கு உட்பட்டிருக்கமாட்டாள். ஆனுல் அவளை இவன் அவளது இருப்பிடத்திலிருந்து கொண்டு வந்தது உண்மையில் பெருங் குற்றமே அல்லவா?' என்று அவர் கருதுகிருர்.

சாபத்துக்குப் பயந்து ஸ்திரீகளிடம் மிகவும் நல்லவன் போல் சமத்காரமாக நடந்துகொண்டதனுல், யுத்தகளத்தில் கொல்லப் பட்டு ராவணன் கிடந்தபொழுது அரக்கியர் அனைவரும் உண்மை யாகவே அழுது புலம்புகிருர்கள். சீதையைக் கொணர்ந்து சிறைப் படுத்தி வைத்ததன் பயனுக அவன் தானே அவ்வளவு கஷ்டங்களை யும் வரவழைத்துக்கொண்டவன். இயல்பாகவே கொடியவன் என்று இருந்தும் அவர்கள் மனப்பூர்வமாக அவனுக்காக வருந்து கிருர்கள். அவன் எவ்வளவோ கெட்டவன் என்று தெரிந்திருந்தும் அவர்களுக்கு உண்மையான வருத்தமே ஏற்படுகிறது.

बहुमानात् परिष्वज्य काचिदेनं रुरोद ह ।
चरणौ काचिदालिङ्ग्य काचित् कण्ठेऽवलम्ब्य च ॥
उद्धृत्य च भुजौ काचिद्भूमौ स्म परिवर्तते ।
हतस्य वदनं दृष्ट्वा काचिन्मोहमुपागमत् ॥
काचिदङ्के शिरः कृत्वा रुरोद मुखमीक्षती ।
स्नापयन्ती मुखं बाष्पैस्तुषारैरिव पङ्कजम् ॥ VI. 113. 8-10.

ஒருத்தி உடலைத் தழுவிக்கொள்கிருள். மற்ருெருத்தி அவன் கால்களை மடிமீது எடுத்து வைத்துக்கொள்ளுகிருள். வேருெருத்தி கைகளால் அவன் கழுத்தைக் கட்டிக்கொண்டு கண்ணீர் விடுகிருள்.

ब्रुवाणोऽपि हितं वाक्यमिष्टो भ्राता विभीषणः ।
धृष्टं परुषितो मोहात् त्वयात्मवधकांक्षिणा ॥
यदि निर्यातिता ते स्यात् सीता रामाय मैथिली ।
न नः स्याद्व्यसनं घोरमिदं मूलहरं महत् ।
त्वया पुनर्नृशंसेन सीतां संरुन्धतां बलात् ॥
राक्षसा वयमात्मा च त्रयं तुल्यं निपातितम् ।
न कामकारः कामं वा तव राक्षसपुङ्गव ॥
दैवं चेष्टयते सर्वं हतं दैवेन हन्यते ।
नैवार्थेन न कामेन विक्रमेण न चाज्ञया ।
शक्या दैवगतिर्लोके निवर्तयितुमुद्यता ॥ VI. 113. 19-26.

"தம்பி விபீஷணன் நல்ல புத்திமதி கூறியும் நீங்கள் கேட்கவில்லை. உங்களுக்கு நீங்களே கேட்டை விளைவித்துக்கொண்டீர்களே! விபீஷணன் வார்த்தையைக் கேட்டுச் சீதையை ராமரிடம் சேர்ப்பித்திருந்தால் இப்பொழுது நாங்கள் கைம்பெண்களாக இப்படி உங்கள் உயிரற்ற சடலத்தில் விழுந்து கதறிக்கொண்டிருப்போமா? மனைவியரோடு எல்லா ராக்ஷஸர்களையும் உங்களையும் ஒரே அடியில் அழித்துவிட்டீர்களே! விதியை யார் வெல்லமுடியும்?" என்று அந்தப் பெண்கள் புலம்புகிருர்கள். இதுதான் நம் வழக்கம். பெரிய துக்கம் வந்து மனிதர்கள் புலம்பும்பொழுது, "விதியை வெல்ல முடியுமா? எல்லாம் அதன்படிதான் நடக்கும்" என்று கூறக் கேட்டிருக்கிருேம் அல்லவா? மற்ற ஸ்திரீகள் அனைவரையும் விட விவேகமுள்ளவளான மந்தோதரி ஒரு ஸர்க்கம் முழுவதும் அழுது புலம்புகிருள். ஒவ்வோரிடத்தில் அவள் சொற்கள் மிகவும் உயர்தரமாக இருக்கின்றன:—

इन्द्रियाणि पुरा जित्वा जितं त्रिभुवनं त्वया ।
स्मरद्भिरिव तद्वैरमिन्द्रियैरेव निर्जितः ॥
अप्राप्य चैव तं कामं मैथिलीसङ्गजं कृतम् ।
पतिव्रतायास्तपसा नूनं दग्धोऽसि मे प्रभो ॥
तदैव यन्न दग्धस्त्वं धर्षयंस्तनुमध्यमाम् ।
देवा बिभ्यति ते सर्वे सेन्द्राः साग्निपुरोगमाः ॥
न कुलेन न रूपेण न दाक्षिण्येन मैथिली ।
मयाधिका वा तुल्या वा त्वं तु मोहान्न बुध्यसे ।

मैथिली सह रामेण विशोका विहरिष्यति ।
अल्पपुण्या त्वहं घोरे पतिता शोकसागरे ॥
पिता दानवराजो मे भर्ता मे राक्षसेश्वरः ।
पुत्रो मे शक्रनिर्जेता इत्येवं गर्विता भृशम् ॥
प्रवादः सत्य एवायं त्वां प्रति प्रायशो नृप ।
पतिव्रतानां नाकस्मात् पतन्त्यश्रूणि भूतले ॥ VI. 114. 18, 23-25, 28, 29, 31, 40, 67.

"இளமையில் நீங்கள் இந்திரியங்களை அடக்கிக் காமக் குரோதங்களை வென்றீர்கள். சபலத்துக்கு உள்ளாகாமல் கடினமான தவமியற்றித் தேவர்களிடமிருந்து உயர்ந்த வரங்களைப் பெற்றீர்கள். புலன்கள் முழுவதும் உங்கள் வசத்தில் இருந்தன. அந்த இந்திரியங்களே பழிக்குப் பழி வாங்குவதற்காகச் சமயம் பார்த்து உங்களைத் தொலைத்துவிட்டனவோ? சீதையின் கற்புக் கனலே உங்களை எரித்துச் சாம்பலாக்கிவிட்டது என்று எண்ணுகிறேன். ஜனஸ்தானத்தில் பலவந்தமாக அவளை எடுத்து வந்த பொழுதே, அவளது கற்புத் தீ உங்களைச் சுட்டெரித்திருக்கலாம். ஆனால் உங்களது நாசகாலம் அப்பொழுதுதான் தொடங்கியிருக்கும். நீங்கள் இயற்றிய தவம் மிச்சம் இருந்திருக்கும். ஒரு வருஷம் ஆகவேண்டியிருந்தது. தேவர்கள் அனைவரும் பயத்தினால் உங்கள் அருகில் வராமல் சரியான சமயம் வருகிறமட்டும் உங்களை விட்டு வைத்திருந்தார்கள். என்னைவிடச் சீதை அழகிற் சிறந்தவளா? எப்படி என்னைக்காட்டிலும் அவள் உயர்ந்தவளானாள்? எதைக் கண்டு என்னைவிட அவளை நீங்கள் மேலாகக் கருதினீர்கள்? புதிது புதிதாகத் தேடியலைவதில் உள்ள மோகம் உங்களைப் பைத்தியமாக அடித்துவிட்டது. அவளை மனைவியாக்கிக்கொள்ள வேண்டும் என்று இங்கே கொண்டு வந்தீர்கள். ஆனால் அதன் பலன் நீங்களும் நானும் பிரிந்துவிட்டோம். யாரிடமிருந்து பறித்துக்கொண்டு வந்தீர்களோ அவரிடமே அவள் மீண்டும் போய்ச் சேர்ந்து சந்தோஷமாக இருப்பாள். ஒரு காலத்தில் நான் எவ்வளவு பெருமையோடு இருந்தேன்! மயனுடைய பெண், ராவணனுடைய மனைவி, இந்திரஜித்தின் தாய் என்றெல்லாம் பெருமை கொண்டிருந்தேன். தந்தை, கணவர், பிள்ளை மூவரும் அல்லவா மிக்க மேன்மை பொருந்தியவர்களாக இருந்தனர்! அந்தப் பெருமைக்கு ஏற்ற தண்டனை எனக்கு இப்பொழுது கிடைத்துவிட்டதே! 'பதிவிரதையின் கண்ணீர் வீண்போகாது' என்று சொல்வது உங்கள் விஷயத்தில் எவ்வளவு உண்மையாயிற்று! உங்கள் தீய செயலினால் எத்தனை பதிவிரதைகள் கண்ணீர் வடித்திருக்கிறார்கள்!" என்று பிரலாபிக்கிறாள்.

ராவணன் தன் முரட்டுத்தனத்தை விட்டு ஸ்திரீகளிடம் மிருதுவாக நடந்துகொண்டதனால் அவனது பேச்சிலும் குணத்திலும் அவர்கள் இயல்பாகவே மயங்கி அவனுக்கு வசமானார்கள் என்று சொன்னாலும், அதற்காக அவன் நல்லவனாகவே மாறிவிட்டான் என்று எண்ணிவிடக் கூடாது. நல்ல குணத்துக்கும் உயர்வுக்கும் அவனிடத்தில் சம்பந்தமில்லை. அவன் கொடிய காரியங்களைச் செய்பவன்தான். பெரும் பொய்கள் கூறுவதும், பிறரை முற்றும் வஞ்சிப்பதும் அவனுக்குச் சகஜமாக உள்ளவை. அவனுடைய அந்த இயல்பைப்பற்றிச் சிறிது எடுத்துக்கூறுகிறேன். அது மிகவும் நீசத்தனமானது. மனிதனோ ராக்ஷஸனோ அவனுக்கு வாய்த்திருக்கும் பெருஞ்சிறப்புகள் யாவும் கெட்ட இயல்பினால் தீச் செயல்களுக்கே உபயோகமாவதைக் காணும்பொழுது நம் மனம் வருந்துகிறது அல்லவா? ராவணன் பெரும் தந்திரசாலி. இந்திரனோடு எதிர்த்துப் போர்புரிந்து அவனைக் காலடியில் விழச் செய்யும் பராக்கிரமமுள்ளவன்தான். எனினும் சில சமயம் நேர் வழியில் இல்லாமல் தந்திரமாகவே காரியங்களைச் சாதித்துக் கொள்வான். ராமரைப்பற்றி முதலில் அலட்சியமும் பரிகாசமுமே அவனிடம் மிகுந்திருக்கின்றன. சந்நியாசி வேஷத்தில் போகாமல் நேராகவே ராமன் முன் அவன் ஏன் செல்லவில்லை? தந்திர சாமர்த்தியங்களில் சிலருக்கு எப்பொழுதும் ஆசையுண்டு. ராவணனும் அவற்றுக்கு வசமாகிறான். இதைச் சீதை மட்டும் அல்ல; ராமரும் தெரிந்துகொள்ளுகிறார். இந்த அற்பத்தனத்தைப்பற்றி அவனை ஏளனம் செய்வாரும் உண்டு. மாரீசன் மூலம் ராமரையும் லக்ஷ்மணனையும் அப்புறப்படுத்தித் துறவி வேஷம் பூண்டு அவன் சீதையை ஏமாற்றிப் பலவந்தமாக அவளைத் தூக்கிக்கொண்டு வந்து சிறை வைக்கிறான். அவள் சிறிதும் அவனுக்கு இடம் கொடுக்கவில்லை. இல்லாவிட்டால் தந்திரோபாயங்களினால் அவளை மயக்க முயன்றிருப்பான். கூரிய நாவு படைத்த சீதையும் அவனைக் குத்திக் காட்டாமல் சும்மா விடவில்லை.

न व्यपत्रपसे नीच कर्मणानेन रावण ।
ज्ञात्वा विरहितां यन्मां चोरयित्वा पलायसे ॥
त्वयैव नूनं दुष्टात्मन् भीरुणा हर्तुमिच्छता ।
ममापवाहितो भर्ता मृगरूपेण मायया ॥
परमं खलु ते वीर्यं दृश्यते राक्षसाधम ।
विश्राव्य नामधेयं हि युद्धे नास्मि जिता त्वया ॥
ईदृशं गर्हितं कर्म कथं कृत्वा न लज्जसे ।
स्त्रियाश्च हरणं नीच रहिते तु परस्य च ॥

धिक् ते शौर्यं च सत्त्वं च यत् त्वं कथितवांस्तदा ।
कुलाक्रोशकरं लोके धिक् ते चारित्रमीदृशम् ॥ III. 53. 3, 4, 6, 7, 9.

"நீ செய்த காரியத்தைப்பற்றி உனக்கே வெட்கமாக இல்லையா? துணையில்லாமல் நான் தனியாக இருப்பதை அறிந்து என்னைத் திருட்டுத்தனமாகத் தூக்கிச் சென்றிருக்கிறாய். நீ ஒரு கோழை என்று இப்பொழுதுதான் தெரிந்தது. என் கணவருடனும் மைத்துனருடனும் நேரில் நின்று போர்புரிய உனக்குத் தைரிய மில்லை. நீசத்தனமான தந்திரத்தை உபயோகித்து, மாரீசன் மூலம் அவ்விருவரையும் அப்புறப்படுத்தினாய். நேரில் வந்து ராமருடன் சண்டையிட்டிருந்தாலாவது கொஞ்சம் கௌரவமாக இருந்திருக்கும்" என்று இவ்வாறு சீதை அடிக்கடி ராவணனை இகழ்ந்து பேசுகிறாள். யுத்தம் முடியும் தறுவாயில் ராமரும் அதைக் குத்திக்காட்டி இழிவாகப் பேசுகிறார்:—

मया विरहितां दीनां वर्तमानां महावने ।
वैदेहीं प्रसभं हृत्वा शूरोऽहमिति मन्यसे ॥
स्त्रीषु शूर विनाथासु परदाराभिमर्शके ।
कृत्वा कापुरुषं कर्म शूरोऽहमिति मन्यसे ॥
भिन्नमर्याद निर्लज्ज चारित्रेष्वनवस्थित ।
दर्पान्मृत्युमुपादाय शूरोऽहमिति मन्यसे ॥
शूरेण धनदभ्रात्रा बलैः समुदितेन च ।
श्लाघनीयं यशस्यं च कृतं कर्म महत् त्वया ॥
शूरोऽहमिति चात्मानमवगच्छसि दुर्मते ।
नैव लज्जास्ति ते सीतां चोरवद्व्यपकर्षतः ॥ VI. 105. 12-15, 17.

"இத்தகைய அற்பச்செயலைச் செய்துவிட்டு உன்னைப் பெரிய வீரன், மிக்க தைரியசாலி என்று எண்ணிக்கொண்டிருக்கிறாய். உன் தைரியம் எப்படிப்பட்டதென்று எனக்குத் தெரியும். பெரிய குடும்பத்தில் பிறந்தவன், குபேரனுக்கே சகோதரன், அப்படி இருந்தும் இந்த நீசச்செயலைச் செய்ய நீ அவமானப்படவில்லையே! திருடன் போலச் சீதையைக் களவாடிச் சென்றாய்" என்கிறார்.

அவனது மற்றொரு துஷ்டச் செயலைப் பார்ப்போம். அற்பத் தனமான தந்திரத்தினால் சீதையை மீண்டும் ஏமாற்றப்பார்க்கிறான். ஸேதுபந்தம் செய்து ராமர் வானர சைனியத்துடன் கடலைத் தாண்டி இலங்கையின் வடக்குப் புறத்தில் தங்கியிருக்கிறார். இலங்கையின் கட்டுக்காவல்களையும் எதிரியின் பலத்தையும் அறிந்து வர அவர் தம் ஆட்களை அனுப்புகிறார். மாயையில் வல்லவனான வித்யுஜ்ஜிஹ்வன் என்ற ராக்ஷஸனைக் கொண்டு ராவணன் ராமருடைய தலையைப் போல ஒன்று சிருஷ்டித்து, ராமருடையவை

போன்ற வில்லையும் அம்புகளையும் தயார்செய்யும்படிச் செய்து, உதிரம் சொரிந்துகொண்டிருக்கும் அந்தத் தலையையும் கத்தி வில் அம்புகளையும் சீதையின்முன் தானே கொண்டுபோய் வைக்கிறுன். பிறகு ஒரு பெரிய கதையையே ஜோடித்துக் கூறுகிறுன். ராமர் கடலைக் கடந்து இலங்கையை அடைந்திருப்பதைக் கூறுமல் மறைத்துவிடுகிறுன். "நேற்றிரவு உன் ராமன் அக்கரையில் தன் பெரும் சைனியத்துடன் அமர்ந்திருந்தான். நான் சேனுதிபதி பிரகஸ்தனை அனுப்பினேன். உன் ராமன் லக்ஷ்மணன் வானரர்கள் யாவரும் தூங்கிக்கொண்டிருந்தபொழுது என் ஆட்கள் நடுநிசியில் சென்று அவர்களைக் கொன்று தீர்த்து வந்துவிட்டார்கள்" என்கிறுன். முழுவதும் கட்டுக்கதையே ஆயினும் சீதை அதை நம்பி அழுது புலம்பத் தொடங்குகிறுள். அவளது நினைவு முதலில் கைகேயியின்மீதுதான் பாய்கிறது.

एवं तव हतो भर्ता ससैन्यो मम सेनया ॥
क्षतजार्द्रं रजोध्वस्तमिदं चास्याहृतं शिरः । VI. 31. 36, 37.

"உன் கணவன் என்னைக் கொல்ல நினைத்தான். இதோ அறுந்து புழுதியில் விழுந்த அவன் தலை கிடக்கிறது, பார்!" என்று ராவணன் சீதையிடம் கூறுகிறுன். துளியும் வெட்கமின்றி முழுப் பொய் ஒன்றைத் திரித்துக் கூறிய செயல் அது. உண்மையாகப் பிரகஸ்தன் அவ்வாறு செய்திருந்தால்கூட அது மானம் கெட்ட செயல்தான். சீதை கண்ணீர் விட்டுக் கதறிக்கொண்டிருக்கும் பொழுது, மந்திரி ஒருவன் வந்து ராமர் கடலைத் தாண்டி இக் கரைக்கு வந்திருக்கும் செய்தியைக் கூறுகிறுன். உடனே ராவணன் அங்கிருந்து விரைவாகப் போகும்படி ஆகிறது.

अन्तर्धानं तु तच्छीर्षं तच्च कार्मुकमुत्तमम् ।
जगाम रावणस्यैव निर्याणसमनन्तरम् ॥ VI. 32. 40.

ராவணன் அகன்றதுமே அந்தப் போலித் தலை மறைந்து போகவே, அது இந்திரஜாலவித்தையே என்று தெரிகிறது. பிறகு விபீஷணனுடைய மனைவி ஸரமா சீதையினிடம் வந்து, "உன் கணவருக்கும் மைத்துனருக்கும் ஒன்றும் நேர்ந்துவிடவில்லை. ராவணன் கூறியது முழுவதும் வெறும் கட்டுக்கதை" என்று கூறுகிறுள்.

न हतो राघवः श्रीमान् सीते शत्रुनिबर्हणः ॥
अयुक्तबुद्धिकृत्येन सर्वभूतविरोधिना ।
इयं प्रयुक्ता रौद्रेण माया मायाविदा त्वयि ॥ VI. 33. 13, 14.

"உன் கணவர் வெற்றியுடன் இக்கரைக்கு வந்து சேர்ந்து விட்டார். நான் பார்த்தேன். எதற்கு அம்மா வருந்துகிறுய்?" என்கிறுள்.

ராம லக்ஷ்மணர்களை நாகாஸ்திரத்தை எய்து கீழே வீழ்த்தி விட்டு இந்திரஜித் ராவணனிடம் சென்று, அவர்கள் இருவரும் மடிந்துவிட்டதாகக் கூறியபொழுது, எப்படியாவது சீதையை வசப்படுத்த வேண்டுமென்ற ஒரே நோக்கமுடைய ராவணன், வெற்றிக்களிப்போடு அரக்கியரை அழைத்துச் சீதையைப் புஷ்பக விமானத்தில் ஏற்றி யுத்தகளத்துக்குச் சென்று இறந்துகிடக்கும் ராம லக்ஷ்மணர்களைக் காண்பிக்கும்படி கட்டளையிடுகிறான். யாவும் தீர்ந்துவிட்டது என்ற ஏக்கத்தில், சீதை தானே அவனுக்கு வசமாவாள் அல்லவா? அவனுடைய யோசனையைப் பாருங்கள்! இந்த முறை திரிஜடை அவளைத் தேற்றுகிறாள்; "அவர்கள் இருவர் முகங்களையும் பார். அவர்கள் பிரக்ஞையற்றிருக்கிறார்களே தவிர வேறில்லை. விரைவில் சுயநினைவு பெற்று எழுந்துவிடுவார்கள். இந்தப் புஷ்பக விமானம் மிகவும் தூய்மையானது. விதவையை அது தாங்கிச் செல்லாது'' என்கிறாள்.

யாவற்றையும்விட இன்னும் மோசமான ராவணனுடைய செயல் ஒன்றைப் பார்ப்போம். மகாவீரனான இந்திரஜித்தும் மடிந்து, மிகுந்த துர்க்கதிக்குள்ளான ராவணன் தன் அறிவையும் இழந்தவனாக மிகவும் அற்பத்தனமாக நடந்துகொள்கிறான். "இத்தனை கஷ்டங்களும் சீதையினால் அல்லவா நேர்ந்தன? இதோ போய் அவளைக் கொன்றுவிடுகிறேன்'' என்று கூறிக்கொண்டு, சீதை இருக்கும் இடத்துக்கு ஓடுகிறான். எத்தகைய கீழ்ப்பட்ட நிலைக்கு அவன் வந்துவிட்டான் என்பதை இது காட்டுகிறது. "முன்பு இந்திரஜித் மாயாசீதை ஒன்றை உருவாக்கி அனுமானெதிரில் கொன்று வீழ்த்தினான். இப்பொழுது நான் நிஜமாகவே அவளைக் கொன்று வீழ்த்துகிறேன்'' என்று அவன் கிளம்பியதும் எல்லோரும் அவனைத் தடுக்க முயல்கிறார்கள். உருவிய கத்தியோடு அவனைக் கண்டதும் சீதை கண்ணீர்விட்டுக் கதறுகிறாள்.

हनूमतोऽपि यद्वाक्यं न कृतं क्षुद्रया मया ॥
यद्यहं तस्य पृष्ठेन तदा यायामनिन्दिता ।
नाद्यैवमनुशोचेयं भर्तुरङ्कगता सती ॥ VI. 93. 54, 55.

"எவ்வளவு அசட்டுத்தனமாய் இருந்துவிட்டேன்! அனுமார் என்னை முதுகிலேற்றிச் செல்வதாக உறுதிமொழி கூறியபொழுது நான் ஏன் மறுத்தேன்? அவர் சொன்னபடி செய்திருந்தால் இப்பொழுது இப்படிக் கண்ணீர்விட்டுக் கதறும்படி இருக்காதே!'' என்று வருந்துகிறாள். அந்தச் சமயத்தில் சுபார்சுவன் என்பவன், "அவள் ஓர் பெண்பிள்ளை. தாங்களோ மகாவீரர். தேவர்களையும் எதிர்த்துப் போர்புரிந்து தோற்கடித்தவர். யுத்தகளத்துக்கு வந்து ராமனை வதம் செய்யுங்கள்'' என்கிறான். கொஞ்சநஞ்சம் இருந்த ராவணனது சுயகௌரவம் இதைக் கேட்டதும் தலைதூக்குகிறது.

त्वमेव तु सहास्माभी राघवे क्रोधमुत्सृज ।
अभ्युत्थानं त्वमद्यैव कृष्णपक्षचतुर्दशीम् ॥
कृत्वा निर्याह्यमावास्यां विजयाय बलैर्वृतः ।
शूरो धीमान् रथी खड्गी रथप्रवरमास्थितः ॥
हत्वा दाशरथिं रामं भवान् प्राप्स्यति मैथिलीम् । VI. 93. 65, 66.

"ராமனைக் கொன்றுவிட்டு நீங்கள் சீதையை அடையலாமே" என்கிறான் சுபார்சுவன்.

ராவணனைப்பற்றிய கடைசிப் பாகத்துக்கு வருவோம். கற்பரசியான சீதையை வஞ்சகமாய்த் தூக்கிவந்து சிறைவைத்த தனால் இத்தனை துன்பங்களுக்கு உள்ளாகி அவன் சீதையின் மூலமாகவே தன் இறுதிக்காலத்தை அடைந்துவிட்டான் என்பதை நாம் நினைவுகூர வேண்டும். அவள்மீதுள்ள எல்லையற்ற மோகம் அவனைப் பைத்தியமாகவே அடித்துவிட்டது என்று தோன்றுகிறது. அந்த மோகத்தை அடக்க அவனுக்குச் சக்தியில்லை. கர தூஷணர்களோடு ராமர் புரிந்த யுத்தத்தை முழுவதும் பார்த்துக்கொண்டிருந்த அகம்பனன்தான் ராவணனது உள்ளத்தில் சீதையைப் பற்றிய மோகத்தைக் கிளப்பியவன். கரன், தூஷணன், திரிசிரஸ் ஆகிய மூவரையும் தன்னந்தனியே நின்று போரிட்டுக் கொன்று வீழ்த்திய ராமருடைய பராக்கிரமம் எத்தகையது என்பதை அவன் அறிந்தவன். யுத்தகளத்தினின்றும் முன்னதாகவே விரைந்து ஓடிச் சென்று அவன் ராவணனிடம் யாவற்றையும் சொல்லுகிறான்.

அகம்பனன் வந்து சொல்லும் ஸர்க்கம் பொய்யாகச் சேர்க்கப் பட்டதென்று துரதிருஷ்டவசமாக அநேகர் கருதுகிறார்கள். அதில் சில உயர்ந்த கருத்துக்கள் காண்கின்றன. ஆகவே அதை இழப்பது வருந்தத்தக்கது என்று தோன்றுகிறது. பக்ஷபாதமற்ற மூன்றாம் மனிதன் ஒருவன் ராமரைப்பற்றி வியக்கத்தக்கவாறு வர்ணிக்கும் சொற்கள் அதில் வருகின்றன. சீதையின் எழிலைப்பற்றியும் அவளது கற்பின் சிறப்பைப் பற்றியும் வர்ணனைகள் வருகின்றன. "ராமரைக் கொல்வதற்கு ஒரே உபாயம்தான் உள்ளது. சீதை தான் அவரது உயிர். அவளை இழந்துவிட்டால் அப்புறம் அவரும் இல்லை" என்கிறான் அகம்பனன். ராவணன் மாரீசனைத் தேடிச் செல்லுகிறான். அப்பொழுது அவன் மனமே நிர்மானமில்லாமல் சஞ்சலப்பட்டுக்கொண்டுதான் இருக்கிறது. மாரீசனும் அவனைத் தடுத்துவிடுகிறான். அவனது பேச்சை ஒப்புக்கொண்டு ராவணன் பேசாமல் திரும்பிப் போய்விடுகிறான். ஆனால் அவனது துரதிருஷ்டம், விரைவிலேயே அவன் சகோதரி சூர்ப்பணகை தன் வரலாற்றுடன் வந்து சேருகிறாள். "சீதை என்ற அந்தப் பெண்ணைப்

பார்த்தேன். இந்த மூவுலகிலும் அத்தகைய அழகும் குணமும் ஒருங்கே சேர்ந்த பெண்மணியைக் காண்பது அரிது. அவளுக் குத் தகுந்த கணவன் நீதான். உனக்காக அவளை எடுத்துக் கொண்டு வந்துவிட வேண்டுமென்று நினைத்தேன். ராமலக்ஷ்மணர் இருவரும் கோபம் மூண்டு என்னை இந்த அவமானத்துக்கு உள்ளாக்கிவிட்டனர்'' என்கிறாள். அவள் கூறியதை நம்பி ராவணன் சீதையைக் கொண்டுவருவதென்று நிச்சயிக்கிறான்.

यदि तस्यामभिप्रायो भार्यार्थे तव जायते ॥
शीघ्रमुद्ध्रियतां पादो जयार्थमिह दक्षिणः । III. 34. 22, 23.

''வலக்காலை வைத்து யுத்தத்தில் ராமலக்ஷ்மணர் இருவரையும் வதம் செய்'' என்கிறாள் சூர்ப்பணகை. அவர்களைக் கொன்று விடவேண்டும் என்று அவளுக்கு ஆசை. அவ்வளவு தூரம் போவதற்கு ராவணனுக்குத் தைரியமில்லை. சீதையை எடுத்து வருவதில் அவன் மனம் ஈடுபட்டிருந்ததேயன்றி ராம லக்ஷ்மணர்களைக் கொல்லுவதில் அவனுக்கு மனமில்லை. மாய மானைத் துரத்திக் கொண்டு ராமரும் லக்ஷ்மணரும் சென்றபின்பு சந்நியாசி வேஷத்தில் சீதையின் முன் ராவணன் தோன்றுகிறான். மிகவும் உயர்வாக அவளை அவன் வர்ணித்துப் பேசுகிறான். சில சொற்கள் மிகவும் சிருங்காரமாகவும் ரஸக் குறைவாகவும் இருக்கின்றன. அவளது அழகை வர்ணித்துவிட்டு அவளை நீ யார் என்று வினவுகிறான்:—

कमलानां शुभां मालां पद्मिनीव हि बिभ्रती ।
ह्रीः श्रीः कीर्तिः शुभा लक्ष्मीरप्सरा वा शुभानने ॥
भूतिर्वा त्वं वरारोहे रतिर्वा स्वैरचारिणी ।
समाः शिखरिणः स्निग्धाः पाण्डरा दशनास्तव ॥
विशाले विमले नेत्रे रक्तान्ते कृष्णतारके ।
विशालं जघनं पीनमूरू करिकरोपमौ ॥
एतावुपचितौ वृत्तौ संहतौ संप्रगल्भितौ ।
पीनोन्नतमुखौ कान्तौ स्निग्धौ तालफलोपमौ ॥
मणिप्रवेकाभरणौ रुचिरौ ते पयोधरौ ।
चारुस्मिते चारुदति चारुनेत्रे विलासिनि ॥
मनो हरसि मे कान्ते नदी कूलमिवाम्भसा ।
करान्तमितमध्यासि सुकेशी संहतस्तनी ॥
नैव देवी न गन्धर्वी न यक्षी न च किन्नरी ।
नैवंरूपा मया नारी दृष्टपूर्वा महीतले ॥

रूपमग्र्यं च लोकेषु सौकुमार्यं वयश्च ते ।
इह वासश्च कान्तारे चित्तमुन्मादयन्ति मे ॥
कासि कस्य कुतश्च त्वं किंनिमित्तं च दण्डकान् ।
एका चरसि कल्याणि घोरान् राक्षससेवितान् ॥ III. 46. 16-23, 31.

இவ்வாறெல்லாம் அவன் புகழ்ந்ததைக் கேட்டுச் சீதை என்ன நினைத்தாள் என்று பார்ப்போம். தங்கள் சௌந்தரியத்தைப் பற்றிப் பிறர் வர்ணிப்பதைக் கேட்டால் சில பெண்கள் பெரிதும் மகிழ்வார்கள் அல்லவா? அம்மாதிரி சீதை சந்தோஷப்பட்டாளா? யார் கண்டது? ஆனால் அந்த வர்ணனையைக் கேட்கத் தான் விரும்பவில்லை என்பதை அவள் காண்பிக்கவில்லை. தன் அழகை வர்ணிக்கும் அவனைக் கண்டிக்காமல், சந்நியாசிக்கு உரிய மரியாதையைச் செய்கிறாள். அவள் மனம் நிம்மதியில்லாமல் இருக்கிறது என்று ராமாயணத்தில் குறிப்பிட்டிருக்கிறது. ராம லக்ஷ்மணர்களின் வருகையைக் கவலையுடன் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறாள். மானைத் தொடர்ந்து சென்ற ராமரின் கத்தலைக் கேட்டு, அவருக்கு ஏதோ ஆபத்து என்று எண்ணிவிடுகிறாள். தன் கவலை முழுவதையும் வெளிக்காட்டாமலிருக்க அவளால் முடியவில்லை. வந்த அதிதிக்குத் தன்னால் இயன்ற உபசாரத்தைச் செய்கிறாள். தன் வரலாற்றைக் கூறிவிட்டு, அவனை யார் என்று விசாரிக்கிறாள். ராவணன் தான் யார் என்று கூறி, அவள்மீது தான் கொண்டிருக்கும் மோகத்தை வெளியிடுகிறான்.

त्वां तु काञ्चनवर्णाभां दृष्ट्वा कौशेयवासिनीम् ।
रतिं स्वकेषु दारेषु नाधिगच्छाम्यनिन्दिते ॥
बह्वीनामुत्तमस्त्रीणामाहृतानामितस्ततः ।
सर्वासामेव भद्रं ते ममाग्रमहिषी भव ॥ III. 47. 27, 28.

அவளிடம் நேரிலேயே தன் உத்தேசத்தைக் கூறுகிறான். அந்தக் காலத்தில் ஒருவன் பல பெண்களை மணக்கக்கூடாது என்ற சட்டம் இல்லை. முறையாக அவளை மணம் செய்துகொள்வதாகவே அவன் கூறுகிறான். சீதை அதைச் சிறிதும் ஏற்றுக்கொள்ளவில்லை. அத்துடன் அவள் அவனைக் கண்டபடி ஏசிப் பேசியதனால் அவன் கடுங்கோபமுற்றுத் தன் பத்துத் தலைகளோடு கூடிய உருவத்துடன் அவள்முன் நின்று அவளைப் பயமுறுத்துகிறான். காதற் பித்துள்ளவர்களிடையே ஒரு சட்டமுண்டு. உண்மையான அன்புடன் தன்னை ஏற்றுக்கொள்ளும்படி வேண்டிக் கொண்டால் அதை மறுக்கலாகாது என்பதுதான் அது. "புரூரவஸ்ஸை நிராகரித்த ஊர்வசி பிறகு தன் செய்கைக்கு மிகவும் வருந்தும்படி ஆயிற்று. அதுபோலத்தான் நீயும் செய்யும்படி இருக்கும்" என்று அவன் கூறுகிறான்.

ராவணன் அவளைத் தன் அரண்மனைக்கு எடுத்துச் சென்று அங்குள்ள விலைமதிப்பற்ற பொருள்களையெல்லாம் அவளுக்குக் காண்பிக்கிறான்.

अलं व्रीडेन वैदेहि धर्मलोपकृतेन च ॥
आर्षोऽयं दैवनिष्यन्दो यस्त्वामभिगमिष्यति ।
एतौ पादौ मया स्निग्धौ शिरोभिः परिपीडितौ ॥
प्रसादं कुरु मे क्षिप्रं वश्यो दासोऽहमस्मि ते ।
इमाः शून्या मया वाचः शुष्यमाणेन भाषिताः ॥
न चापि रावणः कांचिन्मूर्ध्ना स्त्रीं प्रणमेत हि ।
एवमुक्त्वा दशग्रीवो मैथिलीं जनकात्मजाम् ॥
कृतान्तवशमापन्नो ममेयमिति मन्यते ॥ III. 55. 34-37.

காமவெறியில் அவளது காலடியில் விழுந்து வேண்டிக்கொள்ளும் அளவுக்கு அவன் தன் கௌரவத்தை இழந்து நிற்கிறான். "ஒரு ஸ்திரீயின் காலில் இதுவரையும் ராவணன் பணிந்ததில்லை. உனக்குத்தான் இந்தப் பெரும் பேறு கிடைத்திருக்கிறது" என்கிறான். காலில் விழுந்து நயமாக வேண்டிக்கொண்டால் அவளை வசப்படுத்திவிடலாம் என்று அவனுக்கு நினைவு. கெஞ்சலும் கொஞ்சலும் சிறிதும் பயனற்றுப் போகின்றன.

சுந்தரகாண்டத்தில், இருபதாம் ஸர்க்கத்தில் ஒரு காட்சி. அனுமார் நடப்பதையெல்லாம் பார்த்துக்கொண்டிருக்கிறார்.

कामये त्वां विशालाक्षि बहुमन्यस्व मां प्रिये ।
सर्वाङ्गगुणसंपन्ने सर्वलोकमनोहरे ॥
स्वधर्मो रक्षसां भीरु सर्वथैव न संशयः ।
गमनं वा परस्त्रीणां हरणं संप्रमथ्य वा ॥
एवं चैतदकामां तु न त्वां स्प्रक्ष्यामि मैथिलि ।
कामं कामः शरीरे मे यथाकामं प्रवर्तताम् ॥
एकवेणी धरा शय्या ध्यानं मलिनमम्बरम् ।
अस्थानेऽप्युपवासश्च नैतान्यौपयिकानि ते ॥
त्वां कृत्वोपरतो मन्ये रूपकर्ता स विश्वसृट् ।
न हि रूपोपमा त्वन्या तवास्ति शुभदर्शने ॥
त्वां समासाद्य वैदेहि रूपयौवनशालिनीम् ।
कः पुमानतिवर्तेत साक्षादपि पितामहः ॥ V. 20. 3, 5, 6, 8, 13, 14.

''மனிதர்களைக் கட்டுப்படுத்தும் அற்ப மரியாதைகளெல்லாம் எங்கள் சாதியினருக்குக் கிடையா. ஆனால் உனக்கு விருப்பமில்லை என்றால் உன்னை நான் ஒன்றும் செய்யமாட்டேன். என் ஆசை என்னை வேண்டியமட்டும் வருத்தட்டும். உன் கணவனுக்காக நீ படும் கஷ்டங்களெல்லாம் உனக்கு ஏற்றவையல்ல. தமது முழுச் சாமர்த்தியத்தையும் உன்னைச் சிருஷ்டிப்பதில் காட்டி, பிரம்மா ஓய்வு எடுத்துக்கொண்டிருப்பார் என்று நினைக்கிறேன்'' என்று ராவணன் சீதையினிடம் வேண்டிக்கொள்ளுகிறான்.

## 25

### வீரமணி சீதை

சென்ற உபன்யாசத்தில் சீதையின்மேல் ராவணனுக்கு இருந்த மோகத்தைப்பற்றிக் கூறினேன். வேறு எந்த ஸ்திரீயினிடத்திலும் அவனுக்கு அத்தகைய மோகம் ஏற்பட்டதில்லை. அதைக் கட்டுப் படுத்த அவனால் இயலவுமில்லை. அதற்குப் பதிலாக அது அவனைத் தன் வசப்படுத்திப் பல இன்னல்களுக்கு உள்ளாக்கி முடிவில் அவனை ஒழித்தே தீருகிறது.

அசோகவனத்தில் சீதையைக் காண வரும்பொழுது ராவணன் ஒரு சமயம், "சந்திரபிம்பத்தைப் போன்ற முகமுடையவளே! உன் உடம்பில் எந்த இடத்தில் என் பார்வை விழுந்தாலும் அது அங்கேயே லயித்துவிடுகிறதே! அதை அங்கிருந்து அகற்ற முடிய வில்லையே!" என்கிறான்.

यद्यत् पश्यामि ते गात्रं शीतांशुसदृशानने ।
तस्मिंस्तस्मिन् पृथुश्रोणि चक्षुर्मम निबध्यते ॥ V. 20. 15.

"உன் புன்முறுவல்தான் என்ன அழகு! பற்கள்தாம் எவ்வளவு அழகாக இருக்கின்றன! சர்ப்பங்களைக் கவரும் கருடன் போல் நீ உன் அழகிய கண்களால் என்னை அப்படியே கவர்ந்துவிட்டாய்" என்கிறான்.

चारुस्मिते चारुदति चारुनेत्रे विलासिनि ।
मनो हरसि मे भीरु सुपर्णः पन्नगं यथा ॥ V. 20. 29.

பிறகு அவளுக்குப் பெரிதாக ஆசைகாட்டுகிறான்:—

पिब विहर रमस्व भुङ्क्ष्व भोगान्
 धननिचयं प्रदिशामि मेदिनीं च ।
मयि लल ललने यथासुखं त्वं
 त्वयि च समेत्य ललन्तु बान्धवास्ते ॥ V. 20. 35.

"வா, இருவரும் சேர்ந்து மது அருந்தி உற்சாகமாக விளையாடுவோம். என் செல்வம் அனைத்தையும் உனக்கு அளிக்கிறேன். இந்தப் பூவுலகம் முழுவதையும் என்னுடன் நீ கட்டி ஆளலாம்.

என்னிடம் உன் மனம் களிப்படையட்டும். உன் பந்துக்கள், உன் தந்தை ஜனகர் அனைவரும் என் செல்வத்தை அநுபவிக்கட்டும்" என்கிறான். ராவணனது மனம் இருந்த நிலையை வெளியிடும் விதத்திலேயே கவி இந்தச் சுலோகங்களை அமைத்திருக்கிறார். சீதைக்கு அவன் சொற்கள் காதில் நாராசமாக விழுகின்றன. அவள் உள்ளம் கொதித்தெழுகிறது. அவள் அவனை அசட்டை செய்து நயம், பயம், புத்திமதி ஆகிய சொற்களால் அவனைத் தீய வழியினின்றும் திருப்ப முயலுகிறாள். அவள் கூறும் உயர்ந்த புத்தி மதியைக் கவனிப்போம்:—

यथा तव तथान्येषां दारा रक्ष्या निशाचर ॥
आत्मानमुपमां कृत्वा स्वेषु दारेषु रम्यताम् । V. 21. 7, 8.

"விவாகத்தின் புனிதமான அர்த்தத்தை அறியாமல் பேசுகிறாய். பிறனுடைய மனைவி உன் அதீனத்தில் இருக்கும்பொழுது உன் மனைவியைப் பிறர் எவ்வாறு பாதுகாக்க வேண்டுமென்று விரும்புவாயோ அவ்வாறு நீயும் அவளைப் பாதுகாக்க வேண்டாமா? உன்னை நினைத்துப் பார். பிறரையும் உன்னைப் போலவே எண்ணுவாய். மணம் செய்துகொண்ட உன் சொந்த மனைவியருடன் நீ சந்தோஷமாக இரு'' என்கிறாள்.

इह सन्तो न वा सन्ति सतो वा नानुवर्तसे ॥
तथा हि विपरीता ते बुद्धिराचारवर्जिता । V. 21. 9, 10.

"இலங்கையில் நல்லவர்கள் நல்லொழுக்கத்தை மதிப்பவர்களை யாரும் இல்லையா? அவர்கள் கூறியபடி நீயும் நடக்க மாட்டாய் என்று நினைக்கிறேன். ஆயினும் அப்படி இருக்க முடியாது. இலங்கை பெரிய பட்டணம். எங்கும் வேதமந்திரங்கள் ஒலிக்கின்றன. சாஸ்திரங்கள் விதிப்படி அநுசரிக்கப்படுகின்றன. நல்லொழுக்கமுள்ளவர்கள் அநேகர் இருப்பார்கள். நீதான் அவர்கள் கூறியபடி நடப்பதில்லை என்று நினைக்கிறேன். நீ அவர்களை மதிப்பதில்லை. உன் மனம் தீய வழிகளிலேயே ஈடுபட்டிருப்பதைப் பார்த்தால் நல்வார்த்தை சொல்வோர் இருந்தும் நீ அவர்கள் கூறுவதற்குச் செவிசாய்ப்பதில்லை என்று தெரிகிறது' என்று தன் ஆச்சரியத்தை வெளியிடுகிறாள்.

வேண்டியவர்களுக்குள் இதை ஒரு பொதுவான சிறு சபலம் என்று சொல்லலாம். நண்பர்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் சரியாகச் செய்ய வேண்டும் என்று எண்ணுவோருக்கு ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். தனக்கு நல்ல புத்திமதி கூறுகிறவர்களின் வார்த்தைகளை ராவணன் பொருட்படுத்தவில்லை என்று சீதை நினைக்கிறாள். இதிலிருந்து நல்லவர்களான பெரியவர்களின் கடமை என்னவென்று தெரிகிறது. 'அவன் சுத்தப்

போக்கிரி; அவனிடம் அணுகலாகாது. என் வயது, தோற்றம் ஒன்றையும் அவன் மதிக்கமாட்டான். அவனிடம் போய்ச் சொல்லுவதில் என்ன பிரயோசனம்?' என்று வயதான நல்லவர்கள் நினைக்கக்கூடாது. நல்ல மனிதர்கள் இம்மாதிரி இருக்கக்கூடாது என்று சீதை நினைக்கிறாள். எந்தச் சமூகத்திலும் மனிதர்கள் மேற்கூறிய விதத்தில் நடப்பது ஒருபோதும் சரியல்ல. நம்மோடு ஒத்த வயதினராகவோ பெரியவர்களாகவோ அல்லது சிறியவர்களாகவோ நண்பர் இருந்தால் அவர்களது நன்மையை நாம் கோருபவராயும் இருந்தால் அவர்கள் எப்படி நினைத்துக்கொண்டாலும் அவர்களைச் சரியான வழியில் செல்லும்படிச் செய்வது நம் கடமையாகும். முடிந்தபொழுதெல்லாம் நல்ல புத்திமதி கூறவேண்டுமே தவிர அவர்கள் தவறான வழியில் சென்று கெட்டுப்போவதைப் பார்த்துக்கொண்டு பேசாமலிருக்கலாகாது. "நான் முதலிலேயே எச்சரிக்கை செய்திருப்பேன். ஆனால் நீ கேட்பதாக இல்லை" என்று கடைசியில் வருந்துவதிலும் என்ன பயன்? நாம் கூறுவதைக் கேட்கிறார்களோ இல்லையோ, நண்பர்களாக இருப்போர் தம் கடமையைத் தைரியமாகச் செய்ய வேண்டும். பின்னால் வரப்போகும் தீங்கை விளக்கிக் கூறி எச்சரிக்கை செய்ய வேண்டும். புத்திமதி சொல்லுவதற்கு யாருமில்லாமல் கெட்டுப்போகவில்லை; தெரிந்தே தவறு செய்திருக்கிறான் என்று இருக்க வேண்டும். அநேகம் பேர் தவறு என்று தெரியாமலே கெட்ட காரியங்களைச் செய்கிறார்கள். தங்களுக்கு இறுதியில் கேடுகாலம் என்பதை அவர்கள் அறியார். உரிய காலத்தில் அவர்களை எச்சரிக்கை செய்தால் பயன் இருக்கலாம். நம் நன்மைக்காக இந்த உயர்ந்த கிரந்தங்களைப் படிக்கும்போது ராவணனிடம் சீதை கூறிய வார்த்தைகளிலிருக்கும் படிப்பினையைப் பின்னும் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். நல்லவர்கள் என்ன செய்ய வேண்டும்? நிலையில்லாதவர்கள் நல்ல புத்திமதியைக் கேட்கும்பொழுது எப்படி நடக்க வேண்டும் என்பதையெல்லாம் சீதை முறையான சொற்களில் கூறுகிறாள்.

ராவணன் மேலும் மேலும் அவளுக்கு ஆசைகாட்டிப் பேசுகிறான். இனிமையான மொழிகளில் அவளது அழகை வியந்து போற்றுகிறான். அவளது அறிவைச் சிலாகித்தும் ராமரைப் பழித்தும் பேசுகிறான்:—

यथा यथा सान्त्वयिता वश्यः स्त्रीणां तथा तथा ।
यथा यथा प्रियं वक्ता परिभूतस्तथा तथा ॥
संनियच्छति मे क्रोधं त्वयि कामः समुत्थितः ।
द्रवतोऽमार्गमासाद्य हयानिव सुसारथिः ॥
वामः कामो मनुष्याणां यस्मिन् किल निबध्यते ।
जने तस्मिंस्त्वनुक्रोशः स्नेहश्च किल जायते ॥

एतस्मात् कारणान्न त्वां घातयामि वरानने ।
वधार्हामिव मानार्हां मिथ्याप्रव्रजिते रताम् ॥
परुषाणीह वाक्यानि यानि यानि ब्रवीषि माम् ।
तेषु तेषु वधो युक्तस्तव मैथिलि दारुणः ॥
द्वौ मासौ रक्षितव्यौ मे योऽवधिस्ते मया कृतः ।
ततः शयनमारोह मम त्वं वरवर्णिनि ॥
द्वाभ்யामूर्ध्वं तु मासाभ्यां भर्तारं मामनिच्छतीम् ।
मम त्वां प्रातराशार्थमारभन्ते महानसे ॥ V. 22. 2-6, 8, 9.

''ஸ்திரீகளை அளவுக்கு மிஞ்சிப் புகழ்ந்து அன்பாகப் பேசி அவர்களின் உள்ளங்களைக் கவர முயலுகிறவன் அவர்களின் அன்புக்குப் பெரிதும் உரியவனாகிவிடுகிறான். உலகில் எங்கும் இப்படித் தான் நடக்கிறது. மிகப் பெருமை வாய்ந்த ஒருவன் சாதாரணப் பெண் ஒருத்தியிடம் இனிய மொழிகளைப் பேசினால் அவள் உச்சி குளிர்ந்துவிடுவாள். தன்னைப் போல் அதிர்ஷ்டசாலி உலகில் இல்லை என்று மகிழ்ந்து அவனிடம் அன்பு கொள்வாள். ஆனால் அந்த அதிர்ஷ்டம் என் விஷயத்தில் வேறு விதமாக இருக்கிறது. நான் எவ்வளவு உன்னைப் புகழ்ந்து பேசினாலும் நீ அதற்கு நேர்மாறாக என்னை அவமதிக்கிறாய். எனக்குக் கோபம் உண்டாகிறது. நான் பத்துத்தலை ராவணன்; மூவுலகங்களும் கண்டு அஞ்சும் வீரன். எனக்குக் கிட்டாதது எதுவுமில்லை. இயற்கையே என்னைக் கண்டு நடுங்குகிறது. சூரியன், சந்திரன், வாயு, அக்கினி, நட்சத்திரங்கள் எல்லாம் என் இச்சைப்படி நடக்கின்றன. அப்படிப்பட்டவன் என் பத்துத் தலைகளோடு உன் காலடியில் விழுந்துகிடக்கிறேன். அப்படி இருந்தும் நீ இணங்காமலிருக்கிறாய். இரு வித உணர்ச்சிகளில் ஈடுபட்டு நான் தவிக்கிறேன். ஒன்று, உன் மேலுள்ள தீராத மோகம். மற்றொன்று, ஓர் அற்பப் பெண் என்னை இகழ்ந்து அவமதிப்பதா என்ற கோபமும் ஆத்திரமும். கோபம் பொங்கி எழும்பொழுது ஒவ்வொரு சமயமும், 'அதற்குள் அவளை ஒன்றும் செய்ய வேண்டாம். அவளை வசிகரிக்க இன்னும் வேறு உபாயங்களைக் கையாண்டு பார்' என்று என் ஆசை கூறுகிறது. கெட்டிக்காரனான சாரதி குதிரைகள் திமிறிக்கொண்டு போகாமல் அடக்கிச் செலுத்துவது போல், உன்மீதுள்ள என் ஆசையும் என் கோபத்தை அடக்கிவிடுகிறது. காமம் மிகப் பொல்லாதது. அதை அடக்காமல் விடக்கூடாது. (ஆனால் அது தலைக்கேறிவிட்டால் அது நம்மையே அடக்கியாண்டுவிடுகிறது.) நாம் அன்பு செலுத்துகிறவர் விஷயத்தில் கோபம் கொள்ளுவது நியாயமாக இருந்தாலும் இரக்கமும் அன்பும் நம்மை ஆட்கொள்ளுகின்றன. கொல்லப்பட வேண்டிய நீ இதனால்தான் தப்பித்திருக்கிறாய். உன் மேலுள்ள ஆசை கோபத்தை அடக்கி வேறு எந்த உணர்ச்சியையும் கிளம்ப

வொட்டாமற் செய்துவிடுகிறது. நீ என்னை எவ்வளவோ பழித்துப் பேசுகிருய். அந்த ஒவ்வொரு சொல்லுக்கும் உன்னைச் சாதாரண வதை அல்ல, சித்திரவதை அல்லவா செய்ய வேண்டும்! ஆனல் இது இப்படியே நீடிக்காது. உன்னை இங்கே கொண்டுவந்த பொழுது கொடுத்த ஒரு வருஷத் தவணைக்கு இன்னும் இரண்டே மாதம் இருக்கிறது. அது முடிந்ததும் நீ என் மனைவியாக வேண்டும். அதற்கு நீ சம்மதப்படாவிட்டால் என் பரிசாரகர்கள் உன்னைக் கண்டதுண்டமாக வெட்டி என் காலைப்போஜனத்திற்குப் பக்குவம் செய்துவிடுவார்கள்'' என்கிருன்.

இவ்வளவு பயமுறுத்தலுக்கும் அவள் மசியவில்லை. அது மட்டு மல்ல, அவனை மேலும் அவமதித்துப் பேசுகிருள்.

अवेक्षमाणो वैदेहीं कोपसंरक्तलोचनः ।
उवाच रावणः सीतां भुजङ्ग इव निःश्वसन् ॥
अनयेनाभिसंपन्नमर्थहीनमनुव्रते ।
नाशयाम्यहमद्य त्वां सूर्यः सन्ध्यामिवौजसा ॥ V. 22. 30, 31.

அதைக் கேட்டுப் பின்னும் கோபம் அதிகரித்துச் சர்ப்பம் போல் சீறிய ராவணன், ''சூரியன் இருட்டைப் போக்குவது போல் உன்னை ஒரு நிமிஷத்தில் தொலைத்துவிடுகிறேன், பார்'' என்று கூறி விட்டுக் காவல் புரிந்துகொண்டிருக்கும் ராக்ஷஸிகளுக்கு உத்தரவிடு கிருன். ஸ்திரீகளை வசிகரிக்கும் தன் சாமர்த்தியத்திஞல் வசப் படுத்தி அவன் கொண்டு வந்திருக்கும் அரசிகள் அரசகுமாரிகள் போன்றவர்களா இந்த அரக்கியர்? இவர்கள் குற்றேவல் புரியும் அடிமைகள்; இதயமற்றவர்கள்; குரூரமானவர்கள். இவர்களைக் கண்ணுல் காண்பதற்கே அஞ்சுகிருள் சீதை. இவர்களின் விரூபத் தைக் கவி நகைச்சுவையுடன் வர்ணிக்கிருர்:—

एकाक्षीमेककर्णां च कर्णप्रावरणां तथा ।
गोकर्णीं हस्तिकर्णीं च लम्बकर्णीमकर्णिकाम् ।
हस्तिपाद्यश्वपाद्यौ च गोपदीं पादचूलिकाम् ।
एकाक्षीमेकपादीं च पृथुपादीमपादुकाम् ॥
अतिमात्रशिरोग्रीवामतिमात्रकुचोदरीम् ।
अतिमात्रास्यनेत्रां च दीर्घजिह्वामजिह्विकाम् ॥
अनासिकां सिंहमुखीं गोमुखीं सूकरीमुखीम् ।
यथा मद्वशगा सीता क्षिप्रं भवति जानकी ॥
तथा कुरुत राक्षस्यः सर्वाः क्षिप्रं समेत्य च ।
प्रतिलोमानुलोमैश्च सामदानादिभेदनैः ॥
आवर्जयत वैदेहीं दण्डस्योद्यमनेन च ।

इति प्रतिसमादिश्य राक्षसेन्द्रः पुनः पुनः ॥
काममन्युपरीतात्मा जानकीं पर्यतर्जयत् । V. 22. 33-39.

அவர்களைப் பார்த்து ராவணன், "சீதையின் மனம் என்னிடம் திரும்பும்படி நீங்கள் என்னைப்பற்றிச் சொல்ல வேண்டும். எப்படி யாவது பேசி அவள் மனத்தை மாற்றுங்கள். ஒவ்வொரு வராகவும் தனித்தனியாகவும் சேர்ந்தும் சொல்லுங்கள்" என்று கட்டளையிட்ட பிறகு, சீதையை அடித்து வீழ்த்துபவன் போலக் கோபத்துடன் அவள் முன் பாய்கிறான். அந்தச் சமயத்தில் அவனுடைய ராணிகளில் ஒருத்தியான தான்யமாலினி என்பவள் - அதிகாயன் என்ற வீரனைப் பெற்றவள் - ராவணனைத் தடுத்துச் சமாதானப்படுத்தி அழைத்துக்கொண்டு போகிறாள். அவள் கூறிய ஒரு வாக்கியம் இங்குக் குறிப்பிடத் தகுந்தது:—

अकामां कामयानस्य शरीरमुपतप्यते ।
इच्छन्तीं कामयानस्य प्रीतिर्भवति शोभना ॥ V. 22. 42, 43.

காதலின் ரகசியம் இதுதான். "தான் விரும்பும் பெண் சந்தோஷமாகத் தன்னை ஏற்றுக் கொண்டால் அப்பொழுது அந்தப் புருஷன் அடையும் இன்பம் பன்மடங்காகிறது. அவ்வாறு இல்லாமற் போனால் அந்தப் புருஷன் காமத் தீயினால் வெந்து போக வேண்டியதுதான்" என்கிறாள்.

யுத்த காண்டத்தில், யுத்தத்தைப்பற்றி ஆலோசிப்பதற்காக ராவணன் ஒரு சபை கூட்டுகிறான். அவன் ஆலோசனை கேட்கும் விதம், ராமர் கேட்பதற்கு நேர்மாறாக இருக்கும். ராமர் பக்ஷபாத மற்ற ஒரு பொதுவான சந்தேகத்தைப்பற்றிக் கேட்பார். விபீஷணன் வந்தபொழுது அவனை என்ன செய்வது என்று தம்மைச் சுற்றிலும் இருந்த அனைவரையும் அவர் யோசனை கேட்கிறார். அவனை ஏற்றுக்கொள்வதென்று தீர்மானித்திருந்தபோதிலும் மற்றவர்களிடம் அவர் அதைக் கூறவில்லை. சீதையை எப்படித் தன் இச்சைக்கு உட்படும்படிச் செய்வது என்று யோசனை கேட்கும் பொழுது ராவணன் ஸ்திரீகள் விஷயமாகத் தனக்குக் கிட்டியிருக்கும் சாபத்தைப் பற்றியும் கூறுகிறான். "இப்பொழுது என்ன செய்வது? வழி சொல்லுங்கள். ஆனால் சீதையை விட்டுவிடும்படி மட்டும் கூறாதீர்கள். இவ்வளவு கஷ்டப்பட்டதும், என் பெருமையெல்லாம் இழந்து அவமானப்பட்டதும் எல்லாம், அவளைத் திரும்பி ராமனிடம் அனுப்பிவிடுவதற்காகவா? ஒருநாளுமில்லை. அவளை எப்படி நான் அடையலாம் என்பதற்கு யோசனை சொல்லுங்கள்" என்று கேட்கிறான். தனக்குத் திருப்தியான விதமாகவே சொல்ல வேண்டும் என்று நினைக்கிறான்.

इयं च दण्डकारण्याद्रामस्य महिषी प्रिया ।
रक्षोभिश्चरिताद्देशादानीता जनकात्मजा ॥ VI. 12. 12.

மூலக்கிரந்தத்தைப் படிக்கும்பொழுது நாம் இதை நினைவு கொள்ளவேண்டும்: சட்டபூர்வமான எண்ணங்களுடன் ராவணன் பேசுகிறான். அவன் சீதையை அவளது விருப்பத்துக்கு விரோதமாகக் கொண்டுவந்து வைத்திருக்கிறான். அவன் செய்தது வரம்பு மீறிய செயலாயிற்றே என்று அவன் யோசனை கேட்பவர்கள் நினைப்பார்கள். வரம்பு மீறிய செயல் என்றால் அவளைத் திருப்பி அனுப்பி விடுவதுதான் முறையாகும். அதை எதிர்பார்த்தே அவன், "நம் மனிதர்களுக்கு உரிய இடமான ஜனஸ்தானத்திலிருந்து அவளைக் கொண்டு வந்தேன். அந்த இடம் நமக்குச் சொந்தம் அல்லவா? ஆகவே அதிலுள்ள இவளும் நியாயமாக எனக்குச் சொந்தமே ஆவாள்" என்று கூறுகிறான். அதன்பிறகு சீதையின்மேல் தனக்கு உள்ள மோகத்தை விவரித்துக் கூறுகிறான்.

தன் கள்ளக்காதலைப்பற்றி யாரேனும் பகிரங்கமாக விவரித்துச் சொல்லக் கேட்டிருக்கிறோமா? தன் இன்பத்திற்காகப் பிறனுடைய மனைவியைக் களவாடியதை வெட்கமில்லாமல் வெளியில் கூறுவதுடன், தன் இச்சை பூர்த்தியாகும் வழியையும் யோசனை கேட்கிறான். அவனுடைய தீய செயல்கள் நிறைவேறும்படிச் செய்வது மந்திரிகளின் வேலை. 'மந்த புத்தியுள்ளவள் இவளைப் போல யாரும் இருக்கமாட்டார்கள்' என்று நினைக்கிறான் ராவணன். சீதையின் பாதங்கள் அவனது உள்ளத்தைப் பெரிதும் கவருகின்றன.

सुलोहिततलौ श्लक्ष्णौ चरणौ सुप्रतिष्ठितौ ।
दृष्ट्वा ताम्रनखौ तस्या दीप्यते मे शरीरजः ॥ VI. 12. 15.

"சிவந்த நகங்களையுடைய அவளுடைய இரண்டு பாதங்களின் மீது பதிந்து என் கண்கள் அப்பால் போக மறுக்கின்றன. அவற்றைக் காணுந்தோறும் என் காமாக்கினி கொழுந்துவிட்டெரியத் தொடங்குகிறது" என்கிறான். இங்கு ஒரு விஷயம் கவனிக்க வேண்டும்: எல்லா ஸ்திரீகளின் பாதங்களும் அவர்களின் சரீர அமைப்புக்கு ஏற்றாற்போல் இருப்பதில்லை. கடவுள் ஏதாவது ஒரு குறையை வைத்துவிடுகிறார். சாதாரணமாகப் பாதங்கள் குற்றங்குறைவின்றி அமைவதில்லை. விரல்களில் இடைவெளி அதிகமாக இருக்கும். ஒரு பக்கம் மற்றொரு பக்கத்தைவிட உயர்ந்து இருக்கும். அல்லது விரல்கள் ஒன்றோடொன்று மிகவும் நெருக்கமாகப் பார்க்க விகாரமாக இருக்கும். சீதையின் பாதங்கள் லக்ஷணப்படி அமைந்திருப்பதை ராவணன் கவனித்திருக்கிறான்.

हंसं वदनं वल्गु विपुलं चारुलोचनम् ।
पश्यंस्तदावशस्तस्याः कामस्य वशमेयिवान् ॥
क्रोधहर्षसहायेन दुर्वर्णकरणेन च ।
शोकसन्तापनित्येन कामेन कलुषीकृतः ॥

सा तु संवत्सरं कालं मामयाचत भामिनी ।
प्रतीक्षमाणा भर्तारं राममायतलोचना ॥
तन्मया चारुनेत्रायाः प्रतिज्ञातं वचः शुभम् । VI. 12. 17-20.

"எடுப்பான நாசியும் அழகிய கண்களுமுடைய அவள் முகத்தைப் பார்க்கும்பொழுது காமத்தால் பீடிக்கப்படுகிறேன். கோபம் சந்தோஷம் ஆகிய இரண்டுமே சேர்ந்து என்னைக் கலங்க அடிக்கின்றன. அவள் ஒரு வருஷம் தவணை கேட்டாள். நானும் சரி என்று சம்மதித்திருக்கிறேன்" என்கிறான்.

வியாக்கியானத்தில் சீதை தவணை கேட்டதாகவே காணவில்லை. ராவணனே அவளுக்கு ஒரு வருஷம் அவகாசம் அளிக்கிறான் என்பதாக இருக்கிறது. சீதை அவ்வளவு தாழ்ந்து போய் ராவணனிடம் யாசித்திருக்க மாட்டாள் என்று கருதி, உரையாசிரியர்கள் அதை விலக்கிவிட்டனர். மந்திரிகளிடம் யோசனை கேட்கும் பொழுது, 'சீதையைத் திருப்பி அனுப்புவதாக இல்லை' என்கிறான் ராவணன்.

अदेया च यथा सीता वध्यौ दशरथात्मजौ ।
भवद्भिर्मन्त्र्यतां मन्त्रः सुनीतिश्चाभिधीयताम् ॥ VI. 12. 25, 26.

சீதை தனக்கு வசமாக வேண்டும்; ராம லக்ஷ்மணர்களைக் கொல்ல வேண்டும்; இவ்விரண்டு காரியங்களையும் சாதிக்கக்கூடிய வழியைக் கூறும்படி மந்திரிகளிடம் ராவணன் யோசனை கேட்கிறான். சீதையினிடம் அவனுக்கு உள்ள தீராத மோகம் அனைவரும் அறிந்ததே. அவனே அதை மறைத்து வைக்கவில்லை. இந்திரஜித் மாயாசீதையை அனுமாரின் எதிரில் வதம் செய்வதை அனுமார் ராமரிடம் ஓடிச்சென்று கூறுகிறார். அதை நம்பி ராமர் மூர்ச்சையுற்றுக் கீழே விழுகிறார். சிரமப்பட்டு அவரை மூர்ச்சை தெளியும்படிச் செய்ய வேண்டியதாகிறது. சிறிது பொறுத்து அங்கு வந்த விபீஷணன் விஷயத்தை அறிந்து, "மாயவித்தையில் வல்லவனான இந்திரஜித் சீதையைப் போன்ற மாயகன்னிகை ஒருத்தியை அனுமார் எதிரில் கொன்றிருக்கிறான்" என்கிறான். 'ராவணன் ஒருகாலும் சீதையைக் கொல்லமாட்டான்' என்று ராமருக்கு உறுதிப்படுத்திக் கூறுகிறான்.

अभिप्रायं तु जानामि रावणस्य दुरात्मनः ।
सीतां प्रति महाबाहो न च घातं करिष्यति ॥
याच्यमानस्तु बहुशो मया हितचिकीर्षुणा ।
वैदेहीमुत्सृजस्वेति न च तत् कृतवान् वचः ॥
नैव साम्ना न दानेन न भेदेन कुतो युधा ।
सा द्रष्टुमपि शक्येत नैव चान्येन केनचित् ॥ VI. 84. 10-12.

''என் அண்ணனின் மனம் எனக்குத் தெரியும். அவன் சீதையை ஒருபோதும் கொல்லமாட்டான். அவளைத் தங்களிடம் திருப்பி அனுப்பிவிடும்படி எவ்வளவு தடவை அவனைக் கேட்டுக் கொண்டிருந்திருப்பேன்! அவளை இங்குக் கொண்டுவந்து சிறை வைத்திருப்பது இலங்கை முழுவதும் அழிவதற்கே ஹேதுவாகும் என்று எச்சரித்திருக்கிறேன். தான் விரும்பியது கைகூடும் என்ற நம்பிக்கையில் நான் கூறியது எதையுமே அவன் கேட்கவில்லை. மித மிஞ்சிய மோகத்தினுல் அவளை யாரும் பார்க்கவிடாமல் காப்பாற்று கிறுன். அவளைக் கொன்றுவிடுவதற்காகவா இங்கு அழைத்து வந் திருக்கிறுன்!'' என்கிறுன். உண்மையில் அவள் அல்லவா அவனைக் கொல்லப்போகிறுள் என்பது கருத்து.

வீபீஷணன் இங்கே கொஞ்சம் மிகைப்படுத்திப் பேசுகிறுன். இந்திரஜித் கொலையுண்டதும் ராவணனதுஉள்ளம் பெரிதும் ஆத்திர மடைந்து பன்மடங்கு கொடூரமுள்ளதாகிறது. இவ்வளவு துன்பத் துக்கும் காரணமான சீதையைக் கொன்றுவிடக் கிளம்புகிறுன். ''ஐயோ! அனுமான் என்னைத் தன் முதுகிலேற்றி அழைத்துச் செல்வதாகக் கூறியபொழுது நான் ஏன் பேசாமலிருந்தேன்! என்ன புத்தியற்றவள் நான்!'' என்று சீதை வருந்துகிறுள். ராவணன் உண்மையில் அப்பொழுது சீதையைக் கொல்லவே விரும்புகிறுன். ஆகவே, விபீஷணன் ராவணனைப்பற்றிக் கூறியது கொஞ்சம் மிகை யாகும். ஆயினும் அவன் கூறியதும் உண்மையே! கடைசியில் ராவணனுக்குத் தான் எண்ணியதை நிறைவேற்ற மனமில்லை. அந்தச் சமயத்தில் சுபார்சுவன் என்பவன் வந்து, ''ராமனை அல்லவா நீங்கள் வதம் செய்ய வேண்டும்?'' என்று கூறித் தடுத்துவிடுகிறுன். உடனே ராவணனது வீராவேசம் கிளம்பிவிடுகிறது. சீதையைத் தீர்த்துக் கட்டிவிடுவதென்று தீர்மானித்திருந்த போதிலும், சிறு விஷயங்கூட அந்தத் தீர்மானத்தை மாற்றிவிடப் போதுமானது.

### கானகத்துக்குப் புறப்பட்ட சீதை

ஒரு சிறு விஷயம்: ஏற்கனவே கூறியிருந்த போதிலும் மீண்டும் கூறினுல் மிகையாகாது; வால்மீகியின் கற்பனையில் உரு வான சீதையைப் போன்ற ஒரு பெண்மணி வேறு எந்தப் புத்தகத் திலுமில்லை. அத்தகைய பெண்மணியை நாம் பார்த்ததுமில்லை. அவளை யாரும் அணுக முடியாது. ஒரு பெண்ணுக்கு என்ன என்ன வசிகரம் அமைந்திருக்க முடியுமோ அவ்வளவும் அவளிடம் பொருந்தியிருப்பதாகக் கவி வர்ணிக்கிறுர். அழகு, மெலிந்த உள்ளம், பிறர் துன்பத்தைக் கண்டு இரக்கம், கற்பு, அறிவு, மனே தைரியம், பொறுமை ஆகிய யாவும் அவளிடம் ஒருங்கே குடிகொண் டிருக்கின்றன. அவள் ஓர் அரிய சிருஷ்டி. அவளைப் போல முன்பும் இருந்ததில்லை; இனி இருக்கப்போவதுமில்லை. அவள் சந்தோஷ

மாக இருந்த காலத்தை எடுத்துக்கொள்வோம். அது சொற்ப காலம்தான். வெகு சீக்கிரமே, தேறுதல் சொல்வார் யாருமின்றி, அவள் தன்னந்தனியே துன்பப்பட்ட காலத்துக்கு வந்துவிடும்படி இருந்தது. ராவணன் கூறியதெல்லாம் அவளுக்குக் காதில் நாராச மாக விழுகின்றன. அதைப்பற்றிப் பிறகு பார்க்கலாம். ராஜ்யத்தை விட்டு, அயோத்தியை விட்டுக் காட்டில் வசித்தபொழுது, அவள் அநுபவித்த இன்பம் எத்தகையது! அதை நினைக்கும் பொழுது நம் உள்ளம் எவ்வாறு கனிந்து உருகுகிறது! ராஜ்யம் அவளுக்கு ஒரு பொருட்டாகவே தோன்றவில்லை. ராமர்தாம் அவளுக்கு யாவும். அவர் இருக்குமிடமே அவளுக்குச் சுவர்க்கம். அவர் உடன் இல்லையென்றால் அது நரகமாகத் தோன்றும். ஆனால் அயோத்தியில் இருந்தபொழுதும் அவள் குணங்கள் விசேஷமாகப் பிரகாசிக்கின்றன. இங்கே கவியைப்பற்றிய ஒரு விஷயம் நாம் கவனிக்க வேண்டும்: மணமாக வேண்டிய கன்னிகைகளை வைத்துக் கொண்டிருக்கும் பெற்றோர்களின் அநுபவம் வருந்தத்தக்கது. மணப்பருவத்தை அடைந்துள்ள சீதை பேரணிகலமாகத் திகழ்கிறாள். அவளை விவாகம் செய்துகொடுக்க எந்தத் தந்தையும் அவ்வளவு கவலைப்பட வேண்டிய அவசியமே இல்லை. ஆயினும் முதன் முதலில் ஜனகரைப்பற்றிச் சொல்லும்பொழுது அவருடைய கஷ்டங்களைப்பற்றிக் கவி ஏதும் கூறவில்லை. சீதை காட்டில் அனசூயையிடம் தன் கல்யாணத்தைப்பற்றிச் சொல்லும்பொழுது, ஆறு வயதில் தனக்குச் சுயம்வரம் நடந்ததென்று கூறுகிறாள். கணவனை அடைய வேண்டிய அறிவு அவளுக்கு வாய்த்திருக்கிறது.

पतिसंयोगसुलभं वयो दृष्ट्वा तु मे पिता ।
चिन्तामभ्यगमद्दीनो वित्तनाशादिवाधनः ॥
सदृशाच्चापकृष्टाच्च लोके कन्यापिता जनात् ।
प्रधर्षणमवाप्नोति शक्रेणापि समो भुवि ॥
तां धर्षणामदूरस्थां दृष्ट्वा चात्मनि पार्थिवः ।
चिन्तार्णवगतः पारं नाससादाप्लवो यथा ॥ II. 118. 34-36.

ஆறுவயதுப் பெண் இம்மாதிரிப் பேசக்கூடுமா? எவ்வளவு நிச்சயம் இருந்தால் இம்மாதிரி உறுதியுடன் பேச இயலும்! "பணம், பதவி, கௌரவம் யாவற்றிலும் இந்திரனுக்குச் சமமாகத் தந்தை இருக்கலாம். ஆயினும் மணமாகாத பெண் ஒருத்தி இருந்துவிட்டால் அவருக்கு நிகரானவர்களும் அவருக்குக் கீழ்ப்பட்டவர்களுங்கூட அவரை மதிக்கமாட்டார்கள்; இகழ்ச்சியுடன் நடத்துவார்கள்" என்கிறாள். ஜனகர் பெரிதும் தனக்காகக் கவலைப்பட்டதாகச் சீதை கூறுகிறாளே தவிர, கவி அவ்விதம் கூறவேயில்லை. அப்படிக் கவலைப்பட்டிருந்தால், ஒருவராலும் பங்கம் செய்ய முடியாத சிவதனுஸ்ஸைப் பங்கம் செய்யும்படி மணமகனுக்கு ஒரு

பெரும் போட்டியை ஏற்படுத்தியிருப்பாரா? அந்த வில்லைத் தூக்குவதற்கே அநேகருக்கு இயலவில்லை. அத்தகைய வில்லைத் தூக்கி நிறுத்த வேண்டும். "இந்த வில்லைத் தூக்கி எவன் நாணேற்றுகிறானோ அவனுக்கே என் பெண்ணை மணம்செய்து கொடுப்பேன்" என்று ஜனகர் கூறியிருப்பாரா? அது கொஞ்சம் சந்தேகமாகவே இருக்கிறது. ஆயினும் சீதை அனசூயையிடம், "என் தந்தை பிறரது இகழ்ச்சிக்கு ஆளாகும் நிலையில் இருந்தார்" என்கிறாள். இது நமக்குச் சிறிது வியப்பை அளிக்கிறது அல்லவா? சீதை இம்மாதிரியெல்லாம் அனசூயையிடம் சொல்லியிருக்கமாட்டாள் என்றே நாம் தைரியமாக வைத்துக்கொள்ளலாம். வால்மீகி இருந்த காலத்தில் பெண்களைத் தக்கபடி மணம்செய்து கொடுப்பது மிகவும் சிரம சாத்தியமாக இருந்திருக்கலாம். பெண்களை மணம் செய்து கொடுப்பதில் பெற்றோர் உண்மையாகவே மிகவும் கவலைப்பட்டதைக் கருத்தில் கொண்டு, வால்மீகி ஜனகர் விஷயத்திலும் அம்மாதிரி இருந்ததாக வர்ணிக்கிறார். அது மட்டுமல்ல, இதற்கு முந்திய காலத்திலும் இவ்வாறே இருந்ததாக அந்த எண்ணத்தையே போற்றியவராகக் கூறுகிறார். ராவணனுடைய மாதாமகனான சுமாலி தன் மகள் கைகஸீ என்பவளுக்கு விவாகம் செய்த பொழுதும் இத்தகைய கஷ்டத்தை அநுபவித்ததாகத் தெரிகிறது. பிரம்மாவிற்குப் பிறகு இரண்டு மூன்று தலைமுறைகளுக்குள்ளாகவே ஜனத்தொகை அவ்வளவு விருத்தியாகியிருக்க முடியுமா? சுமாலி தன் பெண்ணைப் பார்த்துக் கூறுகிறான்:—

पुत्रि प्रदानकालोऽयं यौवनं तेऽतिवर्तते ।
प्रत्याख्यानाच्च भीतैस्त्वं न वरैः प्रतिगृह्यसे ॥
त्वत्कृते च वयं सर्वे यन्त्रिता धर्मबुद्धयः ।
त्वं हि सर्वगुणोपेता श्रीः साक्षादिव पुत्रिके ॥
कन्यापितृत्वं दुःखं हि सर्वेषां मानकाङ्क्षिणाम् ।
न ज्ञायते च कः कन्यां वरयेदिति कन्यके ॥
मातुः कुलं पितृकुलं यत्र चैव प्रदीयते ।
कुलत्रयं सदा कन्या संशये स्थाप्य तिष्ठति ॥ VII. 9. 7-10.

"மகளே, உன்னிடம் இணையற்ற அழகு குணம் அறிவு எல்லாம் நிரம்பியிருந்தும் உனக்கு ஏற்ற கணவன் கிடைக்கவில்லை. குலமும் கௌரவமும் பெண்களால் அழிகின்றன" என்கிறான்.

மயன் என்பவனுக்கு மணப்பருவத்தில் மந்தோதரி என்ற ஒரு பெண். அவளுடன் தோட்டத்தில் அவன் உலாவிக்கொண்டிருந்த பொழுது ராவணன் அந்த வழியாகப் போகும்படி நேருகிறது. மயனை யார் என்று அவன் கேட்க, அதற்கு மயன், "இவள் என் மகள். இவளுக்குத் தகுந்த கணவனைத் தேடுவதற்கு இவ்விடத்துக்கு

வந்தேன்'' என்று பதில் கூறுகிறுன். தந்தை பெண்ணுக்கு வரன் தேடுவதைப்பற்றி வால்மீகி மிகவும் பெரிதாக நினைத்திருக்க வேண்டும். அதனுல்தான் அத்தகைய சொற்கள் ஒவ்வொரு தந்தையின் வாயினின்றும் வருவதாகக் கூறுகிருர். மயன் கூறி யதைக் கேட்டதும் ராவணன் உடனே, "நானே இவளைக் கல்யாணம் செய்துகொள்கிறேன்'' என்று கூறி, மந்தோதரியை விவாகம் செய்துகொண்டு, தந்தையின் கவலையைத் தீர்க்கிருன். மயன் விலைமதிப்பற்ற பொருள்களைப் பரிசாக வழங்குகிருன். அவற்றில் ஒன்று சக்தி ஆயுதம். அதைக் கொண்டுதான் இரண்டு தடவை லக்ஷ்மணனை ராவணன் பிரக்ஞையிழக்கச் செய்கிருன்.

அயோத்தியா காண்டத்தில், ராமர் சீதையினிடம் சென்று தாம் காட்டுக்குப் போகவேண்டியிருப்பதைத் தெரிவித்தபொழுது சீதை, ''நானும் உடன் வருவேன்'' என்கிருள். காட்டிலுள்ள கஷ்டங்களை எடுத்துக்கூறி அவர் அவளை எவ்வளவு தடுத்தும் அவள் கேட்பதாக இல்லை. பிறகு ராமர், 'தஸ்மாத் து:கதரம் வநம்' என்று, வனத்திலுள்ள துன்பங்களைப் பதினெட்டு ச்லோகங்களில் வர்ணித்துக் கூறுகிருர். அதன் பின் அவள் தம் தாய் தந்தையர் பரதன் இவர்களிடம் நடந்துகொள்ள வேண்டிய விதத்தையும், மேலும் சில அறிவுரைகளையும் அவளுக்கு எடுத்துக் கூறுகிருர். பரதனிடம் அவள் நடந்துகொள்ள வேண்டிய விதத்தைப்பற்றித் தான் அவர் பின்னும் விசேஷமாக எடுத்துக் காட்டுகிருர். அந்தப் பிரசித்தமான சுலோகத்தை இப்பொழுது பார்ப்போம்.

சீதையின் நிலையில் இருக்கும் ஒரு பெண்ணுக்குப் பரதனிடம் கோபமும் பொருமையும் உண்டாகி, அவனுக்கு ஏதேனும் தீங்கு நேர வேண்டும் என்று கோருவதும் சகஜம். அவனைப் பார்க்கும் பொழுதெல்லாம் ராமருக்கும் அவனுக்குமுள்ள வித்தியாசத்தைக் கூறி, ராமர் அரசராக இருந்தால் ராஜ்யம் முழுவதும் எவ்வளவு மகிழ்ச்சியோடு இருக்கும் என்றும் சொல்லத் தோன்றும். இதை எதிர்பார்த்தே ராமர், ''இத்தகைய சந்தர்ப்பத்தில் ஸ்திரீகள் சாதாரணமாகச் செய்யும் தவற்றை நீ செய்யலாகாது'' என்கிருர்.

ऋद्धियुक्ता हि पुरुषा न सहन्ते परस्तवम् ।
तस्मान्न ते गुणाः कथ्या भरतस्याग्रतो मम ॥ II. 26. 25.

நாம் அறிவுடன் சந்தோஷமாக இருக்க வேண்டுமென்ருல் வாழ்க்கையில் இந்த உயர்ந்த உண்மையைக் கடைப்பிடிக்க வேண்டும். ஒருவன் மிகப் பெரும் பதவியையடைந்து செல்வாக்கும் அந்தஸ்தும் பெற்றுத் தன்னை அண்டியிருப்பவர்களுக்கு விசேஷச் சலுகைகளையும் அளிக்கும் சிறப்பை எய்திவிட்டால் அவனிடம் சில சமயம் ஒரு பெருங்குறை இருப்பதைக் காணலாம். அவனை அணுகு கிறவர் பிறரைப்பற்றிப் புகழ்ந்து பேசும் எதையும் அவன் கேட்கப்

பொறுக்கமாட்டான். "அத்தகைய உயர்ந்த நிலையில் இருப்பவர்கள் பிறர் புகழைக் கேட்கப் பொறுக்கமாட்டார்கள். ஆகவே, நான் வனத்துக்குச் சென்றபிறகு என்னைப்பற்றிப் பரதனிடம் நீ புகழ்ந்து பேசலாகாது" என்று ராமர் உபதேசிக்கிறார். சிறந்த அறிவுபெற்ற ராமரே, பரதன் ஒரு தவறுமில்லாதவன் என்று நன்கு தெரிந்திருந்தும், அவனைப்பற்றி இவ்வாறு எச்சரிக்கிறார், பாருங்கள். மனித இயல்பு அதுதான்.

சீதைக்கு அவர் கூறியதெல்லாம் காதில் விழவேயில்லை. "காட்டிலுள்ள கஷ்டங்களையும் பயங்கர விலங்குகளையும் பற்றிப் பேசுகிறீர்கள். அவை உங்களிடம் நெருங்குமா? நீங்கள் அருகில் இருக்கும்பொழுது எனக்கு எப்படிப் பயம் உண்டாகும்? உங்கள் பராக்கிரமம் எனக்குத் தெரியாதா? நான் சிறுமியாக என் தந்தையின் வீட்டில் இருந்தபொழுது ஜோசியர்கள், 'இந்தப் பெண் கானகத்தில் வாழ்வாள்' என்று சொல்லியிருக்கிறார்கள். அது முதல் நானும் வனவாசத்தை ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிறேன். காட்டில் சென்று வசிக்க வேண்டுமென்று விரும்புவதாக எவ்வளவோ தடவை உங்களிடம் கூறியிருக்கிறேன். நீங்களும் சரி என்று சொல்லியிருக்கிறீர்கள். இப்பொழுது அதற்கு ஏற்ற சந்தர்ப்பம் வாய்த்திருக்கிறது. சந்தோஷமாகப் போய் வருவோம்" என்கிறாள்.

மங்கையர்திலகமான சீதை சில உயர்ந்த கருத்துக்களை அதன் பின் கூறுகிறாள் :—

इह लोके च पितृभिर्या स्त्री यस्य महामते ।
अद्भिर्दत्ता स्वधर्मेण प्रेत्यभावेऽपि तस्य सा ।
एवमस्मात् स्वकां नारीं सुवृत्तां हि पतिव्रताम् ॥
नाभिरोचयसे नेतुं त्वं मां केनेह हेतुना ॥
भक्तां पतिव्रतां दीनां मां समां सुखदुःखयोः ।
नेतुमर्हसि काकुत्स्थ समानसुखदुःखिनीम् ॥
यदि मां दुःखितामेवं वनं नेतुं न चेच्छसि ।
विषमग्निं जलं वाहमास्थास्ये मृत्युकारणात् ॥ II. 29. 18-21.

"பிதாவினால் தாரை வார்த்துக் கொடுக்கப்பட்ட பெண் கணவனுக்குச் சொந்தமாவாள். இந்த உலகத்திலே ஆகட்டும், மறு உலகில் ஆகட்டும், அவனை விட்டு அவளை யாரும் பிரிக்க முடியாது. இதுதான் தர்மம் என்று தெரிந்துகொண்ட நான் உங்களை விட்டுச் செல்லப்போவதில்லை. மரணத்திற்குப் பிறகும் மனைவி கணவனை விட்டுப் பிரிய மாட்டாள். இவ்விதம் நான் உங்களுடன் பிணைக்கப்பட்டிருக்கும்பொழுது என்னை உடன்

அழைத்துப் போக உங்களுக்கு மனமில்லாமலிருப்பதற்குக் காரணம் என்ன? இன்பத்திலும் துன்பத்திலும் உங்களுடன் சேர்ந்து இருப்பவள் நான். என்னைக் கூட அழைத்துச் செல்ல உங்களுக்கு இஷ்டமில்லை என்றால் பிறகு நான் எதற்கு உயிரோடு இருக்க வேண்டும்? விஷத்தைப் பருகியாவது, நெருப்பில் விழுந்தாவது அல்லது ஆற்றில் விழுந்தாவது உயிரைப் போக்கிக் கொள்வேன்'' என்கிறாள்.

என்ன செய்வதென்று தெரியாமல், கடைசியாகச் சீதை மேற்கூறியவாறெல்லாம் பேசுகிறாள். புருஷர்களைக்காட்டிலும் ஸ்திரீகளுக்குக் கொஞ்சம் மிகையாகப் பேசுவதில் பிரியம் உண்டு அல்லவா? கஷ்டங்களை ஒருவாறு சகித்துக்கொள்ளப் புருஷர்களுக்குத் திறமை உண்டு. மனைவிக்குக் கணவன்தான் கிட்டியவன். அவனிடம்தானே அவள் தன் சலுகையைக் காண்பிக்க முடியும்? ''சரி, அப்படியானால் போங்கள். ஆனால் பிறகு என்னை உயிரோடு காணமாட்டீர்கள்!'' என்றுதான் அவள் சாதாரணமாய்ச் சொல்லுவாள். அதுதான் அவள் கடைசியாகத் தொடுக்கும் பாணம். சில ஸ்திரீகள் அப்படியே செய்தும் விடுவார்கள். இவ்வளவு கூறியபிறகும் ராமர் மனம் இளகவில்லை. பிறகுதான் சீதை வேண்டிக்கொள்வதை விட்டு, ஏசிப் பேசத் தொடங்குகிறாள்:—

सा तनुत्तमसंविग्ना सीता विपुलवक्षसम् ।
प्रणयाच्चाभिमानाच्च परिचिक्षेप राघवम् ॥
किं त्वामन्यत वैदेहः पिता मे मिथिलाधिपः ।
राम जामातरं प्राप्य स्त्रियं पुरुषविग्रहम् ॥ II. 30. 2, 3.

''இப்பொழுது என் தந்தையின் நினைவு வருகிறது. உலகமெங்கும் பெண்ணுக்கு வரன் தேடிக் கடைசியில் உங்களைப் பெற்றார். கிடைத்தற்கரிய மருமகன் கிடைத்துவிட்டதாக நினைத்திருந்தால் அவரை முட்டாள் என்றுதான் கூற வேண்டும். ஆண்வேஷம் பூண்ட ஒரு பயங்கொள்ளிப் பெண்ணே அல்லவா அவருக்கு மருமகனாக வாய்த்திருக்கிறான்!'' என்கிறாள்.

இம்மாதிரி அவள் கூறியது மனைவியின் ஒழுக்கத்துக்குப் பெரிதும் விரோதம் என்று சாதாரணமாகக் குற்றம் சாட்டுவதுண்டு. தீவிரமான துக்கத்தை அநுபவித்துக்கொண்டிருக்கும் பொழுதுகூட மனைவியின் பேச்சுக்கு ஒரு வரம்பு உண்டு. அதை அவள் ஒருபோதும் மீறலாகாது என்கிறார்கள். அது சரி என்று தோன்றவில்லை. சீதையின் சொற்கள் சீலம், சத்தியம், தைரியம் இவை யாவும் பொருந்திய ஒரு ராஜபுத்திர ஸ்திரீ அவள் என்பதையே நிரூபிக்கின்றன என்று தோன்றுகிறது அல்லவா?

अनृतं बत लोकोऽयमज्ञानाद्यद्धि वक्ष्यति ।
तेजो नास्ति परं रामे तपतीव दिवाकरे ॥
किं हि कृत्वा विषण्णस्त्वं कुतो वा भयमस्ति ते ।
यत् परित्यक्तुकामस्त्वं मामनन्यपरायणाम् ॥
न त्वहं मनसाप्यन्यं द्रष्टास्मि त्वदृतेऽनघ ।
स्वयं तु भार्यां कौमारीं चिरमध्युषितां सतीम् ।
शैलूष इव मां राम परेभ्यो दातुमिच्छसि ॥
यस्य पथ्यं च रामात्थ यस्य चार्थेऽवरुध्यसे ।
त्वं तस्य भव वश्यश्च विधेयश्च सदानघ ॥ II. 30. 4, 5, 7-9.

''எதற்கு அஞ்சுகிறீர்கள்? உங்களைத் தவிர வேறு தஞ்சமற்ற என்னை விலக்கிவிட்டுச் செல்லும்படி எவை உங்களுக்குப் பயமுண்டாக்குகின்றன? நான் உங்களையே நம்பியிருப்பவள். அப்படிப்பட்ட என்னை விட்டுச் செல்கிறேன் என்கிறீர்கள். நான் வேறு யாரையும் கண்ணெடுத்துப் பார்க்க மாட்டேன். பரதன் வசத்தில் என்னை விட்டுச் செல்லாதீர்கள்'' என்கிறாள் சீதை.

ராமர் கூறியதை அவள் தவறாகக் கருதிப் பேசுகிறாள். ''இங்கே பரதனுடன் இரு'' என்று ராமர் சாதாரணமாகக் கூறியதை, அதன் பொருளை வேண்டுமென்றே சிறிது மாற்றிப் பேசுகிறாள். ''மிகச் சிறுவயதிலேயே உங்களிடம் வந்து சேர்ந்த என்னைப் பலவிதமாக உங்கள் அன்புக்கு உரிய பாத்திரமாக்கிய பிறகு, ஸ்திரீயின் சம்பாத்தியத்தில் பிழைக்கும் சைலூஷனைப் போல் பிறரிடம் ஒப்படைக்கப் பார்க்கிறீர்களே! உங்களுடன் இருந்தால் போதும். எனக்கு நல்ல உணவு வேண்டியதில்லை. எதுவும் எனக்குச் சிறந்த உணவாகத் தோன்றும். காட்டில் நீங்கள் நடந்து செல்லும் புழுதி படிந்த தரையே எனக்கு மிகவும் உகந்தது. புல்தரையே எனக்கு உயர்ந்த பட்டு மெத்தைக்குச் சமமாகும். எந்தக் காட்சியும் எனக்கு அருவருப்பை உண்டாக்காது. என்னைப்பற்றிக் கவலை வேண்டாம். நான் உங்களுக்குப் பாரமாக ஒரு நாளும் இரேன். நீங்கள் இருக்குமிடம் எதுவாக இருந்தாலும் அதுவே எனக்குச் சுவர்க்கமாகும். நீங்கள் இல்லாத இடம் நரகமே! இது நிச்சயம். என்னை உடன் அழைத்துச் செல்லுங்கள். உங்கள் சந்தோஷத்துக்கு ஒரு குறையுமில்லை என்று உறுதியாகச் சொல்லுவேன். நான் ஒரு க்ஷத்திரிய கன்னிகை. கைகேயி, பரதன் இவர்களில் யாருடைய அதீனத்திலும் என்னால் இருக்க முடியாது. நீங்கள் என்னைப் புறக்கணித்துச் சென்றால் பிறகு எனக்கு இந்த வாழ்வு இல்லை. ஒரு நிமிஷங்கூட உங்களைப் பிரிந்து என்னால் உயிர்வாழ முடியாதென்றால் பதினான்கு வருஷம் எப்படி உயிரோடு இருக்கும்படிக் கூறுகிறீர்கள்?'' என்று மன்றாடுகிறாள்.

சீதையின் சிறந்த உள்ளத்தையும், சமயங்களில் அவள் நிற்கும் உயர்ந்த நிலையையும் மேற்கண்ட சொற்கள் எவ்வளவு நன்முக நிரூபிக்கின்றன! சீதை ராமருடன் மன்முடுவதில் கவி தம் திறமையை நன்கு காட்டுகிமுர். கெஞ்சல், பயமுறுத்தல், மன்முடல், கடமையை எடுத்துக் கூறுதல், விவாகத்தின் புனிதத் தன்மை ஆகிய யாவும் ஒரே ஸர்க்கத்தில் சேர்த்துச் சீதையின் வாயிலாகக் கூறப்படுகின்றன. தீராத மன வேதனையில் சில கடுஞ் சொற்கள் வெளியாகின்றன. அகம்பாவமுள்ள புருஷனைத் தவிர வேறு யார் அவற்றைத் தவமுக நினைக்க முடியும்? பிறந்த இடம் நல்ல க்ஷத்திரிய குலம்; புகுந்த இடமோ அதற்கு மேல் சிறப்பு வாய்ந்தது. உலகில் புருஷசிரேஷ்டனுக உள்ளவனைக் கணவனுக அடைந்த பெருமை பூண்டவள். காட்டில் கணவனுடன் வாழ இயலாத கோழை என்றெல்லாம் அவளைப் பார்த்துக் கூறுவதா? மீண்டும் மீண்டும் அவர் ஒரே கதையைச் சொல்லிக்கொண்டி ருக்கும்பொழுது அவள் என்ன செய்வாள்? அவள் ராமரை ஏசிப் பேசியது அவளுக்குப் பெருமையையே அளிக்கிறது. கணவனிடம் தைரியமாகப் பேசுவதற்கு மனைவிக்கு உரிமை இல்லையா? கணவனும் அவளும் ஒன்றல்லவா? மனைவி தைரியமாக மனம் விட்டுப் பேசினுல் கணவன் ஏன் வெறுப்புக் கொள்ள வேண்டும்? குறுகிய மனமுள்ள அற்ப மனிதர்கள்தாம் இதைத் தவமுக நினைப்பார்கள். ஆகவே, சீதையைக் குற்றம் கூறுபவர்களை மன்னிக்க முடியாது.

சீதை ஏசியதை ராமர் எவ்விதம் ஏற்றுக்கொண்டார் என்பது தான் முக்கியமானது. மனைவி எப்படி இருக்க வேண்டும் என்பது ராமருக்கு நன்கு தெரியும் அல்லவா? அவருக்குக் கோபமோ வெறுப்போ உண்டாயிற்று என்று பார்ப்போம். அவருக்கு ஒன்றுமில்லை என்முல் அற்ப மனிதர்களாகிய நாம் யார் அவ்வாறு சொல்லுவதற்கு? ராமர் தர்மாத்மா; பராக்கிரமம் மிகுந்தவர். சீதையின் குத்தலான மொழிகளை ஒன்றும் கூருமல் ஏற்றுக் கொள்ளுகிமுர். அவர் பதில் கூறுவதைப் பார்ப்போம்:—

तां परिष्वज्य बाहुभ्यां विसंज्ञामिव दुःखिताम् ।
उवाच वचनं रामः परिविश्वासयंस्तदा ॥
न देवि तव दुःखेन स्वर्गमप्यभिरोचये ।
न हि मेऽस्ति भयं किञ्चित् स्वयंभोरिव सर्वतः ॥
तव सर्वमभिप्रायमविज्ञाय शुभानने ।
वासं न रोचयेऽरण्ये शक्तिमानपि रक्षणे ॥
यत् सृष्टासि मया सार्धं वनवासाय मैथिलि ।
न विहातुं मया शक्या कीर्तिरात्मवता यथा ॥ II. 30. 26-29.

அவர் அவளை அணைத்துக்கொண்டு பின்வருமாறு சமாதானம் செய்கிறார். அவள் சொற்கள் அவருக்கு வெறுப்பை அளித்திருந் தால் அவ்வாறு செய்யமாட்டார் அல்லவா? ''உனக்குத் துன்பத்தை அளித்துவிட்டுச் சுவர்க்கத்துக்குப் போயும் நான் சந்தோஷமாக இருக்க முடியுமா? காட்டிலுள்ள கஷ்டங்களை விவ ரிக்கும்பொழுது எனக்கு அவைபற்றிப் பயம் என்பதில்லை. உன் னைப் பாதுகாக்க எனக்குச் சக்தியுண்டு. ஆயினும், ஏன் முதலில் வேண்டாமென்று கூறினேன் என்று ஆச்சரியப்படுகிறாயா? நீ இவ்வளவு தைரியசாலி என்று எனக்குத் தெரியாது. நீ மற்றச் சாதாரணப் பெண்களைப் போன்றவள் என்று நினைத்தேன். இப் பொழுது நீ எப்படிப்பட்டவள் என்பது தெரிந்துவிட்டது. நீ கூறிய படியே நடப்பேன். உன்னை எப்படி விட்டுச் செல்ல என்றால் முடியும்? வனவாசத்திற்கென்றே நீ சிருஷ்டிக்கப்பட்டாய் என்று தோன்றுகிறது. ஐம்புலன்களையும் அடக்கி உலகமனைத்தையும் ஒன்றாகப் பாவிக்கும் ஒரு ஸத்புருஷன் தனக்கு இயல்பான அன்புக் குணத்தை எவ்வாறு விலக்க முடியாதோ அவ்வாறு நீ என்னை விட்டுப் பிரிக்க முடியாதவள். தசரதரும் கைகேயியும் விரும்பியத னால் நான் கானகத்துக்குச் செல்லுகிறேன். உன்னையும் என்னுடன் அழைத்துச் செல்லத் தீர்மானித்துவிட்டேன். காட்டில் எனக்கு உற்ற துணையாக இரு'' என்கிறார் ராமர். பின்வரும் சுலோகத்தை நாம் அனைவரும் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்:—

सर्वथा सदृशं सीते मम स्वस्य कुलस्य च ।
व्यवसायमनुक्रान्ता सीते त्वमतिशोभनम् ॥ II. 30. 41.

அவர்களின் வாக்குவாதத்திற்குப் பிறகு ராமர் முழுவதும் மனம் மாறியவராகக் கூறுகிறார்: ''சீதே! என் குலம், உன் குலம் ஆகிய இரண்டும் :உன்னால் பெருமையுற்றன. பிறந்த இடத்துக் கும் புகுந்த இடத்துக்கும் தகுந்தபடி நடந்து என்னையும் அதற்கு ஏற்றவாறு நடக்கும்படிச் செய்துவிட்டாய்'' என்கிறார். பிறகு, ''நீயும் நானும் சேர்ந்தே காட்டுக்குப் போவதென்று தீர்ந்துவிட் டது. என் பொருள்கள் அனைத்தையும் நான் பிராம்மணர்களுக் குக் கொடுத்துவிட்டேன். நீயும் அவ்விதமே செய்'' என்கிறார்.

ततः प्रहृष्टा परिपूर्णमानसा यशस्विनी भर्तुरवेक्ष्य भाषितम् ।
धनानि रत्नानि च दातुमङ्गना प्रचक्रमे धर्मभृतां मनस्विनी ॥
II. 30. 47.

உடனே சீதை தன்னிடமுள்ள யாவற்றையும் தானம்செய்யத் தொடங்குகிறாள். உடைமை ஏதுமில்லாமல் எளிமையான நிலையில் செல்லும்பொழுதுதான் கணவருக்குத் தன்னால் ஒரு கவலையும் ஏற்படாமல் அவருக்கு உற்ற துணையாக அவள் இருக்க முடியும் அல்லவா?

## 26

### சிதையின் வெள்ளைமனம்

ராமருடன் கானகத்துக்குச் செல்லத் தன் உடைமைகளையெல் லாம் பிறருக்கு வழங்கிவிட்டுச் சிதை தயாராளுள் என்று சென்ற உபன்யாசத்தில் கூறினேன் அல்லவா? பன்னிரண்டு பதின்மூன்று வருஷகாலம் அவள் விரும்பினுற்போலவே மிகவும் சந்தோஷமாகக் கழிந்திருக்கின்றன. அரண்ய காண்டத்திலுள்ள அந்தப் பகுதி யைச் சிறிது பார்ப்போம். ஆனல் அதற்கு முன், அவர்கள் வனத் துக்குச் சென்றபொழுது என்ன என்ன விதமாகச் சென்ருர்கள் என்ற விஷயங்கள் மிகவும் சுவையானவை. அவற்றையும் கவனித் துக்கொண்டு மேலே போகலாம். அவர்கள் கங்கை நதிக்கரையை அடைந்ததும் குகன் அவர்களைச் சந்தித்து, நதியின் வடகரையோர மாகத் தன் பெரிய படகைக் கொண்டுவந்து நிறுத்துகிருன். இந்த இடத்திலுள்ள சுலோகங்களின் பொருளில் சிறிது வித்தியாசம் காண்கிறது. ஆயினும், பொருள் மிகவும் தெளிவாகவே இருப்பது போலத் தோன்றுகிறது. வேறு பொருள் கூறுவதற்குக் காரணம் தெரியவில்லை. சிதையின் குணத்தை வெளியிடுகிற ஏதோ ஒரு விஷயம் என்பதனுல் அல்ல; ராமர், சிதை, லக்ஷ்மணன் ஆகிய மூவரும் காட்டில் வசித்தனர்; ஒருவருடன் ஒருவர் பழகினர் என் பதை மேலும் நன்ருகத் தெரிந்துகொள்ள உதவும் என்பதற்கா கவே இவற்றைக் கவனிக்க வேண்டும். படகு தயாராகிவிட்டது. ராமர் லக்ஷ்மணனிடம் சொல்லுகிருர்:—

आरोह त्वं नरव्याघ्र स्थितां नावमिमां शनैः ।
सीतां चारोपयान्वक्षं परिगृह्य मनस्विनीम् ॥ II. 52. 75.

அவருடைய சொற்கள் மிகத் தெளிவாகவே இருக்கின்றன. "நீ முதலில் ஏறிக்கொள். படகு இப்பொழுது ஆடாமலிருக் கிறது. மெதுவாகப் பிடித்துக்கொண்டு ஜாக்கிரதையாய் ஏறிச் செல். நீ படகில் ஏறிச் சரியாக நின்றுகொண்டு, பிறகு சிதையை ஏற்றிக்கொள்'' என்கிருர். இங்கு, 'மநஸ்விநீ' என்று சிதையைப் பற்றிக் கூறும் சொல்லுக்கு நூதனமான பொருளை அமைத்துப் பேசுகிருர் கவி என்று வியாக்கியானகாரர் அபிப்பிராயப்படுகிருர்.

சிறிது பரிகாசம் தொனிக்கும் முறையில் சொற்களை அமைப்பது கவியின் வழக்கம் என்று தோன்றுகிறது. 'மநஸ்வினி' என்று சொல்லும்பொழுது 'தைரியமுள்ளவள்' என்ற சாதாரண அர்த்தத்தை விட்டு, 'பீரு - பயந்தவள்' என்ற பொருளையே கவி குறிப்பிடுகிருர். "நீ ஏறிக்கொண்ட பிறகு சீதையும் ஏறுவதற்கு உதவி செய்" என்கிருர் ராமர்.

स भ्रातुः शासनं श्रुत्वा सर्वमप्रतिकूलयन् ।
आरोप्य मैथिलीं पूर्वमारुरोहात्मवांस्ततः ॥ II. 52. 76.

ஆனுல், லக்ஷ்மணன் செய்தது வேறு. கவி ஒன்றும் அதைப் பற்றிச் சொல்லாமல், ராமர் கூறியதை ஏன் லக்ஷ்மணன் அப்படியே கேட்டு நடக்கவில்லை என்பதைப் படிப்போரே அறிந்து கொள்ள விட்டுவிடுகிருர். சீதையை முதலில் ஓடத்தில் ஏற்றி விட்டுப் பிறகுதான் லக்ஷ்மணன் ஏறிக்கொள்ளுகிருன். ராமர் கூறியதை அவன் மாற்றிச் செய்கிருன். அதுதான் சரி என்று அவன் நினைத்தான் போலும்! இத்தகைய விஷயங்களில் லக்ஷ்மணனே இன்னும் அதிகம் தெரிந்து செய்யக்கூடியவன் என்று வைத்துக்கொள்ளலாம். 'ஸர்வம் அப்ரதிகூலயந்' என்கிருர் கவி. ராமர் கூறியபடியே லக்ஷ்மணன் செய்யவில்லை என்ருலும், 'அதை மாற்ருமல்' என்று கவி கூறுவதானது, ராமரது உத்தரவை வார்த்தையின்படி இல்லாமல் எப்படிச் செயற்படுத்த வேண்டுமோ அப்படிச் செய்தான் என்பதைத் தெரிவிக்கிறது என்று வைத்துக் கொள்ளலாம். ராமர் கூறிய சொற்களின்படி நடக்காமல் அந்தச் சொற்களின் கருத்து எதுவோ அதன்படி நடந்தான் என்கிருர் கவி. இது வால்மீகியின் இயல்பு. சில சமயம் தாம் கூறும் சொற்களின் பொருளைச் சிறிது வேறுவிதமாக மாற்றி அவர் உபயோகிப்பது வழக்கம். சீதையை 'மநஸ்விநீ' என்றும், லக்ஷ்மணனை 'ஆத்மவாந்' என்றும் கூறியதற்கு உட்கருத்து உண்டு என்று வியாக்கியானகாரர் சமத்காரமாக விளக்குகிருர்.

லக்ஷ்மணனும் சீதையும் நெருங்கிப் பழகும்படி நேர்ந்திருந்தாலும் அவர்கள் அதற்காக மிகவும் தாராளமாக இருந்துவிடவில்லை என்று தெரிகிறது. லக்ஷ்மணன் சீதையை ஓடத்தில் ஏற்றிருன் என்ருல் அவளைத் தொட்டுக் கெட்டியாகப் பிடித்துத்தானே ஏற்றியாக வேண்டும்? அதை நாம் விபரீதமாக அர்த்தம் பண்ணிக் கொள்ளக் கூடாது. 'மநஸ்வினி' என்று சீதையையும், 'ஆத்மவான்' என்று லக்ஷ்மணனையும் பற்றிக் கூறுவது, அவர்கள் இருவரும் நல்ல மன உறுதியுள்ளவர்கள் என்று குறிப்பாகக் காட்டுவதற்கேயாகும். லக்ஷ்மணன் சீதையைப் படகில் ஏற்றியபிறகு ராமர் ஏறிக்கொள்கிருர். பிறகுதான் லக்ஷ்மணன் ஏறிக்கொள்கிருன்.

இனி, ராமர் நடந்துகொள்ளும் விதமும் நமக்குச் சிறிது தெரிய வருகிறது.

राघवोऽपि महातेजा नावमारुह्य तां ततः।
ब्रह्मवत्क्षत्रवच्चैव जजाप हितमात्मनः॥ II. 52. 78.

தெய்வங்களைப் பிரார்த்தனை செய்துகொண்டே ராமர் படகில் ஏறிக்கொள்ளுகிறார். பிறகு மூவரும் கங்காஜலத்தை ஆசமனம் செய்கிறார்கள். கங்கையைத் தாண்டியபிறகு அவர்கள் யமுனைக் கரைக்கு வந்து சேருகிறார்கள். கங்கையைக்காட்டிலும் யமுனையின் வேகம் அதிகம் அல்லவா? இங்கே அவர்கள் படகில் ஏறும் கிரமம் மாறுகிறது.

सीतामेवाग्रतः कृत्वा कालिन्दीं जग्मतुर्नदीम्। II. 55. 13.

சீதையை முன்னால் போகச்செய்து, அவர்கள் யமுனையை அடைகிறார்கள். ஏனெனில், ராமர் லக்ஷ்மணனிடம் முதலில்,

अग्रतो गच्छ सौमित्रे सीता त्वामनुगच्छतु।
पृष्ठतोऽहं गमिष्यामि त्वां च सीतां च पालयन्॥ II. 52. 95, 96.

"லக்ஷ்மணா, நீ முன்னால் செல். சீதை உன்பின் செல்லட்டும். உங்கள் இருவரையும் காத்துக்கொண்டு நான் கடைசியில் வருகிறேன்" என்று சொல்லுகிறார். ஆனால், ஆரண்யகாண்டம் வந்ததும், இந்தக் கிரமம் மாறுகிறது. அவசியத்துக்குத் தக்கபடி இந்த முறை அப்போதைக்கு அப்போது மாறிக்கொண்டிருக்கிறது. யமுனையைக் கடக்கும்பொழுது கவி பின்னும் சிறிது விவரமாகக் கூறுகிறார். நதி வேகமாகவும் சில இடங்களில் ஆழமாகவும் இருக்கிறது. ஆபத்து ஒன்றுமில்லாமல் ஜாக்கிரதையாக அக்கரை சேர வேண்டும். அவர்கள் தனியே மூவர். அனைத்தையும் தாங்களே சமாளித்துக்கொள்ள வேண்டும் அல்லவா?

तौ काष्ठसङ्घाटमथो चक्रतुस्तु महाप्लवम्॥ II. 55. 14.

இந்தச் சுலோகத்தை நாம் நன்கு கவனிக்க வேண்டும் என்பதற்காகவே இதை எடுத்துக் கூறுகிறேன். வேலைகளையெல்லாம் லக்ஷ்மணன் செய்ய நேரும்பொழுது, ராமர் கேவலம் மேற்பார்வை பார்த்துக்கொண்டு பேசாமலிருந்ததாகச் சிலர் நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். அவ்வாறின்றி ராமரும் அந்த வேலையில் பங்கு கொள்ளுகிறார் என்று தெரிகிறது. மரக்கட்டைகளைக் கொண்டு படகு தயாரித்து அழுத்தமான கொடிகளைக் கொண்டு அதை நன்றாகப் பிணைத்துக் கட்டுகிறார்கள்.

शुष्कैर्वंशैः समास्तीर्णमुशीरैश्च समावृतम्।
ततो वेतसशाखाश्च जम्बूशाखाश्च वीर्यवान्।
चकार लक्ष्मणश्छित्त्वा सीतायाः सुखमासनम्॥ II. 55. 15, 16.

மரக்கட்டைகளை அடுக்கிய படகாதலால், சீதை உட்காரும் இடத்தை லக்ஷ்மணன் சற்று வசதியாக அமைக்கிறான். வனவாசத்தில் எவ்வளவு கஷ்டங்கள் இருந்தபோதிலும் சீதைக்கு வேண்டிய சௌகரியத்தைச் செய்வதில் அவர்கள் தனிக் கவனம் செலுத்தினார்கள் என்று மேற்கண்ட சுலோகத்தினின்றும் தெரியவருகிறது.

तत्र श्रियमिवाचिन्त्यां रामो दाशरथिः प्रियाम् ॥
ईषत्संलज्जमानां तामध्यारोपयत प्लवम् ॥ II. 55. 16, 17.

மூவரும் படகில் ஏறிக்கொள்ளுகிறார்கள். இந்தத் தடவை லக்ஷ்மணனிடம் சொல்லுவதற்குப் பதிலாக ராமர் சீதையைத் தாமே படகில் ஏற்றிவிடுகிறார். தமிழ்நாடு முழுவதிலும் கணவனும் மனைவியும் ஒருவருடன் ஒருவர் சகஜமாக நடந்துகொள்ளும் பழக்கம் உண்டோ என்னவோ தெரியாது. சாதாரணமாக அவர்கள் ஒருவருக்கு ஒருவர் வேண்டியதைச் செய்துகொள்வதில்லை; மற்றவர்கள் தாம் செய்வது வழக்கம். வால்மீகியின் காலத்திலும் அவ்வாறுதான் இருந்திருக்க வேண்டும். ஏனெனில், சீதையை ராமர் படகில் ஏற்றும்பொழுது 'லஜ்ஜமாநாம்' என்ற பதத்தை உபயோகிக்கிறார் கவி. லக்ஷ்மணனுக்கு எதிரில் ராமர் அவளைத் தொட்டு ஏற்றுவது புதிது அல்லவா? அதுதான் அவளுக்குச் சிறிது நாணத்தை உண்டாக்குகிறது.

पार्श्वे तत्र च वैदेह्या वसने भूषणानि च ।
प्लवे कठिनकाजं च रामश्चक्रे सहायुधैः ।
आरोप्य प्रथमं सीतां सङ्घाटं परिगृह्य च ॥ II. 55. 17, 18.

இப்பொழுது சில வேலைகளை ராமரே செய்யும்படியாகிறது. நானே சிறுவனாக இருந்தபொழுது இந்தச் சுலோகங்களைச் சரியாகப் படிக்காமல், 'யார் சாமான்களையெல்லாம் தூக்கிவைத்திருப்பார்கள்?' என்று எண்ணமிட்டதுண்டு. அயோத்தியை விட்டு ராமர் வரும்பொழுது, பதினான்கு வருஷங்களுக்குக் காணும்படியாக ஆடைகளையும் அணிகளையும் சீதை எடுத்துச் செல்லவேண்டும் என்று தசரதர் கட்டளையிடுகிறார். அதன்படிப் பார்க்கும்பொழுது நிறையவே சாமான்கள் இருக்க வேண்டும் அல்லவா? ராமரும் லக்ஷ்மணனும் ஆளுக்குக் கொஞ்சம் தூக்கி எடுத்துச் சென்றிருக்கலாம். இவற்றைத் தவிர அவர்களுடைய ஆயுதங்கள் வேறு. அவற்றையும் எடுத்துச் செல்ல வேண்டும்.

நதியைத் தாண்டி அவர்கள் அக்கரை சென்றார்கள். அப்புறம் எவ்வாறு அவர்களின் வனவாசம் நடைபெற்றது என்று பார்ப்போம்.

यद्यत् फलं प्रार्थयते पुष्पं वा जनकात्मजा ॥
तत्तत् प्रदद्या वैदेह्या यत्रास्या रमते मनः । II. 55. 28, 29.

''காட்டில் செல்லும்பொழுது சீதை எந்தப் புஷ்பத்தையாவது பழத்தையாவது பார்த்துவிட்டு வேண்டுமென்று கேட்டால், லக்ஷ்மணா, உடனே அதைப் பறித்துக் கொடு'' என்று ராமர் லக்ஷ்மணனுக்கு உத்தரவிடுகிறார்.

एकैकं पादपं गुल्मं लतां वा पुष्पशालिनीम् ॥
अदृष्टपूर्वां पश्यन्ती रामं पप्रच्छ साबला । II. 55. 30, 31.

வனத்திலுள்ளவற்றைப் பற்றியெல்லாம் சீதையும் நன்றாகத் தெரிந்துகொண்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. ஏதேனும் புதிதாக ஒன்றைப் பார்த்து அதைப்பற்றி ராமரிடம் கேட்பாள். செடிகொடிகளைப்பற்றி ராமரும் நன்கு அறிந்திருக்க வேண்டும். அவளுக்கு அவர் விளக்கிக் கூறுவார்.

रमणीयान् बहुविधान् पादपान् कुसुमोत्करान् ॥
सीतावचनसंरब्ध आनयामास लक्ष्मणः । II. 55. 31, 32.

அவள் கேட்டதையெல்லாம் லக்ஷ்மணன் கொண்டுவந்து கொடுப்பான்.

विचित्रवालुकां नीलां हंससारसनादिताम् ॥
रेमे जनकराजस्य सुता प्रेक्ष्य तदा नदीम् । II. 55. 32, 33.

ஒரு பெரிய நதியை அடைந்து அவர்கள் களிப்பெய்துகிறார்கள். அந்த நதியில் ஹம்ஸங்களும் ஸாரஸபக்ஷிகளும் மிதப்பதைக் காண்கின்றனர்.

क्रोशमात्रं ततो गत्वा भ्रातरौ रामलक्ष्मणौ ॥
बहून् मेध्यान् मृगान् हत्वा चेरतुर्यमुनावने ॥ II. 55. 33.

அங்கிருந்து கொஞ்சதூரம் சென்று, யமுனைக் கரையிலுள்ள காட்டில் பல மான்களை வேட்டையாடிக் கொண்டுவந்து உண்கின்றனர். இதிலிருந்து அவர்கள் மாமிசம் உண்ணாதவர்கள் அல்ல என்று தெரிகிறது அல்லவா?

विहृत्य ते बर्हिणपूगनादिते शुभे वने वानरवारणायुते ।
समं नदीवप्रमुपेत्य संमतं निवासमाजग्मुरदीनदर्शनाः ॥ II. 55. 34.

வாழ்க்கைக்கு மிகவும் தேவையானவற்றை இழந்துவிட்டு வந்தவர்களாக அவர்கள் இல்லை. காட்டு வாழ்வையும் அவர்கள் நன்கு அநுபவித்தனர் என்றுதான் மேற்கண்ட சுலோகத்திலிருந்து வெளியாகிறது. சிறிது கரையோரமாகச் சென்று, சுற்றுப்புற அழகைக் கண்டு ரசித்தபிறகு, அவர்கள் தம் இருப்பிடத்துக்கு வருகின்றனர். அடுத்த சுலோகத்தை எல்லாரும் கவனிக்க வேண்டும். காட்டில் வசித்த பதினான்கு வருஷமும் லக்ஷ்மணன்

தூங்காமலே கண்விழித்திருந்தான் என்று அனைவரும் கருதுகிறோம் அல்லவா? அடியில் வரும் சுலோகத்திலிருந்து அப்படி இல்லை என்று தெரிகிறது.

अथ रात्र्यां व्यतीतायामवसुप्तमनन्तरम् ।
प्रबोधयामास शनैर्लक्ष्मणं रघुनन्दनः ॥ II. 56. 1.

அதிக நேரமாகத் தூங்கிய லக்ஷ்மணனை ராமர், "இந்த இடத்தை விட்டுக் கிளம்ப வேண்டும், லக்ஷ்மணா! எழுந்திரு. தயார் செய்துகொள்வோம்" என்கிறார். இங்கு வியாக்கியானகாரர் உரைக்கிறார்:—

चतुर्दशवर्षपर्यन्तं लक्ष्मणः स्वापहीनः अनाहारश्च
इति लोकप्रवादः अपास्तः ॥

"இதனால் பதினான்கு வருஷகாலம் லக்ஷ்மணன் தூங்காமலும் உணவருந்தாமலும் இருந்தான் என்று உலகோர் கூறும் வார்த்தை மறைந்துவிட்டது" என்கிறார்.

சித்திரகூடத்துக்குச் சென்று தாங்கள் இருப்பதற்கென்று வசதியான ஒரு சிறு பர்ணசாலையை அவர்கள் கட்டிக்கொள்ளுகிறார்கள். அதில் வசிப்பதற்கு முன்னால் கிரகசாந்தியாகச் செய்ய வேண்டிய கிரியைகளையும் மந்திரங்களையும் ராமரே செய்கிறார் என்கிறார் கவி.

सुरम्यमासाद्य तु चित्रकूटं नदीं च तां माल्यवतीं सुतीर्थाम् ।
ननन्द रामो मृगपक्षिजुष्टां जहौ च दुःखं पुरविप्रवासात् ॥ II. 56. 38.

அருகில் இருந்த நதியையும், சுற்றிலுமுள்ள இயற்கையின் அழகையும் நன்கு அநுபவித்துக்கொண்டே அவர்கள் அயோத்தியை மறந்து இன்பமாக நாட்களைக் கழிக்கிறார்கள்.

சிறந்த கல்வியறிவுள்ள சீதை, புருஷசிரேஷ்டரான ராமரைக் கணவராகப் பெற்றிருந்தும், பெண்குலத்துக்கு ஏற்ற சில இயல்புள்ளவளாக இருக்கிறாள். குடும்பத்தில் ஏதோ பெரிய ஆபத்தோ கவலையோ ஏற்பட்டால், கணவனுக்கும் மாமனாருக்கும் தெரியாமல் மனைவி தெய்வங்களுக்கு வேண்டிக்கொள்வதும், பின்பு அதை வெகு வருஷங்கள் மறந்துவிட்டுப் பெரிதும் இக்கட்டான சமயம் பார்த்து அதை ஞாபகப்படுத்துவதும் நாம் அறிந்தவையே அல்லவா? சீதையும் அத்தகைய சபலத்துக்கு இலக்கானவளே என்று தெரிகிறது. கங்கையைத் தாண்டும்பொழுது, ஆற்றின் நடுவை அடைந்ததும், சீதை கைகள் இரண்டையும் கூப்பிக்கொண்டு கூறுகிறாள்:—

मध्यं तु समनुप्राप्य भागीरथ्यास्त्वनिन्दिता ।
वैदेही प्राञ्जलिर्भूत्वा तां नदीमिदमब्रवीत् ॥

पुत्रो दशरथस्यायं महाराजस्य धीमतः ।
निदेशं पारयित्वेमं गङ्गे त्वदाभिरक्षितः ॥
सा त्वां देवि नमस्यामि प्रशंसामि च शोभने ।
प्राप्तराज्ये नरव्याघ्रे शिवेन पुनरागते ॥
गवां शतसहस्राणि वस्त्राण्यन्नं च पेशलम् ।
ब्राह्मणेभ्यः प्रदास्यामि तव प्रियचिकीर्षया ॥
सुराघटसहस्रेण मांसभूतौदनेन च ।
यक्ष्ये त्वां प्रयता देवि पुरीं पुनरुपागता ॥
यानि त्वत्तीरवासीनि दैवतानि वसन्ति च ।
तानि सर्वाणि यक्ष्यामि तीर्थान्यायतनानि च ॥
पुनरेव महाबाहुर्मया भ्रात्रा च संगतः ।
अयोध्यां वनवासात्तु प्रविशत्वनघोऽनघे ॥ II. 52. 82, 83, 87-91.

"கங்காதேவி! யாரை நீ சுமந்து செல்லுகிறாய் என்று உனக்குத் தெரியுமே! உலகை ரக்ஷிக்க வந்த உத்தமன் ஜாக்கிரதையாக அக்கரை சேரட்டும். உன்னை வேண்டிக்கொள்ளுகிறேன். விழுந்து வணங்குகிறேன். என் நாயகன் அயோத்திக்குத் திரும்பி வந்தவுடன் உனக்கு வேண்டியதை அளித்து வழிபடுவேன். உன்பேரில் லக்ஷம் பசுக்கள் பிராம்மணர்களுக்குத் தானம் செய்வேன்" என்கிறாள் சீதை. மேலும் ரசமான ஒரு விஷயம் குறிப்பிடுகிறாள்: "அயோத்திக்குப் பத்திரமாகத் திரும்பி வந்தவுடன் ஆயிரம் குடம் கள்ளும் மாமிசமும் உனக்கு நிவேதனம் செய்கிறேன்" என்று வேண்டிக்கொள்ளுகிறாள். நாம் பிராம்மணர்களாக இருந்தும் சில இடங்களுக்குப் போனால் கோழி வெட்டி நிவேதனம் பண்ணுவதற்குப் பணம் கொடுக்க வேண்டியிருக்கிறது அல்லவா? "எல்லாப் புண்ணிய ஸ்தலங்களுக்கும் தீர்த்தங்களுக்கும் சென்று பிரார்த்தனை செலுத்துகிறேன்" என்று சீதை வேண்டிக்கொள்ளுகிறாள். யமுனை நதியைக் கடக்கும்பொழுதும் அவள் முன்போலவே வேண்டிக்கொள்ளுகிறாள்.

स्वस्ति देवि तरामि त्वां पारयेन्मे पतिर्व्रतम् ।
यक्ष्ये त्वां गोसहस्रेण सुराघटशतेन च ॥
स्वस्ति प्रत्यागते रामे पुरीमिक्ष्वाकुपालिताम् ॥ II. 55. 20, 21.

கங்காதேவிக்கு லக்ஷம் பசுக்கள் அளிப்பதாகப் பிரார்த்தனை. யமுனை அவ்வளவு பெரிய நதியல்ல என்பதனால் ஆயிரம் பசுக்களும் நூறு குடம் கள்ளும்தான் அளிப்பதாகச் சீதை வேண்டிக்கொள்ளுகிறாள். பிறகு சியாமா என்ற விருக்ஷத்தை அடைந்ததும் சொல்லுகிறாள்:—

नमस्तेऽस्तु महावृक्ष पारयेन्मे पतिव्रतम् ।
कौसल्यां चैव पश्येयं सुमित्रां च यशस्विनीम् ॥
इति सीताञ्जलिं कृत्वा पर्यगच्छद्वनस्पतिम् ॥ II. 55. 25, 26.

''பதினான்கு வருஷம் காட்டில் வசிக்க வேண்டும் என்ற பிரதிக்கினையை நிறைவேற்றி, தாய்மார் கௌசல்யையையும் சுமித்திரையையும் என் நாதன் மீண்டும் சென்று பார்க்க அருள்புரிய வேண்டும், சியாமா விருக்ஷமே! உனக்குப் பூஜை செய்கிறேன்'' என்று வேண்டிக்கொள்ளுகிறாள் சீதை. பசு, கள்குடம் ஆகிய எதுவும் இங்கே செலுத்துவதாகப் பிரார்த்திக்கவில்லை. சீதை பெண்ணினத்தைச் சேர்ந்தவள் என்பதற்கேற்பத் தெய்வங்களை ஆராதனை செய்கிறாள். ராமரும் லக்ஷ்மணனும் அதில் சேரவில்லை என்று தெரிகிறது. இவர்கள் மூவரும் காட்டில் எவ்வளவு சந்தோஷமாக இருந்தனர் என்பதைப் பின்வரும் இரண்டொரு சுலோகங்கள் நன்கு தெரிவிக்கின்றன:—

तां तथा दर्शयित्वा तु मैथिलीं गिरिनिम्नगाम् ।
निषसाद गिरिप्रस्थे सीतां मांसेन छन्दयन् ॥
इदं मेध्यमिदं स्वादु निष्टप्तमिदमग्निना ।
एवमास्ते स धर्मात्मा सीतया सह राघवः ॥ II. 96. 1, 2.

இந்தச் சுலோகங்களில், அவர்களின் வனவாசம் எவ்விதம் இருந்தது என்பது சிறிது வெளியாகிறது. அவர்கள் மூவரும் சேர்ந்து ஒன்றாக உணவருந்தினர் என்று தோன்றுகிறது. "இது நன்றாக இருக்கிறது. இது நன்கு பக்குவமாகியிருக்கிறது'' என்றெல்லாம் சீதையை உண்ணும்படி ராமர் உபசரித்ததாகத் தெரிகிறது. அயோத்தியிலுள்ள சௌக்கியங்களையும் இன்பங்களையும் மறந்து அவர்கள் ஒருவருக்கொருவர் உதவி புரிந்துகொண்டு அன்யோன்யமாக வசித்தனர் என்று தோன்றுகிறது.

தன்னைப் பொருட்படுத்தாமல் கணவனுக்காகவே உயிர் வாழும் சீதையின் இயல்பை வெளியாக்கும் சம்பவம் ஒன்றைப் பார்ப்போம். காட்டில் விராதனைச் சந்திக்கிறார்கள். அவன் அவர்கள் மூவரையும், முக்கியமாக ராம லக்ஷ்மணர்களைக் கொன்று தின்றுவிடுவான் போலிருக்கிறது. முதலில் சீதையைத் தூக்கியவன் பிறகு அவளை விட்டுவிட்டு, ராம லக்ஷ்மணர்களைப் பிடித்துக் கொள்ளுகிறான். ராம லக்ஷ்மணர்கள் ஒரு சிறு தந்திரம் செய்ய உத்தேசித்து, 'நாம் செல்ல எண்ணிய வழியேதான் இவன் போகிறான். நடக்கும் சிரமமில்லாமல் இவன் நம்மைத் தூக்கிச் செல்லட்டும்' என்று எண்ணுகிறார்கள். சீதை தங்கிவிடுவாளே என்பதை மறந்துவிடுகிறார்கள்.

ह्रियमाणौ तु तौ दृष्ट्वा वैदेही रामलक्ष्मणौ ।
उच्चैःस्वरेण चुक्रोश प्रगृह्य सुभुजा भुजौ ॥
एष दाशरथी रामः सत्यवान् शीलवान् शुचिः ।
रक्षसा रौद्ररूपेण ह्रियते सहलक्ष्मणः ॥
मां वृका भक्षयिष्यन्ति शार्दूला द्वीपिनस्तथा ।
मां हरोत्सृज्य काकुत्स्थौ नमस्ते राक्षसोत्तम ॥ III. 4. 1-3.

ராமரையும் லக்ஷ்மணனையும் அந்த அரக்கன் தூக்கிச் செல்வதைக் கண்டு சீதை, கைகள் இரண்டையும் உயரத் தூக்கித் தான் கத்துவதை அவன் கேட்பான் போல, "விராதனே! நான் வேண்டுகிறேன். என் வேண்டுகோளைத் தயவுசெய்து நிறைவேற்று. அவ்விருவரையும் விட்டு என்னைத் தூக்கிச் சென்று சாப்பிட்டுவிடு. இல்லையெனில் புலியும் கரடியும் என்னைப் பக்ஷித்துவிடும். அவற்றுக்கு இரையாவதைவிட உனக்கு உணவாவது மேல். அவர்களை விட்டுவிடு" என்று தன்னை விராதனுக்கு உணவாக அளித்துக் கொள்ளுகிறாள். சாதாரணமாக நம் பெண்பிள்ளைகள் அருகில் இருக்கும்பொழுது நம் உயிருக்கு ஆபத்து என்றால் உடனே நம்மைக் காத்துக்கொள்ளும் எண்ணம்தான் முதலில் எழுமேயன்றி, மற்றவர்களைப்பற்றிய நினைவு எழுவதில்லை அல்லவா? சீதை இதற்கு நேர்மாறாகத் தான் இருப்பதைவிட, 'ராம லக்ஷ்மணர்கள் ஆயுளுடன் இருக்க வேண்டும்' என்பதைத்தான் பெரிதாக நினைத்தாள் என்று தெரிகிறது. அவள் மேற்கூறியவாறு கத்தியதும், ராமரும் லக்ஷ்மணனும் அவனை விட்டுச் செல்வதை அறிந்து, உடனே விராதனைக் கொல்லுவதில் ஈடுபட்டு அவனை வதம் செய்கிறார்கள்.

பிறகு சரபங்கருடைய ஆசிரமத்தில் ஒரு நாளும், ஸுதீக்ஷ்ணருடைய ஆசிரமத்தில் ஒரு நாளும் வசித்துவிட்டு, அதிகாலையில் எழுந்து மூவரும் செல்கிறார்கள். இங்கு இதற்கு முன் கூறாத ஒரு விஷயத்தைப்பற்றிக் கவி கூறுகிறார். அப்படிச் செய்வதில் ஏதோ விசேஷம் இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. அவர்கள் அதிகாலையில் புறப்பட்டபொழுது கவி அதைப்பற்றிக் குறிப்பிடுகிறார்.

ततः शुभतरे तूणी धनुषी चायतेक्षणा ।
ददौ सीता तयोर्भ्रात्रोः खड्गौ च विमलौ ततः ॥
आबध्य च शुभे तूणी चापौ चादाय सस्वनौ ।
निष्क्रान्तावाश्रमाद्गन्तुमुभौ तौ रामलक्ष्मणौ ॥ III. 8. 18, 19.

பர்ணசாலையிலிருந்து வில்லையும் அம்பறாத்தூணிகளையும் சீதை தான் கொண்டுவந்து ராம லக்ஷ்மணர்களிடம் கொடுப்பதாகக்

கூறப்பட்டிருக்கிறது. நித்தியம் காலையில் அவள் செய்ய வேண்டிய வேலை அது என்று இதற்கு முன் கூறவில்லை. இப்பொழுது மட்டும் அவள் அப்படிச் செய்கிறாள். இதிலுள்ள விசேஷம் என்னவென்று பார்ப்போம். முனிவரிடம் விடை பெற்றுக்கொண்டு அவர்கள் புறப்பட்டதும் சீதை ராமரிடம் பிரச்னையைக் கிளப்புகிறாள். தம்மைத் துன்புறுத்திய அரக்கர்களிடமிருந்து தம்மைக் காக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்ட ரிஷிகளைக் காப்பாற்றுவதற்காக ராமர் செய்த பிரதிக்ஞை நியாயமல்ல என்று சீதை கூறுகிறாள். காட்டில் வாழும் ரிஷியைப் போல அல்லாமல், க்ஷத்திரியனுக்கு ஏற்ற முறையில் ஆயுதங்களேற்றுப் போர்புரிவது மிகவும் தவறு என்று தடுத்துப் பேசுகிறாள். இதை எடுத்துக் கூறுவது அவளுக்கு அவசியமாகப் படுகிறது. தவறு என்று தோன்றியதைக் கணவனிடம் கூறப் பயப்படும் சாதாரண மனைவியைப் போல அல்லாமல், க்ஷத்திரிய ஸ்திரீ ஆனதனால் கணவன் விஷயத்தில் தன் கடமையைப் பெரிதாக நினைத்து, அவர் அம்மாதிரி செய்யலாகாது என்று ஆக்ஷேபிக்கிறாள். "இது தவறு, தர்மத்தை மீறிய செய்கை" என்கிறாள். அதனால்தான் ஆயுதங்களை அவள் எடுத்துவரச் செய்கிறார் கவி. அப்பொழுது அந்த ஆயுதங்களுக்கு அவசியமில்லை என்ற எண்ணம் அவளுக்கு உதிக்கிறது. உடனே அவள் தன் சந்தேகங்களைக் கூறி ராமரைத் தடுக்கிறாள்.

अधर्मस्तु सुसूक्ष्मेण विधिना प्राप्यते महान् ।
निवृत्तेन तु शक्योऽयं व्यसनात् कामजादिह ॥
त्रीण्येव व्यसनान्यत्र कामजानि भवन्त्युत ।
मिथ्यावाक्यं परमकं तस्माद्गुरुतरावुभौ ॥
परदाराभिगमनं विना वैरं च रौद्रता ।
मिथ्यावाक्यं न ते भूतं न भविष्यति राघव ॥
कुतोऽभिलषणं स्त्रीणां परेषां धर्मनाशनम् ।
तव नास्ति मनुष्येन्द्र न चाभूत् ते कदाचन ॥
मनस्यपि तथा राम न चैतद्विद्यते क्वचित् ।
स्वदारनिरतस्त्वं च नित्यमेव नृपात्मज ॥
तृतीयं यदिदं रौद्रं परप्राणाभिहिंसनम् ।
निर्वैरं क्रियते मोहात् तच्च ते समुपस्थितम् ॥
प्रतिज्ञातस्त्वया वीर दण्डकारण्यवासिनाम् ।
ऋषीणां रक्षणार्थाय वधः संयति रक्षसाम् ॥
त्वं हि बाणधनुष्पाणिर्भ्रात्रा सह वनं गतः ।
दृष्ट्वा वनचरान् सर्वान् कच्चित् कुर्याः शरव्ययम् ॥

क्षत्रियाणां च हि धनुर्हुताशस्येन्धनानि च ।
समीपतः स्थितं तेजो बलमुच्छ्रियते भृशम् ॥ III. 9. 2-6,9,10,14,15.

மூன்று விஷயங்களில் மனிதன் தர்மத்தில் சிறிது தவறினாலும் அதைப் பெரிய தவறென்றே சொல்ல வேண்டும். பொய்சொல்லு வது முற்றும் முறையற்ற செயல். மற்ற இரண்டு தவறுகள் இன்னும் மோசமானவை. பிறன் மனைவியைப் பலாத்கரிப்பது, தகுந்த காரணமின்றிப் பிறரை இம்சிப்பது ஆகியவை. நியாய மில்லாமல் சண்டை கூடாது. இங்கு ராமருடைய குணங்களைச் சீதையே எடுத்துப் பேசுகிறாள்: "நீங்கள் ஒருநாளும் பொய் சொல்லமாட்டீர்கள். அது எனக்கு நிச்சயமாகத் தெரியும். முன்பும் நீங்கள் சொன்னதில்லை; இனியும் சொல்லப்போவதில்லை. பிறன் மனைவியிடம் முறைதவறி நடப்பது என்பதும் உங்களிடம் இல்லை. (நம் மனைவிமார் சிலருக்கு நமது ஒழுக்கத்தைப்பற்றி நம்பிக்கை இருந்தாலும் சீதையைப் போலப் பகிரங்கமாக அதை ஒப்புக்கொள்ளத் தயங்குவார்கள் அல்லவா?) இந்த இரண்டு தீய பழக்கங்களும் உங்களை அணுகவே மாட்டா. ஆனால் காரணமின்றிச் சண்டையிட்டு ஒருவரைத் துன்புறுத்தும் மூன்றாவதாகிய பழக்கம் உங்களை இப்பொழுது அணுகியிருக்கிறது. இந்த முனிவர்கள் யாவரும் ராக்ஷஸர்கள் தங்களை இம்சிப்பதாகக் கூறி, உங்களைச் சரணமடைந்திருக்கிறார்கள். நீங்களும் அவர்களைக் காப்பதாக வாக்களித்துவிட்டீர்கள். நீங்கள் எப்படி அவ்வாறு வாக்களிக்க லாம்? உங்கள் வேலையா அது? சிறந்த வில்லாளியான சகோதர னுடன் காட்டுக்கு வந்திருக்கிறீர்கள். அந்த வில்லுக்கும் அம்பு களுக்கும் இங்கே நிறைய வேலை இருக்கும் என்று நினைக்கிறேன். கையில் வில்லும் அம்பும் ஏந்தி நீங்களே எப்பொழுதும் போருக்குத் தயாராக இருப்பீர்கள்" என்கிறாள் சீதை.

இப்படிப் பொதுவாகக் கூறியதோடு நில்லாமல், மேலே ஒரு கதையும் சொல்லுகிறாள். "யுத்தத்தில் தேர்ந்த க்ஷத்திரியன் ஒருவன் நன்கு தீட்டிய ஆயுதங்களைக் கைக்கொண்டாலோ அல்லது அக்கினி பகவானின் அருகில் விறகுகள் இருந்தாலோ உடனே ஆபத்து விளையும் அல்லவா?" என்று கூறிவிட்டு, எக்காலத் துக்கும் உண்மையான சிறந்த கருத்துள்ள ஓர் அழகான கதையைக் கூறுகிறாள். அதை அனைவரும் தெரிந்துகொள்ள வேண்டும். சமீபத் தில் பல முறை நான் இந்தக் கதையைக் கூறியிருக்கிறேன். அது ஒரு ரிஷியின் வீழ்ச்சியைப் பற்றியது. மிகவும் உக்கிரமான தவ மியற்றிய ஒரு ரிஷியின் மேல் தேவர் பொறாமை கொள்ளுகின்றனர். ஒரு வேடனைப் போல வேஷம் தரித்து, இந்திரன் பளபளவென்று பிரகாசிக்கும் ஒரு கத்தியைக் கொண்டுவந்து அந்த ரிஷியிடம்

கொடுத்து, "இதை நான் மீண்டும் வந்து வாங்கிப்போகும் வரையில் தயவுசெய்து ஜாக்கிரதையாக வைத்திரும்" என்று கூறி விட்டுப் போகிருன். அதிலிருந்து அந்த அப்பாவி ரிஷியின் வாழ்க்கையில் ஒரு மாற்றம் ஏற்படுகிறது.

स तच्छस्त्रमनुप्राप्य न्यासरक्षणतत्परः ।
वने तं विचरत्येव रक्षन् प्रत्ययमात्मनः ॥
यत्र गच्छत्युपादातुं मूलानि च फलानि च ।
न विना याति तं खड्गं न्यासरक्षणतत्परः ॥
नित्यं शस्त्रं परिवहन् क्रमेण स तपोधनः ।
चकार रौद्रीं स्वां बुद्धिं त्यक्त्वा तपसि निश्चयम् ॥
ततः स रौद्रेऽभिरतः प्रमत्तोऽधर्मकर्शितः ।
तस्य शस्त्रस्य संवासाज्जगाम नरकं मुनिः ॥ III. 9. 19-22.

வெளியில் போகும்பொழுதெல்லாம் அவர் அந்தக் கத்தியைக் கூடவே எடுத்துச் செல்வார். கனிகள், கிழங்குகள் முதலியவற்றைக் கொண்டுவரச் செல்லும்பொழுதும், தம்மிடம் ஒப்படைக்கப் பட்ட அந்தக் கத்தியை விடாமல் தம்மிடம் வைத்துக்கொள்ள லானுர். பளபளவென்று கூர்மையான அந்தக் கத்தி, சதா அவர் பார்வையைக் கவரவே, அவர் அதைத் தொட்டுத் தொட்டுப் பார்த்து ஆனந்தமடைந்தார். 'ஒரு வீரபுருஷனின் கையில் இருந்தால் இது எத்தகைய நாசவேலையைச் செய்யும்!' என்று எண்ண மிடலானுர். தவத்திலேயே ஈடுபட்டிருந்தவர் அதை விட்டு, அந்தக் கத்தியின் மேன்மையையும் அது செய்யும் காரியங்களையுமே சதா சிந்திக்கத் தொடங்கினுர். தவத்தில் அசிரத்தை ஏற்படவே, அதர்மம் அவரை ஆட்கொண்டது. தவத்தில் உறுதி குறைந்து, கத்தியின்மீது கவனம் சென்று, எப்பொழுதாவது வெட்டுவதற்கும் அதை உபயோகித்ததன்மூலம் எளிய மிருதுவான அவரது உள்ளம் கொடூரமான செயல்களில் கொஞ்சம் கொஞ்சமாகப் பிரவேசிக்கத் தொடங்கியது. பாவம்! அதன் பின் அந்த ரிஷி நரகத்துக்கே போகும்படியாயிற்று. இந்தக் கதையைச் சீதை வெகு அழகாக எடுத்துக் கூறுகிருள். கத்தி வேண்டுமென்று அந்த ரிஷி கேட்டாரா? இல்லை. அந்தக் கத்தி அவரிடம் ஒப்படைக்கப்பட்ட ஒரு பொருள்; அவ்வளவே. கூடவே வைத்திருந்ததனுல் அதனுடைய சகவாசமே குற்றமற்ற நிலையினின்றும் கொடூரமான செயல்களில் அவரை ஈடுபடச்செய்து நரகத்தில் வீழ்த்திவிட்டது.

காவியத்தில் கொஞ்சம் அதிகமாகவே அழுத்திக் கூறினுலும் இந்தக் கதையில் ஓர் உண்மை விளங்குகிறது அல்லவா? குரூர

மான ஒன்றைக் காணும்பொழுது நமது உணர்ச்சியும் கடினமாகி விடுகிறது. கொடூரச் செயல்களைப்பற்றிய பழக்கம் அல்லது குரூரமான எண்ணங்களை மனத்திற் கொள்வதுகூட நம் இயல்பை மாற்றிவிடும். அதனால்தான் பயங்கரமான இந்த இரண்டாம் உலக யுத்தத்தில் வெற்றியடையக்கூடிய நாடுகளின் சார்பாகக் கூறும் உறுதிச் சொற்களை முற்றும் நம்புவதற்கு இயலாமலிருக்கிறது. தோல்வியுற்ற நாடுகள் ஆயுதபரிகரணம் செய்வதனால் விஷமத்திற்கு இடமில்லாமலிருக்கும் என்று நினைக்கிறார்கள். சச்சரவிடும் நாடுகள் அவைதாம் என்று கூறுகிறார்கள். சண்டையிடும் நாடுகளில்தான் ஆயுதபரிகரணம் செய்யவேண்டும். ஆனால் அமைதியை விரும்பும் நாடுகள் என்று தம்மைப்பற்றிக் கூறிக்கொண்டு வெற்றியடைந்துள்ள நாடுகள் எந்த நிமிஷமும் எதிரிகளைத் தொலைக்கக் கூடிய பலத்தைத் தம் வசத்தில் வைத்திருக்க வேண்டும் என்கின்றனர். இது எப்படி இருக்கிறது பாருங்கள்! போருக்கு நிற்பவை, அமைதியை நாடுபவை என்று இரண்டு விதமாக நாடுகளைப் பிரிப்பதே மிகவும் தவறானது. புதிதாகத் தோன்றி விருத்தியடைந்திருக்கும் அநேக தேசங்கள், போருக்குத் தயாராக உள்ள தேசங்கள்தாம். பிரிட்டனும் ருஷ்யாவும் அமைதியை விரும்பியது எவ்வளவு காலத்துக்கு முன்பு? இந்த நாடுகளுக்கு நிறைய ஆயுதபலம் இருக்கிறது. இவற்றினால் அமைதியாக இருக்க முடியாது. அத்தகைய ஆயுத பலத்தைப் பெற்றிருப்பதே சண்டையில் ஈடுபடுவதற்கு உதவியாகும். இதுதான் உண்மையான விஷயம். அமைதியை நாடுபவை, போருக்கு நிற்பவை என்று பிரிப்பதே தவறு. தாங்கள் ஆயுதபலத்தோடு இருந்துகொண்டு, மற்ற நாடுகள் ஆயுதபலமின்றி இருப்பதற்காகத் தாங்கள் சரியாக நடப்பதாக நினைக்கும் இந்த நாடுகள் அவ்வாறு சொல்லிக் கொள்ளுகின்றன. எந்த நாடும் ஆயுதமில்லாமல் இருப்பதுதான் சரி. அவசியமான ஆயுதபலத்தைப் பொதுவான ஓர் ஆட்சியின்கீழ் ஒப்படைக்க வேண்டும். அதைப்பற்றிப் பேசுவது மிகுந்த சர்ச்சைக்கு இடமாகும். சீதை சொன்ன கதை இதற்கு நல்ல பதிலாகும் என்று சொல்ல வேண்டும். நல்ல யுத்த முஸ்தீப்புகளுடன் கூடிய ஒரு தேசம் ஐந்து வருஷமோ, பத்து வருஷமோ, அல்லது ஒரு தலைமுறையோ சண்டையில்லாமல் அமைதியோடு இருக்கலாம். ஆனால் அடுத்த தலைமுறையும் அவ்விதமே அமைதியை விரும்புவதாக இருக்கும் என்று உறுதியாகக் கூற முடியாது. மனித இயல்புக்கே அது மாறானது. அதிலும் நல்ல படைபலத்துடன் கூடிய இயல்பைப்பற்றிக் கேட்பானேன்?

எப்பொழுதும் கையில் ஆயுதங்களோடு இருப்பதைப்பற்றிக் கணவனை எச்சரிக்கை செய்துவிட்டுச் சீதை கூறுவதாவது :—

स्नेहाच्च बहुमानाच्च स्मारये त्वां न शिक्षये ।
न कथञ्चन सा कार्या गृहीतधनुषा त्वया ॥ III. 9. 24.

இது மிகவும் பிரசித்தமான சுலோகம். தம்மைவிட மூத்தவர்களுக்கு எடுத்துக் கூறும்பொழுது எல்லோரும் இந்தச் சுலோகத்தைச் சொல்லுவதுண்டு. ''நான் உங்களுக்கு ஒன்றும் புதிதாகக் கற்பிக்கவில்லை. உங்களுக்கு ஏற்கனவே தெரிந்ததையே நினைவூட்டுகிறேன். துரதிருஷ்டவசமாகச் சில சந்தர்ப்பங்கள் வாழ்க்கையில் தோன்றி, நல்ல எண்ணங்களை மனத்தை விட்டு அகற்றிவிடுவதுண்டு. உங்கள் மனத்தில் எங்கோ ஒரு மூலையில் ஒதுங்கியிருக்கும் அந்த எண்ணங்களை முன்னால் கொண்டு வரும் சிறு வேலையைத்தான் செய்கிறேன். அது நினைவூட்டுவதே தவிர நீங்கள் அறியாததைக் கற்பிப்பது அல்ல'' என்று கூறிவிட்டுச் சீதை வெகு அழகாகப் பேச்சை முடிக்கிருள்.

स्त्रीचापलादेतदुदाहृतं मे धर्मं च वक्तुं तव कः समर्थः ।
विचार्य बुद्ध्या तु सहानुजेन यद्रोचते तत्कुरु मा चिरेण ॥ III. 9. 33.

"ஏதோ எனக்குத் தோன்றியதைக் கூறினேன். நீங்கள் அதை ஏற்றுக்கொண்டாலும் சரி, அல்லது விலக்கிவிட்டாலும் சரி. லக்ஷ்மணனையும் கலந்துகொண்டு எது நல்லது என்று தோன்றுகிறதோ அவ்விதம் செய்யலாம். பெண்ணினத்துக்கு ஏற்ப மிருதுவாக இருப்பதையே நினைத்து உங்களிடம் அதைச் சொல்ல வேண்டுமென்று நினைத்துவிட்டேன்'' என்கிருள்.

ஒரு வியாக்கியானகாரர் இதைத் தவருக எண்ணிக்கொண்டு, முற்றும் மாருன அர்த்தம் கூறுகிருர். ராமாயணத்தில், 'ஸ்மாரயே த்வாம் ந சிக்ஷயே' என்று கூறும் இடங்கள் அநேகம் வருகின்றன. கவிக்கு இத்தகைய சொற்களில் மிக்க பிரியம் என்று தெரிகிறது. உதாரணமாக, யுத்த காண்டத்தில், இந்திரனுடைய ரதத்துடன் வந்த மாதலி சுற்று முற்றும் பார்த்துவிட்டுச் சிறிது தயங்குகிருன். அவன் இந்திரனுடைய சாரதி. அநேக யுத்தங்களுக்குச் சென்றிருப்பவன். எந்தச் சமயத்தில் என்ன செய்ய வேண்டும் என்பதை அறிந்தவன். ஆகவே அவனைத் தாராளமாக உத்தரவிடுவதற்கில்லையாதலால், ராமர் மிகவும் மரியாதையோடு, ''இந்திரசாரதியான உனக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. தெரிந்ததை நினைவூட்டுகிறேனேயன்றிப் புதிதாக ஒன்றும் கற்பிக்கவில்லை'' என்கிருர்.

कामं न त्वं समाधेयः पुरन्दररथोचितः ।
युयुत्सुरहमेकाग्रः स्मारये त्वां न शिक्षये ॥ VI. 103. 12, 13.

விபீஷணன் ராமரிடம் பேசும்பொழுதும் இதே சொற்களைக் கூறுகிறான்:—

प्रणयाद्बहुमानाच्च सौहृदेन च राघव ॥
प्रसादयामि प्रेष्योऽहं न खल्वाज्ञापयामि ते । VI. 124. 15, 16.

"தங்களுக்குத் தெரியாததைக் கூறவோ உத்தரவிடவோ ஒன்றும் நான் செய்யவில்லை. நான் தங்களுடைய ஊழியன். காலத்தில் நினைவூட்டுவதற்காகக் குறிப்பாக உணர்த்தினேன்; அவ்வளவுதான்'' என்கிறான். சீதையும் இந்த ரீதியில் பேசினாளே தவிர வேறல்ல. அறியாமையினால் சிலர் சீதையை இதற்காகக் குற்றம் கூறுவதனால், ராமர் அவளது சொற்களை எவ்விதம் ஏற்றுக் கொண்டார் என்று பார்ப்போம். அவர் ஏற்றுக்கொள்ளும் விதம்தான் முக்கியம் அல்லவா?

किं तु वक्ष्याम्यहं देवि त्वयैवोक्तमिदं वचः ।
क्षत्रियैर्धार्यते चापो नार्तशब्दो भवेदिति ॥ III. 10. 3.

''நீயே சிறிது முன்பு, 'வில்லையும் அம்பையும் கொண்டு தீமையை ஒழிப்பது க்ஷத்திரியனின் கடமை' என்று சொன்னாயே! 'ஐயோ! எனக்கு அடி பட்டுவிட்டதே! யாரோ என்னைக் காயப்படுத்திவிட்டார்களே!' என்று எவரும் கத்த இடமிருக்கலாகாது. அப்படி எங்கேனும் நேர்ந்தால் உடனே ஓடிச்சென்று, துன்புறுகிறவனைக் காக்க வேண்டியது க்ஷத்திரியனது கடமை'' என்கிறார் ராமர். அவர் மேலே கூறும் சுலோகம் மிகப் பிரசித்தமானது:—

अप्यहं जीवितं जह्यां त्वां वा सीते सलक्ष्मणाम् ।
न तु प्रतिज्ञां संश्रुत्य ब्राह्मणेभ्यो विशेषतः ॥ III. 10. 19.

"எனக்குப் பிரதிக்ஞைதான் பெரிது. அதை மிகவும் போற்றிக் காப்பதில் எந்தத் தியாகத்தையும் செய்வேன். லக்ஷ்மணனைத் துறப்பேன். உன்னையும் என்னையுங்கூடத் துறந்துவிடுவேன். பிராம்மணர்களுக்குச் செய்த பிரதிக்ஞையைக் காக்கும் விஷயத்தில் எந்தத் தியாகமும் எனக்குப் பெரிதல்ல'' என்கிறார். மேலே அவர் கூறும் சுலோகங்கள் மிக மிக அழகானவை.

मम स्नेहाच्च सौहार्दादिदमुक्तं त्वयानघे ।
परितुष्टोऽस्म्यहं सीते न ह्यनिष्टोऽनुशिष्यते ॥
सदृशं चानुरूपं च कुलस्य तव चात्मनः ।
सधर्मचारिणी मे त्वं प्राणेभ्योऽपि गरीयसी ॥ III. 10. 21, 22.

"உனக்குத் தோன்றியதை என்னிடம் சொல்ல உனக்கு உரிமை இருக்கிறது. அதனால் நீ பேசினாய். நான் தவறிழைக்காமல் இருக்க வேண்டும் என்ற ஆவலில் நீ மனம்விட்டுப் பேசியதற்காக நான் கோபம் கொள்ளமாட்டேன். அது மட்டுமல்ல; உன் செய்கையைக் கொண்டாடவே செய்கிறேன். நினைத்ததைச் சொல்லாமல் மனத்திற்குள்ளேயே வைத்துக்கொண்டிருப்பதற்குப் பதிலாக நீ வெளியிட்டுப் பேசியது எனக்குத் திருப்தியையே விளைவிக்கிறது. அக்கறை கொள்ளாதவர்களை ஒருபோதும் நாம் கண்டிக்க மாட்டோம். உனக்கு என்னிடமுள்ள கரிசனையினால் என் தவற்றை எடுத்துக் கூறுகிறாய். உனக்கு என்னிடமுள்ள அன்பானது நான் ஒரு பாவமும் ஒரு தவறும் செய்யலாகாது என்று நினைக்கச் செய்கிறது. என்னை உன்னோடு சேர்த்து ஒன்றாகப் பாவிப்பதனால், எனக்கு ஒரு தீங்கும் நேரலாகாது என்று நீ எச்சரிக்கை செய்கிறாய். வாழ்க்கையில் மிகவும் வேண்டியவரல்லாதவர்களை யாரும் கவனித்துத் தவறு செய்வதைக் கண்டிக்க மாட்டார்கள். உன் சொற்களின்படி ஒன்றும் தவறு இல்லாவிட்டாலும் நீ கூறுவதை ஏற்றுக்கொள்ளுகிறேன். நீ கூறியது உன் குலத்துக்கும் என் குலத்துக்கும் உகந்ததே. என் சகதர்மிணியான உனக்கு என்னை நல்வழிப்படுத்துவதற்காகக் கண்டிப்பதற்குப் பூரண அதிகாரம் உண்டு" என்கிறார்.

இங்கு ஒரு சிறு வார்த்தை கூற விரும்புகிறேன். நாம் தவறு செய்யும்பொழுது அதைப்பற்றி நம்மிடம் எடுத்துக் கூறுவதற்கு நம் மனைவிமார்களுக்கு நாம் அதிகாரம் அளிப்பதுண்டா? மனைவிமார்களுக்குக் கீழ்ப்படிந்து நடந்துகொண்டு சில சமயம் அவர்கள் செய்யும் தவறுகளையே நாமும் பின்பற்றி நடந்தாலும் நடக்கலாம்; அதைப்பற்றி இங்குக் கூறவில்லை. ஒருவரையொருவர் மதிப்போடு நடத்தும் சதிபதிகளை எடுத்துக்கொள்வோம். அப்படிப்பட்டவர்கள் எப்பொழுது தவற்றை எடுத்துக்காட்டி எச்சரிக்க வேண்டும் என்பதை அறிவார்கள். வாழ்க்கையில் நம் மனைவிமார் அறியக்கூடாத காரியங்களோ, அவர்களைக் கலந்து யோசித்து அவர்களின் ஆலோசனையின்படி செய்யக்கூடாத காரியங்களோ நமக்கு என்ன இருக்கின்றன? 'அவர்களுக்கு என்ன தெரியும்? யோசனை சொல்ல அவர்களுக்குத் திறமை இல்லாதிருக்கும்பொழுது அவர்களைக் கலந்து யோசிப்பதில் பயன் என்ன?' என்று அநேகர் நினைக்கலாம். பெரும்பான்மையோர் விஷயத்தில் அது தகுந்த சமாதானமாக இருக்கலாம். ஆயினும் அதைச் சரி என்று ஏற்பது கூடாது. சுகத்திலும் துக்கத்திலும் நமக்கு உற்ற துணையாக இருப்பதற்கு நம் மனைவியருக்கு நாமே கற்பிக்க வேண்டும். அது நமது கடமையேயாகும். அவ்வாறு இருப்பதுதான் அவர்களுக்கும் உகந்தது. அவர்களுக்கு

ஒன்றும் தெரியாது என்று இன்னும் அறியாமையிலேயே வைத்திருப்பது சரியல்ல. கணவன் செய்வது தவறு என்று எடுத்துச் சொல்லத் துணிவுள்ள ஸ்திரீகள் இருக்கிறார்கள். அதற்கு லாபம், ஒருவேளை அத்தகைய மனைவிக்கு நல்ல அடி கிடைத்திருக்கலாம். எதுவாக இருந்தாலும் கணவன் அவளை மதித்துக் கேட்க மாட்டான். அதுதான் பெரும்பாலும் நடக்கும். நான் கூறுவது அதுவல்ல. நாம் ஒன்றைச் செய்யலாம் அல்லது செய்யாதிருக்கலாம். அது நம் இஷ்டம். ஆனால் அதற்காக மனைவி கணவனுக்கு உட்பட்டவள்; அடிமைநிலையில்தான் அவள் தன் கடமைகளைச் செய்ய வேண்டும் என்று, தான் நடப்பதையே சரி என்று ஸ்தாபிக்கக் கூடாது. "வண்ணான் கணக்கு வைத்துக் கொள்வதற்கு மேல் அவளுக்கு யோக்கியதை இல்லை" என்று கூறுவது சரியல்ல.

ராமரிடம் சீதைக்கு உள்ள ஸ்வாதீனத்தைப் பார்த்தால், நிச்சயமாக மனைவிக்கு அந்த அடிமைநிலை இல்லை என்று தெரிகிறது. ரிஷிகள் பக்கம் சேருவதில் துன்பம் ஏற்படும் என்ற முக்கியமான விஷயத்தில், "உனக்கு இந்த விஷயமெல்லாம் தெரியாது; நீ பேசாதிரு" என்று ராமர் எப்படிச் சொல்லுவார்? அவர் அவளைத் தன் மனத்திலிருப்பதைக் கூற அநுமதிக்கிறார். அவளது புத்திமதியை அவர் ஏற்காவிட்டாலும் அவள் தம்மை எச்சரித்தது சரி என்பதுடன், "அது அவள் கடமை; அவள் தன் குலத்துக்கும் தமது குலத்துக்குமே அவ்வாறு செய்வது மிகப் பொருத்தமாகும்" என்கிறார்.

சீதை நடந்துகொண்ட முறை தவறு என்று குற்றம் கூறும் சம்பவம் மற்றொன்று: மாரீசன் பொன்மான் வேஷம் பூண்டு அவள்முன் தோன்றி அவளது உள்ளத்தைக் கவருகிறான். அவனைப் பின்பற்றி ராமர் செல்கிறார். ராவணனுக்குச் செய்த உறுதி மொழியைக் காப்பதற்காக மாரீசன், "ஹா சீதே! லக்ஷ்மணா!" என்று ராமர் குரலைப் போல் தன் குரலை மாற்றிக்கொண்டு கத்துகிறான். அதைக் கேட்டுச் சீதை அச்சம் கொள்கிறாள். தன் நாதனுக்கு ஏதோ ஆபத்து நேர்ந்துவிட்டதாக ஒரேயடியாகப் பயந்துவிடுகிறாள். போய்ப் பார்த்து வரும்படி அவள் கூறியதை லக்ஷ்மணன் உடனே கேட்கவில்லை. "ராமர் நிரம்பப் பராக்கிரமமுள்ளவர். அவர் முன்பு நிற்கத் தகுந்தவர் யாருமில்லை. அவருக்கு எந்த ஆபத்தும் வர முடியாது. அஞ்ச வேண்டாம். நான் உங்களைத் தனியே விட்டுப் போக முடியாது" என்கிறான்.

அதைக் கேட்டுச் சீதை அவனை மிகவும் கோபிக்கிறாள். அவன் தன்னை விட்டுச் செல்ல விரும்பாமலிருப்பதைக் கண்டு ராமரைப்

பற்றிய பயத்தில் அவள் தன் வசமிழந்து விடுகிறாள். என்ன பேசுகிறோம் என்பது அவளுக்கே தெரியவில்லை. சீதையின் நிலையில் ஒரு நிமிஷம் நம்மை வைத்துப் பார்க்க வேண்டும். உலகிற் சிறந்த உத்தம புருஷனைக் கணவனாக அடைந்த சீதை, ராஜ்யத்தை விட்டுக் கணவனைப் பின்தொடர்ந்து காட்டுக்குச் சென்றவள். அவளே அவரை ஓர் ஆபத்தான காரியத்திற்கு அனுப்பியிருக்கிறாள். அவர் இப்பொழுது ஆபத்தில் சிக்கியிருப்பதாகத் தோன்றுகிறது. அந்த நிலையில் அவள் யாவற்றையும் மறந்து பேசியது இயல்பே அல்லவா? அவளுக்குத் தன்னைப் பற்றிய நினைவே இல்லையென்றால் லக்ஷ்மணனைப்பற்றி அப்பொழுது அவள் எப்படிக் கவலைப்படுவாள்? அறிவோடு இருந்திருந்தால் லக்ஷ்மணனைக் கண்டபடி பேசாமலிருந்திருக்கலாம். ஆனால் கோபத்தில் யார் அறிவோடு இருக்க முடியும்? மனம் அத்தகைய துன்பத்தில் ஆழ்ந்திருக்கும்பொழுது தெளிவோடு சிந்திக்க இயலுமா? பெரிய கஷ்டம் வந்துவிட்டது என்று மனம் நிலைகுலைந்திருக்கும்பொழுது, வார்த்தைகளைச் சீர்தூக்கி நன்கு ஆராய்ந்து பேசுவது எப்படி? யாராவது அவ்விதம் ஆராய்ந்து பேசுகிறார்களா? சீதை மட்டும் அவ்வாறு பேசுவாள் என்று நாம் எப்படி எதிர்பார்க்க முடியும்? அவள் அத்தகைய கடும் சொற்களைப் பேசியிராவிட்டால் எல்லோரும் அவளை வெகுவாகக் கொண்டாடியிருப்போம் அல்லவா? அவளுக்கு எப்பொழுதும் மனத்திலுள்ளதை வெளியிட்டுப் பேசியே பழக்கம். நாவை அடக்கிப் பேசுவது அபூர்வம்.

अहं तव प्रियं मन्ये रामस्य व्यसनं महत् ।
रामस्य व्यसनं दृष्ट्वा तेनैतानि प्रभाषसे ॥
नैतच्चित्रं सपत्नेषु पापं लक्ष्मण यद्भवेत् ।
त्वद्विधेषु नृशंसेषु नित्यं प्रच्छन्नचारिषु ॥
सुदुष्टस्त्वं वने राममेकमेकोऽनुगच्छसि ।
मम हेतोः प्रतिच्छन्नः प्रयुक्तो भरतेन वा ॥ III. 45. 22-24.

"ராமருக்கு ஆபத்து என்பதில் உனக்குச் சந்தோஷம் என்று நினைக்கிறேன். தாயாதிகளுக்குள் இது ஆச்சரியமில்லை. என்னை அடைய வேண்டுமென்று உனக்கு ஆசையா? ஒருவேளை ராமரைக் கொன்றுவிட்டு என்னைக் கொண்டுவரும்படி பரதன் உன்னை அனுப்பினானா?'' என்று ஏசுகிறாள் சீதை. காட்டில் எத்தகைய சங்கடத்தில் அகப்பட்டுத் தத்தளிக்கும் நிலையில் அவள் இருக்கிறாள் என்பதைக் கவனிக்க வேண்டும். லக்ஷ்மணனைத் தவிர வேறு யாரும் அவளுக்கு இல்லை. அந்த லக்ஷ்மணனே, 'பராக்கிரமம் மிகுந்த ராமருக்கு எந்த ஆபத்தும் வர முடியாது' என்ற

எண்ணத்தில், அந்த இடத்தை விட்டு நகர மறுக்கிறுன். ராமரது சக்தியை அறிந்த லக்ஷ்மணனுக்கு அவரைப் பற்றி நம்பிக்கை இருக்கலாம். ஆனல் யுத்தத்தில் அவரது திறமையைச் சீதை எங்கே பார்த்திருக்கிறுள்? லக்ஷ்மணனைப் போல் அவரது பராக்கிரமத்தை அவள் எப்படி அறிந்திருக்க முடியும்? அவருக்கு ஒரு தீங்கும் வராது என்று அவள் எப்படி அறிவாள்? லக்ஷ்மணன் அங்கிருந்து போக வேண்டும் என்று தோன்றியதும், அவனை விரட்டுவதற்குக் கடுமையாகப் பேசுவதுதான் வழி என்று நினைத்துவிடுகிறுள். அவள் வேண்டுமென்று அப்படிப் பேசவில்லை.

तत्र म्रियति सौमित्रे तत्र वा भरतस्य वा ।
समक्षं तव सौमित्रे प्राणांस्त्यक्ष्ये न संशयः ॥ III. 45. 25, 26.

''போகாமல் இங்கேயே நின்றுகொண்டிருந்தால் நீயும் பரதனும் விரும்பியது ஒரு நாளும் பலிக்காது. அதற்குள் என் உயிரை மாய்த்துக் கொள்வேன். கோதாவரியில் விழுந்தோ அல்லது தீக்குளித்தோ பிராணனை விடுவேன். மற்றொருவனை ஒரு போதும் தீண்டேன்'' என்று கூறி, வயிற்றில் அடித்துக்கொள்ளுகிறுள். பாவம்! லக்ஷ்மணன் என்ன செய்வான்? அவளுக்கு எவ்வளவோ பணிவாகவும் நயமாகவும் சொல்லிப் பார்க்கிறுன். ஆனல் கவலையிலும் பயத்திலும் அவள் காதில் அவை ஏறவே இல்லை. உண்மையாக உயிருக்கு ஏதேனும் செய்துகொண்டு விடுவாளோ என்று லக்ஷ்மணன் அஞ்சுகிறுன். அவள் நெஞ்சுறுதி கொண்டவள். தான் கூறியவற்றில் ஏதேனும் ஒன்றைச் செய்து உயிரை மாய்த்துக்கொண்டால்? லக்ஷ்மணன் அப்படிப்பட்டவன் அல்ல என்று தெரிந்தும், அவனைக் கண்டபடி பேசியிருக்க வேண்டாம் என்று தோன்றுகிறது. ஆயினும் அவளைக் குற்றம் கூறுவதற்குமில்லை. அவனைப்பற்றி உண்மையில் அத்தகைய எண்ணம் இல்லாமலே அவள் கடுமையாகப் பேசியிருக்கிறுள். கோபம் வரும்பொழுது எல்லோருமே தோன்றியபடிதான் பேசுகிறேம். வார்த்தைகளைச் சீர் தூக்கிப் பேசுவதில்லை. உண்மையைப்பற்றியே அலட்சியமாக இருந்து விடுகிறேம். சீதையும் எல்லோரையும் போன்றவள்தானே? அந்தச் சமயத்திலுள்ள அவளது மனநிலையை அறிந்தால், அம்மாதிரி அவள் லக்ஷ்மணனைப் பேசியிருக்க வேண்டாம் என்று மனத்துக்குள் தோன்றினலும், யாவற்றையும் மீறி அவளை மன்னிக்கவே தோன்றும் அல்லவா? இத்துடன் இதை நிறுத்திக்கொள்வோம்.

இதற்கெல்லாம் ராமர் என்ன செய்கிறுர்? அதுதான் முக்கியம் அல்லவா? கேட்கத் தகாத வார்த்தைகளையெல்லாம் கேட்டதன் பேரில் தன் காவற் கடமையை விட்டு லக்ஷ்மணன் வந்திருக்கிறுன் என்ற செய்தி முழுவதையும் கேட்டபிறகு ராமர்

கூறுவது என்ன? சீதை செய்ததைப்பற்றி அவர் சந்தோஷப்பட முடியாது. அவள் நடந்துகொண்டது சரியல்ல என்றே அவர் கருதுகிறார். ஆனால் அவர் கடைசியாகக் கூறியது என்ன என்று பார்ப்போம். சீதை, லக்ஷ்மணன் ஆகிய இருவர் மீதும் அவருக்கு ஒரே விதமான அன்புதான். தன்னைக்காட்டிலும் லக்ஷ்மணன் மேல்தான் ராமருக்கு அதிக அன்பு என்று சீதையே சொல்லு கிறாள். ராமர் தமது பக்ஷபாதத்தை ரகசியமாக வைத்திருந்தார் என்பதில்லை. நியாயமாகவும் கிரமமாகவும் உள்ளதையே அவர் பேசுவார். அவர் விஷயத்தில் அதையாவது ஒப்புக்கொள்ளத் தான் வேண்டும்.

जानन्नपि समर्थं मां रक्षसां विनिवारणे ।
अनेन क्रोधवाक्येन मैथिल्या निःसृतो भवान् ॥ III. 59. 22.

"இந்த அரக்கர்கள் அனைவரும் சேர்ந்து வந்தாலும் அவர்களை எதிர்த்து நிற்க எனக்குச் சக்தி உண்டு என்பது உனக்குத் தெரியும். மாரீசனோ மானோ எனக்கு ஒரு தீங்கும் செய்ய முடியாது. உனக்கு நன்றாய்த் தெரியும். அப்படியிருக்க, சீதை ஏதோ கோபத்தில் கூறிய சொற்களுக்காக அங்கிருந்து ஓடி வந்து விட்டாயே!'' என்று ராமர் லக்ஷ்மணனிடம் கூறுகிறார்.

न हि ते परितुष्यामि त्यक्त्वा यदसि मैथिलीम् ।
क्रुद्धायाः परुषं वाक्यं श्रुत्वा यत्त्वमिहागतः ॥
सर्वथा त्वपनीतं ते सीतया यत् प्रचोदितः ।
क्रोधस्य वशमापन्नो नाकरोः शासनं मम ॥ III. 59. 23, 24.

"நீ செய்தது மன்னிக்கத் தகாதது. உன் கடமையைக் கைவிட்டு, அவளைத் தனியே விட்டு வந்துவிட்டாய். சீதை அங்கே ஆபத்தில் இருக்கிறாள். நீ ஏன் வந்தாய்? அவள் கோபித்துக் கொண்டாள் என்பதற்காகவா? லக்ஷ்மணா! நீ செய்தது எனக்குக் கொஞ்சங்கூடச் சம்மதமில்லை. நீ பெரும் தவறு செய்துவிட்டாய். அவள் ஏதோ கோபத்தில் பிதற்றினாள் என்று நீயும் கோபம் கொண்டு வந்துவிட்டாயே? நான் இட்ட கட்டளையை-என் உத்தரவை-மீறி நடந்துவிட்டாய்'' என்கிறார் ராமர்.

சீதை கோபத்தில் சொன்னாள் என்கிறாரே தவிர, அவள் அம்மாதிரிப் பேசக்கூடாது என்று சொல்லவில்லை. "அவள் புத்தி நிலை தவறியிருக்கிறது. அப்படிப்பட்டவர்கள் மீது நீ கோபம் கொள்ளலாமா?'' என்கிறார். ஒரு வியாக்கியானகாரர் கூறு வதில் சிறிது அர்த்தம் இருக்கிறது. அது என்னவென்று பார்ப்போம். 'ராமர் கூறியது சரிதான். லக்ஷ்மணன் சீதையை

விட்டுப் போயிருக்கக் கூடாது' என்கிறார், அந்த உரையாசிரியர். சீதை தான் சொன்னபடி உயிரை மாய்த்துக்கொண்டுவிட்டால் என்ன செய்வது? லக்ஷ்மணன் அவ்விடத்தை விட்டுப் போவது போல் சிறிது தூரம் சென்று, அவன் ராமரிடம் சென்றுவிட்டதாகச் சீதை நம்பும்படிச் செய்ய வேண்டும். ஏதாயினும் அவளுக்குத் தீங்கு நேருவதாக இருந்தால் அவளைக் காப்பாற்றும் தூரத்திலேயே மறைந்திருக்க வேண்டும் என்பதைக் குறிப்பாக உணர்த்தியபடி. அது நல்ல யோசனைதான். ராமரும் இதையே கருத்தில் கொண்டிருக்க வேண்டும்.

# 27

## துன்பத்துக்கே பிறந்தவள்

இன்றைய பிரசங்கம் உங்கள் மன்னிப்பைக் கோருவதுடன் ஆரம்பமாகிறது. சென்ற பிரசங்கத்தில் அறியாமலே ஒரு தவறு நேர்ந்துவிட்டது. அதை இன்று சரிசெய்ய வேண்டும். ராமரைப் போய்ப் பார்க்கும்படி, லக்ஷ்மணனைச் சீதை கடுஞ்சொற்களைக் கூறி அனுப்பியபொழுது, கரதூஷணர்களோடு போர் புரிந்து ராமர் தம் பராக்கிரமத்தை இன்னும் நிலைநாட்டவில்லை என்று கூறியது முழுவதும் தவறு. இதைப் போன்ற இன்னும் அநேக தவறுகள் இந்தப் பிரசங்கங்களில் நேர்ந்திருக்கலாம். அனைவரும் அந்தத் தவறுகளை எடுத்துக் காட்டாமல் மிகவும் பொறுமையோடு இருந்திருக்கிறீர்கள். இன்றைய பிரசங்கம் கொஞ்சம் நீண்டதாகவே இருக்கும் என்று, தொடங்குமுன் சொல்ல விரும்புகிறேன். கஷ்டமாக இருந்தாலும் சீதையைப் பற்றிய ஆராய்ச்சியை இன்று முடித்துவிட வேண்டுமென்று தோன்றுகிறது. எடுத்துச் சொல்வதற்கு எவ்வளவோ விஷயங்கள் இருக்கின்றன. சிலவற்றை விட வேண்டியிருக்கிறது; வேறு சிலவற்றை மேலெழுந்தவாரியாக ஓட்டிவிட்டுச் செல்ல வேண்டியிருக்கிறது. இவ்வளவு செய்தும் இன்னும் நிறையச் சொல்லி உங்கள் பொறுமையைச் சோதிக்கும்படி இருக்கிறது. எல்லோரும் பெரிய மனத்துடன் நான் சொல்வதற்கு இடமளிப்பீர்களா? இன்னும் ஒரு வார்த்தை: அனுமாரைப் பற்றியும் ராமரைப் பற்றியும் பேசும்பொழுது சீதைக்கு நேர்ந்துள்ள அநேக முக்கிய சம்பவங்களைக் குறிப்பிட்டிருக்கிறேன் அல்லவா? அவைபற்றி இன்று சொல்லாமல் விட்டு விடுகிறேன்.

ஆசிரமத்துள் பிரவேசிக்கும் ராவணனைக் கண்டதும் சீதை அவனுக்கு அதிதி ஸத்காரம் செய்கிறாள். மிக்க பணிவுடன் வழிபட வேண்டிய சந்நியாசியைத் தான் தனியே வரவேற்று உபசரிக்க வேண்டியிருக்கிறதே என்று அவள் சிறிது கவலைப்படுகிறாள். ராம லக்ஷ்மணர்களுடைய வருகையை விரும்பி, ஒவ்வொரு க்ஷணமும் அவர்களை எதிர்பார்த்துக்கொண்டு இருக்கிறாள். பாவம்! அவள் எவ்வளவு தூரம் நோக்கினாலும் அந்தப்

பரந்த காடுதான் தென்பட்டதே தவிர, அவள் எதிர்பார்த்த வர்கள் கண்ணுக்கு எட்டிய தூரம் வரையிலும் காணவில்லை என்கிருர் கவி. காஷாயம் தரித்த ஓர் அதிதியைத் தக்கபடி வரவேற்று உபசரிப்பது கிருகஸ்தர்களுடைய கடமையாயிற்றே என்ற கவலை மட்டும் அல்ல; ஆபத்தை விளைவிக்கக் கூடிய காரியத்தை மேற்கொண்டு அவர்கள் போயிருக்கிருர்களே என்ற பயமும் அவளைப் பீடித்திருக்கிறது. தானே அதற்குப் பொறுப்பாளி என்ற எண்ணமும் சேர்ந்து, அவர்கள் ஒரு தீங்கு மில்லாமல் திரும்பி வந்து சேர வேண்டுமே என்று உள்ளுக்குள் கவலையும் ஆவலும் குடிகொண்டவளாக அவள் நிற்கிருள்.

ततः सुवेषं मृगयागतं पतिं प्रतीक्षमाणा सह लक्ष्मणं तदा ।
विचीक्षमाणा हरितं ददर्श तन्महद्वनं नैव तु रामलक्ष्मणौ ॥ III. 46. 3?.

கண்ணுக்கு எட்டிய தூரம் வரையிலும் அடர்ந்த காடுதான் புலப்பட்டதே தவிர, ராம லக்ஷ்மணர்களைக் காணவில்லை. அவள் மனம் கவலைகொள்ளுகிறது. குசலம் விசாரித்தபிறகு ராவணன் அவளை யாரென்று கேட்கிருன். தன் வரலாற்றைக் கூறும் பொழுது அவள் கூறிய விஷயம் கவனிக்கத் தகுந்தது. ராமர் நாடு கடத்தப்பட்டது; அவர் அயோத்தியை விட்டுப் புறப்பட்ட பொழுது தானும் லக்ஷ்மணனும் அவரைப் பின்பற்றிச் சென்றது ஆகிய விவரங்களை அவனுக்குக் கூறுகிருள். அப்பொழுதுதான் அவள் தன்னைக் கண்டபடி தூற்றிப் பேசியதைக் கேட்டு லக்ஷ்மணன் அவ்விடம் விட்டு அகன்றிருக்கிறன். பின்பு நினைத்து வருந்தக்கூடிய விதத்தில் அவளும் அவனைத் தூற்றியிருக்கிருள். அப்படியிருக்க, இப்பொழுது அவள் அவனைப்பற்றிக் கூறுவது பின்வருமாறு:—

रामस्य पुरुषव्याघ्रः सहायः समरेऽरिहा ।
स भ्राता लक्ष्मणो नाम धर्मचारी दृढव्रतः ॥
अन्वगच्छद्धनुष्पाणिः प्रव्रजन्तं मया सह । III. 47. 19, 20.

''என் நாதன் ராஜ்யத்தைத் துறந்து மரவுரி அணிந்தவராகக் கானகம் வந்தபொழுது நானும் லக்ஷ்மணனும் அவருடன் வந்தோம்'' என்கிருள். கடுமையாகப் பேசிய மறுநிமிஷமே லக்ஷ்மணனைப்பற்றி அவள் சொல்லுவது கவனிக்கத் தக்கது. 'தர்மசாரி' என்றும், 'த்ருடவ்ரதன்' என்றும் அவள் குறிப்பிடு கிருள். தன் சகோதரன் மனைவியைப்பற்றியே கெட்ட எண்ணம் கொண்டிருக்கும் ஒருவனைக் குறிக்கும் வார்த்தைகளா இவை? அவனைத் தவருகப் பேசிவிட்டதை இப்பொழுதுதான் அவள் உணருகிருள். அந்த வார்த்தைகளின் அர்த்தத்தைப்பற்றியே அவள் நினைக்கவில்லை. அவனை அங்கிருந்து அகற்றுவதற்கு

அத்தகைய சொற்களால்தான் முடியும் என்ற எண்ணமே மேலோங்கி அவளை அவ்வாறு பேசச் செய்திருக்கிறது. வேறு விதமாக அவள் பேச்சுக்கு அர்த்தம் கற்பிக்க முடியாது.

பிறகு, "வெளியில் சென்றிருக்கும் என் நாதன் வந்து தங்களைச் சிறந்த முறையில் வரவேற்று உபசரிப்பார்" என்று ராவணனிடம் கூறுகிறாள்.

आगमिष्यति मे भर्ता वन्यमादाय पुष्कलम् ।
रुरून् गोधान् वराहांश्च हत्वादायामिषान् बहून् ॥ III. 47. 23.

"காட்டில் கிடைக்கக்கூடிய சிறந்த உணவு வகைகளை என் நாதன் கொண்டு வருவார். தாங்கள் அருந்தலாம்" என்கிறாள். அவர்கள் மாமிசம் அருந்த மாட்டார்களென்று நாம் நினைக்க இடமே இல்லை. நிறைய உணவு வகைகளை ராமர் கொண்டு வருவார் என்று அவள் கூறினாலும், ஏதோ தீங்கு சம்பவிக்கப் போகிறது என்பதற்கான அறிகுறிகளைக் கண்டு அஞ்சி, ராமர் சீக்கிரமே திரும்பி வந்துகொண்டிருக்கிறார். ஆகவே நல்ல மிருகங்களை வேட்டையாடி அவற்றின் மாமிசத்தைக் கொண்டுவர அவருக்கு நேரமில்லை. ஏதோ ஒரு மிருகத்தின் மாமிசத்தை எடுத்துக்கொண்டு விரைந்து வருகிறார் என்கிறார் கவி.

निहत्य पृषतं चान्यं मांसमादाय राघवः ।
त्वरमाणो जनस्थानं ससाराभिमुखस्तदा ॥ III. 44. 28.

ராவணன் தான் யார் என்பதைக் கூறித் தன் தீய எண்ணத்தை வெளியிடும் பகுதிக்கு வருவோம். அவன் கூறியதைக் கேட்டதும் சீதை அடங்காத கோபத்துடன் பேசுகிறாள். அவளுடைய வசைமொழிகளே மிகவும் அலங்கார மொழிகளாக இருக்கின்றன. மீண்டும் மீண்டும் சில வார்த்தைகளையே உபயோகிக்கும் சிறு தந்திரத்தை இங்குக் கைக்கொள்கிறார் கவி. கருத்துச் செறிவும் இலக்கியச் சிறப்பும் நிறைந்த சொற்கள் அல்ல அவை. ராவணனைத் தூற்றுவதற்கென்றே அமைந்தவை போலும் தோன்றுகின்றன. ஏனெனில் அந்த இடத்தைப் படிக்கும்பொழுது சீதை இவ்வாறு அலங்காரமாக உவமை உருவகங்களோடு பேசியிருப்பாள் என்று ஒருவரும் நினைக்க முடியாது. ஒரு ஸ்திரீ கோபாவேசத்தில் தன்னைக் காத்துக்கொள்ள இப்படித்தான் பேசியிருப்பாள் என்று கவி செய்த கற்பனை இது. மூல சுலோகங்களைப் படிக்காமல் அவற்றின் மொழிபெயர்ப்பைப் பார்ப்போம்.

ராவணனுடைய கெட்ட எண்ணத்தோடு கூடிய சொற்களைக் கேட்கப் பொறுக்காமல் உடனே யோசனையின்றிச் சீதை பதில்

கூறுகிறாள். அவள் சொற்களில் கோபமும் அலட்சியமும் நிரம்பி யிருக்கின்றன. ''என் நாதன் எப்படிப்பட்டவர் என்று உமக்குத் தெரியுமா? சுமேரு மலையைப் போல அசைக்க முடியாதவர். இந்திரனைப் போல எதிர்க்க முடியாதவர். கடலைப் போலக் கலங் காதவர். என் உயிரும் உடலும் அவரைச் சேர்ந்தவை. என் நாதனிடத்தில் உலகிலுள்ள எல்லா மேன்மைகளும் குடிகொண் டிருக்கின்றன. ஆலமரம் போல் தழைத்து அனைத்தையும் ரக்ஷிப்பவர். வாக்குறுதி பூண்டவர். என்றும் மங்காத தேஜஸ் அவருடையது. என் உயிரும் உடலும் முழுக்க முழுக்க அவரையே சேர்ந்தவையாகும். பலம் மிகுந்த கைகளும் மார்புமுடைய அவருடைய நடை சிம்மத்தினுடைய நடை போன்றது. புருஷ சிம்மம் போன்றவர் அவர். என் உயிரும் உடலும் அவரையன்றி வேறு யாருக்கும் சொந்தமல்ல. பூர்ணசந்திரனுக்கு நிகரான அழகும் காந்தியும் கொண்டது அவர் முகம். உயர்ந்த ராஜகுலத்தில் பிறந்த அவர் புலன்களை முற்றும் அடக்கியாளும் திறமுள்ளவர். திரமான நெஞ்சம் படைத்தவர். அப்படிப்பட்ட வருக்கே சொந்தமானவை என் உயிர் உடல் ஆகிய இரண்டும்.

''நீர் செய்வது இன்னதென்று உமக்குத் தெரியுமா? ராமருடைய பத்தினியான என்னை நீர் விரும்புவது, நரி ஒரு பெண் சிங்கத்தை விரும்புவது போலாம். வானத்தில் எங்கோ இருக்கும் சூரியனின் கிரணங்களை நீர் ஸ்பரிசிக்க முடியுமா? அதுபோலத் தான் என்னை நீர் நெருங்க எண்ணுவதும். அந்திய காலம் கிட்டிய வர்களுக்கு மரங்கள் மஞ்சளாகத் தோன்றும் என்பர். உம்முடைய கண்ணுக்கு அவ்விதம்தான் தோன்றுகிறது என்று நினைக்கிறேன். ராமபத்தினியை இச்சிக்கத் துணிந்தால் உமது காலம் கிட்டிவிடும். பசியோடு இருக்கும் சிங்கத்தின் பல்லைப் பிடுங்க எண்ணுகிறீர். சீறிக்கொண்டிருக்கும் சர்ப்பத்தின் பல்லைப் பிடுங்க ஆவலுற்றிருக்கிறீர். பலமற்ற கைகளைக் கொண்டு மந்தர மலையைத் தூக்க எண்ணுகிறீர். ஆலாகல விஷத்தைப் பருகியபின் உயிரோடிருக்க எவ்வாறு விரும்ப முடியும்? கூரிய ஊசியைக் கொண்டு கண்களைத் துளைத்துச் சுத்தம் செய்ய முயலுகிறீர். கூரிய கத்தியை நாக்கினால் நக்கிப் பார்க்க முடியுமா? கழுத்தில் கல்லைக் கட்டிக்கொண்டு கடலை நீந்திச் செல்வது எப்படி? ஒரு கையால் சூரியனையும் மற்றொரு கையால் சந்திரனையும் பிடிக்க எண்ணுகிறீர். அது சாத்தியமா? வஸ்திரத்தின் தலைப்பில் தீயை எடுத்துச் செல்வதும், கூரிய வாள்முனைகளின் மீது நடப்பதும் எவ்வாறு முடியும்?

'' நரிக்கும் சிங்கத்துக்குமுள்ள பேதம் உமக்கும் ராமருக்கும் இருக்கிறது. அகன்ற கடலுக்கும் சிறு ஓடைக்குமுள்ள பேதம்

உங்கள் இருவரிடையே காண்கிறது. அமிருதத்துக்கும் பழங் கஞ்சிக்கும் உள்ள வேற்றுமை எவ்வளவோ அவ்வளவு வேற்றுமை உங்கள் இருவருக்கும் இருக்கிறது. தங்கத்துக்கும் ஈயத்துக்கும் எவ்வளவு வேற்றுமை உண்டோ அவ்வளவு வேற்றுமை உமக்கும் ராமருக்குமிடையே இருக்கிறது. சேறும் சந்தனமும் ஒன்ருகுமா? அதுபோலத்தான் நீரும் ராமரும். யானைக்கும் பூனைக்குமுள்ள வித்தியாசம் உங்கள் இருவரிடையே காண்கிறது. கருடனும் காக்கையும், மயிலும் வான்கோழியும் போல இருக்கிறது உங்களுடைய ஒற்றுமை! ஹம்ஸத்தும் பருந்துக்கும் எவ்வளவு தூரமோ அவ்வளவு தூரம் உங்கள் இருவரிடையே இருக்கிறது. என்னை இப்பொழுது எடுத்துச் சென்ருலும் இந்திரனைப் போன்ற பராக்கிரமமுள்ள என் நாதன் கோதண்டத்தை ஏந்தி உயிருடன் இருக்கும் வரையில், என்னை நீர் உமது விருப்பத்திற்கு இணங்கச் செய்ய முடியாது. அற்பனே! நெய்யைக் குடித்து ஜீரணிக்க இயலுமா?'' என்று சீதை ராவணனிடம் கூறுகிருள்.

ஆகாய மார்க்கமாகச் செல்லும்பொழுது, ரிசியமூக பர்வதத்தின் உச்சியில் ஐந்து வானரர்கள் இருப்பதைக் கண்டு, ராமர் ஒருகால் அந்த வழியே போக நேர்ந்தால் தனக்கு உற்ற இன்னலை அவர்கள் அவரிடம் தெரிவிக்கக் கூடும் என்ற சமயோசிதமான எண்ணம் சீதைக்கு உண்டானதை நாம் அறிவோம் அல்லவா? தான் அணிந்திருந்த நகைகள் சிலவற்றைக் கழற்றித் தன் பட்டு மேல் உத்தரீயத்தில் முடிந்து, அவர்களின் மத்தியில் அவள் போடுகிருள். பெரும் துன்பத்தின் மத்தியிலும், எந்தச் சமயத்தில் என்ன செய்ய வேண்டும் என்பதை அறிந்தவள், மன உறுதி படைத்தவள் சீதை என்று காட்டுவதற்காகவே இந்த விவரங்களைக் கூறுகிறேன். அவளை அசோகவனத்தில் கொண்டு போய் வைத்து ராவணன் அரக்கியருக்குப் பின்வருமாறு கட்டளை யிடுகிருன்:—

तर्जनैर्घोरैः पुनः सान्त्वैश्च मैथिलीम् ।
आनयध्वं वशं सर्वा वन्यां गजवधूमिव ॥ III. 56. 31.

''பயங்கரமான மிரட்டல்களினுலும், நல்ல வார்த்தை களினுலும் காட்டுப் பெண்யானையைப் போல் இவளை வழிக்குக் கொண்டு வாருங்கள்'' என்கிருன். அசோகவனத்தில் அவளைச் சிறையிட்டதும் இது நிகழ்கிறது. அதிலிருந்து, அனுமார் வந்து அவளைக் காண்பதற்குள் ஏறக்குறையப் பத்து மாதங்கள் சென்றி ருக்கின்றன என்பதையும், ராவணன் விடாமல் அவளது இருப்பிடத்திற்கு வந்து அவளைப் பலவிதமாக இம்சித்திருக்கிருன் என்பதையும் நாம் ஊகித்துக் கொள்ளலாம். மிகச் சில காட்சி களைத்தான் கவி வர்ணித்திருக்கிருர். ஆனுல் அதிலிருந்து, சீதை

எப்படியெல்லாம் துன்பங்களை அநுபவித்தாள் என்பதை நாம் ஒருவாறு அறிந்துகொள்ளலாம். அவள் கண்ணீரும் கம்பலையு மாகவே எப்போதும் இருந்த காட்சிகளை, நம்மால் கற்பனை செய்ய இயலாதவாறு, கவி வர்ணிக்கிறார். ''எப்படியோ அவளை வழிக்குக் கொண்டுவந்து என் இச்சை நிறைவேறும்படிச் செய்யுங்கள்'' என்று கட்டளையிடுகிறான் ராவணன்.

सा तु शोकपरीताङ्गी मैथिली जनकात्मजा ।
राक्षसीवशमापन्ना व्याघ्रीणां हरिणी यथा ॥
शोकेन महता ग्रस्ता मैथिली जनकात्मजा ।
न शर्म लभते भीरुः पाशबद्धा मृगी यथा ॥ III. 56. 34, 35.

ஒரு ஸர்க்கம் முழுவதும் மேற்கண்ட இரண்டு சுலோகங்களின் ரீதியிலேயே அமைந்திருக்கிறது. கவியின் கற்பனையில் உவமைகள் கொழிக்கின்றன. உவமையும் அலங்காரமும் இல்லாமல் அவர் எந்தக் காட்சியையும் வர்ணிப்பதில்லை. அவர் வாயினின்றும் அவை கணக்கில்லாமல் உதிருகின்றன. ஒரு சமயம் ராவணன் மிதமிஞ்சிப் போய்ச் சகிக்க முடியாத துன்பத்துக்கு அவளை ஆளாக்கியபொழுது, ஒரு நீண்ட ஸர்க்கம் முழுவதும் அவள் தனக்குள்ளேயே பிரலாபிக்கிறாள். நான் மேலே கூறிய அலங்காரமான சுலோகங்களுக்கு அவை நேர்மாறாக இருக்கின்றன. அவற்றில் கருணரசம் பல வகையில் ததும்பி நிற்கிறது. ஏமாற்றம், சோகம், விரக்தி, கடைசியில் உயிரை மாய்த்துக் கொள்ளும் உறுதி ஆகிய எல்லா உணர்ச்சிகளும் அவற்றில் பிரதி பலிக்கின்றன. ராவணன் கூறியதைக் கேட்டதுமே சீதை மிகவும் துயரத்தில் ஆழ்ந்தவளாகச் சிங்கத்தைக் கண்டு நடுங்கும் பெண் யானை போல் பயந்து நடுங்குகிறாள். ''கோரரூபிகளான அரக்கியரால் சூழப்பட்டவளாக, வனாந்தரத்தில் தன்னந்தனியே விடப் பட்ட அபலைப் பெண் போலக் கண்ணீர் விட்டுக் கதறுகிறாள்'' என்கிறார் கவி.

''ஆயுள் முடிந்த பிறகுதான் சாவு வரும் என்று பெரியோர் கூறுவது எவ்வளவு உண்மை! இவ்வளவு ஆபத்துக்களில் அகப் பட்டுத் துன்புற்றிருக்கும்பொழுதும் உயிரை விடாமல் வைத்துக் கொண்டிருக்கிறேனே! இந்தக் கஷ்டங்களிலிருந்து மீளும் நம்பிக்கையற்றுத் துன்பத்தில் உழன்று கொண்டிருந்தும், இந்திரனின் வஜ்ராயுதத்தினால் அடிபட்டுச் சிதறும் மலைச்சிகரம் போல் என் இருதயம் துண்டு துண்டாக வெடிக்கவில்லையே! அது எவ்வளவு கடினமாக இருக்க வேண்டும்! பிராம்மணன் அல்லாத வனுக்கு வேதத்தைச் சொல்ல, பிராம்மணனாக இருப்பவனுக்கு மனம் வருமா? அது போல இந்த அரக்கனை மகிழ்வுடன் ஏற்க

மனமில்லை என்பதற்காக அவன் என்னைக் கொல்ல யத்தனிக்கு முன் நானே என் உயிரை மாய்த்துக்கொள்வது பாவமாகுமா? லோகரக்ஷகரான என் நாதன் உரிய காலத்தில் வந்து என்னை மீட்க வில்லையென்றால், கர்ப்பத்திலிருக்கும் சிசுவை அறுவை வைத்தியன் செய்வது போல, ராவணன் என்னைக் கண்டதுண்டமாக்கி விடுவான். எனக்கு இன்னும் இரண்டு மாதத் தவணை கொடுக்கப் பட்டிருக்கிறது. தூக்கிலிடப்போகும் கைதிக்கு வெகு சீக்கிரம் பொழுது விடிவது போல் அந்த இரண்டு மாதமும் வெகு சீக்கிரம் ஓடிவிடும்.

"ஹா ராமா! லக்ஷ்மணா! அன்னை கௌசல்யே! சுமித்திரே! இன்னும் மற்றத் தாய்மார்களே! நடுக்கடலில் புயலில் அகப் பட்டுத் தத்தளிக்கும் மரக்கலம் போல் நான் கஷ்டப்படுவதை நீங்கள் காணவில்லையா? ஏதோ கெட்ட தேவதை ஒன்று மிருக வடிவம் பூண்டு அந்தத் தீர சகோதரர் இருவரையும் கொன்றிருக்க வேண்டும். இல்லாவிட்டால் அவர்கள் என்னை இதற்குள் காப்பாற்றியிருக்க மாட்டார்களா? இரண்டு சிங்கங்கள் இடியினால் தாக்குண்டது போல அவ்விருவரும் மடிந்துவிட்டனரோ? காலன் என்ற பகைவன் மானுருவில் வந்து என்மேல் தன் வலையை வீச, அதில் அகப்பட்டு அறிவு கெட்டு என் நாதனை முதலில் என் பக்கலை விட்டு அகற்றினேன். பிறகு அவர் தம்பியையும் விரட்டி விட்டேன். ஹா ராமா! ஸத்தியஸந்தா! பூர்ணசந்திரன் போன்ற முகமும் நிகரற்ற புஜபராக்கிரமமும் பொருந்திய தாங்கள் துன்புற்றவர்களைக் காக்கும் உத்தமர். இந்த ஈவு இரக்கமற்ற துஷ்டர்களிடம் நான் சிக்கியிருப்பதை அறியவில்லையோ? நன்றி கெட்டவர்களுக்குச் செய்யும் உபகாரங்கள் போல என்னைக் கைப்பிடித்த நாதனிடமுள்ள என் பக்தி, என் பொறுமை, என் கற்பு ஆகிய எல்லாச் சிறப்புக்களும் பயனற்றுப் போயினவே! தங்களை மீண்டும் காணக் கிடைக்காமல் நம்பிக்கையிழந்து உருமாறித் தேய்ந்துதான் போக வேண்டும் என்றால், தர்மத்தை விடாமல் கடைப்பிடித்துக் கணவனே தெய்வம் என்று நான் பக்தியுடன் போற்றியதற்கெல்லாம் பயன் என்ன?

"அந்தோ! நான் இந்த அவலநிலையில் சிக்கி உயிரை இழக்கப் போகிறேன். தந்தையின் பிரதிக்ஞையைக் காப்பதற்காகப் பதினான்கு வருஷம் வனவாசம் செய்துவிட்டு, மனநிம்மதியோடு நாட்டுக்குத் திரும்பி, நீங்கள் வேறு மனைவியரை அடைந்து சர்வா பரண பூஷிதைகளான அவர்களுடன் ஆனந்தமாக வாழ்வீர்கள். இளவயதிலேயே தங்களைத் தஞ்சம் என்றடைந்து, தங்களை நம்பியே இவ்வளவு வருஷகாலம் மட்டற்ற மகிழ்ச்சியோடு இருந்த நான், தங்களுக்காக எவ்வளவு கஷ்டங்களையும் துன்பங்களையும்

அநுபவித்து வருகிறேன்! ஐயோ! எல்லாம் வீண்போயிற்றே! நான் தன்னந்தனியே கத்திக்கொண்டு மாண்டுதான் போக வேண்டும். இனியும் இந்தத் துன்பத்தை ஏன் நீடிக்க வேண்டும்? விஷத்தைச் சாப்பிட்டோ, கத்தியால் குத்திக்கொண்டோ உயிரை மாய்த்துக் கொள்ளலாம். மிகவும் ஜாக்கிரதையாகக் காவல் புரிந்துகொண்டிருக்கும் இந்த அரக்கியரிடையே விஷமோ கத்தியோ எனக்குக் கொண்டு வந்து கொடுப்பவர் யார்?'' என்று சீதை புலம்புகிருள்.

வாடி வதங்கிய முகமும் நடுங்கும் மெலிந்த தேகமுமுடைய சீதை இவ்வாறு வருந்தும்பொழுது அவள் மனம் மட்டும் ராமரையே தியானித்த வண்ணம் இருக்கிறது. கிளைகளடர்ந்து பூத்திருக்கும் சிம்சபா விருக்ஷத்தை அடைகிருள். மீளாத துக்கத்தில் ஆழ்ந்தவளாக வெகு நேரம் யோசித்து ஒரு முடிவுக்கு வந்து தன் நீண்ட கூந்தலினுல் கழுத்தைச் சுற்றிக்கொண்டு, ''இனிச் சீக்கிரமே யமனுலகு போய்ச் சேருவேன்'' என்று கூறிக் கொள்ளுகிருள். பிறகு ஒரு மரக்கிளையைப் பிடித்துக்கொண்டு தொங்கலாம் என்று நினைத்ததும், ராம லக்ஷ்மணர்களைப்பற்றிய எண்ணம் எழுகிறது. அதே சமயத்தில், அதிசயிக்கத்தக்க விதம் சில சகுனங்கள் தோன்றி, அவள் துன்பத்தை அகற்றி, 'நல்ல காலம் கிட்டிவிட்டது' என்று சொல்லுவது போல அவளுக்குத் தெம்பை அளிக்கின்றன.

பெருநிதியாகச் சேர்ந்திருக்கும் குவியலிலிருந்து சில சிறு விஷயங்களை இப்பொழுது எடுத்துக்கொண்டு பார்ப்போம். அவை முக்கியமாக இருப்பதோடு மேற்கோளாகவும் காட்டப் படுகின்றன. ஓர் உத்தம ஸ்திரீயின் பாதிவிரத்திய மகிமையானது நெருப்பைப் போன்றது; அத்தகைய ஸ்திரீயைத் தீண்டத் துணிந்தவன் எவனுயினும் அவனை அவளது கற்புத் தீ சுட்டெரித்து விடும் என்ற ஒரு நம்பிக்கை நமக்கு இருக்கிறது அல்லவா? நமது இலக்கியத்திலும் அந்த நம்பிக்கை சிறப்புற்று விளங்குகிறது. சீதை விரும்பினுல் தன் பாதிவிரத்திய அக்கினியைக் கொண்டு தன் கஷ்டங்களைத் தீர்த்துக்கொண்டிருக்கலாம் என்று அநேகர் அதை நம்பி எழுதியும் பேசியும் வருவதை அறிவோம். இதைத்தான் இலங்கையிலிருந்து திரும்பி வந்ததும் அனுமார் மற்ற வானரர் களிடம் கூறுகிருர். அவருக்கும் இந்தப் பதிவிரதாக்கினியைப் பற்றி நம்பிக்கை இருந்திருக்கிறது.

सर्वथातिप्रवृद्धोऽसौ रावणो राक्षसाधिपः ।
तस्य तां स्पृशतो गात्रं तपसा न विनाशितम् । V. 59. 3; 4.

''இந்த ராவணன் மிகப் பெரியவனுக இருக்க வேண்டும். மகத்தான புண்ணியம் பண்ணியிருக்க வேண்டும். ஏனெனில், சீதாதேவியின் உடலைத் தீண்டியும் அவன் பஸ்மமாகவில்லையே!'' என்கிருர். மேலும் தொடர்ந்து அனுமார் சொல்லுகிருர்:—

नियतः समुदाचारो भक्तिर्भर्तरि चोत्तमा ।
यन्न हन्ति दशग्रीवं स महात्मा दशाननः ॥
निमित्तमात्रं रामस्तु वधे तस्य भविष्यति । V. 59. 34, 35.

"அவளது கற்புத் தீ அவனைச் சுட்டெரித்துச் சாம்பலாக்க வில்லை என்ருல், அவன் மகாத்மாவாக இருக்க வேண்டும். ஆயினும் அவன் இயற்றிய தவங்கள் யாவும் வேகமாகக் கரைந்து கொண்டு வருகின்றன. ராமர் வந்து ஒரு பாணம் போட்டாலும் போதும்; அவன் மடிந்துவிடுவான். தேவியை அவன் துன்புறுத்துவதிலேயே அவனது தவம் குறைந்து, ராமரைக் காணும்பொழுது ஒன்றுமில்லாதவனுகிவிடுவான்'' என்கிருர்.

சீதையே என்ன சொல்லுகிருள் என்று பார்ப்போம். இதைப் பற்றி அவள் கூறுவதும் ரசமாகவே இருக்கிறது:—

असन्देशात्तु रामस्य तपसश्चानुपालनात् ।
न त्वां कुर्मि दशग्रीव भस्म भस्मार्ह तेजसा ॥ V. 22. 20.

''நான் மட்டும் எனது கற்புத் தீயைக் கொண்டு உன்னை எரித்துவிட விரும்பினுல் ஒரு நிமிஷத்தில் பிடிசாம்பலாகி விடுவாய். என் தவத்தைக் கைவிடாமலிருப்பதற்காகவே அவ்வாறு செய்யாமலிருக்கிறேன். என் நாதனிடமிருந்தும் அப்படிச் செய்ய எனக்கு உத்தரவு வேண்டும். எல்லாப் பொறுப்பும் அவரைச் சேர்ந்தது. அவர்தாம் என்னை வந்து மீட்க வேண்டும். நானே என்னைக் காத்துக்கொள்ளலாகாது'' என்கிருள். 'கடைசியில் எப்படியும் நாம் காப்பாற்றப்படுவோம்' என்பதில் அவளுக்கு இருந்த நம்பிக்கை இதிலிருந்து தெரிகிறது.

சீதையின் மற்றொரு குணமும் இதிலிருந்து வெளியாகிறது. கனிவும் கருணையும் ததும்பும் உள்ளத்தினளான சீதை அற்ப ஜந்துவுக்கும் தீங்கு நினையாதவள். அரக்கிகளின் கைகளில் அகப்பட்டுச் சதா துன்பத்தை அநுபவிக்கும்பொழுது ஒரு நாள் பொறுக்க முடியாமல் வாய்விட்டுக் கூறிவிடுகிருள்:—

यादृशानीह दृश्यन्ते लङ्कायामशुभानि वै ।
अचिरेणैव कालेन प्राप्स्याम्येव मनोरथम् ॥
नूनं लङ्का हते पापे रावणे राक्षसाधमे ।
शोषं यास्यति दुर्धर्षा प्रमदा विधवा यथा ॥

नूनं राक्षसकन्यानां रुदन्तीनां गृहे गृहे ।
श्रोष्यामि नचिरादेव दुःखार्तानामिह ध्वनिम् ॥
सान्धकारा हतद्योता हतराक्षसपुङ्गवा ।
भविष्यति पुरी लङ्का निर्दग्धा रामसायकैः ॥ V. 26. 26, 27, 29, 30.

"இந்த இலங்கையில் காணும் கெட்ட சகுனங்கள் யாவும் வீண்போகா. சீக்கிரத்திலேயே இந்தப் பட்டணம் தன் சிறப்பையெல்லாம் இழந்துவிடும். கணவனை இழந்த கைம்பெண் போல், ராவணன் மடிந்ததும் அவலநிலையை அடைந்துவிடும். ஒவ்வொரு வீட்டிலும் சண்டைக்குச் சென்று மடிந்தவர்கள் இருப்பார்கள். சீக்கிரமே எங்கும் ஒரே அழுகையும் ஓலமுமே காதில் விழும்" என்கிறாள். துன்பம் தாங்காமல் இலங்கையில் இந்தக் கோரக் காட்சிகளைக் கற்பனை செய்கிறாள். அது நியாயமே அல்லவா? அதற்காக அவளை யாரேனும் குற்றம் கூற முடியுமா?

அனுமார் அவளுடன் பேசிவிட்டு விடைபெற்றுக்கொள்ளும் பொழுது, அன்றிரவு தங்கி மறுநாள் போகும்படி அவரைக் கேட்டுக்கொள்ளுகிறாள். அதைப் பற்றியும் அவளை எப்படிக் குற்றம் கூறுவது? அயோத்தியா காண்டத்தில், தசரதரும் இம்மாதிரித்தான் ராமரை ஓர் இரவு தங்கிவிட்டுப் போகும்படி கூறுகிறார். ராமர் அதன்படி செய்யாதது போலவேதான், அனுமாரும் சீதை சொற்படி கேட்கவில்லை. அனுமார் சென்றதும், அரக்கியர் தூக்கம் கலைந்து எழுந்திருக்கின்றனர். அனுமாரும் சீதையும் பேசிய சம்பாஷணை அவர்கள் காதுகளில் விழுகிறது. "உன்னிடம் பேசிக்கொண்டிருந்ததே ஒரு குரங்கு; அது யார்? பெரிய துஷ்டக் குரங்காக இருக்கும் போல் தோன்றுகிறதே. போகிற போக்கில் மரங்களையெல்லாம் முறித்துத் தள்ளிவிட்டது!" என்கிறார்கள். அதற்குச் சீதை கூறிய பதில் இது:—

अथाब्रवीत्तदा साध्वी सीता सर्वाङ्गसुन्दरी ।
रक्षसां भीमरूपाणां विज्ञाने मम का गतिः ॥
यूयमेवाभिजानीत योऽयं यद्वा करिष्यति ।
अहिरेव ह्यहेः पादान् विजानाति न संशयः ॥
अहमप्यस्य भीताऽस्मि नैनं जानामि को न्वयम् ।
वेद्मि राक्षसमेवैनं कामरूपिणमागतम् ॥ V. 42. 8-10.

"நினைத்தபடி உருவம் மாறும் இந்த அரக்கர்களுடைய காரியங்களை நான் எப்படி அறிவேன்? உங்களுக்குத்தான் என்னைவிட நன்றாகத் தெரியும். பாம்பின் கால் பாம்பறியும் என்பர். அவன் யார் என்று எனக்குத் தெரியாது. ராக்ஷசன்

தான் என்று நினைக்கிறேன். அவனைக் கண்டு எனக்கும் பயமாகவே இருக்கிறது'' என்கிறாள்.

மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் இது உண்மையை மறைத்துப் பேசியதுதான் என்று சொல்ல வேண்டும். இதைப் பற்றிப் பெரிய சர்ச்சைகள் வாக்குவாதங்கள் நடக்கின்றன. சீதை பொய் கூறியதாக இருக்கக்கூடாது என்ற கவலையில் ஏதேதோ சொல்லுகிறார்கள். இந்தச் சுலோகத்தில் உள் அர்த்தம் ஒன்று இருக்கிறது; சீதை அதைத்தான் கூறினாள் என்பது ஒரு சாராரின் கட்சி. வார்த்தைகளைத் திரித்துச் சாமர்த்தியமாக வேறு அர்த்தம் கற்பித்துக் கூறுகிறார்கள். அது சம்பந்தமின்றியும் அர்த்தமின்றியும் இருப்பதோடு சீதைக்கும் ஒரு பெருமையையும் அளிக்கவில்லை. வேறு சிலர், சீதை கூறியது பொய்தான் என்று ஒப்புக்கொண்டு, இந்த அரக்கிகளிடம் அவள் உண்மையை எதற்குக் கூறவேண்டுமென்று கேட்கிறார்கள். அவள் உண்மையைக் கூறித்தானாக வேண்டும் என்று எனக்கும் தோன்றவில்லை. 'நிஜத்தைச் சொல்ல வேண்டிய அவசியம் என்ன?' என்று கேட்கும் பொழுது அவள் கூறியது பொய் என்றே ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கிறது. மற்றும் சிலர், ''ஸ்மிருதியில் ஐந்து விதமான சங்கட நிலைமையில் ஒருவர் பொய் சொல்லலாம்; அது பாவமில்லை என்று சொல்லியிருக்கிறது. ஆகவே சீதை மீது தவறில்லை'' என்கிறார்கள். அந்த ஐந்து சங்கட நிலைகள் யாவை என்று பார்க்கும்பொழுது உலகில் கூறப்படும் எல்லாப் பொய்களையுமே அவை ஆதரிப்பவையாகத் தோன்றும். ஓர் உதாரணம் கூறுகிறேன்:—

विवाहकाले रतिसंप्रयोगे प्राणात्यये सर्वधनापहारे ।
विप्रस्य चार्थेऽप्यनृतं वदेयुः पञ्चानृतान्याहुरपातकानि ॥

''ஒரு பிராம்மணனைக் காப்பதாக இருந்தால் பொய்யைக் கூறலாம். (மரணத்திலிருந்து காப்பதைத்தான் கூறியிருக்க வேண்டும். பிராம்மணனுடைய நன்மைக்காக என்றும் அர்த்தம் செய்துகொள்ளலாம்.) ஒரு புருஷனுக்கு மனைவியையோ ஒரு பெண்ணுக்குக் கணவனையோ தேடி விவாகம் செய்ய வேண்டும் என்றால் அப்பொழுது ஒரு பொய் சொல்லலாம். ''வாழ்க்கையில் எத்தனையோ பிரச்னைகள் உண்டாகும். பிராம்மணன் அல்லாதவன் ஒருவனைச் சில சமயம் காப்பாற்ற வேண்டுமென்று தோன்றும். அந்தச் சந்தர்ப்பத்தில், 'விப்ரஸ்ய சார்த்தே' என்ற மூலத்தை 'மித்ரஸ்ய சார்த்தே' என்று மாற்றிக்கொள்வோம். சீதை பொய் சொல்லவில்லை என்று நிரூபிப்பதற்கு இம்மாதிரித்தான் வியாக்கியானகாரர் மூலத்தைச் சிறிது மாற்றிச் சொல்லுகிறார்.

'அனுமார் பிராம்மணரா? பூணூல் போட்டுக்கொண்டிருந்தாரா?' என்று கேள்வி எழலாம். துன்பத்தில் ஆழ்ந்து தவிக்கும் ஒருவன் எப்படி நடப்பானோ அப்படித்தான் சீதையும் நடந்திருக்கிறாள். உயிருக்கு ஆபத்து என்றால், நாம் கற்ற சாஸ்திரங்களினால் ஒரு பயனும் இல்லாமற் போய்விடும். நம் உயிரைக் காத்துக்கொள்ளும் எண்ணம் எல்லாச் சாஸ்திரங்களுக்கும் மேல் பெரிதாகிவிடும். வெகு சுலபமாக அவற்றினின்றும் விலகிக்கொள்வோம். அதுதான் உலக நியதி. அதை யாரும் மீற முடியாது. தம் கதாநாயக நாயகிகளையும் அவ்விதம் மீறி நடந்ததாக அமைக்கும்படி வால்மீகிக்கும் உத்தேசமில்லை. அவர்களைச் சாதாரண மனிதர் களாகவே அவர் அமைத்திருக்கிறார்.

இன்னும் ஒரு வார்த்தை: தன்னைக் காத்துக்கொள்ளும் எண்ணம் சீதைக்கு இல்லை. அனுமார் அவளிடம் விடைபெற்றுச் சென்ற சமயத்தில் அரக்கியர் கண்விழித்து அவர்களின் சம்பாஷணையைக் கேட்டதும், அனுமாருக்கு ராவணனால் ஆபத்து உண்டாகி விடும் என்று அவளுக்கு அச்சம் எழுகிறது. அந்தச் சமயத்தில் அவரைக் காக்கச் சுலபமான வழியைக் கைக்கொள்ளத் தோன்றாம லிருக்குமா? தனக்காக எவ்வளவோ சிரமங்களை அநுபவித்திருக் கும் அவரைக் காப்பது அவளது கடமை அல்லவா? அந்தச் சமயத்தில் அவள் வேறு அவர் வேறா? பெரும் துன்பத்திலாழ்ந்து தவிக்கும் தன்னைக் காத்துக்கொள்ள என்ன என்ன செய்வாளோ அவ்வளவும் தனக்கு நேரும் ஆபத்துக்களைக்கூடச் சிறிதும் கருதாமல், அவளைக் காக்க வந்த உத்தமருக்கு அவள் செய்வது நியாயமே அன்றோ? ஆனால் வாழ்வில் பொய் சொல்லித்தானாக வேண்டும் என்றபொழுதுதான் மக்கள் பொய் சொல்லுகிறார்கள் என்றில்லை. அரக்கியரை ஏமாற்றுவதற்காகச் சீதை உண்மையை ஒளித்திருக்க வேண்டாம். ஏனெனில், அனுமாரே தம்மைக் காத்துக்கொள்வதைப்பற்றிக் கவலை கொள்ளவில்லை. ''யாரோ தெரியாது'' என்று அவள் ராக்ஷசிகளிடம் சொல்லிக்கொண்டிருக் கும்பொழுது, அவர் இலங்கைவீதிகளில், ''நான் அனுமான்; சுக்கிரீவனுடைய சேவகன்; ராமருடைய தூதன். இந்த இலங்கையை அழிக்கப்போகிறேன். ஆயிரம் ராவணர்கள் வந்து எதிர்த்தாலும் அவர்களைத் தவிடுபொடியாக்கிவிடுவேன்'' என்று கோஷமிட்டுக்கொண்டு செல்லுகிறார். ஆகவே சீதை மறைத்துப் பேசியதே அவசியமில்லை. ஆனால், வாழ்க்கையின் இயல்பு இதுதான். அதில் விழும் ஒளிநிழல்களைப்பற்றிய அறிவை இங்குக் கவி முற்றும் காண்பித்திருப்பதாகவே தோன்றுகிறது. வாழ்வை நன்றாக ஊடுருவிப் பார்ப்பவர் அவர். மிக்க நேர்மையுடன் இருப்பவர்களுங்கூட ஒரு சமயத்தில் மிக்க சபலத்திற்கு ஆளாகித்

தம் நேர்மையிலிருந்து பிறழ்வதுண்டு. ஆயினும் அப்படி ஆகாம லும் பார்த்துக்கொள்ளலாம் என்பதுதான் அவர் கருத்து. கோவிந்தராஜர், 'மித்ரஸ்ய சார்த்தே' என்ற சுலோகத்தை எடுத்துக் கூறி, 'இதி ஸ்மரணாத் அஸத்யோக்தி:' என்று கூறுகிறார்.

நாகேசபட்டர் என்பவர் கூறுகிறார்:—

वैदेह्या वचनमज्ञानप्रतिपादकम् । अनेनात्मत्राणादौ
मृषावादो न दोषायेति ध्वनितम् ।

இதிலிருந்தெல்லாம், அனுமார் யார் என்று அவள் அறிந்து கொள்ளவில்லை என்றுதான் ஏற்படுகிறது. வியாக்கியானத்தை உட்புகுந்து பார்த்து மூலத்துக்குப் புதிய அர்த்தம் கற்பித்தோ, அல்லது வேறு விதமாகவோ காரணங்கள் கண்டுபிடித்துக் கூறுவது அநாவசியம் என்று தோன்றுகிறது.

அனுமார் இலங்கையைக் கொளுத்தும்பொழுது சீதை, அக்கினி பகவானைப் பிரார்த்திக்கிறாள். இலங்கை தீக்கிரையாகிக் கொண்டிருக்கிறது என்று கேட்டபொழுது, அனுமாரைக் காப்பாற்றும்படி அக்கினி பகவானை வேண்டிக்கொள்கிறாள்:—

उपतस्थे विशालाक्षी प्रयता हव्यवाहनम् ।
यद्यस्ति पतिशुश्रूषा यद्यस्ति चरितं तपः ॥
यदि चास्त्येकपत्नीत्वं शीतो भव हनूमतः ।
यदि कश्चिदनुक्रोशस्तस्य मय्यस्ति धीमतः ॥
यदि वा भाग्यशेषो मे शीतो भव हनूमतः ।
यदि मां वृत्तसंपन्नां तत्समागमलालसाम् ॥
स विजानाति धर्मात्मा शीतो भव हनूमतः ।
यदि मां तारयेदार्यः सुग्रीवः सत्यसङ्गरः ।
अस्माद्दुःखाम्बुसंरोधाच्छीतो भव हनूमतः ॥ V. 53. 23-32.

''நான் கற்பிற் சிறந்தவள் என்றால், பதியே தெய்வம் என்று எண்ணித் தவமியற்றியவள் என்றால், அந்நிய புருஷனைக் கண்ணெடுத்தும் பார்க்காதவள் என்றால், அக்கினி தேவதையே! நீ அனுமாரை எரிக்காமல் குளிர்ந்திருக்க வேண்டும்.'' மேற்கண்ட சுலோகங்கள் மிகவும் பிரசித்தமானவை. அவற்றை முக்கிய மாகக் கவனித்து எல்லோரும் படித்திருப்பதனால், சுலோகங்களை ஓட்டிக்கொண்டு போகாமல் அவற்றின் விசேஷத்தை எடுத்துக் கூற விரும்புவீர்கள் என்று, இப்பொழுது விவரித்துக் கூறினேன்.

திரிஜடையின் கனவைப் பற்றிக் கூறியது உங்களுக்கு நினைவிருக்கலாம். அரக்கியர் அதட்டி மிரட்டிச் சீதையைத்

துன்புறுத்தியபொழுது திரிஜடை தான் கண்ட ஒரு நல்ல கனவை அவளிடம் கூறுகிறாள். இனி வரப்போகும் நல்ல காலத்தைக் குறிக்கிறது அந்தக் கனவு. "இனிச் சீதைக்கு எல்லாம் நன்மையே உண்டாகப்போகிறது. ராவணனும் அவனைச் சேர்ந்தவர்களும் மடியப் போகிறார்கள். இலங்கை அழிந்துபோகப் போகிறது. தர்மம் மீண்டும் நிலைநாட்டப்பெறும். ராக்ஷசிகளே! நீங்கள் அனைவரும் கஷ்டப்படப் போகிறீர்கள். சீதையை நீங்கள் துன்புறுத்தியது தெரிய வந்ததும் ராமர் உங்களையும் அதே விதத் துன்பங்களுக்கு ஆளாக்குவார். அந்தக் காலம் நெருங்கி விட்டது. புத்தி இருந்தால் இப்பொழுதே சீதையின் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக்கொள்ளுங்கள். அவள் உங்கள் அனைவரையும் காப்பாற்றுவாள். அவள்தான் உங்களுக்கு அபயமளிக்க முடியும்" என்கிறாள். இவ்வாறு அந்த அழகிய ஸர்க்கத்தைப் பின்வரும் சுலோகத்துடன் முடிக்கிறார் கவி:—

**ततः सा ह्रीमती बाला भर्तुर्विजयहर्षिता ।**
**अवोचद्यदि तत्तथ्यं भवेयं शरणं हि वः ॥** V. 27. 53; 58. 90.

திரிஜடை கூறியதைக் கேட்டுச் சிறிது ஆறுதல் பெறுகிறாள் சீதை. கடைசியில் எல்லாம் நன்மையாகவே முடியும் என்று அவளுக்கு ஏதோ தோன்றுகிறது. அந்த அரக்கியரை நோக்கி அவள், "நீங்கள் என் கால்களில் விழுந்து வேண்டிக்கொள்வதற்கு முன்பே உங்களுக்கு அபயமளிக்கிறேன். திரிஜடை கண்ட கனவு பலித்தால் உங்களைக் கட்டாயம் காப்பாற்றுவேன்" என்கிறாள்.

அவர்களைக் காப்பாற்ற வேண்டிய சமயம் இருக்கிறது. ராவணவதமாகி விபீஷணன் முடிசூட்டப்பெற்றதும் ராமரது உத்தரவினால் அனுமார் சீதையிடம் சென்று, அவளுக்கு நல்ல காலம் கிட்டிய செய்தியை அறிவிக்கச் செல்கிறார் அல்லவா? சமாசாரத்தைக் கூறிய பிறகு, "அம்மணி! தாங்கள் உத்தரவு கொடுத்தால் தங்களைத் துன்புறுத்திய இந்த அரக்கிகளைச் சித்திரவதை செய்கிறேன்" என்கிறார். அவர் சித்திரிக்கும் காட்சி பயங்கரமாகவே இருக்கிறது. "பற்களால் கடித்து என் நகங்களால் அவர்களைக் கிழித்துவிடுகிறேன். காலால் உதைத்துத் துவம்சம் செய்கிறேன். என்ன செய்ய வேண்டுமென்று தங்களுக்குத் தோன்றுகிறது? சொல்லுங்கள்" என்கிறார்.

கவி எங்கும் கூறாவிட்டாலும், சீதை அரக்கியருக்கு அபயமளித்த நிகழ்ச்சியை நாம் நினைவுபடுத்திக்கொள்ள வேண்டும் என்பதுதான் அவர் கருத்து என்பது நிச்சயம். அனுமாருக்கும் அது தெரியும். ராமருக்கு அடுத்தபடி முக்கியப் பாத்திரமாக விளங்கும் அனுமார்தாம் அப்படிக் கூறுகிறார். சீதை அதற்குக்

கூறிய பதில் அனுமாரைத் தலைகுனியச் செய்து அவர் என்றென்றும் மறக்க முடியாத பாடத்தைக் கற்பிக்கிறது. சம்ஸ்கிருதத்திலுள்ள அந்தச் சுலோகங்களின் மொழிபெயர்ப்பை இப்பொழுது பார்ப்போம். சிறிது யோசித்துப் பிறகு ஒரு முடிவுக்கு வந்தவளாய், சீதை உறுதியான மொழிகளில் பதில் கூறுகிறாள்: ''இந்த ஸ்திரீகள் சுதந்திரமில்லாதவர்கள். ஒரு கொடுங்கோல் மன்னனுடைய கட்டளைப்படி நடந்தவர்கள். இவர்கள்மேல் கோபம் கொள்வது முறையல்ல. என் கஷ்டங்களுக்கு இவர்கள் காரணமாவார்களா? நான் பூர்வ ஜன்மத்தில் செய்த பாவங்களின் பயனை இப்பொழுது அநுபவிக்கிறேன். வினைப் பயன் வந்தே தீரும். என் துரதிருஷ்டத்திற்காக இவர்கள் மீது பழி சுமத்த வேண்டாம் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். யாவும் விதிப்படி நடக்கின்றனவே தவிர, எதுவும் நம் கையில் இல்லை. ராவணனிடம் அடிமைகளாக இருக்கும் இவர்களை நான் மன்னிக்கிறேன். அவனுடைய கட்டளையின்படி இவர்கள் நடந்தார்களேயன்றி வேறல்ல. ராவணன் மடிந்த பிறகு இனி ஏன் இவர்கள் என்னைத் துன்புறுத்தப் போகிறார்கள்?

''ஒரு கரடி கற்பித்த நீதியை இப்பொழுது ஞாபகப்படுத்துகிறேன்: ஒரு காலத்தில் வேடன் ஒருவன் புலியினால் துரத்தப்பட்டு ஒரு பெரிய மரத்தின் மீது ஏறிக்கொண்டான். அந்த மரத்தில் ஏற்கனவே ஒரு கரடி உட்கார்ந்திருந்தது. மரத்தடிக்கு வந்த புலி, மேலிருக்கும் கரடியை நோக்கி, வேடனைக் கீழே தள்ளும்படி போதித்தது. ஏனெனில் அவன் இருவருக்குமே பகைவன் அல்லவா? 'அதிதியாக வந்தவனை எப்படியாவது காப்பாற்ற வேண்டியது முக்கியம்' என்று சொல்லிக் கரடி புலி கூறியபடி செய்ய மறுத்தது. 'அதிதியை உபசரிக்க வேண்டும்' என்ற தர்மத்தை மீற அதற்கு இஷ்டமில்லை. இத்தகைய உயர்ந்த எண்ணத்தோடு கரடி நிம்மதியாகத் தூங்கப் போயிற்று. அதன் பின்பு புலி வேடனை நோக்கி, தூங்கிக் கொண்டிருக்கும் கரடியைக் கீழே தள்ளிவிடும்படிக் கூறியது. வேடன் உடனே அப்படியே செய்துவிட்டான். ஆனால் இத்தகைய விபத்துக்களுக்குப் பழக்கமான கரடி, மற்றொரு கிளையைப் பற்றிக்கொண்டு கீழே விழாமல் தப்பியது. சமத்காரமாகப் பேசிப் பார்ப்பதற்குப் புலிக்கு வேறொரு தருணம் கிட்டியது. 'இந்த மனிதனைப் பார். எவ்வளவு நன்றி கெட்டவன்! பிடித்துக் கீழே தள்ளு அவனை!' என்று கரடியினிடம் கூறிற்று. சாந்தமாய்க் கருணையோடு கரடி, சாசுவதமான தர்மத்தை எடுத்துக் கூறலாயிற்று: 'வேறொருவன் செய்த பாவத்திற்காக, தர்மத்தை அநுசரிக்கும் ஒருவன் தர்ம வழியினின்றும் விலகக் கூடாது. தர்மம் ஒருபோதும் மீறக்

கூடாதது. நல்ல மனிதர்களிடம் ஒரே ஓர் இரத்தினம்தான் உள்ளது. அது அவர்களது சீலமேயாகும். அதை எப்படியாவது அவர்கள் பாதுகாக்க வேண்டும். கெட்டவர்களோ, நல்லவர்களோ, இறக்கத் தகுதியுள்ளவர்களே என்றாலும், உத்தமன் என்று தன்னைச் சொல்லிக் கொள்பவன் அவர்களை மன்னித்து இரக்கத்துடன் நடத்த வேண்டும். தவறு செய்யாதவர் உலகில் யார்? ஆகவே பழிக்குப் பழி வாங்குவது என்ற எண்ணத்தை விட்டு விடுவோம். பிறரைக் கொடுமைப்படுத்தி அடாத காரியம் செய்பவர்களுங்கூடத் தீங்கு செய்யும் எண்ணத்தை நீக்கும்படி நாம் முயலுவோம்'' என்கிறாள்.

தான் அபயம் அளித்தது நினைவு வந்துதான் சீதை அவ்வாறு பேசுகிறாளா? அவள் அளித்த உறுதிமொழியை அனுமாரும் கேட்டுக்கொண்டிருந்தார் அல்லவா? இருவரில் ஒருவரும் அதை மறந்திருக்க முடியாது. இரண்டு சம்பவங்களையும் சேர்த்துப் பார்க்க வேண்டும் என்பது கவியின் கருத்து என்று தோன்றுகிறது.

ஆறு காண்டங்களிலும் மிகவும் விசேஷமான ஒரு நிகழ்ச்சியை இப்பொழுது பார்ப்போம். அதில் சீதையின் கற்புநெறியைச் சந்தேகித்தது மட்டுமின்றி, ராமர் அவளை மீண்டும் ஏற்றுக் கொள்ள மறுத்து, தனக்குத் துணைவனாக வேறு யாரையேனும் அவள் தேர்ந்தெடுத்துக்கொள்ளலாம் என்று கூறுகிறார். இந்தப் பரந்த உலகில் யாரை அவள் ஸ்வீகரித்துக்கொண்டாலும் சரி என்கிறார். அதற்குச் சீதை கூறிய பதில் மிகவும் மேன்மையானது. திக்கற்றுத் தன்னந்தனியே பன்னிரண்டு மாதகாலமாக ஒரே நம்பிக்கையைப் போற்றி வந்தவள், அபாண்டமாகக் குற்றம் சாட்டப்பட்டு என்ன செய்வதென்று அறியாமல் கலங்கியிருந்தும், தன் நிதானத்தை இழக்காமல், அனைவரும் அவளையே நோக்கிய வண்ணம் இருக்கும்பொழுது அமைதியாகப் பேசுவது ஒரு பெரிய ஆச்சரியம் அல்லவா?

''என்னைப் பார்த்து என்ன கொடுமையான குரூரமான சொற்களைப் பேசுகிறீர்கள்? நீங்கள் அற்பப் புருஷரல்ல; நானும் அற்பமான ஸ்திரீ அல்ல. 'ப்ராக்ருத: ப்ராக்ருதாமிவ.' வாய் விட்டுச் சொல்லக்கூடிய வார்த்தைகளா அவை! நீங்கள் நினைப்பது போன்றவள் அல்ல நான். நம்பிக்கை வேண்டும். ஏதோ சிலர் தவறாக நடப்பதை வைத்துக்கொண்டு பெண்குலத்தையே சந்தேகிக்கலாமா? என்மேல் ஆணையிட்டுக் கூறுகிறேன். என்னைச் சந்தேகிக்கலாகாது. என்னைப்பற்றி உங்களுக்கு எவ்வளவு நன்றாகத் தெரியும்! அதை நினைவுபடுத்திக் கொள்ளுங்கள். ராவணன் என்னை ஸ்பர்சித்ததைப்பற்றிக் கேட்கிறீர்களா? அதை நான்

விரும்பினேனு? அதற்கு நான் பொறுப்பாளி அல்லவே! என் வசத்திலிருக்கும் உள்ளம் எப்பொழுதும் தங்களையே சேர்ந்தது. என் வசத்தில் இல்லாத உடலைப்பற்றி நான் என்ன செய்ய முடியும்? என் சீலம் உங்கள் அடைக்கலப் பொருளாக இருக்கிறது. சிறு வயதிலிருந்தே என்னுடன் பழகிய நீங்கள் இவ்வளவு காலத்துக்குப் பிறகு என்னை எவ்வளவு நன்ருக அறிந்திருக்க வேண்டும்!

"நீங்கள் என்னைக் கைவிட்டால் அப்புறம் நான் அடியோடு அழிந்து போனவள்தான். மகாவீரனுன அனுமானை நீங்கள் அனுப்பியபொழுது, என்னைத் திரஸ்கரிக்கும் இந்தக் கொடிய செய்தியை ஏன் சொல்லியனுப்பவில்லை? அவர் இதைச் சொல்லியிருந்தால் அவர் கண்முன்பேயே என் உயிரை மாய்த்துக்கொண்டு உங்களுக்கு இந்தச் சிரமத்தைக்கூட வைக்காதிருந்திருப்பேன். உங்களுக்கும் உங்களைச் சேர்ந்தவர்களுக்கும் இந்தத் தொல்லைகளெல்லாம் எதற்கு? இவற்றை அநுபவிக்காமலே இருக்கலாமே! உங்கள் கோபம் அறிவை அழித்துவிட்டது. அற்ப மனிதனைப் போல் நடந்துகொண்டு என்னையும் ஒரு சாதாரண ஸ்திரீயைப் போல் கேவலமாகக் கருதிவிட்டீர்கள். பெயரளவில்தான் நான் ஜனகர் குலத்தைச் சேர்ந்தவளே தவிரப் புனிதமான உழுத பூமியினின்றும் உதித்தவள். எல்லாம் தெரிந்த நீங்கள் அதை அடியோடு புறக்கணித்துவிட்டீர்கள். இவ்வளவு வருஷம் என்னுடன் பழகியும் என் ஒழுக்கத்தை அசட்டை செய்துவிட்டீர்கள். தாங்கொணுத துன்பங்களிலும் உங்களை நிழல் போலப் பின்பற்றி உங்களையே தெய்வமாகப் போற்றி வந்த என் பக்தி அனைத்தும் காற்றில் அடிபட்ட பஞ்சு போல் பறந்து போய்விட்டதே! என்னை இந்தக் கொடுமைக்கு ஆளாக்கிக் கடைசியில் அடியோடு புறக்கணித்து விட்டீர்களே!"

இவ்வாறு கூறிவிட்டுச் சீதை சிறிது நிறுத்தி, ராமர் முகத்தை நோக்குகிருள். ஆனுல், அந்த இரக்கமற்ற கடுந்தோற்றமுடைய முகத்தில் சிறிதளவும் சலனம் ஏற்படவில்லை. இனித் தனக்கு வேறு கதி இல்லை என்பதை அவள் உணர்ந்தவளாக, பக்கத்தில் பிரமை பிடித்தவன் போல் நின்றிருக்கும் லக்ஷ்மணனை நோக்கி, "தீவளர்க்க ஏற்பாடு செய்யுங்கள். பதியினுல் சந்தேகித்துப் புறக்கணிக்கப் பட்டபிறகு உயிர் வாழச் சம்மதியேன். என்னுல் அதற்குப் பிறகு உயிர் தரித்திருக்கவும் முடியாது. அனைத்தையும் போக்கும் அக்கினிதான் இனி இந்தத் துன்பங்களுக்கு மருந்து" என்கிருள்.

चितां मे कुरु सौमित्रे व्यसनस्यास्य भेषजम् ॥ VI. 119. 18.

உத்தர காண்டத்தில், கடைசி அத்தியாயங்களை இப்பொழுது பார்ப்போம். அவர்கள் மீண்டும் அடையப்போகும் இன்பத்துக்கு

அடிப்படையான பட்டாபிஷேகத்தைப்பற்றி இந்த உபன்யாசங்களின் இறுதியில் கூறுவதாக இருக்கிறேன். ராமர், சீதை, லக்ஷ்மணன் இன்னும் மற்றுமுள்ளோர் அயோத்தி அரண்மனையிலுள்ள அசோகவனத்தில் இருக்கிறார்கள். எங்கும் மகிழ்ச்சி தாண்டவமாடுகிறது. சீதை களிப்பெய்தும்படி ராமர் அவளைப் பெரிதும் உபசரித்துக்கொண்டிருக்கிறார்.

अशोकवनिकां स्फीतां प्रविश्य रघुनन्दनः ।
आसने च शुभाकारे पुष्पप्रकरभूषिते ॥
कुथास्तरणसंवीते रामः संनिषसाद ह ।
सीतामादाय हस्तेन मधु मैरेयकं शुचि ॥
पाययामास काकुत्स्थः शचीमिव पुरन्दरः ।
मांसानि च सुमृष्टानि फलानि विविधानि च ॥
रामस्याभ्यवहारार्थं किङ्करास्तूर्णमाहरन् ।
उपानृत्यंश्च राजानं नृत्तगीतविशारदाः ॥
बालाश्च रूपवत्यश्च स्त्रियः पानवशानुगाः ।
उपानृत्यन्त काकुत्स्थं नृत्यगीतविशारदाः ॥
मनोऽभिरामा रामास्ता रामो रमयतां वरः ।
रमयामास धर्मात्मा नित्यं परमभूषितः ॥ VII. 42. 17-22.

சீதை அநுபவித்த இன்பகரமான நாட்கள் மிகக் குறைவு. அவளும் ராமரும் ஒருவருடன் ஒருவர் ஆனந்தமாகப் பொழுது போக்கிய காட்சிகளை ஆசையுடன் படித்து நாமும் இன்புறுவதில் தவறில்லை. ராமர் அவளுக்கு மகிழ்வூட்டுவதிலேயே கவனமாக இருக்கிறார். சிறந்த தேனையும் உயர்ந்த மதுபானத்தையும் அவளுக்கு அளித்து உபசரித்தார் என்கிறார் கவி. நன்றாகப் பக்குவம் செய்த உயர்ந்த மாமிசவகைகளையும் அவளுக்கு அளிக்கிறாராம். இவ்வாறு ஆனந்தமாக வீற்றிருக்கும்பொழுது, பல தேசங்களிலிருந்து வந்த ரூபவதிகளான பெண்கள் நாட்டியமாடி அவர்களை மகிழ்விக்கின்றனர். அவர்களும் மதுமயக்கத்தில் ஆழ்ந்தவர்கள். உயர்ந்த ஆடையாபரணங்களை அணிந்த அவர்கள் பாடியும் ஆடியும் கதைகள் சொல்லியும் மகிழ்வெய்துகிறார்கள். இவ்வாறு உல்லாசமாகப் பொழுது போக்கும்பொழுது ராமர் வெறும் களியாட்டத்திலும் கேளிக்கையிலும் ஈடுபட்டதாக ஒருவரும் கருதிவிடலாகாது என்று நினைத்த கவி, ''வஸிஷ்டரும் அருந்ததியும்போல் ராமரும் சீதையும் காணப்பட்டனர்'' என்கிறார்.

स तया सीतया सार्धमासीनो विरराज ह ।
अरुन्धत्या सहासीनो वसिष्ठ इव तेजसा ॥ VII. 42. 23.

இன்னும் சிறிது ஆர்வத்துடன் ஒரு நிமிஷம் இங்குக் கவனிப்போம்:—

एवं रामो मुदा युक्तः सीतां सुरसुतोपमाम् ।
रमयामास वैदेहीमहन्यहनि देववत् ॥ VII. 42. 24.

இவ்வாறு தினந்தோறும் தேவராஜன் போன்ற ராமர் தேவ கன்னிகை போன்ற சீதையைச் சந்தோஷத்துடன் உபசரித்து இன்புறுகிறார். ஆனால், அவளுடைய கஷ்டதசை மீண்டும் தொடங்குகிறது.

अब्रवीच्च वरारोहां सीतां सुरसुतोपमाम् ॥
अपत्यलाभो वैदेहि त्वयि मे समुपस्थितः ।
किमिच्छसि वरारोहे कामः किं क्रियतां तव ॥ VII. 42. 30, 31.

"உனக்குப் பேறுகாலம் நெருங்கிக்கொண்டிருக்கிறது. உன் விருப்பத்தைக் கேட்டு அதை நிறைவேற்றும் கடமை எனக்கு இருக்கிறது. உனக்கு என்ன வேண்டும்? சொல். அதை உடனே நிறைவேற்றச் செய்கிறேன்" என்கிறார் ராமர். தான் கர்ப்பவதியாக இருப்பதை அவர் குறிப்பாக எடுத்துக் கூறியதைக் கேட்டுச் சீதை புன்னகை கொள்கிறாள்.

तपोवनानि पुण्यानि द्रष्टुमिच्छामि राघव ।
गङ्गातीरोपविष्टानामृषीणामुग्रतेजसाम् ।
फलमूलाशिनां देव पादमूलेषु वर्तितुम् ॥
एष मे परमः कामो यन्मूलफलभोजिनाम् ।
अप्येकरात्रं काकुत्स्थ निवसेयं तपोवने ॥
तथेति च प्रतिज्ञातं रामेणाक्लिष्टकर्मणा ॥ VII. 42. 32-35.

"வனத்தில் வாழும் ரிஷிகளுடன் ஒரு நாளாவது சேர்ந்து இருக்க விரும்புகிறேன். இந்த ஆடம்பரங்களெல்லாம் இல்லாமல், மனத்தில் ஒரு கவலையும் இல்லாமல், காய்கனிகளை உண்டு, அவர்களுடைய களங்கமற்ற எளிய வாழ்வை ஒரு நாளாவது அநுபவிக்க மனம் விருப்பம் கொள்ளுகிறது" என்கிறாள். பாவம்! தான் என்ன கேட்கிறாள் என்பது அவளுக்குத் தெரியவில்லை.

உண்மையில் ராமர் அவள் விரும்பியதை உடனே நிறைவேற்றுகிறார். 'ஆனால், அவள் கேட்டது ஒரு நாள்தான். அது பன்னிரண்டு வருஷ காலம் நீண்டுவிடுகிறது. ஜனங்களிடையே தோன்றிய வம்பு என்னது என்பதை அனைவரும் அறிவோம். "பன்னிரண்டு மாதம் ஓர் அந்நிய புருஷன்—அதுவும்

ஒரு பரம துஷ்டனுடைய கிருகத்தில் வசித்த ஸ்திரீயை மீண்டும் தம் மனைவியாக ஏற்றுக்கொண்டு ராமர் நாட்டிலுள்ள மக்களுக்கு மிகவும் தவறான வழியை அநுசரித்துக் காட்டிவிட்டார்'' என்று ஊர்ஜனங்கள் வம்பு பேசத் தொடங்குகிறார்கள். ''இவ்வாறெல்லாம் தவறிழைத்த சீதைக்கு ஒரு மாசும் இல்லையென்றால், நம் வீட்டுப் பெண்களும் இந்த விதச் சலுகையைக் கேட்பார்கள். நாமும் அவர்கள் கேட்பதை அளிப்பதுடன், இன்னும் எவ்வளவோ இழிவுகளையும் பொறுக்கும்படியாகும். நமக்கெல்லாம் இனிப் பெரும் கஷ்டம்தான்'' என்று மக்கள் ஒருவருடன் ஒருவர் பேசிக் கொள்ளுகிறார்கள். இந்த விஷயம் ராமருக்கு எட்டியதும் அவர் தம் சகோதரர்களை அழைத்து, ''இத்தகைய களங்கத்தை என்னால் பொறுக்க முடியாது. எப்படியாவது இதைத் துடைக்க வேண்டும்'' என்று கூறித் தம் பயங்கரமான உத்தேசத்தையும் வெளியிடுகிறார்.

லக்ஷ்மணன் சீதையை அழைத்துச் செல்லும்படி ஆகிறது. கங்கைக் கரையை அடைந்து அவளை அங்கே தனியே விட்டுவிட்டு, மாலைமாலையாகக் கண்ணீர் வடிக்கிறான். ''ஏன் அழுகிறாய்?'' என்று சீதை கேட்க, லக்ஷ்மணன் உண்மையைக் கூறுகிறான். படத் தகாத இடத்தில் பட்ட இந்த அடி அவளுக்குப் புதியதல்ல. சிறிது யோசிக்கிறாள்; பிறகு, மன உறுதியுள்ளவளாதலால் தன்னை ஸ்திரப்படுத்திக்கொண்டு, அவள் கூறியதாவது:— ''லக்ஷ்மணா! நான் கடைசியாகக் கூறுவதைக் கேள். நான் துன்பத்திற்கென்றே பிறந்தவள். சோகமே உருவெடுத்து என்னுள் குடிகொண்டிருக்கும்படி தெய்வம் விதித்துவிட்டது. எனக்குத் தெரிந்த மட்டில் நான் களங்கமற்றவள். என் நாதன் இவ்வாறு என்னைப் புறக்கணிக்கும்படியான குற்றம் ஒன்றும் நான் செய்தவள் அல்ல; பூர்வஜன்மத்தில் பெரிய பாவங்களைப் புரிந்திருப்பேன் என்பது நிச்சயம். ஆசைக்கெல்லாம் உறைவிடமான மனைவியை விட்டுக் கணவனைப் பிரித்திருப்பேன். முன்பு இங்கே ரிஷி ஆசிரமங்கள் இருந்தபொழுது ராமருடன் இருந்தேன். அன்புடன் அவருக்குப் பணிவிடை புரிந்துகொண்டிருந்ததில் ஒரு கஷ்டமுமில்லாமல் ஆனந்தமாக இருந்தேன். இப்பொழுது ராமர் இல்லாமல் நான் மட்டும் தனியாக இருப்பதைப்பற்றி அந்த ரிஷிகள் கேட்டால் நான் என்ன காரணம் கூறுவேன்? எந்தக் குற்றத்துக்காக இவ்வாறு தியாகம் செய்யப்பட்டேன் என்று சொல்லுவேன்? 'ராமர் தர்மாத்மா ஆயிற்றே! உன்னை ஏன் தியாகம் செய்துவிட்டார்?' என்று அவர்கள் ஒரே வாக்காய்க் கூறுவார்கள். லக்ஷ்மணா, இந்த ஜன்மத்தை எதற்காக வைத்திருக்க வேண்டும்? கங்கையில் விழுந்து உயிரை மாய்த்துக்கொள்ளுகிறேன்.

''ஆனால் இக்ஷ்வாகு வம்சத்தின் விதை என்னுள் முளை விட்டிருக்கிறது. நான் எப்படி உயிரை விட முடியும்? என் விதியை நான் அநுபவித்துத் தீருகிறேன். இன்னும் இரண்டொரு வார்த்தைகள் சொல்ல வேண்டும். போய் இந்தச் செய்தியைச் சொல்: என் மாமியார்களின் கால்களில் நான் பணிவுடன் நமஸ்கரித்ததாகச் சொல். உங்கள் மன்னர் கால்களிலும் என் தாழ்மையுடன் கூடிய நமஸ்காரம். என்பொருட்டு அவரை நமஸ்கரித்து, 'தங்களுக்குத் தர்மம் நன்கு தெரியும். எது வந்தாலும் தர்மத்தைக் கைவிடாமல் இருங்கள். நான் களங்கமற்றவள் என்று தங்கள் அந்தராத்மா நன்கு அறியும். என் உள்ளம் உடல் இரண்டும் தங்களை விட்டு வேறொருவரையும் நாடியதில்லை. இருப்பினும் மக்கள் என் கற்பு நெறியைச் சந்தேகிக்கிறார்கள் என்பதற்காக என்னைப் புறக்கணித்து விட்டீர்கள். நல்லது, அப்படியே ஆகட்டும். சகோதரர்களை மதித்து அன்பு செலுத்துவது போல, நாட்டு மக்களையும் மதித்து அன்பு பாராட்டுகிறீர்கள். அவர்களிடம் தங்கள் பெயரைக் காத்துக்கொள்வதற்காக என்னைத் தியாகம் செய்ய வேண்டியதுதான் என்றால் அப்படியே செய்துவிடுங்கள். இந்த உடல் எனக்கு ஒரு பொருட்டல்ல. ஒரு ஸ்திரீக்குப் பதிதான் குரு, தெய்வம் எல்லாம். அவருக்குப் பணிவிடை புரிவது தான் என் கடமை. அதைச் செய்வதில் அவசியமானால் என் உயிரையே கொடுப்பேன்' என்று நான் சொன்னதாக அவரிடம் சொல்லு. லக்ஷ்மணா! என்னை நன்றாகப் பார். நான் கர்ப்பவதி என்று தெரிந்துகொள். ராமருக்கு இது தெரியும். நீயும் உன் கண்ணாலேயே என் நிலைமையைப் பார்த்துத் தெரிந்துகொள்வது நல்லது'' என்கிறாள்.

கடைசியாக, மற்றொரு சோக கட்டத்தைப் பார்ப்போம். அது முந்திய கட்டங்களையெல்லாம் தோற்கடிக்கக் கூடியது; நம் அநுபவம், கற்பனை யாவற்றிற்கும் மேலே போய், நம்மைப் பேச்சற்றவர்களாகச் செய்கிறது. நாம் இந்த உலகத்தில் இல்லையோ என்று பிரமிப்படையச் செய்யக் கூடியது. அயோத்தியில் குச லவர்களைக் கண்டதும் ராமர் சீதையைப் பார்க்க விரும்பவே, அவர் முன்னிலையில் வால்மீகியே சீதையை அழைத்து வருகிறார். தான் களங்கமற்றவள் என்று சீதையை ஆணையிட்டுக் கூறும்படி ராமர் கேட்கிறார். சிற்றரசர், மந்திரிகள், பிரதானிகள், நாட்டு மக்கள் ஏனையோர் முன்னிலையில், தான் களங்கமற்றவள் என்று ஆணையிட்டுக் கூறிய பிறகே அவளைச் சேர்த்துக்கொள்வதாகக் கூறுகிறார். ஆசிரம வாசத்துக்கு ஏற்றபடி சீதை காஷாய வஸ்திரம் அணிந்திருக்கிறாள். விதி கடைசி வரையிலும் அவளைப் பிடித்து ஆட்டுகிறது. மீண்டும் ஒரு முறை தான் ஒழுக்கம் தவறாதவள் என்று அவள் ஆணையிட்டுச் சொல்ல

வேண்டுமா? மனமுடைந்து போய், தலைகுனிந்த வண்ணம் அவள் பின்வருமாறு கூறுகிறாள்:—

यथाहं राघवादन्यं मनसापि न चिन्तये ।
तथा मे माधवी देवी विवरं दातुमर्हति ॥
मनसा कर्मणा वाचा यथा रामं समर्चये ।
तथा मे माधवी देवी विवरं दातुमर्हति ॥
यथैतत् सत्यमुक्तं मे वेद्मि रामात् परं न च ।
तथा मे माधवी देवी विवरं दातुमर्हति ॥
तथा शपन्त्यां वैदेह्यां प्रादुरासीत्तदद्भुतम् ।
भूतलादुत्थितं दिव्यं सिंहासनमनुत्तमम् ॥
ध्रियमाणं शिरोभिस्तु नागैरमितविक्रमैः ।
दिव्यं दिव्येन वपुषा दिव्यरत्नविभूषितैः ॥
तस्मिंस्तु धरणी देवी बाहुभ्यां गृह्य मैथिलीम् ।
स्वागतेनाभिनन्द्यैनामासने चोपवेशयत् ।
तामासनगतां दृष्ट्वा प्रविशन्तीं रसातलम् ॥
पुष्पवृष्टिरविच्छिन्ना दिव्या सीतामवाकिरत् ॥ VII. 97. 15-21.

"ராமரை விட்டு என் உள்ளம் ஒருபோதும் அப்பால் சென்றதில்லை என்பது உண்மையானால், பூமித்தாய் எனக்குப் புகலிடம் அளிக்கட்டும். எங்கிருந்து வந்தேனோ அங்கேயே திரும்பிப் போய்விடுகிறேன். இனி எனக்கு இங்கு இடமில்லை. என் ஒழுக்கத்தில் ஒருபோதும் நம்பிக்கை இல்லாத கணவருக்கும் மக்களுக்கும் இனி எவ்வண்ணம் நம்பிக்கையை உண்டுபண்ணுவது?" என்று கூறி, அவள் தன்னை அழைத்துக்கொள்ளும்படி பூமிதேவியைப் பிரார்த்தித்ததுமே, பூமி பிளந்து, ஐந்துதலை நாகம் தாங்கியதும் தங்கமும் வைரங்களும் இழைத்ததுமான சிம்மாசனம் ஒன்று வெளிவருகிறது. அதில் வீற்றிருந்த பூதேவி, "மகளே! நீ பட்ட துன்பங்கள் போதும். என்னிடம் வந்துவிடு" என்று அவளை அழைக்கிறாள்.

மாசற்ற கற்பரசி சீதாதேவியை இந்தப் பூவுலகம் அறிந்து போற்றவில்லை என்றாலும் பரலோகத்தில் அவளுக்கு உரிய புகழ் கிட்டியது அல்லவா? நெறிதவறாத அவளது அருங்கற்பு நிலையைச் சுவர்க்கலோகமே பூமாரி பெய்து கொண்டாடுகிறது. அவளது களங்கம் நீங்கியது எனினும், இரக்கமற்ற ராமருக்கோ, மீண்டும் மீண்டும் மெய்ப்பித்துக் காட்டியும் அவளது ஒழுக்கத்தைச்

சந்தேகிக்கும் மக்களுக்கோ அவள்மீது படிந்த மாசு நீங்கிய பாடில்லை. ராமரைப்பற்றி ஒரு வார்த்தை: புருஷசிரேஷ்டரான அவரைப்பற்றித் தப்பபிப்பிராயம் கொள்ளவேண்டும் என்பது என் விருப்பமல்ல. அவர் அவ்வாறு நடந்ததற்குக் காரணம் இருக்கிறது. ராமர் சாதாரண மனிதரல்ல. நம் அனைவரையும் போல் அவருக்கும் அநேகச் சில்லறைச் சபலங்கள் பலவீனங்கள் இருந்தபோதிலும் மானிடர்களுக்கு அரிய எவ்வளவோ உயர்குணங்களும் இருக்கின்றன. 'மனைவி மாசற்றவள் என்று சந்தேகமறத் தெரிந்தபோதிலும் ஏன் அவளிடம் அப்படிக் கொடுமையாக அவர் நடந்து கொண்டார்?' என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? ஏற்கனவே அதற்கு ஏதோ சமாதானம் கூறியிருக்கிறேன். ஆயினும் மற்றொரு முறையும் அதை எடுத்துக் கூறிப் பார்ப்போம்.

ராமர் அவதார புருஷர். அற்ப அறிவுள்ள மனிதர்கள் அவருடைய நடத்தையைப் புரிந்துகொண்டு அதைப் போற்றிக் கொண்டாடத் திறமையற்றவர்கள். ஆயினும் ஏதோ ஒருவிதமாக விளக்கம் கூறிப் பார்க்கலாம். வால்மீகி கூறியதற்குமேல் ஒன்றும் சொல்ல முடியாது; ராமருடைய குணத்தைப்பற்றி அவர் மீண்டும் மீண்டும் வற்புறுத்திக் கூறியதை வைத்துக்கொண்டே பார்ப்போம். ராமரின் உண்மையான இயல்பைத் தசரதர் அறியவில்லை. லக்ஷ்மணனோ பரதனோ அல்லது நாட்டு மக்களோ யாரும் அறிந்து கொண்டதாகத் தெரியவில்லை. சுமித்திரையும் சீதையும் ஒருகால் அறிந்திருக்கலாம் என்று தோன்றுகிறது. மனிதன் எவ்வளவு உயர்நிலையை அடைய முடியும் என்பதையே அவர் காட்ட முயன்றிருக்கிறார். தாம் செய்த ஒரு பிரதிக்ஞையை நிறைவேற்ற வேண்டும் என்பது அவர் கருத்து. அதற்காக எந்தத் தியாகத்தையும் செய்யத் தயங்கலாகாது. அதை அவர் காலத்தில் இருந்தவர் எவரும் அறிந்துகொள்ளவில்லை. அது ராமருக்கு வாய்த்த துரதிருஷ்டம் என்று கூறலாம். தந்தை, தாய், சகோதரர்கள், பிரஜைகள், வசிஷ்டர் உட்பட அவரைத் தடுத்தபோதிலும், சிலாகித்துப் பேசியபோதிலும், அவர்கள் அனைவரையும் எதிர்த்து உறுதியோடு நின்றது அவருக்கு எத்தகைய பெருமையைத் தருகிறது! எவ்வளவு கஷ்டமாக இருந்தபோதிலும் கடமை பெரிதல்லவா? தர்மத்தை அநுசரிப்பதில் எந்தத் தியாகத்தையும் செய்யப் பின்வாங்காதிருந்ததுதான் ராமருடைய மேன்மை.

தர்மத்துக்கு அநேக உருவங்கள் உண்டு. ஒரு சமயம் அது அவர் தந்தையின் பிரதிக்ஞையாக உருவெடுக்கிறது. ஒரு சமயம் அவர் குலகௌரவமாகத் திகழ்கிறது. மற்றொரு சமயம் பகைவனைத் தண்டிக்கும் கடமையுருவத்தில் வெளியாகிறது. எப்படியோ, தம்முடைய தர்மம் எதுவோ அதைக் காப்பாற்றுவதில் எந்தத்

தியாகத்தையும் செய்ய அவர் பின்வாங்கவில்லை. மனைவியைத் துறக்க வேண்டுமா? சகோதரனை இழக்க வேண்டுமா?. அல்லது உயிரையே தியாகம் செய்ய வேண்டுமா? எதுவாயினும் சரி, தர்மத்தைப் பின்பற்றுவதில் இவற்றுள் எதுவுமே பொருட்டல்ல. வேறு விதமாக அவர் நடக்க முடியாது. இத்தகைய கடுமையான விதிகளைச் சாதாரண மனிதர்களான நம்மால் அறிய இயலாது. இதுதான் ராமரின் சாசுவதமான பெருமை. அனைவரும் தவறாக நினைத்தபோதிலும், பெண்மைக்கே ஓர் எடுத்துக்காட்டாக விளங்கும் மனைவி சீதையையே கொடுமையாக நடத்திய இரக்கமற்ற கணவன் என்று இருந்தபோதிலும், தர்மம் என்பது ஒன்றையே அவர் வாழ்வின் லக்ஷ்யமாக மதித்து உறுதியுடன் நின்றவர். அவரது மேன்மைக் குணத்தை அறியாமல், 'அவ்வளவு கடுமையாக நடந்திருக்க வேண்டாம்' என்று நினைப்பவர்கள் நினைத்துவிட்டுப் போகட்டும். நாம் அவரைத் தவறாக நினைக்கலாகாது. சீதையின் சோக நிலைமையைக் குறித்து எவ்வளவு வருந்தியபோதிலும், அவரை மட்டும் நாம் குறைகூறுவது சரியல்ல.

# 28

## கைகேயிக்கு ஆனந்தம்

தவருன வழியில் கிடைத்த செல்வாக்கைத் தவருன காரியங்களுக்குப் பயன்படுத்தியவள் கைகேயி. அவள் செய்த காரியம் அவளது பெயருக்கே அழியாத கறையைப் படியச் செய்துவிட்டது. கைகேயியை ஒரு தீய பாத்திரமாகத்தான் வால்மீகி படைத்துவிட்டார் என்பதில் ஐயமில்லை. அவள் நல்ல சாமர்த்தியமுள்ளவள் தான். ஆனால் அவள் அதையெல்லாம் தனக்கே பயன்படுத்திக் கொண்டுவிடுகிருள். எல்லோரையும் தனக்குக் கீழ்ப்படியச் செய்வதுதான் அவளது இயல்பு. அவள் அதிகாரத்தில் ஆசையுள்ளவள். அவளுடைய நிழலில் வந்தவர்கள் அதைப்பற்றிப் பின்பு வருந்த வேண்டியவர்களாவார்கள். இவையெல்லாம் இருந்தும், அவள் சாதாரண ஸ்திரீ அல்ல என்பது தெளிவாகத் தெரிகிறது. அவள் பொருமைக்குணம் படைத்தவள், இரக்கமற்றவள், பொய் சொல்ல அஞ்சாதவள்; தன் செயல் கணவனுடைய மரணத்துக்குக் காரணமாகும் என்று தெரிந்துங்கூட அவள் சற்றும் அதைச் செய்ய யோசிக்கவில்லை.

இவ்வளவு கெடுதல்களிலும் ஒரே ஒரு நல்ல அம்சம் தோன்றுகிறது; அது என்ன என்ருல், ராமரிடம் அவள் முதலில் கொண்டிருந்த அன்பு. ராமரையும் தன்னிடம் அன்புகொள்ளும்படிச் செய்திருக்கிருள். எது காரணம், எது முடிவு என்பது தெளிவாகத் தெரியவில்லை. ராமருடைய உயர்குணங்களை உண்மையாகவே அறிந்து மனமாரப் போற்றியவள் என்ற சிறப்பை அவளுக்கு அளிக்காமல் இருக்க முடியாது. சொந்தத் தாயான கௌசல்யையைப் போலவே கைகேயியையும் கருதினுர் ராமர் என்றுதான் ராமாயணம் கூறுகிறது. அது மட்டுமல்ல, சொந்த மகனை பரதனைக்காட்டிலும் ராமரே அவளிடம் அதிக அன்பு செலுத்தி உபசரித்தார் என்று ராமாயணத்தில் அங்கங்கே திட்டமாகக் கூறப்பட்டிருக்கிறது.

சுமந்திரனுக்குக் கைகேயியின் மேல் மிகவும் ஆத்திரம். அவளுடைய தாயின் பிறப்பையும் குணத்தையும்பற்றி அவன் ஒரு

வரலாறு கூறுகிறுன். அக்காலத்தில் வழங்கிய ஒரு பழமொழியுடன் அவன் தொடங்குகிறுன். ''ஆண்கள் தந்தையின் குணத்தையும் பெண்கள் தாயின் குணத்தையும் கொள்ளுகிறுர்கள் என்று சொல்வது முழுக்க முழுக்க உண்மை'' என்று,சீதையின் விஷயத்தில் அவள் கொடூரம் உச்ச நிலையை அடைந்திருப்பதைக் கண்டதும் பொறுக்காமல், அவன் அந்த வரலாற்றைச் சுருக்கமாகக் கூறு கிறுன். கைகேயியின் தாயான அசுவபதியின் மனைவி துஷ்டகுண முள்ளவள். ஒரு யோகியிடமிருந்து மிருகங்களின் மொழியை அறிந்துகொள்ளும் ஆற்றலை அசுவபதி பெற்றிருந்தான். ஒரு சமயம் அவன் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தபொழுது அவன் கட்டிலிலுள்ள இரண்டு எறும்புகள் பேசிக்கொண் டிருந்ததைக் கேட்டு, அவன் வாய்விட்டுச் சிரித்துவிட்டான். பக்கத்தில் இருந்த அவன் மனைவி, தன் ஆவலை அடக்க முடியாமல், அவன் எதற்காகச் சிரித்தான் என்று கேட்க, அதைத் தான் கூறமுடியாது என்று அவன் மறுத்தான். ''அதைச் சொல்லித்தான் ஆகவேண்டும்'' என்று அவள் கூற, அவன் 'முடியாது' என்று மீண்டும் மறுத்தான். ''அது இன்னதென்று சொல்லாவிட்டால் நீங்கள் என்னை நினைத்துத் தான் சிரித்தீர்கள் என்று நான் எண்ணிக்கொள்வேன்'' என்று அவள் பயமுறுத்தினுள். ''உன்னை நினைத்து நான் சிரிக்கவில்லை. எப்படி வேண்டுமானுலும் நீ அதற்கு அர்த்தம் கற்பித்துக்கொள். அது என்னவென்று கூறினுல் அந்த நிமிஷமே நான் உயிரிழந்து விடுவேன்'' என்று அதற்குப் பதில் கிடைத்தது. ''நீங்கள் உயிரோடு இருந்தாலும் சரி, அல்லது உயிரிழந்தாலும் சரி, எனக்கு அக்கறை இல்லை. நீங்கள் சிரித்தது எதற்காக என்று மட்டும் எனக்குச் சொல்லித்தான் ஆகவேண்டும். நீங்கள் சொல்லா விட்டால் உங்கள் முன்னுல் என் உயிரை மாய்த்துக்கொள்வேன்'' என்று அவள் உறுதியாகக் கூறியதும், அவன் தனக்கு அதை உபதேசித்த குருவினிடம் சென்று கேட்க, குரு, ''அவள் உயிரை விட்டாலும் நீ அதை வெளியே கூறலாகாது'' என்கிறுர். அரசன் உடனே மனைவியைத் தள்ளிவிடுகிறுன். பின்பு அவன் வேறு விவாகமும் செய்துகொள்ளவில்லை என்று தெரிகிறது. ஒரு மனைவியே அவனுக்குப் போதும் என்று ஆகிவிட்டது.

இந்த வரலாற்றைக் கூறிவிட்டுச் சுமந்திரன், ''அம்மணி! நீங்களும் உங்கள் அன்னையைப் போலவே இருக்கிறீர்கள். அவளைப் போலவே நடந்து, பின்பு வைதவ்யம் ஏற்படும் துர்ப்பாக்கிய நிலைமையை வரவழைத்துக் கொள்ளாதீர்கள்'' என்கிறுன். அவன் கூறியபடியே அவளும் செய்கிறுள். தான் சென்ற தவருன வழியை அவள் மாற்றவே இல்லை. தம் தாயைப்பற்றி அவன் கூறிய கதை தனக்கு முற்றும் பொருந்துகிறது என்பதை அவள் காட்டி விடுகிருள். தான் கூறிய கதை அவள் மனத்தை மாற்றிவிடும் என்று

சுமந்திரன் ஆவலாக எதிர்பார்த்தான் என்கிறார் கவி. அவன் கூறி முடித்த பிறகு அவள் முகத்தில் ஒரு மாறுதலும் தோன்றவில்லை. எவ்வளவு கல்நெஞ்சத்தோடு தன் விருப்பத்தைத் தெரிவித்தாளோ அதுபோலவேதான் சுமந்திரன் கூறியதைக் கேட்டபிறகும் சலன மற்று அவள் முகம் விளங்குகிறது. ஆம், ராமாயணம் இவ்வளவு விரிவாக ஆனதற்குக் கைகேயியே காரணம்; அத்தனை துன்பங்களுக் கும் அவளே ஆதாரம் அல்லவா?

தன் சக்களத்தியான கௌசல்யையின் விஷயத்தில் அவள் எப்படி நடந்துகொண்டாள் என்பதைப் பார்ப்போம். கணவரான தசரதரிடம் தனக்கு இருந்த செல்வாக்கைக் கொண்டு, மற்றவர் களை அவள் எவ்வளவு சிறுமைப்படுத்தினாள் என்பது உலகறிந்த விஷயம் அல்லவா? மந்தரையே பின்வருமாறு கூறுகிறாள்:—

दर्पान्निराकृता पूर्वं त्वया सौभाग्यवत्तया ।
राममाता सपत्नी ते कथं वैरं न यातयेत् । II. 8. 37.

''ராமர் இளவரசராகிவிட்டால் அப்புறம் கௌசல்யை மிக்க செல்வாக்குள்ளவளாகிவிடுவாள். உன் சௌபாக்கியத்தில் இறுமாந்துபோய் நீ அவளைப் படுத்திய பாடெல்லாம் உனக்கு ஞாபகமில்லையா? அதற்கு வட்டியும் முதலுமாக உனக்கு அவள் பதில் செய்யாமலிருப்பாளா?'' என்று மந்தரை கேட்கிறாள். கைகேயி தனக்கு வேண்டிய வரங்களைக் கேட்டபொழுது தசரதரும் என்ன கூறுகிறார்?

किं मां वक्ष्यति कौसल्या राघवे वनमास्थिते ।
किं चैनां प्रतिवक्ष्यामि कृत्वा विप्रियमीदृशम् ॥
यदा यदा हि कौसल्या दासीवच्च सखीव च ।
भार्यावद्भगिनीवच्च मातृवच्चोपतिष्ठति ॥
संततं प्रियकामा मे प्रियपुत्रा प्रियंवदा ।
न मया सत्कृता देवी सत्कारार्हा कृते तव ॥
इदानीं तत्तपति मां यन्मया सुकृतं त्वयि । II. 12. 67-70.

"ராமனைக் காட்டுக்கு அனுப்பிவிட்டுக் கௌசல்யைக்கு என்ன பதில் சொல்வேன்? அவளுக்கு இத்தகைய பெருந்தீங்கு செய்த என்னிடம் அவள்தான் எப்படிப் பேசுவாள்? எப்பொழுதும் அவள் என்னிடம் அன்புடனேயே நடந்துகொண்டிருக்கிறாள். இன்னமும் அப்படியேதான் இருக்கிறாள். மனைவி, தாய், சகோதரி, தோழி, பணிப்பெண்—இப்படி எல்லா விதமாகவும் அவள் இருக் கிறாள். இப்படி அவள் ஒரே அன்புடன் நடந்துகொண்டிருக்க,

உனக்காக அல்லவா என் மதிப்புக்கும் பிரியத்துக்கும் பாத்திரமாக இருக்கும் அவளிடம் நான் சரியாக நடந்துகொள்ளாமலிருக்கிறேன்? அவளது குணத்துக்கும் பதவிக்கும் நான் தக்க மரியாதை காட்டவில்லை. அவளுக்குத் தவறிழைத்துவிட்டு உன்னிடம் அன்பாக இருந்திருக்கிறேன். இவ்விரண்டும் என் உள்ளத்தைத் துன்புறுத்துகின்றன.''

सुमित्रा प्रेक्ष्य वै भीता कथं मे विश्वसिष्यति । II. 12. 72.

'ப்ரேக்ஷ்ய வை பீதா' என்ற சொற்கள் வேண்டுமென்றே அமைந்திருக்கின்றன என்று தோன்றுகிறது. கௌசல்யையைக் காட்டிலும் சுமித்திரை இன்னும் அடக்கமானவள்; அறிவு மிகுந்தவள். மொத்தத்தில் அதிக மனப்பக்குவம் பெற்றவள் என்றும் கூறலாம். ''சுமித்திரைக்கு என்ன விடை கூறுவேன்? அமைதியுடன் கூடிய அவள் முகத்தை எப்படிப் பார்ப்பேன்?'' என்கிறார் தசரதர்.

தந்தையும் சிற்றன்னை கைகேயியும் தனக்கு இட்ட கடும் கட்டளையைக் கௌசல்யையிடம் சென்று ராமர் கூறியபொழுது அவள் சொல்லுகிறாள்:—

यदि पुत्र न जायेथा मम शोकाय राघव ।
न स्म दुःखमतो भूयः पश्येयमहमप्रजाः ॥ II. 20. 36.

''அந்தோ! நீ எதற்காகப் பிறந்தாய்? நீ பிறக்காமலிருந்திருந்தால் மலடி என்ற ஒரே துக்கத்தோடு போயிருக்குமே!''

एक एव हि वन्ध्यायाः शोको भवति मानसः ।

''மலடிக்கு ஒரே ஒரு துக்கம்தான்.''

अप्रजास्मीति संतापो न ह्यन्यः पुत्र विद्यते । II. 20. 37.

''அவளுக்கு வேறு ஒரு கஷ்டமுமில்லை. புருஷசிரேஷ்டனை உன்னைப் புத்திரனாக அடைந்ததன் பயனைப் பார்!''

न दृष्टपूर्वं कल्याणं सुखं वा पतिपौरुषे ।

''பூவுலகிலுள்ள மன்னர்சிரேஷ்டனை மணந்தேன். ஆனால் அதனால் நான் கண்ட பலன் என்ன? ஒரு சந்தோஷத்தையும் நான் அநுபவிக்கவில்லையே! பராக்கிரமசாலியும் நிகரற்ற மேன்மையும் பொருந்திய மன்னர் என்று இருந்தும், எனக்கு அதனால் ஒரு பெருமையும் ஏற்படவில்லை.''

अपि पुत्रे तु पश्येयमिति रामास्थितं मया ॥ II. 20. 38.

"நீ பெரியவனுன பிறகு என் குறைகள் எல்லாம் தீர்ந்து சந்தோஷமாக இருப்பேன் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்."

सा बहून्यमनोज्ञानि वाक्यानि हृदयच्छिदाम् ।
अहं श्रोष्ये सपत्नीनामवराणां वरा सती ॥ II. 20. 39.

"இனி என்னைக் காட்டிலும் துரதிருஷ்டம் பிடித்தவர்கள் உலகில் யார் இருப்பார்கள்? இனி என் கதி என்ன? கேட்கத்தகாத வார்த்தைகளையெல்லாம் கேட்கும்படியாகுமே!"

अतो दुःखतरं किं नु प्रमदानां भविष्यति ।
मम शोको विलापश्च यादृशोऽयमनन्तकः ॥ II. 20. 40.

"இனி என் துன்பத்துக்கும் அழுகைக்கும் முடிவு ஏது? மகன் பிறந்துவிட்டால் அந்த ஸ்திரீயை மகா பாக்கியசாலி என்று கூறுவார்கள். அந்த மகனை அவள் இழந்துவிட்டால் பிள்ளை இல்லாதபொழுது அவள் அநுபவித்த எல்லாத் துர்ப்பாக்கியங்களும் இரண்டு மடங்காக அன்றோ பெருகிவிடும்!"

त्वयि सन्निहितेऽप्येवमहमासं निराकृता ।
किं पुनः प्रोषिते तात ध्रुवं मरणमेव मे ॥ II. 20. 41.

"தந்தையின் அன்புக்கும் மதிப்புக்கும் உரியவனாக உலகமெங்கும் போற்றிக் கொண்டாடப்பெறும் நீ என் அருகில் இருக்கும்பொழுதே என் கதி இப்படி இருக்கிறது. நீ போய் விட்டால் அப்புறம் என் நிலைமை என்ன ஆகும்? மரணம்தான் இனி எனக்குக் கதி."

अत्यन्तं निगृहीतास्मि भर्तुर्नित्यमतन्त्रिता ।
परिवारेण कैकेय्याः समा वाप्यथवावरा ॥ II. 20. 42.

"என் நாதனிடமிருந்து எனக்கு உரிய மதிப்பை நான் பெறவில்லை. கைகேயியின் பணிப் பெண்களிலும் தாழ்ந்தவளாகவே நான் கருதப்படுகிறேன்."

नित्यक्रोधतया तस्याः कथं नु खरवादि तत् ।
कैकेय्या वदनं द्रष्टुं पुत्र शक्ष्यामि दुर्गता ॥ II. 20. 44.

"நீ நாட்டை விட்டுப் போய்விட்டால் அப்புறம் அந்தக் கைகேயியின் முகத்தை எப்படிப் பார்ப்பேன்? எப்பொழுதும் அவள் கடுமையான மொழிகளைத்தான் பேசுவாள்."

दश सप्त च वर्षाणि तव जातस्य राघव ।

மேற்கண்ட சுலோகத்தில், ராமருக்கு வயது பதினேழு என்று கூறப்பட்டிருக்கிறது. அதைப்பற்றிச் சர்ச்சை உண்டு. பதினேழு என்று இருக்க முடியாது; அது தவறு என்று நினைத்துச் சிலர் அவருக்கு உபநயனம் ஆன வயதைப் பதினேழுடன் சேர்த்துக் கொள்ளவேண்டும் என்று கூறுகிறார்கள். அப்படிப் பார்த்தால் அவருக்கு வயது 27 அல்லது 28 என்று ஆகும்.

கௌசல்யை மேலும் கூறுகிறாள்:—"என் கஷ்டங்களுக் கெல்லாம் ஒரு முடிவு வரும் என்று இவ்வளவு காலமாக எதிர் பார்த்திருந்தேன்."

आसितानि प्रकाङ्क्षन्त्या मया दुःखपरिक्षयम् ॥ II. 20. 45.

"நெடுங்காலம் துயரங்களையே அநுபவித்தாகிவிட்டது. இனி என்னால் பொறுக்க முடியாது. பாக்கியமற்றவளாகவே வாழ்நாள் முழுவதும் கழிக்கப்போகிறேன்."

अपश्यन्ती तव मुखं परिपूर्णशशिप्रभम् ।
कृपणा वर्तयिष्यामि कथं कृपणजीविकाम् ॥ II. 20. 47.

மகன் திருப்திகரமாக நடக்கவில்லை என்றாலும் பெரும்பாலும் தாய் இவ்வாறு கூறுவதுண்டு: "உன்னைப் பெற்று வளர்ப்பதற்கு எவ்வளவு பாடு பட்டேன்! சரியான ஆகாரமில்லாமல் பட்டினி கிடந்திருக்கிறேன். சரீரச் சிரமப்பட்டிருக்கிறேன். அவ்வளவும் நிஷ்பலமாயிற்றே!" என்பாள்.

उपवासैश्च योगैश्च बहुभिश्च परिश्रमैः ।
दुःखं संवर्धितो मोघं त्वं हि दुर्गतया मया ॥ II. 20. 48.

அயோத்தியில் நடந்தவற்றில் எதையும் அறியுமுன்னமே பரதன் தாயைப்பற்றிக் கூறியதை ஏற்கனவே குறிப்பிட்டிருக் கிறேன். கேகய நாட்டுக்குப் போவதற்கு முன்பே கைகேயியின் குணத்தை அறிந்து அவன் கூறுவதைப் பாருங்கள்:—

आत्मकामा सदा चण्डी क्रोधना प्राज्ञमानिनी ॥ II. 70. 10.

அவனை அழைத்து வரும்படி வசிஷ்டர் அனுப்பிய தூதர் களிடம் மேற்கண்டவாறு அவன் கைகேயியைப்பற்றிக் கூறுகிறான். 'ராமர் எதனால் காட்டுக்குப் போக நேர்ந்தது?' என்று அவன் தன் தாயிடம் விசாரிக்கும்பொழுது சொல்லுகிறான்:—

तथा ज्येष्ठा हि मे माता कौसल्या दीर्घदर्शिनी ।
त्वयि धर्मं समास्थाय भगिन्यामिव वर्तते ॥ II. 73. 10.

"என் பெரிய அன்னை கௌசல்யை தீர்க்கதர்சினியாகையால், நீ எப்படி நடந்துகொண்ட போதிலும் உன்னைத் தன் தங்கை

போலவே பாவிக்கிறாள். அவள் இங்கிதமறிந்தவள்; உசிதப்படி நடப்பவள்; செய்த கெடுதல்களுக்குப் பதில் செய்பவள் அல்ல."

तस्याः पुत्रं कृतात्मानं चीरवल्कलवाससम् ।
प्रस्थाप्य वनवासाय कथं पापे न शोचसि ॥ II. 73. 11.

"அப்படிப்பட்டவளுடைய மகனை மரவுரியுடுக்கச் செய்து காட்டுக்கு அனுப்பிவிட்டு, நீ எப்படி வருந்தாமலிருக்கிறாய் என்று ஆச்சரியமாக இருக்கிறது!" என்கிறான்.

தசரதரிடம் கைகேயிக்கு உள்ள செல்வாக்கைப் பார்ப்போம். அவரைத் தனக்கு உட்படச் செய்ய அவளுக்கு இருக்கும் சக்தி என்ன?

दयिता त्वं सदा भर्तुरत्र मे नास्ति संशयः ।
त्वत्कृते स महाराजो विशेदपि हुताशनम् ॥ II. 9. 24.

"அரசருடைய அன்புக்கு உரிய மனைவி நீ. அதைப்பற்றி யாருக்கும் சந்தேகம் கிடையாது. நீ கட்டளையிட்டால் அவர் நெருப்பில்கூட விழுந்துவிடுவாரே? நீ அப்படியல்லவா ஆட்சி புரிகிறாய்?" என்று மந்தரை அவளிடம் சொல்லுகிறாள்.

न त्वां क्रोधयितुं शक्तो न क्रुद्धां प्रत्युदीक्षितुम् ।
तव प्रियार्थं राजा हि प्राणानपि परित्यजेत् ॥ II. 9. 25.

"உனக்குக் கோபமுண்டாக்க மன்னர் துணியமாட்டார்; அதைத் தாங்கவும் மாட்டார். உன் திருப்திக்காகத் தம் உயிரையும் கொடுத்துவிடுவார்."

न ह्यतिक्रमितुं शक्तस्तव वाक्यं महीपतिः ।
मन्दस्वभावे बुद्ध्यस्व सौभाग्यबलमात्मनः ॥ II. 9. 26.

"நீ அதிருஷ்டசாலி. உன் அதிருஷ்டத்தையெல்லாம் மேலும் உன் நலத்துக்கே பயன்படுத்திக்கொள்" என்கிறாள்.

'க்ரோதாகார'த்துக்கு வந்து அங்கு அலங்கோலமாகக் கைகேயி படுத்திருப்பதைக் கண்ணுற்ற தசரதரே, "ஏன்? என்ன சமாசாரம்? என்னிடம் உனக்கு உள்ள சக்தி உனக்குத் தெரியாதா? எது வேண்டுமானாலும் நீ கேட்டால் கிடைக்குமே! உனக்கு நான் எதையுமே மறுத்ததில்லையே! ஏன் இப்பொழுது இந்தக் கோலம்?" என்று கேட்கிறார். அது மட்டுமல்ல; தசரதருடைய நீதிநெறியைப் பாருங்கள் :—

कः प्रियं लभतामद्य को वा सुमहदप्रियम् ॥ II. 10. 32.

''யாரை நான் இப்பொழுதே தொலைக்க வேண்டும்? சொல், எந்த நல்ல மனிதனுக்குக் கெடுதல் செய்ய வேண்டும்? எந்தக் கெட்டவனை உயர்த்த வேண்டும்? சொல். இரண்டையும் உடனே செய்துவிடுகிறேன்'' என்கிறார்.

मा रोदीर्मा च कार्षीस्त्वं देवि संपरिशोषणम् ॥ II. 10. 32.

''அன்பே! கஷ்டப்படாதே! கண்ணீர் விடாதே!''

अवध्यो वध्यतां को वा वध्यः को वा विमुच्यताम् ।

''மரண தண்டனைக்கு உரியவனான எவனை விடுதலை செய்ய வேண்டும்? குற்றமற்றவனான எவனைத் தூக்கிலிட வேண்டும்? சொல்; உடனே உத்தரவிடுகிறேன்'' என்கிறார்.

दरिद्रः को भवत्वाढ्यो द्रव्यवान् वाप्यकिंचनः ॥ II. 10. 33.

''யாரைத் தரித்திரனாக அடிக்க வேண்டும்? எந்த ஏழையைப் பணக்காரனாக்க வேண்டும்?''

अहं चैव मदीयाश्च सर्वे तव वशानुगाः ।

'' நான் மட்டுமல்ல; என்னைச் சேர்ந்தவர்கள் யாவருமே உன் அடிமைகள்.''

न ते किंचिदभिप्रायं व्याहन्तुमहमुत्सहे ॥ II. 10. 34.

''உனது சிறு விருப்பமும் எனக்குப் பெரிய ஆணையாகும். அதை ஒரு நாளும் மீறி நடக்கமாட்டேன்.''

आत्मनो जीवितेनापि ब्रूहि यन्मनसेच्छसि ।
बलमात्मनि जानन्ती न मां शङ्कितुमर्हसि ॥ II. 10. 35.

''என்மீது உனக்கு இவ்வளவு சக்தி இருக்கும்பொழுது, உன் உத்தரவின்படி நடப்பேனா என்பதைப்பற்றி எதற்குச் சந்தேகப் படுகிறாய்? என் உயிரைக் கொடுத்தாவது உன் விருப்பத்தை நிறைவேற்றுவேன்'' என்கிறார்.

अवलिप्ते न जानासि त्वत्तः प्रियतरो मम ।
मनुजो मनुजव्याघ्राद्रामादन्यो न विद्यते ॥ II. 11. 5.

அவர் மேலும் தொடர்ந்து, ''உன் மீது எனக்கு இணையற்ற அன்புதான்; எனினும் உன்னைக்காட்டிலும் அதிகம் என் அன்புக்குப் பாத்திரமாக உள்ளவன் ஒருவன் இருக்கிறான்.

तेनाजय्येन मुख्येन राघवेण महात्मना ।
शपे ते जीवनार्हेण ब्रूहि यन्मनसेच्छसि ॥ II. 11. 6.

"உன் மனத்துக்கு என்ன கவலை? அதை என்னிடம் சொல். உன்னைக்காட்டிலும் உலகிலுள்ளோர் அனைவரையுங்காட்டிலும் அதிகம் என் அன்புக்கு உரியவனான ராமன்மீது ஆணையிட்டுச் சொல்லுகிறேன்'' என்கிறார். பாவம்! தாம் என்ன சொல்கிறோம் என்று அவருக்குத் தெரியவில்லை. தம் உயிரினும் மேலாக மதித்த ராமருக்கே தீங்கு நேருவதாக இருப்பதை அவர் எப்படி அறிவார்? ஆகவேதான் அந்த ராமர் மீது ஆணை என்று சொல்கிறார்.

यं मुहूर्तमपश्यंस्तु न जीवेयमहं ध्रुवम् ।
तेन रामेण कैकेयि शपे ते वचनक्रियाम् ॥
आत्मना चात्मजैश्चान्यैर्वृणे यं मनुजर्षभम् ।
तेन रामेण कैकेयि शपे ते वचनक्रियाम् ॥ II. 11. 7, 8.

"யாரை ஒரு நிமிஷம் காணாமலிருப்பதைப் பொறுக்க மாட்டேனோ, அந்த ராமனின் உயிர் மட்டுமல்ல, அவனுடைய சகோதரர்களின் உயிர்கள் மீதும் ஆணை" என்று அவர்களையும் குறிப்பிடுகிறார்.

भद्रे हृदयमप्येतदनुमृश्योद्धरस्व मे ।
एतत् समीक्ष्य कैकेयि ब्रूहि यत्साधु मन्यसे ॥
बलमात्मनि पश्यन्ती न मां शङ्कितुमर्हसि ।
करिष्यामि तव प्रीतिं सुकृतेनापि ते शपे ॥ II. 11. 9, 10.

"என் ஸர்வத்தையும் பணயமாக வைத்துச் சொல்லுகிறேன்: உன் மனத்தில் இருப்பதைச் சொல்; உடனே செய்கிறேன். உத்தரவிடுவாய்'' என்கிறார்.

தான் கேட்பது எவ்வளவு மகத்தானது, எவ்வளவு கொடியது என்பது கைகேயிக்குத் தெரியும். தசரதர் கூறியதெல்லாம் அவளுக்குப் போதவில்லை. ஆகவே அவரைத் தெய்வங்கள் சாட்சியாகப் பிரதிக்ஞை செய்யச் சொல்லுகிறாள்.

यथा क्रमेण शपसि वरं मम ददासि च ।
तच्छृण्वन्तु त्रयस्त्रिंशद्देवाः साग्निपुरोगमाः ॥ II. 11. 13.

"நீங்கள் இப்பொழுது எனக்குச் செய்து கொடுக்கும் பிரதிக்ஞையை முப்பத்துமுக்கோடி தேவர்களும் கேட்கட்டும்.''

चन्द्रादित्यौ नभश्चैव ग्रहा रात्र्यहनी दिशः ।
जगच्च पृथिवी चेयं सगन्धर्वा सराक्षसा ॥ II. 11. 14.

"சூரிய சந்திரர்கள், கிரகங்கள், ஆகாயம், இரவு, பகல், திக்குகள், கந்தர்வர்கள், ராக்ஷசர்களோடு கூடிய இந்த வையகம் முழுவதும் சாட்சியாக இருக்கட்டும்."

निशाचराणि भूतानि गृहेषु गृहदेवताः ।
यानि चान्यानि भूतानि जानीयुर्भाषितं तव ॥ II. 11. 15.

"இவர்கள் எல்லாரும் உங்கள் பிரதிக்ஞைக்குச் சாட்சி என்பது நினைவிருக்கட்டும். என்னிடம் ஏதோ சொல்லி என்னை மட்டுமே திருப்திசெய்ய வேண்டும் என்று நினைக்க வேண்டாம். மூன்று உலகங்களும் நீங்கள் எனக்கு அளித்த உறுதிமொழியைக் கேட்டிருக்கின்றன" என்கிருள்.

सत्यसन्धो महातेजा धर्मज्ञः सुसमाहितः ।
वरं मम ददात्येष तन्मे शृण्वन्तु देवताः ॥ II. 11. 16.

பேயும் தர்மசாஸ்திரம் கூறும் அல்லவா? முற்காலத்தில் கடினமான பிரதிக்ஞைகளைச் செய்து அவற்றைக் கஷ்டப்பட்டுக் காப்பாற்றிச் சுவர்க்கத்துக்குச் சென்ற மகான்களின் வரலாறுகளை வேறு, கைகேயி எடுத்துக் கூறுகிருள்; "நீங்கள் தர்மவழியில் நடந்து, செய்த பிரதிக்ஞையைக் காப்பாற்ற வேண்டும்" என்கிருள். சிபிச் சக்கரவர்த்தியின் கதை அனைவருக்கும் தெரியும் அல்லவா?

शैब्यः श्येनकपोतीये स्वमांसं पक्षिणे ददौ ।
अलर्कश्चक्षुषी दत्त्वा जगाम गतिमुत्तमाम् ॥ II. 12. 43.

அலர்க்கன் என்ற ஓர் அரசன் யார் எது கேட்டாலும் உடனே கொடுப்பதாக வாக்களிக்கிருன். வேதத்தை நன்கு அறிந்த வனான, கண்ணிழந்த ஒரு பிராம்மணன் அவனை நாடி வருகிருன். "என்ன வேண்டும்? கேளுங்கள்" என்று அரசன் கேட்க, "என் கண்களைத் தங்களுக்குக் கொடுக்கிறேன். நீங்களும் பதிலுக்கு உங்கள் கண்களை எனக்குக் கொடுங்கள்" என்று பிராம்மணன் பதில் கூறுகிருன். "நல்லது. நான் பிரதிக்ஞை செய்தாகி விட்டது" என்று சொல்லித் தன் கண்களை எடுத்து அலர்க்கன் அந்தப் பிராம்மணனுக்கு அளிக்கிருன்.

सरितां तु पतिः स्वल्पां मर्यादां सत्यमन्वितः ।
सत्यानुरोधात् समये वेलां स्वां नातिवर्तते ॥ II. 14. 6.

"கடலைப் பாருங்கள்; அது கரையை மீறுவதில்லை என்று செய்த பிரதிக்ஞையை நினைத்துக் கரையைத் தாண்டாமலே அடக்கமாக இருக்கிறது" என்கிருள் கைகேயி.

सत्यं समनुवर्तस्व यदि धर्मे धृता मतिः ।
स वरः सफलो मेऽस्तु वरदो ह्यसि सत्तम ॥ II. 14. 8.

இப்படிப் பல நிகழ்ச்சிகளை எடுத்துக் காட்டிக் கைகேயி அரசனைப் பிரதிக்கினை செய்யும்படிச் செய்கிருள். தசரதர் என்ன செய்வார், பாவம்! கெஞ்சியும் கோபித்தும் பயமுறுத்தியும் சபித்தும் பார்க்கிருர். ஒன்றும் பயனில்லை. "ஐயோ! என் பிள்ளை வெகுளிமனம் படைத்தவனுயிற்றே! நானோ இந்தச் சூதுக்காரியிடம் அகப்பட்டுக் கொண்டிருக்கிறேன். என் மகனை எப்படிக் காட்டுக்கு அனுப்புவேன்! 'நீ காட்டுக்குப் போகிருயா?' என்று அரைகுறையாய்ச் சொன்னலும் போதும்; உடனே அவன் சரி என்று புறப்பட்டுவிடுவானே! அவ்வளவு நேர்மையுள்ளவன்; சூதுவாதற்றவன். 'நல்லது, இதோ போகிறேன் அப்பா!' என்றல்லவா கூறுவான்?

नालं द्वितीयं वचनं पुत्रो मां प्रतिभाषितुम् ।
स वनं प्रव्रजेत्युक्तो बाढमित्येव वक्ष्यति ॥
यदि मे राघवः कुर्याद्वनं गच्छेति भाषितः ।
प्रतिकूलं प्रियं मे स्यान्न तु वत्सः करिष्यति ॥ II. 12. 85, 86.

"நான் காட்டுக்குப் போகச் சொல்லி அவன் கேட்காமல் மறுத்தால் எனக்குச் சந்தோஷமாக இருக்கும். ஆனல் அவன் அப்படிச் செய்ய மாட்டானே!" என்றெல்லாம் தசரதர் கூறுகிருர்.

शुद्धभावोऽपि भावं मे न तु ज्ञास्यति राघवः ।
राघवे हि वनं प्राप्ते सर्वलोकस्य धिक्कृतम् ॥ II. 12. 87.

பிறகு தசரதர் மற்றொரு விதமாகச் சொல்லிப் பார்க்கிருர்: "நான் இறந்தால் பரதன் எனக்கு ஒன்றும் செய்ய வேண்டாம். அதாவது உன் விருப்பப்படி முடி சூட்டிக்கொள்ளப் பரதன் இசைந்தால் அவன் எனக்கு இறுதிச் சடங்கு எதுவும் செய்ய வேண்டியதில்லை."

प्रियं चेद्भरतस्यैतद्रामप्रव्राजनं भवेत् ॥
मा स्म मे भरतः कार्षीत्प्रेतकृत्यं गतायुषः । II. 12. 92, 93.

இப்பொழுது ஒரு விஷயத்தைப்பற்றிச் சில சமயம் வாக்கு வாதம் ஏற்படுவதுண்டு. ஆனல் அதில் சந்தேகத்திற்கு ஒன்றும் இடமில்லை; தெளிவாகவே இருக்கிறது. ஆயினும் கவி ஒவ்வொரு சமயத்தில் ஒவ்வொரு விதமாகக் கூறுவதனல், ராமாயணத்தில் அதைப்பற்றிச் சந்தேகம் உண்டாகத்தான் செய்கிறது. அதை

ஒருவாறு தெளிவாக்க முயலுகிறேன். தசரதர் கைகேயிக்கு வரங்களை அளித்து, ராமரை ஏன் காட்டுக்கு அனுப்ப வேண்டும்? இப்படி எதிர்பாராத விதமாக, இரக்கமற்ற காரியத்தைத் தசரதர் ஏன் செய்ய வேண்டும்? அநேகம் பேர்–ஏன்! அனைவருமே–தசரதர் தம் இளமனைவியின் மோகத்தில் ஆழ்ந்து அவளிச்சைப்படி நடக்க முற்பட்டார் என்று கருதுகிறார்கள். வயதான காலத்தில் இரண்டாவதாக மணம் புரிந்துகொண்ட எவன் மனைவிக்கு அடிமையாகாதிருப்பான்? இது எல்லாருக்கும் தெரிந்ததுதான். கைகேயியோ வெகு கெட்டிக்காரி; துஷ்ட குணமுள்ளவள். தசரதரை அவள் முற்றும் தன் வசமாக்கித் தன் சொற்படியெல்லாம் கேட்கச் செய்துவிடுகிறாள். அவளது மோகவலையில் ஆழ்ந்துதான் தசரதரும் அவளிஷ்டப்படியெல்லாம் ஆடினார் என்று அனைவரும் நினைக்கிறார்கள்.

இப்பொழுது கைகேயி அவ்வளவு இளமைப் பருவத்தினள் அல்ல. எவ்வளவோ ஆண்டுகளுக்கு முன்பு கொடுத்த வரங்கள் அவை. தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் யுத்தம் நடந்தபொழுது, அவர்கள் மண்ணுலக அரசர்களின் உதவியையும் கோரினார்கள். உண்மையில் ராமாயணத்தை ஊன்றிப் பார்த்தால், தசரதர் அவளது அழகில் மயங்கவில்லை என்றே தெரிகிறது. அவளது கெட்ட குணம் தெரிந்ததும் அவள் மீதுள்ள மோகம் உடனே குறைந்துவிடுகிறது. தம்மை அவள் வசமாக்கிக் கொள்ள அவர் விடவில்லை. அவளிடம் அவருக்குப் பயமில்லை. எனினும் தவிர்க்க முடியாத பிரதிக்ஞையினால் கட்டுண்டுவிடுகிறார். அவர் இக்ஷ்வாகு குலத்தில் பிறந்தவர்; சத்தியம் தவறாதவர் என்பதனால், அவர் விலங்கிடப்பட்டவர் போல ஆகிறார். அதனின்றும் விடுபடுவதென்பது சாத்தியமில்லை.

यदा तु बहवो वृद्धा गुणवन्तो बहुश्रुताः ॥
परिप्रक्ष्यन्ति काकुत्स्थं वक्ष्यामि किमहं तदा । II. 12. 65, 66.

தம்மைப் பற்றி உலகோர் என்ன சொல்வார்கள் என்பது அவருக்குத் தெரியும். அவர் கைகேயியின் வசத்தில் இருப்பவர்; அவள் சொல்லைத் தட்டாதவர் என்பது அனைவருக்கும் தெரியும் அல்லவா? அது மிகவும் பிரசித்தமான விஷயமாக இருந்ததனால், இந்தச் சமயத்தில் தம்மைப்பற்றி மக்கள் என்ன சொல்வார்கள் என்பதை அவர் அறிவார். " 'ராமன் எங்கே? ராமன் எங்கே?' என்று மக்கள் என்னை வந்து கேட்டால் என்ன பதில் சொல்லுவேன்?" என்று வருந்துகிறார்.

कैकेय्या क्लिश्यमानेन पुत्रः प्रव्राजितो मया ॥ II. 12. 66.

''என் மனைவி கைகேயிக்கு அளித்த வாக்குறுதியினால் கட்டுப் பட்டவனாக, அதைப் பொய்யாக்கச் சக்தி இல்லாமல், ராமனைக் காட்டுக்கு அனுப்பிவிட்டேன் என்று பதில் சொல்ல வேண்டும்; அதுதான் உண்மை.''

यदि सत्यं ब्रवीम्येतत्तदसत्यं भविष्यति । II. 12. 67.

''ஆனால் அதை யாரும் நம்பமாட்டார்களே! 'கிழவன் பொய் சொல்லுகிறான்' என்றல்லவோ சொல்லுவார்கள்! இந்தக் கஷ்டத்துக்கு என்ன செய்வேன்? எல்லாரும் என்னையே குற்றம் கூறுவார்கள். இந்த நிந்தையை எவ்வாறு தவிர்ப்பது?'' என்று புலம்புகிறார். வேறு உபாயம் செய்து பார்க்க எண்ணிக் கைகேயி யிடம், ''நான் வயதானவன், நீ என் இளமனைவி என்று இருந்தும் உன் கால்களில் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரிக்கிறேன். என் இந்த வேண்டுகோளை நிறைவேற்றுவாய்'' என்கிறார்.

न जीवितं मेऽस्ति कुतः पुनः सुखं विनात्मजेनात्मवतः कुतो रतिः ।
ममाहितं देवि न कर्तुमर्हसि स्पृशामि पादावपि ते प्रसीद मे ॥
II. 12. 112.

''உன் கால்களில் என் தலையை வைத்துப் பணிகிறேன். ராமனை விட்டுவிடு'' என்று கெஞ்சுகிறார்.

स भूमिपालो विलपन्ननाथवत्स्त्रिया गृहीतो हृदयेऽतिमात्रया ।
पपात देव्याश्चरणौ प्रसारितावुभावसंस्पृश्य यथातुरस्तथा ॥
II. 12. 113.

மனைவிக்கு உரிய கடமை ஒழுக்கம் யாவற்றையும் மீறிய கைகேயியின் பிடியில் அகப்பட்ட தசரதர் அவள் கால்களில் விழுவ தாகக் கூறியும் அவள் சலிக்கவில்லை. 'எனக்குக் கிடைக்க வேண்டி யதைத்தானே நான் கேட்கிறேன்! அதில் என்ன தவறு?' என்பது அவளுடைய எண்ணம். தசரதரோ அவளுக்குக் கட்டுப்பட்டவர். கண்ணீர் பெருகிப் பார்வையை மறைத்ததனால்தான் அவள் பாதங்களைத் தொட்டு அவரால் வணங்க முடியவில்லை. இதிலிருந்து, கைகேயி எவ்வளவு தூரம் தன் மனத்தைக் கெட்ட வழியில் செல்ல விட்டிருக்கிறாள் என்பது தெரிகிறது.

एवं प्रचोदितो राजा कैकेय्या निर्विशङ्कया ।
नाशकत्पाशमुन्मोक्तुं बलिरिन्द्रकृतं यथा ॥ II. 14. 11.

பிரதிக்ஞை என்ற கயிற்றினால் பிணைக்கப்பட்டவராக, அதிலி ருந்து தம்மை விடுவித்துக்கொள்ள முடியாமல் தசரதர் தவிக்கிறார்.

धर्मबन्धेन बद्धोऽस्मि नष्टा च मम चेतना ॥ II. 14. 24.

"தர்மபாசத்தால் கட்டுண்டுவிட்டேன். என் புத்தி ஸ்தப்த மாகிவிட்டது. என்னுல் ஒன்றும் நினைக்க இயலவில்லை" என்று அவர் புலம்புகிருர். ராமரை எதனுல் காட்டுக்கு அனுப்பும்படி ஆயிற்று என்பது இப்பொழுது தெரிகிறது அல்லவா?

கைகேயியின் சரிதத்திலுள்ள மற்ருேர் அம்சத்தைப் பார்ப்போம். அவள் பொய் சொல்லத் தயங்காதவள் என்று ஏற்கனவே அறிந்திருக்கிருேம். அன்று விடியற்காலையில் சுமந்திரன் வரும்பொழுது, இரவு முழுவதும் 'ராமரைக் காட்டுக்கு அனுப்பி விட்டுப் பரதனுக்கு முடிசூட்ட வேண்டும்' என்று உறுதிமொழி அளிப்பதற்காகக் கைகேயி தசரதரை நிர்ப்பந்தித்துக்கொண் டிருந்ததனுல், சுமந்திரனுடன் அவரால் பேச முடியவில்லை. இரவு முழுவதும் தூக்கமின்மையினுலும் சோகத்தினுலும் அவர் கண் மூடிச் சோர்ந்து கிடப்பதைக் கண்ட சுமந்திரன், "ஏன்? மகாராஜா வுக்கு என்ன நேர்ந்துவிட்டது?" என்று கேட்கிருன். சுமந்திரன் நல்ல அறிவாளியாகையால் அவனுக்கு ஒருவாறு விஷயம் புலப்படு கிறது. கைகேயி அவனிடம் சொல்லுகிருள்:—

सुमन्त्र राजा रजनीं रामहर्षसमुत्सुकः ॥
प्रजागरपरिश्रान्तो निद्राया वशमेयिवान् । II. 14. 62, 63.

"ராமனுடைய அபிஷேகத்தைப் பற்றியே யோசித்துக் கொண்டு இரவு முழுவதும் விழித்திருந்ததனுல் இப்பொழுதுதான் சிறிது கண்ணயர்ந்திருக்கிருர். ஆனந்த மிகுதியினுல் அவருக்குத் தூக்கமே வரவில்லை."

तद्गच्छ त्वरितं सूत राजपुत्रं यशस्विनम् ॥
राममानय भद्रं ते नात्र कार्या विचारणा । II. 14. 63, 64.

"நீ போய் உடனே ராமனை இங்கு அழைத்துவா. யோசிக்காதே; உடனே போ!" என்று கூறுகிருள்.

அப்படியே சுமந்திரன் ராமரை அழைத்து வருகிருன். அங்கே கண்ட காட்சி தாம் எதிர்பார்த்ததற்கு நேர்மாருக இருக்கவே, "தந்தைக்கு என்ன? நீங்கள் ஏதாவது செய்தீர்களா? அல்லது நான்தான் ஏதாவது தவறு செய்துவிட்டேனு? சொல்லுங்கள்" என்று பதற்றத்துடன் ராமர் கேட்கிருர்.

न राजा कुपितो राम व्यसनं नास्य किंचन ।
किंचिन्मनोगतं त्वस्य त्वद्भयान्नाभिभाषते ॥ II. 18. 20.

"உன்னைப்பற்றி அவருக்கு ஏதோ சிறிது சந்தேகம். நீ என்ன சொல்வாயோ என்று சற்றுப் பயப்படுகிருர். அதனுல் ஏதும் பேசா மலிருக்கிருர். அவர் மனத்தில் ஏதோ எண்ணம் இருக்கிறது.

அதைச் சொல்லத் தயங்குகிருரே தவிர, உன்மீது ஒன்றும் கோபமில்லை'' என்று கைகேயி ராமனுக்குப் பதிலளிக்கிருள்.

प्रियं त्वामप्रियं वक्तुं वाणी नास्योपवर्तते ।

''தம் அன்புக்கு உகந்தவனை உன்னிடம் அப்ரியமான சொற்களைச் சொல்ல அவர் வாய் கூசுகிறது.''

तदवश्यं त्वया कार्यं यदनेनाश्रुतं मम ॥ II. 18. 21.

''அவர் எனக்குச் செய்துகொடுத்த உறுதிமொழியைக் கூறுகிறேன்; அதன்படி நீ செய்ய வேண்டும்.''

''முன்ெருரு சமயம் எனக்கு இல்லாத மதிப்பையெல்லாம் இவர் அளித்தார். இப்பொழுது தெருவில் போகும் சாதாரண மனிதன் போல அதை இவர் மீட்க முடியுமா? வெள்ளம் கரை மீறியபிறகு அணைபோட முடியுமா?'' என்கிருள்.

एष मह्यं वरं दत्त्वा पुरा मामभिपूज्य च ।
स पश्चात्तप्यते राजा यथान्यः प्राकृतस्तथा ॥
अतिसृज्य ददानीति वरं मम विशां पतिः ।
स निरर्थं गतजले सेतुं बन्धितुमिच्छति ॥ II. 18. 22. 23.

தான் செய்த வாக்குறுதிக்குத் தசரதரைக் கட்டுப்படுத்தியது போல, ராமரையும் சொன்ன சொல்லுக்குக் கட்டுப்படும்படி அவள் செய்கிருள். ''நல்லதோ கெட்டதோ, உனக்குச் செய்யப் பிடித்தாலும் சரி, செய்யப் பிடிக்காவிட்டாலும் சரி, நீ செய்து தான் ஆகவேண்டும். நான் எல்லாவற்றையும் சொல்லி விடுகிறேன்'' என்கிருள்.

यदि तद्वक्ष्यते राजा शुभं वा यदि वाशुभम् ।
करिष्यसि ततः सर्वमाख्यास्यामि पुनस्त्वहम् ॥
यदि त्वभिहितं राज्ञा त्वयि तन्न विपत्स्यते ।
ततोऽहमभिधास्यामि न ह्येष त्वयि वक्ष्यति ॥ II. 18. 25. 26.

''அவராகச் சொல்லாவிட்டாலும், என்ன சொல்ல வேண்டுமென்று அவர் நினைக்கிருர் என்பது எனக்குத் தெரியும்; ஆகையால் நான் சொல்லுகிறேன். ஆனல் நான் கூறுவதை நீ செய்வதாக முதலில் வாக்களிக்க வேண்டும்'' என்கிருள். பெருந்தன்மையே உருவெடுத்து வந்தவர் அல்லவா ராமர்? ''அப்படியே செய்கிறேன். ஏன் சந்தேகம்?'' என்கிருர்.

करिष्ये प्रतिजाने च रामो द्विर्नाभिभाषते ॥ II. 18. 30.

"நான் ஒரு தடவை சொன்னால் சொன்னதுதான். அதை மாற்றி ஒருபோதும் வேறு கூறமாட்டேன். தந்தை வெளியிட்டுக் கூறுவிட்டாலும் அவர் விரும்புவது யாவற்றையும் செய்வேன். ஒரு கஷ்டமுமில்லை; சொல்லுங்கள்" என்கிறார்.

यदि सत्यप्रतिज्ञं त्वं पितरं कर्तुमिच्छसि ।
आत्मानं च नरश्रेष्ठ मम वाक्यमिदं शृणु ॥ II. 18. 34.

"உன் தந்தை எனக்குப் பிரதிக்ஞை செய்து கொடுத்தது மட்டுமல்ல; நீயும் இப்பொழுது உன் வாக்குறுதியினால் எனக்குக் கட்டுப்பட்டவனாகிறாய். சொல்லுகிறேன், கேள்" என்று கூறச் சிறிதும் தயங்காமல், மனம் கலங்காமல், தன் இரண்டு கோரிக்கைகளையும் கைகேயி வெளியிடுகிறாள். "பதினான்கு வருஷம் நீ காட்டுக்குச் சென்று வசிக்க வேண்டும். உனக்குப் பதில் பரதன் முடிசூட்டிக்கொள்ளட்டும்."

एतेन त्वां नरेन्द्रोऽयं कारुण्येन समाप्लुतः ।
शोकसंक्लिष्टवदनो न शक्नोति निरीक्षितुम् ॥ II. 18. 39.

"அரசரால் உன்னைப் பார்க்கவே இயலவில்லை என்றால், அப்புறம் உன்னோடு அவர் பேசுவது எங்கே!"

एतत्कुरु नरेन्द्रस्य वचनं रघुनन्दन ।
सत्येन महता राम तारयस्व नराधिपम् ॥ II. 18. 40.

"தந்தையைத் தம் சத்தியத்தைக் காப்பாற்றியவராகச் செய். அதைப் பாதுகாத்த புண்ணியபலனை அவர் சுவர்க்கத்தில் அநுபவிக்கட்டும்" என்கிறாள். எவ்வாறு ராமரைத் தனக்கு வசமாக்கலாமோ அவ்வாறு கைகேயி செய்துவிட்டதைப் பாருங்கள். சொன்ன சொல், கடமை, தர்மம் என்றெல்லாம் மிகவும் சிரத்தையோடு நடப்பவர் ராமர். கைகேயிக்கு அது நன்கு தெரியும் அல்லவா? தந்தை கொடுத்த வாக்கை ராமர் எப்படியும் காப்பார் என்பதில் கைகேயிக்கு ஆழ்ந்த நம்பிக்கை உண்டு. ராமருடைய உயர்ந்த குணத்துக்குக் கைகேயியின் நம்பிக்கையைக்காட்டிலும் மேலான அத்தாட்சி வேறு என்ன வேண்டும்? அதனால் ஏற்படும் பலனை அவள் கைவிடுவாளா? அவளது அழகில் ஈடுபட்டு மயங்கித் தசரதர் அவள் விருப்பத்தைச் செய்யவில்லை என்பதற்காகவே இவ்வளவு தூரம் விளக்கிக் கூறினேன். அவர் இப்பொழுது அவளது மோகவலையில் இல்லை. அதிலிருந்து விடுபட்டவர்தாம். எனினும் அவளுக்குக் கொடுத்த வாக்குறுதியினால் கட்டுண்டு தவிக்கிறாரே தவிர வேறல்ல.

यावत्त्वं न वनं यातः पुरादस्मादभित्वरन् ।
पिता तावन्न ते राम स्नास्यते भोक्ष्यतेऽपि वा ॥ II. 19. 16.

ராமரை உறுதிகூறிக் கட்டுப்படச் செய்தபிறகு கைகேயி தொடர்ந்து, "ராமா, நீ இப்பொழுது என்ன செய்ய வேண்டும், தெரியுமா? விரைவில் அயோத்தியை விட்டுச் செல்ல வேண்டும். அதுவரையில் உன் தந்தையை ஸ்நானம் செய்யவோ சாப்பிடவோ விடமாட்டேன்" என்கிறாள். இதுவரையும் பேச முடியாமல் இருந்த தசரதர் இதைக் கேட்டதும் கொதித்தெழுகிறார்.

धिक्कष्टमिति निःश्वस्य राजा शोकपरिप्लुतः ।
मूर्च्छितो न्यपतत्तस्मिन् पर्यङ्के हेमभूषिते ॥ II. 19. 17.

"அந்தோ! என்ன பரிதாபம்! என்ன அநியாயம்!" என்று கத்தியவண்ணம் அவர் மூர்ச்சையடைந்து படுக்கையில் அப்படியே விழுகிறார். அவர் தாம் கொடுத்த வாக்குறுதியைக் காப்பதற்காகத்தான் கஷ்டப்படுகிறாரே தவிரக் கைகேயியின் அழகில் மயங்கி அவளுக்கு உட்பட்டு நடக்கவில்லை என்பது இப்பொழுது தெரிகிறது அல்லவா? ஆனால் உலகம் அப்படி நினைக்கவில்லை. தசரதரைச் சேர்ந்தவர்களும் அவரை நம்பவில்லை. கடைசி வரையிலும் லக்ஷ்மணன் கைகேயியின் பேச்சைக் கேட்டவராகவே அவரைக் கருதுகிறான். 'அந்தத் துஷ்டை' என்று கைகேயியையும், 'அந்த அசட்டுக் கிழவன்' என்று தந்தையையும் பற்றிக் கூறுகிறான். ராமர் கௌசல்யையினிடம் சென்று நடந்ததைக் கூறியபொழுது அவள் ஒரே சோகத்தில் ஆழ்கிறாள். லக்ஷ்மணனும் அவளுடன் சேர்ந்து ராமருக்கு இன்னும் அதிகக் கஷ்டமுண்டாகும்படிச் செய்கிறான்.

न रोचते ममाप्येतदार्ये यद्राघवो वनम् ।
त्यक्त्वा राज्यश्रियं गच्छेत्स्त्रिया वाक्यवशंगतः ॥ II. 21. 2.

"அம்மா! ஒரு ஸ்திரீயின் பேச்சைக் கேட்டு ராமர் அரசைத் துறந்து காட்டுக்குச் செல்வதை நானும் விரும்பவில்லை" என்கிறான் லக்ஷ்மணன். ராமரைப்பற்றி அவன் அப்படிச் சொன்னாலும், உண்மையில் தசரதருக்குத்தான் அது பொருந்துகிறது. தசரதரைக் கட்டுப்படுத்திய உறுதிமொழிதான் ராமரையும் கட்டுப்படுத்துகிறது.

विपरीतश्च वृद्धश्च विषयैश्च प्रधर्षितः ।
नृपः किमिव न ब्रूयाच्चोद्यमानः समन्मथः ॥ II. 21. 3.

"கைகேயியின் கையிலகப்பட்டுக் காமப் பித்தேறிய கிழவர் என்னதான் செய்யமாட்டார்? எதையும் பேசுவார்; எதையும் செய்வார். அதை அப்படியே கேட்டு நடக்க வேண்டுமா? அவர் அறிவிழந்து எதைச் சொன்னாலும், அறிவுள்ளவர்களாகிய நாம் உடனே கேட்க வேண்டுமா?"—லக்ஷ்மணனே இவ்வாறு தவறாக நினைக்கும்பொழுது, மற்றவர்களைப்பற்றி என்ன சந்தேகம்? அது

மட்டுமல்ல, ராமரும் கொஞ்சம் அவ்விதமாகத்தான் நினைத்திருக்கிறார் என்பது லக்ஷ்மணனிடம் அவர் கூறுவதிலிருந்து தெரிகிறது. அவர்கள் இருவரும் கங்கைக்கு அக்கரையில் முதலிரவில் தனியாக இருக்கும்பொழுது, ராமர் நடந்தவற்றையெல்லாம்பற்றி எண்ணமிடுகிறார். இதற்கு முன் அவருக்கு அதற்கு நேரமில்லை. இப்பொழுது நிதானமாக, ஒவ்வொரு நிகழ்ச்சியையும் ஒன்றேடொன்று சேர்த்துச் ஆராய்ந்து பார்க்கிறார். அந்தச் சமயத்தில் அவர் கூறுகிறார்:—

कृतकामा तु कैकेयी तुष्टा भवितुमर्हति । II. 53. 6.

"கைகேயியின் விருப்பம் நிறைவேறிவிட்டது. இனி அவள் சந்தோஷமாக இருப்பாள்."

सा हि देवी महाराजं कैकेयी राज्यकारणात् । II. 53. 7.

"பரதன் வரும்பொழுது அவள் இத்துடன் நிற்கமாட்டாள். பரதனுக்கு யௌவராஜ்யாபிஷேகத்துடன் அவளுக்குத் திருப்தி ஏற்படாது. கிழவரைக் கொன்றுவிட்டுப் பிள்ளையையே அரசனுக்கினாலும் ஆக்கிவிடுவாள்" என்கிறார்.

अपि न च्यावयेत् प्राणान् दृष्ट्वा भरतमागतम् ॥
अनाथश्च हि वृद्धश्च मया चैव विनाकृतः ।
किं करिष्यति कामात्मा कैकेय्या वशमागतः ॥ II. 53. 7, 8.

ராமர் தசரதரைக் 'காமாத்மா' என்கிறார். "பார்த்துக் கொள்வதற்கு நானும் இல்லாதிருந்தால் அவர் என்ன செய்வார்?" என்கிறார்.

इदं व्यसनमालोक्य राज्ञश्च मतिविभ्रमम् ।
काम एवार्थधर्माभ्यां गरीयानिति मे मतिः ॥ II. 53. 9.

ராமரே இவ்வித முடிவுக்கு வருவது ஆச்சரியம் அல்லவா? முதல் நாள் நடந்த சம்பவங்கள் அவரை அவ்வாறு நினைக்கச் செய்கின்றன. ராமரைப்பற்றி நன்கு தெரிந்த தசரதரே மனைவியின் திருப்திக்காக, ராமரை ராஜ்யத்தை விட்டுக் காட்டுக்கு அனுப்புகிறார். தர்மமும் அர்த்தமும் காமத்துக்கு மேற்பட்டவை என்பது சரியல்ல; தசரதரின் கொள்கைப்படி காமம்தான் அவற்றுக்கு மேற்பட்டது என்பது புலனாகிறது.

को ह्यविद्वानपि पुमान् प्रमदायाः कृते त्यजेत् ।
छन्दानुवर्तिनं पुत्रं ततो मामिव लक्ष्मण ॥ II. 53. 10.

"தந்தை என்னை நடத்திய விதத்தைப் பாருங்கள். தந்தையின் உத்தரவுக்கு முற்றும் கீழ்ப்படிந்த மகன் நான். ஒரு

ஸ்திரீக்காக, அப்படிப்பட்ட என்னை நாட்டை விட்டு ஒட்டி விட்டார். எத்தகைய முட்டாளாக இருந்தாலும் உலகில் எங்கேயாவது மற்றொரு தந்தை இம்மாதிரி செய்வாரா? நம் தந்தை எவ்வளவு படித்தவர்! இருந்தும் இவ்வாறு நடந்திருக்கிறார். அதற்கு ஒரு ஸ்திரீயின் சாமர்த்தியத்தைத்தான் காரணமாகக் கூற வேண்டும். அறத்தையும் பொருளையும் விட்டுக் காமத்தையே பெரிதாக நினைக்கலாகாது என்பதற்கு ஓர் எச்சரிக்கை வேண்டும் என்றால் நம் தந்தையையே அதற்கு ஓர் உதாரணமாகக் கொள்ளலாம்'' என்று ராமர் கூறுகிறார்.

अर्थधर्मौ परित्यज्य यः काममनुवर्तते ।
एवमापद्यते क्षिप्रं राजा दशरथो यथा ॥
मन्ये दशरथान्ताय मम प्रव्राजनाय च ।
कैकेयी सौम्य संप्राप्ता राज्याय भरतस्य च ॥ II. 53. 13, 14.

"இவ்வாறெல்லாம் நடக்க வேண்டும் என்பதற்காகவே கைகேயி இந்த வம்சத்தில் மணமாகி அரசியுமாகியிருக்கிறாள். தந்தையை அவள் கொன்றுவிடுவாள். என்னை நாட்டை விட்டு விரட்டியாகிவிட்டது. பரதன் அரசனாகிவிடுவான்'' என்று ராமர் சொல்லுகிறார்.

இதிலிருந்து, யாவரினும் மேன்மைக் குணம் பொருந்திய ராமரே ஒவ்வொரு சமயம் இவ்வாறு சாதாரண நிலையை அடைந்து பேசுகிறார் என்பது தெளிவாகிறது. அவர் எப்பொழுதும் இம்மாதிரி நினைப்பவரோ பேசுபவரோ அல்ல. உடனே இத்தகைய தாழ்ந்த எண்ணங்களை அறவே அடக்கி வெற்றி கொள்பவர்தாம்; எனினும் அத்தகைய எண்ணங்கள் அவரது மனத்திலும் இருந்தன; அவரும் வாய்விட்டு அவற்றை வெளியிட்டிருக்கிறார்.

தசரதர் கேவலம் காமவசப்பட்டுக் கைகேயி சொற்படி நடக்கவில்லை என்பதற்கு மற்றோர் அத்தாட்சியும் கூறலாம். அவர் பயந்தது போல், ராமர், லக்ஷ்மணன், இன்னும் மற்றுமுள்ளோர் அனைவரும் அவ்விதமே நினைக்கின்றனர். இதைக் கண்டு தசரதர் கைகேயியினிடம், ''என்னைத் தொடாதே! இனிமேல் எனக்கும் உனக்கும் எந்த உறவுமில்லை'' என்கிறார்.

न पश्यति रजोऽप्यस्य यदा रामस्य भूमिपः ।
तदार्तश्च विषण्णश्च पपात धरणीतले ॥ II. 42. 3.

ராமர், சீதை, லக்ஷ்மணன் ஆகிய மூவருடன் ரதம் செல்வதை அவர் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது ஒரே புழுதி கிளம்பு

கிறது. அந்தப் புழுதியையே சிறிது நேரம் நோக்கிக்கொண்டிருந் தவர், அது அடங்கியதும், கீழே பிரக்ஞையற்று விழுகிறார். அருகில் கௌசல்யையும் கைகேயியும் நிற்கின்றனர்.

तस्य दक्षिणमन्वागात्कौसल्या बाहुमङ्गना ।
वामं चास्यान्वगाद्बाहुं कैकेयी भरतप्रिया ॥ II. 42. 4.

அவரது வலக் கையைக் கௌசல்யை பிடித்துக்கொள்ள, கைகேயி இடக் கையைப் பிடித்துக்கொள்ளுகிறாள். அப்பொழுது அவர் கைகேயியினிடம் சொல்லுகிறார்:—

तां नयेन च संपन्नो धर्मेण विनयेन च ।
उवाच राजा कैकेयीं समीक्ष्य व्यथितेन्द्रियः ॥
कैकेयि मा ममाङ्गानि स्प्राक्षीस्त्वं दुष्टचारिणी ।
न हि त्वां द्रष्टुमिच्छामि न भार्या न च बान्धवी ॥ II. 42. 5, 6.

"தீயவளான நீ என்னைத் தொடாதே; உன்னைத் துறந்து விட்டேன். இனி நீ எனக்கு மனைவியல்ல. இனி நீ எனக்கு எவ்வகை உறவினளுமல்ல."

ये च त्वामनुजीवन्ति नाहं तेषां न ते मम ।

"எல்லாப் பந்தமும் நமக்குள் அறுந்துவிட்டது. உன்னைச் சேர்ந்தவர்கள் எவருக்குமே இனி என்னுடன் ஒரு சம்பந்தமும் இல்லை."

केवलार्थपरां हि त्वां त्यक्तधर्मां त्यजाम्यहम् ॥ II. 42. 7.

"தர்மத்தைத் துறந்து கேவலம் பேராசைக்காரியான உன்னை நான் விட்டொழித்துவிட்டேன்."

अगृह्णां यच्च ते पाणिमग्निं पर्यणयं च यत् ।
अनुजानामि तत्सर्वमस्मिँल्लोके परत्र च ॥ II. 42. 8.

"உன்னை நான் மணம் செய்துகொண்டவள் என்று கூறுவாய். உண்மையே! உன் கையைப் பிடித்து அக்கினியை வலம் வந்து மனைவி என்று ஏற்றுக்கொண்டதற்கெல்லாம் இனி ஓர் அர்த்தமு மில்லை."

'அநுஜாநாமி' என்று சாதாரணமாகக் கூறும் சொல், இங்கு அதற்கு விரோதமான அர்த்தத்தில் இருக்கிறது! "இனி அது என்னைக் கட்டுப்படுத்தாது. இவ்வுலகில் இனி நீ என் மனைவி என்ற பெயருடன் இருக்க வேண்டியதில்லை; பரலோகத்திலும் நீ தேவையில்லை" என்கிறார்.

भरतश्चेत्प्रतीतः स्याद्राज्यं प्राप्येदमव्ययम् ।
यन्मे स दद्यात्पित्रर्थं मां मा तद्दत्तमागमत् ॥ II. 42. 9.

"நீ வாங்கிக் கொடுக்கும் ராஜ்யத்தைப் பரதன் ஏற்றுக் கொண்டால், நான் இறந்த பிறகு எனக்காக அவன் இறைக்கும் எள்ளும் ஜலமும் என்னைச் சேர வேண்டாம். நான் அதைப் பெற்றுக்கொள்ளப்போவதில்லை" என்கிறார்.

இதற்குப் பிறகு தசரதர் கௌசல்யையின் கிருகத்திற்குச் சென்றுவிடுகிறார். கைகேயி அங்கே போகவே இல்லை. அவரும் அவளை வரும்படிக் கூறவில்லை. அவளை மீண்டும் பாராமலே அவர் காலமாகிவிடுகிறார். கைகேயியின் கெட்ட குணத்தையும், ராமரை அவள் வஞ்சித்ததையும் அறிந்தபிறகு, அவர் அவளை அடியோடு புறக்கணித்துவிட்டார் என்பதை உறுதிப்படுத்தவே மேற்கண்ட விஷயங்கள் கூறப்பட்டன. கைகேயியின் மோகத்தில் ஆழ்ந்து அவளைத் திருப்திப்படுத்துவதற்காக அவர் ராமரைக் காட்டுக்கு அனுப்பினார் என்று கூறுவது கவியே ஒப்புக்கொள்ளாததாகும்.

தசரதர் காலமானதும் அந்தப்புரத்திலுள்ள முந்நூற்றைம்பது மனைவியரும் ஓடி வந்து புலம்புகிறார்கள். அவர்களுடன் கைகேயியும் வருகிறாள். சாதாரணப் பெண்ணுக்கு உரிய சாதாரண உணர்ச்சிகளோடு கூடிய கௌசல்யை, கைகேயியைக் கண்டதும், அரசரின் தலையை மடியில் எடுத்து வைத்துக்கொண்டு, கண்களில் நீர் பெருக, அவளை நோக்கிக் கூறுகிறாள்:—

कौसल्या बाष्पपूर्णाक्षी विविधं शोककर्शिता ।
उपगृह्य शिरो राज्ञः कैकेयीं प्रत्यभाषत ॥
सकामा भव कैकेयि भुङ्क्ष्व राज्यमकण्टकम् ।
त्यक्त्वा राजानमेकाग्रा नृशंसे दुष्टचारिणि ॥ II. 66. 2, 3.

"அம்மா கைகேயி! பிள்ளை யுவராஜாவாக வேண்டும் என்றாய். அரசர் உயிருடன் இருந்தபொழுது இந்த விவகாரம் ஏற்பட்டது. இப்பொழுது அவரும் போய்விட்டார். என் பிள்ளையும் இங்கு இல்லை. எந்த இடையூறும் இல்லாமல் ராஜ்யம் உனக்குக் கிடைத்துவிட்டது."

विहाय मां गतो रामो भर्ता च स्वर्गतो मम ।
विपथे सार्थहीनेव नाहं जीवितुमुत्सहे ॥ II. 66. 4.

"கணவர் போனபிறகு நான் இனி எதற்கு உயிருடனிருக்க வேண்டும்? என்னால் இனி உயிர்வாழ முடியாது."

भर्तारं तं परित्यज्य का स्त्री दैवतमात्मनः ।
इच्छेज्जीवितुमन्यत्र कैकेय्यास्त्यक्तधर्मणः ॥ II. 66. 5.

“தெய்வத்துக்கு நிகரான கணவன் இறந்தபிறகு உலகில் உயிருடனிருக்க விரும்பும் ஸ்திரீ நீ ஒருத்திதான்.’’

न लुब्धो बुध्यते दोषान् किंपाकमिव भक्षयन् ।
कुब्जानिमित्तं कैकेय्या राघवाणां कुलं हतम् ॥ II. 66. 6.

“ஒரு கூனி கூறிய வார்த்தையைக் கேட்டு நடந்ததனால் ரகுகுலமே அடியோடு நாசமாகிவிட்டதே!” என்கிறாள். தசரதருடைய மற்ற மனைவிமார்களும் அவ்விதமே கருதுகின்றனர்.

कैकेय्या दुष्टभावाया राघवेण वियोजिताः ।
कथं पतिघ्न्या वत्स्यामः समीपे विधवा वयम् ॥ II. 66. 19.

‘‘பர்த்தாவையே கொன்றுவிட்ட இந்தக் கைகேயியோடு விதவைகளான நாங்கள் இனி எப்படி இருப்போம்?’’ என்கிறார்கள். நகரம் முழுவதுமே இதே பேச்சாக இருக்கிறது.

नराश्च नार्यश्च समेत्य सङ्घशो विगर्हमाणा भरतस्य मातरम् ।
तदा नगर्यां नरदेवसंक्षये बभूवुरार्ता न च शर्म लेभिरे ॥ II. 66. 29.

கூட்டம் கூட்டமாக ஆண்களும் பெண்களும் சேர்ந்து கைகேயியை நிந்திக்கின்றனர்.

இப்பொழுது ஒரு சந்தேகம் உண்டாகிறது: ராமர் போகும் பொழுது கைகேயியினிடம், ‘‘உடனே தூதர்களை அனுப்பிப் பரதனை அழைத்து வரவேண்டும்’’ என்று கூறவும், ‘‘இதோ உடனே அனுப்பி அழைத்துவரச் செய்கிறேன்’’ என்கிறாள் கைகேயி. அவர்கள் மறந்துவிடுவார்களே என்று கருதிய ராமர், சுமந்திரன் திரும்பியபொழுது, ‘‘பரதனை உடனே அழைத்து வரும்படி அப்பா அம்மாவிடம் சொல்லுங்கள். அபிஷேகம் உடனே செய்ய வேண்டும். தாமதம் வேண்டாம்” என்கிறார்.

என்ன காரணத்தினாலோ, கைகேயி தான் விரும்பியதைச் செய்வதற்கு அதிகாரமுள்ளவளாக இருந்தும், பரதனை உடனே வரவழைக்கவில்லை. வசிஷ்டர்தாம் அவனை அழைத்து வரத் தூதர்களை அனுப்புகிறார். அவள் ஏன் அனுப்பவில்லை? என்ன எண்ணத்தினால் அப்படிச் செய்யாமல் இருந்திருக்கிறாள்? இந்தக் கேள்விகளுக்குப் பதில் சொல்ல எனக்குத் தெரியவில்லை. நீங்களே தாம் சொல்லிக்கொள்ள வேண்டும். ஆனால், அந்தக் கேள்வி தோன்றாமலிருக்காது.

ராமாயணத்தில் மற்றொரு முக்கியமான இடம் வருகிறது. அதனுடைய உள்ளர்த்தத்தை என்னால் சரியாக விளக்கிக் கூற முடியாமலிருக்கிறது. பரதன் கேகய நாட்டிலிருந்து வந்ததும்

அவனுக்கும் அவன் தாய்க்குமிடையே நடைபெற்ற சம்பாஷணை மிகவும் குறிப்பிடத்தக்கது. பரதன் வந்ததும் உடனே தாயைப் பார்க்கச் செல்லுகிறான். அங்கே தந்தையும் இருப்பார் என்று எதிர்பார்க்கிறான். அவரைக் காணாமல் தாயை மட்டும் காண்கிறான். அப்பொழுது அவர்களுக்குள் நடந்த சம்பாஷணை இயல்பானது என்று சொல்ல முடியாது. அவர்கள் ஒருவரோ டொருவர் பேசிய விதத்துக்கு ஏதேனும் தயக்கம் காரணமோ? அல்லது வேறு என்ன காரணம் இருக்கக் கூடும்? உங்களில் சிலருக்கு ஒருவேளை தெரியலாம். அது என்னவென்று சொன்னால் எனக்கும் திருப்தியாக இருக்கும். கால்களில் விழுந்து பணிந்த பரதனை வாரியணைத்து உச்சி மோந்தபிறகு கைகேயி, "கேகயத்தில் எல்லாரும் சௌக்கியமா? பிரயாணம் சௌக்கியமாக இருந்ததா?" என்று விசாரிக்கிறாள்.

"நான் புறப்பட்டு இன்று ஏழு நாட்கள் ஆகின்றன" என்கிறான் பரதன்.

அயோத்தியில் எல்லாம் ஒரு மாதிரியாக இருக்கின்றன. நகரம் துக்கம் கொண்டாடுவது போலிருக்கிறது. அவனுக்கு ஏதோ சந்தேகம் எழுகிறது. தாயைக் கண்டதும் அவன் உடனே தன் சந்தேகத்தைச் சொல்லிக் கேட்கவில்லை. அவளும் நடந்த வற்றை உடனே கூறவில்லை. சுற்றி வளைத்து ஏதோ பேசுகிறாள். "ஆம்! இன்றுதான் ஏழு நாளாகின்றன. நான் சிறிது முன்ன தாகவே வந்துவிட்டேன். அப்பா எங்கே? கௌசல்யாதேவியின் அரண்மனைக்குச் சென்றிருக்கிறாரா? அப்படிச் செய்வது அபூர்வ மாயிற்றே!" என்று கேட்கும் பரதனுக்கு, "எல்லாரும் போகு மிடத்துக்கு உன் தந்தையும் சென்றுவிட்டார்" என்கிறாள் கைகேயி.

பரதன் அதைக் கேட்டுக் கீழே விழுந்து மூர்ச்சிக்கிறான். பிரக்ஞை தெளிந்ததும் ராமரைப்பற்றிக் கேட்கிறான்.

"ராமரும் மற்றவரும் அதிருஷ்டசாலிகள். பிதாவின் அந்திமக் கிரியைகளைச் செய்ய வாய்ப்புப் பெற்றார்கள்" என்கிறாள் கைகேயி.

"அண்ணா ராமர் எங்கே? அவரைப் போய்ப் பார்க்கிறேன், அம்மா! நான் இல்லையே என்று அப்பா கடைசியாக ஒரு வார்த் தையும் சொல்லவில்லையா? மற்றப் பிள்ளைகள் பாக்கியசாலிகள்; பிராணன் போகும்பொழுது உடன் இருந்திருக்கிறார்கள். அப்பா எனக்கென்று ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லையா?" என்று கேட்கும் மகனுக்குக் கைகேயி கூறிய பதில் பின்வருமாறு:—

रामेति राजा विलपन् हा सीते लक्ष्मणेति च ।
स महात्मा परं लोकं गतो गतिमतां वरः ॥
इमां तु पश्चिमां वाचं व्याजहार पिता तव ।
कालधर्मपरिक्षिप्तः पाशैरिव महागजः ॥
सिद्धार्थास्ते नरा राममागतं सीतया सह ।
लक्ष्मणं च महाबाहुं द्रक्ष्यन्ति पुनरागतम् ॥ II. 72. 36-38.

"உனக்கு ஒன்றும் அவர் கூறவில்லை. 'ஹா ராமா! லக்ஷ்மணா!' என்று வாய் விட்டுக் கூறினார். பிறகு, 'லக்ஷ்மணனுடனும் சீதையுடனும் ராமன் திரும்பி வரும்பொழுது பார்ப்பவர்கள் கொடுத்து வைத்தவர்கள்; பெரும் பாக்கியசாலிகள்' என்பவை தாம் அவர் கடைசியாகக் கூறியவை" என்கிறாள்.

பரதனைப்பற்றி ஒரு வார்த்தையும் இல்லை. அதை அவன் மனத்தில் நன்கு படும்படி அழுத்திக் கூறுகிறாள். இதைக் கேட்டுக் கலக்கமடைந்த பரதன், "அவர்கள் எங்கே இப்பொழுது?" என்று கேட்கிறான்.

"மரவுரி உடுத்துத் தண்டகாரண்யம் சென்றுவிட்டார்கள்" என்று பதில் கூறுகிறாள் கைகேயி.

"ஏன்? அண்ணா யாராவது பிராம்மணனுடைய செல்வத்தை அபகரித்துவிட்டாரா? நிரபராதியான மனிதன் எவனையாவது துன்புறுத்தினாரா? பிறன் மனைவி எவளையாவது தவறான கண்கொண்டு பார்த்தாரா? எதற்காக அவரை நாட்டை விட்டு ஓட்ட வேண்டும்?" என்று பரதன் கேட்க, கைகேயி கூறுகிறாள்:— "இல்லை; எந்தப் பிராம்மணனுடைய தனத்தையும் ராமன் அபகரிக்கவில்லை. எந்த மனிதனையும் துன்புறுத்தவில்லை.

न रामः परदारांश्च चक्षुर्भ्यामपि पश्यति । II. 72. 49.

"பிறன் மனைவியை ராமன் கண்ணாலும் பார்க்கமாட்டான்" என்கிறாள்.

ராமனுக்கு அவள் அளித்த நற்சாட்சிப் பத்திரம் இது. நடந்தவை முழுவதையும் பிறகு கூறுகிறாள்:—

तमपश्यन् प्रियं पुत्रं महीपालो महायशाः ॥ II. 72. 51.

"தம் அன்புக்கு உகந்த புத்திரனைக் காணாமல் ஏக்கத்துடன் உன் தந்தை சுவர்க்கம் சென்றுவிட்டார்" என்று கூறிப் பிறகு பின்வருமாறு சொல்லி முடிக்கிறாள்:—

त्वया त्विदानीं धर्मज्ञ राजत्वमवलम्ब्यताम् ।
त्वत्कृते हि मया सर्वमिदमेवंविधं कृतम् ॥ II. 72. 52, 53.

"உன் தந்தையைக் கொன்று, ராமன் லக்ஷ்மணன் சீதை ஆகிய மூவரையும் காட்டுக்கு விரட்டியது எல்லாம் உனக்காகத் தான். உன்னை முடிசூட்டி அரசனுக்கும் பொருட்டுத்தான்."

मा शोकं मा च सन्तापं धैर्यमाश्रय पुत्रक ।

"அப்பா, வருந்தாதே! அவர்களுடைய விதியைக் குறித்து நீ வருந்த வேண்டியதில்லை. தைரியமாக இரு."

त्वदधीना हि नगरी राज्यं चैतदनायकम् ॥ II. 72. 53, 54.

"இனி இந்த ராஜ்யம் உன்னுடையது. இது உன் காலடியில் இருக்கிறது."

तत् पुत्र शीघ्रं विधिना विधिज्ञैर्वसिष्ठमुख्यैः सहितो द्विजेन्द्रैः ।
संकाल्य राजानमदीनसत्त्वमात्मानमुर्व्यामभिषेचयस्व ॥ II. 72. 54.

"வசிஷ்டர் முதலிய பிராம்மணசிரேஷ்டர்களைக் கொண்டு விதிபூர்வமாக ராஜ்யாபிஷேகம் செய்துகொள்" என்கிறாள்.

இத்தகைய சம்பாஷணையைப்பற்றி என்ன சொல்வதென்று தெரியவில்லை. நாளை நீங்கள் ஒரு நாடகம் எழுதினால் இம்மாதிரி தான் வசனம் எழுதுவீர்களா? இவ்விதம் தொடங்கி இவ்விதம் தான் முடியுமா? எப்படி என்று தெரியவில்லை. கைகேயி கடைசியாகக் கூறியவை மேற்கண்ட வார்த்தைகள்தாம். இனி அவளைப் பற்றிப் பேச்சே இல்லை.

பரதன் அவள் கூறியதைக் கேட்டதும் ஒரேயடியாக வெகுண்டு, அவளைக் கண்டபடி தூற்றி, "உன்னைக் கொன்று விட்டால் என்ன என்று தோன்றுகிறது. அப்பொழுதுதான் என் மனம் திருப்தியடையும். நீ என் குலம் முழுவதையுமே நாசப் படுத்திவிட்டாயே?" என்று மீண்டும் மீண்டும் கத்தியதும், அவள் ஒன்றும் தோன்றாமல் திக்பிரமையடைந்துவிடுகிறாள். என்ன செய்வதென்று அவளுக்குத் தெரியவில்லை. இப்படி விபரீதமாக முடியுமென்று அவள் சிறிதும் எதிர்பார்க்கவில்லை.

ராமருக்கு முடிசூட்டப் போகிறார்கள் என்று மந்தரை வந்து தவறான முறையில் கூறியும், கைகேயி அதைக் கேட்டுச் சந்தோஷப் பட்டு, அவளுக்கு ஒரு ஹாரத்தைப் பரிசளிக்கிறாள். அப்புறமும் அவள் மனம் சீக்கிரத்தில் மாறவில்லை. மந்தரை தன் கெட்ட சாமர்த்தியத்தையெல்லாம் உபயோகிக்கும்படியாகிறது. "இனிக் கௌசல்யைக்கு நீ அடிமையாக இருக்க வேண்டியதுதான். உன் பிள்ளை ராமனை அநுசரிக்க வேண்டும். அவனை நாட்டைவிட்டே ராமன் விரட்டிவிடலாம்; அல்லது ஒருவேளை கொன்றுவிட்டாலும் விடலாம்" என்கிறாள். இதைக் கேட்டதும்தான் கைகேயியின்

மனம் மாறிவிடுகிறது. அவள் கௌசல்யையைப் பற்றி நினைக்கும் விதம் எப்படி இருக்கிறதென்று சற்றுப் பார்ப்போம்:—

स त्वं धर्मं परित्यज्य रामं राज्येऽभिषेच्य च ।
सह कौसल्यया नित्यं रन्तुमिच्छसि दुर्मते ॥ II. 12. 45.

கைகேயி தசரதரை நோக்கி, "என்னோடு இருப்பது உங்களுக்குத் திருப்தியாக இல்லை. தர்மத்தைப் புறக்கணித்து, ராமனுக்கு முடிசூட்டிய பிறகு, கௌசல்யையோடு சேர்ந்திருக்க விரும்புகிறீர்கள் போலும்! இனி அவளோடு ஆனந்தமாக வாழ வேண்டுமென்ற எண்ணமா? (ராமனுக்கு முடிசூட்டுவது தர்மத்தைக் கைவிடுவது போலும்!)

एकाहमपि पश्येयं यद्यहं राममातरम् ।
अञ्जलिं प्रतिगृह्णन्तीं श्रेयो ननु मृतिर्मम ॥ II. 12. 48.

"கௌசல்யையின் கால்களில் எல்லாரும் விழுந்து அவளுக்கு அஞ்சலி செய்வதை என் கண்களால் பார்ப்பதைக்காட்டிலும் நான் உயிர் துறப்பதே மேல் என்று நினைப்பேன்" என்கிறாள்.

கௌசல்யையினிடம் அவள் கொண்டிருந்த உறவு இத்தகையது. பரதன் கூறியதைக் கேட்டு இடியால் தாக்குண்டவள் போலான கைகேயி, பிறகு அடியோடு மாறினாளா, அல்லது முன்போலவேதான் இருந்தாளா என்று ஓர் ஐயம் எழுகிறது அல்லவா? ஈவு இரக்கமற்ற கல்நெஞ்சத்தினளான கைகேயி தன் செய்கைக்கு வருந்தி முற்றும் திருந்தியவளாகவே ராமாயணத்தில் காண்கிறது. ராமருடைய உயர்ந்த குணத்தின் அபார சக்தியின் விளைவேதான் அது என்று உறுதியாகக் குறிப்பிட விரும்புகிறேன். அவரோடுகூட இருந்து பழகி, அவரது அன்பையும் மதிப்பையும் பெற்று அநுபவித்தபிறகு, தீய வழியில் செல்லுவதற்குக் கைகேயியினால்கூட எவ்வாறு முடியும்? இரண்டு மூன்று இடங்களில் இது நன்கு வெளியாகிறது. கவி வெளிப்படையாக இப்படிக் கூறவிட்டாலும் அது நிச்சயமாக அநுமானிக்கக்கூடியதாக இருக்கிறது. ராமரை அழைத்து வர மந்திரி புரோகிதர் முதலானோருடன் பரதன் செல்லும்பொழுது ஸ்திரீகளும் அவனுடன் சென்றதாகக் கூறப்பட்டிருக்கிறது. ராமரை அழைத்து வருவதைக் கைகேயி விரும்பாவிட்டால், அவள் மற்றவர்களுடன் போகாமல் அயோத்தியிலேயே தங்கியிருக்கலாம் அல்லவா? ஆனால் அவள் அப்படிச் செய்யவில்லை. மற்றவர்களுடன் சேர்ந்து அவளும் போகிறாள்.

कैकेयी च सुमित्रा च कौसल्या च यशस्विनी ।
रामानयनसंहृष्टा ययुर्यानेन भास्वता ॥ II. 83. 6.

கௌசல்யை, சுமித்திரை, கைகேயி மூவரும் என்று பிரத்தியே கமாகக் கூறப்படுகிறது. ராமரை அழைத்து வரச் சந்தோஷமாகக் கிளம்பியவர்களில் கைகேயியும் 'ராமாநயநஸம்ஹ்ருஷ்டா-ராமரை அழைத்து வருவதில் உற்சாகம் கொண்டவளாக' இருக்கிறாள் என்பதுதான் கருத்து. அவர்கள் மூவரும் ஒரே 'யாநேந-ரதத்தில்' ஏறிச் சென்றார்கள் என்பதை உரையாசிரியர்கள் முக்கியமாகக் குறிப்பிடுகிறார்கள். அவர்கள் ராணிகள்; தனித்தனியே ரதத்தில் செல்லக்கூடிய வசதியுள்ளவர்கள்; ஆயினும் ஒருவருக்கொருவர் துணையாகவும் ஆறுதலாகவும் இருப்பதற்காகவே அவர்கள் சேர்ந்து சென்றார்கள் என்று அநுமானிக்கும்படி இருக்கிறது. ராமரை மீண்டும் அயோத்திக்கு அழைத்து வருவதைப்பற்றிக் கைகேயியும் அன்பாகவும் ஆவலாகவும் பேசினாள் என்று வைத்துக் கொள்ளலாம். அதிலிருந்தே அவள் மாறத் தொடங்கிவிட்டாள் என்று கூறலாம்.

சித்திரகூடத்தில் தாய்மார்களைக் கண்டு பேசிய ராமரின் உணர்ச்சிகளைச் சித்திரிக்கும் சுலோகத்தை இப்பொழுது பார்ப் போம்:—

तं मातरो बाष्पगृहीतकण्ठ्यो दुःखेन नामन्त्रयितुं हि शेकुः ।
स त्वेव मातॄरभिवाद्य सर्वा रुदन् कुटीं स्वां प्रविवेश रामः ।
II. 112 31.

சித்திரகூடத்தில் ராமபரத சம்வாதம் முடிந்தபிறகு, தந்தை யின் சத்தியத்தைக் காப்பதில் ராமர் தளராத உறுதியுடன் இருக்கவே, திரும்பிப் போகும்பொருட்டு எல்லாரும் பிரியாவிடை பெற்றுச் செல்லுகின்றனர். துக்கத்தினால் நெஞ்சடைக்க, கௌசல்யை சுமித்திரை கைகேயி ஆகிய மூவரும் ஒன்றும் பேச இயலாமல் நிற்கிறார்கள். ராமரும் விடைகொடுக்க முடியாத நிலையில் இருக்கிறார். அவர்களின் பாதங்களில் விழுந்து நமஸ் கரித்துவிட்டுக் கண்களில் நீர்மல்க அவர் குடிலுக்குள் செல்கிறார். 'ஸர்வா: மாத்ரு:' என்று இருப்பதனால், கைகேயியும் அவர்களுடன் இருக்க வேண்டும் என்று அபிப்பிராயப்படுகிறார் வியாக்கியான காரர். யுத்தகாண்டத்தின் கடைசியில், ராமபட்டாபிஷேகம் கிரமமாக நடக்கும்பொழுது, மற்றொரு முக்கியமான விஷயம் காண்கிறது: பரதன் ராமரிடம் வந்து, "நீங்கள் அளித்த ராஜ்யத் தைத் திருப்பி எடுத்துக்கொள்ளுங்கள்" என்று கேட்டுக்கொள்ளு கிறான். அனைவர் முன்னிலையிலும் அவன் தன் வேண்டுகோளைத் தெரிவிக்கிறான்.

शिरस्यञ्जलिमाधाय कैकेय्यानन्दवर्धनः ।
बभाषे भरतो ज्येष्ठं रामं सत्यपराक्रमम् । VI. 131. 1.

இங்கே கவி, 'கைகேய்யாநந்தவர்த்தந:' என்ற பதத்தை வழங்குகிருர். சாதாரணமாகப் பரதனைப்பற்றிக் கவி அவ்வாறு கூறுவதில்லை. இதற்கு முன்பு ஒரு தடவை அந்தச் சொல் உபயோகப்படுத்தப்பட்டிருக்கிறது. இந்த இரண்டு சமயங்களில் தான் பரதன் 'கைகேய்யாநந்தவர்த்தந:' என்று அழைக்கப்பெறுகிருன். ராமர் அடிக்கடி 'கௌஸல்யாநந்தவர்த்தந:' என்று அழைக்கப்பெறுவதுண்டு. லக்ஷ்மணனும் 'ஸுமித்ராநந்தவர்த்தந:' என்று அழைக்கப்பெறுவதுண்டு. ஆனல் பரதனை ஒருபொழுதும் 'கைகேய்யாநந்தவர்த்தந:' என்று அழைப்பதில்லை. இந்த இடத்தில் கவி அந்தச் சொல்லை உபயோகித்திருப்பது, பரதன் செய்தது கைகேயிக்கு மிக்க சந்தோஷத்தை அளித்தது என்பதையே குறிக்கிறது. பரதன் ராமரிடம் சொல்லுகிருன்—"என் தாயின் கட்டளைக்கு உட்பட்டு நீங்கள் வனம் சென்றீர்கள் அல்லவா? பதினன்கு வருஷங்களுக்கு முன்பு அது நடந்தது. என் தாயின் வார்த்தைக்கு மதிப்பளித்து ராஜ்யத்தை எனக்குக் கொடுத்து விட்டுத்தான் காட்டிற்குச் சென்றீர்கள்.

पूजिता मामिका माता दत्तं राज्यमिदं मम ।
तद्ददामि पुनस्तुभ्यं यथा त्वमददा मम ॥ VI. 131. 2.

"உங்களால் என்னிடம் ஒப்படைக்கப்பட்ட ராஜ்யம்; உங்களுக்காக நான் காப்பாற்றி வருவதாகக் கூறினேன். உங்கள் பாதுகைகளுக்குப் பிரதிநிதியாக இருந்து ராஜ்யத்தைப் பரிபாலித்து வந்தேன். என் ராஜ்ய காரியங்கள் அனைத்தையும் பாதுகைகளுக்கு அறிவித்து, அவற்றின் உத்தரவுகளைப் பின்பற்றி நடந்திருக்கிறேன். (கவி இவ்வாறுதான் கூறியிருக்கிருர். அதற்குச் சரியான அர்த்தம் தெரியவில்லை.) என்னிடம் ஒப்படைத்த செல்வத்தை நீங்கள் என்னிடம் கொடுத்தது போல நானும் உங்களிடம் திருப்பியளிக்கிறேன்" என்கிருன்.

'கைகேய்யாநந்தவர்த்தந:' என்று பரதனைப்பற்றி இன்னும் வேறெங்கே குறிப்பிடப்படுகிறது என்று பார்ப்போம். அயோத்யா காண்டத்தில், வனம் செல்லக் கிளம்பிய ராமரைப் பின்பற்றி மக்களும் கண்ணிருடன் செல்லுகிருர்கள். அதைக் கண்டு ராமர் அவர்களைத் திரும்பிப் பார்த்து, "மக்களே! என்னை ஏன் தொடர்ந்து வருகிறீர்கள்? இனிமேல் பரதன்தான் உங்கள் அரசன். அவனிடம் விசுவாசமாக இருங்கள். நான் செய்வதையெல்லாம் அவன் உங்களுக்குச் செய்வான். என் தந்தையைப் போல் அவனும் நல்ல முறையில் பரிபாலனம் செய்வான்" என்கிருர்.

स हि कल्याणचारित्रः कैकेय्यानन्दवर्धनः ।
करिष्यति यथावद्वः प्रियाणि च हितानि च ॥ II. 45. 7.

இந்த இடத்தில் பரதனைக் 'கைகேய்யாநந்தவர்த்தந:' என்று குறிப்பிடுகிறார் ராமர். தாயின் ராஜதந்திரத்தினால் ராஜ்யம் சம்பாதித்துக் கொடுக்கப்பட்டது என்று அர்த்தம் கூறலாம். இன்னும் ஒரே ஒரு விஷயம் கூற விரும்புகிறேன்: கைகேயியின் தாயைப் பற்றிச் சுமந்திரன் கூறிய வரலாறு ஏற்கனவே உங்களுக்குத் தெரிந்திருக்கிறது அல்லவா? அந்த ஸர்க்கத்தின் முடிவில் கவி கூறியிருப்பதைப் பாருங்கள்:—

नैव सा क्षुभ्यते देवी न च स्म परिदूयते ।
न चास्या मुखवर्णस्य लक्ष्यते विक्रिया तदा ॥ II. 35. 35.

கைகேயி சற்றும் மனம் கலங்கவில்லை. அவள் முகம் மாறாமல் அப்படியே காண்கிறது. அதைக் கண்ட சுமந்திரன், "பெண்கள் தாயையும், பிள்ளைகள் தந்தையையும் கொள்வார்கள் என்று ஒரு பழமொழி உண்டு. அம்மணி! நீங்கள் உங்கள் அன்னையைக் கொண்டிருக்கிறீர்கள்" என்கிறான். எவ்வளவு புகழ்ச்சியான சொல்! அரண்ய காண்டத்தில் இத்தகைய பழமொழியொன்று லக்ஷ்மணன் பரதனைப்பற்றிப் பேசும்பொழுது கூறப்படுகிறது. அதை இப்பொழுது பார்ப்போம்!

न पित्र्यमनुवर्तन्ते मातृकं द्विपदा इति ।
ख्यातो लोकप्रवादोऽयं भरतेनान्यथा कृतः ॥ III. 16. 34.

இந்தப் பழமொழியை லக்ஷ்மணன் எதிரிடையான அர்த்தத்தில் உபயோகிக்கிறான். ஒருவேளை ஒரு நாட்டில் ஒரு விதமான பழமொழியும், வேறொரு நாட்டில் வேறொரு விதமான பழமொழியும் வழங்குவதாக இருந்திருக்கலாம், அல்லது ஒரு சந்தர்ப்பத்துக்கு ஏற்றபடி ஒரு விதமாகவும், மற்றொரு சந்தர்ப்பத்துக்கு ஏற்றபடி மற்றொரு விதமாகவும் வழங்குவதாக இருக்கலாம். "உலகில் தாயைத்தான் குழந்தைகள் கொள்ளுவார்கள்; தந்தையைக் கொள்ளுவதில்லை என்பது பழமொழி. நம் தம்பி பரதன் இதற்கு விலக்கு. அவன் தன் தாயைக் கொள்ளாமல் தந்தையை அல்லவா கொண்டிருக்கிறான்?" என்கிறான் லக்ஷ்மணன்.

அடுத்த உபன்யாசத்தில் கௌசல்யையையும் சுமித்திரையையும் பற்றிக் கூறலாம் என்று இருக்கிறேன். கைகேயியைக்காட்டிலும் கௌசல்யையுடன்தான் சுமித்திரை நட்புக்கொண்டு வாழ்கிறாள். அயோத்தியாகாண்டத்தில், கௌசல்யையைப்பற்றிக் கொஞ்சம் அதிகமாகக் காண்கிறது. எனினும் அவளைப்பற்றிச் சொல்லி முடித்துவிடலாமென்று நினைக்கிறேன். தொடக்கத்தில் ஒரு விஷயம் குறிப்பிடத் தக்கது: சுமித்திரையின் குணத்தில் காணும்

சில முக்கிய அம்சங்கள் கௌசல்யையின் குணத்தில் இல்லை. நன்கு திட்டிய பாத்திரம் சுமித்திரை. நல்ல குணமுள்ள ஒரு சாதாரண ஸ்திரீ கௌசல்யை. நம் தாய்மார்கள் சகோதரிகள் போலவே நல்ல குணங்களோடு, சில குறைகளும் உள்ளவள். அவளுடைய சிறப்பு அனைத்தும் அவள் ராமரைப் பெற்றெடுத்தவள் என்பதுதான்.

அந்தச் சிறப்பு சுமித்திரைக்கு இல்லையே. வயதில் சிறியவளான சுமித்திரை, கௌசல்யையிடம் மிகவும் அன்பு கொண்டவளாயினும், குணத்தில் பெரிதும் தனிப்பட்டவளாகக் காண்கிருள். அவள் கௌசல்யையைக்காட்டிலும் உயர்ந்த இயல்புள்ளவள்; அறிவிலும் சிறந்தவளாக இருக்கிருள். ராமரைச் சுற்றிலும் இருந்தவர்களுள் அவள் ஒருத்திதான் அவரது பெருமையை அறிந்து போற்றியவள். சிலர் அவர் பெரும் தவறுகள் செய்வதாகவும், வேறு சிலர் உலகரீதிக்கு ஒவ்வாத நிலையில் அவர் இருப்பதாகவும் கருதியபொழுது, சுமித்திரை ஒருத்திதான் அவரை முழுக்க முழுக்க அறிந்து கொண்டாடியவள். அவள் லக்ஷ்மணனுக்குக் கூறிய பேச்சை நாம் நினைவுகூர வேண்டும். ராமாயணத்தில் அவள் பேசியது போல் அவ்வளவு உயர்வாகவும் அழகாகவும் வேறு யாரும் பேசவில்லை.

# 29

## கௌசல்யையும் சுமித்திரையும்

வனம் செல்ல வேண்டும் என்ற பிதாவின் கட்டளையை ராமர் கௌசல்யைக்குத் தெரிவிக்கச் சென்றபொழுது, அவள் அதைக் கேட்டு ஒரே சோகத்துடன் புலம்பியதை அறிவோம். அந்தச் சமயத்தில்தான், அவள் தான் அங்கு வாழ்ந்த பழைய நாட்களைப் பற்றி நினைவுபடுத்திக்கொண்டு பேசுகிறாள். கைகேயி வந்ததுமுதல் தனக்கு மன அமைதியே இல்லாததுடன், மூத்த பட்டமகிஷி என்ற பதவிக்கு உரிய மரியாதையையும் கௌரவத்தையும் தான் இழந்து விட்டதாகவும் வருந்துகிறாள். இத்தகைய சூழ்நிலையில் ராமனைப் பிரிந்து தன்னால் உயிர் தரித்திருக்க முடியாது என்று, தன்னையும் உடன் காட்டுக்கு அழைத்துச் செல்ல வேண்டுகிறாள். அவளது வருத்தத்தைக் கண்டு, அருகில் இருந்த லக்ஷ்மணனும் மனம் வருந்த, அவனது ஆண்மை இயல்பின்படி அவனது வருத்தம் கோபமாக மாறி, தன் தந்தையின் மீதும் சிற்றன்னை கைகேயியின் மீதும் பாய்கிறது. அவர்களைச் சும்மா விடப்போவதில்லை என்று கோபத்துடன் கூறுகிறான். ராமரை நோக்கி, "உங்கள் உதவி இல்லாமலே இவர்களை நான் சரிசெய்ய முடியும். கிழவருக்கு ஒரு நல்ல பாடம் கற்பிக்கிறேன். இந்தக் கைகள் எனக்கு இருக்கும் வரையில் உங்களுக்கு உரியது கிடைக்காமற் போய்விடுமா, பார்ப்போம்! போன ராஜ்யத்தைத் திருப்பிக் கிடைக்கச் செய்கிறேன்" என்று மேலும் அதைப்பற்றிப் பேசுகிறான். அவன் கூறுவதைக் கேட்க, கௌசல்யைக்குப் பயம் ஏற்பட்டுவிடுகிறது. தந்தையும் மகனுமே எதிரும் புதிருமாக இருந்து ராஜ்யத்துக்காகச் சண்டையிடுவதை அவள் விரும்பவில்லை. ஆயினும் அவனுடைய கோபம் ராமனுடைய நலத்தைப்பற்றியதுதான் என்று தெரிந்ததனால், அவனது எண்ணத்தை மாற்றவும் அவளுக்கு இஷ்டமில்லை.

> भ्रातुस्ते वदतः पुत्र लक्ष्मणस्य श्रुतं त्वया ।
> यदत्रानन्तरं कार्यं कुरुष्व यदि रोचते ॥ II. 21. 21.

ஆகவே அவள் மெதுவாக, "தம்பி கூறுவதைக் கேட்டாயா? அம்மாதிரி செய்யலாம் என்று தோன்றினால் செய். வேண்டா

மென்று தோன்றினாலும் சரிதான்'' என்று கூறி, எதிர்த்துச் சண்டையிடுவதைத் தன் இளகிய மனம் ஒப்பவில்லை என்பதை அறிவித்து ராமரது விருப்பத்துக்கு விட்டுவிடுகிறாள்.

यदि त्वं यास्यसि वनं त्यक्त्वा मां शोकलालसाम् ।
अहं प्रायमिहासिष्ये न हि शक्ष्यामि जीवितुम् ॥ II. 21. 27.

"என்னையும் உன்னுடன் அழைத்துச் செல்ல இஷ்டமில்லை என்றால் நீ இங்கேயே இருந்து என்னைப் பாதுகாக்க வேண்டும். இனி இவ்விடத்தில் நான் பயமில்லாமல் இருக்க முடியாது. உனக்கு ராஜ்யமில்லாமற் போனால் போகட்டும். ஏழையாக இருப்பினும் இங்கேயே இருந்தால் போதும். என்னை உடன் அழைத்துப் போகாமல் இங்கேயும் தனியே விட்டுச் சென்றால் பிராயோபவேசம் செய்து பிராணனை விட்டுவிடுவேன். இனிமேல் உயிர் வாழ்வது முடியாது. நமது சாஸ்திரங்களில் தந்தையைப் போலத்தான் தாயும் என்று இருக்கிறது. தந்தையைவிடத் தாயைப்பற்றி ஒரு படி மேலாகவே கூறியிருக்கிறது. தந்தை சொல் கேட்பது கடமை என்றால் தாய் சொல்லைக் கேட்பதும் கடமைதான். நீ என்னை விட்டுச் செல்லக் கூடாது. நான் உன்னைத் தடுக்கிறேன்'' என்றெல்லாம் கூறுகிறாள். ராமருக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை.

अनुमन्यस्व मां देवि गमिष्यन्तमितो वनम् ।
शापितासि मम प्राणैः कुरु स्वस्त्ययनानि मे ॥ II. 21. 46.

"அம்மா, என் உயிரின்மேல் ஆணையிட்டுக் கூறுகிறேன். என்னை அனுப்புவதற்கு வேண்டிய மங்கள காரியங்களைச் செய். எனக்கு விடைகொடு'' என்கிறார் ராமர். அப்படியும் கௌசல்யை அவரைப் போக அநுமதிக்கவில்லை.

यथैव ते पुत्र पिता तथाहं गुरुः स्वधर्मेण सुहृत्तथा च ।
न त्वानुजानामि न मां विहाय सुदुःखितामर्हसि गन्तुमेवम् ॥
II. 21. 52.

"என்னை இந்த நிலையில் உன்னால் விட்டுச் செல்ல முடியுமா? உனக்கு நான் விடைகொடுக்க முடியாது. நீ போக வேண்டாம்'' என்கிறாள். இதைக் காண, ராமருக்கும் லக்ஷ்மணனுக்கும் பெரிய வாக்குவாதம் ஏற்படுகிறது. ''இதோ பார் லக்ஷ்மணா! விதியை யாராவது தடுக்க முடியுமா? பட்டாபிஷேகமில்லாமல் காட்டுக்குச் செல்ல வேண்டும் என்று விதி நிர்ணயித்துவிட்டது. அதை யார் மீற முடியும்? அதன்படி நடந்துதான் ஆகவேண்டும்'' என்று ராமர் கூற, லக்ஷ்மணன் மீண்டும் அவரை ஏசிப் பேசுகிறான். "விதியா? யாருடைய விதி? தீரனாக இருப்பவனுக்கு விதி என்று ஒன்று ஏது?

நீங்களும் நானும் விதியைக் கண்டு பயப்படுகிறவர்களல்ல. பல மற்றவர்களும் கோழைகளும்தாம் விதியில் அடைக்கலம் புகுவர். நம் விதி நம் கையில்தான் இருக்கிறது. ஆகவே நான் சண்டையிட்டுத்தான் தீருவேன்" என்கிறான். கடைசியாகக் கௌசல்யை கூறுகிறாள்:—

कथं धेनुः स्वकं वत्सं गच्छन्तं नानुगच्छति ।
अहं त्वानुगमिष्यामि पुत्र यत्र गमिष्यसि ॥ II. 24. 9.

"கன்றின்பின் செல்லும் பசுவைப் போல் நானும் உன்னைத் தொடர்ந்து வருவேன். நீ புறப்பட்டுச் செல். ஆனால் நீ எங்கே சென்றாலும் உன்பின் நானும் வந்துகொண்டுதான் இருப்பேன்" என்கிறாள்.

இவ்வாறு தன்னைச் சுற்றியுள்ள அனைவரும் கஷ்ட சமயத்தில் தர்மத்தைக் கைவிட முயல்வதைக் கண்டு ராமர் தர்மத்தை மேலும் பெரிதாக உயர்த்தித் தன் தாய்க்குப் போதிக்கத் தொடங்குகிறார்:—

कैकेय्या वञ्चितो राजा मयि चारण्यमाश्रिते ।
भवत्या च परित्यक्तो न नूनं वर्तयिष्यति ॥
भर्तुः किल परित्यागो नृशंसः केवलं स्त्रियाः ।
स भवत्या न कर्तव्यो मनसापि विगर्हितः ॥
यावज्जीवति काकुत्स्थः पिता मे जगतीपतिः ।
शुश्रूषा क्रियतां तावत् स हि धर्मः सनातनः ॥ II. 24. 11-13.

"அம்மா, கைகேயி இனிமேல் தந்தையைக் கவனிக்கப் போவதில்லை. நானும் போய்விடுகிறேன். நீயும் என்னுடன் வந்துவிட்டால் வயதுக் காலத்தில் கஷ்டம் நேர்ந்திருக்கும்பொழுது அவர் யாரிடம் சொல்லிக்கொள்வார்? அவர் உயிருடன் இருக்க மாட்டார். கணவரை விட்டுச் செல்லும் எண்ணத்தை நீ கனவிலும் கைக்கொள்ளக் கூடாது. அவருடன் இருப்பதுதான் உன் தர்மம்; வெகு காலமாக ஏற்பட்டது. அவர் உயிருடன் இருக்கும் வரையில் நீ அவரருகில்தான் இருக்க வேண்டும்." இவ்விதம் ராமர் பேசுவதைக் கேட்ட கௌசல்யை ஆத்திரமடையவில்லை. புத்தி சிறிது தெளிவடைகிறது. 'மகன் தாய்க்குப் போதித்தாலும் உபதேசம் சரியானதுதான்' என்று கௌசல்யை நினைத்து மனம் தேறுகிறாள்.

एवमुक्ता तु कौसल्या रामेण शुभदर्शना ।
तथेत्युवाच सुप्रीता राममक्लिष्टकारिणम् ॥ II. 24. 14.

"ஆம், நீ கூறுவது சரிதான். அப்படியே செய்கிறேன்" என்று அவள் கூறியதும், ராமர் அவளது கடமையை மேலும் வற்புறுத்திப் பேசுகிறார். அதைக் கேட்க அவள் மனம் கடமையில் கொஞ்சம் பின்வாங்குகிறது.

आसां राम सपत्नीनां वस्तुं मध्ये न मे क्षमम् ।
नय मामपि काकुत्स्थ वनं वन्यां मृगीं यथा ॥
यदि ते गमने बुद्धिः कृता पितुरपेक्षया ॥ II. 24. 19, 20.

சோகத்தில் அவள் மனம் நிலையில்லாமல் தவிக்கிறது. அது இயற்கையே அல்லவா? "ராமா! இந்தச் சக்களத்திகளின் நடுவில் என்னால் இனிமேல் உயிர் வாழ முடியாது. அவர்கள் என்னை ஏளனம் செய்வார்களே! தந்தையின் சொற்படி காட்டுக்குச் செல்வதென்று நீ நிச்சயித்துவிட்டால் என்னையும் உன்னுடன் அழைத்துச் சென்றுவிடு" என்கிறாள். ராமர் மீண்டும் தம் உபதேசத்தைத் தொடங்குகிறார். தர்மத்தை எடுத்துக் கூறுவதில் அவர் சலிப்படைவதேயில்லை. புவியில் நல்லறத்தை நிலைநிறுத்தவே அவதரித்தவர் அல்லவா? தந்தையாயினும் சரி, தாயாயினும் சரி, அவருக்கு வித்தியாசமில்லை. எது சரியோ அதைத்தான் அவர் செய்வார்; அதைத்தான் சொல்வார்.

व्रतोपवासनिरता या नारी परमोत्तमा ॥
भर्तारं नानुवर्तेत सा तु पापगतिर्भवेत् ।
भर्तुः शुश्रूषया नारी लभते स्वर्गमुत्तमम् ॥
अपि या निर्नमस्कारा निवृत्ता देवपूजनात् ।
शुश्रूषामेव कुर्वीत भर्तुः प्रियहिते रता ॥
एष धर्मः पुरा दृष्टो लोके वेदे श्रुतः स्मृतः ।
अग्निकार्येषु च सदा सुमनोभिश्च देवताः ॥
पूज्यास्ते मत्कृते देवि ब्राह्मणाश्चैव सुव्रताः ।
एवं कालं प्रतीक्षस्व ममागमनकाङ्क्षिणी ॥
नियता नियताहारा भर्तृशुश्रूषणे रता ।
प्राप्स्यसे परमं कामं मयि प्रत्यागते सति ॥ II. 24. 25-30.

"அம்மா, உன்னைப் போல் பக்திசிரத்தையுடன் உபவாசங்களையும் விரதங்களையும் சாஸ்திரப் பிரகாரம் அநுஷ்டித்துக் கொண்டிருக்கும் ஸ்திரீகள் எவ்வளவோ பேர் இருக்கிறார்கள். ஸ்திரீகள் செய்ய வேண்டியதை நீ மிகவும் சரியாகச் செய்து கொண்டிருக்கிறாய். ஆனால் அது போதாது; உபவாசங்களையும்

விரதங்களையும் முறைப்படி அநுஷ்டித்தால் மட்டும் போதாது. கணவரைப் பின்பற்ற வேண்டும். பதிக்கு வேண்டியதைச் செய்து, அவருக்குச் சிரத்தையுடன் பணிபுரிவதனால்தான் ஸ்திரீ சுவர்க்கத் துக்குச் செல்கிறாள். ஒரு பெண்மணி கோவிலுக்குப் போகாமலும், வீட்டில் பூஜைக்கு உரிய நியமங்களை அநுஷ்டிக்காமலும் இருந் தாலும் அக்கறையில்லை; கணவனுக்கு வேண்டியதைத் தவறாமல் அவள் செய்து வந்தால் அதுவே போதும். இந்தக் கடமைகளைச் சரிவரச் செய்துகொண்டு பதியின் அருகில் இருந்து அவரைப் பார்த்துக்கொள்ள வேண்டும். பதினான்கு வருஷம் முடிந்ததும் நான் திரும்பி வந்துவிடுவேன். பிறகு நாம் எல்லாரும் சேர்ந்து இருப்போம். உன் விருப்பம் நிறைவேறும். நான் சரியாகத் திரும்பி வந்துவிடுவேன்'' என்கிறார். மீண்டும் ஒரு முறை கௌசல்யை தன் கடமையைப் பற்றி மகன் சொல்லக் கேட்கிறாள்.

गमने सुकृतां बुद्धिं न ते शक्नोमि पुत्रक ॥
विनिवर्तयितुं वीर नूनं कालो दुरत्ययः ।
गच्छ पुत्र त्वमेकाग्रो भद्रं तेऽस्तु सदा विभो ॥ II. 24. 32, 33.

''விதியை யார் மீற முடியும்? என்னை விட்டு நீ செல்ல வேண்டு மென்று தெய்வம் விதித்துவிட்டது. நான் அதற்கு உட்பட்டுத் தான் ஆகவேண்டும். உன் தீர்மானத்தினின்றும் உன்னை நான் மாற்ற முடியாது. சௌக்கியமாய்ப் போய் வா'' என்கிறாள்.

न शक्यसे वारयितुं गच्छेदानीं रघूत्तम ।
शीघ्रमेव निवर्तस्व वर्तस्व च सतां क्रमे ॥ II. 25. 2.

''பெரியவர்களுடைய வழியைப் பின்பற்றிச் செல். எப்பொழுதும் கடமையைக் கைவிடாதே. சீக்கிரமே திரும்பி வந்துவிடு'' என்கிறாள்.

பதினான்கு வருஷம் கழித்துத்தான் அவர் திரும்பி வர முடியும் என்று தெரிந்தும், சீக்கிரம் வரும்படிக் கூறுகிறாள். ''அதற்கு மேல் தாமதிக்காதே'' என்ற எண்ணத்தோடு கூறுவதாக வைத்துக் கொள்ளலாம்.

यं पालयसि धर्मं त्वं धृत्या च नियमेन च ।
स वै राघवशार्दूल धर्मस्त्वामभिरक्षतु ॥ II. 25. 3.

மேற்கண்ட சுலோகம் ராமாயணத்தில் மிகப் பிரசித்தமானது. ''எந்தத் தர்மத்தை நீ இவ்வளவு சந்தோஷத்துடனும் சிரத்தை யுடனும் பின்பற்றுகிறாயோ அந்தத் தர்மம் உன்னைப் பாதுகாக் கட்டும். அரண்யத்தில் எவ்வளவோ கஷ்டங்கள் ஆபத்துக்கள்

இருக்கும். அவை நேரும்பொழுது நீ பக்தியோடு அநுஷ்டித்து வரும் தர்மத்தை நினைத்துக்கொள். அது உன்னைக் கட்டாயம் காப்பாற்றும். மனிதனுக்கு இருக்க வேண்டிய உயர்ந்த குணங்கள் யாவும் உன்னிடம் குடிகொண்டிருக்கின்றன. அவை உனக்கு ஒரு தீங்கும் நேராமல் காப்பாற்றக் கடமைப்பட்டவை. தாய் தந்தையருக்குக் கீழ்ப்படிந்த உத்தமபுத்திரன் நீ. அத்துடன் சத்தியநெறி தவறுதவன்'' என்று கூறிவிட்டு, ராமருடைய க்ஷேமத்திற்காக ஹோமம் முதலியன செய்கிருள். தானே மந்திரங்களைச் சொல்லிச் செய்வதிலிருந்து, இத்தகைய வைதிக காரியங்களை முறைப்படி செய்யத் தெரிந்தவள் கௌசல்யை என்று தெரிகிறது. பிராம்மணர்களுக்குப் போஜனம் செய்வித்தபிறகு அவள் ராமருக்குப் பெரிதாக ஆசி வழங்குகிருள். பழைய புராணங்களில் இம்மாதிரியான சந்தர்ப்பங்கள் நேரும்பொழு தெல்லாம் மகனின் க்ஷேமத்திற்காகத் தாய் பல தெய்வங்களை வேண்டிக்கொள்வதுண்டு. "அதுபோல உன்னையும் அவர்கள் ரக்ஷிக்கட்டும்'' என்று நான்கு சுலோகங்களில், ''யந் மங்கலம்...... தத் தே பவது மங்கலம்'' என்று ஆசீர்வாதம் செய்கிருள்.

"விருத்திராசுரனை ஜயித்தபொழுது இந்திரனுக்கு இருந்த ஜயகாலம் உனக்கும் இருக்கட்டும். வினதை கருடனைச் சுவர்க்கத் துக்கு அனுப்பி அமிருதத்தைக் கொண்டுவரச் சொல்லக் கருடன் அந்த ஆபத்தான காரியத்துக்குக் கிளம்புகிருன். அப்பொழுது அவனுக்கு வாய்த்த நல்ல வேளை உனக்கும் வாய்க்கட்டும். அமுதத்தைப் பெறுவதற்காகத் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் யுத்தம் நடந்தபொழுது, தன் மகனுக்கு வெற்றி கிட்ட வேண்டும் என்று அதிதி தெய்வங்களை வேண்டிக்கொண்டாள் அல்லவா? அப்பொழுது இந்திரனுக்குக் கிட்டிய ஜயம் உனக்குக் கிட்டட்டும். விஷ்ணு வாமனவதாரமெடுத்துத் தம் மூன்றடியால் மூவுலகத்தை யும் அளந்தபொழுது அவருக்குத் துணையாக இருந்த நல்ல வேளை உனக்குத் துணைபுரியட்டும். இந்த எல்லாத் தெய்வங்களும் உன்னைப் பாதுகாத்து ஆசி புரியட்டும்'' என்று ஆசி கூறுகிருள்.

அவளே இந்த மந்திரங்களைச் சொன்னதாகக் கவி ஐயத்திற்கு இடமின்றிச் சொல்லுகிருர். இந்த ஆசிகளையெல்லாம் கூறிய பிறகு, கௌசல்யை சற்று ஆறுதலடைகிருள். எல்லாம் சரியாக இருந்தும் அவளது உள்ளத்தில் நிம்மதி இல்லை. ஆயினும், அவள் மனம் சமாதானம் அடைந்திருப்பது போல் பாவனை செய்தி குப்பாள் என்றுதான் தோன்றுகிறது. சந்தர்ப்பம் எத்தகையது என்பதை நாம் சற்று நினைத்துப் பார்க்க வேண்டும். ராமரைப் போன்ற ஒரு ஸத்புத்திரனைப் பதினன்கு வருஷம் காட்டில் வாழ்வதற்கு அனுப்புகிருள். அவரைக் கட்டியணைத்து, ''இந்தப்

பதினான்கு வருஷமும் உயிருடனிருந்து நீ திரும்பி வருவதைக் காண நான் பாக்கியம் செய்திருப்பேன் என்று நம்புகிறேன். திரும்பி வந்து ராஜ்யத்தையடைந்து உன் முன்னோர் சென்ற வழியைப் பின்பற்றி ராஜ்ய பரிபாலனம் செய்யக் கடவாய். தந்தையின் சொல்லைத் தாங்கி நீ மேற்கொண்ட பிரதிக்ஞையை நிறைவேற்றிய பிறகு மீண்டும் எல்லாப் பெருமைகளும் உன்னை வந்தடையட்டும். ராமா, போய் வா. திரும்பி வந்து என் உள்ளத்தை மகிழ்விப்பாய். ஒரு தீங்கும் வராமல் எல்லாத் தெய்வங்களும் உன்னைக் காப்பாற்றட்டும். தெய்வங்களை வேண்டிக்கொண்டு எவ்வளவோ செய்திருக்கிறேன். அவை யாவற்றையும் அங்கீகரித்து, காட்டில் நீ சௌக்கியமாக வாழ்ந்து விட்டு மீண்டும் திரும்பி வருவதற்கு, அந்தத் தெய்வங்கள் உனக்கு அருள்புரியட்டும்'' என்கிறாள்.

இத்தகைய புத்திர வாத்ஸல்யமுடைய தாயைப்பற்றி நினைக்கும்பொழுது நம் மனம் எவ்வாறு நெகிழ்கிறது! கௌசல்யை ராமரைப் பிரதக்ஷிணம் செய்தாள் என்கிறார் கவி. வயதில் சிறுவர்களாக இருப்பவர்களைச் சுற்றிப் பிரதக்ஷிணம் செய்வது சரியல்ல என்று சாதாரணமாகச் சொல்வது வழக்கம்.

தாயினிடம் விடைபெற்ற பிறகு ஒரு கஷ்டமான கட்டத்துக்கு ராமர் வரவேண்டியிருக்கிறது. தந்தையினிடம் விடைபெற்றுச் செல்லும்பொழுது தன் தாய் கௌசல்யையைப் பார்த்துக் கொள்ளும்படிக் கேட்டுக்கொள்ளுகிறார். அவரவர் கடமையை எடுத்துக் கூறுவதில் அவருக்குச் சலிப்பே ஏற்படுவதில்லை.

इयं धार्मिक कौसल्या मम माता यशस्विनी ।
वृद्धा चाक्षुद्रशीला च न च त्वां देव गर्हते ॥
मया विहीनां वरद प्रपन्नां शोकसागरम् ।
अदृष्टपूर्वव्यसनां भूयः संमन्तुमर्हसि ॥
पुत्रशोकं यथा नर्छेत्त्वया पूज्येन पूजिता ।
मां हि सञ्चिन्तयन्तीयं त्वयि जीवेत्तपस्विनी ॥
इमां महेन्द्रोपम जातगर्धिनीं तथा विधातुं जननीं ममार्हसि ।
यथा वनस्थे मयि शोककर्शिता न जीवितं न्यस्य यमक्षयं व्रजेत् ॥

II. 38. 15-18.

"வயதுக் காலத்தில் இவ்வளவு சிரமங்கள் ஏற்பட்டும் என் தாய் தங்களை ஒன்றும் குற்றம் கூறவில்லை. ஆகவே நான் இல்லாதிருக்கும்பொழுது அவளை இன்னும் அதிகமாகவே தாங்கள்

கவனித்துக்கொள்ள வேண்டும். அதிகத் துன்பத்தினுல் அவன் உயிர் போய்விடும். அப்படி நேராதபடி பார்த்துக்கொள்ள வேண்டும். அவனைத் தங்கள் வசம் ஒப்படைக்கிறேன்'' என்று தந்தைக்குச் சொல்லுகிருர்.

பிறகு சீதை கௌசல்யையிடம் விடைபெற்று வரச் சென்ற பொழுது அவளுக்குச் சில அபூர்வமான புத்திமதிகளைக் கூறுகிருள்; "சீதே, கணவனுடன் காட்டுக்குச் செல்கிருய். நீ ஓர் அதிசயமான பெண். கணவனுடன் இம்மாதிரி கஷ்டங்களைப் பகிர்ந்துகொள்ள உடன் செல்லுகிறவள் உலகில் வேறு யாரும் இருக்கமாட்டாள்'' என்கிருள்.

असत्यः सर्वलोकेऽस्मिन् सततं सत्कृताः प्रियैः ॥
भर्तारं नानुमन्यन्ते विनिपातगतं स्त्रियः ।
एष स्वभावो नारीणामनुभूय पुरा सुखम् ॥
अल्पामप्यापदं प्राप्य दुष्यन्ति प्रजहत्यपि ।
असत्यशीला विकृता दुर्गा अहृदयाः सदा ॥
असत्यः पापसंकल्पाः क्षणमात्रविरागिण ।
न कुलं न कृतं विद्या न दत्तं नापि संग्रहः ॥
स्त्रीणां गृह्णाति हृदयमनित्यहृदया हि ताः ।
साध्वीना तु स्थितानां हि शीले सत्ये श्रुते स्थिते ॥
स्त्रीणा पवित्रं परमं पतिरेको विशिष्यते ।
न त्वया नावमन्तव्यः पुत्रः प्रव्राजितो वनम् ॥
तव दैवसमस्त्वेष निर्धनः सधनोऽपि वा । II. 39. 20-26.

ஸ்திரீகள் தங்கள் ஜாதியினரைப் பற்றியே பழித்தும் பேசுகிருர்கள். ஆண்கள்கூடப் பெண்களைப்பற்றி அவ்வளவு தவருகச் சொல்லமாட்டார்கள். "கணவன் சௌகரியமாக இருக்கும் வரையில் மனைவி அவனுடன் இருப்பாள். அதுதான் சாதாரணமாக எங்கும் காணக் கிடைக்கும். புருஷனுக்கு ஏதேனும் கஷ்டகாலம் வந்தாலோ, அல்லது அவனது செல்வம் போய்விட்டாலோ, இதற்கு முன் எவ்வளவு சௌகரியமாகவும் நன்ருகவும் இருந்தபோதிலும், ஒரு நொடியில் அவனைத் தூற்றத் தொடங்குவாள். அல்லது அவனை விட்டே சென்ருலும் சென்று விடுவாள். ஒரே நிமிஷத்தில், இதற்கு முன் காட்டிய அன்பை யெல்லாம் விட்டுவிடுவாள்'' என்கிருள் கௌசல்யை. இவ்வளவு குற்றங்களையும் அப்படியே நாம் ஒப்புக்கொள்ள முடியுமா? ஆயினும் நம் புத்தகங்களில் இம்மாதிரித்தான் நிறையச் சொல்லி

யிருக்கிறது. மேல்நாட்டு இலக்கியத்திலும் ஸ்திரீகளைப்பற்றிய கண்டனம் இல்லாமலில்லை. ஸ்திரீகளை எப்பொழுதும் தூற்றியும், நம்ப முடியாதவர்கள் என்று பழித்தும் பேசுவதுதான் வழக்கம். அவர்களின் உள்ளத்தில் உண்மையான அன்பே கிடையாது என்று சொல்வார்கள்.

"என் மகன் மிக்க நற்குணமுள்ளவன். அவனைத் தெய்வம் போல நீ பாவிக்க வேண்டும். செல்வத்தை இழந்து ஏழையாக இருந்தாலும் அவன்தான் உனக்கு எல்லாம்" என்று கௌசல்யை சீதைக்குப் புத்திமதி கூறுகிறாள். சீதைக்கு இந்த உபதேசம் தேவையில்லை; ஆயினும், தனக்கு அதை மீண்டும் அறிவுறுத்திய தற்காக நன்றி செலுத்துகிறாள். ஸ்திரீகளைப்பற்றிய இந்தக் கண்டனம் அடிக்கடி வருகிறது. ராமர், லக்ஷ்மணன், சீதை ஆகிய மூவரும் காட்டில் அகஸ்தியாசிரமத்துக்குச் சென்றபொழுது, மகாஞானியாகிய அகஸ்தியரும் ஸ்திரீகளைப் பழித்துத்தான் பேசுகிறார் :—

एषा हि प्रकृतिः स्त्रीणामासृष्टे रघुनन्दन ।
समस्थमनुरज्यन्ति विषमस्थं त्यजन्ति च ॥ III. 13. 5.

"உலகம் உண்டானது முதல் ஸ்திரீகளின் இயல்பு இதுதான், ராமா! செல்வமும் சம்பத்துமுள்ள கணவர்களை அவர்கள் அன்புடன் அநுசரிப்பார்கள். கணவர் செல்வத்தை இழந்து துர்ப்பாக்கிய நிலையை அடைந்துவிட்டால் அந்த நிமிஷமே அவர்களை விட்டுச் சென்றுவிடுவார்கள்" என்கிறார்.

இந்தக் காலத்துப் பெண்கள் பழங்காலத்துப் பெண்களைக் காட்டிலும் எவ்வளவோ மேலானவர்கள் என்பதே உண்மையாக எனது அபிப்பிராயம். அவர்கள் கஷ்டகாலத்தில் நம்மை விட்டுச் சென்றுவிடுவதில்லை. ஆயினும் ஊன்றிப் பார்த்தால் அநேக விஷயங்கள் புலப்படும். முன்காலத்தில் பெண்கள் வாழ்க்கையில் பிறர் உதவியை எதிர்பார்ப்பவர்களாக இல்லை. இந்த நாளைய பெண்களைக்காட்டிலும் அதிகச் சுதந்திரத்துடன் தம்மைத் தாமே கவனித்துக்கொள்ளும் திறமை அவர்களுக்கு இருந்தது. வெளியில் சுதந்திரமாகப் போய்வரும் வாய்ப்பு இக்காலத்துப் பெண்களுக்கு இல்லை. கட்டுப்பாடுகளும் மிகவும் அதிகம். அவற்றை மீறுவது பெருந்தவறு என்று கருதப்பட்டுக் கடும் தண்டனைக்கு உரியதாகி விடும். ஆகையால் முற்காலத்துப் பெண்களைப் போல் அவள் தன் இஷ்டப்படி சுதந்திரமாக இருக்க முடியாமலிருக்கிறது.

शतह्रदानां लोलत्वं शस्त्राणां तीक्ष्णतां तथा ।
गरुडानिलयोः शैघ्र्यमनुगच्छन्ति योषितः ॥ III. 13. 6.

"ஸ்திரீகள் மின்னலைப்போல் சஞ்சலமானவர்கள். அவர்களின் ஒழுக்கத்தையும் குணத்தையும் நம்புவதற்கில்லை. அவர்கள் கூர்மையான ஆயுதங்களைப் போன்றவர்கள். கருடனையும் காற்றையும் போல் வேகமுள்ளவர்கள்; ஒரு கட்டுப்பாட்டுக்கும் உட்படாதவர்கள்" என்கிறார் அகஸ்தியர்.

ஸ்திரீகளின் குணம் இவ்வாறு இரக்கமில்லாமல் பழிக்கப்படுவதை நாம் அடிக்கடி காணலாம். கௌசல்யை ஸ்திரீகளைப் பழித்துப் பேசுவதைப் போலவே அகஸ்தியரும் பேசுகிறார். உதாரணத்துக்காக அவ்விருவர் கூறியதையும் எடுத்துக் காட்டினேன்.

இனி ஒரு ரசமான கட்டத்துக்கு வருவோம்: லக்ஷ்மணன் தன் தாய் சுமித்திரையினிடம் விடைபெற வேண்டியபொழுது அவள் என்ன சொல்லுகிறாள் என்று பார்ப்போம்:—

सृष्टस्त्वं वनवासाय स्वनुरक्तः सुहृज्जने ।
रामे प्रमादं मा कार्षीः पुत्र भ्रातरि गच्छति ॥
व्यसनी वा समृद्धो वा गतिरेष तवानघ ।
एष लोके सतां धर्मो यज्ज्येष्ठवशगो भवेत् ॥
इदं हि वृत्तमुचितं कुलस्यास्य सनातनम् ।
दानं दीक्षा च यज्ञेषु तनुत्यागो मृधेषु च ॥ II. 40. 5-7.

ராமருடைய குணத்தைச் சுமித்திரை நன்கு அறிந்தவள். ஆகவே அவள் லக்ஷ்மணனிடம், "நீ பிறக்கும்பொழுதே காட்டில் வாழவேண்டியவன் என்று அறிவேன். ராமன் விஷயத்தில் அஜாக்கிரதையாக இருந்துவிடாதே. மிக்க பணிவோடும் இருக்க வேண்டும். தானம், தீக்ஷை, வேள்வி, உயிர்போகுமட்டும் யுத்தம்-இவை யாவும் இக்ஷ்வாகு வம்சத்தில் பிறந்தவனுக்கு இருக்க வேண்டியவை. ராமனையே நீ தஞ்சமாக அடைய வேண்டும்" என்று கூறுகிறாள். லக்ஷ்மணனுக்கு அவள் புத்திமதி தேவையே இல்லை. அவள் மேலும் சொல்லுகிறாள்:—

लक्ष्मणं त्वेवमुक्त्वा सा संसिद्धं प्रियराघवम् ।
सुमित्रा गच्छ गच्छेति पुनः पुनरुवाच तम् ॥
रामं दशरथं विद्धि मां विद्धि जनकात्मजाम् ।
अयोध्यामटवीं विद्धि गच्छ तात यथासुखम् ॥ II. 40. 8, 9.

"லக்ஷ்மணா, காட்டுக்குப் போவதனால் பெரிய மாறுதல் எதுவுமில்லை. பெற்றோரையோ, அயோத்தியையோ விட்டுச் செல்வதாக நினைக்காதே. ராமன் உன் தந்தை. சீதைதான் உன் தாய்.

கானகமே அயோத்தி என்று எண்ணிப் போய்வா'' என்று ஆசிகூறி அனுப்புகிருள்.

சில ஸர்க்கங்களுக்குப் பின், கௌசல்யை ராமரைப் பிரிந்த துக்கம் தாங்காமல் ஏதேதோ சொல்லிப் புலம்புகிருள். தசரதர் சோகமே உருவாக ஒரு மஞ்சத்தில் சாய்ந்திருக்கிருர். அவரருகில் உட்கார்ந்து கௌசல்யை அழுது புலம்பிக்கொண்டே, ''ராமனைக் காட்டுக்கு விரட்டியதனுல் கைகேயியின் மனோரதம் ஈடேறி விட்டது. அவள் ஒரு நல்லபாம்பு. தன் சட்டையை உரித் தெறிந்துவிட்டு, ராமன்மேல் விஷத்தைக் கக்கியிருக்கிருள். மேலும் இங்கேயே சுற்றிக்கொண்டு இன்னும் யாரையெல்லாம் தன் விஷப் பல்லுக்கு இரையாக்கப் போகிருளோ! ராமனுக்கு ராஜ்யமில்லா மற் போகட்டும். காட்டுக்குப் போகாமல் இங்கேயே இருந்தால் என்ன? அடிமையாக இருக்கும்படிச் செய்திருந்தாலும் நான் ஒருவாறு சமாதானமடைந்திருப்பேன். ராமனுக்கு ராஜ்யமில்லா மற் செய்த குற்றத்தை என்னவென்றுசொல்வது! வீட்டில் அக்கினி ஹோத்திரம் உடைய பிராம்மணன் அமாவாஸ்யை பௌர்ணமி தினங்களில் தேவதைகளுக்கு அளிக்கவேண்டியதை அரக்கர்களுக்கு அளித்து அக்கினிபகவானை அவமதிப்பது போலிருக்கிறது இது. கோதண்டத்தை ஏந்திய நீண்ட கைகளும் மத்தகஜத்தையொத்த நடையுமுடைய மகாவீரனுன என் ராமன் மனைவியுடனும் தம்பி யுடனும் காட்டில் அல்லவா அலையும்படியாயிற்று! என்ன அவன் தலைவிதி! பிறந்தது முதல் சௌக்கியத்திலும் செல்வத்திலும் வளர்ந்தவர்களை நன்கு சந்தோஷம் அநுபவிக்க வேண்டிய காலத் தில் கைகேயியின் வார்த்தைக்குக் கீழ்ப்படிந்து காட்டில் கஷ்டப் படும்படி செய்துவிட்டீர்கள். இனிமேல் காய் கிழங்குகளையும் கனி களையும் உண்டு தவம் செய்யும் முனிவர்களைப் போல் அல்லவா அவர்கள் வாழ வேண்டும்?

''இந்த நிமிஷத்திலேயே அந்தப் பதினன்கு வருஷங்கள் முடிந்து என் ராமன் சீதையோடும் லக்ஷ்மணனேடும் திரும்பிவரும் நற்செய்தியைக் கேட்பேனு? மகிழ்ச்சியுடன் மீண்டும் உற்சவம் கொண்டாடும் அந்த நாள் என்று வரப்போகிறது? பூர்ணசந்திர னைக் கண்ட கடல் போல் என்றைக்கு அந்தத் தீர சகோதரர்களை மகிழ்ச்சி பொங்கப் பெருமையோடு வரவேற்கப் போகிறேன்! பக்கத்தில் பசுவுடன் நடந்து வரும் விருஷபம் போல என்றைக்கு என் மகன் சீதையுடன் ரதத்தில் வீற்று இந்தப் பட்டணத்திற்குத் திரும்பி வரப்போகிருன்! ஆயிரக் கணக்கான மக்கள் திரண்டு வந்து வீதியில் வரும் ராஜபுத்திரர்களை நெற்பொரிகளை வாரி இறைத்து என்றைக்கு வரவேற்று மகிழப்போகிருர்கள்! காது களில் குண்டலங்கள் அசைய, வில்லும் வாளும் ஏந்திய கைகளு

டன், இளங்குன்றுகள் போல் அவர்கள் திரும்பி வரும் காட்சியை என்று பார்க்கப் போகிறேன்! எப்பொழுது பிராம்மணர்களும் சிறுவர்களும் பழங்களுடனும் சிறுமியர் புஷ்பங்களுடனும் மீண்டும் சஞ்சரித்துக் கொண்டிருப்பார்கள்! இருபத்தைந்து வயதினனையினும் பரமஞானியான என் மகனை என்று என் அருகில் மீண்டும் பார்ப்பேன்? காலத்தில் மழை பெய்தவுடன் பூமி மகிழ்ந்து மலர்ச்சியடைவது போல நானும் அப்போது ஆனந்தமடைவேன். இப்பொழுது எனக்கு நேர்ந்திருக்கும் துன்பத்தைப் பார்த்தால், முன் ஜன்மத்தில் பால் பெருகிக்கொண்டிருக்கும் தாயினிடம் பாலூட்டும் குழந்தையை வெடுக்கென்று அப்புறப்படுத்தியிருப்பேன் என்று தோன்றுகிறது. பசுவினிடமுள்ள கன்றைச் சிங்கம் பாய்ந்து இழுப்பது போலக் கைகேயியினுடைய கொடுமை என் மகனை என்னிடமிருந்து பிரித்துவிட்டதே! சகல நற்குணங்களும் சாஸ்திர ஞானமும் பொருந்திய ஒரே மகனை இழந்து என்னால் இனி உயிர் வாழ்ந்திருக்க முடியாது. இந்தச் சோகம் என்னை அக்கினி போல் தகிக்கிறதே!'' என்றெல்லாம் புலம்புகிறாள்.

இப்படி அவள் வருந்தும்பொழுது சுமித்திரை உயர்ந்த அறிவுரைகளை வழங்கி அவள் கடமையையும் அவளுக்கு உணர்த்துகிறாள். கௌசல்யைக்கும் சுமித்திரைக்கும் எவ்வளவு வித்தியாசம் இருக்கிறது! விஷயங்களைச் சரியாகப் புரிந்துகொள்ளும் சக்தியுள்ளவளாதலால் சுமித்திரை மனம் கலங்காமல் அமைதியோடு இருக்கிறாள். அவளைப் பிரிந்து அவள் மகன் லக்ஷ்மணன் காட்டிற்குச் செல்லவில்லையா? ஆயினும் ராமர், சீதை இவர்களுடைய உயர்ந்த காரியத்தை அறிந்துகொண்டவளாதலால், அவள் கௌசல்யை போல் அவ்வளவு சோகத்தில் ஆழ்ந்துவிடவில்லை. அவர்கள் காட்டிற்குச் செல்வது தர்மத்தைப் பின்பற்றி நடக்க வேண்டும் என்பதனாலேயே தவிர வேறல்ல என்பது அவளுக்குத் தெரியும். ''சகோதரி, உங்கள் வருத்தம் தவறானது. உங்கள் மகனைக் குறித்துக் கஷ்டப் படாதீர்கள். தயவுசெய்து அழுகையை நிறுத்துங்கள். நீங்கள் பெரிய பாக்கியசாலி. இத்தகைய சகல நற்குணங்களும் பொருந்திய உத்தமபுத்திரனைப் பெற்றெடுத்திருக்கிறீர்கள். உங்களுடைய பெருந்தன்மைக்காகவே அவன் காட்டிற்குச் சென்றிருக்கிறான். தந்தை சொல்லை நிறைவேற்றி அவரைச் சத்தியம் தவறாதவராகச் செய்திருக்கிறான். அத்தகைய மகனுக்காக நீங்கள் கண்ணீர் வடிக்கலாமா? தர்மத்தில் உறுதியாக நின்று பெரியோர் சென்ற வழியில் செல்வதனால் சாசுவதமான புண்ணியத்தை அடைந்திருப்பவன் உங்கள் மகன்.

''என் மகன் லக்ஷ்மணன் பெரிய பாக்கியசாலி. துன்பமுற்றோருக்கு எப்பொழுதும் உதவ முன் வருபவனும், ஒழுக்கம் தவறாதவனு

மான லக்ஷ்மணன் தர்மவழியிலேயே செல்லுகிறான். சீதையும் வனவாசத்திலுள்ள கஷ்டங்களையெல்லாம் தெரிந்துகொண்டே ராமனைப் பின்பற்றிச் சென்றிருக்கிறாள். கணவன் தர்மத்தை அநுசரிக்கும்பொழுது மனைவியும் தன் கடமையைச் செய்ய வேண் டும் அல்லவா? தலைக்குமேல் புகழ்க்கொடி பறந்துகொண்டிருக்கும் பொழுது இவ்வுலகில் ஆகட்டும், பரலோகத்தில் ஆகட்டும், ராம னுக்குக் கிட்டாத பெருமை என்ன இருக்கிறது? அவன் தர்மமே வடிவு கொண்டவன். நிகரற்ற அவனது மேன்மையும் தூய்மையும் உலகமறிந்தவை. அவனைச் சூரியன் கொளுத்தி வருத்தமாட்டான். வேகமாக அடிக்கும் காற்று அவனருகில் வரும்பொழுது மிருது வாகவே அடிக்கும். இரவில் ராமன் கவலையற்றுத் தூங்கும் பொழுது சந்திரன் தன் குளிர்ந்த கிரணங்களினால் அன்புடன் ஸ்பரிசித்து அயர்வைப் போக்குவான். தண்டகாரண்யத்தில் சம்பராசுரனின் பிள்ளையைக் கொன்றபொழுது பிரம்மாவே நேரில் வந்து அநேக அஸ்திரப் பிரயோகங்களைக் கற்பித்தார் அல்லவா? ஆகையால் ராமனுக்குக் காட்டில் ஒரு பயமுமில்லை. இங்கு அரண் மனையில் வசிப்பது போலவே அங்கும் நிம்மதியாக வசிப்பான். அவன் பாணங்களைக் குறிவைத்ததுமே பகைவர்கள் அழிந்துவிடு வார்கள். இந்த வையகம் முழுவதும் அவன் அதீனத்தில் இருக் கும். அவன் பராக்கிரமமும் சக்தியின் பெருமையும் எத்தகையன! பதினான்கு வருஷங்களைக் காட்டில் கழித்துவிட்டு அவன் வெற்றி யுடன் அயோத்தி திரும்பி வருவான் என்பதில் சந்தேகமே இல்லை.

"ராமன் சூரியனுக்குச் சூரியன். அக்கினிக்கு அவனே அக்கினி. அவனே பரமாத்மா. அவனே லக்ஷ்மி, கீர்த்தி, பொறுமை எல்லாம். தேவதைகளுக்குள் அவன் தேவதை. பூதங்களுக்குள் பூதம் அவனே. அப்படிப்பட்டவனுக்குக் காட்டிலோ பட்டணத் திலோ என்ன தீங்கு நேர முடியும்? சீக்கிரமே சீதையோடும் ஸ்ரீதேவி பூதேவியோடும் அவனது பட்டாபிஷேகம் நடைபெறும். அவன் அயோத்தியை விட்டுச் செல்லும்பொழுது ஒவ்வொருவரும் துக்கம் தாங்காமல் கண்ணீர் விட்டுக் கதறாமல் என்ன செய் வார்கள்? மரவுரி உடுத்துச் செல்கிறவனை லக்ஷ்மி போன்ற சீதை பின்பற்றிச் செல்லும்பொழுது எதுதான் அவனுக்குக் கிட்டாமல் இருக்கும்? வில்லேந்தி ஆயுதபாணியாகப் பாதுகாத்துக்கொண்டு லக்ஷ்மணன் உடன்செல்லும்பொழுது அவனுக்கு எதுதான் சாத்திய மாகாது?

"அம்மணி, கண்ணீர் விடாதீர்கள். அழுவதை நிறுத்துங்கள். பதினான்கு வருஷங்கள் முடிந்ததும் உங்கள் மகன் திரும்பி வரு வான். உங்கள் பாதங்களில் அவன் திரும்பிவந்து நமஸ்கரிப்பதைக் காண்பீர்கள். பூர்ணசந்திரன் போன்ற அவன் முகத்தைச் சீக்கிரமே

கண்டு களிக்கப்போகிறீர்கள். அவன் முடிசூட்டிக் கோசல தேசத்திற்கு அரசனாவதையும் காணப்போகிறீர்கள். நான் உறுதியாகச் சொல்லுகிறேன். இப்பொழுது சோகக் கண்ணீர் வடிக்கும் உங்கள் கண்கள் அப்பொழுது ஆனந்தக் கண்ணீர் வடிக்கும். தேவி, உங்களை அதிருஷ்டம் வந்தடையப் போகிறது. ராமனுக்கு ஒரு தீங்கும் வராது. ஒரு கஷ்டமும் ஒரு துக்கமும் அவனைத் தீண்டா. உங்களைக் கவலையுடன் நோக்கிக்கொண்டிருக்கும் இந்த அனைவரும் உங்களைப் பார்த்து இனி வரப்போகும் நல்ல காலத்தை எண்ணி உற்சாகமடைய வேண்டும். ராமனைப் புத்திரனாகப் பெற்ற நீங்கள் கவலைப்பட்டு வருந்த வேண்டிய அவசியமே இல்லை. உங்கள் மகனைக்காட்டிலும் தர்மாத்மா இவ்வுலகில் வேறு யாருமில்லை. வர்ஷாகால மேகம் மழை பொழிவது போல நீங்கள் விடும் ஆனந்தக் கண்ணீரில் ராமன் லக்ஷ்மணனோடும் இன்னும் தனக்கு வேண்டியவர்களோடும் மழையில் நனைந்த குன்று போல் காட்சியளிப்பதை நான் காணப்போகிறேன்'' என்கிறான்.

சுமித்திரை அறிவிற் சிறந்தவள். ராமரைச் சுற்றிலும் இருப்பவர்களுள் லக்ஷ்மணனைத் தவிர அவள் ஒருத்திதான் ராமருடைய குணத்தை முற்றும் அறிந்தவள். அவர் காட்டிற்குச் சென்றதன் நோக்கத்தையும் அந்தச் செய்கையின் நேர்மையையும் அவள்தான் நன்கு உணர்ந்தவள்.

மற்றொரு துக்ககரமான காட்சிக்குச் சென்று பார்ப்போம். கௌசல்யையின் அறையில் தசரதர் சயனித்திருக்க, அவரைச் சுற்றிக் கௌசல்யை, சுமித்திரை, மற்றும் வேண்டியவர் சிலர் இருக்கிறார்கள். ராமர் சீதை லக்ஷ்மணன் ஆகிய மூவரிடமும் விடைபெற்றுத் திரும்பிய சுமந்திரன் பிரவேசிக்கிறான். அவர்களின் நிலைமையைப் பற்றியும் ராம லக்ஷ்மணர்கள் சொல்லியனுப்பிய செய்தியைப்பற்றியும் கூறுகிறான். அதைக் கேட்டதும் சிறிது அடங்கியிருந்த துக்கம் மீண்டும் பொங்கி எழவே, அதைப் பொறுக்க முடியாதவளாய்க் கௌசல்யை தசரதரை நிந்திக்கிறாள்.

स तूष्णीमेव तच्छ्रुत्वा राजा विभ्रान्तचेतनः ।
मूर्छितो न्यपतद्भूमौ रामशोकाभिपीडितः ॥ II. 57. 26.

சுமந்திரன் கூறியதைக் கேட்டுத் தசரதர் சோகத்தினால் நினைவிழந்து கீழே விழுகிறார். அவர் பிரக்ஞையற்று விழுந்ததும் ஸ்திரீகள் அனைவரும் வாய்விட்டு உரக்க அழுகிறார்கள். அவரைத் தூக்கி மஞ்சத்தில் மீண்டும் படுக்க வைத்துவிட்டுக் கௌசல்யை கூறுகிறாள்:—

इमं तस्य महाभाग दूतं दुष्करकारिणः ।
वनवासादनुप्राप्तं कस्मान्न प्रतिभाषसे ॥

अद्येममनयं कृत्वा व्यपत्रपसि राघव ।
उत्तिष्ठ सुकृतं तेऽस्तु शोके न स्यात् सहायता ॥
देव यस्या भयाद्रामं नानुपृच्छसि सारथिम् ।
नेह तिष्ठति कैकेयी विस्रब्धं प्रतिभाष्यताम् ॥ II. 57. 29-31.

"எழுந்திருங்கள்! இப்படி வருத்தப்படுவதனால் என்ன பயன்? செய்யக்கூடாததைச் செய்தாகிவிட்டது. (இது புண்ணில் கோலிடுவது போன்றது அல்லவா?) எவளுக்காகப் பயந்துகொண்டு சுமந்திரனிடம் பேசக்கூட யோசிக்கிறீர்களோ அவள் இங்கு இல்லை. ஆகையால் நீங்கள் பேசலாம். ராமனைப்பற்றி விசாரியுங்கள்'' என்கிறாள்.

பாவம்! இதற்கெல்லாம் தசரதர் என்ன பதில் சொல்லுவார்? இவ்வாறு குத்திப் பேசிவிட்டுக் கௌசல்யை துக்கமிகுதியினால் தரையில் விழுந்து புரளுகிறாள்.

ततस्तमन्तःपुरनादमुत्थितं समीक्ष्य वृद्धास्तरुणाश्च मानवाः ।
स्त्रियश्च सर्वा रुरुदुः समन्ततः पुरं तदासीत्पुनरेव सङ्कुलम् ॥
II. 57. 34.

அதைக் கண்டு மற்றவர்களும் கண்ணீர் விடுகிறார்கள். அரண்மனை மட்டுமல்ல, பட்டணம் முழுவதுமே, சுமந்திரன் திரும்பி வந்து கூறிய செய்திகேட்டு வாய்விட்டு அழ, எங்கும் ஒரே அழுகைமயமாகிவிடுகிறது.

மற்றொரு சமயம் தசரதரின் அருகில் உட்கார்ந்துகொண்டு கௌசல்யை மீண்டும் அவரை ஏசிப் பேசுகிறாள்: ''மூவுலகங்களிலும் உங்கள் உதாரகுணத்தையும் இளகிய உள்ளத்தையும்பற்றிப் பெரிதும் உற்சாகமாகப் பேசுகிறார்கள். செல்வத்தில் வளர்ந்த அருமைப் பிள்ளையையும் நாட்டுப்பெண்ணையும் எப்படி நாட்டைவிட்டு ஓட்ட உங்களால் முடிந்தது? அதி வெயிலையும் குளிரையும் சீதை எப்படித் தாங்குவாள்? உயர்ந்த அறுசுவை உணவை உண்டு பழக்கமான அவள் காட்டில் கிடைப்பதை எவ்வாறு சந்தோஷத்துடன் புசிப்பாள்? இனிய சங்கீதத்தைக் கேட்டுப் பழக்கமான காது மிருகங்களின் உறுமலை எவ்வாறு கேட்டுச் சகிக்கும்? இந்திரனது கொடிபோல உலகத்துக்கு ஆனந்தத்தை அளிக்கும் என் ராமன் இப்பொழுது எங்கே படுத்து உறங்குவான்? அவன் திரண்ட புஜம்தான் தலைக்குத் தலையணையாக இருக்கும். தாமரையிதழ்கள் போன்ற கண்களையுடைய தாமரைமலர் போன்ற அவன் முகத்தை மீண்டும் எப்பொழுது காண்பேன்? ராமனைப் பிரிந்து அவனைக் காணாமல் என் இதயம் சுக்குநூறாக வெடிக்கவில்லையே! அது

29

வஜ்ரம் என்று நினைக்கிறேன். இனிய குணமுடைய அந்த இளங்குழந்தைகளைப் பயங்கரமான வனத்தில் கொண்டுபோய் விடுவதற்கு உங்கள் மனம் எவ்வளவு குரூரமாக இருக்க வேண்டும்!

"பதினுன்கு வருஷம் முடிந்து பதினைந்தாவது வருஷத்தில் ராமன் திரும்பி வந்தாலும், பரதன் ராஜ்யத்தை உடனே பகிர்ந்து கொடுப்பானு? எனக்குச் சந்தேகம்தான். பித்ருக்களுக்குச் சிராத்தம் பண்ணும்பொழுது உறவினர்களுக்கே பயனுள்ள முக்கியமான ஸ்தானத்தை அளித்துவிட்டுச் சாஸ்திர விற்பன்னர்களைச் சிராத்தத்திற்குப் பிறகு கூட்டத்தில் சேர்ந்து உண்ணும்படி ஒதுக்கிவிடுவதைப் பார்த்திருக்கிருேமே! நல்ல ரோஷ உணர்ச்சியுள்ளவர்கள் கும்பலில் சேருவதை, காளைகள் தங்கள் கொம்புகளைச் சீவுவதை வெறுப்பது போல வெறுப்பார்கள். இளையவன் ஏற்கனவே ஆண்டு அநுபவித்த பெருமைகளை மூத்தவன் விரும்பி ஏற்பானு? மற்ெறொரு மிருகம் தின்று மிஞ்சியதைப் புலி தின்னுமா? யாகத்தில் மிஞ்சிய நெய், ஹவிஸ், புஷ்பம், யூபஸ்தம்பங்கள் இவை யாவும் ஒருதடவை உபயோகப்படுத்திய பிறகு சாரமில்லாத மதுவைப் போலும், ஸோமபானமற்ற யாகம் போலும் ஆகும். இளையவன் அநுபவித்த ராஜ்யம் பயனற்றது. தன் வால் மிதிபட்டு நசுங்குவதைப் புலி பொறுக்குமா? அதுபோல இந்த அவமானத்தை ராமன் பொறுக்க மாட்டான்.

"உலகமெல்லாம் ஒன்ருகத் திரண்டு வந்து எதிர்த்தாலும் யுத்தத்தில் ராமன் அவர்களைத் தோற்கடித்துவிடுவான். அதர்மத்தை அநுஷ்டிக்க விரும்பாததனுல்தான் ராஜ்யத்தைப் பலவந்தமாக அவன் எடுத்துக்கொள்ளவில்லை. கடல் சூழ்ந்த இவ்வுலகை, சுவர்ணத்தினுல் அலங்கரிக்கப்பட்ட தன் வில்லின் மூலம் அவனுல் தீக்கு இரையாக்கிவிட முடியாதா? ரிஷபம் போலும் சிம்மம் போலும் பராக்கிரமமுள்ள புத்திரனைத் தன் குஞ்சுமீனைத் தானே தின்னும் தாய்மீன் போலத் தந்தையே ஒன்றுமில்லாமலடிப்பதா? யுகம் யுகமாக நம் முன்னேர் அநுசரித்துவந்த சாஸ்திரங்களில் கூறியிருப்பதை மீறி, தர்மாத்மாவான பிள்ளையைத் தகுந்த காரணமில்லாமல் நாட்டை விட்டு விரட்டிவிட்டீர்கள். ஸ்திரீகளுக்குக் கணவன் முதலில் ரக்ஷகன். இரண்டாவது மகன். மூன்ருவதுதான் ஞாதியாக இருப்பவன். நான்காவது ஒருவருமில்லை. கணவராகிய நீங்கள் எனக்கு இல்லை என்ருகிவிட்டது. மகனும் பிரிந்துபோய் விட்டான். அவனுடன் நானும் போக மனமில்லாமல் இருந்து விட்டேன். ராஜ்யம், மக்கள் யாவும் உங்களால் நாசமடைந்து விட்டன. நாங்கள் ஸ்திரீகளும் வீணுகிவிட்டோம். அரண்மனை ஆட்கள் அனைவரும் வீணுகிவிட்டனர். நானும் என் மகனும்தாம் ஒன்றுமில்லாமலாகிவிட்டோம். உங்கள் மனைவி கைகேயியும்

அவள் மகனும்தாம் சந்தோஷமாக இருக்கிறார்கள்'' என்றெல்லாம் புலம்புகிறாள்.

துக்கத்தினால் மனம் பேதித்துக் கணவனையே இவ்விதம் கடுமையாக ஏசிப் பேசும் கௌசல்யையிடம் அநுதாபம்தான் ஏற்படுகிறது அல்லவா? ஓர் அகாலமரணம் நேர்ந்திருக்கும்பொழுது இவ்விதம் சுற்றிலும் எல்லாரும் கூடிநின்று அழுவதும் ஒருவரையொருவர் நிந்தித்துப் பேசுவதும் வழக்கம் அல்லவா? இதுதானே மனித இயல்பு!

கௌசல்யையின் சொற்கள் தசரதரின் இதயத்தைக் குத்திப் புண்ணாக்குகின்றன. அவர் சோகத்தின் எல்லையில், கடந்தவற்றை நினைத்துப் பார்க்கிறார். தாம் நெடுநாளைக்கு முன்பு செய்த ஓர் அடாத செயல் அவருக்கு நினைவு வருகிறது. அதை நினைத்து மேலும் மனம் புழுங்குகிறார். மனமும் உடலும் சோர்ந்து நடுங்கக் கை இரண்டையும் கூப்பிக் கௌசல்யையை நோக்கி, 'ரசிதோயம் மயாஞ்ஜலி:— நான் வேண்டிக்கொள்ளுகிறேன். சொல்வதைக் கொஞ்சம் கேள். நீ கருணை குடிகொண்டவள். விரோதிகள் மீதும் கருணை பாராட்டும் நீ என்மீதும் கருணை காட்டும்படி உன்னைத் தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன். கணவன் பரம சாந்தனோ அல்லது மகாபாவியோ, மனைவிக்கு அவன்தானே தெய்வம் போன்றவன்? நீ தர்மம் தெரிந்தவளாயிற்றே! இந்தத் தர்மத்தை மீறி நடக்க உன்னால் முடியாது. நல்லது கெட்டது, உயர்ந்தது தாழ்ந்தது எல்லாம் உனக்குத் தெரியும். என் நிலைமை உனக்கு நன்றாகத் தெரியவில்லையா? நான் என்னையே எவ்வளவு நொந்துகொண்டிருக்கிறேன்! வெந்த புண்ணில் கோலிடுவது போல நீ வேறு துன்புறுத்துகிறாய். எல்லையற்ற துன்பக்கடலில் நீ ஆழ்ந்திருக்கிறாய் என்பதை அறிவேன். ஆயினும் என்னைக் குத்திக் காட்டாமல் கொஞ்சம் இருக்கக் கூடாதா?'' என்று வேண்டிக் கொள்ளுகிறார்.

மிகவும் துக்ககரமான ஒரு பகுதி இப்பொழுது வருகிறது. தசரதர் கூப்பிய கைகளுடன் இவ்விதம் பேசவே, நல்ல குணமுள்ளவளாதலால் கௌசல்யை உடனே தன் சுபாவத்தை அடைகிறாள். மகனைப்பற்றிய நினைவு அவளை நிதானம் தவறும்படிச் செய்கிறது. தன் கடமையை உணர்த்தியவுடன் அவள் பழைய நிலையை அடைந்துவிடுகிறாள். இவ்வாறு கண்டபடி பேசிவிட்டோமே என்று பச்சாத்தாபமுற்று, அவர் கைகளை எடுத்துப் பக்தியுடன் தன் தலைமேல் வைத்துக்கொண்டு பின்வருமாறு கூறுகிறாள்:—

प्रसीद शिरसा याचे भूमौ निपतितास्मि ते ।
याचितास्मि हता देव हन्तव्याहं न हि त्वया ॥

नैषा हि सा स्त्री भवति श्लाघनीयेन धीमता ।
उभयोर्लोकयोर्वीर पत्या या संप्रसाद्यते ॥
जानामि धर्मं धर्मज्ञ त्वां जाने सत्यवादिनम् ।
पुत्रशोकार्तया तत्तु मया किमपि भाषितम् ॥
शोको नाशयते धैर्यं शोको नाशयते श्रुतम् ।
शोको नाशयते सर्वं नास्ति शोकसमो रिपुः ॥
शक्यमापतितः सोढुं प्रहारो रिपुहस्ततः ।
सोढुमापतितः शोकः सुसूक्ष्मोऽपि न शक्यते ॥
वनवासाय रामस्य पञ्चरात्रोऽद्य गण्यते ।
यः शोकहतहर्षायाः पञ्चवर्षोपमो मम ॥
तं हि चिन्तयमानायाः शोकोऽयं हृदि वर्धते ।
नदीनामिव वेगेन समुद्रसलिलं महत् ॥ II. 62. 12-18.

"என்னைத் தாங்கள் மன்னிக்க வேண்டும். கொடிய குற்றத்தைச் செய்துவிட்டேன். என்னிடம் தாங்கள் யாசிக்கும்படியான நிலைமை வந்துவிட்டதே! இதைக்காட்டிலும் வேறு என்ன கஷ்டம் வேண்டும்? கைகளைக் கூப்பிக் கணவன் மனைவியைக் கேட்டுக் கொள்வதென்றால், அப்படிப்பட்ட ஸ்திரீயை என்ன சொல்வது? என் கடமை எது என்பது எனக்குத் தெரியும். நீங்களும் உங்கள் வாக்குறுதியை அல்லவா காப்பாற்றியிருக்கிறீர்கள்? ஆயினும் ராமனைப் பிரிந்த துக்கம் என்னை மீறிப் போய்விட்டது. என்னைக் கட்டுப்படுத்திக்கொள்ளும் சக்தியையே இழந்துவிட்டேன். துக்கத்தில் ஆழ்ந்து, கேட்ட நல்ல விஷயங்களை மறந்துவிட்டேன். சத்துருவின் கையால் அடிபடுவதையும் இந்தச் சோகம் சகிக்கும்படி செய்யும். ராமன் போய் இன்று ஐந்தாறு நாட்களாகிவிட்டன. அவை ஐந்து வருஷங்கள் போல அல்லவோ தோன்றுகின்றன!" என்று இவ்விதம் அவள் பேசியதும் எல்லாரும் சிறிது ஆறுதலடைகின்றனர்.

தசரதர் தாம் வெகு நாட்களுக்கு முன்பு செய்த ஒரு தவறான காரியத்தைக் கூறுகிறார். கௌசல்யையும் சுமித்திரையும் அதன் பின் அயர்ந்து உறங்கிவிடுகிறார்கள். அவர்கள் உறங்கிக்கொண்டிருந்தபொழுது, யாருமறியாமல், தசரதரின் உயிர் பிரிந்துவிடுகிறது. அப்புறம் பரதனை அழைத்து வரும்படி தூதர்களை அனுப்பியதையும், அவனுக்கும் கைகேயிக்கும் நடந்த சம்பாஷணையின் விளைவையும் ஏற்கனவே அறிவோம். பரதன் வந்துவிட்டான் என்று தெரிந்ததும் கௌசல்யையின் மனம் மீண்டும் கொதித்தெழு

கிறது. சுமித்திரையை அழைத்துக்கொண்டு அவள் கிளம்பியதும் பரதனே அங்கு வருகிறான். அவனைக் கண்டதும் கௌசல்யை ஆவேசம் வந்தவளைப் போலப் பேசுகிறாள்:—

इदं ते राज्यकामस्य राज्यं प्राप्तमकण्टकम् ।
संप्राप्तं बत कैकेय्या शीघ्रं क्रूरेण कर्मणा ॥
प्रस्थाप्य चीरवसनं पुत्रं मे वनवासिनम् ।
कैकेयी कं गुणं तत्र पश्यति क्रूरदर्शिनी ॥
क्षिप्रं मामपि कैकेयी प्रस्थापयितुमर्हति ।
हिरण्यनाभो यत्रास्ते सुतो मे सुमहायशाः ॥
अथवा स्वयमेवाहं सुमित्रानुचरा सुखम् ।
अग्निहोत्रं पुरस्कृत्य प्रस्थास्ये यत्र राघवः ॥
कामं वा स्वयमेवाद्य तत्र मां नेतुमर्हसि ।
यत्रासौ पुरुषव्याघ्रः पुत्रो मे तप्यते तपः ॥
इदं हि तव विस्तीर्णं धनधान्यसमाचितम् ।
हस्त्यश्वरथसंपूर्णं राज्यं निर्यातितं तया ॥
इत्यादिबहुभिर्वाक्यैः क्रूरैः संभर्त्सितोऽनघः ।
विव्यथे भरतस्तीव्रं व्रणे तुद्येव सूचिना ॥ II. 75. 11-17.

"அப்பா! ராஜ்யம் வேண்டுமென்றாய். அது கிடைத்து விட்டது. உனக்கு இடையூறு செய்பவர் யாருமில்லை. ஆயினும் என் மகனை மரவுரி உடுத்துக்கொண்டு காட்டுக்குப் போகும்படி உன் அம்மா ஏன் உத்தரவிட வேண்டும்? என் பிள்ளை இருக்கும் இடத்திற்கு என்னையும் துரத்திவிடுவதுதானே! நானே அவன் இருக்கும் இடத்திற்குப் போய்விடுகிறேன்'' என்கிறாள்.

"அக்கினிஹோத்திரத்தை எடுத்துக்கொண்டு சுமித்திரையையும் என்னுடன் அழைத்துச் சென்றுவிடுகிறேன்'' என்று பயமுறுத்துவது போல் கூறுகிறாள். இதனால் தந்தைக்குப் பரதன் கிருத்தியங்கள் செய்ய முடியாதபடிச் செய்வது என்ற கருத்தில் பேசுகிறாள். "நான் மூத்த மகிஷியாகையால் என் அதீனத்தில் அது இருக்கிறது. வேண்டுமானால் நீயே என்னை அழைத்துச் செல்'' என்கிறாள்.

இந்தக் கடுமையான சொற்களை ஒரு குற்றமுமறியாத பரதன் பொறுத்துக்கொள்வதற்கு மேற் போய்விடுகிறது. இங்கேதான் ஒரு பிரசித்தமான கட்டம் வருகிறது. தான் குற்றமற்றவன் என்றும், தன் தாய் செய்த காரியத்தைத் தான் சிறிதும் ஆமோதிக்கவில்லை

என்றும், ராமலக்ஷ்மணர்கள் தன் சம்மதமில்லாமலே காட்டுக்குச் சென்றிருக்கிறார்கள், அவர்கள் திரும்பி வருவதே தனக்கு மிகுந்த சந்தோஷத்தை அளிக்கும் என்றும் பரதன் கூறுகிறான். அதன்பின், 36 சுலோகங்களில், தான் குற்றமுள்ளவனாக இருந்தால் இன்ன இன்ன பாவங்கள் செய்தவன் அநுபவிக்கும் தண்டனையைத் தான் அநுபவிப்பதாகச் சபதம் செய்து, "என் சம்மதத்தோடு ராமன் காட்டுக்குப் போயிருந்தால் நான் இந்தப் பாவத்தைச் செய்தவனாவேன்; எனக்கு இந்தக் கஷ்டம் வரட்டும்" என்றெல்லாம் கூறுகிறான். கௌசல்யை அதைக் கேட்டு மிகவும் பச்சாத்தாபமடைகிறாள்.

मम दुःखमिदं पुत्र भूयः समुपजायते ।
शपथैः शपमानो हि प्राणानुपरुणत्सि मे ॥ II. 75. 61.

"அப்பா! இத்தகைய சபதங்களைச் செய்வதைக் கேட்டு என் துக்கம் மேலும் அதிகமாகிறது" என்கிறாள். இதுதான் கடைசியாக நிகழ்ந்துள்ள முக்கிய சம்பவம். இதற்குப் பிறகு கௌசல்யைதான் ஏதோ பேசுகிறாளே தவிர, மற்ற இருவருடைய பேச்சே காணவில்லை. பட்டமகிஷி என்ற உரிமை கௌசல்யை ஒருத்திக்குத் தானே இருக்கிறது!

ராமரைத் திருப்பி அழைத்துவரப் பரதன் சென்றபொழுது கௌசல்யை, கைகேயி, சுமித்திரை ஆகிய மூவரும் கூடச்செல்கின்றனர். வசிஷ்டரை முன்னிட்டுக்கொண்டு அவர்கள் கடைசியாக ராமரின் பர்ணசாலைக்குள் பிரவேசிக்கின்றனர். அவர்கள் வரும் பொழுது, மந்தாகினியின் கரையோரமாகச் செல்லும்போது, அடிக்கடி நதியில் இறங்கி ஜலமெடுத்து வரவேண்டியிருப்பதற்காக லக்ஷ்மணன் ஒரு நடைபாதை அமைத்திருக்கிறான்; அதை ராணிகள் மூவரும் காண்கின்றனர். அதைக் காண மிகவும் வருத்தத்துடன் கௌசல்யை சுமித்திரையிடம் சொல்லுகிறாள்:—

इदं तेषामनाथानां क्लिष्टमक्लिष्टकर्मणाम् ।
वने प्राक्केवलं तीर्थं ये ते निर्विषयीकृताः ॥
इतः सुमित्रे पुत्रस्ते सदा जलमतन्द्रितः ।
स्वयं हरति सौमित्रिर्मम पुत्रस्य कारणात् ॥
जघन्यमपि ते पुत्रः कृतवान्न तु गर्हितः ।
भ्रातुर्यदर्थसहितं सर्वं तद्विहितं गुणैः ॥ II. 103. 4-6.

"நம் புத்திரர்கள் இருவரும் செல்வத்தில் பிறந்தவர்கள்; செல்வத்தில் வளர்ந்தவர்கள். தங்கள் வேலையைத் தாங்களே

செய்துகொண்டதில்லை. இப்பொழுது ராமனை இருக்கச் செய்து விட்டு, உன் மகன் இவ்வளவு தூரம் நடந்துவந்து, குடத்தில் ஜல மெடுத்துக்கொண்டு போகவேண்டியிருக்கிறது. லக்ஷ்மணன் இவ் வாறு தன்னைத் தாழ்த்திக்கொண்டு அற்ப வேலைகளைச் செய்திருக் கிறனே என்று எண்ணுகிறயா? அப்படி எண்ணதே'' என்று கூறி, மேலும் ஓர் அழகான வார்த்தையைக் கூறுகிறள்: ''நாம் எல்லா ரும் ராமனைத் திரும்பி அயோத்திக்கு அழைத்துச் செல்வதற்கு அல்லவா வந்திருக்கிறேம்! இன்று திரும்பிக் கிளம்பிவிடலாம்'' என்கிறள்.

பரதனுடைய தீர்மானத்தைக் கேட்டதும் ராமர் அயோத் திக்குத் திரும்பி வந்துவிடுவார் என்று அவர்கள் மிகவும் நம்பிக்கை யோடு இருக்கிறர்கள். ''லக்ஷ்மணன் இன்றுதான் கடைசியாக இம்மாதிரி வேலைகள் செய்வான்'' என்கிறள் கௌசல்யை.

अद्यायमपि ते पुत्रः क्लेशानामतथोचितः ।
नीचानर्थसमाचारं सज्जं कर्म प्रमुञ्चतु ॥ II. 103. 7.

''இன்றேடு அவன் ஏவல் புரியும் கடமை முடிந்துவிட்டது'' என்கிறள். 'அபி' என்று எதற்காகச் சொல்லுகிறள் என்று தெரிய வில்லை. உரையாசிரியர் மிகவும் சாதுரியமாக அதற்குப் பொருள் கூறுகிறர். அவர் கூறுவது சரி என்றே தோற்றுகிறது. சுமித் திரையின் மற்றெரு மகன் சத்துருக்னன் இத்தகைய வேலைகளைச் செய்யவில்லை. அவனைப் போல் லக்ஷ்மணனும் இனிமேல் செய்யும் படியாக இருக்காது என்பதுதான் அந்த 'அபி' என்பதற்கு அர்த்த மாக இருக்க வேண்டும். அவர்கள் வருவதற்கு முன்பே, தந்தை இறந்த செய்திகேட்டு, ராமர் லக்ஷ்மணன் சீதை ஆகிய மூவரும் நதியில் ஸ்நானம் செய்து, விதிப்படி பிதாவுக்கு அளித்த பிண்டத் தைக் காண்கின்றனர். அந்த இங்குதி பிண்டத்தைக் கண்டதும் கௌசல்யைக்கு மீண்டும் துக்கம் பொங்கி எழுகிறது.

चतुरन्तां महीं भुक्त्वा महेन्द्रसदृशो भुवि ।
कथमिङ्गुदिपिण्याकं स भुङ्क्ते वसुधाधिपः ॥
अतो दुःखतरं लोके न किंचित् प्रतिभाति मे ।
यत्र रामः पितुर्दद्यादिङ्गुदीक्षोदमृद्धिमान् ॥
रामेणेङ्गुदिपिण्याकं पितुर्दत्तं समीक्ष्य मे ।
कथं दुःखेन हृदयं न स्फोटति सहस्रधा ॥
श्रुतिस्तु खल्वियं सत्या लौकिकी प्रतिभाति मे ।
यदन्नः पुरुषो भवति तदन्नास्तस्य देवताः ॥ II. 103. 12-15.

''மூவுலகங்களையும் ஆண்ட மன்னர்; இந்திரன் போன்றவர்; அவருக்கா இங்குதி பிண்டத்தை வைப்பது? இப்பொழுது இங்குதி பிண்டத்தைத் தவிர வேறு எதை ராமன் அளிப்பான்? எது கிடைக்குமோ அதைத்தானே தேவர்களும் எதிர்பார்க்க வேண்டும்? அவர்கள் தமது உயர்வுக்கு ஏற்ற உயர்ந்த வகைகளை எதிர்பார்க்க முடியுமா?'' என்கிருள்.

கடைசியாக ஒரு நிகழ்ச்சி: அதில்தான் கௌசல்யையை நாம் நன்ருகக் காண்கிறேம். ராமர் லக்ஷ்மணனுடனும் சீதையுடனும் இருப்பதைக் காண்கிருள். சீதையைப் பார்த்து அவள் சொல்லு கிருள்:—

विदेहराजस्य सुता स्नुषा दशरथस्य च ।
रामपत्नी कथं दुःखं संप्राप्ता निर्जने वने ॥
पद्ममातपसंतप्तं परिक्लिष्टमिवोत्पलम् ।
काञ्चनं रजसा ध्वस्तं क्लिष्टं चन्द्रमिवाम्बुदैः ॥
मुखं ते प्रेक्ष्य मां शोको दहत्यग्निरिवाश्रयम् ।
भृशं मनसि वैदेहि व्यसनारणिसंभवः ॥ II. 103. 24-26.

''ஜனகருடைய குலத்தில் பிறந்து இக்ஷ்வாகு குலத்தில் வாழ்க் கைப்பட்டவள்; ராமனுடைய மனைவி; வெயிலில் அடிபட்ட தாமரை போலல்லவா உன் முகம் வாடியிருக்கிறது! புழுதிபடிந்த சுவர்ணம் போலவும், மேகத்தில் மறைந்த சந்திரன் போலவும் காண்கிறது உன் முகம். இதைக் காணும்பொழுது, எதைத் தொட்டாலும் எரித்துவிடும் தீயைப் போல, துக்கம் என்னை எரித்துவிடுகிறது'' என்று வருந்துகிருள். கௌசல்யை கடைசி யாகப் பேசும் சொற்கள் இவை. அப்புறம் ராணிகள் மூவருடைய பேச்சு ராமாயணத்தில் இல்லை.

ராமாயணத்திலுள்ள எல்லா உயர்ந்த பாத்திரங்களைப் பற்றியும் எடுத்துக் கூறிவிட்டேன். சம்பிரதாயமான முறையில் ஒன்றும் கூறுவிட்டாலும் அதைப்பற்றி உங்கள் மனத்திலுள்ள வற்றைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். பட்டாபிஷேகத்தைப் பற்றிச் சுருக்கமாகக் கூறிவிட்டு இந்தப் பிரசங்கங்களை முடித்துக் கொள்ளுகிறேன். ராமாயணத்தை வாசிக்கும் ஒவ்வொருவரும் பட்டாபிஷேகத்துடன்தான் முடிப்பது வழக்கம். அம்மாதிரியே நானும் செய்வதாக இருக்கிறேன்.

# 30

## ஸ்ரீராம பட்டாபிஷேகம்

சம்பிரதாயத்தை அநுசரித்து ராமருடைய பட்டாபிஷேகத்துடன் இந்த உபன்யாசங்கள் நிறைவெய்துகின்றன. ராமாயணத்தில் நான்கு தடவை பட்டாபிஷேகங்களைப் பற்றிய செய்திகள் வருகின்றன. அயோத்தியா காண்டத்தில் கூறியுள்ள முதல் பட்டாபிஷேகம் நடைபெறவில்லை. அடுத்தது சுக்கிரீவனுடைய பட்டாபிஷேகம் கிஷ்கிந்தையில் நடைபெறுகிறது. அதற்கு அடுத்த முக்கியமான பட்டாபிஷேகம் விபீஷணனுடையது. இந்த அபிஷேகம் சண்டை தொடங்குவதற்கு முன்பு ராமருடைய உத்தரவின்மேல் சுருக்கமாக ஒரு தடவை நடைபெறுகிறது. யுத்தம் முடிந்து ராவணவதம் ஆனபிறகு விபீஷணனுக்கு உண்மையான பட்டாபிஷேகம் நடைபெறுகிறது. கடைசியாக அயோத்தியில் ராமருடைய பட்டாபிஷேக வைபவத்திற்கு இப்பொழுது வந்திருக்கிறோம்.

முன்பு நடந்த அபிஷேகங்களைப்பற்றிச் சில வார்த்தைகள் கூறவேண்டியிருக்கிறது. கிரமமாக நடக்கும் பட்டாபிஷேகத்துக்கு வேண்டிய சாமக்கிரிகளிலுள்ள வித்தியாசம் கவனிக்கத் தகுந்தது. முதல்முதலில், ராமருடைய அபிஷேகத்திற்கு வேண்டிய பொருள்களைப்பற்றி, வசிஷ்டர் எல்லாம் தயாராக இருக்கின்றன என்று சொல்லுகிறார். அந்தச் சுலோகத்தைப் பார்ப்போம்.

**इमे गङ्गोदकघटाः सागरेभ्यश्च काञ्चनाः । II. 14. 34.**

"தங்கக் குடங்களில் கங்கையினின்றும் இன்னும் மற்றுமுள்ள சமுத்திரங்களினின்றும் ஜலம் கொண்டு வரப்பட்டிருக்கிறது" என்கிறார். தவிர, எட்டு அழகான கன்னிகைகள், அரசன் வழக்கமாக ஏறிச் செல்லும் யானை ஆகியவை குறிப்பிடப்படுகின்றன. பட்டாபிஷேகத்திற்காகச் செய்த ஏற்பாடுகளைக் கவி மேலும் விவரமாக வர்ணிக்கிறார். 'சுவர்ணமயமான தீர்த்தக் குடங்கள்' என்றெல்லாம் விசேஷமாகக் குறிப்பிடுகிறார். இங்கு ஒரு விஷயத்தை நாம் கவனிக்க வேண்டும்: எங்கெல்லாம்

புனிதமான ஜலம் கிடைக்குமோ, அது நதியோ, அற்பமான கிணறோ, குட்டையோ, எல்லாவற்றிலிருந்தும் அபிஷேக ஜலம் கொண்டுவரப்பட்டது என்கிறார்.

ராமருக்குப் பட்டாபிஷேகம் பண்ண வேண்டும் என்று நினைத்துத் தசரதர் மறுநாள் காலையிலேயே அதை நடத்தி விடுவதாக நிச்சயித்துவிடுகிறார். அவ்வளவு இடங்களிலிருந்தும் அதற்குள் ஜலம் எப்படிக் கொண்டுவர முடியும் என்ற கேள்வி உண்டாகலாம். தசரதர் சாமர்த்தியமாக ஏற்கனவே அபிஷேக ஜலத்தைக் கொண்டுவரச் செய்திருக்கலாம். அல்லது எல்லா ராஜகிருகங்களிலும் இம்மாதிரி புனிதமான ஜலம் எப்பொழுதும் ஒருவேளை தயாராக இருக்கும் என்று இருக்கலாம். ஆனால் அது கொஞ்சம் மிகையான கற்பனை என்றே நினைக்கிறேன். ராமருடைய பட்டாபிஷேகத்தை உத்தேசித்து ஏற்கனவே தசரதர் இத்தகைய முன்னேற்பாடுகளைச் செய்திருக்கலாம் என்றே எனக்குத் தோன்றுகிறது.

கிஷ்கிந்தா காண்டத்திற்குச் சென்று பார்ப்போம்.

आजग्मुस्तत्र मुदिता वराः कन्यास्तु षोडश ॥ IV. 26. 23.

சுக்கிரீவனுடைய பட்டாபிஷேகத்தின் பொழுது பதினாறு அழகிய கன்னிகைகள் வரவழைக்கப்பட்டனர் என்று குறிப்பிடப் பெறுகிறது. ஆகவே யௌவராஜ்யாபிஷேகத்திற்கு எட்டுக் கன்னியர் போதுமென்று தோன்றுகிறது. சுக்கிரீவன் அரசனாகவே முடிசூட்டப்பெற்றதனால் பதினாறு கன்னிகைகள் அவசியமாக இருக்கிறார்கள். இங்கே ஜலம் கொண்டுவருவதைப் பற்றிக் கஷ்டமில்லை. ஆச்சரியமான காரியங்களைச் செய்யக்கூடிய வானரர்கள் இருந்ததனால் அந்தக் காரியம் ஒரு நொடியில் ஆகிவிடுகிறது. சமுத்திரம், நதிகள் முதலிய புனிதமானவற்றிலிருந்து ஜலம் கொண்டுவரப்பட்டதாகக் குறிப்பிடப்படுகிறது.

नदीनदेभ्यः संहृत्य तीर्थेभ्यश्च समन्ततः ।
आहृत्य च समुद्रेभ्यः सर्वेभ्यो वानरर्षभाः ॥
शास्त्रदृष्टेन विधिना महर्षिविहितेन च ॥ IV. 26. 32-34.

பக்கத்திலுள்ள தேசத்திலிருந்து அபிஷேகத்துக்கு வேண்டியதைச் செய்யப் பிராம்மணர்கள் வரவழைக்கப்பட்டனர் என்று வியாக்கியானத்தில் இருக்கிறது. இல்லாவிட்டால் சாஸ்திரம் தெரிந்த வானரர் யார் என்று கண்டுபிடிப்பது கஷ்டமல்லவா? ஒரு வியாக்கியானகாரர், போதாயனரே வந்ததாகக் கூறுகிறார். அது சந்தேகத்திற்கு உரிய விஷயம். சுக்கிரீவனுடைய நண்பர்

களாகிய அனுமார் ஜாம்பவான் முதலியோர் அவனுக்கு அபிஷேகம் செய்ததாகக் கூறப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

ஒரு விஷயம் கவனிக்கலாம்: 'சுக்கிரீவன் அபிஷேகம் செய்து கொண்டானு அல்லது முடிசூட்டிக்கொண்டானு? தாரையோ ருமையோ அவனுடன் வீற்றிருந்தாளா?' என்பதைப் பற்றிக் கவி ஒன்றும் கூறவில்லை. அவன் தனியேதான் அந்தப் பெருமையை அநுபவித்தான் என்று தோன்றுகிறது. விபீஷணனுடைய பட்டா பிஷேகத்தில் லக்ஷ்மணன்தான் அதிகப் பங்கெடுத்துக்கொள்ளு கிறான். சுக்கிரீவனுடைய அபிஷேகத்தில் அவன் பங்கெடுத்துக் கொண்டானு என்பது தெளிவாகக் கூறப்படவில்லை. அவனை அபிஷேகம் செய்த நண்பர்களில் ஒருவனுக அவன் ஒருகால் இருந் திருக்கலாம். கவி தெளிவாக ஒன்றும் கூறவில்லை. ஆகவே சுக்கிரீவனுடைய அபிஷேகத்தை வானரர்களே நடத்தியிருப்பார் என்று தோன்றுகிறது.

இலங்கைக்கு இக்கரையிலேயே விபீஷணனுக்கு அபிஷேகம் ஆகிவிடுகிறது.

इति ब्रुवाणं रामस्तु परिष्वज्य विभीषणम् ।
अब्रवील्लक्ष्मणं प्रीतः समुद्राज्जलमानय ॥
तेन चैनं महाप्राज्ञमभिषिञ्च विभीषणम् ।
राजानं रक्षसां क्षिप्रं प्रसन्ने मयि मानद ॥
एवमुक्तस्तु सौमित्रिरभ्यषिञ्चद्विभीषणम् ।
मध्ये वानरमुख्यानां राजानं रामशासनात् ॥ VI. 19. 24-26.

சமுத்திரம் மிகவும் அருகில் இருந்ததனுல் அபிஷேக ஜலம் கொண்டு வருவது மிக்க எளிதாக இருக்கிறது. லக்ஷ்மணன்தான் விபீஷணனுக்கு அபிஷேகம் செய்தான் என்று கூறப்பட்டிருக்கிறது. ராவணவதம் ஆனபிறகு, கிரமமாக விபீஷணனுக்குப் பட்டா பிஷேகம் நடக்கும்பொழுதும் லக்ஷ்மணன்தான் அவனுக்கு அபிஷேகம் செய்கிறுன்.

ततस्त्वेकं घटं गृह्य संस्थाप्य परमासने ।
घटेन तेन सौमित्रिरभ्यषिञ्चद्विभीषणम् ॥
लङ्कायां रक्षसां मध्ये राजानं रामशासनात् ।
विधिना मन्त्रदृष्टेन सुहृद्गणसमावृतम् ॥
अभ्यषिञ्चत् स धर्मात्मा शुद्धात्मानं विभीषणम् ॥
VI. 115. 14-16.

தங்கக் குடத்தில் இருந்த ஜலத்தை லக்ஷ்மணன் இரண்டாம் முறையாக விபீஷணனுக்கு அபிஷேகம் செய்கிறான். பிறகு ராக்ஷஸர்கள், அவர்களுக்குப் பின் வானரர் எல்லாரும் அபிஷேகம் செய்கின்றனர். இவ்வாறு ஒவ்வொருவராக அபிஷேகம் செய்ய, அதை ஏற்றுக்கொண்டு உட்கார்ந்திருப்பது எவ்வளவு கஷ்டமாக இருக்கும்! சீதை பக்கத்தில் வீற்றிருக்கும்பொழுது ராமருடைய அபிஷேகம் இன்னும் அதிகச் சிரமமாக இருந்திருக்கும் என்று தோன்றுகிறது.

அபிஷேகக் கட்டத்திற்கு வருமுன்பு ஒரு சிறிய விஷயத்தைக் கவனிக்க வேண்டும். 131-ஆம் ஸர்க்க ஆரம்பத்தில், அநேக சுலோகங்கள், அயோத்யாகாண்டத்தில் 105-ஆம் ஸர்க்கத்திலுள்ள சுலோகங்களைப் போல, வார்த்தைக்கு வார்த்தை ஒரே மாதிரியாக வருகின்றன. ஒரே விதமான சுலோகங்களை இரண்டு இடத்திலும் கவி கூறியிருப்பது, நிகழ்ச்சிகளும் ஒரே விதமாக இருக்க வேண்டும் என்பதைக் காட்டுகிறது. அயோத்தியா காண்டத்தில், பரதன் சதுரங்கசேனையுடன் சித்திரகூடத்திற்கு வந்து ராமனை அழைத்து வருவதற்காகச் செல்கிறான். அப்பொழுது பரதன் ராஜ்யத்தையும் கிரீடத்தையும் அயோத்திக்கு வந்து ஸ்வீகரித்துக்கொள்ளும்படி ராமரை வேண்டிக்கொள்கிறான். ராஜ்ய பரிபாலனம் செய்யத் தான் தகுதியற்றவன்; ஆதலால் ராமரே வந்து அந்தப் பதவியை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கூறுகிறான். ராமர் பதினான்கு வருஷம் கழித்துத் திரும்பி வந்ததும் அதேமாதிரியே பரதன் மீண்டும் அவரிடம் கேட்டுக்கொள்ளுகிறான். "உங்களுக்குப் பிரதிநிதியாக இதுவரையிலும் ஒருவாறு சமாளித்து வந்தேன். தாங்கள் இப்பொழுது வந்துவிட்டதனால் அதை உங்களிடமே அளிக்கிறேன்."-இவ்வாறு மீண்டும் ஒரு முறை பரதன் ராஜ்யத்தை ஏற்றுக்கொள்ளும்படி ராமரைக் கேட்டுகொள்ளுகிறான். சந்தர்ப்பம் ஒரே விதமாக இருப்பதாக எண்ணி, அதே சுலோகங்களையே மீண்டும் கவி கூறுகிறார். சுலோகங்களை முதலில் வாசித்துவிட்டுப் பின்பு அதன் மொழிபெயர்ப்பைக் கூறுகிறேன்.

पूजिता मामिका माता दत्तं राज्यमिदं मम ।
तद्ददामि पुनस्तुभ्यं यथा त्वमददा मम ॥
धुरमेकाकिना न्यस्तामृषभेण बलीयसा ।
किशोरीव गुरुं भारं न वोढुमहमुत्सहे ॥
वारिवेगेन महता भिन्नः सेतुरिव क्षरन् ।
दुर्बन्धनमिदं मन्ये राज्यच्छिद्रमसंवृतम् ॥
गतिं खर इवाश्वस्य हंसस्येव च वायसः ।
नान्वेतुमुत्सहे राम तव मार्गमरिन्दम ॥

यथा चारोपितो वृक्षो जातश्चान्तर्निवेशने ।
महांश्च सुदुरारोहो महास्कन्धप्रशाखवान् ॥
शीर्येत पुष्पितो भूत्वा न फलानि प्रदर्शयन् ।
तस्य नानुभवेदर्थं यस्य हेतोः स रोप्यते ॥
एषोपमा महाबाहो त्वमर्थं वेत्तुमर्हसि ।
यद्यस्मान्मनुजेन्द्र त्वं भक्तान् भृत्यान्न शाधि हि ॥
जगदद्याभिषिक्तं त्वामनुपश्यतु सर्वतः ।
प्रतपन्तमिवादित्यं मध्याह्ने दीप्ततेजसम् ॥
तूर्यसङ्घातनिर्घोषैः काञ्चीनूपुरनिस्वनैः ।
मधुरैर्गीतशब्दैश्च प्रतिबुध्यस्व राघव । VI. 131. 2-10.

सान्त्विता मामिका माता दत्तं राज्यमिदं मम ।
तद्ददामि तवैवाहं भुङ्क्ष्व राज्यमकण्टकम् ॥
महतेवाम्बुवेगेन भिन्नः सेतुर्जलागमे ।
दुरावारं त्वदन्येन राज्यखण्डमिदं महत् ॥
गतिं खर इवाश्वस्य तार्क्ष्यस्येव पतत्रिणः ।
अनुगन्तुं न शक्तिर्मे गतिं तव महीपते ॥
सुजीवं नित्यशस्तस्य यः परैरुपजीव्यते ।
राम तेन तु दुर्जीवं यः परानुपजीवति ॥
यथा तु रोपितो वृक्षः पुरुषेण विवर्धितः ।
ह्रस्वकेन दुरारोहो रूढस्कन्धो महाद्रुमः ॥
स यथा पुष्पितो भूत्वा फलानि न निदर्शयेत् ।
स तां नानुभवेत् प्रीतिं यस्य हेतोः प्ररोपितः ॥
एषोपमा महाबाहो तमर्थं वेत्तुमर्हसि ।
यदि त्वमस्मान् वृषभो भर्ता भृत्यान्न शाधि हि ॥
श्रेणयस्त्वां महाराज पश्यन्त्वग्र्याश्च सर्वशः ।
प्रतपन्तमिवादित्यं राज्ये स्थितमरिन्दमम् ॥
तवानुयाने काकुत्स्थ मत्ता नर्दन्तु कुञ्जराः ।
अन्तःपुरगता नार्यो नन्दन्तु सुसमाहिताः ॥ II. 105. 4-12.

சொற்களும் கருத்துக்களும் ஒரே மாதிரியாகவே இந்த இரண்டு இடங்களிலும் அமைந்திருக்கின்றன. ''நீங்கள் என்னிடம் ராஜ்

யத்தை அளித்தது போல் நானும் அதை உங்களிடம் அளிக்கிறேன். என் தாயின் மனோரதமும் கடைசியில் நிறைவேறிவிட்டது. அவளுக்கு உரிய மரியாதையையும் நீங்கள் சரிவரச் செலுத்தியாகி விட்டது. எனக்கு அளிக்கப்பெற்ற இந்த ராஜ்யத்தை நான் திருப்பி உங்களுக்கு அளிக்கிறேன். என்னால் இந்தப் பெரும் பாரத்தை வகிக்க முடியாது. பெரிய காளை வகிக்க வேண்டிய பாரத்தை ஒரு சிறு கன்று வகிக்க முடியுமா? பெரிய தேசத்தில் ஏற்படும் ஆபத்துக்களை எண்ணி என் மனம் பின்வாங்குகிறது. கலவரங்கள் ஏற்பட்டு விட்டால் கரையை உடைத்துக்கொண்டு பெருகும் வெள்ளத்தைப் போல, இலகுவில் அடக்குவதென்பது சாத்திய மில்லை. நீங்கள் கொள்ளும் உயர்ந்த முறையை நான் பின்பற்ற முடியுமா? குதிரையின் ஓட்டம் கழுதைக்கு வருமா? ஹம்சத்தின் அழகிய நடையைக் காக்கை எப்படிப் பின்பற்ற முடியும்?

"மற்றோர் உண்மையும் மிகப் பொருத்தமானதாகத் தோன்று கிறது. குறிப்பாகத்தான் நான் காட்ட முடியும். உங்களுக்குத் தான் அவற்றின் முழுக் கருத்தும் விளங்க முடியும். பிரஜைகள் உங்கள் பாதுகாப்பை நாடும்பொழுது நீங்கள் அதை ஏற்றுக் கொள்ளாமல் அவர்களின் நம்பிக்கை வீணாகிவிட்டால், இலைகள் அடர்ந்த கிளைகளுடன், அடியில் தங்குபவர்களுக்கு வெறும் பயத்தை உண்டுபண்ணிக்கொண்டு, காய்கனிகள் ஒன்றுமில்லாமல் பிரம் மாண்டமாக வளர்ந்திருக்கும் ஒரு விருக்ஷம் போல் ஆகிவிடும். சிறு செடியாக நட்டுப் பிறகு அது நன்கு செழித்து ஓங்கிப் பெரு விருக்ஷமாக வளருவதை வெகு காலமாகச் சிரத்தையுடன் பாதுகாத்து வந்தவன் அது பயனற்று இருப்பதைக் கண்டு, தன் முயற்சியெல்லாம் வீண்போனதைக் குறித்து எவ்வளவு ஏக்க மடைவான்! அத்தகைய தௌர்ப்பாக்கியம் எங்களுக்கு நேர வேண்டாம். உங்களை வேண்டிக்கொள்கிறேன். அபிஷேக மாகி இரத்தினமயமான கிரீடத்தை அணிந்து, சிம்மாசனத்தில் நீங்கள் வீற்றிருப்பதைக் காண மக்கள் ஆவலோடு இருக்கிறார்கள். தேஜோமயமான சூரியன் போல நீங்கள் பிரகாசிப்பதை அவர்கள் கண்டு களிக்கட்டும். இந்த உயர்ந்த ராஜபதவியை ஏற்றுக் கொள்ளுங்கள். இனி நீங்கள் தினசரி அலுவல்களைக் கவனிப்பதற் காகக் காலையில் எழுந்திருக்கும்பொழுதும், அவற்றை முடித்து விட்டு இரவில் படுக்கச் செல்லும்பொழுதும் மிருதங்கத்தோடு கூடிய இனிய சங்கீதம் உங்கள் காதுகளை மகிழ்விக்கட்டும். அழகிய பெண்களின் கால்களிலுள்ள சிலம்பின் இனிய நாதமும் உங்களைச் சந்தோஷிக்கச் செய்யட்டும்" என்கிறான் பரதன்.

இரண்டு சந்தர்ப்பங்களிலும் ஒரே விதமான உணர்ச்சிகளே சொற்களில் பிரதிபலிக்கின்றன. பரதனுடைய சொற்கள்

ராஜ்யத்தை ஏற்றுக்கொள்ள ஆவலை உண்டாக்கும்படியாகவே இருக்கின்றன.

ராமர் நந்திக்கிராமத்துக்கு வருகிறார். பரதன் கேட்டுக் கொண்டபிறகு பட்டாபிஷேகத்துக்குத் தயாராகிறார். பதினான்கு வருஷங்கள் வனவாசம் செய்வதற்காக மேற்கொண்ட சடையை முதலில் களைய வேண்டியிருக்கிறது. தலை, முகம் எங்கும் வளர்ந்த மயிரை எடுப்பதற்காகச் சத்துருக்னன் நாவிதர்களை வரவழைக்கிறான்.

ततः शत्रुघ्नवचनान्निपुणाः श्मश्रुवर्धकाः ।
सुखहस्ताः सुशीघ्राश्च राघवं पर्युपासत ॥ VI. 131. 13.

இரண்டு மூன்று பேர் சேர்ந்து க்ஷவரம் செய்வது சாத்தியமா? அவர்களுள் நல்ல பயிற்சியுள்ளவனைப் பார்த்து ஒருவனை தேர்ந்தெடுத்திருக்கலாம். அல்லது ஒருவர்பின் ஒருவராக அனைவரும் செய்திருக்கலாம். இந்த இடத்தில் மூன்று சகோதரர்களும் குறிப்பிடப்பட்டிருக்கிறார்கள். சுக்கிரீவனும் விபீஷணனுங்கூடக் குறிப்பிடப்பட்டிருக்கிறார்கள். பாவம்! சத்துருக்னன் மட்டும் குறிப்பிடப்படவில்லை. சித்திரகூடத்தில் சகோதரர் அனைவரும் சேர்ந்து ஆலோசனை நடந்தபொழுதுகூடச் சத்துருக்னனைக் குறிப்பிடவே இல்லை. சத்துருக்னனும் இருந்ததாகவே வைத்துக்கொள்ள வேண்டும் என்று உரையாசிரியர் கூறுகிறார். எல்லாருக்கும் முதலில் ஏற்பாடு செய்துவிட்டுக் கடைசியில் விரைவாகச் செய்து கொண்டிருப்பான் என்று தோன்றுகிறது. சீதையும் புதிய ஆடையணிகளை அணிந்துகொள்ளுகிறாள். தசரதருடைய மனைவியர் தாமே சீதையை அலங்கரித்தனர். சாதாரணமாகப் பட்டாபிஷேகத்துக்கு வேண்டிய அலங்காரங்களை அதில் தேர்ந்த பணிப்பெண்களே செய்வது வழக்கம். ஆனால் இப்பொழுது அரசியர் அந்தக் கௌரவத்தைத் தாமே பெற விரும்பினர். நந்திக்கிராமத்திலிருந்து அயோத்திக்கு ஊர்வலமாக வரும்பொழுது வானரர் அனைவரும் மனிதரூபத்தில் வந்தார்கள் என்று பிரத்தியேகமாகக் கவி கூறுகிறார். குரங்குகளின் தோற்றத்தைவிட மனிதரூபம் நன்றாக இருக்கும் அல்லவா? யுத்தகாண்டத்தில், யுத்தம் தொடங்குவதற்கு முதல் நாள், ராமர் வானரர்களைக் கூப்பிட்டுப் பிரத்தியேகமாக, "நீங்கள் மனிதரூபம் எடுத்துக் கொள்ள முடியும் என்று தெரியும். ஆயினும் இந்த யுத்தத்தில் நீங்கள் அவ்வாறு செய்வதை நான் சிறிதும் விரும்பவில்லை. எல்லாரும் வானரர்களாகவே இருங்கள். ஏழு பேர் மட்டும் மனிதரூபத்தோடு இருக்கட்டும்" என்கிறார்.

இப்பொழுது அந்த நிபந்தனை இல்லை. அபிஷேக ஜலத்தை வானரர்கள்தாம் கொண்டுவருகிறார்கள். தசரதர் அபிஷேகத்திற்கென்று வரவழைத்த ஜலம் என்ன ஆயிற்று என்று தெரியவில்லை.

उवाच च महातेजाः सुग्रीवं राघवानुजः ।
अभिषेकाय रामस्य दूतानाज्ञापय प्रभो ॥
सौवर्णान् वानरेन्द्राणां चतुर्णां चतुरो घटान् ।
ददौ क्षिप्रं स सुग्रीवः सर्व्वरत्नविभूषितान् ॥
यथा प्रत्यूषसमये चतुर्णां सागराम्भसाम् ।
पूर्णैर्घटैः प्रतीक्षध्वं तथा कुरुत वानराः ॥
एवमुक्ता महात्मानो वानरा वारणोपमाः ।
उत्पेतुर्गगनं शीघ्रं गरुडानिलशीघ्रगाः ॥
जाम्बवांश्च सुषेणश्च वेगदर्शी च वानरः ।
ऋषभश्चैव कलशाञ्जलपूर्णानथानयन् ॥
नदीशतानां पञ्चानां जलं कुम्भेषु चाहरन् ।
पूर्वात् समुद्रात् कलशं जलपूर्णमथानयत् ॥
सुषेणः सत्त्वसंपन्नः सर्वरत्नविभूषितम् ।
ऋषभो दक्षिणात् तूर्णं समुद्राज्जलमाहरत् ॥
रक्तचन्दनशाखाभिः संवृतं काञ्चनं घटम् ।
गवयः पश्चिमात् तोयमाजहार महार्णवात् ॥
रत्नकुम्भेन महता शीतं मारुतविक्रमः ।
उत्तराच्च जलं शीघ्रं गरुडानिलविक्रमः ॥
आजहार स धर्मात्मा नलः सर्वगुणान्वितः ॥ VI. 131. 48-57.

நான்கு சமுத்திரங்களினின்றும் ஐந்நூறு நதிகளினின்றும் ஜலம் கொண்டுவர வானரர்களை உத்தரவிடும்படி பரதன் சுக்கிரீவனிடம் கூறுகிறான். வடக்குச் சமுத்திரம் என்று எது குறிப்பிடப்படுகிறது என்று தெரியவில்லை. அனுமான் அதிசயமான காரியங்களைச் செய்தவர். சஞ்சீவினி ஔஷதி கொண்டுவரும்பொருட்டு அவர் அடிக்கடி வடக்குத் திக்குக்குச் சென்றிருக்கிறார். வடக்குச் சமுத்திரம் என்பது மானஸ ஸரோவரமாகத்தான் இருக்கவேண்டும் என்று நினைக்கிறேன். அரசனோடு அரசியும் முடிசூட்டப்பெறுவது என்பதை முதல் தடவையாக இப்பொழுதுதான் காண்கிறோம். சுக்கிரீவன் விபீஷணன் ஆகிய இருவருடைய பட்டாபிஷேகத்தின்பொழுது அவ்விதம் இல்லை.

வசுக்கள் இந்திரனை அபிஷேகம் செய்தது போல், ரிஷிகள் அனைவரும் ராமருக்கு அபிஷேகம் செய்கிறார்கள். அடுத்தபடி ரித்விக்குகள் அபிஷேகம் செய்கின்றனர். தேவர்களும் ஆகாயத்தில் நின்றபடியே அபிஷேகம் செய்கிறார்கள். முதல் அரசரான மனு தரித்துக்கொண்ட கிரீடத்தை வசிஷ்டர் ராமர் தலையில் வைக்க, மற்ற ரித்விக்குகளும் வந்து ஆபரணங்களை வைத்து அலங்கரிக்கிறார்கள். ராமருக்கு எல்லாரும் பரிசுகள் வழங்குகிறார்கள். அனைவரும் அனைவருக்கும் பரிசுகளை அளிக்கின்றனர். வாயுவினிடம் இந்திரன் விலையுயர்ந்த ஒரு ரத்தின ஹாரத்தைக் கொடுத்து அனுப்புகிறான். ராமரும் நிறைய வாரி வழங்குகிறார். லட்சம் குதிரைகள், காளைகள், பசுக்கள், முப்பது கோடி தங்க நாணயங்கள் இவற்றைப் பரிசாக அளிக்கிறார். பட்டணம் முழுவதுமே அங்கங்கே பரிசுகள் வழங்கப்பட்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. சீதைக்கு ராமர் ஓர் அழகிய முத்துமாலையைப் பரிசாக அளிக்கிறார். அதை அவரது அநுமதியின் பேரில் அவள் அனுமாருக்கு அளித்துவிடுகிறாள்.

கடைசியாக, வந்திருந்த விருந்தினர் அனைவரும் ராமரிடம் விடைபெற்றுச் செல்கின்றனர். விலையுயர்ந்த ஆபரணங்களையும் வெகுமதிகளையும் சுமந்துகொண்டு கிஷ்கிந்தைக்கு வானரர்கள் விடைகொடுத்து அனுப்பப்படுகின்றனர். தன் குலதனத்தைப் பெற்றுக்கொண்டு விபீஷணனும் இலங்கைக்குச் செல்லுகிறான்.

विभीषणोऽपि धर्मात्मा सह तैर्नैर्ऋतर्षभैः ।
लब्ध्वा कुलधनं राजा लङ्कां प्रायाद्विभीषणः ॥ VI. 131, 90.

'குலதனம்' என்பதற்கு இலங்கை என்று பொருள் கொள்ளலாம். 'குலம்' என்பது இக்ஷ்வாகு குலத்தைச் சொல்வதாக ஒரு வியாக்கியானகாரர் கூறுகிறார். அதைப்பற்றி ஒரு கதையும் கூறப்படுகிறது. ஸ்ரீரங்கநாதருடைய விக்கிரகம் ஒன்று ராமரிடம் இருந்ததாகவும், அதையே விபீஷணன் பெற்றுச் சென்றதாகவும் அந்தக் கதை சொல்லுகிறது. மூலத்தில் அதற்கு ஒன்றும் ஆதாரம் காணப்படவில்லை என்று சிலர் சொல்லுகிறார்கள். யுத்த காண்டத்தில் வரும் இந்தக் கதைக்கும், உத்தர காண்டத்தில் கூறப்படும் கதைக்கும் சிறிது வித்தியாசம் காண்கிறது. விபீஷணன் அயோத்தியில் ஆறு மாதமோ ஒரு வருஷமோ அகஸ்தியரிடமிருந்து அநேக விதமான கதைகளைக் கேட்டுக் கொண்டு ராமருடன் இருந்ததாக ஒரு வரலாறு காண்கிறது. உண்மையாக விபீஷணன் விடைபெற்றுச் சென்றது இப்பொழுது தான்; பட்டாபிஷேகமானதும் உடனே போகவில்லை என்று ஒரு வியாக்கியானகாரர் சாமர்த்தியமாக விளக்குகிறார். இதனால் ஒரு

விஷயத்தில் யுத்த காண்டத்திலுள்ள கதை கொஞ்சம் மாறுகிறது. ஆனால் அது விசேஷமாகத் தோன்றவில்லை.

ततोऽस्य हारं चन्द्राभं मुच्य कण्ठात् स राघवः ।
वैदूर्यतरलं कण्ठे बबन्ध च हनूमतः ॥ VII. 40. 24.

இவ்விடத்தில், ராமர் தம் கழுத்தினின்றும் ஒரு ஹாரத்தைக் கழற்றி அனுமார் கழுத்தில் இட்டதாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் பட்டாபிஷேக சமயத்தில் ராமர் அதைச் சீதைக்குக் கொடுத்ததாகவும், சீதை அவரது அநுமதியின் பேரில் அதை அனுமாருக்குக் கொடுத்ததாகவும் காண்கிறது. அனுமார்தாம் அனைவரிலும் அதைப் பெறத் தகுந்தவர் என்று கருதிய ராமர், "இந்தக் குணங்கள் எல்லாம் யாரிடம் இருக்கின்றனவோ அவனைத் தேர்ந்தெடுத்து நீ இதை அளிக்கலாம்" என்கிறார். உண்மையில் அனுமாரைத் தவிர வேறு யார் அதைப் பெறத் தகுதியுள்ளவர்?

மற்றொரு விஷயம் உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். அது உத்தர காண்டத்தில் வருகிறது.

कृतप्रसादास्तेनैवं राघवेण महात्मना ।
जग्मुः स्वं स्वं गृहं सर्वे देही देहमिव त्यजन् ॥ VII. 40. 39.

"அவரவர் அவரவர்களின் இடத்துக்குச் சென்றனர்" என்று இருக்கிறது. வழக்கம் போல் இங்குக் கூறப்படும் உவமை, பொருத்தமான கருத்து நிறைந்து காண்கிறது. உயிரை விட்டுப் பிரியக் கஷ்டப்படும் சரீரம் போல ஒவ்வொருவரும் ராமர், சீதை, இன்னும் மற்றுமுள்ளோரிடம் மனமில்லாமல் விடைபெற்றுச் சென்றனர் என்கிறார் கவி. இறக்கும்பொழுது ஸந்தோஷமாக இறப்பவர் யார்? நினைவு இருந்துவிட்டால் மிகவும் வருத்தப் படுவோம் அல்லவா? ஆகவேதான் ராமரிடமும் சீதையிடமும் விடைபெற்றுச் செல்லும்பொழுது ஒவ்வொருவரும் உயிரை விட்டுப் பிரியும் உடல் போல இருந்தனர் என்கிறார் கவி.

அபிஷேக வரலாறு இதுதான். இவ்வளவு உபன்யாசங் களும் தவறாமல் நடந்து பட்டாபிஷேக வைபவத்துடன் முடிந்திருக் கின்றன. ஆனால் என் மனத்தில் முக்கியமாக இருப்பதைச் சொல்லாமல் முடிக்க முடியாது. உண்மையான பட்டாபிஷேகம் நம் உள்ளத்தில்தான் இருக்கிறது. ராமரையும் சீதையையும் நம் உள்ளத்துச் சிம்மாசனத்தில் இருத்தி அவர்களுக்கு முடி சூட்டிக் கொண்டாட வேண்டும். அவர்கள் அங்கே வீற்றிருந்து அரசு புரிந்து நம் வாழ்க்கையை நேராக்கட்டும். எல்லா முக்கியச் சந்தர்ப்பங்களிலும் அவர்களை நினைவுகூர வேண்டும். அப்பொழுது நாம் தவறு செய்ய முடியாது. கேவலம் உணர்ச்சிவசமாகி

இவ்வாறு சொல்வதாக நினைக்க வேண்டாம். இத்தனை மாதங்கள் சேர்ந்து ராமாயணத்தைப் படித்து வந்திருக்கிறோம். அது நம் குணத்தைச் சீர்படுத்திப் பெருநன்மையளிப்பதாக இருக்க வேண்டும் என்று நாம் உறுதி கொள்ள வேண்டும். வெறும் காவியமாக நாம் இதைப் படிக்கவில்லை. நம் வாழ்க்கையையே அது புனிதமாக்கும் என்ற நம்பிக்கையுடன் படித்திருக்கிறோம். ராமரையும் சீதையையும் மிகவும் உயர்ந்த மனிதப் பண்புகளுடன் கூடிய கதாநாயகன் கதாநாயகியாகப் போற்றுகிறோம். அத்தகைய எண்ணம் மிக்க மேன்மையானது. ஆயினும் நாம் சரியாக அறிந்து கொண்டாட வேண்டும்.

ஆரம்பத்திலிருந்தே அவர்கள் மனிதர்களுள் பரிபூர்ண மானவர்களாகிவிடவில்லை. அவர்களின் உயர்வு படிப்படியாகவே வளர்ந்தது என்று கூறலாம். பிறக்குமுன்னமே ராமரைப்பற்றி நமக்குத் தெரிந்து விடுகிறது. பிறந்ததிலிருந்து அவர்களின் வாழ்க்கையை நாமும் தொடர்ந்து கண்டு வருகிறோம். அவர் களின் வாழ்வில் நேர்ந்த பெரிய சம்பவங்கள், வரலாறுகள், அவர் களுக்கு உற்ற இன்னல்கள், துன்பங்கள், ராஜ்ய போகங்களை இழந்து காட்டில் சிரமப்பட்டது—யாவும் அவர்களின் குணத்தில் ஒரு மாறுதலையும் உண்டாக்காதிருக்குமா? பிறந்தபொழுது இருந்தது போலவே கடைசியிலும் இருப்பார்கள் என்று எண்ண முடியுமா? வாழ்க்கை அப்படிப்பட்டதல்ல. பதேபதே நாம் கற்றுக்கொள்ளும்படியாகவே இருக்கும். வாழ்க்கையில் நேரும் ஒவ்வொரு சம்பவத்தின் அடையாளமும் இல்லாமற் போகாது. கஷ்டங்கள் ஒருவிதப் பாடங்களைக் கற்பிக்க, செல்வமும் சந்தோஷமும் மற்றொரு விதமான பாடங்களைக் கற்பிக்கின்றன. ஒவ்வொன்றும் தன் சின்னத்தை நம் குணத்தில் விட்டுச் செல்லாமற் போகாது. ஆகவே ராமரும் படிப்படியாக உயர்ந்து பரிபூர்ண மனிதரானார் என்றே நாம் கருதலாம். அவ்வாறு நினைத்தால்தான் அவர் நடத்திய வாழ்க்கையினின்றும் நாம் பயன டையலாம். இவ்விதமே சீதையின் வாழ்க்கையையும் அவள் அடைந்த உயர்வையும்பற்றி நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். ஒவ்வொரு சம்பவமும் வரலாறும் அவர்களை எவ்வாறு உயர்த் தியது என்று தெரிந்துகொள்ளும் ஆசையுடன் சிந்தனை செய்ய வேண்டும். இல்லாவிட்டால் ராமாயணத்தைப் படித்து நாம் ஒரு பயனையும் பெற முடியாது.

ராமாயணம் ஒரு மனித வரலாற்றை முக்கிய சாராம்ச மாகக் கொண்டது என்று கூறலாம். மனித இயல்பைப் பற்றிய அறிவை வால்மீகி பூர்ணமாகப் பெற்றவர். அதை ஆராய்ந்து நன்கு தெரிந்துகொண்டவர். ஆகையால்தான் சம்பாஷணைகளை

எல்லாம் ஒன்றுவிடாமல் விவரமாகக் கூறிப் படிப்படியாக நமக்கு உணர்த்துகிறார். வாழ்க்கையில் துன்பங்களையும் இன்பங்களையும் நன்றாக அனுபவித்தவர்கள், கஷ்டங்களை அனுபவிப்பதனின்றும் பயனடைந்தவர்கள் என்றெல்லாம் ராமரையும் சீதையையும் பற்றிச் சிந்தனை செய்து பார்த்தால்தான், ராமாயணம் படித்ததன் பயனை நாம் முற்றும் பெற்றவர்களாவோம். ஆகவே ராமர் சீதை ஆகிய இருவரையும் உங்கள் உள்ளத்தை விட்டு அகற்றாமல் வைத்துப் போற்றும்படி மீண்டும் ஒரு முறை மிக்க சிரத்தையுடன் மனப்பூர்வமாகக் கேட்டுக்கொள்கிறேன்.

சீதையையும் ராமரையும் நாம் பின்பற்றக்கூடிய லக்ஷ்ய ஸ்திரீ புருஷர்களாகப் பாவிப்பதற்கு நாம் உண்மையாக முயற்சி செய்ய வேண்டும். அப்படிச் செய்தால்தான், புதன்கிழமை தோறும் இந்த எட்டு மாதங்களாக நாம் ஒன்றுசேர்ந்து பொழுது போக்கியதன் பயனைப் பெற்றவர்களாவோம். அப்பொழுதுதான் அறிவு ஆத்மிகம் ஆகிய இரண்டு துறைகளிலும் நாம் பெருநன்மையை எய்தியவர்களாவோம்.

முற்றும்

வால்மீகி ராமாயணத்தை விமர்சித்துப் பலர் எழுதியிருக்கிறார்கள். ஆனால் சாஸ்திரியார் பார்க்கும் பார்வை தனிச் சிறப்புடையது. ஒவ்வொரு பாத்திரப் படைப்பைப்பற்றியும் அவர் ஆராய்ந்து கூறும் செய்திகள் அவருடைய விமரிசனத் திறமையையும் பரிவையும் காட்டுகின்றன. வால்மீகி ராமாயணத்தை மூலத்தில் படிக்காதவர்கள்கூட இப்புத்தகத்தைப் படித்து அநுபவிக்கலாம்; பயன் பெறலாம்.

சாஸ்திரியாருடைய ஆங்கிலப் புலமை உலகம் அறிந்தது. அவர் நூலை மொழிபெயர்ப்பதென்பது எளிய காரியம் அன்று. இந்த அருமையான நூலை ஸ்ரீமதி கி. சாவித்திரி அம்மாள் அவர்கள் தெளிவான தமிழில், திறமையாக மொழிபெயர்த்துத் தந்திருக்கிறார்.

இராமாயணம்பற்றி ஆராய்ச்சி புரியப்புகும் மாணவர்களுக்கு இது சிறந்த வழிகாட்டியாக உதவும். இராமாயணப் பாத்திரங்களைத் தனித் தனியே இனம் கண்டுகொள்ளவேண்டுகிறவர்களுக்கு இந்த நூல் சிறந்த கண்ணாடியாகப் பயன்படும். வால்மீகியின் இலக்கியச் சிற்பத் திறமையை அறிய முந்துகிறவர்களுக்கு இப்புத்தகம் அழகிய விளக்கமாக உபயோகப்படும். ஒரு சிறந்த இலக்கிய விருந்து.

கி. வா. ஜகந்நாதன்
ஆசிரியர், 'கலைமகள்'.

மகாகனம் ஸ்ரீநிவாஸ சாஸ்திரியார், ராமாயண கதாபாத்திரங்களைப்பற்றிய சர்ச்சைகளைத் தம் பரந்த வாழ்க்கையின் அநுபவத்துடனும், ஆழ்ந்த இலக்கிய உணர்ச்சியுடனும், அறிவு ததும்பும் வகையிலும், மனத்தில் பதியும் முறையிலும் அமைத்திருந்தார். தம் 30 பேருரைகள்மூலம் ராமன், சீதை, லக்ஷ்மணன், பரதன், அநுமான், சுக்ரீவன், விபீஷணன் முதலிய முக்கிய பாத்திரங்களை, மறக்கமுடியாத பாணியில் சாஸ்திரியார் அறிமுகம் செய்துவைத்து, ராமகதையில் நம் மனம் முற்றும் லயிக்கச் செய்தார்.

சாஸ்திரியாரின் ஆங்கிலப் பேச்சு வன்மையையும், ராமாயண சிருஷ்டி விளக்க ஆற்றலையும், அபார தத்துவ ஞானத்தையும் தமிழ் மொழிபெயர்ப்பில் கொண்டு வருவது சாத்தியமில்லை என்று அநேகர் நினைத்திருக்கலாம். ஆனால் சாவித்திரி அம்மாளின் கருத்தாழமும் எளிய நடையும் கொண்ட தமிழாக்கம் வாசகர்களுக்கு நிறைவையும் ஆனந்தத்தையும் தரும் என்பதில் சந்தேகமில்லை.

இவ்வளவு சிறந்த பொக்கிஷத்தை அளித்ததற்குத் தமிழ் மக்களனைவரும் சாவித்திரி அம்மாளுக்குக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

பேராசிரியர்
கே. ஆர். ஸ்ரீநிவாஸ அய்யங்கார்
உபதலைவர், சாகித்ய அகாதமி.